ஸ்ரீ:

ஸ்ரீ வேங்கடேசுவரர் துணை.

செவ்வைச்சூடுவார் இயற்றிய

# பாகவதம்

இரண்டாம் பாகம் (10, 11, 12 ஸ்கந்தங்கள்.)

இது

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்

பரிசோதித்து எழுதிய குறிப்புரை முதலியவற்றுடன்

திருமலை - திருப்பதி தேவஸ்தான அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விஜயவருஷ ஆனிமீ

19_3





[விலை ரூ. 8-0-

திருமலை - திருப்பதி தேவஸ்தான வெளியீடு.

ஸ்ரீ:

ஸ்ரீ வேங்கடேசுவரர் துணை.

செவ்வைச்சூடுவார் இயற்றிய

# பாகவதம்

இரண்டாம் பாகம் (10, 11, 12 ஸ்கந்தங்கள்.)

இது

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்

பரிசோதித்து எழுதிய குறிப்புரை முதலியவற்றுடன்

திருமலை - திருப்பதி தேவஸ்தான அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விஜய ஹூ ஆனிமீ

1953

*Copies can be had from :—*

1. THE EXECUTIVE OFFICER,
   Tirumalai-Tirupati Devasthanams,
   TIRUPATI

2. TIRUPATI DEVASTHANAMS INFORMATION SERVICE,
   19, Royapettah High Road,
   MADRAS—14

3. TIRUPATI DEVASTHANAMS INFORMATION SERVICE,
   National Indian Life Insurance Building, Bank Street,
   HYDERABAD (DECCAN)

PRINTED AT
TIRUMALAI-TIRRPATI DEVASTHANAMS PR
TIRUPATI

# பொருளடக்கம்.

## பதினோராம் கந்தம்.



## பன்னிரண்டாவது கந்தம்.

25-5



## பத்தாம் கந்தம்

# 1. திருவவதார அத்தியாயம்

கலிநிலைத்துறை.

2636. பருதி வானவன் மாபொடு பானிலாத் திங்கள்
மரபு கேட்டவேன் மன்னவன் மதிமா புதித்த
ஒருத னிச்சுடர் திருவிளை யாட்டெலா முள்ளம்
தெருளக் கேட்பது விரும்பினன் செப்பலுற் றனனால். (க)

2637. புனலு முண்ணல னிருப்பவும் பொறுப்பதற் கரிதா
நனிக னற்றுவெம் பசிப்பிணி நலிதன்மற் றின்றால்
முனிவ னின்னகை முகமலர் முளரியின் முளைத்த
அநகன் மாக்கதை யெனுநற வருந்தலி னன்றே. (உ)

2638. அரவு யர்த்தவ னாடலம் படைக்கட லைவர்
ஒருகு ளப்படி யாம்படி கடப்பவோர் புணையாய்க்
கருவின் மற்றெனைக் காத்தசெங் தாமரைக் கண்ணன்
பொருவின் மாக்கதை விரித்தனை புகலெனப் புகன்றான். (௩)

---

2636. பருதி வானவன் - சூரிய தேவனுடைய. பால் நிலா திங்கள் மரபு - பால் போன்ற நிலாவை யுடைய சந்திரனது மரபையும். மன்னவன் - பரீக்ஷித்து. மதி மரபு - சந்திரனுடைய மரபில். ஒரு தனிச் சுடர் - கண்ண பிரானுடைய. உள்ளம் தெருள - மனம் தெளியும்படி. மன்னவன் விரும் பினனாய்ச் செப்பலுற்றான்.

2637. உண்ணலன் என்றது பரீக்ஷித்தை. இருப்பவும் - அமர்ந்திருக்க வும். நனி - மிக. பசிப்பிணி நலிதல் இன்று ; மற்று, ஆல் : அசைகள். நலிதல் - வருத்துதல். இன் நகை - இனிய ஒளியை யுடைய. முகமாகிய மலர்ந்த முளரியில் : முளரி - தாமரை. முளைத்த - தோன்றிய. அனகன் - திருமாலுடைய. நறவு - தேன். சுக முனிவன் முகத்தைத் தாமரையாக வும், அவன் மொழிந்த பாகவதத்தைத் தாமரையிலுள்ள தேனாகவும் உருவகித் தார். அருந்தலின் நலிதல் இன்று.

(பி - ம்.) 3. முனிவன் மூரலொண் முகமலர்.

2638. அரவுயர்த்தவன் - துரியோதனன். ஆடல் - வெற்றி. படைக் கடலை ஒரு குளப்படி யாம்படி ஐவர் கடப்ப ; குளப்படி - குளம்பின் அடியி லுள்ள நீர். ஐவர் - பாண்டவர். கடப்ப - கடத்தற்கு. புணை - தெப்பம். கருவில் - கருப்பத்தில். புணையாக இருந்த கண்ணன் ; என்னைக் காத்த கண்ணன் என்க. விரித்தனை புகல் - விரிவாகச் சொல்லுவாயாக.

2639. தனிவெண் சங்குறை தடக்கையான் சேவடிப் பிறந்த
பனிகொள் கங்கைநீர் படிந்தவர் போலநன் னெஞ்சம்
கனிய மாயவன் கதையெடுத் துரைப்பவர் கேட்போர்
புனித ராவரென் றருந்தவன் புகலலுற் றனனால். (௪)

2640. அரசு ருப்புண ரவுணரா லாற்றல ளாகிப்
பாரவை மாநிலப் பசுங்கொடி மல்லலஞ் சேதா
உருவெ டுத்தன ளுற்றன ளுற்றது கிளந்தாள்
மரைம லர்ப்பொகுட் டுறைதரு மறையவற் கன்றே. (௫)

2641. கேட்ட நான்முகன் கிளரொளி விரிந்தசெம் பவளக்
காட்டி னல்லெழில் கவற்றிய கற்றையஞ் சடைமேல்
கோட்டி ளம்பிறை சூடிய குழகனோ டமரர்
ஈட்டஞ் சூழ்வர வெழுந்துபாற் கடற்புறத் திறுத்தான். (௬)

2642. பரவை வெண்டிரைப் பாற்கடல் கருங்கடல் கடுப்ப
உருவ மேனியி னொளிபரந் திமைப்பவெஞ் செஞ்சூட்
டரவ ணைத்துயி லமலனை யிறைஞ்சுபு பரவ
இருவி சும்பிடை யெழுந்ததோர் வாணிமற் றன்றே. (௭)

2643. பட்ட வந்தர வாணியின் படுபொரு டெருண்டு
வட்ட வானகத் துறைபவர் வான்முக னோக்கி
விட்டு ரைத்தனன் வெள்ளிவெண் ணிலாக்கதிர் விரியக்
கட்ட விழ்ந்ததா மரையுறை கலைமகள் காந்தன். (௮)

---

2639. தடக்கையான் - திருமால். பனி - குளிர்ச்சி. கனிய - பக்குவமடையும்படி. தவன் - சுக முனிவன். படிந்தவர் போலப் புனிதராவரென்று புகல லுற்றனன்.

2640. அரசு உரு புணர் அவுணரால் - அரசரின் உருவத்தைக் கொண்டுள்ள அசுரராது துன்பத்தால். ஆற்றலள் ஆகி - பொறுதவளாகி. நிலப் பசுங்கொடி - பூமிதேவி. சேதா - பசு. மறையவன் - பிரமன். மறையவற்குக் கிளந்தாள் ; கிளந்தாள் - கூறினள்.

2641. கிளர் - விளங்குகின்ற. பவளக் காட்டினது எழிலைக் கவற்றிய சடை ; கவற்றிய - வருத்திய. கோடு இளம் பிறை - நுனியை யுடைய பிறைச் சந்திரன். குழகன் - சிவபெருமான். ஈட்டம் - கூட்டம். இறுத்தான் - வந்து தங்கினன்.

2642. பரவை - பரத்தலை யுடைய. கடுப்ப - ஒக்கும்படி. உருவ மேனியின் ஒளி - திருமாலின் அழகிய திருமேனியின் நீல நிறம். அமலன் - திருமால். இறைஞ்சுபு பரவ - வணங்கித் துதிப்ப. வாணி விசும்பிடை எழுந்தது ; வாணி - அசரீரி வாக்கு.

2643. பட்ட - தோன்றிய. அந்தர வாணி - ஆகாய வாக்கு. தெருண்டு - தெளிந்து. வானகத்து உறைபவர் - தேவர்களுடைய. வெள்ளி வெண் நிலா - மிக வெள்ளிய நிலா.

2644. தண்ணந் தாமரைத் தலைவிவீற் றிருந்ததார் மார்பத்
தண்ண லானக துந்துபிக் கருள்சுரந் தளிக்கும்
விண்ணிற் றீர்ந்துநீர் வெண்ணகை யரம்பைய ரோடு
மண்ணின் மேம்படு மெதுகுலத் துதிக்கென வருத்தான். (கூ)

2645. அலர்ப சுந்துழா யணிமுதற் றேவுவர் தளிக்கும்
மெலிய னீயென வெண்டிரைக் கருங்கட லுடுத்த
நிலம டந்தையை விடுத்தன னிரையிதழ்க் கமல
மலரின் வந்தவன் மாண்டதன் பேருல கடைந்தான். (க0)

2646. பாரெ லாமொரு பனிமதிக் குடைநிழல் பரப்பும்
சூர சேனனின் னருள்பெறு தோன்றல்பைந் துணர்தாழ்
வேரி யந்தொடை விறல்வசு தேவன்வெண் டரங்க
வாரி யன்னகுண் டகழ்மதின் மதுரைகாத் தளித்தான். (கக)

2647. பருந்து சூழ்தரு பருதிவேற் படைவசு தேவன்
புரிந்த வெள்வளை பொலமுக டுடைபட முழங்கச்
சுரும்பு சூழ்பசுந் தோட்டநாண் மலர்த்தொடை சூட்டித்
திருந்து வெண்ணகைத் தேவகி திருமணம் புணர்ந்தான். (கஉ)

---

2644. தலைவி - திருமகள். அண்ணல் - திருமால். ஆனக துந்துபிக்கு - வசுதேவனுக்கு; 2627, 2664. அளிக்கும் - காப்பான். நீர் விண்ணில் தீர்ந்து - நீங்கள் விண்ணுலகத்தினின்றும் நீங்கி. நகை - பற்களையுடைய. மண்ணில் எது குலத்து உதிக்க என; உதிக்க - தோன்றுவீராக.

2645. தேவு - திருமால். அளிக்கும் - உன்னைக் காப்பான். மெலியல் - வருந்தாதே. நிரை - வரிசை. மலரில் வந்தவன் - பிரமன். மாண்ட - மாட்சிமைப்பட்ட.

2646. துணர் - பூங்கொத்து. வேரி - தேன். விறல் - வெற்றி. தரங்க வாரி - அலைகளையுடைய கடல். தோன்றலாகிய வசுதேவன். குண்டு அகழ் - ஆழமுள்ள அகழி. அகழியையும் மதிலையுமுடைய மதுரையை.

2647. பருதிபோல் சிவந்த ஒளியையுடைய வேல். புரிந்த வெள்வளை - முறுக்கையுடைய வெள்ளிய சங்கு. மணவினையில் சங்கு ஒலித்தல்: "மத்தளங் கொட்ட வரிசங்க நின்றூத" (நாச்சியார் திருமொழி.) தோட்ட - இதழை யுடைய. தொடை - மாலையை. திருந்து - இலக்கணத்தால் திருந்திய. (பி - ம்.) 4. மணம் புரிந்தான்.

2648. செஞ்சி லைத்தழும் பிருந்ததோட் டேவக னீன்ற
அஞ்சொல் வஞ்சியோ டந்தா துந்துபி முழங்கப்
பிஞ்சு நாண்மதி பிறங்குவெண் கோட்டுமால் யானைக்
கஞ்சன் பொற்றடந் தேர்விடக் கடிநகர்க் கெழுந்தான். (கங)

2649. மருப்பி ளம்பிறை வாணுதற் றேவகி யெட்டாம்
கருப்பம் வென்றிவேற் கஞ்சனு ருயிர்தெறு மென்னு
உருத்து வானிடை யொலித்ததோ ருரைசெவி யோர்ந்து
நெருப்பு வாயுகு வாளுறை வாங்கின னின்றான். (கச)

2650. குவளை நாண்மலர் பிணைந்தன கொழுங்கடை மழைக்கண்
அவளை மாய்ப்பலென் றடைதலு மடல்வசு தேவன்
தவள வாணகைத் தங்கையா ருயிர்தெற றகைத்தோ
கவள மால்களிற் றாசவென் றின்னுரை கழறும். (கரு)

2651. அழியும் யாக்கைமேல் விழைவினு லழிவில வாய
பழியும் பாவமும் படைத்திகொ லென்றுதெள் ளமுதம்
பொழியு மாறெனப் புகன்றனன் புதுமுகை யவிழ்ந்து
வழியுந் தேனுண வண்டுவீழ்ந் தாற்றுதார் மார்பன். (கசா)

---

2648. சிலைத் தழும்பிருந்த தோள்: சீவக. 1645, ந. தேவகன் ஈன்ற வஞ்சி - தேவகி. பிஞ்சு நாண்மதி - இளம்பிறை; யானைக் கோட்டுக்கு உவமை. கஞ்சன் - கம்சன். கடி நகர் - மதுரை.

2649. மருப்பு - பிறையின் இரண்டு நுனி: தேவகியின் எட்டாம் கருப்பம்; கருப்பம் கருப்பத்திற் றோன்றும் குழந்தைக்கு ஆயிற்று. கஞ்சனுடைய உயிரைத் தெறும்; தெறும் - அழிக்கும். உருத்து - கோபங் கொண்டு. உரை - அசரீரி வாணி. நெருப்பை உகுக்கும் வாள். செவியால் ஓர்ந்து வாளை உறையினின்றும் வாங்கினன்.

2650. குவளைமலரைப் பிணைந்தன கண்; பிணைந்து அன - கோத்தாற் போன்ற. கண்ணையுடைய அவளை - தேவகியை. அடைதலும் - கஞ்சன் சேர்தலும். 'அரச, தங்கையின் உயிர் தெறல் தகைத்தோ' என்று இன்னுரை கழறும்; தெறல் - அழித்தல். தகைத்தோ - தகுதியுடையதோ. கழறும் - கூறுவான். 'கவளமால் களிற்றாச' என்றது 'இடித்துக் கூறுவார்க்கு அடங்கான்' என்னும் குறிப்பினது.

2651. யாக்கை - உடம்பு. விழைவினால் - ஆசையினால். பொழியுமாறென - பொழிவதைப்போல. முகை - மொட்டு. மார்பன் - வசுதேவன். மார்பன் புகன்றனன்.

2652. சொற்ற நன்மொழி கேட்கலன் கொலைத்தொழி றுணிய
மற்றி னிச்செயல் யாதென மன்னவன் குறித்துப்
பொற்ற தாமரை முகிழ்முலைப் பூவையைக் கொல்லல்
பெற்ற பச்சிளங் குழவிநீ கொல்கெனப் பெயர்ந்தான். (கள)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2653. சேட்டிளம் பருதி மார்பிற் றேவக னன்பி னல்கும்
மோட்டிளந் திங்கட் கோட்டு மும்மதக் களிநல் யானைக்
கோட்டினி லியற்று திண்டேர் கொய்யுளைப் புரவி சூழ
வேட்டபூந் தெரியல் வேந்தன் விழுமணிக் கோயில் புக்கான். (கஅ)

2654. மற்றட மார்ப னின்ப மாந்தின னுறையு நாளிற்
சிற்றிடைப் பவளச் செவ்வாய்த் தேவகி கருப்பந் தாங்கிப்
பெற்றமென் குதலைத் தீஞ்சொற் பிள்ளையை யங்கை தாங்கிக்
கற்றிரண் டன்ன திண்டோட் கஞ்சன்முன் னெய்தி னானல். (கக)

2655. வளரிளந் திங்க ளன்ன மதலைவாண் முகத்தை நோக்கி
விளைவதொன் றில்லை யாமால் விழுத்தகு குழவி தன்னால்
குளிர்மலர்த் தெரியன் மார்ப கொண்டனை சென்மோ வென்னத்
தெளிகல னுரைத்த மாற்றஞ் செம்மல்கொண் டேகி னானல். (உ0)

---

2652. சொற்ற - வசுதேவன் சொல்லிய. துணிய - துணிந்து நின்றானாக. மன்னவன், 'இனிச் செயல் யாது?' எனக் குறித்து; மன்னவன் - வசுதேவன். குறித்து - தன் மனத்தி லெண்ணி. பொற்ற - பொலிவு பெற்ற. முகிழ் - அரும்பு. பூவையை - தேவகியை. கொல்லல் - கொல்லாதே. பெற்ற - அவள் பெறுகின்ற. குழவியை நீ கொல்க என; என - என்று சொல்ல. பெயர்ந்தான் - நீங்கினான்.

2653. சேட்டிளம் பருதி மார்பு: "சேட்டிளம் பருதி போலுந் திருமகிழ் மாலை மார்பன்" (சீவக. 442.) தேவகன் நல்கியன யானை முதலியன. மோடு - பெருமை. திங்கள் போலும் கோட்டு; கோட்டினில் இயற்றுதேர் - யானைக் கோட்டினால் இயற்றிய தேர். "கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்" (சிறுபாண். 16?.) யானையும் தேரும் புரவியும் சூழ. தெரியல் - மாலை. வேந்தன் - வசுதேவன். கோயில் - அரண்மனை.

2654. மார்பன் - வசுதேவன். தேவகி பெற்ற பிள்ளையை அங்கையில் தாங்கிக் கஞ்சன் முன் எய்தினான்.

2655. வளரிளந் திங்களன்ன மதலை: "மாமதி யன்னான் வளர்கின்றான்" (சீவக. 362.) குழவி தன்னால் விளைவ தொன்றில்லை. கொண்டனை சென்மோ - கொண்டு செல். என்ன - என்று கஞ்சன் கூற. உரைத்த மாற்றத்தைத் தெளிகலனாகி. செம்மல் - வசுதேவன்.

2656. தாழிருந் தடக்கை யானைத் தாமவேற் கஞ்சன் முன்னர்
யாழுடை முனியாங் கெய்தி யாதவ ரமர ராவார்
சூழ்கழ லவுணர் நின்பாற் றொக்கவ ரவரை யெல்லாம்
ஆழியான் பிறந்து வீட்டு மாசவென் றறைந்து சென்றான்.(உக)

2657. கோதைவேற் கஞ்சன் றானுங் கொடுந்திறற் கால நேமி
ஆதலம் முனிவன் கூற்றா லறிந்தனன் முனிந்து பாண்வண்
டூதவாய் விரிந்த பூந்தா ருக்கிர சேன னென்னும்
தாதைபே ராசு மாற்றித் தனியர செய்தி னானால். (உஉ)

2658. இன்றளிர்ப் படலை மாலை யாதவ ரிரிய நூறி
வென்றியங் களிநல் யானை விறல்வசு தேவ னோடு
சென்றுயர் குழைதோ யுண்கட் டேவகி தன்னை யாங்கு
வன்றளைப் படுத்திப் பெற்ற மகவெலா மாய்க்க லுற்றான்.(உங)

2659. கூற்றனான் குழவி யாறு கொன்றபி னுலகந் தாங்கும்
ஆற்றலஞ் சேடன் மாத ராலகட் டகத்த னாக
மாற்றருஞ் சிறப்பு வாய்ந்த மாயையை நோக்கி மல்லற்
பாற்றிரைத் துயிலும் பச்சைப் பசும்புயல் பணிக்கு மன்றே. (உச)

---

2656. தாழ் இரு தடக்கை யானை - நிலத்தே தாழ்ந்த பெரிய வளைந்த கையை யுடைய யானை; "ஈர்ந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக்கை" (சிறுபாண், 19.) தாமம் - ஒளி; மாலை எனலுமாம். முனி - நாரத முனிவன். ஆங்கு: அசை. யாதவர் - யது வமிசத்தவர். நின்பால் தொக்கவர் அவுணர்; தொக்கவர் - கூடினவர்கள். அவரை எல்லாம் - அந்த அவுணரை எல்லாம். ஆழியான் - திருமால். வீட்டும் - அழிப்பான். அறைந்து - சொல்லி.

2657. கோதை - உறை; பூமாலை எனலுமாம். கஞ்சன் காலநேமி யாதலை; காலநேமி - ஓர் அசுரன். முனிவன் கூற்றால் - நாரத முனிவன் மொழியால். முனிந்து - கோபங் கொண்டு. பாண் வண்டு - பாடுதலை யுடைய வண்டு. தாதையின் பேராசை மாற்றி.

2658. இன்றளிர்ப் படலைமாலை: வகை மாலை என்று கூறப்படும்; "முறி மிடை படலைமாலை" (சீவக. 483. 1889.) இரிய நூறி - கெட்டோடும்படி அழித்து. விறல் - வெற்றியை யுடைய. குழை - காதணி. உண் கண் - மையுண்ட கண். தளை - சிறை. மகவெலாம் - பிள்ளைகளை யெல்லாம்.

2659. கூற்றனான் - யமனைப் போன்ற கஞ்சன். ஆறு குழவிகளைக் கொன்ற பின். மாதர் - தேவகியினுடைய. ஆல் அகட்டத்தனாக - ஆலிலை போன்ற வயிற்றினுள் இருந்தானாக. மல்லல் - வளம். பாற்றிரை - பாற்கடலில். புயல் - திருமால். புயல் மாயையை நோக்கிப் பணிக்கும்; பணிக்கும் - கட்டளை யிடுவான்.

(பி - ம்.) 4. நங்கள் பாஞ்சுடர் பணிக்கு மன்றே.

2660. கந்துகொல் களிநல் யானைக் கஞ்சனைக் கரந்து மல்லல்
நந்தகோன் மனையின் வைகு நறுநுத லுரோணி யாலின்
அந்தளிர் வயிற்றின் வைத்தி யரக்கெறி குவளை யுண்கட்
செந்தளி ருருவ மேனித் தேவகி யிளஞ்சூன் மாதோ. (உரு)

2661. சிறப்புடை யமுதின் சாயற் றேவகி வயிற்றின் வந்து
பிறத்துநா முலக மெல்லாம் பிறைநுதற் கன்னி யென்று
நறைத்துணர் தூவி வாழ்த்த நலந்தரப் பிறத்தி நீசென்
றறற்கருங் கூந்தற் செவ்வா யசோதையவ் வயிற்றி லென்றான். (உசு)

2662. புள்ளுயர் கொடியி னானைப் போற்றிய மாயை யாங்கே
தெள்ளமு தனைய தீஞ்சொற் றேவகி வயாவை வாங்கி
ஒள்ளொளி பரந்த வுண்க ணுரோணியென் றுலக மேத்தும்
வள்ளிதழ்க் கோதை மாதர் வயிற்றிடை வைத்த தன்றே. (உஎ)

2663. ஆயிரந் தலைய நாகத் தறிதுயி லமர்ந்த வம்மான்
மாயையங் கனமு ஞற்ற மாவிதழ்க் குவளை வென்று
சேயரி சிந்து வாட்கட் டேவகி கருப்பம் வீந்து
போயதென் றங்கண் மூதூர் புலம்பொடு மயர்ந்தன் றம்மா. (உஅ)

---

2660. கந்துகொல் - கட்டுத் தறியை வருத்துகின்ற. கஞ்சனைக் கரந்து - கஞ்சனுக்குத் தெரியாமல் மறைத்து. உரோணி - ரோகிணி. அரக்கு - செந்நிறம். தேவகியின் இளஞ்சூலை உரோணி வயிற்றில் வைத்தி; வைத்தி - வைப்பாயாக. மூ. 2685.

2661. அமுதின் சாயல் - அமுதத்தைப் போன்ற சாயலையுடைய; 2685, 2702; 'அமிர்தம் கட்கினிதாகிய மென்மையும் தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமற் றடுக்கும் மென்மையு முடைமையின் 'அமிர்தன்ன சாயல்' என்றார்' (சீவக. 3. ந.) தேவகி வயிற்றில் நாம் பிறத்தும்; பிறத்தும் - பிறப்போம். கன்னி - பெண் மகவு. துணர் - பூங்கொத்து. நலம் தர - அவர்களுக்கு இன்பம் தரும் பொருட்டு. அறல் - கரு மணல் போன்ற. அவ் வயிறு - அழகிய வயிறு. யசோதை வயிற்றில் கன்னியென நீ சென்று பிறத்தி; பிறத்தி - பிறப்பாயாக.

2662. புள் உயர் கொடியினானை - கருடனைக் கொடியாகக் கொண்ட திருமாலை. வயா - கருப்பம்.

(பி - ம்.) 2. தேவகி கருப்பந் தன்னை.

2663. அறிதுயில் - யோகத்துயில். அம்மானது மாயை; அம்மான் - திருமால். உஞற்ற - செய்யவே. மா - கரிய; பெரிய எனலுமாம். வீந்து போயது - அழிந்து போயிற்று. மூதூர் - மதுரையிலுள்ளார். புலம்பு - வருத்தம். அயர்ந்தன்று - சோர்வுற்றது; மயர்ந்தன்று என்று கொள்ளின் மயங்கியது எனப் பொருள் கொள்க.

கலிநிலைத்துறை.

2664. எண்ணு மெண்ணெயு மியையமற் றெப்பொரு ளகத்தும்
நண்ணு நாரண னலத்தகு மாதவம் புரிந்த
வண்ண வானக துந்துபி மனத்துவந் தடைந்தான்
தண்ணென் வெண்டிரைத் தடங்கட னிலப்பொறை தவிர்ப்பான். (உ௯)

2665. தண்ம தூக்கமழ் தாமரைத் தலைவிவீற் றிருந்த
ஒண்ம ணித்திரு மார்பினு னுளத்துவந் துறலால்
விண்வ ழுக்கிவீழ் வெங்கதிர்ப் பருதிகொ லென்னக்
கண்வ ழுக்குறு கதிரொளி கனலினன் மன்னன். (௩௦)

2666. பின்னல் வெண்டிரைப் பிறந்ததெள் ளமுதினிற் றேனின்
கன்ன லிற்சுவை கனிந்தசொற் றேவகி தேத்துத்
தன்ன கத்தினிற் றோன்றிய தனிப்பெருஞ் சுடரை
மன்னர் மன்னவன் மனத்தினுல் வைத்தனன் மாதோ. (௩௧)

2667. கலைநி ரம்பிய கற்றைவெண் ணிலாக்கதிர் மதியைக்
குலவு நல்லெழிற் குணதிசை பொறுத்தவா போல
உலகெ லாந்தன துந்தியந் தாமரை காட்டி
இலகு சோதியை யேந்திழை பொறுத்தன ளன்றே. (௩௨)

---

2664. இயைய: உவமவுருபு. எண்ணும் எண்ணெயும் போல் எப்பொருளகத்தும் நண்ணும் நாரணன்; எண் - எள். ஆனக துந்துபி - வசுதேவன்; 2627, 2644. நிலப்பொறை தவிர்ப்பான் - பூமியின் பாரத்தைத் தவிர்த்தற்கு. நாரணன் தவிர்ப்பான் ஆனகதுந்துபி மனத்து அடைந்தான்.

2665. தலைவி - திருமகள். மார்பினன் - திருமால். உளத்து - வசுதேவன் மனத்தே. உறலால் - பொருந்துதலால். விண் வழுக்கி - ஆகாயத்திலிருந்து தவறி. கண் வழுக்குறு - கண்ணினொளி கெடத்தக்க. ஒளி கனலினன் - ஒளி மிக்கான். மன்னன் - வசுதேவன்; எழுவாய்.

2666. பின்னல் - ஒன்றோடொன்று பின்னுதலை யுடைய. அமுதினில் - அமுதத்தைப் போல. தேவகி தேத்து - தேவகியின் இடத்தில். 'தன்' என்றது வசுதேவனை. சுடரை - திருமாலை. மன்னவன் - வசுதேவன்.

2667. மதியைக் குணதிசை பொறுத்தவாறு போல; "குளிர்கதிருமிழ்வெண் டிங்கள் குணதிசை யுதிக்கு மாபோல்" (2685.) சோதியை - திருமாலை. ஏந்திழை - தேவகி.

2668. மாலை யந்துழாய் மாகதப் பசும்புயல் வளர்வான்
கோல வாலிளந் தளிரின்மேல் விழைதலென் குறிக்கேன்
சேலு லாவுகட் டேவகி திருவயி றந்த
ஆலி ளந்தளிர் போலுமென் றடைந்தன னம்மா. (௩௩)

2669. முடக்குந் தெண்டிரை முழங்குபாற் கடலக நீங்கி
வடிக்கு மென்மல ரோதியவ் வயிற்றகத் தமர்ந்தான்
ஒடிக்கு மஞ்சுடர் மரகத வுருவின தொளிமேல்
நடத்தல் போன்மெனத் தோன்றின மெய்ப்பசு நரம்பு. (௩௪)

2670. அஞ்ச லஞ்சலென் றருளினுற் ருமினி தளித்த
வெஞ்சி னக்கடக் களிற்றுவெண் கோடடிப் பிடுங்க
மஞ்ச னன்வயிற் றுற்றது நினைந்துகொன் மாதர்
கஞ்ச நாண்முகை கடந்தெழு முலைமுகங் கறுத்த. (௩௫)

2671. பட்ட காரிருட் படலமெண் டிசையினும் பாற
விட்ட தண்கதி ரொளியினு லல்லது விளர்த்து
வட்ட வாண்மதி நிகர்த்தது வண்டினந் துவைப்பக்
கட்ட விழ்ந்தபூங் கோதைதீங் கதிர்நகை வதனம். (௩௬)

---

2668. துழாய் மாலையை யுடைய புயல்; திருமால்; ஆகுபெயர். வளர்வான் - துயில. விழைதல் - ஊழிக் காலத்தில் விருப்பம் கொள்ளுதலை. என் குறிக்கேன் - என்ன வென்று உரைப்பேன். சேல் மீனைப்போல் உலாவுகின்ற கண். தேவகியின் திருவயிற்றை அந்த ஆலிளந் தளிர்போலு மென்று எண்ணி அடைந்தனன்.

(பி - ம்.) 4. அடைகுறல் போன்மால்.

2669. முடக்கும்=முடங்கும் - மடங்குகின்ற. வடிக்கும் - தேனைச் சொரிகின்ற. மென்மலர் ஓதி - தேவகியினுடைய. அவ்வயிறு - அழகிய வயிறு. சுடர் - திருமாலினது. போன்ம் - போலும். தேவகியின் உடம்பில் விளங்கத் தோன்றிய. பசு நரம்பிற்குத் திருமாலின் மரகதச் சுடர் உவமை.

2670. தாம் என்றது தேவகியின் நகிலை. களிறென்றது ஈண்டுக் குவலயா பீடத்தை. மஞ்சனன் - திருமால். வயிற்று உற்றது - தன் வயிற்றிற் பொருந்தியதை. மாதர் - தேவகியினுடைய. கஞ்ச நாண்முகை கடந்து - தாமரை மொட்டை வென்று. மாதாது முலையின் முகம். கறுத்த - கோபித்தன; கருகின.

2671. பட்ட - தோன்றிய. படலம் - தொகுதி. பாற - கெட. விளர்த்து - வெளுத்து. துவைப்ப - மிதித்தலால். கட்டு அவிழ்ந்த - பிணிப்பு விட்ட. கோதை - தேவகியின். கோதையின் வதனம் ஒளியினுல் ஒப்பாகாமல் விளர்த்தமையால் மதியை நிகர்த்தது. கருவுற்ற மகளிர் உடல் விளர்த்தல் இயல்பு.

2672. மாற்றி லாதபொற் கொழுந்தின்மா மணிவிளக் கன்ன
தோற்றங் காண்டலுஞ் சுடரிழை பண்டைய ளல்லள்
ஆற்றன் மாயனே யவ்வயிற் றகத்துவந் தடைந்தான்
கூற்றம் போலுயிர் குடிப்பவென் றுணர்ந்தனன் கொடியோன். (கஎ)

2673. அளையு றைந்தவா ளரவென முனிந்துமற் றின்னே
குளிர்ம லர்ப்பசுங் கோதையைக் கோறுமென் றுள்ளும்
இளைய சூன்முதி ரேந்திழை யீங்கிவட் கொல்லின்
விளையுஞ் சாலவும் வெம்பழி யெனமன மீட்கும். (கஅ)

2674. இருக்கி னிற்கின்மற் றேகின்மெல் லணைமிசைக் கிடக்கின்
உரைக்கி னுண்ணினெங் குற்றனன் கொல்லுமோ வென்னும்
கருத்த னுதலாற் கண்டுழிக் கண்டுழி யெல்லாம்
அரத்த மூண்டிலங் காழியா னுருவமே காணும். (கசு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2675. சுடர்ந்துவில் லுமிழுஞ் செம்பொற் றோடவிழ் மலரி னானும்
விடம்பொதி மிடற்றி னானும் விண்ணவர் குழுவு மீண்டித்
தடங்கட லுலக மெல்லாந் தன்வயிற் றிருப்ப மற்றோர்
மடந்தையால் வயிற்று வாழு மாயனே வழுத்த லுற்றார். (சo)

---

2672. மாற்று இலாத - மாற்றுக் கூற முடியாத. கொழுந்து - கண்ணபிரான். மணி விளக்கு - இரத்தின தீபம்; சீவக. 1364. கொழுந்தின் தோற்றம்; தோற்றம் - பொலிவு. காண்டலும் - தேவகியிடத்துப் பார்த்தலும். சுடரிழை - தேவகி. மாயனே - திருமாலே. அவ்வயிற்றகத்து - தேவகியின் வயிற்றிடத்தே. உயிர் குடிப்ப வந்தடைந்தான் என்று: உயிர் குடிப்ப - தன் உயிரை உண்ணுதற்கு. கொடியோன் - கஞ்சன்.

2673. அளை - புற்றில். அரவென முனிந்து - பாம்பைப் போலக் கோபித்து; "இராவண னாரவென முனிந்தான்" (கம்ப. முதற்போர். 239.) இன்னே - இப்பொழுதே. கோதையை - தேவகியை. கோறும் - கொல்வேம். உள்ளும் - நினைப்பான். சூல் முதிர் - கருப்பம் முற்றிய. ஏந்திழை - தேவகி. சாலவும் - மிகவும். பழி - ஸ்திரீ ஹத்தியாகிய பழி. மனம் மீட்கும் - மனத்தைக் கொலைத் தொழிலினின்றும் மீட்பான்.

2674. இருக்கின் - அமர்ந்திருந்தாலும். கிடக்கின் - படுத்திருந்தாலும். உரைக்கின் - திருமாலைப்பற்றிச் சொன்னால். உண்ணின் - உண்டால். கொல்லுமோ - நம்மைக் கொன்றிடுவானோ. கருத்தன் - எண்ணமுடையவன். கண்டுழி - பார்க்கும் இடம். அரத்தம் - பகைவரது இரத்தத்தை. ஆழியான் - திருமால். காணும் - காண்பான்.

2675. சுடர்ந்து - விளங்கி. வில் - ஒளி. மலரினான் - பிரமன். மிடற்றினான் - உருத்திரன். தன் என்றது திருமாலை. மடந்தை - தேவகியின். மாயனை - திருமாலை. அடி. 3—4: 2667.

2676. தெளிக்குநான் மறையு மின்னந் தெளிவதற் கரிய தெய்வ
விளக்கமே ஞான நந்த வெள்ளமே நினது மாயை
வளைத்திடப் பட்டோர் நின்னை மதிப்பரே மூவ ராக
உளத்தெளி வுற்றோர் பார்ப்ப ருன்னைமற் றொருவ னென்றே. (சக)

2677. ஆக்கமு மழிவு மின்றி யகண்டமா யமல மாகி
வாக்கொடு மனத்துக் கெட்டா வள்ளலே யறத்தின் வாழ்வே
தீக்கவுந் தீயோர் தம்மைச் செய்வினை நலத்தி னோரைக்
காக்கவு மன்றோ கோடி கடவுளிவ் வுருவ மம்மா. (சஉ)

2678. பாழிவாய்ச் சுடிகை நெற்றிப் பஃறலைப் பாந்தண் மீதே
ஊழிவா யண்ட கோள முடைபடக் கோத்த தெண்ணீர்
ஆழிவாய் வளர்வாய் மற்றுன் னடிப்புணை பற்றப் பெற்றோர்
எழிரும் பிறவி வேலை யெளிதினிற் கடப்ப ரன்றே. (சங)

2679. இருட்குறும் பெறியத் தோன்று மிளங்கதிர்ப் பருதி போல
மருட்பெருந் திமிர மோட மாண்டக விளங்க ஞானப்

---

2676. தெளிக்கும் - எல்லாப் பொருளையும் தெளிவாகக் கூறும். நின்னை - உன்னுடை; உருபு மயக்கம். மதிப்பரே; ஏ: அசை நிலை. நினது மாயையால் வளைத்திடப்பட்டோர் நின்னை மூவரில் ஒருவனாக மதிப்பர் என்க. உளத்தெளிவுற்றோர் உன்னை ஒருவனென்றே பார்ப்பர்; உளத் தெளிவு - உள்ளத் தெளிவு. ஒருவன் - ஒப்பற்ற தனி முதல்.

2677. ஆக்கமும் அழிவும் இன்றி - தோன்றுதலும் அழிதலுமில்லாமல். அகண்டம் - பிரிவுபடாதது. தீயோர் தம்மைத் தீக்கவும்; தீக்கவும் - அழிக்கவும். காக்கவும் - அவர்களுக்குத் துன்பம் வராமற் காக்கவும். கோடி - கொள்கின்றாய். கடவுள் இவ்வுருவம் - தெய்வத் தன்மையையுடைய இந்த உருவத்தை.

2678. பாழிவாய் - பெரிய வாயையுடைய. பாந்தள் மீது - ஆதிசேடனாகிய அணையின் மீது. ஊழிவாய் - யுக முடிவில். கோத்த - எல்லாக் கடலும் ஒன்று சேர்ந்த. நீரையுடைய ஆழிவாய் - கடலிடத்தே. வளர்வாய் - அறிதுயில் செய்வாய். மற்று: அசை. அடிப்புணை - பாதமாகிய தெப்பத்தை. எழாகிய இரும்பிறவி வேலையை. அடிப்புணை பெற்றோர் பிறவி வேலையைக் கடப்பர்; "அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லாற், பிற வாழி நீந்த லரிது" (குறள், 8.)

2679. இருளாகிய குறும்பை. பருதி - சூரியன். மருள் பெருந் திமிரம் - மயக்கமாகிய பெரிய இருட்டு. ஓட - கெட. மாண்தக - மாட்சிமை பொருந்த. ஞானப் பொருட்கதிர் இல்லாதாமே - ஞானமாகிய

பொருட்கதி ரில்லா தாமே பூந்துழா யலங்கன் மாலை
அருட்கடல் பிறந்தி லாயே லாழிசூ ழுலகிற் கம்மா. (சச)

2680. ஆதிநின் னாம மெல்லா மஞ்செவி மடுத்தும் வாயால்
ஓதியு மழகு வாய்ந்த வுருவுகண் களிப்பக் கண்டும்
கோதில்வீட் டின்ப மெல்லாங் கொள்ளைகொண் டுண்ப ரன்றே
மோதுவெண் டரங்க முந்நீர் முதுநில மக்க டாமே. (சரு)

2681. கற்றையங் கதிர்கால் பைம்பொற் கிண்கிணி கவைஇய தெய்வச்
சிற்றடிக் கமலப் போது தீண்டவென் னோற்ற தேயோ
ஒற்றையந் திகிரிச் செல்வ வொருபெருங் கமலத் தாளால்
அற்றைநாட் பொதியப் பெற்ற வங்கண்மா ஞாலந் தானே. (சசு)

2682. ஆக்குமா றென்னை யீதி யணிசடை யானை யீதி
போக்குமா றனைத்துங் காப்பப் புகுதிநின் னுண்மை யெம்முள்
பூக்குமா றுணர்த்தி லாதாய் புவனமோ டெமையு மாய்ப்பான்
ஊக்குவாய் தொழில்கண் மூன்று முன்னவே யயன்மற் றுண்டோ. ()

2683. மாயையால் விளைந்த வண்ண மல்லது வாய்மை யாக
மாய்தலும் பிறத்த ருனு மன்னுயிர் தனக்கு மில்லை
மாயையிற் றீர்ந்து நின்ற மற்றுனக் குண்டு கொல்லோ
மாயைநின் ரேற்ற மெல்லா மதிக்கினோர் விளையாட் டன்றே. (சஅ)

---

பொருளையுடைய சூரியன் இல்லாததாகும். துழாய் அலங்கல் மாலை - துளவமாகிய அசைகின்ற மாலையையுடைய. அருட் கடலாகிய நீ பருதி போலப் பிறந்திலாயேல் உலகிற்கு ஞானப் பொருட் கதிர் இல்லாததாகும்.

2680. நாமம் - பெயர். செவி மடுத்தும் - காதாற் கேட்டும். உருவைக் கண் களிப்பக் கண்டும். முதுநில மக்கள் - பூமியிலுள்ள மனிதர்கள். மக்கள் மடுத்தும், ஓதியும், கண்டும் உண்பர் என்க.

2681. கதிர்கால் - ஒளியை வீசுகின்ற. கிண்கிணி கவைஇய சிற்றடி; "கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடி" (முருகு. 13.) என் நோற்ற தேயோ - என்ன தவம் செய்ததோ. செல்வ: திருமாலை நோக்கிய விளி. தாள் - பாதம். அற்றை நாளென்றது திரிவிக்கிரமாவதாரத்தை. பொதியப் பெற்ற - மூடப் பெற்ற. ஞாலம் என் நோற்றதேயோ.

2682. ஆக்குமாறு - படைக்கும்படி. ஈதி - ஈவாய். போக்குமாறு அரனை ஈதி; போக்குமாறு - படைத்தவற்றை அழிக்கும்படி. காப்பப் புகுதி - காத்தற்கு நீயே புகுவாய். பூக்குமாறு - தோன்றும்படி. மாய்ப்பான் - அழிக்கும் பொருட்டு. ஊக்குவாய் - கருதுவாய். உன்னவே - உன்னிடத்தனவே. இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

2683. மாயையின் தீர்ந்து - மாயையினின்றும் நீங்கி. மற்று: அசை. ஒரு மாயையாகிய நின் தோற்றமெல்லாம் மதிக்கின் ஒரு விளையாட்டு; மதிக்கின் - நினைத்துப் பார்த்தால்.

2684. எனமல ரண்ண லாதி யிமையவ ரமையா தேத்தி
வனமலர்க் கோதை மாதுன் வயிற்றுறை குழவி யெய்ப
கனலுமிழ் திகிரி யெம்மான் கஞ்சனைக் கொல்லு மொன்றும்
நினையலென் றணங்கை வாழ்த்தி நிலைக்களங் குறுகி னரே. (சகூ)

2685. நளியிருட் பிழம்பு சீத்து நானிலம் விளக்கு கின்ற
குளிர்கதி ருமிழ்வெண் டிங்கள் குணதிசை யுதிக்கு மாபோல்
தெளியமு தன்ன சாயற் றேவகி யிடத்து நின்றும்
ஒளிமணி வண்ணத் தண்ண லுதித்தன னுரோணி தன்னில். (ரு௦)

கலிநிலைத்துறை.

2686. தாம ரைக்கா நான்கின்வெண் சங்கொடு தழல்வாய்
நேமி வெங்கதை நிரையிதழ்த் தாமரை நிலவத்
தேம லர்த்தொடை மார்பினிற் றிருமறுச் சிறப்பக்
காமர் கட்டெழிற் கவுத்துவங் களத்தினிற் கவின. (ருக)

2687. இருட்கு றும்பெறிந் தெரிமணி முடிவெயிற் கற்றை
விரிக்க வாய்தொடி வில்விட வெண்ணிலா மதியைச்
சிரிக்கும் வாண்முகத் திலகுபொற் குழையொளி சிதற
நிரைத்த பன்மணிக் காஞ்சிபொன் னுடைமே னிலவ. (ருஉ)

---

2684. மலரண்ணல் - பிரமன். மாது - தேவகி; விளி. எம்மான் - திருமால். ஒன்றும் நினையல் - வேறொன்றும் நினைந்து வருந்தாதே. அணங்கை - தேவகியை.

2685. நளி - செறிந்த. சீத்து - அழித்து. கதிர் - கிரணத்தை. அடி. 1—2: 2667. அமுதன்ன சாயலையுடைய தேவகி; 2661. மணி வண்ணத்து அண்ணல் - நீலமணி போன்ற நிறத்தையுடைய கண்ணபிரான். உரோணி - ரோஹிணி நக்ஷத்திரம்.

2686. தாமரை போலும் கரங்கள் நான்கில். தழல்வாய் நேமி - தீப் போலும் வாயையுடைய சக்கரம். நிரை - வரிசை. திருமறு - ஸ்ரீவத்ஸ மென்னும் மச்சம். காமர் - விருப்பம் மருவிய. கவுத்துவம் - கௌஸ்துப மணி. களத்தினில் - கழுத்தில். கவின - அழகு செய்ய.

2687. இருட்குறும்பு எறிந்து: 2679. எரி மணிமுடி - விளங்கு கின்ற மணியாலாகிய கிரீடம். ஆய்தொடி வில்விட - ஆராயப் பெற்ற தோள் வளை ஒளியை வீச. சிரிக்கும் - இகழும். நிரைத்த - வரிசை செய்த. பன் மணிக் காஞ்சி - பல மணிகளாலாகிய ஒருவகை மேகலை. மேல் நிலவ.

2688. கருவி மாமுகிற் கொழுந்தெனக் கண்கவர் மேனி
திருவில் கான்றொளி சிந்திடச் செய்யதா மரைக்கண்
அருள்பொ ழிந்திட வற்புதக் குழவியாய்த் தோன்றும்
விரைசெய் பூந்துழாய் விமலனைக் காண்டலும் வியந்தான். (ருங)

கலிவிருத்தம்.

2689. வானகு மதியென வந்து தோன்றிய
கானக நாடனைக் கண்டு கைதொழாத்
தேனகு தாமரைச் செங்க ணீருக
ஆனக துந்துபி யன்பி னேத்தினன். (ருச)

2690. ஈனநல் விளங்கதிர்ப் பருதி யேயென
வானுற வழங்குசெவ் வண்ணங் கோடியால்
பானிறங் கோடியாற் பாது காத்திட
நீனிறங் கோடியா னீறு செய்யவே. (ருரு)

2691. செய்யதா மரைமலர்ச் செல்வி காதல
பையராத் தாங்கிய பரவை மண்மிசை
வெய்யகோ லரசரை வீட்டற் கன்றுகொல்
ஐயகா ருருவைவந் தடைந்த வண்ணமே. (ருசு)

---

2688. கருவி - மின் முதலிய தொகுதியை யுடைய. திருவில் கான்று - இந்திர வில்லைப் போல ஒளியைக் கக்கி. வியந்தவன்: வசுதேவன்.

2689. கானக நாடனை - திருமாலை; ஈண்டுக் குழவியாகிய கண்ண பிரானை; திருமால் முல்லை நிலத்தெய்வ மாதலின், 'கானக நாடன்' என்றார். ஆனக துந்துபி - வசுதேவன்.

2690. ஈன - படைத்தற்கு. ஈனச் செவ்வண்ணம் கோடி; கோடி - கொள்வாய்; என்றது பிரமன் நிறத்தை. பாதுகாத்திடப் பால் நிறம் கோடி; என்றது காத்தற்றொழிலை யுடைய திருமாலின் நிறத்தை. நீறு செய்ய நீனிறம் கோடி; என்றது அழித்தற் றொழிலையுடைய உருத்திரனது நிறத்தை. நீறு செய்ய - அழிக்க. நீல் நிறம் - நீல நிறம்.

2691. பையரா - படத்தையுடைய ஆதிசேடன். வெய்ய கோல் - கொடுங்கோலை யுடைய. வீட்டற்கு - அழித்தற்கு. ஐய: விளி. காருருவை - கரிய உருவத்தை. காருருவை அடைந்த வண்ணம் வீட்டற் கன்றுகொல்.

2692. மன்னவன் படைச்செயன் மன்னன் செய்கையாப்
பன்னுதல் போற்றனிப் பாம மாயநீ
முன்னமே யியற்றிய மூவ கைச்செயல்
நின்னுடைச் செயலென நிகழ்த்தல் செய்வரால். (ருஎ)

2693. என்றன னேத்துழி யீன்ற செல்வியும்
துன்றருந் தொன்முத ரேற்றங் கண்டனள்
நன்றுவந் துவகைநீர் நாட்டம் வார்தாக்
கன்றுகாண் கறவையிற் கசிந்து போற்றினள். (ருஅ)

2694. கானுயிர்த் ததுபுனல் கனல்க றங்குகால்
வானுயிர்த் தவன்றனை வகுத்து நின்றபூந்
தேனுயிர்த் தலர்ந்ததார்ச் செம்மன் மற்றுனை
நானுயிர்த் தனனென னகையு டைத்தரோ. (ருகூ)

2695. கழிந்தொரு நான்முகன் காலந் தீர்தலும்
அழிந்துமண் முதலிய வனைத்து நின்னுற
ஒழிந்துநீ சேடனென் றுரைப்ப நின்றனை
செழுஞ்சுடர் நின்னிலை செப்பற் பாலதோ. (சூ0)

---

2692. மன்னவனது படையின் செயலை மன்னனது செயலாகப் பன்னுதல் போல, நீ மூவராகி இயற்றிய மூவகைச் செயல்களை நின்னுடைய செயலென்றே நிகழ்த்துவார்கள்.

2693. ஈன்ற செல்வியும் - கண்ணபிரானைப் பெற்ற தேவகியும். துன்றரும் தொன் முதல் - கிட்டுதற்கரிய பழைய முதல்வனது. நன்றாக உவந்து. உவகை நீர் நாட்டத்தினின்றும் வார்தர ; வார்தர - ஒழுக. கன்றைக் கண்ட கறவையைப் போல் ; " தாயருக் கன்று சார்ந்த கன்றெனுந் தகைய னானான் " (கம்ப. மீட்சி. 337.) கசிந்து - உருகி.

2694. கான் உயிர்த்தது - வாசனையையுடைய பூமியை ; பூமிக்குரிய தனி இயல்பு கந்த மாதலின் இங்ஙனம் கூறினர். பூமி முதலிய பஞ்ச பூதங்களை உயிர்த்தவன்றனை ; உயிர்த்தவன் - பிரமன். செம்மல் - கண்ணபிரான் ; விளி. மற்று : அசை. உயிர்த்தனன் எனல் ; எனல் - என்று கூறுதல். நகை யுடைத்து - பழித்தலை யுடையது.

2695. நான்முகனுடைய காலம் கழிந்து தீர்தலும் மண் முதலிய அனைத்தும் அழிந்து நின்னுற ; நின் உற - உன்னைப் பொருந்த. ஒழிந்து - எல்லாம் கெட்டு. சேடன் என்று - எஞ்சியவன் என்று ; சேடன் - சேஷன். சுடர் - விளி.

2696. வெஞ்சின நிருதர்நீள் வேர றுப்பவான்
செஞ்சிலை நிமிர்கடை குழைத்த சேவக
கஞ்சனென் றுரைபெறு கடுங்கட் கூற்றினுக்
கஞ்சின னஞ்சின னழிப்ப வேண்டுமால். (சுக)

2697. காமர்வெண் ணிலவுமிழ் கடவுட் சங்கொடு
தீமுகத் துமிழும்வெந் திகிரி நீள்கதை
தாமரை நறுமலர் தாங்கு மிவ்வுரு
மாமுகில் வண்ணநீ மாற்றல் வேண்டுமால். (சுஉ)

2698. இவ்வுருக் கொண்டுநீ யென்கொ ரேன்றினை
பவ்வவெண் டிரைத்துயில் பரம மற்றென
மவ்வலங் கருங்குழல் வழுத்த மாயவன்
செவ்விதழ் விண்டனன் செப்பி னனரோ. (சுங)

2699 முன்னநீர் நற்றவ முயலத் தோன்றினேம்
உன்னிகர் புதல்வனை யுதவு கென்றலால்
எந்நிகர் யாமல தில்லை யாதுமக்
கந்நிலை பிறந்தன மார்வ முற்றவே. (சுச)

2700. என்றன னவ்வுரு விகந்து மாமணிக்
குன்றனு னொருபசுங் குழவி யாயினன்
ஒன்றுரை யாடின னுயிர்த்த காவலன்
மன்றலந் தாமரை வதன நோக்கியே. (சுரு)

---

2696. நிருதராது வேரை அறுப்ப; நிருதர் - இராவணன் முதலியவர். அறுப்ப - அறுத்தற்கு. வான் - பெரிய. சிலையின் குதையைக் குழைத்த சேவக; குதை - கடை வில்லின் நுனி. குழைத்த - வளைத்த. சேவக - வீரனே; 'ஏறு சேவகன்' என்பது இராமனுக்கு ஒரு பெயர்.

2697. கடவுள் - தெய்வத் தன்மை. சங்கு முதலியவற்றைத் தாங்கும் இவ்வுருவை மாற்றல் வேண்டும்.

2698. பவ்வம் - கடல். பரம: விளி. என் - எதற்காக? என - என்று. மவ்வல் - முல்லை. கருங்குழல் - தேவகி.

2699. முயல - முயன்றமையால். தோன்றினேம் - உமக்கு மகனாகத் தோன்றினேம். என்றலால் - என்று நீவிர் வேண்டியமையால். எமக்கு நிகர் யாமல்லது இல்லை யாதலால் உமக்கு அந் நிலையுடன் பிறந்தனம்.

2700. என்றனன் ;- என்று கண்ணபிரான் கூறியவளவில். இகந்து - நீங்கி. குன்றனன் - கண்ணபிரான். ஒன்று - ஒரு வார்த்தையை, காவலன் - வசுதேவன். வதனம் - முகம்.

2701. மன்னவ நந்தகோன் மாலை மார்புதோய்
அன்னமென் னடையினு ளசோதை மற்றொரு
கன்னியைப் பயக்குமக் கன்னி கைக்கொடாங்
கென்னைநீ வளர்த்துகென் றிதழ்விண் டானரோ. (சுசு)

2702. இமிழ்திரைக் கடலுல கேத்த வவ்வழி
அமிழ்துறழ் சாயலவ் வசோதை யீன்றனள்
குமுதையென் றுரைபெறு குமுதச் செய்யவாய்க்
கமழலங் கருங்குழற் கன்னி தன்னையே. (சுஎ)

2703. ஏமுறத் துயின்றனர் யாரு மெங்கணும்
காமரு கதிர்மணிக் கடைதி றந்தன
மாமலர்ப் பசுந்தொடை மன்னன் செய்யதாட்
டாமரை யாயிடைத் தளைய விழ்ந்தவே. (சுஅ)

2704. உயிரிரு விசும்பெலா மொளிசெய் மின்றவழ்
புயல்விளை நுண்டுளி பொழிய வெம்புழை
அயிலெயிற் றரவா சண்ணன் மாமணி
வெயில்விரி பணடவி மிசைக விப்பவே. (சுகூ)

---

2701. மன்னவ - வசுதேவனை நோக்கிய விளி. நந்தகோனுடைய மார்பைத் தோயும் அசோதை ஒரு கன்னியைப் பயக்கும்; பயக்கும் - பெறுவாள். கைக்கொடு - கையில் கொண்டு. ஆங்கு - அவ்விடத்தே. வளர்த்துக - வளரச் செய்வாயாக.

2702. அமிழ்து உறழ் சாயல் - அமுதத்தை ஒத்த மென்மையையுடைய; 2661. குமுதம் - நீலோற்பல மலர். கமழலங் கருங் குழல் - மணம் வீசுகின்ற கரிய கூந்தலை யுடைய; அல், அம் - வேண்டாவழிச் சாரியை; "கூம்பலங் கைத்தலத் தன்பர்" (திருச்சிற் 11.) அசோதை, குமுதை யென்றுரை பெற்ற கன்னியை ஈன்றனள்.

2703. ஏமுற - மயக்கமடைய; "ஏமுறு கடுந் திண்டேர் கடவி" (கலி. 27. 25.) காமரு - விருப்பம் மருவிய. மணிக்கடை - மாணிக்கக் கதவுகள்; 2712. தொடை - மாலை. மன்னனுடைய தாளாகிய தாமரையில் தளை அவிழ்ந்தன; மன்னன் - வசுதேவன். தளை - விலங்கு; கட்டு. தாமரை என்றதற் கேற்பத் தளையவிழ்ந்தது என்றார்.

2704. விசும்பு - ஆகாயம். புயல் - மேகம். தன்னிடம் விளைந்த துளியைப் பொழிய. புழையை யுடைய அயிலெயிறு; புழை - துளை. அயில் - கூர்மை. அரவரசாகிய அண்ணல் - ஆதிசேடன். அண்ணல் பணடவியை மிசை கவிப்ப; பணடவி - படத்தின் தொகுதி. மிசை - கண்ணபிரானை எடுத்துச் செல்லும் வசுதேவனுக்கு மேலே.

2705. எழுதரு பனிமதி யிமிழுங் கார்முகில்
நுழைதரு மாறிரு ணூறு நுண்ணிலாப்
பொழிமதி முகத்தெழிற் புதல்வற் கொண்டுதேன்
வழிதொடை மார்பினன் வல்லை யேகினன். (எo)

2706. கறையணற் பாப்பணை கைவிட் டெய்திய
மறைமுதன் மலரடி வழுத்து மாறுபோல்
வெறிகம ழாம்பல்வாய் விண்டு தேன்பொழி
துறைதிகழ் யமுனையிற் றுன்னி னனரோ. (எக)

2707. விரிதிரை வழிவிட விழிசி வந்தவாள்
அரவணைப் பள்ளியா னடைதல் காண்டலும்
கரையழி யமுனைசெங் கமலக் கைம்முகிழ்த்
துருவுகா தலினெறி யுதவிற் றென்பவே. (எஉ)

2708. அந்தா துந்துபி யதிர்வ தன்றியும்
உந்துதெண் டிரைநதி யுதவு மாற்றக
நந்தின மதிர்தா நடந்து நந்தன்வாழ்
கொந்தவிழ் மலர்வனங் குறுகி னனரோ. (எங)

---

2705. எழுதரு - தோன்றுகின்ற. இமிழும் - முழங்குகின்ற. மதி முகிலில் நுழை தருமாறு. இருள் நூறும் - இருட்டை அழிக்கின்ற. புதல்வன் - கண்ணபிரானை. தொடை - மாலை. மார்பினன் - வசுதேவன். வல்லை - விரைவாக. கண்ணபிரானுக்கு மதி உவமை.

2706. கறை அணல் பாப்பணை - விடத்தை யுடைய மேல்வாயைக் கொண்ட பாப்பணையை. கைவிட்டு - நீங்கி. மறைமுதல் - கண்ணபிரானுடைய. வெறி - வாசனை. துன்னினன் - பொருந்தினன்.

2707. திரை வழிவிடும்படி விழி சிவந்த பள்ளியான்; பள்ளியான் - திருமால்; என்றது, இராமாவதாரத்தே வருணனை வழிவிடச் செய்து சேது பந்தனம் செய்த வரலாற்றைக் குறிப்பித்தது. அடைதல் காண்டலும் - யமுனையில் சேர்ந்ததைப் பார்த்தவுடன். யமுனை - யமுனாநதி. கமலமாகிய கையை முகிழ்த்து; என்றமையால் இரவுப் பொழுது என்பதும் உணர்த்தப் பட்டது. முகிழ்த்து - அரும்பி; குவிந்து. உருவு காதலின் - ஊடுருவப் பெற்ற அன்பினால். நெறி - வழியை.

2708. அதிர்தா - ஒலிப்ப. திரை - அலையை யுடைய. நதி உதவுகின்ற ஆற்றகத்தே யுள்ள நந்தினம் அதிர்தா; நந்தினம் - சங்கின் கூட்டங்கள். நந்தன் வாழ்கின்ற வனத்தைக் குறுகினன்; நந்தன் - நந்தகோன்.

2709. நள்ளென்யா மத்திடை நரந்த நாறுதெண்
கள்ளுலாங் கருங்குழற் கன்னி தன்னையீன்
றள்ளிலைப் பூணின ளசோதை கண்டுயில்
பள்ளிவாய் மென்மெலப் படர்குற் றனரோ. (எச)

2710. இன்னதோர் குழவினா மீன்ற தாமென
உன்னலண் மம்மர்கூர்ந் துறங்கு மேழைபால்
மன்னுபைங் குழவியை வளர்த்தி மன்னனக்
கன்னியைக் கைக்கொடு கடிதின் மீண்டனன். (எரு)

2711. மணிக்கொடி யனையதன் மனைவி செங்கையில்
தணிப்பருங் குழவியைத் தலைவ னல்கினன்
பிணித்தது வல்லிகான் மலர்பி றங்கிட
அணித்தகு கதவமு மடைக்கப் பட்டவே. (எசு)

2712. அழுதது குழவியாங் கழுத வின்னொலி
செழுமணி வாயிலோர் செவிப்பட் டோதலும்
குழலொடு நறுமலர்க் கோதை சோர்தாக்
கழைசுளி களிற்றுவெங் கஞ்ச னெய்தினன். (எஎ)

---

2709. நள்ளென் யாமத்து - செறிந்த இருளையுடைய இடையிரவின் கண்; "நள்ளென்றன்றே யாமம்" குறுந். (6. 1.) நரந்தம் நாறு தெண் கள் உலாம் கருங்குழல் - நரந்தப் பூவின் மணம் கமழ்கின்ற தெளிந்த தேன் பரந்த கரிய கூந்தலையுடைய; "நரந்த நாறுங் குவையிருங் கூந்தல்" (குறுந். 52.3.) கன்னி - ரோஹிணி. அள் இலைப் பூணினள் - செறிந்த இலை வடிவம் செய்த அணிகளையுடையவள். கன்னியை ஈன்ற பூணினளாகிய அசோதை கண் துயில்கின்ற பள்ளிவாய்: பள்ளிவாய் - படுக்கை யிடத்து. படர் குற்றான் - வசுதேவன் போகலுற்றான்.

2710. இன்னதோர் குழவி - இத் தன்மையை யுடையதொரு குழந்தையை. உன்னலள் - கருதாதவளாய். மம்மர் கூர்ந்து - மயக்கம் மிக்கு. ஏழைபால் - அசோதை யிடத்து. குழவியை வளர்த்தி - கண்ணபிரானைத் துயிலச் செய்து. மன்னன் - வசுதேவன்; எழுவாய். அக் கன்னியை - ரோகிணியை. கடிதின் - விரைவாக.

2711. மணிக் கொடி - மாணிக்கக் கொடி. மனைவி - தேவகியினுடைய. தணிப்பரு - தாழ்த்தற்கு அரிய. குழவியை - ரோஹிணியை. தலைவன் - வசுதேவன். காலாகிய மலரை வல்லி பிணித்தது; கால் - வசுதேவன் பாதத்தை. வல்லி - விலங்கு; கொடி. மலர் என்றதற்கேற்ப வல்லி யென்றது ஒரு நயம். கதவம் - சிறைவாயிற் கதவு.

2712. குழவி அழுதது; குழவி - ரோஹிணி. மணி வாயில் - மாணிக்கக் கதவு; 2703. வாயிலோர் - சிறை காவலர். குழல் - கஞ்சனுடைய தலை மயிர்; ஆடவர் குடுமியையும் குழல் என்று கூறுதல் மரபு; "குழலுடையச் சிகழிகைக் குமரன்" (சீவக. 1092.) கழை சுளி - குத்துக் கோலைக் கோபிக்கின்ற, களிற்றை யுடைய கஞ்சன்.

2713. மல்லடு தோளினன் வரவு நோக்கிய
சில்லரி யொழுகுகட் டிஞ்சொற் றேவகி
கொல்லனின் றிருமகன் கோடற் காகுமிந்
நல்லெழின் மாதென நயப்பிற் கூறினள். (எஅ)

2714. துளிமுகிற் கருங்குழ றுவர்த்த செய்யவாய்க்
கிளியென மிழற்றுதீங் கிளவி கேட்கலன்
தளிர்புரை செங்கையிற் றழீஇக்கொள் கன்னியை
வளைபொலி தடக்கையால் வலிதின் வாங்கினன். (எகூ)

2715. அற்றமில் கன்னித னஞ்செஞ் சீறடி
பற்றினன் குரூஉச்சுடர்ப் பளிக்குப் பாறைமேல்
எற்றுழிக் கையிகந் தெழுந்து தைத்தனள்
சுற்றமை சிலையினன் றோளி னென்பவே. (அo)

2716. வாளுலாய்த் திரிதரு வான்மு கட்டிடை
நீளொளி மின்னென நிலவத் தோன்றியெண்
டோளினண் முருகவிழ் துளவத் தாரினள்
காளக வுடையினள் காளி கூறுவாள். (அக)

---

2713. மல் - மல்லர்களை. தோளினன் - கஞ்சனுடைய. சில் அரி ஒழுகு கண் - சிலவாகிய ரேகைகளை யுடைய நீண்ட கண்; கண்ணையும், சொல்லையுமுடைய தேவகி. நின் திருமகன் கோடற்காகும்; இம் மாதைக் கொல்லல் என; கோடற்காகும் - மணம் செய்து கொள்ளுதற் கேற்றவளா வாள். என - என்று. நயப்பின் - விருப்பத்தால்.

2714. துளியையுடைய முகிலைப் போலும் கரிய குழல் - தேவகி. துவர்த்த - சிவந்த; கிளிக்கு அடை. குழல் மிழற்றுகின்ற கிளவியை; கையினால் தேவகி தழுவிக் கொண்டிருந்த கன்னியை; கன்னி - ரோஹிணி. வளை - தோள்வளை. வலிதின் - பலாத்காரத்தால்.

2715. அற்றம் இல் - குறைபாடில்லாத. கன்னியின் அடியைப் பற்றினனாய் எற்றுழி; எற்றுழி - மோதும் சமையத்து. கையிகந்து - அவனை விட்டகன்று. சுற்று அமை - வளைதல் அமைந்த. சிலையினன் தோளில் உதைத்தனள்; சிலையினன் - கஞ்சன். என்ப, ஏ - அசைகள்.

2716. வாள் உலாய் - சந்திர சூரியர் உலவி. எண் தோளினள் - எட்டுக் கையினள். முருகு - தேன். துளவத்தார் - துளவ மாலை. காளக உடையினள் - கரிய ஆடையினள்; "காளக வுடையினன்" (சீவக. 320.) துர்க்கையின் அவதாரமே ரோஹிணி என்பது அறியற்பாலது.

2717. அரசமற் றென்னைநீ யறைவ தென்கொலோ
பொருதுநிற் கொல்பவன் புதுவெண் டிங்கள்போல்
ஒருவழிப் பிறந்தன னுறைகின் றானெனா
வெருவரு கட்டுரை விளம்பி யேகினாள். (அஉ)

2718. மூத்தவெண் ணகையினாண் மொழிதல் கேட்டலும்
எத்திறம் புரிந்தனம் யாமற் றீங்கெனாத்
தத்தரி யொழுகுகட் டங்கை தன்னொடு
மைத்துனன் வன்றளை மாற்றி னானரோ. (அ௩)

2719. தெய்வமும் பொய்யுரை செப்பிற் றேயெழு
பவ்வவெண் டிரைநிலம் பரவு நல்லெழிற்
கொவ்வைவாய்க் குழவிகள் கொல்லப் பட்டவே
வெவ்வினை விளைவையார் விலக்க வல்லரே. (அச)

2720. அழியன்மி னாதலு மழிவு மோர்ந்திடின்
ஒழிவிலெப் பொருட்கெலா முண்மை யல்லவோ
பொழிமதுக் கோதையீர் பொறுமின் யான்புரி
பிழையெனப் பணிந்தனன் பெயர்ந்திட் டானரோ. (அரு)

---

2717. அரச - கஞ்சனுக்கு விளி. அறைவது-பாறையில் மோதுவது. நின்னைப் பொருது கொல்பவன். ஒருவழி - வேறோரிடத்தே. எனா - என்று. வெருவரு - அஞ்சத்தக்க. ஏகினாள் - மறைந்து சென்றாள்.

2718. நகையினாள் - ரோஹிணி. மொழிதல் - சொல்லியதை. யாம் ஈங்கு எத்திறம் புரிந்தனம் எனா ; எனா - என்று கருதி. தத்து அரி ஒழுகு கண் - பரவிய ரேகை நீண்ட கண்ணையுடைய. தேவகியுடன் மைத்துனன் தளையை மாற்றினான் ; மைத்துனன் - வசுதேவன். தளை - விலங்கு.

2719. தெய்வம் - அசரீரி. எழு பவ்வம் - ஏழு கடல் ; பரவும் - புகழ்கின்ற. வெவ்வினை - தீவினையின். இப் பாடலும் அடுத்த பாடலும் கஞ்சன் இரங்கிக் கூறுவன.

2720. அழியன்மின் - வருந்தாதீர். ஆதலும் அழிதலும் - உண்டாதலும், அழிவடைதலும் ; "ஆதலு மழித லானு மவை பொருட் கியல்பு கண்டாய்" (சீவக. 69.) ஓர்ந்திடின் - ஆராய்ந்தால். ஒழிவில் - நீக்கமில்லாத. எப்பொருட்கெலாம் - எவ்வகைப்பட்ட எல்லாப் பொருள்களுக்கும். கோதையீரென்றது வசுதேவனையும், தேவகியையும் ; விளி. யான் புரிந்த பிழையைப் பொறுமின் எனப் பணிந்தனன். பெயர்ந்திட்டான் - அவ்விடம் விட்டகன்றான்.

2721. மழைமதக் களிறனான் மற்றை ஞான்றுநல்
எழில்வளர் கன்னிநன் றிசைத்த கூறலும்
குழவிக ளனைத்தையுங் கோறல் வேண்டுமென்
றழலுமிழ் வேற்படை யமைச்சர் கூறினர். (அசு)

2722. புணர்ப்புறு பூதனை யாதி யாகிய
தணிப்பருங் கொடியவர் தம்மை மாநிலத்
திணைப்பருங் குழவிகள் யாவுங் கொல்கெனப்
பணித்தனன் வெங்கொலை பழுத்த வேலினான். (அஎ)

2723. முருகவிழ் முள்ளரை முளரி வாண்முகத்
தொருபசுங் குழவிவந் துதித்த தாமென
நரலைமா நிலம்புகழ் நந்த கோபனோர்
கரையிலா வுவகையங் கடலின் மூழ்கினான். (அஅ)

2724. ஊழிமாக் கடன்முகட் டொருவ ரின்றியே
தாழ்சினை யாலிளந் தளிரின் மீமிசை
வாழ்பசுங் குழவிக்கு மறைவல் வேதியர்
சூழ்வ ரியற்றினன் றோற்றச் செய்வினை. (அகூ)

---

2721. களிறனான் - கஞ்சன். கன்னி இசைத்தவற்றைக் கூறலும்; கன்னி - ரோஹிணி. கோறல் - கொல்லுதல்.

2722. புணர்ப்புறு - சூழ்ச்சி மிக்க. தணிப்பரு - குறைத்தற்கரிய. நிலத்திலுள்ள குழவிகள் யாவற்றையும் கொல்க என. பணித்தனன் - கட்டளை யிட்டான். வேலினான் - கஞ்சன்.

2723. முருகு - தேன். முள்ளை அரையிலே யுடைய முளரி - தாமரை. முளரிபோலும் முகத்தையுடைய பசுங்குழவி. (அடி. 1.) "முட்பொதி கமல மன்ன.........முகத்தினாட்கே" (நைடதம். 79.) நரலை - கடல். நந்த கோபன், குழவி உதித்ததாமென உவகைக் கடலில் மூழ்கினான்.

2724. கடல் முகட்டு - கடலின் உச்சியில். தாழ்சினை ஆல் இளந் தளிரின் மீமிசை - தாழ்ந்த கிளைகளையுடைய ஆலமரத்தின் இளந்தளிரின் மேல்; மீமிசை - ஒருபொருட் பன்மொழி. குழவிக்கு - கண்ணபிரானுக்கு. சூழ்வர - தன்னைச் சுற்றி வர. தோற்றச் செய்வினையை இயற்றினன்; தோற்றச் செய்வினை - சாதகருமங்கள்.

2725. சொரிதரு பாலின துள்ளு கன்றின
புரையறு பசும்பொனாற் புனையப் பட்டன
இருபதி னுயிர மிளநல் லானுவந்
தருமறை யவர்க்கவா வடங்க நல்கினான். (௬௦)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2726. கொத்தளி சுழலு முல்லைக் கொழுமலர் தொடுத்த பந்து
கைத்தளிர் சிவப்ப வீசிக் கடிகமழ் சிவிறி நீர்தூய்
முத்தவெண் ணகையார் நெய்தோய் முறிபுரை மேனி மாதர்
நித்தலும் வீதி தோறும் நெய்விளை யாடி னாரே. (௬௧)

2727. நந்தன்வாழ் பெருந்தண் கான நலத்தகு பசும்பொற் சுண்ணம்
சிந்துரப் பொடிக ளோடு திசைதிசை கமழ வீசி
அந்தளிர்ப் பாரி சாதத் தாய்மலர்த் தாது போர்த்த
இந்திர னகர மேய்ப்ப வின்னெழில் சிறந்த தன்றே. (௬௨)

2728. பிடவமென் படலை மாலைப் பெருந்தகை நந்த கோபன்
கடன்மடை திறந்த தென்னக் கடாம்பொழி களிற்றுக் கஞ்சற்

---

2725. புரை - குற்றம். பாலினவும், கன்றினவும், பொன்னாற் புனையப் பட்டனவுமான, இருபதினாயிரம் ஆனை மறையவர்க்கு அவாவடங்க நல்கினான்; புனையப்படுதல் - அலங்கரிக்கப்படுதல். ஆன் - பசுக்கள். அவா - ஆசை.

2726. கொத்து அளி - தொகுதியாகிய வண்டுகள். முல்லை மலரால் தொடுத்த பந்தைக் கையாகிய தளிர் சிவப்ப வீசி; (சீவக. 743.) கடி - வாசனை. சிவிறியால் நீரைத்தூய்; சிவிறி - நீர்வீசு கருவி; நெடுங் துருத்தி என்பர்; (சீவக. 86. ந.) தூய் - தூவி. நெய் தோய் முறிபுரை மேனி - நெய்யிற் றோய்த்த மாந்தளிரைப் போன்ற மேனியையுடைய நகையாராகிய மாதர். நித்தலும் - ஒவ்வொரு நாளும். நெய் விளையாடல் - அப்பியங்க ஸ்நானம்; எண்ணெயும் வாசனைப் பொடியும் கொடுத்தல்.

(பி - ம்.) 4. நெய்த்த பேரன்பு போர்ப்ப.

2727. நந்தன் - நந்தகோபன். கானம் - வனம். பொற் சுண்ணத்தையும் சிந்துரப் பொடியையும் வீசி; சுண்ணம் - வாசனைப் பொடி. * வீசி - வீசுதலால். தாது போர்த்தல் இந்திரன் நகர்க்கு அடை: நகர் - அமராவதி. ஏய்ப்ப - ஒப்பாகும்படி. நந்தனுடைய கானத்திற்கு இந்திரன் நகரம் உவமை.

2728. பிடவமென் படலை மாலை - பிடவம் பூவாலாகிய மெல்லிய வகை மாலையை யணிந்த; பிடவம் - முல்லைக் கருப்பொருள். கடாம் - மதம். களிற்றையுடைய கஞ்சற்கு. திறை - கப்பம். வேய் இசை தெரி ஆயர் -

கிடுதிறை கொண்டு நல்வே யிசைதெரி யாயர் சூழ
வடவரை மருளு மாட மதுரைசென் றெய்தி ஞனல். (கூங)

2729. கதக்களி யானை யன்ன கஞ்சனைக் கண்டு வண்டு
மிதிக்கவாய் நெகிழ்ந்த தாரான் வீட்டகம் படர்த லோடும்
பொதுக்கடிந் துலகங் காத்த புகழ்வசு தேவ னெய்தி
உதித்ததே குழவி யென்னு வுரைத்தனன் றழீஇயி ஞனே. ()

2730. கொடிப்பசுந் துளவ நாறு கோகுலந் தன்னி னண்ப
அடுக்குமுற் பாதங் கூர்வே லரசினைக் கண்டா யன்றே
நெடித்தல்செல் லாதி போதி யென்றலு நினைவு கூர்ந்து
வடித்தபூந் தாம மார்பன் வல்விரைந் தேகி ஞனே. (கூரு)



# 2. பூதனை வீடு பெற்ற அத்தியாயம்.

கலிவிருத்தம்.

2731. செஞ்சுடர் மணிக்கலை சிலம்பொடு சிலம்ப
வஞ்சியென நின்றுருசி மருங்குதடு மாற
நஞ்சுபொதி வெம்முலை யருத்துற நடந்தாள்
அஞ்சுவரு பூதனை யணங்குரு வெடுத்தே. (க)

புல்லாங் குழலின் இசையை ஆராய்கின்ற இடையர். வடவரை மருளும் - மேருமலை மயங்கும்படியான. கஞ்சற்குத் திறை கொண்டு ஆயர் சூழ, மதுரை எய்தினன்.

2729. கதம் - கோபம். மிதிக்க - மிதித்தலால். தாரான் - வசுதேவனுடைய. வீட்டகம் படர்தலோடும் - வீட்டிடத்தைச் சேர்ந்தவுடன். குழவி உதித்ததே என்னு - குழந்தை பிறந்ததன்றோ என்று. தழீஇயினன் - தழுவிக் கொண்டான்.

2730. கொடி - நீட்சி. கோகுலம் - இது நந்தகோபன் இருப்பிடம். நண்ப - நந்தகோபனுக்கு விளி. உற்பாதமடுக்கும் - தீயன உண்டாகும். அரசினை - கஞ்சனை. நெடித்தல் செல்லாதி - தாமதியாதே. என்றலும் - என்று வசுதேவன் கூறியதும். மார்பன் - நந்தகோபன். வில் விரைந்து - மிக விரைந்து.

2731. சுடர் - ஒளி. மணிகளையுடைய கலை - மேகலை. மேகலை சிலம்புடன் சிலம்ப ; சிலம்ப - ஒலிக்க. வஞ்சி - வஞ்சிக் கொடி. மருங்கு - இடை. அருத்துற - கண்ணபிரானுக்கு ஊட்டுதற்கு. அணங்குரு - பெண்ணுருவம். பூதனை நடந்தாள் என்க.

2732. கண்டவர் மனம்பருகு காவிபுரை கண்ணாள்
வண்டுபடு தாமரை மலர்க்கையின் விளங்கப்
புண்டரிக மாதுவரல் போலவருண் மாரிக்
கொண்டல்விளை யாடல்புரி கோகுலம டைந்தாள். (உ)

2733. காலவிட மூறுமொரு கட்செவியை யந்தண்
மாலையென வங்கையி லெடுப்பதனை மான
ஆலுமறை யந்தமு மலைக்கடலு நீத்துக்
கோலமுறு கோவலர் கொழுந்தினை யெடுத்தாள். (௩)

2734. குண்டல மிலங்கவொர் குறங்கினி திருத்தி
வெண்டள வரும்பனைய மென்னகை விளைத்து
மண்டுபுனல் வேலிதிகழ் மண்ணுமுயர் விண்ணும்
உண்டவனை வெய்யமுலை யூட்டின ளணைத்தே. (௪)

2735. அறிந்துநகை யாடிமுலை யங்கைகொடு பற்றி
மறங்குலவு வஞ்சமகண் மாமுலை மணிக்கண்
திறந்தொழுகு பாவினொடு செய்யதளி ரென்னப்
பிறங்குகனி வாய்முகில் பிழிந்துயிர் குடித்தான். (௫)

---

2732. காவி புரை - நீலோற்பலத்தை ஒத்த. கண்ணாள் - பூதனை; பருகுதல் கண்ணின். வண்டுபடு - வண்டுகள் ஒலிக்கின்ற. புண்டரிக மாது - திருமகள். அருள்மாரியை யுடைய கொண்டல்; கண்ணபிரான் விளையாடலைச் செய்யும் கோகுலத்தை யடைந்தாள்.

2733. காலவிடம் ஊறும் - இறுதியைச் செய்யும் விஷம் ஊறுகின்ற. கட்செவியை - பாம்பை. அம் தண் மாலையென - அழகிய குளிர்ந்த பூ மாலையைப் போல. மான - ஒப்ப. ஆலும் - ஆலிலையையும். மறையந்தமும் - வேதாந்தத்தையும். அலைக் கடலும் - அலையையுடைய பாற்கடலையும். கோவலர் கோலமுறும் கொழுந்தினை - யாதவர் வடிவம் கொண்ட கண்ணபிரானை.

2734. குறங்கு இனிதிருத்தி - துடையின்மேல் இனிமையாக வைத்துக் கொண்டு. வெண் தளவரும்பு - வெள்ளிய முல்லையின் முகை. மண்டு புனல் வேலி - கடல். மண்ணும் விண்ணும் உண்டவனை முலை யூட்டினள் என்பது நயம்.

2735. நகையாடி - சிரித்து. மறம் குலவு - பாவம் விளங்குகின்ற. வஞ்ச மகள் - பூதனை. முலை மணிக்கண் - முலைக்காம்பினுடைய துவாரம். பிறங்கு - விளங்குகின்ற. முகில் - கண்ணபிரான். முகில் பற்றிப் பிழிந்து பாவினொடு உயிர் குடித்தான்.

2736. ஊறுமுலை தந்திளைய ருள்ளுயிரை யெல்லாம்
ஈறுபுரி பூதனை யிறந்துருவு வேறாய்
நீறுபட யோசனையி னின்றமா னெல்லாம்
வீறுயர் நிலம்புக விழுந்தனளோர் வெற்பின். (சு)

2737. கொண்டறவழ் கின்றதொரு குன்றமனை யாண்மேல்
தண்டளவ மாமுகி றவழ்ந்துவிளை யாட
அண்டர்குல மங்கையரொ டாய்தொடி யசோதை
கண்டனள் கலங்கினள் கலுழ்ந்தன ளெடுத்தாள். (எ)

2738. மூப்பிளமை யின்றியுயர் மூவுலகு முண்டோர்
பாப்பணையின் மீதுதுயில் பண்ணவனை யெல்லாம்
பூப்பவனை யுந்திதரு பூவினில் வகுத்துக்
காப்பவனை நின்றுசில காப்பனகள் செய்தாள். (அ)

2739. மூரலின் முகிழ்த்தமலர் மொய்த்ததொடை நந்தன்
சார்தரு நெறிக்கணுறு தண்சினை மரங்கள்
வேரற விழுந்தவள்வெ ருக்கொளுட னோக்கி
ஒரும்வசு தேவன்மொழி யுள்ளினன் வியந்தான். (கூ)

---

2736. இளையர் - குழந்தைகள். ஈறுபுரி - கொல்லுதலைச் செய்த. யோசனையின் - ஒரு யோசனை தூரத்தில். மரன் - மரம். வீறுயர் - பெருமை மிகுந்த. வெற்பின் - மலையைப் போல். பூதனை இறந்து உருவு வேறாய் வெற்பின் மரனெல்லாம் நிலம்புக விழுந்தனள்.

2737. கொண்டல் - மேகம். தண்தளவமாமுகில் - குளிர்ந்த முல்லை மாலையை அணிந்த மேகம்; என்றது கண்ணபிரானை. குன்றில் மேகம் விளை யாட என்றது ஒரு நயம். அண்டர் - இடையர். ஆய்தொடி - ஆராய்ந் தெடுத்த வளையல்களை அணிந்த. கலுழ்ந்தனள் - அழுதவளாய்.

2738. பாப்பணை - பாம்பாகிய படுக்கை. பண்ணவன் - தேவனாகிய திருமாலை. எல்லாம் பூப்பவனை - பிரமனை. உந்தி தரு பூ - நாபி கமலம். முத்தொழிற்கு முரியவன் திருமால் என்றபடி. காப்பனகள் - கண்ணெச்சிற் படாமல் காப்பனவாகிய திருட்டி தோட பரிகாரங்களை; ரக்ஷைகள் என்பர்.

2739. மூரலின் முகிழ்த்த மலர்-முல்லை; மூரலின்-பற்களைப்போல். முகிழ்த்த - அரும்பிய. தொடை - மாலை. வெருக்கொள் உடல் - கண்டார் அச்சம் கொள்ளத் தக்க உடம்பை.

2740. தீட்டரிய செவ்விகொடு சேர்ந்தது முலைப்பால்
ஊட்டியதும் வல்லுருவ முற்றுவிழு மாறும்
கேட்டனன் வியந்தளி கிளைத்ததுள வோனை
ஆட்டினன் விழிப்புன லணைத்தன னுவந்தான். (கo)

2741. மட்டொழுகு முல்லைமலர் மார்பர்முக னோக்கிச்
சுட்டிடுக விங்கிது துணித்தென விசைப்பக்
கட்டழலு மிழ்ந்துகதிர் காலுமழு வாளால்
வெட்டியவ ரக்கியுடல் வெங்கனன் மடுத்தார். (கக)

2742. மேதகு கடற்பவளம் வென்றுமிளிர் செவ்வாய்
ஆதிகதிர் மாமுலை யருந்திய திறத்தால்
பூதனை யுடற்சுடு புகைப்படல மண்டிக்
காதமொரு நான்குவிளை காரகில் கமழ்ந்த. (கஉ)

2743. வீட்டநினை வாகியழல் வெய்யவிட னூறு
மோட்டுமுலை தந்தவளு முத்திபடர் குற்றுள்
தாட்டுளவி னற்கமுது தத்திவழி கொங்கை
ஊட்டுமவர் சேர்நெறி யுரைப்பதெவ னம்மா. (கங)

2740. தீட்டரிய செவ்வி - ஓவியத்தில் எழுதுவதற்கு அரிய அழகு; "ஓவியத் தெழுத வொண்ணு வுருவத்தாய்" (கம்ப. வாலி வதை 78.) அளி கிளைத்த - வண்டுகள் கிண்டிய; கருணை மிக்க. துளவோனை விழிப் புனலால் ஆட்டினன்.

2741. மட்டு - தேன். முல்லைமலர் மார்பர் முகம் - யாதவர் முகத்தை. இது துணித்துச் சுட்டிடுக வென; இது - இப் பூதனை யுடலத்தை. துணித்து - வெட்டி. கட்டழல் - மிக்க தீயை. மழுவாலும், வாளாலும் அவ் வரக்கி உடலை வெட்டி. கனலில் மடுத்தார்.

2742. மேதகு - மேம்பட்ட. செவ்வாயை யுடைய ஆதி - கண்ண பிரான். கதிர்த்த முலையை. நான்கு காத தூரம் காரகில் கமழ்ந்த; காரகில் - கரிய அகிற் புகையின் மணம்.

2743. வீட்ட நினைவாகி - கொல்ல எண்ணமுடையவளாகி. விடன் ஊறும் முலையைத் தந்தவள் - பூதனை; விடன் - விஷம். முத்தி - மோட்சம். தாள் துளவுக்கு அடை. அமுது - பால். கொங்கையை ஊட்டுமவர் சேர்கின்ற நெறியை. எவன் உரைப்பது - என்னவென்று சொல்லுவது. (மு. 2826.)

# 3. சகடம் உதைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2744. மஞ்சா யொளிருந் திருமேனி
மழலைப் பசுஞ்சொன் மறைக்கொழுந்தை
அஞ்சாய் மருங்குற் செங்கனிவா
யசோதை கனிவாய் முலையருத்தி
நஞ்சா யிரவாய் முழைஞ்சுபொழி
நாகங் கிடந்து பெரிதுயிர்ப்பத்
துஞ்சா மணிப்பொற் றொட்டின்மிசைத்
துயிலத் துணைக்கண் டுயிற்றினளால். (க)

2745. சிறந்த மூன்றூந் திங்களின்வாய்ச்
செந்தா மரைக்கட் பசுங்குழவி
பிறந்த திருநாள் விழாவயர்ந்து
பிள்ளைப் பிறைவா ணுதலன்னை
உறைந்த காலைப் பசித்தழுதாங்
கொண்பொன் னடித்தா மரைநீட்ட
மறிந்து சகடம் வேறுகி
மண்மே லதிர்ந்து வீழ்ந்ததால். (உ)

2744. மஞ்சாய் - மேகத்தைப் போல. மறைக் கொழுந்தை - திருமாலை; 2854. அம் சாய் மருங்குல் - அழகிய மெலிந்த இடை. கனிவாய் - அன்புடன்; கண்ணபிரானுடைய வாயில் அன்புடன் அருத்தி - உண்பித்து. ஆயிரம் வாயாகிய முழைஞ்சினின்றும் நஞ்சைப் பொழிகின்ற நாகம் - ஆதிசேடன்; முழைஞ்சு - குகை. உயிர்ப்ப - தன்பால் துயிலப் பெருமையின் ஏக்கத்தால் பெரு மூச்சுவிட என்பது கருத்து. துஞ்சாமணி - எப்பொழுதும் ஒளிவிடும் மணி. துயில - உறங்கும்படி. துணை - இரண்டு.

2745. மூன்றூந் திங்களின் வாய்-மூன்றும் மாதத்தில். குழவி பிறந்த திருநாளாகிய விழா; குழவி - கண்ணபிரான். விழா அயர்ந்து - விழாவைச் செய்து. பிள்ளைப் பிறை - இளம்பிறை. அன்னை - அசோதை. உறைந்த காலை - கோபிகளை உபசரித்துக் கொண்டிருந்த சமயத்தில். அடித்தாமரையை நீட்ட; நீட்ட - நீட்டி உதைக்க. மறிந்து - புரண்டு. சகடம் - சகட வுருவம் கொண்டு வந்த அசுரன். வேறுகி - உரு வேறுபட்டு.

(பி - ம்.) 4. சகடம் வீற்றுகி.

2746. வேறு படவீழ் நெடுஞ்சகடம்
வியந்து நோக்கி யெடுத்தன்னை
ஊறு முலைப்பா லின்னமுத
மூட்டிக் குறங்கின் வைத்துவப்ப
மாறில் குழவி மணிவரையிற்
கனப்ப மண்மேல் வைத்திடலும்
சூறை வளியா வோரவுணன்
சுழன்று விண்கொண் டெழுந்தனனால். (ங)

2747. சுழிக்குங் கடுங்கா லெறிகின்ற
தூளிப் படலத் திடைமறையக்
குழைக்கும் பசும்பொற் கொம்பனையாள்
குழவி காணாள் குழைவெய்த
வழுத்தற் கரிய மறைமுதலை
வவ்விக் கொடுபோம் வாளவுணன்
கழுத்து நெரிப்பக் கண்பிதுங்கிக்
கன்மேற் கவிழ்ந்து வீழ்ந்திறந்தான். (ச)

2748. விண்டோய் குடுமி நெடுவரைபோல்
வீழ்ந்த வவுண னாக்கைமிசைத்
தண்டா துறைக்குந் துளவமுகி
றவழ்ந்து விளையா டுதலன்னை

---

2746. வீழ்ந்த சகடத்தை நோக்கி. எடுத்து - கண்ணபிரானைக் கையால் எடுத்து. அன்னை - அசோதை. குறங்கின் - துடையில். குழவி மணிவரையிற் கனப்ப - கண்ணபிரான் அழகிய மலையைப் போலக் கனத்திட. சூறை வளியா - சூறவளிக் காற்றாக. அவுணன் - திருணாவர்த்தன்; வாதாசுரன் என்றும் கூறுவர். கண்ணபிரானை விண்ணிற் கொண்டு.

(பி - ம்.) 1. வீழ வியந்தே யெடுத்தணையா.

2747. கால் - காற்று. தூளிப் படலத்திடைக் கண்ணபிரான் மறைய. குழைக்கும் - தளிர்க்கின்ற. குழவியைக் காணாளாய்க் குழைவெய்த; குழைவெய்த - வருத்தமடைய. மறை முதல் - கண்ணபிரான். அவுணன் - திருணாவர்த்தன். கழுத்து நெரிப்ப - கண்ணபிரான் அவுணன் கழுத்தை நெரித்தலால். கல் - மலை.

(பி - ம்.) 4. ‘கழுத்து நெரியக் - கன்மேற் கவிழ்புளுயிர் மாய்ந்தான்’.

2748. குடுமி - சிகரம். ஆக்கை மிசை - உடலின் மீது. தாது உறைக்கும் - பூந்தாதுகளை உதிர்க்கின்ற. துளவ முகில் - கண்ணபிரான்.

கண்டாள் வெருவிக் கைவிதிர்த்தாள்
கலுழ்ந்தாள் கைத்தா மரைமலரில்
கொண்டாள் சுரந்து வழிமுலைப்பால்
கொடுத்தா ளுள்ளங் குளிர்புற்றாள். (௫)

கலிநிலைத்துறை.

2749. பூவைப் புதுமா மலர்போ லெழில்பூத்த தோன்றல்
ஆவித்த காலைத் துவர்வா யிடையாழி ஞாலம்
மேவித் திகழுந் திறனோக்கி வியக்கு மன்னை
காவித் திருமா மலரன்ன தன்கண்பு தைத்தாள். (௬)

2749. அ. புள்வாய் கிழிக்கும் புயலுந்தி மடுக்கி ளைத்த
கள்வா யுறைக்கு மலரோனிகர் கர்க்க னென்போன்
ஒள்வாய் விரிக்கும் முடிமன்னவ ரோட வென்ற
வெள்வாட் டடக்கை வசுதேவன் விடுப்ப வந்தான்.

2750 நிறைவுற்ற திங்க ணிலத்துடெழு கின்ற தென்ன
மறுவற்ற காட்சி மறையோன் கண்டு நன்னர்
நறையுற்ற பூமென் காங்கூப்பிய நந்த கோபன்
சிறுவர்க்கு நாமம் புனைவாயெனச் செப்பி னானல். (எ)

---

விளையாடுதலை அன்னை கண்டாள். வெருவி - அஞ்சி. கையாகிய தாமரை மலரில் கண்ணபிரானைக் கொண்டாள்.

2749. பூவை - காயா. எழில் பூத்த - அழகு தோன்றிய. தோன்றல் - கண்ணபிரான். ஆவித்த காலை - கொட்டாவி விட்ட போது. வாயிடை ஞாலம் திகழும் திறனை நோக்கி. அன்னை - அசோதை. காவி - நீலோற்பலம். தன் கண்ணைப் புதைத்தாள்; இஃது அச்சக் குறிப்பு.

2749. (அ) புள் - கொக்கு வடிவம் கொண்டு வந்த பகாசுரன். புயல் - கண்ணபிரானுடைய, உந்தியாகிய மடுவில் கிளைத்த; கிளைத்த - தோன்றிய. கள் - தேன். உறைக்கும் - துளிக்கும். மலரோன் - பிரமன். கர்க்கன் - கர்க்க முனிவன். விடுப்ப - அனுப்ப. இப் பாடல் ஓர் ஏட்டுப் பிரதியிற் காணப்படுகிறது.

2750. மறு - குற்றம். மறையோன் - கர்க்க முனிவன். கர்க்கனுக்குத் திங்கள் உவமை. நறை - தேன். பூப்போலும் மெல்லிய காத்தைக் கூப்பிய. சிறுவர் - பலராமன் கண்ணன் என்ற இருவர்.

2751. மடல்சேர் கழுநீர் மலர்வாட்க ணுரோணி செம்மல்
சுடர்கான் மதியிற் சுடர்கின்ற தொர்தோற்ற மேய
அடலே றனையாற் ககன்ஞால மனைத்து மேத்த
மிடல்கூ ரிராம னெனநாமம் விளம்பி னானே. (அ)

2752. மண்ணக் கிளக்குஞ் சுடர்நீலமும் வண்டு தேறல்
உண்ணக் கிளக்கு நறுநீலமு மொத்த கோல
வண்ணற்குத் தண்ணங் கமலத்தலர் போன்ம லர்ந்த
கண்ணற்குக் கண்ண னெனவோர்பெயர் கட்டு ரைத்தான். (கூ)

கலிவிருத்தம்.

2753. பொருவில் வெண்மையுஞ் செம்மையும் பொன்மையும்
மாபி னுற்றனன் மற்றை யுகந்தொறும்
விரவ லுற்ற கலியில் விழிகவர்
கருமை யெய்துபு கண்ணனென் றுயினன். (க0)

2754. அரும றைத்துறை யாடு தடங்கிரைப்
பரவை ஞாலப் பரப்பிற் றவழ்தர
முருகு விம்மு முளரியஞ் செய்யகட்
கரிய வன்றவழ் கற்றன னென்பவே. (கக)

---

2751. உரோணி செம்மல் - ரோஹிணியின் புதல்வன். மதியின் - சந்திரனைப் போல. மேய - மேவிய - பொருந்திய. செம்மலாகிய ஏறனை யாற்கு. மிடல் கூர் இராமன் என - பலராமன் என்று. மிடல் - பலம்.

2752. மண்ணக் கிளக்கும் - சாணை பிடித்தலால் தோன்றும். நீலம் - நீலமணி. தேறல் - தேன். கிளக்கும் நீலமும் - மலர்கின்ற நீலோற்பல மலரையும். கோல வண்ணற்கு - அழகு பொருந்திய நிறத்தை யுடையவ னுக்கு. கண்ணற்கு - கண்ணை யுடையவனுக்கு.

2753. மற்றை யுகந்தொறும், வெண்மை நிறத்தையும், செம்மை நிறத் தையும் மரபின் உற்றனன். கலியில் - கலியுகத்தில். விழிகவர் கருமை எய்துபு. பார்ப்பவர் கண்களைக் கவர்கின்ற கருமை நிறத்தை அடைந்து. திருமால் நான்கு யுகங்களிலும் நான்கு நிறமடைதல் என்பது ; 2981.

2754. மறைத்துறை ஞாலப் பரப்பில் தவழ்தர ; மறைத்துறை - வேதத்தின் பிரிவுகள். தவழ்தர - எங்கும் உலாவும்படி. முருகு - தேன் ; மணம் எனலுமாம். கரியவன் தவழ் கற்றனன் - கண்ணபிரான் தவழ்தலைக் கற்றான்.

2755. களித்து வண்டு கனுலுங் களிநறுத்
துளித்த தண்ணந் துழாய்முகிற் கேழுல
களிப்பத் தோன்று மமலற் குவந்தறம்
முளைத்த தென்ன முளைத்தது மூரலே. (கஉ)

2756. கடக ளிற்றிளங் கன்றனை யான்மற
விடையின் மென்னடை கற்ப விழைந்தெனப்
படரும் கன்றின்வால் பற்றினன் மென்மெல
நடைபு ரிந்தனன் ஞாலங் களிப்பவே. (கங)

வேறு.

2757. தழைத்த நீருலகு தந்து மளித்தும்
அழித்து நின்றுவிளை யாடுமவ் வண்ணல்
குழைத்த பைந்தழைசெய் கோவலர் குற்றில்
உழைப்ப டர்ந்துவிளை யாட லுவந்தான். (கச)

2758. உந்து நீருலக முண்டருள் செவ்வாய்ப்
பைந்து ழாய்க்குழவி பண்பி னியற்றல்
கொந்து லாநறிய கோதைய சோதைக்
கந்தண் முல்லைநகை யாய்ச்சியர் சொல்வார். (கரு)

---

2755. கனுலும் - நெருங்கிய. நறு - தேன். துழாய் முகிற்கு - கண்ணபிரானுக்கு. அளிப்ப - காக்க. அறம் முளைத்த தென்ன - தருமம் தோன்றினாற்போல. அறம் வெண்ணிற முடையது : மூரல் - பற்கள்.

2756. கன்றனையான் - கண்ணபிரான். மழவிடையின் - இளைய காளையைப்போல. கற்ப விழைந்தென - கற்பதற்கு விரும்பினாற் போல. படரும் - செல்லுகின்ற. நடை புரிந்தனன் - நடை கற்றான்.

2757. உலகைத் தந்தும், அளித்தும், அழித்தும் நின்று விளையாடுகின்ற அவ் வண்ணல் : கண்ணபிரான். குழைத்த - தளிர்த்த. தழைசெய் குற்றில் உழை - தழையாற் செய்த குறிய வீட்டின் பக்கத்தே. படர்ந்து - நடந்து சென்று.

2758. உலகத்தை உண்டருளும் வாயையுடைய குழவி இயற்றலை, அசோதைக்கு ஆய்ச்சியர் சொல்வார் ; இயற்றல் - செய்கின்ற விளையாட்டுக்களை.

2759. கட்ட மைந்தசிறு கன்று விடுக்கும்
தொட்டு வெண்ணெயொடு தோய்தயி ருண்ணும்
நெட்டு றிக்குரலி னின்றுகை நீட்டும்
எட்டு கின்றிலது டைக்கு மெறிந்தே. (கசு)

வேறு.

2760. ஏரொழுகு தாமரை யெனத்திகழ் கரத்தால்
காரிருள் குடித்துவெயில் காலுமணி பொத்திப்
பாரில்விளை யாடுமொரு பைம்புய லெனச்சென்
றூரிரு ளகத்தளை யெடுத்தன னருந்தும். (கஎ)

2761. என்றுபல சின்மழலை யேழைய ரிசைப்பக்
குன்றிணை சுமந்துகுழை வுற்றகொடி போல
நின்றொசி மருங்கினெழி னேரிழை யசோதை
ஒன்றுமுரை யாடல ளுவந்தன ளிருந்தாள். (கஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2762. நங்காய்மண் ணருந்தினனின் மதலையென
வில்லையென நவின்று ளகக்
கொங்கார்ந்த செழுங்கமலக் கோற்றொடிகை
பற்றினள்வாய் காட்டு கென்ன

---

2759. கட்டுதலமைந்த சிறு கன்றை விடுக்கும்; விடுக்கும் - அவிழ்த்து விடுவான். தொட்டு - தோண்டி. நெட்டுறிக்கு - நீண்ட உறியைத் தொடுதற்கு. நீட்டும் - நீட்டுவான். எட்டுகின்றில தாகையால் எறிந்து உடைக்கும்; எறிந்து - கல் முதலியவற்றை எறிந்து.

2760. ஏர் - அழகு. மணி - ஆபரணங்களிலுள்ள இரத்தினத்தை. கரத்தால் மணியைப் பொதிந்து; பொத்தி - மூடி. புயல் - மேகம். இருளகத்து - இருட்டையுடைய இடத்தில். அளை - வெண்ணெய். அருந்தும் - அருந்துவான்.

2761. சின் மழலை ஏழையர் - சிலவாகிய மழலைச் சொற்களையுடைய ஆய்ச்சியர். பலவற்றை ஏழையர் இசைப்ப. குன்றிணை யென்றது தனமிரண்டையும். குழைவுற்ற - ஒசிதலுற்ற. கொடி போல ஒசிகின்ற மருங்கினை யுடைய நேரிழையாகிய அசோதை. உரையாடலள் - மறுமொழி கூறாதவளாய்.

2762. நின் மதலை மண்ணை அருந்தினன் என; மதலை - குழந்தையாகிய கண்ணபிரான். என - என்று ஆய்ச்சியர் கூற. நவின்றுளதாக - கண்ணபிரான் மொழிந்தானாக. கொங்கு - வாசனை. கோற்றொடி - அசோதை.

அங்காந்த மணிவண்ண னம்பவளத்
துவர்வாயி னழகு காலும்
செங்காந்தள் முகிழ்விரலந் தீங்கிளவி
யுலகனைத்துந் தெரியக் கண்டாள். (கக)

2763. விண்கண்டாள் விண்வளைக்கும் வெங்கதிருந்
தண்சுடரும் விளங்கக் கண்டாள்
மண்கண்டாள் மண்வளைத்த மாகடலும்
பேருயர்மால் வரையுங் கண்டாள்
தண்கொண்ட வெண்டோட்டுத் தளவநெடு
வனங்கண்டா டனையுங் கண்டாள்
பண்கொண்ட வண்டாற்றும் பசுந்துளவோ
னிவனெனவே பரவி னாளால். (உ0)

2764. முருகொழுகு முகிழ்விரியு மொய்துளவோன்
மாயையினுன் மறைத்த லோடும்
பருகுவனள் போனோக்கிப் பழுத்தொழுகு
மன்பினளாய்ப் பராவி யன்னை
பொருகளிறு வருகவளர் போரேறு
வருகவெழிற் பூவை வண்ண
வருகவெனத் துகிரில்விளை மணிமுத்தங்
கொண்டனளுண் மகிழ்வு பூத்தாள். (உக)

---

கண்ணபிரானுடைய கையைப் பற்றினளாய் வாயைக் காட்டுக என்ன. அங்காந்த - வாயைத் திறந்த. மணிவண்ணனது வாயில் உலகனைத்தையும் தீங்கிளவி தெரியக் கண்டாள்; மணிவண்ணன் - கண்ணபிரான். தீங்கிளவி - அசோதை. தெரிய - விளங்க.

2763. வெங்கதிர் - சூரியன். தண் சுடர் - சந்திரன். வரை - சக்கரவாள மலை. தண் - குளிர்ச்சி. தளவ நெடுவனம் - தாம் வாழும் முல்லை மலரையுடைய நீண்ட காட்டை. தனையும் - தன்னையும். பண் - இராகத்தை. பரவினள் - வணங்கிப் புகழ்ந்தாள்.

2764. முருகு - தேன். முகிழ் - அரும்பு. துளவோன் - கண்ணபிரான். பருகுவனள் போல் நோக்க; 855; "பருகுவன்ன வருகா நோக்கமொடு" (பொருந. 77); "பருகு வன்ன நோக்கமொடு" (பெருங். 3. 7. 80.) பழுத்து - முதிர்ந்து. பராவி - புகழ்ந்து. அன்னை - அசோதை. பொருகளிறு வருக. "வருகவென் களிறென் றேத்தி வாங்குபு தழுவிக் கொண்டாள்" (சீவக. 1911. அடிக்.) துகிர் என்றது கண்ணபிரானுடைய இதழை.

வேறு.

2765. என்னலு மன்னர் மன்ன
வீன்றவர்க் கெய்த லாகாக்
கன்னன்மென் றனைய தீஞ்சொற்
கண்ணன திளமைத் தன்மை
மன்னிய விருப்பிற் காண
மாதரு நந்த கோனும்
முன்னமெத் தவஞ்செய் தார்கொ
லெனமறை முனிவன் சொல்வான். (உஉ)



# 4. மருதிடைத் தவழ்ந்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2766. தண்ணிலா முறுவற் செவ்வாய்த் தரையெனுந் தலைவி யோடு
மண்ணினிற் பிறக்க வென்றோர் வசுவினை மலரோன் கூற
அண்ணலங் கிகிரி யான்மே லன்பெமக் களிப்பா யென்னக்
கண்ணுறு நம்மில் வந்து கண்ணனென் றருளி னானல். (க)

2767. அன்னவ ரிவர்மற் றம்பொ னரும்பவிழ் கமல வீட்டு
முன்னவன் மொழிந்த வாறே முறிமிடை படலைப் பைந்தார்க்

2765. என்னலும் - என்று சுக முனிவன் கூறியவுடன். மன்னன் - பரீக்ஷித்து. ஈன்றவரென்றது, வசுதேவனையும் தேவகியையும். எய்தலாகாத கண்ணனது இளமைத் தன்மையை. மாதரும் - அசோதையும். முன்னம் - முற்பிறப்பில். என - என்று கேட்க. முனிவன் - சுக முனிவன்.

2766. பிறக்க - பிறப்பாயாக. வசுவினை - அஷ்ட வசுக்களில் துரோணனென்பவனை. மலரோன் - பிரமன். திகிரியான்மேல் - திருமாலிடத்து. என்ன - என்று வசு கூற. கண்ணன் நம்மில் வந்து கண்ணுறும் என்று அருளினான்; கண்ணன் - திருமால். நம்மில் - நம்மிடத்து. கண்ணுறும் - அடைவான்.

2767. அன்னவர் இவர் - துரோணனும், அவன் மனைவி தரையும், நந்தகோபனும் அசோதையுமாகப் பிறந்தனர். கமல வீட்டு முன்னவன் - பிரமன். முறிமிடை - தளிர் இடையே விரவிய. படலை மாலை தழைகளை

கன்னியங் துளவத் தோன்றல் கண்ணுறக் கனியு மன்பால்
இன்னிளஞ் செவ்வி நோக்கி யெய்தின ரின்ப மன்னே. (உ)

2768. வளையின முரலத் திங்கள் வாணுதன் முத்தம் பூப்ப
அளியுண விரிந்த கோதை யவிர்தா வசோதை யோர்நாள்
முளிதயிர் கடைந்த காலை முழங்குநீ ருலக முண்ட
ஒளிமணி வண்ண னெய்தி யுண்டனன் முலைமற் றன்றே. (ந)

2769. பைங்கதிர்க் குழவி யன்னன் படாமுலை யருந்து மேல்வைப்
பொங்கிய தடுபா லென்று புணர்முலை சொரிந்த பாலும்
கொங்குலா மலங்கன் மாலைக் கொழுநறுத் தளியுஞ் சிந்தச்
செங்கடை மழைக்கட் பேதை சென்றன ளோடி மன்னே.(ச)

2770. எறித்தவெண் டிங்க ளூறு மின்றளி யமுத மென்னத்
தெறித்தவெண் டயிர்நுண் புள்ளி திருமுகஞ் சிறப்ப நின்ற
உறைப்பசுங் கொண்ட வன்ன னுடைத்தனன் றடவுத் தாழி
மறைத்தனள் வைத்த வெண்ணெய் வாரின னோடி னனல்.(ரு)

---

யிடையிட்டுத் தொடுப்பது. கன்னி - இளமை. தோன்றல் கண்ணுற - கண்ணபிரான் அவர்களிடம் அவதரிக்க. கனியும் முதிர்ந்த. செவ்வி - கண்ணபிரானுடைய அழகை.

2768. வளை இனம் - வளையல்களின் தொகுதி. முத்தம் பூப்ப - முத்துக்கள் போல் வேர்வைத் துளி தோன்ற. அளி - வண்டு. கோதை - பூமாலை. முளி தயிர் - முற்றிய தயிர்; "முளி தயிர் பிசைந்த" (குறுந். 167.) மணிவண்ணன் எய்தி முலையுண்டனன்; மணிவண்ணன் - கண்ண பிரான்.

2769. குழவியன்னன் - கண்ணபிரான். படா - சாயாத. எல்வை - சமயத்தில். அடுபால் பொங்கிய தென்று - காய்ச்சுகின்ற பால் பொங்கிப் போயிற்றென்று. புணர்தல் - நெருங்குதல். கொங்கு - வாசனை. அலங்கல் மாலை - அசைகின்ற மாலை. மாலையின் நறுந்தளியும்; நறுந்தளி - தேன் துளி. பேதை - அசோதை.

2770. எறித்த - ஒளி வீசிய. திங்களில் ஊறும் அமுதமென்ன. கண்ணபிரானுடைய முகத்திற்குத் திங்களும், முகத்தில் உள்ள தயிர்ப் புள்ளிக்கு அதிலுள்ள அமுதமும் உவமை. உறை - துளியையுடைய. கொண்ட லன்னன் - கண்ணபிரான். தடவுத் தாழியை உடைத்தனன்; தடவுத்தாழி- பெரிய பானை. மறைத்து வைத்த வெண்ணெயை வாரி ஓடினன்.

2771. மழைக்கருங் கண்ணி நோக்கி மழையிருங் கூந்த ளூழக்
குழைத்ததோர் வல்லி யென்னக் குழைந்தநுண் மருங்கு நோவப்
பழுத்தநான் மறையினோடு படுபொரு ளொருங்கு தேர்ந்த
விழுத்தவர் தொடர வொட்டா விமலனைத் தொடர்ந்து சென்றாள். (சு)

2772. தளிர்க்கவி னழித்த பொற்றாட் டாமரை சிவப்ப வோடி
இளைத்தன ளன்னை யென்னு விளங்கதிர்ப் பருதி நாணக்
கிளைத்தொளி தவழும் பைம்பொற் கிண்கிணி சிலம்ப வோடும்
களிற்றிளங் குழவி யன்னான் கையகப் பட்டு நின்றான். (எ)

2773. தளையவிழ் முளரி யன்ன தாட்டுணை நினைவோர்க் கெல்லாம்
விளைதரு வினையின் கட்டு வீட்டுபைந் துளவி னானைக்
களியிருஞ் சுரும்பர் மூசு காந்தண்மென் முகுள மன்ன
ஒளிவளைக் காத்தா லன்னை யுரலொடு பிணிக்க லுற்றாள். (அ)

கலிநிலைத்துறை.

2774. அணந்து வெண்மதி தொடுநெடுங் கிரியென வண்ணூர்
திணைந்து விம்மிய வேந்திள வனமுலை சுமந்து
வணங்கு நுண்ணிடை மயிலியல் வயின்வயி னோடிக்
கொணர்ந்து கட்டிய கயிறெலா மிருவிரல் குறைந்த. (கூ)

---

2771. கண்ணி - அசோதை. மழை இருங் கூந்தல் - மேகத்தைப் போல் இருண்ட கூந்தல். குழைத்ததோர் - வளைத்ததொரு. வல்லி - கொடி. மருங்கு - இடை. மறையினோடு தவர் தொடர ஒட்டா. படு பொருள் - வேதத்திற் றோன்றும் உண்மைப் பொருளை. தவர் - முனிவர். ஒட்டா - முடியாத. விமலனை - திருமாலை. (அடி. 3-4 : 2805.)

2772. தளிர்க்கவின்-அசோகத் தளிரின் அழகை. தாளாகிய தாமரை. அன்னை ஓடி இளைத்தனள் என்னு; அன்னை - அசோதை. என்னு - என்று கருதி. பருதி நாணும்படி ஒளி தவழ்கின்ற. குழவி யன்னான் கண்ண பிரான். கை அகப்பட்டு - அசோதையின் கையில் அகப்பட்டு.

2773. தளை - கட்டு. தாட்டுணை - கண்ணபிரானுடைய இரண்டு பாதங்களையும். வினையின் கட்டு வீட்டு - இருவினைத் தளையை அழிக்கின்ற. துளவினானை - கண்ணபிரானை. மூசு - மொய்க்கின்ற. முகுளம் - அரும்பு. கை விரல்களுக்குக் காந்தளரும்பு உவமை ; (2762 ; குறுந். 161.) அன்னை - அசோதை.

2774. அணந்து - உயரச் சென்று. மதியைத் தொடுதல் - கிரிக்கு அடை. அண்ணாந்து - மேனோக்கி. இணைந்து - ஒன்றோடொன்று தம்மிற் கூடி. விம்மிய - பொருமிய. ஏந்து - உயர்ந்த. மயிலியல் - அசோதை. வயின் வயின் - இடந்தோறும். இருவிரலளவு குறைந்தன.

2775. வீக்கி வீக்கித்தன் விரைகமழ் தாமரைச் செங்கை
சேக்க வங்கதிர்த் திங்களஞ் சிறுநுதல் வியர்ப்ப
மாக்கண் வெம்முலை மடவரல் வருந்துத னோக்கி
யாக்கப் பட்டன னெங்கணு நிறைந்தவவ் விறைவன். (கo)

2776. இருநி திக்கிறை காதல ரெரிபொன்வார்ந் தன்ன
புரிந ரம்புளர் நாரதன் புகன்றசா பத்தால்
மருது ருக்கொடு நின்றமை நோக்கினன் மலர்ந்து
கருணை மாமழை யசும்பெழு தாமரைக் கண்ணன். (கக)

2777. எனவு மன்னவ னென்னைகொ விளநறு வொழுகி
அனைய தீந்தொடை யாழ்முனி யறைதரு சாபம்
தனதன் காதல ருற்றது சாற்றுவா யென்ன
வினைமு ருக்கிய மெய்த்தவன் விளம்பலுற் றனனால். (கஉ)

வேறு.

2778. நந்தாத வென்றி நளகூபர னொன்று தேன்சோர்
மந்தார மாலை புனைமார்பன் மணிக்கி ரீவன்
செந்தா மரைமேற் றிருவிற் றிகழ்மாத ரோடும்
அந்தா துயிர்க்கு மலர்ப்பூம்புன லாடி னூரால். (கங)

---

2775. வீக்கி - கட்டி. சேக்க - சிவப்ப. நுதல் வியர்ப்ப. மாக்கண் - கரிய கண்ணையுடைய ; கண் முலைக்கு அடையுமாம். மடவரல் - அசோதை. இறைவன் யாக்கப்பட்டனன் ; இறைவன் - கண்ணபிரான். யாக்கப்படல் - கட்டப்படுதல்.

2776. இரு நிதிக்கு இறை காதலர் - குபேரனுடைய மைந்தர் ; நளகூபர மணிக்கிரீவர்கள். எரிபொன் வார்ந்தன்ன - விளங்குகின்ற பொன் கம்பி யாக்கினாற் போன்ற ; (சிறுபாண். 34) புரி நரம்பு. உளர் - முறுக்கிய வீணையின் நரம்பைத் தடவுகின்ற ; "புரிநரம் பிசைகொள் பாடல்" (சீவக. 662.) சாபத்தால் காதலர் மருதுருக்கொடு நின்றமையைக் கண்ணன் நோக்கினன் ; மருதுரு - மருதமர உருவத்தை. கண்ணன் - கண்ணபிரான். அசும்பு - துளித்தல்.

2777. மன்னன் - பரீக்ஷித்து. நறு ஒழுகிய தனைய தீந்தொடை யாழ் ; நறு - தேன். தீந்தொடையாழ் - இனிமையைக் கொண்ட நரம்பை யுடைய வீணை ; "தீந்தொடை மகர வீணை" (சீவக. 608) முனி - நாரதன். சாபத்தைத் தனதன் காதலருற்றது : தனதன் - குபேரன். காதலர் - நளகூபர மணிக்கிரீவர். என்ன - என்று கூற. வினை முருக்கிய - இரு வினையையும் அழித்த. தவன் - சுக முனிவன்.

2778. நந்தாத - கெடாத. நான்று - ஒழுகி. திருவின் திகழ் - திருமகளைப் போல் விளங்குகின்ற. மாதர் - அர மகளிர் ; 2779. அம் தாது - அழகிய பூந்தாது. நளகூபரனும் மணிக்கிரீவனும் மாதரோடு புனலாடினர்.

2779. விரைநாறு தேறன் மதுமாந்திமென்றூசு நீங்கி
அரமாத ரோடுகளி யாற்புன லாட னேக்கி
மானுக வென்றுசபித் தான்மலர் வாய விழ்ந்து
சொரிதேற லென்னச்சொரி யாழிசைச் சூழ்ச்சி மிக்கோன். (கச)

2780. உயர்தெய்வ யாண்டி னொருநூறுநின் ஞெற்றை யாழிப்
புயல்வண்ணன் றன்னை யடைவுற்றுழிப் போவ தாகச்
செயிர்மன்னு சாபமெனச் செப்பினன் செப்பு மாறு
வெயின்மன்னு செக்கர் மணிமார்பன் விலக்க லுற்றுன். (கரு)

**வேறு.**

2781. தழைத வழ்ந்தபூந் தாதவிழ் தாழிருங் கூந்தற்
குழைத வழ்ந்தகட் டேவகி பச்சிளங் குழவி
இழைத வழ்ந்தபே ரொளிக்கதிர் மின்னென விமைப்ப
மழைத வழ்ந்தென மருதிடைத் தவழ்ந்தனன் மன்னே. (கசு)

2782. உரலொ டுந்தனித் தவழ்தரு புயர்வெளி யளந்த
விரித டஞ்சினை புணர்மரு தொசிந்துவேர்ப் பறியா
வரைவி ழுந்தென வீழ்ந்தவம் மருதுரு வெடுத்தோர்
பாவி யேகினர் பசுந்துழாய்ப் பரனடி பணிந்தே. (கஎ)

---

2779. விரை - வாசனை. மதுவின் தேறலை மாந்தி; தேறல் - தெளிவு. தூசு - ஆடை. அர மாதர் - தேவ மகளிர். களி - மதுவுண்ட மயக்கம். புனலாடுதலை நோக்கி. மரன் - மரம். மிக்கோன் - நாரத முனிவன். மிக்கோன் சபித்தான்.

2780. தெய்வ யாண்டின் - தேவ வருடத்தின். ஒற்றை யாழிப் புயல் வண்ணன் றன்னை - கண்ணபிரானை. அடைவுற்றுழி - அடையும் போது. சாபம் போவதாக எனச் செப்பினன். செயிர் மன்னும் - கோபம் நிலைபெற்ற. செப்புமாறு - நாரதர் சொல்லியபடி. மார்பன் - கண்ணபிரான். சாபத்தை விலக்குதற்கு உற்றுன்.

2781. தாழ் இருங் கூந்தல் - தாழ்ந்த கரிய கூந்தலையுடைய. குழை - குண்டலம். தேவகியின் குழவி - கண்ணபிரான். இழை - ஆபரணங்களில். இமைப்ப - ஒளிவிட. மழை - மேகம். மருது இடை - மருத மரங்களின் நடுவே.

2782. தவழ்தருபு - கண்ணபிரான் தவழ்தலால். வெளியை அளந்த விரிந்த சினைகளையுடைய இணைந்த மருதுகள். வேர்பறியா - வேரையும் பறித்துக் கொண்டு. வரை - மலை. வீழ்ந்த - வீழ்ந்தன. மருதுரு வெடுத்தோர் - நளகூபர மணிக்கிரீவர்கள். பாவி - கண்ணபிரானைப் புகழ்ந்து.

2783. அசனி வீழ்ந்ததென் றுய்ச்சிய ரால்வயி றதுக்கி
நொசிம ருங்கிற நொய்தின்வந் தீண்டினர் நோக்கிப்
பசிய மாமுகில் வண்ணத்த னுரலொடும் படா
ஒசித லுற்றுவீழ்ந் தனவெனத் தெளிந்தன ருள்ளம். (கஅ)

2784. அண்ண னந்தகோ னறிந்தனன் கைமுகிழ்த் தறியா
வெண்ணெ யுண்டபைம் புயல்பிணிப் பவிழ்த்தனன் விருப்பால்
தண்ணந் தாமரைத் தடக்கையாற் றழீஇயினன் செய்ய
கண்ணி றைந்தனன் படுபுனல் களித்தன னெஞ்சம். (கசு)

2785. குழைத்த கார்முகிற் கொழுந்தனன் மணிநிற விசும்பு
கிழித்த மின்னெனக் கீற்றிளம் பிறைநுத லுரோணி
தழைத்த காதலிற் றளிரடி சிவப்புற நடந்தாங்
கழைப்ப வந்தில னுடின னூற்றடை கரையின். (உ0)

2786. கண்ண தாமரைக் கண்ணநின் பிறந்தநா ளின்றால்
அண்ண லானின மந்தணர்க் குதவுவா னடைக
உண்ணி லாவிளை யாடலே யுவத்திகொ லென்ன
வண்ண வார்குழ லசோதைசென் றழைத்தனள் வந்தான்.(நக)

---

2783. அசனி - இடி. ஆல் வயிறு அதுக்கி - ஆலிலை போலும் வயிற்றை அடித்துக் கொண்டு. நொசி மருங்கு - நுண்ணிய இடை. நொய் தின் - விரைவில். படா - தவழ்ந்து சென்றமையால். ஒசிதலுற்று - முறி வுற்று.

2784. அண்ணல் - நந்தகோன். கைம்முகிழ்த்து - கையைக் குவித்து. புயல் - கண்ணபிரானுடைய. பிணிப்பு - கட்டு. தழீஇயினன் - தழுவி னன். கண்களில் புனல் நிறைந்தனன்; படுபுனல் - மிக்க நீர். நெஞ்சம் களித்தனன்.

2785. குழைத்த - வளைத்த. கொழுந்தனன் - கண்ணபிரான். உரோணி - ரோஹிணி; பலராமனின் தாய். விசும்பு கிழித்த மின்னென உரோணி நடந்து அழைப்ப. வந்திலன் - கண்ணபிரான் வாராதவனாய் ஆற்றை அடைந்த கரையில் ஆடினன்.

2786. கண்ண, தாமரைக் கண்ண: விளி. இன்றால் - இந்நாளா கும். ஆல் - அசை. அண்ணல் ஆனினம் - பெருமை பொருந்திய பசு வினத்தை. உதவுவான் - தானம் செய்தற்கு. உவத்திகொல் - மகிழ்ந்திருக் கின்றாயோ. என்ன - என்று.

2787. தோடு வாயவிழ் தூய்மலர்க் கற்பகங் கொணாக்
கோடு வாய்வைக்குங் கொற்றவன் கூத்தெவன் புகல்வேன்
பாடல் வாயிளம் பூவையிற் பாவையர் பாடி
ஆடு வாயெனச் சீறடி சேப்பநின் ருடும். (உஉ)

2788. ஊறு பற்பல வுற்றவிவ் வுழையகன் ெறாருபால்
சேறு நாமெனத் தேங்கொள்பூந் தொடையுப நந்தன்
கூற நந்தகோன் கோற்றொடி மாதர்முன் செல்ல
ஏறு போல்வளர் குழவிக டம்மொடு மெழுந்தான். (உ௩)



# 5. விருந்தாவனம் அடைந்த அத்தியாயம்.

**கலிச்சந்த விருத்தம்.**

2789. நரந்தங்கமழ் குழன்மங்கையர் நகுதண்கதிர் நகைபோல்
அரும்புந்தள விளவெண்முகை யலர்தாதுழு தகலாச்
சுரும்பஞ்சிறை வரிவண்டொடு தளவம்பொழி தண்டேன்
விருந்துண்டுபைந் தொடையாழ்செயும் விருந்தாவன மடைந்தான்.(௧)

---

2787. தோடு - இதழ். கற்பகத்தைக் கொணர்தற்குக் கோடு வாய் வைக்கும் கொற்றவன் கூத்தை ; கோடு - சங்கம். கொற்றவன் - கண்ண பிரான் : 3640-44- எவன் புகல்வேன் - என்ன வென்று சொல்லு வேன் ; இது கவிக் கூற்று. பூவையின் - நாகணவாய்ப் புள்ளைப்போல. ஆடு வாய் என - கண்ணபிரானை ஆடுவாயாக என்று கூற. ஆடும் - கண்ணன் ஆடுவான்.

2788. ஊறு - துன்பம். இவ்வுழை அகன்று - இவ்விடத்தை விட்டு நீங்கி. ஒருபால் சேறும் - வேறோரிடத்து அடைவோம். உபநந்தன் - நந்த கோபனுடைய தம்பி ; 'உபேந்திரன்' என்றாற் போல். கோற்றொடி - திரட்சி யமைந்த வளையல்களை யணிந்த. மாதர் - இடைச்சியர். ஏறு - இடபம். குழவிகள் - கண்ணபிரான் முதலிய குழந்தைகள். நந்தகோன் எழுந்தான்.

2789. நரந்தம் கமழ் குழல் மங்கையர் - நரந்தம் பூ வாசனை வீசுகின்ற கூந்தலை யுடைய மகளிர் ; "நாந்த நாறுங் குவையிருங் கூந்தல்" (குறுந்.52) ; "நரந்த நாறிருங் கூந்தல்" (கலித். 54 : 5.) நகை - பற்கள். தளவு - முல்லை. தாதினை உழுது அகலாத சுரும்பும் வண்டும். தளவம் பொழிகின்ற தேனாகிய விருந்தை உண்டு. யாழ் செய்யும் - யாழின் இசை யைப் போற் பாடும். சுரும்பும் வண்டும் யாழ் செய்யும் ; "அரவ வண்டொடு தேனினம் யாழ்செயும்" (சீவக. 1196.) விருந்தாவனம் - பிருந்தாவனம் என்ற பொழிலை.

2790. கொண்டற்குலம் விளையாடிய கோவத்தன கிரியும்
கண்டற்கடி மணநாறிய காளிந்தியு மெறிநீர்
வண்டற்புது மணலுங்கதிர் மணிவாலுகக் குன்றும்
அண்டர்க்கிறை கண்டுற்றன னமையாமகிழ் வன்றே. (உ)

2791. உழைக்கன்றுறழ் விழியாய்ச்சிய ருறிவெண்ணெய்தொட் டுண்டோர்
மழைக்கன்றெனத் திகழ்வோனுயர் வானோர்மணி முடியால்
தொழக்கன்றிய பதத்தான்பசுந் தோட்டின்னறு கருந்தும்
குழக்கன்றின மேய்த்தானிளங் குறுமாக்களொ டம்மா. (ங)

2792. வளர்கன்றின துருவாயொரு வைவேற்கொலை யவுணன்
தளவம்படர் தண்கானகந் தலைப்பெய்தமை யறிந்தான்
துளவம்புனை விரிதாரவன் றுணைவற்கறி வுறுத்தான்
விளவின்கனி யுதிரும்படி விரைவிற்கொ டெறிந்தான். (ச)

2793. வையம்பொதி பொற்றுண்முகில் வால்வெள்வளை யொளிரும்
கையம்புய மலராலிரு கால்பற்றின னெறியப்
பெய்யும்புய லெனவார்த்துமண் பிள்ளும்படி வீழாப்
பொய்யும்படு கொலையுந்தனி புலம்பற்றிட மடிந்தான். (ரு)

---

2790. கொண்டற் குலம் - மேகக் கூட்டம். விளையாடிய - தவழ்ந்த. கோவத்தன கிரி - கோவர்த்தன மலை. கண்டல் கடி மணம் - தாழையின் புதிய வாசனை. காளிந்தி - யமுனாநதி. வண்டலை யுடைய புதுமணல். வாலுகக் குன்று - மணற்குன்று. அண்டர்க்கு இறை - ஆயர் தலைவனான நந்த கோபன். கண்டு அமையாத மகிழ்வை உற்றான். அமையா - அடங்காத.

2791. உழைக் கன்று உறழ் விழி - மான்கன்றின் விழியை ஒத்த. மழை கன்று - சிறிய மேகம். என - என்று கூறும்படி. கன்றிய - வாட்ட முற்ற. தோட்டினை யுடைய அறுகை அருந்தும் குழக்கன்று; தோடு - இதழ். அறுகு - அறுகம்புல். குழக் கன்று - பசுவின் இளங்கன்றுகளை. குறுமாக்கள் - சிறுவர்; புறநா. 94, உரை. திகழ்வோனாகிய பதத்தான் குறுமக்களொடு குழக் கன்றினத்தை மேய்த்தான்.

2792. கன்றினது உருவம் கொண்ட அவுணன் வத்ஸாசுரன் எனப் படுவான். தளவம் - முல்லை. கானகத்தில் தலைப் பெய்தமையை அறிந்தான்; தலைப் பெய்தமை - கலந்துள்ளமையை. தாரவன் - கண்ணபிரான். துணை வற்கு - பலராமனுக்கு.

2793. வையம் பொதி - உலகை அடக்கிய. முகில் - கண்ணபிரான். வால் வெள் வளை - மிக வெண்மையான சங்கம். வத்ஸாசுரனுடைய இரு காலைப் பற்றி எறிய; எறிய - எறிதலால். புயல் - நீர். பிள்ளும் படி - விண்டு போம்படி. வீழா - வீழ்ந்து. பொய்யும் கொலையும் தனியே தமக்ப் புகலிட மில்லையே என்று புலம்புற்றிட; புலம்பு - வருத்தம்.

2794. அழன்மன்னிய திகிரிப்படை யவிர்தாமரைக் காத்தோர்
எழின்மன்னிய சிறுகோலெடுத் திளங்கன்றினைத் துரந்தான்
பொழின்மன்னிய நறுமுல்லையம் புலத்தொள்ளிணர்க் குரவின்
நிழன்மன்னிய தண்ணந்துறை நீரூட்டின னிருந்தான். (சு)

2795. புழுங்குஞ்சின முதிர்வுற்றிடு புள்ளாகியொ ரவுணன்
விழுங்கும்பொழு தழலாமென மிடற்றிற்சுட வுமிழாக்
கொழுந்தண்டுள வணிமாயனைக் குத்தற்கெழ நெடுமால்
செழும்பங்கய மலரங்கையிற் றீவாய்கிழித் தனனால். (எ)

2796. பொருகொக்கின துருவாகிய புலவுப்படை யவுணன்
செருகுற்றனன் விழிமற்றெழு சிறுகன்றினந் தொடரா
முருகுற்றதண் முகைவாய்நெகிழ் முல்லைப்புற வெல்லாம்
விரைகக்கிய துளவப்புயல் விளையாடின னுவந்தான். (அ)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2797. எறிகதிர் வாளா லிருட்குறும் பெறியு
மேரிளம் பருதிவான் பொடிப்பச்
செறியிதழ் விரிசெந் தாமரைக் கண்ணன்
சேட்டிளங் கன்றெலாந் துரந்து

---

2794. அழல் - தீ. அவிர்தல் - விளங்குதல். திகிரிப்படை விளங்கும் கரத்தில் ஒரு சிறு கோலை எடுத்துக் கன்றினத்தைத் துரந்தான்; துரந்தான் - ஓட்டினான். முல்லையம் புலத்து - முல்லைக் கொடிகளை யுடைய யிடத்தே. இணர் - கொத்துக்களை யுடைய. குரவு - குராமரம்.

2795. புழுங்கும் சினம் முதிர் வுற்று - வெம்புகின்ற கோபம் முற்றி. புள் உருவாகி வந்த அவுணன்; புள் - கொக்கு; இவன் பகாசுரன் எனப் படுவான். விழுங்கும் பொழுது - கண்ணபிரானை விழுங்கும் போது. மிடற்றில் - கழுத்தில். சுட - கண்ணபிரான் சுட. உமிழா - உமிழ்ந்து. மாயனை - கண்ணபிரானை. எழ - நிமிர.

2796. புலவு - மாமிசம். விழி செருகுற்றனன் - இறந்தா னென்ற வாறு. முருகு - வாசனை. முல்லைப் புறவு - முல்லைப் பூவை யுடைய முல்லை நிலம். விரை - வாசனை. புயல் - கண்ணபிரான். புயல் கன்றினம் தொடர விளையாடினன்.

2797. கதிராகிய வாளால் இருளாகிய குறும்பை எறியும் பருதி வானில் பொடிப்ப; கதிர் - கிரணம். பொடிப்ப - தோன்ற. பொடிப்ப விரி தாமரை என்க. சேடு - பெருமை. துரந்து - ஓட்டிச் சென்று. முறி - தளிரை யுடைய. முல்லை மெல்லரும் பன்ன மூரல் - முல்லையின் மெல்லிய அரும்பைப்

முறியிள முல்லை மெல்லரும் பன்ன
மூரல்வெண் டயிரளை பொதிந்து
குறுகுறு நடந்து சிறுவர்வந் தீண்டக்
கோடுவாய் வைத்தன னெழுந்தான். (௯)

2798. முள்ளரை முளரி முகத்தின னாகி
முலைகொடுத் திறந்தபூ தனைக்கும்
புள்ளுரு வெடுத்து விழுங்கிமாய்ந் தவற்கும்
பொருவிலாத் தம்பியென் றுரைக்கும்
அள்ளிலை நெடுவே லகாசுர னென்போ
னவ்வழி மலைநெடும் பாம்பாய்
வெள்ளிமுள் ளெயிற்றுப் பாழிவாய் விசும்பு
வெளியற விரித்தனன் கிடந்தான். (க௦)

2799. சேட்டிளந் திங்க டவழ்வரை முழைஞ்சோர்
தீவிடப் பாந்தள்வாய் போலக்
காட்டிய வண்ணங் காண்மினோ வென்று
காதலாற் சிறுவராக் கணங்கள்
நீட்டமோ டேகப் பவளவாய் மலர்விண்
டியம்பல னென்றுமாங் கேகிச்
சூட்டுவா ளரவின் மிடறுகீண் டெழுந்தான்
றுத்திவா ளரவினிற் றுயில்வோன். (கக)

---

போன்ற சோறு. மூரலோடு கூடிய தயிரையும் அளையையும் பொதிந்து; அளை - வெண்ணெய். பொதிந்து - மூட்டை கட்டி. ஈண்ட - நெருங்க. கோடு - ஊது கொம்பு.

2798. முள்ளை அரையிலே யுடைய முளரி. புள் - கொக்கு. மாய்ந் தவன் - பகாசுரன். நீண்ட மலைப்பாம்பாய். வெள்ளிய முள்ளைப் போன்ற எயிற்றை யுடைய பாழிவாயை; பாழி - பெருமை. வாயை விரித்துக் கிடந்தான்.

2799. சேடு - பெருமை. வரை முழைஞ்சு - குகை. பாந்தளின் வாய் போலக் காட்டிய வண்ணத்தை. காதலால் - ஆசையால். சிறுவர் ஆக் கணங்களோடும் கன்றீட்டத்தோடும் ஏக; ஏக - பாம்பின் வாயில் நுழைய. அரவின் மிடறு - பாம்பின் கழுத்தை. கீண்டு - கிழித்து. துத்தி - பொறியை யுடைய. துயில்வோன் - கண்ணபிரான் : எழுவாய்.

2800. பிளந்தகார் மிடற்றி னின்றிளங் கன்றும்
பிள்ளையஞ் சுரும்பொடு வரிவண்
டுளர்ந்ததார் முல்லைப் பசுந்தொடை யாய
ருயிர்புரை சிறுருமுய்ந் தெழுந்தார்
வளர்ந்தபாம் புருவாக் கிடந்தவன் பாம்பின்
வளர்ந்தவன் சேவடி படர்ந்தான்
களங்கனி வண்ணத் திறைவிளை யாடல்
கண்டனன் மலரவன் களித்தான். (கஉ)

2801. வெருவரு பாந்த ளுருக்கொடு கிடந்த
வேற்றிற லவுணனை யைந்தாம்
பருவமா மாயன் கோறல்கண் டாடும்
பருவமே புகழ்ந்தன ராயர்
புரையறு சிறுவ ரென்னவவ் வாறு
புகழ்ந்ததென் வழங்குவா யென்னுக்
குருதிகொப் புளிக்கும் பருதிவேல் வேந்தன்
கூறநான் மறையவன் கூறும். (கங)

---

2800. கார் மிடற்றினின்று - கரிய கழுத்தினின்றும். பிள்ளையஞ் சுரும்பு — இளைய சுரும்பு. உளர்ந்த - கோதிய. ஆயர் உயிர் புரை சிறார் - இடையரது உயிரை யொத்த சிறுவர். கன்றும் சிறுரும் உய்ந்தெழுந்தார். கிடந்தவன் - அகாசுரன். பாம்பின் வளர்ந்தவன் சேவடி - ஆதி சேடனுகிய பாம்பில் அறிதுயில் செய்த திருமாலின் பாதத்தை. களங்கனி வண்ணத்து இறை - களாப் பழத்தின் கரு நிறத்தை யுடைய கண்ணபிரான். விளையா டலைக் கண்டு. மலரவன் - பிரமதேவன்.

2801. வெருவரு - அஞ்சத்தக்க. அவுணனை - அகாசுரனை ஐந்தாம் பருவமாம் மாயன் - ஐந்தாம் பிராயத்தை யுடைய கண்ணபிரான். கோறல் - கொல்லுதலை. ஆயருடைய சிறுவர், ஆறும்பருவத்தே புகழ்ந்தனர்; 2832. என்னு - என்று. வேந்தன் - பரீட்சித்து. நான்மறையவன் - சுகமுனிவன்.

# 6. மலரவன் சிறூர்க்கன்று கவர்ந்த அத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2802. பாற்குட மருட்டு செருத்தலான் கன்று
பச்சிளம் புல்லுணுத் தெவிட்டித்
தாற்றிளங் கமுக நறுநிழல் படரத்
தளவணி யாயர்தந் தநயர்
வீற்றுவீற் றுகப் பாசடை விரித்து
விரவியே தனித்தனி மேவி
ஆற்றுணு வயின்று செறிதிரை யமுனை
யாற்றடை கரையகத் திறுத்தே. (க)

2803. வட்டுடைச் செருகு முல்லையங் குழலவ்
வயிற்றிடைத் திகழவார் கோடும்
கட்டெழிற் கோலுங் கைம்முத லணைத்துக்
களியமு திடக்காத் தேந்தி
விட்டொளிர் பசும்பொன் னுழிமெல் விரலின்
மிசைவதற் குரியன தாங்கி
இட்டபூந் தவிசி னணிதினின் றயின்று
னிமையவர் குழாத்தவி நுகர்வோன். (உ)

---

2802. பாற்குடம் மருட்டும் செருத்தல் ஆன் - பாற்குடத்தை மருளச் செய்கின்ற மடியை யுடைய பசு: "குடம்புரை செருத்தல் குவளைமேய் கய வாய்க் குவிமுலைப் படர் மருப்பெருமை" (சீவக. 2102.) புல்உணு-புல்லாகிய இரையை. தெவிட்டி - குதட்டி. தாற்றை யுடைய இளங்கமுகின் நிழலில் ஆனும் கன்றும் படர. தளவு - முல்லை. ஆயர்தம் தநயர் - இடைச்சிறுர் கள். வீற்று வீற்றுக - வேறு வேறுக. பாசடை - பசிய இலைகளை. மேவி - அமர்ந்து. ஆற்றுணு - வழியி லுண்ணும் பொதி சோறு. இறுத்து - தங்கி. இறுத்து அயின்றூர் எனக.

2803. வட்டுடைச் செருகு முல்லையங் குழல் - சல்லடத்தே செருகிய புல்லாங்குழல். வட்டுடை - முழந்தாள் அளவாக வீரர் உடுக்கும் உடைவி சேடம்; சீவக. 767, அடிக். நல்லையங்குழல்; 2836. குழல் வயிற் றிடைத் திகழ. கோட்டையும், கோலையும் கைம்முதலில் அணைத்து; கோடு - ஊது கொம்பு. கோல் - பிரப்பங்கோல். கைம்முதல் - கையின் மூலத்தில். மிசைவதற் குரியன - ஊறுகாய் முதலியவற்றை. தவிசின் - ஆதனத்தில். அணிதில் நின்று; அணிதில் - பக்கத்தில். அவி நுகர்வோன் அயின்றுன்; அவிநுகர்வோன் - கண்ணபிரான்.

2804. நிழல்வள ரிளங்கன் றுழைதொ றும் படா
நின்மினென் றிளைஞரை நிறுவி
எழில்வளர் செங்கை மலரில்வெண் கவள
மேந்தின னெழுந்தனன் றொடாப்
பழமறை முதலி திருவிளை யாட்டுப்
பார்த்துநா மின்னமென் றிளவண்
டுழுநறு மலரோன் மழவரோ டான்கன்
றொளித்தனன் மாயையி னெருங்கே. (௩)

2805. முற்றநான் மறையுங் கற்றறிந் தவரு
முறைமைசான் முதுமறைக் குலமும்
தெற்றெனக் காணு வொருபெருந் தீர்த்தன்
சிற்றடித் தாமரை சிவப்பக்
கற்றினந் தேடிக் காண்கிலான் மீளுங்
காலைமென் முல்லையங் கண்ணிப்
பொற்றொடிப் புதல்வர் தம்மையு மந்தண்
புளினமேற் காண்கில னினைந்தான். (௪)

2806. களிச்சுரும் பாற்று வெள்ளிவெண் டோட்டுக்
கள்ளவிழ் முளரிவீற் றிருக்கும்
பளிக்கொளி யுருவிற் பவளவாய்ப் பச்சைப்
பசுங்கிளி மழலையாள் கொழுநன்

---

2804. உழை - பக்கம். நிறுவி - நிறுத்தி. வெண்கவளம் - சோற்றுருண்டை. ஏந்தி எழுந்து தொடா. கன்றுகளின் பின்னே சென்ற மறைமுதலி - கண்ணபிரானது. பார்த்தும் - பார்ப்போம். இன்னம் - இப்பொழுது. மலரோன் - பிரமன். மழவர் - இடைச்சிறுர்.

2805. மறைக்குலம் - வேதத்தொகுதி. தெற்றென - தெளிவாக. தீர்த்தன் - கண்ணபிரானுடைய. அடி. 1-2 : 2771. கற்றினம் - கன்றினம், கன்றின் கூட்டங்களை. மீளும் காலை - மீண்டு வரும்போது. புதல்வர் தம்மையும் - இடைச்சிறுரையும். புளினமேல்-மணற்குன்றின்மேல். நினைந்தான்- காரணம் யாதென்று எண்ணினன்.

2806. களியை யுடைய சுரும்பு. அாற்றும் - ஒலிக்கின்ற. கள்-தேன். முளரி - வெண்டாமரையில். பளிக்கு ஒளி உருவின் - பளிங்கின் ஒளி போலும் வெண்மையான உருவத்தை யுடைய. மழலையாள் - சரசுவதி.

ஒளித்தன னென்ப துணர்ந்துபா ரேழு
முந்திநாண் மலரிடைக் காட்டி
அளித்தழிப் பவன்ரு ணயர்தஞ் சிருரு
மானிளங் கன்றுமா யினனல். (டு)

2807. மாற்றருஞ் சிறப்பின் மழலைவாய்க் குடவ
மைந்தர்தம் வண்ணமும் வனப்பும்
தோற்றமும் வடிவுந் தொழில்களுங் குணனுஞ்
சுடர்மணிப் பூணுமங் துகிலும்
ஊற்றிருந் திளந்தே னொழுகுபூந் தாரு
மூதுதீங் குழலும்வார் கோடும்
வேற்றுமை யின்றி யங்ஙனம் விளைந்த
விளைவுநா மெங்ஙன முரைக்கேம். (சு)

2808. நறவுவாய் மடுத்து வரியளி மிழற்று
நகுமலர் வடிக்கணை தெரிந்து
சுறவமீ துயர்த்த வேனிலான் ருேன்றச்
சுடர்மறை மாலையம் போதில்
பறவையூர் பறவாப் பூவைவண் ணத்தன்
படர்தலுங் குவிமுலை சுரந்து
கறவைகன் றூட்டிக் களித்தவாய்ச் சியருங்
களித்தனர் சிறுவர்க்கண் ணுறவே. (எ)

---

கொழுநன் - பிரமன். ஒளித்தனன் - மறைத்துள்ளான். காட்டி அளித்து அழிப்பவன் - கண்ணபிரான். தானே சிருரும், ஆனிளங் கன்றுகளும் ஆயினன்.

2707. குடவமைந்தர் - இடைச்சிருர். வண்ணம் - நிறம். பூணும் - ஆபரணமும். தார் - மாலை. குழல் - புல்லாங்குழல். கோடு - ஊது கொம்பு. விளைந்த - உண்டாகிய.

2808. நறவு - தேன். அளி - வண்டுகள். மலராகிய கணையை. தெரிந்து - ஆராய்ந்து. வேனிலான் - மன்மதன். சுடர் மறைகின்ற மாலைப் பொழுதில்; சுடர் - சூரியன். பறவை ஊர் - கருடனை ஊர்ந்து செல்லும். பறவாப் பூவை - காயாம்பூ மரம்; வெளிப்படை. "பறவாப் பூவைப் பூவி னேயே" (பரி. 3 : 73.) வண்ணத்தன் - கண்ணபிரான். படர்தலும் - இடைச்சிருரும் கன்றுமாக உருவங்கொண்டு கோகுலத்திற்குப் போகலும். கறவை - பசுக்கள். கன்றை யூட்டி ஆய்ச்சியர் சிறுவரைக் கண்ணுறக் களித்தனர்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2809. ஈன்றதங் குழவி தம்மே லெழுதருங் காத றன்னின்
தேன்றவழ் துளவத் தெய்வச் சிறுவர்மேற் காதல் கூர்ந்தார்
வான்றவழ் குழவித் திங்கள் வாணுதற் பவளச் செவ்வாய்க்
கான்றவழ் முல்லை வேய்ந்த காரிருங் கூந்த லாரே. (அ)

2810. பருவமொன் றிவ்வா றேகப் பாற்கடல் வண்ண னோடும்
கருமுகில் வண்ணத் தண்ணல் கன்றெலாந் தூர்ந்து மன்றற்
குரவமுங் குருந்துங் கோங்குங் கொன்றையு மகிலுஞ் சாந்தும்
மாவமுங் கமழுஞ் சாரன் மலையகத் தேகி னனல். (கூ)

2811. பொற்புறு வரைமே னின்ற புனிற்றிளஞ் சேதா வோடிக்
கற்பக மலர்ந்த தெய்வக் கடிகமழ் சாரன் மேவும்
முற்படு கன்றுக் கெல்லா முலைசுரந் தொழுகு தீம்பால்
அற்பின்வந் தூட்டல் செய்த வாயர்கை யிகந்து மன்னே. (கO)

2812. ஊதுவண் டுழலு முல்லை யொள்ளிணர்க் கண்ணி சிந்த
ஆதூரந் தொல்லை வந்த வாயரு மலைத லின்றி
மாதர்மீ தூற நின்று மதுப்பொழி மழலைச் செவ்வாய்க்
காதலர் செவ்வி நோக்கிக் களித்தனர் நெஞ்ச மாதோ. (கக)

---

2809. எழுதரும் காதல் தன்னின் - தோன்றும் அன்பைக் காட்டிலும். சிறுவர்-கண்ணன் மாறு வேடங் கொண்ட இடைச்சிறுர்; கூர்ந்தார்-மிக்கார். கான் - வாசனை. காரிருங் கூந்தலார் - ஆய்ச்சியர்.

2810. பருவம் - வருடம். பாற்கடல் வண்ணன் - பலராமன். கருமுகில் வண்ணத்து அண்ணல் - கண்ணபிரான். தூர்ந்து - ஓட்டிச் சென்று. மன்றல் - மணம். குரவம் - குராமரம். சாந்து - சந்தனமரம். மாவம்-கடம்பமரம். சாரலை யுடைய மலையகத்து. அண்ணல் ஏகினன்.

2811. பொற்பு - அழகு. புனிற்றிளஞ் சேதா - ஈன்ற அணிமையை யுடைய இளம் பசுக்கள்; 2816. கடி - வாசனை. முற்படு - எதிர்ப்படுகின்ற. அற்பின் - அன்பினல். ஆயர் கை யிகந்து - இடையரை விட்டு நீங்கி. செய்த-செய்தன.

2812. ஊது வண்டு - தாதை உண்ணுகின்ற வண்டு; ஊதுதல் - நுகர்தல்; "அரும்பவிழ் நறுமுல்லை, பாய்ந்தூதிப் படர்தீர்ந்து" (கலி. 66. 6—7.) கண்ணி - மாலை. ஆ தூர்ந்து - பசுக்களைத் தூர்த்தி. தொல்லை - விரைவில். மலைதல் - மாறுபாடு. மாதர் மீதூர - ஆசை மேலிட. மது - தேன். காதலர்து செவ்வியை நோக்கி நெஞ்சம் களித்தனர்; செவ்வி - அழகு முதலிய நலங்கள்.

2813. விளைவதெ னிதுமற் றென்று வியப்புடை மனத்த னாகி
வளைமருண் மேனி வள்ளன் மாயவன் வதன நோக்க
உளநனி கசிந்து கற்றா வூறுபா லூட்டு கன்றும்
இளைஞருந் தானே யாகி யிருத்தலாங் கியம்பி னானால். (கஉ)

2814. அவ்வழி நமது மாயை யகத்தன ராகிக் கன்றும்
மைவழி குழல்சூழ் கண்ணி மைந்தரு மிருப்ப மற்றும்
இவ்வழி யிவ்வா றாகி யிருந்ததென் னென்று பார்த்தான்
செவ்வழி வண்டு பாடுஞ் செய்யதா மரையா னம்மா. (கங)

2815. கொடிவளர் முல்லைப் பைந்தார்க் குமாரரும் வளரான் கன்றும்
கடல்வயி றுளைந்து பெற்ற கதிர்மணி திருவில் வீசச்
சுடர்விரி பசும்பொ னாடை சூழ்கதிர்க் கற்றை தூற்ற
மடலவிழ் துளவோ னாகி வயங்கின பெரிது மாதோ. (கச)

2816. புனிற்றிளங் கன்று மாயர் பொற்றொடிப் புதல்வர் தாமும்
கனற்பொலி திகிரி யேந்துங் கார்முகில் வண்ண னாகத்
தனித்தனி யமர ரோடு தானுநின் றேத்த நோக்கி
அனைத்தையும் படைக்கு மண்ண லலம்வா லெய்தி னானால். (கரு)

---

2813. இது - இத் தன்மை. வளை மருள் மேனி வள்ளல் - பலராமன். வளை - சங்கு; மருள் - உவம உருபு. கசிந்து - உருகி. கற்றா - கன்றையுடைய பசு. கற்றாவிடத்து ஊறுகின்ற பாலை ஊட்டும் கன்றும் இளைஞரும். இருத்தலை இயம்பினான்.

2814. நமது என்றது பிரமன். மாயை யகத்தனராகி - மாயைக்கு உட்பட்டவராய். மைந்தர் - இடைச்சிறார். இவ்வழி - பிருந்தாவன மாகிய இவ்விடத்தே. இவ்வாறாகி இருந்தது என் - கன்றும் இடைச்சிறாரு மாகிக் கண்ணபிரான் இருப்பது என்ன காரணம். செவ்வழி வண்டு பாடும்; "செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றும்" (சிலப். 11 : 88.)

2815. குமரர் - இடைச்சிறார். ஆன்கன்று - பசுக்கன்றுகள். உளைந்து - வருந்தி. மணி - கௌஸ்துப ரத்தினம். பொன்னாடைக் கற்றையைக் கதிர் தூற்ற; தூற்ற - வீச. துளவோ னாகி - திருமாலாகி. குமாரரும் ஆக்கன்று ம் வயங்கின.

2816. புனிற்றிளங் கன்று - ஈன்ற அணிமையை யுடைய பசுக்கன்று; 2811. முகில் வண்ணனாக - கண்ணபிரானாகத் தோன்ற. தானும் என்றது பிரமனை. அண்ணல் - பிரமன். அலமரல் - (அலம் வரல்) மனச் சுழற்சி.

2817. மலரவன் மறுக்க நோக்கி மாயவன் மாயை வாங்க
உலகெலா மளிக்கு மாய னொருவனே யாகிச் செங்கை
மலரில்வெண் கவள மேந்தி வளரிளங் கன்று தேடிக்
குலவுதல் கண்டு செங்கண் குளிர்ந்தன னுவந்திட் டானே. (கசு)

கலிவிருத்தம்.

2818. மற்றொ ருந்தி மடுக்கிளர் பூவினில்
பெற்றெ டுத்த பிரான்புவி யுட்பொதி
சிற்ற டித்துணை சேர்த்தனன் றேங்கமழ்
பொற்ற தார்முடி நான்கும் பொலியவே. (கஎ)

2819. செழும்பொ னண்டந் திறப்ப முழக்கொடு
விழும்பு னற்கங்கை வெள்ளந் ததும்பிய
கொழும்பொற் றாமரைப் போது குழைந்துநாத்
தழும்ப வேத்தினன் றாமரைச் செல்வனே. (கஅ)

2820. அற்ற மில்லென வண்ட மணுவென
முற்று கின்றன வானின் முழுமெய்யும்
ஒற்றை யண்டத் தொருவழி வைகுவேன்
தெற்றெ னத்துணி வேன்கொனின் சீர்த்தியே. (ககூ)

---

2817. மறுக்கம் - மறுகுதலே. மாயவன், மாயன் - கண்ணபிரான். வெண்கவளம் - வெண்மையான சோற்றுருண்டை. குலவுதல் - விளங்குதல்.

2818. உந்தி மடுக்கிளர் பூவினில் - உந்தி யாகிய மடுவில் தோன்றுகின்ற தாமரைப் பூவில். தன்னைப் பெற்றெடுத்த பிரானுடைய அடித் துணையில் முடி நான்கையும் பொலியச் சேர்த்தினன்; பிரான் - கண்ணபிரான். சேர்த்தினன் - பிரமன் பொருத்தினன். பொற்ற - பொலிவு பெற்ற.

2819. அண்டம் - அண்ட முகட்டை. புனலையுடைய கங்கை வெள்ளம். தாமரைப் போது என்றது கண்ணபிரானுடைய திருவடிகளை - போதை எந்தினன் என்க. குழைந்து - உருகி. தாமரைச் செல்வன் - பிரமன்.

2820. அற்றம் - மறைக்க வேண்டியது. அண்டம், அணு என்னும்படி. ஒரு வழி - ஓரிடத்து. வைகுவேனாகிய யான் நின் சீர்த்தியைத் தெற்றெனத் துணிவேன் கொல்; தெற்றென - தெளிவாக.

(பி - ம்.) உ. முற்றுகின்ற வானின்றன்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2821. வெங்கதிர்ப் பருதி முன்ன மேயமின் மினியும் விள்ளாப்
பொங்கிருட் கங்குல் சேர்ந்த புன்பனி யிருளு மன்றே
அங்கண்மா ஞால முண்டோ ராலிலைப் பள்ளி துஞ்சும்
செங்கண்மா மாய நின்பாற் செய்தவென் மாயை தானே. (உ0)

2822. அடைத்துழாய்ப் படலை மாலை யமலநின் னிலைமை தேரார்க்
குடைப்பெரு மாயை தன்னா லுருப்பல காட்டு வாயால்
படைக்கயா னாகி மற்றைப் படைப்பெலாங் காப்ப நீயாய்ப்
துடைப்பமுக் கண்ண னாகித் தோன்றுமா போல மாதோ. (உக)

2823. அல்லியங் கமலச் செங்க ணமலநீ யாகத் தன்னை
நல்லுணர் வதனா னுடு நற்றவ முடையார்க் கன்றே
மெல்லிணர்க் கண்ணி மேய வெஞ்சின வரவு போல
இல்லதா மெல்லை யில்லா விருள்படு தோற்றந் தானே. (உஉ)

2824. மண்ணெலா முண்ட செல்வ வயிற்றகத் துறையா நின்ற
ஒண்ணிறக் குழவி தாளா லுதைத்தலாய் பிழையென் றோாள்
அண்ணனின் னகல்வ யிற்று ளகப்படாப் பொருளு முண்டோ
எண்ணினின் வயிற்று வாழ்வே னிழைத்ததெப் பிழைய தாமால். ()

---

2821. பருதி - சூரியன். மேய - மேவிய. விள்ளா - நீங்காத. பனிக் காலத்து இருளும் அன்றே. ஞாலத்தை உண்டு ஆலிலையில் பள்ளி துஞ்சும் மாமாய - கண்ணபிரானே. பிரமன் செய்த மாயைக்குப் பருதிமுன் மேவிய மின்மினியும் இருளும் உவமைகள்.

2822. அடைத்துழாய்ப் படலை மாலை - இலையாகிய துளவத்தைத் தொடுத்த வகைமாலையை யுடைய. அமல - கண்ணபிரானுக்கு விளி. தேரார்க்கு - அறியாதவர்களுக்கு. மாயை தன்னால் பல உருச் காட்டுவாய். படைக்க - படைத்தற்கு. காப்ப - காத்தற்கு. துடைப்ப - அழித்தற்கு. தோன்றுமா போலக் காட்டுவாய்; "அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவென" (கம்ப. சுந்தர : கடவுள்.)

(பி - ம்.) 1—உ. தோா, துடைப்பெரு மாயை.

2823. அமல : விளி. நல் உணர்வு - உண்மை யறிவு. கண்ணி மேய - மாலையில் உண்டாய. அரவு - பாம்பின் தோற்றம். இல்லதாம் - இல்லையாகும். அரவு போல இருள்படு தோற்றம் இல்லதாகும். கண்ணி மேய அரவு; "அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவென" (கம்ப. சுந்தர. கடவுள்.)

2824. தாளால் உதைத்தலை. ஆய் - தாய். அண்ணல் - கண்ண பிரானே; விளி. எண்ணின் - அத்தன்மையை ஆராய்ந்தால். நின் வயிற்று வாழ்வேனாகிய யான் இழைத்தது எப்பிழையது ஆம் : பிழையாகாது என்ற படி.

2825. உவப்பொடு மறையோர் வேள்வி யூட்டுமின் னவியி னாலே
தெவிட்டலாய் தெவிட்டு மாறு தீஞ்சுவை யமுத மூட்டும்
குவட்டிளங் குவவுக் கொங்கைக் கொடியிடை யாயர் மாதர்
தவத்தையென் புகல்வ லானின் றவத்தையென் சாற்று கிற்பேன். ()

2826. வெஞ்சினந் திருகி நஞ்சம் விளைந்தவெம் முலைப்பா லூட்டும்
வஞ்சனை யாக்கி தானும் வந்துநின் னடியிற் சேர்ந்தாள்
நெஞ்சுவந் தமுத மூட்டு நேரிழை யவரோ டாவிற்
கஞ்சன வண்ண வென்னோ வளித்திமற் றறிகி லேனால். (உடு)

2827. திருவினர் பெரிது மந்தோ திருவினர் பெரிது மந்தோ
விரியல்வெண் டோட்டு முல்லை வியன்புலத் துறையப் பெற்றோர்
அருவமா யொன்றாய்ச் சித்தா யகண்டமாய்ப் பரமா நந்த
உருவமாய் நின்றாய் நின்னோ டுறவுகொண் டிருக்கின் றாரே. ()

2828. என்றவன் வலங்கொண் டேக விளநிலாக் குவித்தா லன்ன
குன்றவெண் மணலின் மேய கோற்றேடிப் புதல்வர் தம்பால்
மன்றலங் கமல வீட்டு மறையவன் விடுக்கப் பட்ட
கன்றினந் துரந்து சென்றான் கங்கைசூழ் கழற்பெம் மானே.()

---

2825. அவி - ஹவிஸ். தெவிட்டலாய் - தெவிட்டாத நீ. குவடு - உச்சி. அமுத மூட்டுகின்ற ஆயர் மாதர் தவத்தை என் புகல்வல்; என் புகல்வல் - என்ன வென்று சொல்லுவேன். ஆனின் தவத்தை - பசுக்களின் தவத்தை.

2826. சினம் திருகி - கோபம் மிக்கு. அரக்கி - பூதனை. பூதனை கண்ணபிரான் அடியைச் சேர்ந்தது; 2743. அமுதம் ஊட்டும் நேரிழையவர் - சோறூட்டுகின்ற ஆய்ச்சியர். ஆவிற்கு - பசுக்களுக்கு. என் அளித்தி - எதை அளிப்பாயோ.

2827. பெரிதும் திருவினர்-மிகவும் பாக்கிய முடையவர். அந்தோ: வியப்பின்கண் வந்தது. முல்லை வியன்புலத்து - அகன்ற முல்லை நிலத்திலே. அருவம் - உருவமின்மை. சித்து - அறிவு. முல்லைப் புலத்து உறையப் பெற்றோர் நின்னோடு உறவு கொண்டிருக்கின்றாராதலால் பெரிதும் திருவினர்.

2828. அவன் - பிரமன். வலங்கொண்டு ஏக - கண்ணபிரானை வலம் செய்து செல்ல. வெண்மணலுக்கு நிலாக் குவியல் உவமை; "நிலவுக் குவித் தன்ன வெண்மண லொருசிறை" (குறுந். 123.) குன்றத்திலுள்ள வெண் மணலில். புதல்வர்தம்பால் - இடைச்சிறாரிடத்து. மன்றல் - வாசனை. மறையவன் - பிரமனால். கன்றினம் - கன்றின் கூட்டங்களை. துரந்து - ஓட்டி. பெம்மான் - கண்ணபிரான்; எழுவாய்.

2829 குவளைபோல் வண்ணன் வந்து குறுகலுங் குமரர் யாங்கள்
கவளமொன் றருந்கா முன்னங் கன்றினங் கொண்டு மீண்டாய்
திவளுமஞ் சுரும்பு பாய்ந்து தேன்மதுத் திவலை மாந்தும்
தவளமெல் லிணர்ப்பூ முல்லைத் தாரவ மிசையென் றூரால். ()

2830. முத்தென முகிழ்த்த மூரன் முறுவல்வாண் முகத்த னாகிப்
பைத்தவா ளரவின் பைந்தோல் பார்மிசை கிடந்த தென்னு
கொத்தவிழ் முல்லை மல்லற் கொடிதலை மணந்து மன்றற்
பித்திகை வளர்தண் கானம் பெயர்ந்தனன் மெல்ல மாதோ.

2831. வண்டுசூழ் கண்ணி மைந்தர் மலைநெடும் பாம்பின் பைந்தோல்
கண்டன ரிதுமற் றம்ம கண்ணிறந் தோங்கிற் றென்னுக்
கொண்டனர் வியப்பு முல்லைக் குழலினன் விளைத்த கொற்றம்
விண்டனர் புகழ்ந்தார் முல்லை வியன்புல மாக்கட் கன்றே. ()

2832. இத்திற னொரு மோர்யாண் டிறந்தபின் னிளைஞ ரெல்லாம்
பைத்தபாம் பருவ மாய படுகொலை யவுணன் றன்னை
மைத்தகார் வண்ணத் தண்ணன் மாய்த்தமை புகழ்ந்த தென்னு
முத்தரின் முதல்வ னொரு முழுத்தவ னியம்பி னுனல். (நக)

---

2829. குவளை மலர் போன்ற வண்ணத்தை யுடையவன் - கண்ண பிரான். குமரர் - இடைச்சிறுர். கவளம் - வாய் கொள்ளும் அளவான உணவு. மீண்டாய் - மீண்டு வந்து விட்டாய். திவளும் - விளங்குகின்ற. சுரும்பு - தேன். கண்ணபிரானே ; மிசை - நீயும் உண்பாயாக.

2830 முகிழ்த்த - அரும்பிய. பைத்த - படம் விரித்த. அரவு - அகாசுரன். என்னு - என்று கூறி. மல்லல் - வளப்பம். முல்லைக் கொடியைத் தலை மணந்து; தலை மணந்து - கூடி. மன்றல் - வாசனை. பித்திகை - சிறு சண்பகம். கானம் மெல்லப் பெயர்ந்தனன் - காட்டினின்றும் மெதுவாக நீங்கினன்.

(பி - ம்.) 3. முல்லைமெல் வெள்கொடி.

2831. மலைப் பாம்பின் - மலைப் பாம்பி னுருவம் கொண்டு வந்த அகாசுரனது. தோலைக் கண்டனர். கண் இறந்து - கண்ணைக் கடந்து. என்னு - என்று கூறி. வியப்புக் கொண்டனர். முல்லைக் குழலினன் - கண்ணபிரான் ; முல்லைக் குழல் ; 2802. கொற்றம் - வெற்றி. விண்டனர் - சொல்லினர். முல்லைப் புலத்து மாக்கட்டு விண்டு புகழ்ந்தார் என்க.

2832. இறந்தபின் - முடிந்தபின்னர். இளைஞர் - இடைச்சிறுர். அவுணன் - அகாசுரன். மைத்த - கருநிற முடைய. அண்ணல் மாய்த் தமையை ; அண்ணல் - கண்ணபிரான். என்னு - என்று. முழுத்தவன் - சுகமுனிவன். மு : 2801.

2833. பெற்றதங் குழவி தம்மேற் பிறந்திடுங் காத றன்னின்
மற்றிளங் குழவி யாய மாயன்மே லாயர் மாதர்க்
குற்றதென் காத லென்னு வொளிறுவா ளுழவன் கேட்ப
முற்றுணர் முனிவன் மூரன் முறுவலன் மொழிய லுற்றான்.()

2834. தன்னுயிர் மேற்செல் காத ருனுயிர்ப் பதற்குண் டேகொல்
மன்னுயி ரனைத்தஞ் செங்கண் மாதவ னுதலாலே
இன்னுயிர்க் குழவி தன்மே லியைந்தது பெரிதுங் காதல்
மின்னுயிர்த் திலங்கு வேலோ யென்றனன் மீட்டுஞ் சொல்வான். (௩௩)



# 7. அரவின்மே லாடிய அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2835. குராமலர் முருகு விம்மிக் குழவிய மல்லன் முல்லை
விராய்மலர்த் துளவம் பூத்த மேதகு தண்ணங் கானின்
மராமென மருளு மேனி வள்ளலோ டெழுந்து செஞ்சூட்
டராவணை துயின்ற வண்ண லானிரை மேய்க்க லுற்றான். (க)

---

2833. காதல் தன்னில் - அன்பைக் காட்டிலும். மற்று: அசை. மாயன் - கண்ணபிரான். ஆயர் மாதர்க்கு, தம் குழவிமேற் பிறந்திடுங் காதலைக் காட்டிலும் மாயன் மேல் காதல் உற்றது என் என்னு; என் - என்ன காரணம்? வாளுழவன் - பரீக்ஷித்து. முனிவன் - சுகமுனிவன். மூரன் முறுவலன் ; 2830.

2834. உயிரனைத்தும் மாதவ னுதலால் இன்னுயிர்க் குழவிதன் மேல் பெரிதும் காதல் இயைந்தது ; மாதவன் - திருமால். இன்னுயிர்க் குழவி - கண்ணபிரான். உயிர்ப்பதற்கு - பெற்றதனிடத்து ; உருபு மயக்கம். வேலோய் ; பரீக்ஷித்து ; விளி.

2835. குரா - ஒருவகை மரம். முருகு - வாசனை. குழவிய முல்லை - இளைய முல்லைமலர் ; 2874. விராய்மலர் - ஒருவகைப்பூ; "விராய் மலர்க் கோதை" (பெருங். 4. 12 : 38); "விராய் மலர்ப்பூங் குழலிபங்கின்" (கூர்ம). கானில் - காட்டில். மரா மென மருளு மேனி வள்ளல் - வெண் கடம்ப மரமோ வென்று மயங்கும் படியான. வெண்ணிற மேனியை யுடைய பலராமன் ; 3852 ; "ஒருகுழை யொருவன்போ லிணர் சேர்ந்த மாாஅமும்" (கலி. 26 : 1) ; "நாஞ்சில் வலவ னிறம் போலப் பூச்சினைச், செங்கான் மரா அந் தகைந்தன" (கார். 19) அண்ணல் - கண்ணபிரான். ஆனிரை - பசுக் கூட்டத்தை.

2836. அறம்புரை துணைவன் றன்னை யஞ்சன வண்ண னோக்கிச்
செறிந்தகார் மயில்க ளாடல் செய்தபாண் முரன்ற வண்டு
நறுஞ்சினை மெலியப் பூத்த நாண்மலர் மரன்க ளெல்லாம்
இறைஞ்சின நிற்கண் டென்னு வின்னுரை யாடி னனல். (உ)

2837. வளரொளி விரிக்கும் பச்சை மரகதப் பசுங்கட் டோகை
இளமயி லாட வாடி யிளைத்தகார் மேக வண்ணன்
முளரிநாண் மலராள் காந்தண் முகிழ்விர லங்கை தீண்டும்
தளிரடி தொறுவர் மைந்தர் தைவர வைகு மன்னோ. (ங)

கலிவிருத்தம்.

2838. காமனை யொப்பவன் கமழு முல்லையந்
தாமமார் பினன்றிருத் தாம னென்பவன்
தேமுறு பனங்கனி செல்வ வீங்குள
ஏமமார்ந் தனவென வியம்பி னனரோ. (ச)

2839. செழுநிலா மதியெனத் திகழு மொற்றையங்
குழையின னெழுந்தனன் குறுகித் தேம்படு
பழமுதிர் மடற்பனை யலைப்பப் பார்த்தனன்
கழுதையி னுருவினன் கனன்று தோன்றினன். (ரு)

---

2836. அறம் புரை துணைவன் - தருமத்தை ஒத்த பலராமன்; அறம் வெண்ணிற முடைய தென்பது கவிமதம். அஞ்சன வண்ணன் - கண்ணபிரான். மயில்கள் ஆடலைச் செய்தன: வண்டு பாண் முரன்ற; பாண்-பாட்டு; சிலப். 13: 103 - 5, அடியார். முரன்ற - பாடின. சினை - கிளை. மரன்கள் - மரங்கள். நின்னைக் கண்டு இறைஞ்சின என்னு; என்னு - என்று.

2837. தோகையை யுடைய இள மயில் தானும் ஆடி இளைத்த. கார் மேக வண்ணன்: கண்ணபிரான். மலராள் - திருமகளுடைய. காந்தள் மெல் விரல்; 2762, 2773. மலராள் கை தீண்டும் அடியைத் தொறுவர் மைந்தர் தைவர; அடி - கண்ணபிரான் பாதம். தொறுவர் மைந்தர் - இடைச்சிறூர். தைவர - தடவ. வைகும் - தங்கியிருப்பான்.

2838. திருத்தாமன் - ஸ்ரீ தாமன்; இடைச்சிறுருள் ஒருவன். தேம் உறு - இனிமை மிக்க. செல்வ: பலராமனுக்கு விளி. பனங்கனி ஈங்கு உள. ஏமம் - இன்பம்.

2839. மதியெனத் திகழும் - வெண்ணிறத்தால் சந்திரனைப் போல விளங்கும். ஒற்றையங் குழையினன் - பலராமன்; "ஒரு குழை யொருவன் போ லிணர் சேர்ந்த மராஅமும்" (கலி. 26: 1.) தேம்படு - இனிமை பொருந்திய. பழம் முதிர்ந்த மடற் பனையை அலைப்ப; அலைப்ப - கண்ணபிரான் அலைக்கும் பொருட்டு. கழுதையின் உருவினன் - தேனுசாசுரன். கனன்று - கோபித்து.

2840. அணர்ச்செவிக் கழுதையா யாண்டுத் தோன்றிய
தணிப்பருந் தேனுகா சுரனைத் தாமரை
மணிக்கையாற் சுழற்றின னெற்ற வான்பனை
துணித்தனன் வீழ்ந்தனன் றுஞ்சி னனரோ. (சு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2841. ஆனெழு தூளி மொய்த்த வணிகருங் கேச மாயன்
கானெழு மலரி னோடு கார்மயிற் பீலி சூடித்
தேனுற வமுத மூறுந் தீங்குழ லிசைத்து மாழை
மானென மதர்த்த கண்ணார் மகிழ்வுற வெய்தி னனால். (எ)

2842. ஊனிரை தெவிட்டிப் பல்பே யுவந்தன குனிப்ப வோங்கு
வானிரை நிருதர் மேவ வரிசிலை குனித்த போரே
றானிரை துரந்து சென்று னதிர்திரை யமுனை யாற்றுத்
தேனிரை யிதழுண் டாடுஞ் செழுமலர்த் தடத்தி னோர்சார். ()

2843. வடித்தகார் முல்லை யாயர் மைந்தரோ டஞ்செஞ் சேதா
விடப்புனன் மாந்தி வீழ்ந்து விளிந்தன விளித லோடும்
உடைத்தெழு கருணை வெள்ள மொழுகியின் னமுத மூறும்
கடைக்கணோக் குதவி யாவி காத்தன னுலகங் காப்பான். (சு)

---

2840. அணர்ச் செவிக் கழுதை - மேலே எடுத்த காதை யுடைய கழுதை; "அணர்ச் செவிக் கழுதை" (பெரும்பாண். 80.) தணிப்பரும் - தாழ்த்தற் கரிய. கையாற் சுழற்றினனாய் எற்ற; எற்ற - மோத. பனை துணிந்தன. தேனுகாசுரன் வீழ்ந்து துஞ்சினான்.

2841. ஆன் எழுதூளி - பசுக் கூட்டத்தால் எழுந்த துகள். கருங் கேச மாயன் - கரிய குஞ்சியை யுடைய கண்ண பிரான். கான் . வாசனை. மாழை மான் என மதர்த்த கண்ணார் - இளமானின் கண்களைப் போன்று செருக்கிய கண்ணை யுடைய ஆய்ச்சியர்.

(பி - ம்.) 1. மணிக் குழலின் மாயன்.

2842. ஊன் இரை-மாமிச மாகிய உணவை. உவந்தனவாய்க் குனிப்ப; குனிப்ப - முழங்க. வான் - ஆகாயத்தில். நிருதர் - அரக்கர்; என்றது இராவணன் முதலியோரை. குனித்த - வளைத்த. போரேறு - இராமன்; ஈண்டுக் கண்ண பிரானை. ஆனிரை - பசுக் கூட்டத்தை. தேன் நிரை - வண்டின் கூட்டம். போரேறு யமுனை யாற்றின் ஓர் சார் ஆனிரை துரந்து சென்றான்.

2843. வடித்த - பயின்ற. ஆயர் மைந்தர் - இடைச்சிறார். அம் செஞ் சேதா - அழகிய செவ்விய பசு. விடப்புனல் - விஷம் கலந்த நீரை. விளிந்தன- இறந்தன. உலகம் காப்பான் நோக்கு உதவி ஆவி காத்தனன்; உலகம் காப்பான் - கண்ண பிரான். நோக்கு - கண்ணோக்கினை.

2844. வெவ்விடப் புனலும் வெய்ய விடப்புனல் விளைத்த பாம்பும்
அவ்வழிக் கடிதல் செய்தா னஞ்சன வண்ண னென்ன
எவ்வகைக் கடிதல் செய்தா னினிதெடுத் திசைத்தி யென்று
தெவ்வடு குருதி வேலான் செப்பலு முனிவன் செப்பும். (கo)

2845. கடுவிளங் தொழுகு பேழ்வாய்க் காளிய னுயர்கா ளிந்தி
மடுவினில் வாழ மற்றம் மடுவினிற் றவழ்ந்த காற்றுப்
படினும்வல் விலங்குமாயும் பறவைவீழ்ந் துயங்கும் வெம்பி
நெடுமரங் கரியு மாங்கு நீள்சினைக் கடம்பொன் றுண்டால். (கக)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியச் சந்த விருத்தம்.

2846. ஈறி ழைத்தவிட நீர கற்றுதமெ
னக்க டம்பின்மிசை யேறியோர்
ஆறெ னக்களி நறுவெ டுத்தொழுகு
மாய்ம லர்ப்பட‌லை யந்துழாய்
மாற டர்த்ததனி நேமி மாயவன்ம
ணித்த டத்தினிடை பாய்தலும்
நூறு விற்கிடை யகன்றெ ழிந்தது
நுரைத்த லைப்புன லகழ்ந்தரோ. (கஉ)

2847. அளக்கு மண்ணுல கருந்தி வெண்ணெயுணா
வாயர் பாடிவளர் செங்கணன்
துளைக்கை மால்களிறு போல நின்றுதனி
துளைய வெம்பியெழு வாளரா

---

2844. அஞ்சன வண்ணன், விடப்புனலையும் விடப்புனலை விளைத்த பாம்பையும் கடிதல் செய்தான். அஞ்சன வண்ணன் - கண்ண பிரான். விளைந்த - உண்டாகிய. கடிதல் செய்தான் - நீக்கினன். என்ன - என்று சுகமுனிவன் கூற. தெவ் - பகைவரை. வேலான் - பரீக்ஷித்து. முனிவன் - சுகமுனிவன்.

2845. கடு - விஷம். காளியன் - ஒரு பாம்பின் பெயர். காளிந்தி - யமுனை. வாழும் - வாழ்வான். விலங்கு - மிருகங்கள். உயங்கும் - வருந்தும். வெம்பி மரமும் கரியும். ஆங்கு - அவ்விடத்தில். கடம்பு - கடம்பமரம்.

2846. ஈறு - முடிவை. கண்ண பிரான் ஏறி. நறு - தேன். மாறு அடர்த்த - மாறு பாட்டைக் கெடுத்த. மாயவன் - கண்ண பிரான். தடத்தினிடை - காளிந்தி நதியின் மடுவில். விற் கிடை - நூறு வில்லின் அளவு. புனல் கிழிந்து அகன்றெழிந்தது.

2847. முன்பு அளந்த உலகை அருந்தி வெண்ணெயை உண்ண ஆயர் பாடியில் வளர்கின்ற செங்கணன் : கண்ண பிரான். துளைய - யமுனையில்

வளைத்து வால்கொடு நெடும்ப ணுடவியின்
வள்ளன் மேனியை மறைக்குபு
முளைத்த நாண்மதி மருட்டும் வாலெயிறு
மூழ்கு றும்படி கடித்ததால். (கங)

2848. சூட்டு வாளாவின் மன்ற லந்துளவு
சூடு கார்முகி லகப்படா
வாட்ட முற்றன னெனத்த ளர்ந்திளையர்
மறுக வானுமறு குற்றதால்
நாட்ட மென்கொ லிடனுடு கின்றதென
நந்த கோபன்முத லாயினோர்
ஆட்டு தெண்டிரை யலம்பு நீர்யமுனை
யாற்ற கன்கரை மரீஇயினர். (கச)

2849. பாழி வாயரவு மெய்வ ளைப்பவொரு
பால னின்றநிலை கண்டுடன்
வீழ்து நாமுமென நந்த கோபனெழ
வீழல் வீழலென வந்துபால்
ஆழி போல்பவன் விலக்க நின்றலையு
மலைவு கண்டருளி யாகமேற்
சூழும் வாளர வகற்றி னுன்றுயில்கொள்
சூட்ட ராவணை யகற்றினன். (கரு)

---

நீந்த. அரா - காளியன். வாலைக் கொண்டு வளைத்து. பணுடவியின் - தனது படங்களின் தொகுதியால். வள்ளல் - கண்ணபிரானுடைய. மறைக் குபு - மறைத்து. முளைத்த - தோன்றிய. மதி - பிறை.

2848. சூட்டு வாளாவின்-மணிச் சூட்டை யுடைய காளியனிடம். கார் முகில் - கண்ண பிரான். அகப்படா - அகப்பட்டு. வாட்டம் - வருத்தம். இளையர் - இடைச்சிறுர். மறுக - வருந்தி மயங்க. வானும் - வானிலுள்ள தேவர்களும்; ஆகுபெயர். நாட்டம் இட னுடுகின்ற தென் என; நாட்டம் - கண். என-என்று மனங் கலங்கி. அலம்பு - ஒலிக்கின்ற. யமுனை யாற்றின் அகன்ற கரையை. மரீஇயினர் - அடைந்தார்.

2849. பாழி - பெருமை. அரவு-காளியன். மெய் - கண்ண பிரானின் மேனியை. ஒரு பாலன் - ஒப்பற்ற கண்ண பிரான். நாமும் வீழ்தும் என நந்தகோபன் எழுதலும். வீழல் - வீழாதே. பாலாழி போல்பவன் - பல ராமன். நந்த கோபன் முதலியவர் நின்று அலையும் அலைவைக் கண்டு அருளி; அலைவு - வருந்தம். ஆகமேல் சூழும் அரவை அகற்றினன்; ஆகம் - மேனி. அரவு - காளியன். அராவணை யகற்றினன் கண்டு அகற்றினன். அராவணை அகற்றினன் - கண்ண பிரான்.

2850. காடு கொண்டெழு பணும ணித்திரள்கள்
கக்கு செக்கரொளி சுற்றியோ
பாடு செக்கரொளி வீசு கற்கள்பல
பட்ட ழுந்தியெழில் கன்றியோ
சூடு தார்மகுட கோடி மேலமரர்
சூடு சேவடி சிவப்பநின்
ருடல் வாளரவி னுச்சி மீதுநட
மாடினுன் மறைகள் பாடினுன். (கசு)

2851. பண்ப ழிந்தா வினீள்ப ணுடவி
பதைப்ப வாய்குருதி காலவெங்
கண்பி துங்கநட மாட னேக்கியுயிர்
காத்தி யென்றுதளர் காளியன்
நண்பு கொண்டுபுணர் தொய்யில் வெய்யமுலை
நாக கன்னியர் செறிந்துமால்
மண்பொ திந்தகம லத்தி லந்தண்மலர்
மாரி தூவினர் வணங்கினுர். (கஎ)

2852. பொருதி ரைக்கட லுடுத்த நீள்புவி
புரக்க வந்தமணி வண்ணபொற்
றிரும ணக்குமணி மார்ப கொற்றமுறு
செம்முகத் திகிரி யங்கையாய்

2850. பணுமணி - படத்திலுள்ள மணிகள். செக்கர் - சிவப்பு. பாடு - வீழ்தல். கற்கள் - மாணிக்கக் கற்கள். எழில் - அழகு. கன்றி - வாடி. அமரர் தம்மகுட கோடி மேல் சூடும் சேவடி சிவப்ப. ஆடுதலை யுடைய அரவி னுச்சியில் நின்று. மறைகள் பாடினவன் நடனம் ஆடினுன்; நடம் - கூத்து.

2851. அரவினுடைய பணுடவி பதைப்ப. குருதி கால - இரத்தத்தைக் கக்க. பதைப்ப, கால, பிதுங்க நடமாடுதலை நோக்கி. காத்தி - காப் பாயாக. காளியன் மனைவியராய நாக கன்னியர். மாவின் மண் பொதிந்த கமலத்தில்; மால் - கண்ண பிரான். மண் பொதிந்த கமலம் - உலகத்தை அடக்கிய பாதம்.

2852. புவி புரக்க - பூமியைக் காப்பதற்கு. பொற்றிரு மணக்கும் அழகிய திருமகள் கலந்த. கொற்றம் - வெற்றி. மணிவண்ண, மார்ப அங்கையாய் என்பன கண்ண பிரானை நோக்கிய விளி. மறைத்தலை - வேதத்

அருமறைத்தலையின் வைத்த சேவடி
யழுங்கு பைத்தலையின் வைப்பதற்
கெரிசி னத்தவிட வாவ மெத்தவமி
ழைத்த தோவென வழுத்தினர். (கஅ)

2853. அறிந்தி லானிவ னிழைத்த வெம்பிழை
யருட்பெ ருங்கடல் பொறுத்தியென்
றிறைஞ்ச வாளரவி னுடல் விட்டன
னெழுந்து போகியுறை தீவின்வாய்ப்
பிறங்கு நின்முடியி னெம்ம டித்துணை
பிறந்த பொற்பொறி படைத்தலால்
மறங்கொள் வெங்கலுழ னென்று நின்னையட
வல்ல னல்லனென வோதினன். (கக)

2854. மறைக்கொ ழுந்தினை வணங்கி யொண்மணிகண்
மாசி லாடையகின் மான்மதம்
வெறுப்ப நல்கியதிர் வெண்டி ரைக்கடல்
விளிம்ப டுத்ததொரு தீவின்வாய்
எறித்த செஞ்சுடிகை யரவி னுக்கிறை
யெழுந்து கன்னியரொ டேகினன்
நறைச்செ ழுங்கமல மலர்நதித் தடனு
நஞ்சொ ழிந்துபொலி வுற்றதால். (உ0)

---

தின் உச்சியில். சேவடி - பாதத்தை. அழுங்கு பைத்தலையின் - வருந்துகின்ற பாம்பின் தலையில். சினத்தையும் விடத்தையு முடைய அரவம்-காளியன். வழுத்தினர் - புகழ்ந்தனர்.

2853. அறிந்திலா னாகிய இவன் காளியன். அருட் பெருங்கடல் - கண்ண பிரான் : விளி. இறைஞ்ச - நாக கன்னியர் வணங்க. அரவின் ஆடலை விட்டனனாய் எழுந்து. தீவின் வாய்ப் போகி உறை - நீ முன்னம் இருந்த ரமணகத் தீவிலே சென்று வாழ்வாயாக. படைத்தலால் - உண்டானமையால். மறம் - வீரம். கலுழன் - கருடன். அடவல்லன் அல்லன் - கொல்லுதற்கு வன்மை யுடையவ னல்லன் ; முன்பு காளியன் ரமணகத் தீவிலிருந்து கருடனுக்கு அஞ்சி யமுனை யாற்றை யடைந்தனன்.

2854. மறைக் கொழுந்து - கண்ண பிரான் ; 2744. மணிகள் முதலியவற்றை. வெறுப்ப - மிக. தீவின்வாய் - ரமணகத் தீவினிடத்து. எறித்த - ஒளி வீசிய. அரவினுக்கு இறை - காளியன். கன்னியர் - அவன் மனைவியர். நறை - தேன். நதித்தடனும் - யமுனா நதியின் இடமும். நஞ்சொழிந்து - விஷம் நீங்கி.

2855. என்ன லோடுமடன் மன்ன னென்னைகொ
விருந்த தீவினை யகன்றிடாப்
பன்ன காதிபதி பின்னு தெண்டிரை
பாந்து பாயமுனை மடுவின்வாய்
மன்ன லுற்றது வழங்கு வாயென
மலர்ந்து தண்ணற வுவட்டெழும்
கன்னி யந்துளவ ணிந்த கண்ணனருள்
கனியு மாதவனி யம்புவான். (உக)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2856. வாளரா வழிபா டாற்றி வழங்குதல் வழங்கா னாகிக்
காளிய னிருப்ப வூழிக் காற்றெனக் கலுழன் சீறி
நீளிருஞ் சிறையிற் றாக்க நெஞ்சகங் கலங்கி யோடித்
தாளதா மரைவாய் விள்ளுந் தடத்திடை யெய்தி னானால். (உஉ)

2857. இருஞ்சிறைக் கருளன் மீனுங் கெறிதலு மெறிய லென்றோர்
அருந்தவன் சபித்த லாலே யாங்கண்வந் தணுகா னாகப்
பொருந்தினன் யமுனை யாற்றுப் பூந்தட மென்று சாவா
மருந்தினு மமிழ்த மூற மாதவன் வகுத்தான் மன்னோ.(உங)

---

2855. மன்னன் - பரீக்ஷித்து. தீவினை - ரமணகத் தீவை. அகன்றிடா - நீங்கி. பன்னகாதிபதி - காளியன். மன்னலுற்றது - நிலை பெற்றது. வழங்கு வாய் - கூறுவாயாக. நறவு உவட்டெழும் - தேனின் பெருக்கு எழுகின்ற. கன்னி - இளமை. கண்ணனுடைய அருள் கனியும் மாதவன் - சுகமுனிவன்.

2856. அரா - காளியன். வழிபாடு - கருடனுக்கு வணங்குதலை. வழங்குதல் - திறை கொடுத்தல். கலுழன் - கருடன். சீறி - கோபித்து. சிறையின் - சிறகுகளால். தாளையுடைய தாமரை ; தாள் - தண்டு. தடத்திடை – யமுனை நதி யினிடத்தே.

2857. கருளன் - கருடன். ஆங்கு மீன் எறிதலும் - அந்த யமுனையில் மீனைக் கொன்று உண்ணுதலும் ; எறிதல் - ஊறுபடுத்தல் ; திருச்சிற். 181. எறியல் - கொல்லாதே. தவன் - சௌபரி என்னும் முனிவன் ; முதனூல். 10. 17 : 1-12. ஆங்கண் - யமுனை யிடத்தே. யமுனை யாற்றுத் தடத்தே பொருந்தினன் என்று. சாவா மருந்தினும் - அமிர்தத்தைக் காட்டிலும். அமிழ்தம் ஊற - இனிமை மிக. மாதவன் - சுகமுனிவன்.

2858 அழலென வுயிர்க்கு நாகத் தஞ்சுறு விடம்பா யாகம்
முழுவதுந் தாயர் கொம்மை முலைசுரந் தொழுகு பாலோ
குழையொடு பொருது நீண்ட கொழுங்கயற் கண்ணீர் கொல்லோ
கழுமுறக் கமலச் செங்கட் கண்ணனைக் கழீஇயி னாரே. (உச)

2859. வெயிலுமிழ் பருதி யத்த வெற்பகம் படா வீங்கு
புயலெதிர் நறிய முல்லைப் பூம்புலம் படா யாரும்
குயில்குடைந் துகுத்த போதின் கொங்குலா மணற்குன் றேறித்
துயிலமர்ந் தனரா லற்றைத் தூங்கிருட் கங்குன் மாதோ.(உரு)

கலிவிருத்தம்.

2860. உய்ந்து போநெறியு முண்டுகொ லென்னு
நந்த கோபன்மன நைந்து நடுங்கச்
சிந்த வல்லிரு டிசாமுக மெங்கும்
வந்து கானழல் வளைந்ததை யன்றே. (உசு)

2861. நண்ணு மாரழலை நச்சர வேந்து
மண்ணெ லாமகல் வயிற்றிடை வைத்த
அண்ணல் செய்யதளி ரங்கையின் வாரி
வெண்ணெ யுண்டென விழுங்கின னன்றே. (உஎ)

---

2858. அனல் - தீ. நாகத்து - காளியனுடைய. விடம் பாய்ந்த ஆகம் முழுவதையும். தாயர் - உரோகிணி, யசோதை முதலியோர். கொம்மை - வட்டம். குழை-குண்டலம். கழுவுற - கழுவிட. தழீஇயினர் - தழுவினர். ஆகம் முழுவதும், தாயர், பாலோ, கண்ணீரோ கழுவுறும் படிக் கண்ணனைத் தழீஇயினர்.

2859. பருதி - சூரியன். அத்த வெற்பகம் - அஸ்தமன மலை. படா - அடைய. வீங்கு புயல் எதிர் - பெருகுகின்ற மேகத்தை ஏற்றுக் கொள்ள. படரா - சென்று. யாரும் - எல்லோரும். கொங்கு - வாசனை. துயிலமர்ந் தனர் - உறங்கினர். தூங்கிருட் கங்குல் - செறிந்த இருளையுடைய இரவில்.

2860. உய்ந்து போம் நெறி - பிழைத்துப் போதற்குரிய வழி. நைந்து - வருந்தி. சாமுக மெங்கும் இருள் சிந்தக் கானழல் வளைந்தது ; சிந்த - சிந்தும்படி. கானழல் - காட்டுத் தீ.

2861. அழல் - காட்டுத் தீ. நச்சரவு வேந்தும் மண்-விடத்தை யுடைய ஆதிசேடன் ஏந்திய பூமி. அண்ணல் - கண்ண பிரான். அண்ணல், அழலை வாரி வெண்ணெ யுண்டென விழுங்கினன். கண்ண பிரான் காட்டுத் தீயை உண்டது : 2879.

2862. முரிதி ரைக்கடன் முகத்து விளங்கும்
உருவ வொண்டிலக மொப்புற மாறு
இருள்கு டித்திடு மிளங்கிர் தோன்ற
விரைசெய் முல்லைவன மேவின ரன்றே. (உஅ)

2863. வெயில்சி னந்திருகும் வேனி லிறுப்பக்
குயிலி னத்தொடெதிர் கூவியும் வேயின்
இயல்கொ ளின்னிசைவ டித்து மிருங்கான்
மயில்க ளிப்பமழை வண்ண னெழுந்தான். (உகூ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2864. கவளமார் களிநல் யானைக் கதிர்மருப் பொசிக்குந் தோன்றல்
தவழ்மதுக் கமழுங் கானந் தண்ணென வமுத மூறு
குவிமுலை யஞ்செஞ் சேதாக் குவிதரத் தாள மூறற்
பவளவாய் திகழ வைத்துப் பசுங்கழை யிசைத்திட் டானல்.()

2865. விசும்புசூழ் வெயிலான் வற்றி வெம்பிய மான்கள் யாவும்
ஒசிந்துயர் மருதஞ் சாய வுரலொடு தவழ்ந்த வொண்கேழ்
அசும்புபொன் னுடை யான்ற னவிரொளி தவழுந் தோறும்
பசுங்குழை குழைத்த போலும் பான்மையிற் சிறந்த மாதோ. (நக)

---

2862. முரிதிரை - முரிகின்ற அலையை யுடைய. மாறு - நீங்காத. கடல்முகத்துக் திலகத்தை ஒப்புறக் கதிர் தோன்ற ; கதிர் - சூரியன். விரை - வாசனை.

(பி - ம்.) 3. இருள் குடித்தெழு மிளங்கதி ரோனல்.

2863. வேனில் - வேனிற் காலம். இறுப்ப - தங்க. வேயின் - வேய்ங் குழலின். இசை வடித்தும் - இசையைப் பயிற்றியும். கான் - காட்டில். மழை வண்ணன் - கண்ண பிரான்.

2864. கவளத்தை ஆர்கின்ற யானை ; என்றது குவலயாபீடம் என்னும் யானையை. தோன்றல் - கண்ண பிரான். கானம் - காடு. தண்ணென - குளிர்ந்திட. சேதா - இளம் பசு. குவிதா - ஒன்றாகச் சேர. கழை-புல்லாங் குழல்; " ஆக்கு வித்தார் குழலா லரங்கேசர் " (அரங்கத்.)

2865. வெயிலான் - வெயிலினால். வெம்பிய - வெதும்பிய. ஒசிந்து - முறிந்து. தவழ்ந்த பொன்னுடையான்றன் - கண்ண பிரானுடைய. ஒண் கேழ் அசும்பு பொன்னுடை - ஒள்ளிய நிறம் ஊற்றெழுகின்ற பொன்னா லாகிய ஆடை. அவிர் ஒளி - விளங்குகின்ற ஒளி. குழை - தளிர்கள். குழைத்த போலும் - தளிர்த்தன போன்றன.

2866. வாட்டிற னிருதர் வெள்ளம் வானெலாம் பரக்க வல்வில்
கோட்டிய கொண்டன் மேனிக் கொழுஞ்சுடர் தவழுந் தோறும்
ஊட்டழல் சுட்ட செம்பொ னுயர்வரைச் சாரல் பச்சைத்
தோட்டறு கீன்ற போலத் துலங்கெழில் படைத்த மன்னோ. (கூஉ)

2867. நாகமீ மிசைத்து யின்று நளிகட லுடுத்த ஞாலத்
தோகையுண் மகிழ வந்து தோன்றியுந் துளிக்கு நீல
மேகமே போல்வான் மேனி விரிகதிர் பாயுந் தோறும்
போர்குயர் பூவை யாவும் பூத்தன போலு மன்றே. (கூகூ)

2868. மதுக்குடம் விரிந்தா லன்ன மாமலர்க் கோதை மார்பன்
கதிர்த்தகா ருருவின் காந்தி கரைமிசைத் தவழுந் தோறும்
புதுப்புனல் பாந்த தேய்க்கும் பொறிவரி வண்டு பாய்ந்து
மிதிப்பவா யிதழ்மென் போது விரிதுறை யமுனை மன்னோ. (கூச)

2869. வளமலர் முருகு விம்மு மாதவிப் பந்த ரூடு
துளவணி படலை மாயன் சுடரொளி பாயுந் தோறும்
களிதலை மணந்து தோன்றுக் காந்துறை கருங்கட் டோகை
இளமயி லெருத்த நீட்டு மியற்கையிற் பொலிந்த வன்றே. (கூரு)

---

2866. நிருதர் வெள்ளம் - அரக்கர் கூட்டம்; என்றது இராவணு தியரை. கோட்டிய - வளைத்த. கொண்டல் - கண்ண பிரான். ஊட்டப்பட்ட அழலால் சுட்ட செம் பொன். பச்சைத் தோடுஅறுகு - பசுமையான இலையை யுடைய அறுகை. சாரல் எழிலைப் படைத்த.

2867. நாக மீமிசை - ஆதிசேடன் மேல். ஞாலத் தோகை உள் மகிழ - பூமி தேவி மனம் உவந்திட. போகுயர் - மிக வுயர்ந்த. பூவை - காயா மரம்.

2867. மதுக் குடம் - தேன் நிரம்பிய குடம். கோதை - மாலை. மதுக் குடம் விரிந்தா லன்ன மலர்க் கோதை; "மதுக் குடம் விரிந்தன மாலையா ரொடும்" (சீவக. 1999.) மார்பன் - கண்ண பிரானுடைய. கதிர்த்த - ஒளி பெருகிய. காந்தி - ஒளி. ஏய்க்கும் - ஒக்கும். பாய்ந்து மிதித்தலால் போது விரிகின்ற துறை யமுனை புதுப்புனல் பாய்ந்த தேய்க்கும்.

2869. முருகு - வாசனை; தேன் எனலுமாம். மாதவிப் பந்தர் - கொடி வீடு. ஊடு - நடுவே. படலை - மாலை. மாயனுடைய ஒளி பாயுந் தோறும்; மாயன் - கண்ண பிரான். களி தலைமணந்து - மகிழ்ச்சி கலந்து. தோன்றுவாய்க் காந்து உறைகின்ற தோகையை யுடைய இளமயில்; காந்து- மறைந்து. எருத்தம் - கழுத்து; கண்ண பிரானுடைய மேனி நிறத்திற்கு மயிலின் கழுத்தின் நிறம் உவமை; 2915.

2870. இருநில வளாகம் போற்று மிலங்கிதழ்க் கமலப் பொற்றாள்
ஒருமுதல் பவளச் செவ்வா யொள்ளொளி தவழுந் தோறும்
அருவியஞ் சார லெல்லா மஞ்சிறைச் சுரும்பர் பாட
விரைகமழ் குருதிக் காந்தள் விரிந்தன போலு மன்னோ. (௩௬)

2871. ஆரமு மகிலு முந்தி யதிரொலி யருவி பாயும்
சாரலுங் காடுங் காவுந் தடந்திரை யாறுந் தண்ணங்
கார்வளங் காட்ட வேனிற் காலைநின் றூடல் செய்தான்
ஏர்விளை யாடு செம்பொ னேந்தெழின் மார்வத் தெம்மான். (௩௭)

2872. வளைகடன் ஞால மஞ்ச வருபிர லம்பன் மற்றுங்
களைவிலைப் பொலம்பூ ணாகத் தாயர்தம் புதல்வ னாகி
ஒளியிலங் கருவிச் சார லோங்கிய நடையி னாலோர்
களிறென நின்ற செங்கட் கண்ணனை யெய்தி னானால். (௩௮)

2873. விரவிய வண்ண மோர்ந்தவ் வெய்யவன் றன்பா லாக
இருதிற மாக்கி யாய ரின்னெழிற் குமா ரீட்டத்
தொருதிறத் திராம னிற்ப வொருதிறம் பற்றி நீலச்
சுரிகுழற் குரிசி றோற்றார் சுமக்கென வாடி னானே. (௩௯)

---

2870. வளாகம் - பரப்பு. பொற்றாளை யுடைய ஒரு முதல் - கண்ண பிரானுடைய. அருவிச் சார லெல்லாம். அம் சிறை - உட்சிறகுகளை யுடைய. சுரும்பர் - வண்டுகள். விரை - வாசனை. குருதிக் காந்தள் - செங்காந்தள்.

2871. ஆரம் - முத்துமாலை. உந்தி - செலுத்தி. அதிர்கின்ற ஒலியை யுடைய. சாரல் - அருவிச் சாரல். கா - சோலை. கார் வளம் காட்ட - கார் காலத்தின் வளத்தைக் காட்டும் படி. வேனிற் காலை - வேனிற் காலத்து. ஏர் - அழகு; எழுச்சி எனலுமாம். மார்வத்தை யுடைய எம்மான்.

2872. வளைகடல் - வளைந்த கடல். அஞ்ச - பயப்படும்படி. பிரலம் பன் - ஓர் அசுரன்; இடைச்சிறுவ னுருவம் கொண்டு இடைச்சிறாருடன் சேர்ந்து கொண்டான். அளைவிலைப் பொலம் பூண் ஆகத்து ஆயர் - வெண்ணெய்க்கு விலையாகக் கொண்ட பொன்னாலாகிய அணிகளை மார்பி லணிந்த இடையர்; "நெய்விலைக் கட்டிப் பசும் பொன் கொள்ளாள்" (பெரும் பாண். 164); "நெய்விலைப் பசும் பொற் றோடு" (சீவக. 488.); சாரலில், நடையினாற் களிறென நின்ற கண்ணனை எய்தினன்.

2873. விரவிய வண்ணம் ஓர்ந்து - பிரலம்பன் இடைச் சிறுவரது கூட்டத்தோடு கலந்திருக்கும் விதத்தைக் கண்ணபிரா னறிந்து. வெய்யவன்- பிரலம்பன். தன் பக்கமாக. இருதிற மாக்கி - விளையாடுதற்கு இடைச் சிறாரை இருவகை யாகப் பிரித்து. இராமன்-பலராமன். ஒரு திறத்தைத் தான் பற்றி. நீலச் சுரி குழற் குரிசில்-கண்ணபிரான்; எழுவாய். தோற்றார்-விளையாட்டில் தோற்றவர். சுமக்க என - வென்றவரைச் சுமந்திடுக என்று கூறி; "தோற்ற ருன் கழுத்திடை வளைத்தே றென்ன" (வேம்பத்தூரார். திருவிளை. 57; 32.)

2874. மல்லலங் கங்கை போலு மன்னவன் றிறத்து வெற்றி
புல்லலும் வண்டு பாடப் பொதியவிழ் குழவி முல்லை
மெல்லிணர் விரியன் மாலை மிலைந்தசீ தாமன் றன்னைக்
கல்லினுன் மாரி காத்த கரியவன் சுமத்தல் செய்தான். (சO)

2875. இகலற விமைக்கு மொண்கே ழிந்திர நீலங் கான்ற
திகழொளி புடைசூழ் வெள்ளிச் செழுங்கிரி கடுப்ப நீலுண்
டுகில்புனை வெள்ளை மேனித் தோன்றலைத் துனைவி னுயர்
மகனென வந்த வஞ்ச மனத்தினுன் சுமந்திட் டானே. (சக)

2876. கமழ்ந்தபூந் தெரியன் மார்பன் கையகப் பட்டா னென்னுச்
சுமந்தன னேகுங் காலைத் தொல்லைவல் லுருவு கொண்ட
சமங்கடந் தொளிசெய் வெள்வேற் ரூனவன் றலையிற் குத்த
உமிழ்ந்தனன் குருதி மாரி யுலந்தனன் குப்புற் றன்னே. (சஉ)

2877. விரைவிளை யாடு முல்லை மென்ருெடைப் புதல்வ ரோடு
வரைவிளை யாடு மார்ப மால்விளை யாடு மேல்வைத்
திரைவிளை யாடும் யாற்றுச் செழுங்கரை மருங்கு வண்டின்
நிரைவிளை யாடு கான நீங்கியான் மறைந்த மாதோ. (சஙூ)

---

2874. கங்கை போல் வெண்ணிற முடைய மன்னவன்: பலராமன். புல்லலும் - சேர்தலும். பொதி - கட்டு. குழவி முல்லை - இளமையை யுடைய முல்லை; 2835. முல்லையின் இணர்விரிதலை யுடைய மாலை. சீதாமன் - ஸ்ரீதாமன். கல் - கோவர்த்தன கிரி. கரியவன் - கண்ண பிரான்.

(பி - ம்.) 3. சீர்த்தாமன். 4. மாரி யோப்பும்.

2875. இகல் அற - மாறுபாடு கெட. கேழ் - நிறம். கான்ற - கக்கிய. கடுப்ப - ஒப்ப. நீல் உண் துகில் புனை - நீல நிறம் ஊட்டிய ஆடையைப் புனைந்த. தோன்றலை - பலராமனை. துனைவின் - விரைவின். வஞ்ச மனத்தினுன் - பிரலம்பன் என்ற அசுரன்.

2876. மார்பன் - பலராமன். கையகப்பட்டான் - நம்மிடம் அகப் பட்டுக் கொண்டான். தொல்லை உருவு கொண்ட தானவன் தலையில் - பிரலம்பன் தலையில். குருதி மாரி உமிழ்ந்து குப்புற்று உலந்தனன்; உலந்தனன் - இறந்தான்.

2877. விரை - வாசனை. தொடை - மாலை. புதல்வர் - இடைச்சிறுர். மார்பத்தை யுடைய மால்; கண்ண பிரான். எல்வை - சமயத்து. திரை விளையாடும்-அலைகள் உலாவுகின்ற; விளையாடும் - உலாவும்; சீவக. 397. ந. மருங்கு - பக்கத்தில். நிரை - வரிசை. கானம் - நீங்கி. காட்டினின்றும் நீங்கி. ஆன் - பசுக்கள்.

2878. தண்ணறல் படுகான் யாற்றுத் தழைத்தபுற் கானஞ் சேர்ந்த
அண்ணலஞ் சேதா மைந்த ரழைப்புழி முழங்கா வாய
கண்ணும்வான் முகமுஞ் செய்ய கமலமொத் தலர்ந்த மைக்கார்
வண்ணனின் றழைப்பப் பொங்கி மகிழ்ந்தெதிர் சிலேத்த மாதோ. ()

2879. காட்டழல் கனன்று பொங்கிக் கடுவளிப் புடைப்பிற் சூழ
மோட்டிள முல்லை மெல்லென் முகிழ்முகை விரிந்த பைந்தார்ச்
சேட்டிளங் குமரர் காத்தி செல்வவென் றிறைஞ்ச நம்பன்
நாட்டநீர் புதைத்தி ரென்னு நளியழல் பருகி னுனல். (சுரு)

2880. எரியகைந் தன்ன தேமா விளந்தளிர் கோது செங்கட்
கருநிறக் குயில்வாய் வைத்த காம்பிசை கேட்டு மாழ்கச்
சுரிகுழற் பவளச் செவ்வாய்த் தோகைய ரோகை கூர
நிரைபுரந் தினிதின் மீண்டா னீனிறக் கொண்மூ வன்னன். ()

---

2878. அறல் - கருமணல். கான் யாறு - காட்டாறு. யாற்றையும், புல்லையு முடைய கானத்தைச் சேர்ந்த சேதா; அண்ணலஞ் சேதா - பெருமை பொருந்திய பசுக்கள். மைந்தர் - மற்ற இடைச்சிறுர். முழங்கா வாய - கத்தா வாயின. வண்ணன் - கண்ண பிரான். எதிர் சிலேத்த - எதிரே முழங்கின.

2879. காட்டழல் - காட்டுத்தீ. வளி - காற்று. மோடு - பெருமை, முல்லையினது முகிழ்ந்த முகை; முகிழ்த்தல் - அரும்புதல். சேடு - பெருமை. குமரர், செல்வ, காத்தி என்று இறைஞ்ச; குமரர் - இடைச்சிறுர். செல்வ; கண்ண பிரானுக்கு விளி. நம்பன் - கண்ண பிரான். நாட்டம் - கண்களை. என்னு - என்று கூறி. நளி யழல் - பெரிய தீயை.

2880. எரி அகைந்தன்ன தேமா இளந்தளிர் - தீத் தழைத்தாற் போன்ற மாந்தளிர்களை; கோதுகின்ற குயில் காம்பிசையைக் கேட்டு மாழ்க; காம்பிசை - வேய்ங் குழலின் இசை. மாழ்க - மயக்க மடைய. தோகையர் - ஆய்ச்சியர். ஓகை கூர - மகிழ்ச்சி மிக. நிரை - பசுக் கூட்டத்தை. நீனிறக் கொண்மூ அன்னன்; கொண்மூ - மேகம்; கொண்மூ என்றதற்கு ஏற்பக் குயில் மாழ்க என்றதும், தோகைய ரோகை கூர என்றதுப் நயம்.



# 8. வேய்ங்குழ லிசைத்த அத்தியாயம்.

கலிச்சந்த விருத்தம்.

2881. கண்ணுந்திரு முகமுங்குளிர் கமலம்புரை மடவார்
வண்ணந்திக ழெயிறூறுதெண் மதுவுண்பவர் நிகரா
உண்ணுந்தளி நறைதோளி யொருகோடிவெண் டளவின்
தண்ணென்முகை சுழலும்படி தலைவந்தது பைங்கார் (க)

2882 குடிக்குங்கனை கடனீருயர் குன்றத்தலை பொழியா
இடிக்கும்புயல் கண்டேரெழி லிளமஞ்ஞைக ளெல்லாம்
நடிக்கின்றன மகிழ்கூர்ந்தன நாகத்தலை நடிக்கும்
வடிக்குங்கழை முகில்கண்டுள மகிழ்கோவியர் மான. (உ)

2883. முற்றுந்தனி யாழிக்கதிர் முறுகுஞ்சின வெயிலால்
வற்றுஞ்சினை மாமின்றுளி வளர்மாரியிற் றளிர்த்த
பற்றுந்தவத் துடல்வாடுநர் பானின்னருண் மாரி
பெற்றின்புறு திருவாலொளி பிறங்குந்திற னிகர்ப்ப. (௩)

---

2881. கண்ணும் முகமும் கமலம் போன்ற மடவார் எயிற்றில் ஊறும் மதுவை உண்பவரை நிகரா ; நிகரா - நிகர்த்து. தளி - துளி. நறை - தேன். அளி - வண்டுகள். அளி, தளவின் முகையில் சுழலும்படி. கார் - கார் காலம். முல்லைக்கு - மகளிரும், வண்டுகளுக்கு ஆடவரும் உவமை.

2882. கனை கடல் - ஒலிக்கின்ற கடல். குன்றத் தலை - மலை யுச்சியில். பொழியா - பொழிந்து. புயல் - மேகம். ஏர் எழில் - எழுச்சியையும் அழகையும் உடைய. நாகம் - காளியன். நாகத் தலையில் நடிக்கும் முகில், கழை வடிக்கும் முகில் என்க ; கழை வடிக்கும் - வேய்ங் குழலைப் பயிற்றுகின்ற. முகில் - கண்ண பிரான். மஞ்ஞைக ளெல்லாம் நடிக்கின்றனவாய்க் கோவியர் மான மகிழ் கூர்ந்தன ; மான - ஒப்ப.

2883. தனி யாழிக் கதிர் - ஒற்றைச் சக்கரத்தை யுடைய சூரிய னுடைய. முறுகும் - முதிர்ந்த. இனிய துளியை யுடைய மாரியால் தளிர்த்த. பற்றும் - தாம் கொண்ட. வாடுநர் - வாடிய முனிவர். பானின் - திரு மாலின். திருவால் - பாக்கியத்தால். பிறங்கும் திறன் - விளங்குகின்ற தன்மை. அருள் மாரியை. வாடிய மரங்களுக்குத் தவத்தால் வாடிய முனி வர் உவமை.

2884. மறைகற்றவர் மறையென்பன தேடத்துளி மதுவின்
வெறிகக்கிய துளவப்புயல் விளையாடுறு தண்கான்
முறிமுற்றிய கொடிமுல்லைமென் முகைவிண்டன வானோர்
செறிகற்பக வனமெள்ளுபு சிரிக்குஞ்செயல் புரைய. (ச)

கலிவிருத்தம்.

2885. நறைத்துளவ மாமுகி னனந்தலைய ஞாலம்
அறத்தின்மக னுளும்வகை யாரமரில் வந்தான்
மறைத்தென மறைத்தது வளைத்தெழு கருங்கார்
எறித்தவெயில் கான்றுவிண் ணெழுஞ்சுடரை மன்னே. (ரு)

2886. புட்கொடி யுயர்த்தபுயல் பொங்கிதழ் விரிக்கும்
கட்கமல வாய்மலரின் வைத்தசிறு காம்பின்
உட்கனியு மின்னமிழ்த மூறுமிசை கேளா
வட்கின வெனப்பெரி தடைத்தகுயில் வாய்கள். (சூ)

2887 வெள்ளைமதி வான்மறைய மின்மினி விளங்கல்
உள்ளரிய வெங்கலியி லோர்முதல் விழுச்சீர்
தெள்ளுமறை நின்றுதிக ழாமன்மறை யெல்லாம்
எள்ளுநர் விளங்குறு மியற்கையை நிகர்க்கும். (எ)

---

2884. வெறி - வாசனை. என்பன - என்று சொல்லப்பட்டன ஆகிய. மறையைக் கற்றவரும் மறையும் தேடும்படி துளவப் புயல் விளையாடுறும் கானில்; துளவப் புயல் - கண்ண பிரான். கான் - காடு. முறி - தளிர். எள்ளுபு - இகழ்ந்து. புரைய - ஒப்ப. வானோருடைய கற்பக வனத்தை எள்ளுபு சிரிக்கும் செயல் புரைய முல்லை முகை விண்டன; இது தற்குறிப் பேற்ற அணி.

2885. முகில் - கண்ண பிரான். நனந்தலைய ஞாலம் - பரந்த இடத்தை யுடைய பூமியை. அறத்தின் மகன் - தரும புத்திரன். ஆர் அமரில் - அரிய பாரதப் போரில். மறைத்தென - திகிரியால் மறைத்தாற் போல ; சுடரைக் கார் மறைத்தது ; சுடர் சூரியன். கார் - மேகம்.

2786. புள் கொடு உயர்த்த புயல் - கருடனைக் கொடியிலே மேம்படுத் திய திருமால். கள் – தேன். காம்பு - வேய்ங் குழல். உள்ளே கனியும் இசை, அமிழ்தம் ஊறும் இசை; அமிழ்தம் - இனிமை. கேளா - கேட்டு. வட்கின என - வெட்கமுற்றன போல. புயல் தன் வாயில் வைத்த குழலிசை யைக் கேட்டுக் குயில் வாய்கள் அடைத்தன ; தற்குறிப்பேற்றம்.

2887. மதி – சந்திரன். வான் - ஆகாயத்தே. உள்ளரிய - நினைத் தற்கரிய. ஓர் முதல் - ஒப்பற்ற முதற் பொருள். தெள்ளு மறை - தெளிவை யுடைய வேதம். எள்ளுநர் - இகழ்பவர்கள். வானில், மதி மறைய மின் மினி விளங்குதலுக்குக் கலி காலத்தில் மறைகள் விளங்காமல் அவற்றை எள்ளுநர் விளங்குறும் இயற்கை உவமை.

2888. வியலிரு விசும்புகதிர் மின்னுவிளை யாடும்
புயறழுவ நின்றுபொலி வுற்றதொரு தோற்றம்
உயர்வற வுயர்ந்தநல னுற்றபொருண் மற்றுங்
கியல்குண மணப்புறவி லங்குதல் கடுக்கும். (அ)

கலிச்சந்த விருத்தம்.

2889. இவ்வண்ணமு றுங்காரினி லீற்றுவின மேயாச்
செவ்வண்ணம ணிக்குன்றுகள் சேர்ந்தின்னமு தயிலாப்
பைவண்ணவ ராவோடெறி பாலாழிக டுப்ப
மைவண்ணன்ம கிழ்ந்தாடினன் மன்றற்சிறு கானம் (௯)

2890. வழங்குங்கலை மகள்காதலின் வளர்கின்றவெண் டோட்டுச்
செழும்பங்கய மலர்போலவுஞ் செங்தேனுகர் வரிவண்
டுழும்வண்டுள வணிவோன்கரத் தொளிர்வால்வளை யெனவும்
எழுந்தங்கதிர் மதியேர்பெற விறுத்தந்தது கூதிர். (௧௦)

2891. தண்டோட்டினர் விரிகற்பகத் தழைகொய்தழி கவுள்வீழ்
வண்டோட்டிய களிறெட்டொடு வரைதாங்கிய கடற்பார்

2888. விசும்பு, கதிரையும், மின்னுடன் விளையாடும் புயலையும் தழுவ நின்று பொலி வுற்ற தோற்றம்; விசும்பு - ஆகாயம். கதிர் - சூரியன். புயல் - மேகம். உயர் வற உயர்ந்த நலன் உற்ற பொருள் - பரம் பொருளாகிய திருமால்; "உயர்வற வுயர் நல முடையவ னெவனவன்" (திருவாய்.) பொருள் இயலும் குணத்தை மணப்புற விளங்குதலை; மணப்புற - கலந்திட. தோற்றம் கடுக்கும்; கடுக்கும் - ஒக்கும்.

2889. காரினில் - கார் காலத்தில். ஈற்று ஆவினம் - ஈனுதலை யுடைய பசுக் கூட்டம். மேயா - மேய்த்து. குன்றுகளைச் சேர்ந்து. அயிலா - உண்டு. பை - படம். அராவோடு எறி பாலாழி - பாம்போடு மோதுகின்ற பாற்கடலை. முல்லைக் கானத்திற்குப் பாற்கடல் உவமை.

2890. கலையை வழங்கும் மகள் - சரசுவதி. காதலின் - அன்பால். துள வணிவோன் - திருமாலின். வால்வளை - வெண்மையான சங்கம். எழுந்து அம் கதிரையுடைய மதி ஏர் பெறும்படி; அம் - அழகு. ஏர் - எழுச்சி. கூதிர் இறுத்தந்தது - குளிர் காலம் வந்துவிட்டது; "இறுத்தந்த மருண் மாலை" (கலி. 138 : 8 ; 148 : 8. )

2891. தோடு - இதழ். இணர் - கொத்து. அழி கவுள் வீழ் வண்டு - மதம் ஒழுகுகின்ற கன்னத்திலே படிகின்ற வண்டுகளை. தழையைக் கொய்து வண்டுகளை ஓட்டிய களிறு எட்டு; எட்டுத்திசை யானைகள், களிறும், வரை

உண்டோட்டறு பொன்னந்துகி லுடுத்தோனெனத் திகழ்கார்
வெண்டோட்டிளம் பனைமீமிசை யுயர்த்தோனென விளர்த்த. (கக)

2892 ஒள்வாளுமிழ் திகிரிப்படை யுரவோனடம் புரியும்
முள்வாளெயிற் றரவம்மென முகிழ்விண்டன காந்தள்
கள்வாய்மடுத் திளவண்டினங் கனலத்துணர் விரியாப்
புள்வாய்கிழித் தவனுமெனப் பொலிவுற்றன பூவை. (கஉ)

2893. வந்தாதவ னிளஞ்செங்கதிர் வருடத்தளை யவிழும்
செந்தாமரை மலர்நின்றுதண் டேன்சிந்திய தோற்றம்
அந்தாமரைக் கண்ணன்மல ரடிநின்றலை புரட்டும்
மந்தாகினி பெருகிப்பொழி தருகின்றது மானும். (கங)

2894. இத்தன்மைய தண்கூதிரி னின்தீங்குழ லிசையா
அத்தன்புனிற் றுமேய்ப்பதற் கலர்கானகம் படர்ந்தான்
மொய்த்தஞ்சிறை வரிவண்டின முருகுண்டிசை பயில்பூங்
கொத்துங்குறு முறியுஞ்சில கொய்தான்குழல் புனைந்தான்.(கச)

---

யும் தாங்கிய பாரை உண்டு; பார் - பூமி. ஒட்டறு பொன் - குற்றமற்ற பொன். பனை மீமிசை உயர்த்தோனென - பனையைக் கொடியிலே உயர்த்திய பலராமனைப் போல. விளர்த்த - வெளுத்தன.

2892. திகிரிப்படை உரவோன் - கண்ணபிரான்; திகிரிப்படையை யுடைய உயர்ந்தவன் எனலுமாம். அரவம் எனக் காந்தள் முகிழ் விண்டன - பாம்பைப் போலக் காந்தட் பூவின் அரும்பு அவிழ்ந்தன; "அணர்த்தெழு பாம்பின் றலைபோற் புணர்க் கோடல், பூங்குலை யீன்ற புறவு" (கார். 11); "பூங்கோட லோடி - யுருமுற்ற, வைந்தலை நாகம் புரையும்" (திணை மாலை. 107); "கையென மலர வேண்டி யரும்பிய காந்த ணேக்கிப், பையரா வெதுவென் றஞ்சிப் படைக்கண்கள் புதைக்கின் றாரும்" (கம்ப. வரைக் காட்சி. 53.) கள் - தேனை. கனல - நெருங்க. விரியா - விரிந்து. பூவை புள்ளின் வாய் கிழித்தவனுமெனப் பொலிவுற்றன; பூவை - காயா. புள் - பகாசுரன். கிழித்தவன் - கண்ணபிரான்.

2893. ஆதவன் - சூரியன். செங்கதிர் - சிவந்த கிரணம். வருட - வருடுதலால். தளை - கட்டு. மந்தாகினி - கங்கை. மானும் - ஒக்கும். தாமரை தேன் சிந்திய தோற்றம், கண்ணன் அடியில் மந்தாகினி பெருகிப் பொழிவதை மானும்.

(பி - ம்.) 1. செங்காம்.

2894. கூதிரில் - குளிர் காலத்தில். இனிய தீங்குழலை இசைத்து; குழல் - வேய்ங்குழல். அத்தன் - கண்ணபிரான். புனிற்று ஆ - ஈன்ற அணிமையை யுடைய பசுக்களை. கானகம் - காட்டிற்கு. அம் சிறை - உள்ளே சிறகை யுடைய. முருகு - தேன். இசை பயில்கின்ற பூங் கொத்து. குறுமுறி - சிறிய தளிர். குழலில் புனைந்தான்.

2895. கதிராயிரம் பொழியாதவன் காய்வெஞ்சினந் திருகும்
முதுவேனிலின் முளிபாதவ முகில்பெய்தலிற் றளிராப்
புதுநாண்மலர் துளவப்புயல் புனையத்தா லந்தண்
மதுநாண்மலர் தளிர்பாதவ மழைக்கீவன மானும். (கரு)

கலிவிருத்தம்

2896. மோடுடை நெட்டிலை முடவெண் டாழையந்
தோடுடை நறுமலர் தோன்றல் கொய்வது
பாடுடை நெடுமடற் பனைக்கை வேழவெண்
கோடடி பிடுங்கிய கோலங் காட்டுமே. (கசு)

2897. தளிர்க்கவின் கவற்றிய தடக்கை போகுயர்
நளிச்சினை மலர்கொள நம்பி நீட்டுதல்
களிச்சுரும் பாற்றுபூங் கற்ப கங்கொள
வளைக்கா நீட்டிய வண்ணங் காட்டுமே. (கஎ)

---

2895. ஆயிரம் - அனந்த வாசி. ஆதவன் - சூரியன். சினம் திருகும் - கோபம் மாறுபடுகின்ற. முது வேனிலில் முளிபாதவம் - முது வேனிலால் உலர்ந்த மரங்கள். முகில் - மேகம். தளிரா - தளிர்த்து. துளவப் புயல் புனையும் படி தருதல் ; துளவப் புயல் - கண்ண பிரான். பாதவம் மழைக்குத் தளிரையும் மலரையும் ஈவனவற்றை மானும் ; பாதவம் - மரம். மழை - மேகம். மானும் - ஒக்கும். கண்ண பிரானுக்கு மேகம் உவமை ; "வேனில் வெயிற்குலர்ந்த மெய்வறுமை கண்டிரங்கி" (தண்டி. மேற். சூத்-56.)

2896. மோடு - பெருமை. நெட்டிலை முட வெண்டாழை - நீண்ட இலையை யுடைய வளைந்த வெண்மையான தாழை. தோன்றல் - கண்ண பிரான். பாடுடை - பெருமை யுடைய. வேழம் - ஈண்டுக் குவலயா பீடம். கோலம் - உருவத்தை. தாழை மலரைத் தோன்றல் கொய்வது , வேழத்தின் கோட்டைப் பிடுங்கிய கோலத்தைக் காட்டும். தாழை மலருக்கு யானைத் தந் தம் உவமை.

(பி - ம்.) 4. கோலம் போன் மரோ.

2897 கவின் - அழகை. கவற்றிய - வருத்திய. தடக்கை - அகனற கை. போகுயர் - மிக உயர்ந்த. நளி - பெருமை. சினைமலர் - கோட்டுப் பூ. நம்பி - கண்ண பிரான். சுரும்பு - வண்டு. வளையை யுடைய கரம் ; வளை - சங்கு ; தோள் வளை எனலுமாம். நம்பி மலரைக் கொள்ளுதற்குத் தடக்கையை நீட்டுதல் கற்பகத்தைக் கொள்ளுதற்கு வளைக் கரத்தை நீட்டிய வண்ணத்தைக் காட்டும்.

(பி -ம்.) வண்ணம் மானுமே.

2898. அலங்கொளி மணிதெளித் தன்ன பைஞ்சுனை
நலங்கொள்வெண் டாமரை நம்பி கொய்வது
பொலந்தருக் கவர்ந்தநாட் புகுநி லாப்பொழி
வலம்புரி வாங்கிய வண்ணங் காட்டுமே. (கஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

2899. குருந்தமென் கண்ணி சூடுங் கோவலர் கொழுந்து செய்ய
அரும்பவிழ் காந்தள் கொய்வ தாடிய குரவைக் கண்ணே
முருந்தொடு முல்லை சாய்த்த முகிழ்நகை யாயர் மாதர்
திருந்துபொற் றொடிசூ ழங்கை செங்கையாற் றொடுதல் போலும்.(கக)

2900. எழில்வளர் செம்பொன் மார்ப னின்னணஞ் செவ்வி வாய்ப்பக்
கழைவளர் வரைச்சா ரெல்லாங் களிற்றிளங் கன்று போன்றும்
மழைவளர் கான மெல்லா மழவிடை போன்றுந் தோன்றிக்
கொழுமுகை யவிழ்மென் போது கொய்தனன் மிலைந்தான் மன்னோ. ()

---

2898. மணி தெளித்தன்ன பைஞ்சுனை - பளிங்கைக் கரைத்தாற் போன்ற நீரை யுடைய பசுமையான சுனையில்; "வண்ண மாச்சுனை மாநீர் தெளித்தனையது" (சீவக. 1566, ந.) நம்பி - கண்ண பிரான். பொலந்தரு கவர்ந்த நாள் - பொன்னு லாகிய கற்பகத் தருவைக் கவர்ந்து வந்த நாளில். வலம்புரி - சங்கம். நம்பி சுனையிலுள்ள வெண்டாமரையைக் கொய்வது, வலம்புரி வாங்கிய வண்ணத்தைக் காட்டும்.

2899. கண்ணி - தலையிலணியும் மாலை. கோவலர் கொழுந்து - கண்ணபிரான். குரவைக்கு - குரவைக் கூத்துக்கு. முருந்தொடு முல்லை சாய்த்த முகிழ் நகை - மயிற் பீலியின் அடிக்குருத்தையும் முல்லை யரும்பையும் தன் அழகால் கெடுத்த அரும்பிய பற்களையுடைய. கோவலர் கொழுந்து காந்தளைக் கொய்வது, குரவைக்கண், ஆயர் மாதராது அங்கையைத் தன் செங்கையாற் றொடுதல் போன்றுள்ளது.

(பி - ம்.) 2. குரவைக் கந்தண். 4. சூழ்கையிற் தேமலர் தொடுத்தல் போலும்.

2900. மார்பன் - கண்ண பிரான். செவ்வி வாய்ப்ப - அழகு பொருந்த. கழை - மூங்கில். வரைச்சார் - மலைப் பக்கம். மழை - மேகம். கானம் - முல்லை நிலம். மழ விடை - இளைய காளை. முகை - மொட்டு. போது - மலரும் பருவத் தரும்பு. மிலைந்தான் - சூடினான்.

சந்தக்கலி விருத்தம்.

2901. மழலைவண் டிசைமுரல வணர்பசுந் தெரியன்மது
ஒழுகநின் றுயர்வரையு முருகநுண் டொளைகடொறும்
அழிபசுந் தளிநறவ வமுதமுங் குமிழியெழ
எழுதரும் புயல்கழையி னிசைநவின் றனனினிதின். (உக)

2902. படுமரன் களுநறிய பசியதண் டளிர்தழைய
அடைவுறுங் கழையினிசை யமுதமஞ் செவிநிறைய
இடைமடந் தையர்களிஞ் சி யிடையிளங் கொடியொசிய
மடவனம் பொருவமலர் வனமடைந் தனர்குழுமி. (உஉ)

2903. மருவிரிந் தொழுகுகுழன் மழையெனும் படிசரிய
இருவிசும் பொருவியெழு மிசையினெஞ் சகமுருகி
முரிதடந் திரையமுது முனிவுகொண் டணுகினர்கள்
அருமருந் தனையமொழி யரமடந் தையரடைய. (உங)

கலிவிருத்தம்.

2904. மழையெனம தங்கலுழு மாவுமரி யேறும்
உழுவையுமு ழைக்குலமு மொன்றியின மென்னக்

---

2901. மழலை வண்டு - இளஞ் சொல்லை யுடைய வண்டு; "மழலை வண்டுழல" (சீவக. 1503.) வணர் - வளைந்த. தெரியல் - மாலை: மது - தேன். தொளைகள் - வேய்ங்குழலின் துவாரங்கள். அழிபசுந்துளி நறவம் - ஒழுகுகின்ற பசுமையான துளியை யுடைய தேன். எழுதரும் புயல் - எழுது தற்கரிய உருவத்தை யுடைய கண்ண பிரான். இனிதின் கழையினிசை நவின்றனன்; கழையினிசை - வேய்ங்குழலின் ஒலியை.

2902. படுமரன்கள் - பட்டுப் போன மரங்கள். நறிய - வாசனையை யுடைய. கழையின் இசையாகிய அமுதம் செவியில் நிறைய; கழை - வேய்ங் குழல். மடந்தையர்களின் இடை இளங் கொடியைப் போல் ஒசிய; ஒசிய - துவள. மடவனம் பொருவ - இளைய அன்னத்தை ஒப்ப. குழுமி வனம் அடைந்தனர்.

2903. மரு - வாசனை. குழல் - கூந்தல். மழை - மேகம். விசும்பை ஒருவி; ஒருவி - நீங்கி. அமுதில் முனிவு கொண்டு; அமுது - அமிர்தம். முனிவு - வெறுப்பு. அரமடந்தையர் அடைய - தெய்வ மகளிர் எல்லாம்.

2904. கலுழும் - ஒழுகுகின்ற. மா - யானை. அரியேறு-ஆண் சிங்கம். உழுவை - புலி. உழைக் குலம் - மான் கூட்டம். ஒன்றி - சேர்ந்து. கழை - வேய்ங் குழல். களிறன்னவன் - கண்ண பிரான். இசையை ஓர்ந்து எழுது

கழையினொடு நின்றகளி றன்னவனை நோக்கி
எழுதுருவு போன்றுருகி நின்றவிசை யோர்ந்தே. (உச)

2905. மாமறைமு தற்பொருள் வடித்தவிசை கேளா
காமர்நதி யாவுமுயர் கங்கையென லாகித்
தேமருவு தாமரைதி ரைக்கைகொடு சிந்தித்
தாமரைம ருட்டுமிறை தாண்மலர்த வழ்ந்த. (உரு)

2906. பைத்தவர வத்துவளர் பச்சைமுகில் செவ்வாய்
வைத்தகழை யேழ்தொளையும் வாரியமு தூரித்
தத்தவெழு மின்னிசைத லைப்படமு ழங்காப்
புத்தமுத நுண்டுளிபொ ழிந்தபுய லெல்லாம். (உசா)

2907. அஞ்சுவை பழுத்தவிசை யஞ்சனநி றத்தோர்
மஞ்சமுது பெய்வதென மாதவ னிசைப்ப
வெஞ்சுடர் பனிக்கதிர் விரித்ததழல் வெவ்வாய்
நஞ்சுபொழி வாளரவு நல்லமு துகுத்த. (உஎ)

---

ருவைப் போன்று உருகி நின்றன. ஓர்ந்து - உற்றுக்கேட்டு. எழுது உரு - சித்திரத்தில் எழுதிய வடிவம்; "கடம்புலிக ளயர்ந்து சித்ர காயமென்னும் பெயர் விளக்க.. ...தொனித்தகுழ லிசைத்தோய் கேள்" (அழகர் கலம். 1).

2905. முதற் பொருள் - கண்ணபிரான். வடித்த - பயிற்றிய. கேளா - கேட்டு. தேமருவு - தேன் பொருந்திய. தாமரையை யுடைய திரையாகிய கையால். இறை தாள் மலர் - கண்ணபிரா னுடைய பாத மாகிய தாமரையில். நதியாவும் தவழ்ந்த. தாண் மலரில் தவழ்தலால் மற்ற நதிகளும் கங்கை யாயின.

2906. பைத்த - படம் விரித்த. முகில் - கண்ணபிரான். வாயில் வைத்த கழையினது; கழை - வேய்ங்குழல். தொளை - துளை. தலைப்பட - தோன்ற. வாரி அமுது - கடலில் தோன்றிய அமுது. முழங்கா - முழங்கி. புயலெல்லாம் முழங்கி அமுத மாகிய துளியைப் பொழிந்த; புயல் - மேகம்.

2907. பழுத்த - முற்றிய. அஞ்சன நிறத்து மஞ்சு அமுது பெய்வ தென மாதவன் இசையை இசைப்ப. அஞ்சனம் - கருமை. மஞ்சு - மேகம். வெஞ்சுடர் - சூரியன். பனிக்கதிர் - குளிர்ச்சி பொருந்திய கிரணத்தை. அழல் போலும் வாயில் நஞ்சைப் பொழிகின்ற அரவு அமுகத்தை உகுத்த. உகுத்த - சொரிந்தன.

2908. பூவின்வரு நான்முகன் புணர்ந்துமகிழ் மாது
நாவின்மிசை நீத்துநட னன்குநவி லுற்றாள்
காவினறு நீழலமர் காவல னெடுங்கண்
தூவின கொழுந்தளி தொளைக்கணிசை கேட்டே. (உஅ)

2909. மங்கையொரு பாகனுள மலியுவகை நன்னீர்
பொங்கியழ னீள்விழி புணர்ந்தவிய வார
அங்கமிசை சூடரவ யாடலயர் வுற்ற
சிங்கலில்ப ரன்கழைதெ ரித்தவிசை யோர்ந்தே. (உகூ)

கலிநிலைத்துறை.

2910. தெறித்த கன்றுவாய் வைத்தவம் முலையுணு திரண்டு
கறித்த புல்லுணு கறவைபூங் கற்பகச் செங்கேழ்
முறிக்கொ ழுங்கவின் கவற்றிய முகிணகைச் செவ்வாய்
மறைக்கொ ழுந்தின்வே யின்னிசை யஞ்செவி மடுத்தே.(௩௦)

2911. குமரி வண்டுழு துளவினன் குழலிசை கேளாக்
கமல நாண்முகை கடந்தசெங் கைம்மலர் முகிழாத்

---

2908. மாது - சரசுவதி. நாவின்மிசை நீத்து - பிரமனுடைய நாவி டத்தை விட்டு அகன்று. கண்ணபிரானிடம் நடம் நவிலுகின்றாள். காவின் - சோலையின். காவலனுடைய நெடுங்கண். தொளைக் கண்ணின் இசையைக் கேட்டுக் கொழுந்தளி தூவின ; காவலன்-சோலைக்குக் காவலனான இந்திரன். தளி - துளி.

2909. மங்கை ஒரு பாகன் - சிவபெருமான். உளத்தில் மலிந்த உவகை நீர் பொங்கி அழல் விழியில் புணர்ந்து அவிய ; அழல் விழி - நெற்றிக் கண். புணர்தல் - கலத்தல். வார - ஒழுக. அங்கமிசை - மாலையையுடைய அங்கங்களின் மேல். அரவம் ஆடுதலை அயர்வுற்ற ; அயர்வுற்ற - செய்தன. சிங்கல் இல் - குறைதல் இல்லாத. பரன் - கண்ணபிரான். ஆர்ந்து அயர் வுற்ற.

2910. தெறித்த கன்று - துள்ளிய கன்று. முலையை உணு ; உணு - உண்ணுதவாயின. திரண்டு - ஒன்று சேர்ந்து. கறவை கறித்த புல் உணு - பசுக்கள் கடித்த புல்லை உண்ணுவாயின. செங்கேழ் - சிவந்த நிறம். முறி - தளிரின். கவற்றிய - வருத்திய. முகிழ் நகை - தோன்றிய பற்களையுடைய. மறைக் கொழுந்து - கண்ணபிரான் ; 2744. இசையைச் செவி மடுத்து உணு, என்க.

2911. குமரி வண்டு - இளைய வண்டு ; 2901. துளவினன் - கண்ண பிரானுடைய. கேளா - கேட்டு. முகிழா - முகிழ்த்து - குவித்து. தமனி

தமனி யப்பசுந் தார்முடி வணங்கின ரிமையோர்
அமிழ்து ணுத்தரு ஞான்றினு மகமகிழ்ந் தனரால். (௯௧)

2912. வட்ட வாயழற் றிகிரியான் வடித்தவே யிசையால்
பட்ட பாதவந் தளிர்ப்பவும் பச்சிளந் தென்றல்
சுட்ட சூடுற வெதும்புமத் துடியிடை மடவார்
கட்டு மின்றளிர்க் கண்ணிகள் வாடின கரிந்த. (௯௨)

2913. பழுத்த வேயிசை பரஞ்சுடர் தெரிதரப் பசுங்கார்
கிழித்த பொன்னெடுங் கிரிவளர் குங்குமங் குழைத்த
குழைத்த குங்குமங் கரிந்தன குழைபொரு தலைக்கும்
மழைக்கட் கோவியர் வளரிள வளமுலைக் குவட்டில். (௯௩)

2914. வேரி யந்துழாய்ப் படலையான் வேயிசை நவில
மாரி பெற்றென மரனெலாங் குளிர்ப்பவு மலயச்
சாரன் மன்னுசெஞ் சாந்துவெண் டளவரும் பன்ன
கூரெ யிற்றிளங் கோவியர்க் கனலெனக் கொதித்த. (௯௪)

2915. கலவ மாமயி லெருத்துறழ் கண்ணன்வே யிசையால்
புலியு மானுமோ ரினமெனப் புகுந்தன வேனும்

---

யம் - பொன். இமையோர் - தேவர். அமிழ்து உண தரும் ஞான்றினும்; அமிர்த மாகிய உணவைத் தந்த அன்றைப் பொழுதைக் காட்டிலும்.

2912. திகிரியான் - கண்ணபிரான். வடித்த - இசைத்த. பட்ட பாதவம் - பட்டுப் போன மரங்கள். மடவார் - ஆய்ச்சியர். கண்ணிகள் - மாலைகள். குழலிசையால் காமங் கொண்டு தென்றல் வருத்த நின்ற மடவார் கட்டிய கண்ணிகள் வாடியவாய்க் கரிந்தன.

2913. இசையைப் பரஞ்சுடர் தெரிதர. பரஞ்சுடர் - கண்ணபிரான். தெரிதர - உண்டாக்க. கார் - மேகம். கிரியில் வளர்கின்ற. குங்குமம் குழைத்த - குங்கும மரங்கள் தளிர்ந்தன. கோவியருடைய முலைக்குவட்டில் குழைத்த குங்கமும் கரிந்தன; குழைத்த குங்குமம் - வாசனைப் பொருள்களைச் சேர்த்துக் கலந்த குங்குமச் சாந்து. கோவியாது காமத்தால் கரிந்தன.

(பி. - ம்.) 1. தெரிப்பவான். 4. குவடு.

2914. வேரி - தேன். துழாய்ப் படலையான் - கண்ணபிரான். இசையை நவிலுதலால். மாரி பெற்றென - மழையைப் பெற்றாற் போல. மலயச் சாரல் - பொதிய மலையின் சாரலில். சாந்து - சந்தனக் குழம்பு. தளவு அரும்பு - முல்லையின் அரும்பு; பற்களுக்கு உவமை. கோவியர்க்குச் சாந்து அனலைப் போலக் கொதித்த.

2915. கலவ மாமயில் எருத்து உறழ் கண்ணன் - தோகையை யுடைய மயிலின் கழுத்தை ஒத்த நீல நிறமுடைய கண்ணபிரான். வாய் மலரும் முல்

அலர்ச லாவிய வசைநடைத் தென்றலம் புலிவாய்
மலரு முல்லையங் கருங்குழன் மானொடு மறலும் (௩௫)

2916. மதம்பெய் மாமருப் பொசித்தவன் மணிக்கழை யிசையால்
வெதும்பு வெங்கதிர் வெம்மையிற் றீரவும் பசும்பொன்
துதைந்த போலுமஞ் சுணங்கணி முலையினர்க் கமுதம்
ததும்பு திங்களந் தண்கதிர் தழலெனக் கனலும். (௩௬)

2917. கஞ்ச நாண்மலர்க் கண்ணினன் கழையிசை கேட்ட
அஞ்செ விக்கெலா மஞ்சிறைக் குயிலிசை யழன்ற
நஞ்செ னத்தகு நாகிளம் பிறைநுதல் பசந்த
வஞ்சி நுண்ணிடை மடந்தையர்க் கென்கொலா மதிக்கின். ()

2918. பாந்தண் மேற்றுயில் பசும்புயல் பவளவா யமுதம்
மாந்த வெத்தவம் புரிந்ததிம் மணிக்கழை யென்னு
ஏந்து கோட்டிள வளமுலைக் கோவிய ரேக்கற்
றாய்ந்த வந்துணர் வல்லியிற் குழைந்தன ரயர்ந்தார். (௩௮)

---

லையையுடைய கருங்குழல் மான் கோவியர். தென்றலாகிய புலி. 'தென்றற் புலி': (கம்ப. கடிமணப். 7.) தென்றற்புலி மானொடு மறலும்; மானென்றது ஆயர் மகளிரை; மறலும் - போர் செய்யும்.

2916. மதம் பெய்கின்ற மாவின் மருப்பை ஒசித்தவன் - கண்ண பிரான்; மா - குவலயாபீடம் என்னும் யானை. வெங்கதிர் வெம்மையின் தீரவும் - சூரியன் தன் வெப்பத்தினின்றும் நீங்கவும். துதைந்த - நெருங்கிய. அம் சுணங்கு - அழகிய தேமல். முலையினர்க்கு - கோவியர்க்கு. முலையினார்க்குக் கழையிசையால் உண்டாகிய விரகதாபத்தால் திங்களின் கதிர் தழலெனக் கனலும்.

2917. கஞ்சம் - தாமரை. கண்ணினன் - கண்ணபிரான். கழையின் இசையைக் கேட்ட செவிக்கெல்லாம் குயிலின் இசை சுடுதலைச் செய்யும் நஞ்சென்று சொல்லத் தகும். நாகு இளம் பிறை - மிக்க இளமையை யுடைய பிறைச் சந்திரன் போன்ற. மடந்தையர்க்கு - கோவியர்க்கு. என்கொலாம் - கழையிசை என்ன வாகும். மதிக்கின் - ஆராய்ந்து பார்த்தால்.

2918. பாந்தள் - ஆதிசேடன். புயல் - கண்ணபிரானுடைய. வாயின் அமுதத்தை மாந்தக் கழை எத்தவம் புரிந்தது என்னு; கழை - வேய்ங்குழல். என்னு - என்று கூறி. ஏந்து - உயர்ந்த. ஏக்கற்று - யாம் இது பெற்றிலேமே என்று வருந்தி. ஆய்ந்த - மெலிந்த. வல்லியின் - கொடியைப் போல. கோவியர் குழைந்து அயர்ந்தார்; அயர்ந்தார் - செயலற்றார்.

# 9. கோவியர் துகில் கவர்ந்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

2919. செழுந்து ழாய்முகி றீங்குழ லிசையினு லுருகிக்
குழைந்த கோவியர் குவிமுலை வெதும்பவிற் காமன்
பொழிந்த வெங்கணை முகத்தெழு பூம்புகைப் படலம்
தழைந்த தாமென வெழுந்தது தண்பனிப் பம்மல். (க)

2920. பாட்டு வண்டிமிர் துளவினுன் பசுங்கழை யிசைப்பக்
கேட்டு மாலுறு கிளிமொழிக் கன்னியர் வதனம்
தோட்ட தாமரை யென்பது நிலமெலாந் துணிய
வாட்ட முற்றன வருபனி யிறுத்தலு மன்னே. (உ)

2921. ஐய தாமரை யாயிதழ் மலரெலாங் கரியப்
பெய்யு மீர்ம்பனிப் பெருக்கினுல் வெம்மையிற் பெயரா
மைய கூந்தலார் வட்டவா யிரும்பினில் வளர்த்த
செய்ய வாழல் சேயிதழ் முளரியிற் சிறந்த. (ங)

2922. பனிவி ளைத்திடு மென்றுகொல் பட்டவெங் கனலிற்
கனலு மென்றுகொல் காழ்படு காமமுற் றுருகி
இனையு மாயர்தங் கன்னிய ரேந்திளங் கொங்கை
தனிவெண் முத்தமுந் தமிழ்வரைச் சாந்தமுந் தணந்த. (ச)

---

2919. முகில் - கண்ணபிரான். வெதும்ப - வெதும்பா நிற்க. வில்லை யுடைய காமன். கணை - மலரம்பு. தழைந்த தாமென - தழைத்ததைப் போல. பனிப் பம்மல் - மூடுபனி; பம்மல் - மூட்டம்; மந்தாரமென்றும் கூறுவர்.

2920. துளவினுன் - கண்ணபிரான். கழை - வேய்ங்குழல். மாலுறு - மயக்க மடைந்த. கன்னியர் - கோவியர். தோட்ட - இதழையுடைய. நிலம் - நிலத்திலுள்ளவர். துணிய - நிச்சயிக்கும்படி. இறுத்தலும் - வந்தவுடன்.

2921. ஐய - அழகிய. கரியும்படி பெய்யும் பெருக்கினுல். வெம்மை யின் - வெப்பத்தினின்றும். பெயரா - நீங்காமல். வட்டமான வாயை யுடைய இரும்பு; இரும்பு - கணப்புச் சட்டி. அழல் - தீ; "எரியுமிழ்பேழ் வாய்த்தோணி யிரும்பீர்ப்பா ரிடையெல்லாம்" (பெரிய. திருஞான: 333). முளரியின் - தாமரையைக் காட்டிலும்; நெருப்புக்குத் தாமரை உவமை.

2922. பனி - குளிர்ச்சியை. கனலின் - தீயைப் போல். காழ்படு - வயிரங் கொண்ட. காமத்தை உற்று உருகி. இனையும் - வருந்துகின்ற. கொங்கையை முத்தமும் சாந்தமும் தணந்த; தணந்த - நீங்கின.

2923. பனியும் வீங்கிரும் பனிபொறுப் பரிதென வெய்ய
கனல்வி ழுங்கிமெய் கனன்றுவீழ் திறத்தின்மற் றன்றே
நனிக ரிந்தன நளிபனி தவழ்தாக் கொழுந்தீம்
புனற வழ்ந்தெனப் பொதிந்தசெந் தாமரைப் போது. (ரு)

2924. இன்ன தண்பனிப் பருவநல் லிளநறு வொழுத
கன்னி யந்துழாய்க் கண்ணனெங் கணவ னுகென்ன
அன்ன மென்னடை யாயர்தங் கன்னியர் நோற்றூர்
மன்னு வெம்பனி மால்வரைக் கன்னியைத் தொழுதே. (சு)

2925. பனிநி லாக்கதிர் பரப்பிய முத்தவெண் மணலால்
பனிவ ரைக்கொடி திருவுருப் பாற்பட வகுத்துப்
பனிம லர்த்தொடை சூட்டியும் பரவியு நோற்றும்
பனியி றப்பினிற் படர்புன லாடுவான் படர்ந்தார். (எ)

2926. தண்ணந் தாமரை தாளிருந் தடக்கையு முகமும்
கண் ணுங் காட்டலிற் கண்ணனிற் றிகழ்தரு நீல
வண்ண வார்புனல் யமுனையிற் படிந்தனர் வரிவண்
டுண்டு வின்னறு வூற்றிருந் தொழுகுபூங் குழலார். (அ)

2927. குரவ மெல்லரும் பன்னவெங் கூரெயிற் றரவின்
உரிவை யன்னவா னுண்டுகி லொலிபுன லாற்றங்

2923. பனியும் - பனிக்காலமும். பனி - குளிர்ச்சியை. தாமரைப் போது, பனி தவழ்தா நனி கரிந்தன. பனிக்குத் துகில் உவமை.

2924. பனிப் பருவத்தில். நறு - தேன். கன்னி - இளமை. கன்னியர், பனிவரைக் கன்னியைத் தொழுது கண்ணன் எம் கணவன் ஆக என்ன நோற்றூர்; கன்னியர் - ஆய்ச்சியர். மன்னு - ஊழியிலும் அழியாது நிலைபெற்ற. பனிவரைக் கன்னி - இமய மலையிலுள்ள துர்க்கையை.

2925. முத்த வெண் மணல், "முத்த வார் மணல்" (சீவக. 1037). பனிவரைக் கொடியின் திருவுருவைப் பாற்பட வகுத்து; கொடி - துர்க்கை. பாற்பட - பகுதிப்பட. தொடை - மாலை. பரவியும் - புகழ்ந்தும். பனி இறப்பினில் - பனிக் காலத்தின் முடிவில். படர்ந்தார் - சென்றூர்.

2926. இரு தாள்களையும், தடக்கைகளையும் முகத்தையும் கண்களையும் தாமரை காட்டுதலின் கண்ணனைப் போல் திகழ்தரும் யமுனையிற் படிந்தனர். நீல வண்ணத்தை யுடைய புனலைக் கொண்ட யமுனை. நறு - தேன். குழலார் - ஆய்ச்சியர்; எழுவாய்.

2927. குரவத்தின் அரும்பு அரவின் எயிற்றுக்கு உவமை; "அர வெயிற்றன்ன வரும்பு முதிர் குரவின்" (அக நா. 237 : 3); "அரவின் வாயின் முள்ளெயி றேய்ப்ப வரும்பீன்று, குரவம் பாவை முருகமர் சோலைக்

கரையின் வைத்தனர் கமழலந் தண்டுறை கமழ
விரையொ டந்துவர் மெய்துவர்ந் தாடினர் மன்னோ. (கூ)

2928. அருப்ப நாண்மலர்த் தொடைபரிந் தாடிய வெல்லைக்
கரைக்கு றும்பெறி யமுனையந் திரையொடு களிவண்
டிரைக்கு முல்லையங் கோதைய ரிடைநெரித் திருண்ட
விரைக்க ருங்குழல் வேற்றுமை தெரிந்தில மாதோ. (கo)

2929. சுண்ண மாடிய துணைமுலைக் கன்னியர் படிய
நண்ணு பன்மலர் நாற்றமு நரந்தமுங் கமழ்ந்து
வண்ண மன்றியு மொத்தன வணரிருங் கூந்தல்
தண்ணந் தீம்புனல் பெருகிய யமுனையந் தரங்கம். (கக)

2930. திங்கள் வாணுதற் கன்னியர் தேனவாங் கூந்தற்
கொங்கு விம்முறு சூடுமுகை முல்லைமெல் லிணரும்
பொங்கு மல்லிகை விரியல்வெண் டோடுமேற் போர்த்துக்
கங்கை யொத்தது கல்லென முழங்குகா ளிந்தி. (கஉ)

---

குற்றாலம்" (தே. திருஞா). அரவின் உரிவை யன்ன வால் நுண் துகில் - பாம்பின் தோலைப் போன்ற வெண்மையான நுண்ணிய ஆடைகளை ; "அரவுரி யன்ன வறுவை" (பொரு நா. 83) ; "பாப்புரி யன்ன மீக்கொடானை" (பெருங். 1. 43 : 244). துகிலை வைத்தனராய் ஆடினர். துறை கமழும்படி விரையையும் துவரையும் மெய்யில் துவர்ந்து ஆடினர் ; விரை - வாசனை. துவர் - பத்துத் துவர் ; (சிலப். 6 : 76). துவர்ந்தனர் - பூசினராய்.

2928. அருப்பு - அரும்பு. தொடை - மாலை. பரிந்து - அறுத்து. திரை - அலையில். இரைக்கும் - ஒலிக்கின்ற. கோதையர் - ஆய்ச்சியர். இடைநெரித்து - இடையை வருத்தி. விரை - வாசனை. யமுனையின் நிறம் கருமையானமையால், கூந்தலுக்கும் அலைக்கும் வேற்றுமை தெரிந்திலது.

2929. சுண்ணம் - வாசனைப் பொடி. துணை - இரண்டு. படிய - நீரில் மூழ்குதலால். நரந்தம் - நாரத்தப் பூவின் வாசனை. வண்ணம் - நிறம். வணர் - வளைவு. தாங்கம் - அலை. வண்ண மன்றியும் - நிறத்தால் மட்டும் அல்லாமல், வாசனையாலும் கூந்தலை ஒத்தன.

2930. கன்னியர் - ஆய்ச்சியருடைய. கொங்கு - வாசனை. கூந்தலிற் சூடிய முல்லையின் இணர் ; இணர் - கொத்து. விரியல் - விரிதலையுடைய. தோடு - இதழ். வெண்மை நிறத்தால் காளிந்தி கங்கையை ஒத்தது ; காளிந்தி - யமுனை.

2931. யாணர்க் கோங்கின்மென் முகிழ்முலை யெழுதுகுங் குமமும்
வாணி லாமதி முகத்தியர் வாரொலி கூந்தற்
காண மாகிய வாய்மலர்ச் சுண்ணமு மளாவிச்
சோணை யாற்றையு நிகர்த்தது தொல்லைநீர் யமுனை. (கந)

2932. தெளிவி சும்புலாங் கதிரவன் றிருமக ளென்னு
அளவ ளாய்த்திக ழம்புய நறுமலர் கடுத்த
நளித டந்திரை யமுனைமா நதிப்படிந் தெழுந்த
முளையெ யிற்றிளங் கன்னியர் முழுமதி வதனம். (கச)

2933. களிக்க ருங்கய லன்னகட் கடைசிவப் பூரக்
குளிக்கு மேழையர் குங்குமக் குவிமுலை வளாகம்
கிளைக்குந் தாமரைக் கேழ்கிளர் நறுமலர் மணத்தல்
திளைத்தல் போன்றன செழுந்துழாய்க் கருமுகில் செங்கை. ()

2934. கற்றை வார்குழற் கன்னியர் கதிரிளங் கொங்கை
முற்றந் தோய்தரு முழுநெரிக் குவளையம் பசுந்தோ
டுற்ற கண்ணன தொள்ளொளி நிறனுமுண் ணிறைந்து
பொற்ற மாமையும் புறத்திடைத் தவழ்வது போன்ற. (கரு)

---

2931. யாணர் - புது வருவாய். கோங்கின் முகிழ் போலும் முலை; முகிழ் - அரும்பு. முகத்தியர் - ஆய்ச்சியர். கூந்தற்கு ஆணமாகிய; ஆணம் - பற்றுக்கோடு; (தீவ். திருச்சந். 69.) சுண்ணம் - தாதுக்களாகிய பொடி. சோணையாறு சிவப்பு நிறமுடையது.

2932. தெளிந்த விசும்பில் உலாவுகின்ற கதிரவன். திருமகள் - காளிந்தி. அம்புயம் - தாமரை; தாமரை சூரியனுக்கு மனைவி யென்பது கவி மரபு. கடுத்த - ஒத்தன. நளி - பெருமை. கன்னியரது மதி போன்ற வதனம், அம்புய மலரைக் கடுத்த.

2933. கண்ணின் கடை சிவப்புறும்படி. குளிக்கும் - மூழ்குகின்ற. முலை வளாகம் - முலைப் பரப்பில். கிளைக்கும் - தோன்றும். கேழ் - நிறம். மணத்தல் - கலந்திருத்தல். திளைத்தல் - இடைவிடாது பழகுதல். கரு முகில் - கண்ணபிரான். ஏழையரது முலை வளாகத்தில் தாமரை மலர் மணத் தல் கருமுகில் செங்கை திளைத்தல் போன்றன.

2934. கற்றை - தொகுதி. கன்னியர் - ஆய்ச்சியர். கன்னியர் கொங்கையின் முற்றத்தைத் தோய்ந்த குவளைத் தோடு; முற்றம் - பரப்பு. கண்ணனது நீல நிறம் உள் நிறைந்து மாமை புறத்திடை தவழ்வது போன்ற; பொற்ற மாமை - பொலிவு பெற்ற பொன்னிறம். நிறனும் மாமையும் தவழ் வது போன்ற.

2935. ஆட்டு குங்குமக் கொழுங்களி யளாயசெங் கமலம்
சேட்டி ளங்கதிர் முலையென வொழிந்துவெண் டிங்கள்
காட்டு வாணுதற் கன்னிய ரெழுதுசாந் தழிந்த
மோட்டு வெம்முலை முளரியென் றளிக்குல மொய்த்த. (கஎ)

2936. அமிழ்திற் றோன்றிய வம்மலர்த் திருமக ளேய்ப்ப
இமிழ்தி ரைப்புன லாடுமவ் வின்னகை மடவார்
உமிழ்நி லாத்திகழ் பூந்துகி லொருங்குகைக் கொண்டு
கமழ லந்துறைக் கடம்பின்மே லேறினன் கண்ணன் (கஅ)

2937. ஆவி யந்துகில் வாரின னலர்கடம் பிவர்ந்த
ஆலி யன்னவன் றன்னையவ் வரிவையர் நோக்கிப்
பூவை வண்ணவெம் பூந்துகில் வழங்குதி யென்னுப்
பூவை போல்விளி புத்தமு துகமிழற் றினரால். (கக)

2938. அரவ மாநதி துகிலொழிந் தாடினீ ரதற்குக்
கரையி வர்ந்துநீர் கைதொழத் தருகுது மென்ன
முருகு விம்மிய கோதையர் முகமுக நோக்கி
உருகு காதலு நாணுமீ தூர்ந்தன ரொல்கி. (உ0)

2935. களி - சேறு. கமலம் - தாமரையை. சேடு - பெருமை. ஒழிந்து - நீங்கி. திங்களை ஒப்பாகக் காட்டுகின்ற நுதலையுடைய கன்னியர்; ஆய்ச்சியர். சாந்து - குங்குமச் சாந்தம். மோடு - பெருமை. முளரி - தாமரை. அளிக் குலம் - வண்டுக் கூட்டங்கள். குங்குமக் களி அளாவிய கமலத்தை முலையென ஒழிந்து, கன்னியரது சாந்தழிந்த முலையை முளரி யென்று அளிக்குலம் மொய்த்தன என முடிக்க.

(பி. - ம்.) 4. அளிகுல மொய்ப்ப.

2936. அமிழ்திற் றோன்றிய திருமகள், அம் மலர்த் திருமகள். திரு மகள் ஏய்ப்பப் புனலாடும் மடவார் - ஆய்ச்சியர். நிலாப் போலும் திகழ்கின்ற துகிலை; "நிலவு வெண்கதிர் நீர்மைய பூந்துகில்" (சீவக. 1982.) கடம்பில்- கடம்ப மரத்தில்.

2937. ஆவியந் துகில் - பாலாவி போன்ற ஆடை; "ஆவி யன்ன பூந்துகில்" (சீவக. 67.) ஆவி யன்னவன் றன்னை - கண்ணபிரானை. அரிவை யர் - கோவியர். பூவை வண்ண - கண்ணபிரானுக்கு விளி. பூவை போல் மிழற்றினர்; புத்தமுது உகும்படி மிழற்றினர்.

2938. அரவ மாநதி - ஒலியையுடைய பெரிய நதியில்; அரவம் - பாம்பு எனவுமாம். அதற்கு - அக் குற்றத்திற்காக. கரையில் இவர்ந்து; இவர்ந்து - ஏறி. முருகு - வாசனை. கோதையர் - கோவியர். ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கி. மீதூர்ந்தனர் - மிக்கனர். ஒல்கி - அசைந்து

2939. இருடு ரந்துதாழ் கூந்தலா ரிறங்கிய முகத்தர்
சொரித ரும்புய றுறந்தெழு மின்னென நுடங்கிப்
பரவை யல்குலோர் பங்கயச் செங்கா மறைப்பக்
கரையி வர்க்தொரு கையினுற் றெழுதன ரன்றே. (உக)

2940. ஒருகை யாற்றொழி னேடரித் தடங்கணீர் செங்கை
அரிதல் வேண்டுமென் றஞ்சன வண்ணனின் றுரைப்பக்
குருகி ளங்கொடி மறைந்தனர் சிலர்சிலர் குழைந்து
முருகு விம்மிய மொய்ம்மலர்த் தண்டுறை படிந்தார். (உஉ)

2941. ஏந்து கோட்டல்குன் மறைதா விருள்கனிந் தொழுகும்
கூந்தல் சுற்றியுங் கொய்தழை சுற்றியுங் குளிர்தேன்
பாய்ந்த தாமரைப் பாசடை சுற்றியு மெதிர்ந்து
காந்தண் மென்முகிழ் கவற்றிரு கையினுந் தொழுதார். (உங)

2942. அலர்க்க ருங்குழற் கன்னியர் நுதன்மதி யடைந்து
நலத்த தாமரை நாண்மலர் குவிவது கடுப்ப
மலர்க்கை கூப்பினர் வணங்கலு மறிகட லகடு
கலக்கி யின்னமு தளித்தவ னளித்தனன் கலிங்கம். (உச)

---

2939. இருளைத் துரந்து; துரந்து - ஓட்டி. புயலைத் துறந்து எழு கின்ற மின்னென. நுடங்கி - ஒளி வீசும்படி அடைந்து, அல்குலை ஓர் காம் மறைப்ப ஒரு கையினல் கண்ணபிரானைத் தொழுதனர்.

2940, கண்ணீரைச் செங்கையால் அரிதல் வேண்டும்; அரிதல் - அரித்தல்; "நுரைகை யரிக்குமோர் நுடங்கிடை காண்மின்" (பெருங். 1. 40: 151.) அஞ்சன வண்ணன் - கண்ணபிரான். குருகையுடைய கொடி யில் சிலர் மறைந்தனர்; குருகு - கொக்கு. குழைந்து - மனமுருகி. துறை - நீர்த் துறையில். சிலர் துறையில் படிந்தார்.

2941. ஏந்து கோட்டையும் அல்குலையும் மறையும்படி கூந்தலால் சுற்றி யும் தழையாற் சுற்றியும், பாசடையாற் சுற்றியும்; ஏந்து - உயர்ந்த. கோடு - என்றது தனத்தை. பாசடை - பச்சிலை. எதிர்ந்து - கண்ணபிரானிடம் சென்று. காந்தள் முகிழைக் கவற்றுகின்ற இரு கையினுலும்; கவற்றுதல் - வருத்துதல்.

2942. கன்னியாது நுதலாகிய மதியை அடைந்து தாமரை மலர் குவிவது கடுப்ப மலர்க்கை கூப்பினர்; கடுப்ப - ஒப்ப. கன்னியர் நுதலுக் குப் பிறைச் சந்திரனும், அவரது குவிந்த கைகளுக்குத் தாமரை முகிழும் உவமை. கடல் அகடு - பாற் கடலின் நடு விடத்தை. அமுதளித்தவன் கலிங்கம் அளித்தனன்; கலிங்கம் - ஆடை.

(பி. - ம்.) 1. கன்னிய நுகன்மரி.

2943. மகிழ்ந்து கொண்டவம் மாசிறா சுடைபுனை தோறும்
நெகிழ்ந்து சோர்தா நிற்றலு நேயநோக் குதவி
முகிழ்ந்து வீங்குறும் முலைமுயங் குவனென வகன்ருன்
திகழ்ந்த வால்வளை கொண்டெறி பாற்கடற் சேர்ப்பன். (உரு)



# 10. வேள்விமங்கைய ருணவளித்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

2944. கோழரை நாகமுங் குருந்துங் கொன்றையும்
தாழ்சினை மாவமுந் தழைத்த கானிடைத்
தோழரொ டின்னிரை துரந்து சென்றனன்
ஆழிவாய்த் துயிலொழி யண்ண லென்பவே. (க)

2945. பூந்துணர் முருகுலாம் பொதும்பர் பற்பல
நீந்தின ரிளையவர் நெகிழ்தண் பூங்குலைக்
காந்தளஞ் சாரலி னெய்த்துக் கண்ணனைக்
கூர்ந்தது பசியெனக் குழைந்து போற்றினர். (உ)

---

2943. மாசில் - குற்றமில்லாத. துசு உடை - ஆடை யாகிய உடை; துசு - மேலாடை எனலுமாம். நெகிழ்ந்து - நழுவி. நேயம் - அன்பு. முகிழ்ந்து - அரும்பி. வளை - சங்கு. பாற்கடற் சேர்ப்பன் - பாற்கடலை இடமாக வுடைய கண்ணபிரான்; எழுவாய்.

(பி. - ம்.) 2. நிச்சலு நெகிழ்ந்த நோக்குதவி.

2944. கோழ் அரை நாகம் - கொழுவிய அரையை யுடைய சுரபுன்னை மரம். மாவம் - வெண் கடம்ப மரம். தோழர் - இடைச் சிறுர். நிரை துரந்து - பசுக் கூட்டத்தை ஓட்டி. ஆழி - பாற்கடல். அண்ணல் சென்றனன்; அண்ணல் - கண்ணபிரான்.

2945. பூந்துணரில் முருகு உலாவும் பொதும்பர்; பூந்துணர் - பூங்கொத்து. முருகு - வாசனை. பொதும்பர் - சோலை. பற்பலவற்றை நீந்தினர்; நீந்தினர் - கடந்தனர். இளையவர் - இடைச் சிறுர். எய்த்து - இளைப் படைந்து. பசி கூர்ந்தது எனக் குழைந்து. கூர்ந்து - மிக்கு.

2946. வளர்த்தன ரங்கழன் மறைவ லாளர்சோ
றளிக்கெனக் கண்ணனின் றறைந்திட் டானெனக்
கிளக்கினல் குவரெனக் கிளர்ந்த சாலைவாய்க்
களிப்புடை யிளையவர் கடிதின் மேயினர். (௩)

2947. தம்மின்வெண் சோறுவெந் தழற்கட் பாந்தளின்
பைம்மிசை யாடிய பச்சை மாமுகில்
நும்முழை விடுத்தன னெனநு வன்றனர்
செம்மையந் தாமரைத் தெரிய லார்க்கரோ. (௪)

2948. மறையவர் நான்மறை வழுத்தும் வேள்வியின்
இறையையோர் மகனென வெண்ணி யில்லென
அறைதர வத்திற னடைந்து கூறலும்
முறுவல்வாண் முகத்தினன் முதல்வன் கூறுமால். (௫)

2949. வேதிய ரிருக்கவவ் வேள்வி வேதியர்
கோதையர்க் குரைக்கெனக் கூற மன்றலந்
தாதவிழ் முல்லையந் தாம மார்பர்போய்
மாதர்பா லத்திறன் வழங்கி னாரரோ. (௬)

---

2946. அங்கு அழல் வளர்த்தனரா யுள்ள மறைவலாளரைச் சோறு அளிக்கெனக் கண்ணன் அறைந்திட்டான் எனக் கிளக்கின்; என - என்று. கிளக்கின் - கூறினால். கிளர்ந்த சாலைவாய் - அழலால் விளங்குகின்ற அந்தணரது யாகசாலை யிடத்திற்கு. இளையவர் - ஆயச் சிறுவர். மேயினர் - சென்றார்.

(பி. - ம்.) 3. கிளந்த காலைவாய்க்.

2947. வெண் சோறு தம்மின்; தம்மின் - தாருங்கள். பைம்மிசை - படத்தின்மேல். முகில் - கண்ணபிரான். நும்முழை - நும்மிடத்து. தாமரைத் தெரியலார்க்கு நுவன்றனர்; தாமரைத் தெரியலார் - தாமரை மாலையை அணிந்த அந்தணர்; "செங்கமலப், படலை சூடிய பழமறை யந்தணர்க் கெல்லாம்" (3906); "பங்கயத்துப் பாத்துவன்" (கம்ப. மீட்சி: 242.)

2948. வேள்வியின் இறையை - கண்ணபிரானை. மகன் - சிறுவன். மறையவர் இறையை மகனென எண்ணி. இல்லென அறைதலும் - உணவு இல்லை யென்று கூறியவுடன். கூறலும் - அந்தணர் கூறியதைக் கண்ணபிரானிடம் கூறுதலும். முகத்தின னாகிய முதல்வன் - கண்ணபிரான்.

2949. வேதியர் கோதையர்க்கு - அந்தணருடைய மனைவியர்க்கு. கூற - கண்ணபிரான் சொல்ல. தாமம் - மாலை. மார்பர் - இடைச்சிறார். மாதர்பால் - அந்தணர் மனைவியரிடத்து. வழங்கினர் - கூறினர்.

2950. முல்லையங் கோதையர் முதிர்சு வைத்துவை
முல்லைமென் முகைபுரை மூரல் கைக்கொளா
மல்லன்மா மறையவர் தட்ப வந்தனர்
மல்லடு தோளினுன் மருங்கி னென்பவே. (எ)

2951. மயிலின்மென் பீலியு மல்லன் முல்லையும்
துயல்வரச் சூடியோர் தோட்ட தாமரை
இயல்பெறச் செங்கைகொ டிருந்த செல்வனைக்
கயன்மலைப் பன்னகண் களிப்ப நோக்கினர். (அ)

2952. மூரல்வான் முகத்தினர் மூர லுண்டபின்
வாரொலி கூந்தலம் மடநல் லார்தமை
ஆரழற் சாலைநீ ரடைமி னென்றனன்
காரெழில் கொண்டறங் காக்கு மையனே. (கூ)

2953. அனகவாங் கடைகல மடையி னந்தணர்
முனிகுவ ரெனவவர் முனிவு செய்திடார்
புனமயிற் சாயலிர் போமி னென்றனன்
நனைவிரி கூந்தலார் நண்ணி னாரோ. (கo)

---

2950. முல்லையங் கோதையர் - அந்தணருடைய மனைவியர்; கற்பிற்கு முல்லை சூடினர். சுவை முதிர்ந்த துவையையும் முல்லை முகை போன்ற மூரலையும் கைக்கொள்ளா; துவை - துவையல். மூரல் - சோறு. கொள்ளா - கொண்டு. மல்லல் - பெருமை. மறையவர் தட்பவும் வந்தனர்; தட்ப - தடுக்க. தோளினன் - கண்ணபிரான்.

2951. மயிலின் பீலியையும் முல்லையையும் துயல்வரச் சூடியும் தாமரையைக் கையிற் கொண்டும் இருந்த செல்வனை; கண்ணபிரானை. துயல்வர - அசைந்து விளங்க. கயல் மலைப்பன்ன கண் - கயல் மீனின் பிறழ்வைப் போன்ற கண்கள்.

2952. முகத்தினர் - இடைச் சிறுர். மூரல் - சோறு. நல்லார் தமை - அந்தணருடைய மனைவியரை. அழற் சாலை - அந்தணரிருக்கும் யாக சாலையை. அறத்தைக் காக்கும் மைந்தன் - கண்ணபிரான்.

2953. அநக; கண்ணபிரானுக்கு விளி. ஆங்கு - யாகசாலையை. அடையின் - யாம் சேர்ந்தால். முனிகுவர் என - சினம் கொள்ளுவர் என்று மங்கையர் கூற. அவர் - வேதியர். மயிற் சாயலிர் - வேள்வி மங்கையருக்கு விளி. நனை - முல்லை யரும்பு. கூந்தலார் - வேள்வி மங்கையர்.

(பி. - ம்.) 2. முனிவு செய்கலர்.

2954. நண்ணலு மந்தணர் நகைமு கத்தினர்
கண்ணனை யெய்திநாங் காணப் பெற்றிலேம்
பெண்ணறி விலநனி பேதை யேமெனு
உண்ணெகிழ் காதலி னுருகி னாரோ. (கக)

2955. நிரையொடு மீண்டன னிலவு செங்கதிர்
வரைமறை தரவெழு மாலை வெண்பிறை
சொரிநில வெனவலர் தோட்டு முல்லையந்
தெரியல்சூழ் கருங்குழற் செங்க ணேறனுன். (கஉ)



# 11. கோவத்தனம் எடுத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

2956. உந்துநீ ரமுதுட னுயிர்த்த பேதையர்
அந்தண்வா ணகையமு தருந்தி யின்புறும்
இந்திரன் மகிழவாங் கியற்றி யீட்டினன்
பைந்தொடை நந்தர்கோன் பண்ணி காரமே. (க)

2954. நகை முகத்தினராய். பெண் அறிவிலம் - பெண்ணின் அறிவிலம் - பெண்ணின் அறிவும் பெற்றிலேம். எனு - என்று கூறி. இப்பாடல், வேதியர் தம் மனைவியரை நோக்கிக் கூறியது.

(பி - ம்.) 2. காணகிற்றிலேம்.

2955. நிரை - பசுக் கூட்டம். வரையில் சூரியன் மறைய வெண்பிறை எழுகின்ற மாலைக் காலத்தில். வெண்பிறை சொரிகின்ற நில்வென அலரும் முல்லை. தெரியல் - மாலை. செங்கண் ஏறனுன் - கண்ணபிரான். ஏறனுன் மீண்டனன்.

2956. உந்து நீர் - கடல். உயிர்த்த - பெற்ற. பேதையாது நகையமுது அருந்தி யின்புறுகின்ற இந்திரன் மகிழும்படி ; பேதையர் - அரம்பையர். பண்ணிகாரத்தை நந்தகோன் இயற்றி ஈட்டினன் ; பண்ணிகாரம் - பணியாரம் ; உண்ணுதற்குரிய பலவகை உணவு.

2957. ஆவயின் மாயவ னறிந்து மென்செய்வான்
மேவினை நீயென விளம்ப நந்தகோன்
பூவைபோல் வண்ணயான் புரிய வேட்டது
தேவர்கோன் பூசனை யென்று செப்பினன். (உ)

2958. சேணுலா மிந்திரன் சீற்ற மீங்கினிக்
காணலா மென்றுசெங் கமல வீட்டுறை
வாணிலா மென்னகை மணந்த செம்மணிப்
பூணுலா மார்பினன் புகறன் மேயினன். (ங)

2959. பண்டுசெய் வினையலாற் பரவு தெய்வமொன்
றுண்டெனிற் றுன்பய னுதவ வல்லதோ
அண்டர்கோன் பூசனை யாற்று கின்றதால்
கண்டில னொருபயன் கருதுங் காலையே. (ச)

2960. எவ்வினை யேனுமொன் றிழைக்கி னீறிலா
தவ்வினை யேபய னளித்தல் செய்யுமால்
செய்வினை யல்லது தெய்வ மென்செயும்
மவ்வலம் பசுந்தொடை மார்ப மற்றரோ. (ரு)

2961. செழுமறை யவரொடு செம்ம லானினம்
விழைதரு முணவெலாம் வெறுப்ப நல்கிடாப்

---

2957. ஆவயின் - அவ்விடத்தே. மாயவன் அறிந்தும் - கண்ணபிரான் நந்தகோன் செய்கையை அறிந்திருந்தும். நீ என் செய்வான் மேவினை என விளம்ப; செய்வான் - செய்யும் பொருட்டு. விளம்ப - கண்ணபிரான் கேட்க. பூவை - காயாம்பூ. வண்ண - கண்ணபிரானுக்கு விளி. புரிய - செய்ய.

2958. சேண் - பெருமை. சீற்றத்தை இங்குக் காணலா மென்று. கமல வீட்டி லுறைகின்ற மென்னகையை; திருமகளை. பூண் - ஆபரணம். மார்பினன் - கண்ணபிரான். புகறல் - சொல்லுதலை.

2959. வினை - கருமம். பரவு - புகழப்படுகின்ற. அண்டர்கோன் - இந்திரனுக்கு. ஆற்றுகின்றதால் ஒரு பயனும் கண்டிலன். கருதும் காலை - எண்ணுமிடத்து.

2960. வினை - கருமம். இழைக்கின் - செய்தால். ஈறிலாது - முடிவில்லாமல். மவ்வல் - முல்லை. மார்ப; நந்தகோனுக்கு விளி.

2961. மறையவர் - வேதியர். செம்மல் - பெருமை. ஆனினம் - பசுக் கூட்டம். விழைதரும் - விரும்பத் தக்க. வெறுப்ப - மிக. மழை -

பொழிமழை தவழுநம் பொன்னங் குன்றினை
வழிபட லினிதென வள்ளல் கூறினன். (சு)

2962. திருத்துயில் பெற்றவச் செம்பொன் மார்பினன்
உரைத்தவா றேமன னுவந்து நந்தர்கோன்
அருச்சனை புரிந்தன னருவி மாலைதாழ்
பொருப்பினை வெண்டிரைப் புவிக ளிப்பவே. (எ)

2963. கன்னலின் றீஞ்சுவைக் கனியின் குப்பையும்
பொன்னெடுங் குன்றெனப் பொலிந்த தோர்தலை
கொன்னவில் வெள்ளியங் குன்ற மாமெனச்
செந்நெல்வெள் ளடிசிலோர் திசைம லிந்ததால். (அ)

2964. உண்ணுமின் னமுதுட னுடையும் பாற்கடல்
கண்ணுறு கின்றதோர் காட்சி யாமென
வெண்ணெய்வெண் டயிரொடு விளங்க வோர்தலை
அண்ணலான் பொழிந்தபா லலையெ றிந்ததால். (கூ)

2965. வெடித்தநாண் மல்லிகை விரியல் வாசிகை
தொடுத்தனர் விரைகமழ் சுண்ணந் தூவினர்
எடுத்தனர் தீம்புகை யினிய தேனுக
வடித்தனர் கழையிசை வயிரி சைத்தனர். (க0)

---

மேகம். பொன்னங் குன்றென்றது கோவர்த்தன கிரியை. வள்ளல் - கண்ண பிரான்.

2962. திரு துயில் பெற்ற - திருமகள் தங்கப் பெற்ற. மார்பினன் - கண்ணபிரான். மனனுவந்து - மனமகிழ்ந்து. அருவியாகிய மாலை தாழ்கின்ற பொருப்பினை அருச்சனை புரிந்தனன்.

2963. கன்னலின் - கரும்பைக் காட்டிலும். கனியின் குப்பை - பழங்களின் தொகுதி. ஓர் தலைப் பொலிந்தது ; ஓர் தலை - மலையின் ஓரிடத்து. கொன் - பெருமை. வெள்ளடிசில் வெள்ளிக் குன்ற மாமென ஒரு திசையில் மலிந்தது ; வெள்ளடிசில் - வெண் சோறு.

2964. கண்ணுறுகின்றதோர் - எதிர்ப்படுகின்றதொரு. வெண்ணெயும் தயிரும் விளங்க. ஓர்தலை - ஓரிடத்து. அண்ணல் ஆன் - பெருமை பொருந்திய பசு.

2965. வெடித்த - மலர்ந்த. வாசிகை - இருவாட்சிப்பூ. விரை - வாசனை. சுண்ணம் - வாசனைப் பொடி. புகையை எடுத்தனர் ; புகை - வாசனைப் புகை. உக - சிந்தும்படி. கழை இசை வடித்தனர் - வேய்ங்குழலிசையைப் பயிற்றினர். வயிர் இசைத்தனர் - கொம்பை ஊதினர்.

2966. அவிழ்ந்ததா மரைமல ரனைய செங்கணன்
நிவந்தகோ வத்தன மாகி நெய்யொடு
குவிந்தவால் வல்சியுங் கூட்டுண் டவ்வழி
உவந்தன மெனச்சில வுரைவ ழுங்கினன். (கக)

2967. ஆரமிழ் தன்னநல் லடிசின் மாந்தியோர்
கார்வரை மகிழ்வது காண்மி னேயென
வேரியங் கருந்துழாய் விமலன் வெண்ணிலா
மூரல னிவ்வழி மொழிந்திட் டானரோ. (கஉ)

2968. உண்டது வாய்திறந் துவந்து ளோமென
விண்டது மற்றிது வியற்பிற் றுமென
அண்டர்மால் வரையினை யன்புற் றேத்தினர்
வண்டிமிர் போதுதூஉய் வணங்கி னாரோ. (கங)

2969. முகிழ்விரி மெல்லிணர் முல்லை யாயர்கோன்
மகன்மொழி கேட்டனன் மலைவ ழுத்தினன்
நகையுடைத் திஃதென நாட்டஞ் சேந்தனன்
அகலிரு விசும்புகாத் தளிக்கு மண்ணலே. (கச)

---

2966. செங்கணன் - கண்ணபிரான். நிவந்த - உயர்ந்த. கோவர்த்தன மாகி - கோவர்த்தன கிரியின் உருவமா யிருந்து. வால் வல்சி - வெண் சோறு. கூட்டுண்டு - சேர்த்துண்டு. அவ்வழி - அவ்விடத்தே.

2967. அடிசிலை மாந்திக் கார்வரை மகிழ்வதைக் காண்மின் என. வேரி - தேன். விமலன் மூரலுடையனாய் இவ்வழி மொழிந்திட்டான்; விமலன் - கண்ணபிரான். மூரல் - புன்சிரிப்பு.

2968. வாய் திறந்து உண்டது, உவந்துளோம் என விண்டது, இது வியப்பிற்றுமென; விண்டது - மறுமொழி கூறியது. இது வியப்பிற்றும் - இச் செய்கை வியப்புடைய தாகும். அண்டர் - இடையர். வரையினை - கோவர்த்தன கிரியை. வண்டு இமிர் - வண்டுகள் ஒலிக்கின்ற. தூஉய் - தூவி.

2969. முகிழ் - அரும்பு. முல்லையை யணிந்த ஆயர் கோன் - நந்த கோபன். மகன் மொழி - கண்ணபிரானுடைய சொல்லை. கேட்டனன் - கேட்டு; முற்றெச்சம். இஃது நகை யுடைத்து என; நகை யுடைத்து - இகழ்ச்சி யுடைத்து. சிரிப்பைத் தருவது எனலுமாம். நாட்டம் சேந்தனன் - கண்கள் சிவந்தனன். அகலிரு விசும்பு - அகன்ற ஆகாயம். அண்ணல் - இந்திரன்; எழுவாய்.

2970. ஒருமகன் காப்பதூஉ முயர்பொற் கோட்டதோர்
கருவரை காப்பதூஉங் காணத் தக்கதால்
வருகமா முகிற்குலம் வாரி வற்றிடப்
பருகுபு சொரிகெனப் பணித்திட் டானரோ. (கரு)

2971. ஏழ்பெருங் கொண்டலு மெழுந்து வான்வளீஇ
ஊழியி னிறுதியி னூறி யொல்லெனச்
சூழ்கழ லிந்திரன் சூழி யானையின்
தாழிருந் தடக்கையிற் றாரை கான்றவே. (கசு)

2972. இடியினில் வெருவுறு மிடித்து மின்னுமின்
கொடியினிற் கரிந்துமெய் குலைகு லைந்திடும்
கடியகன் மாரியிற் கலங்கு மவ்வழிப்
படுமணி யானிரை பட்ட தென்சொல்கேம். (கஎ)

2973. சாய்த்தவஞ் சென்னிய தளர்ந்த காலன
காத்திளங் கன்றினைக் கரந்த மெய்யன

---

2970. மகன் - கண்ணபிரான். பொற் கோட்டதோர் - பொற் சிகரத்தை யுடையதொரு. கருவரை - கோவர்த்தன கிரி. முகிற்குலம் வருக, வாரி வற்றிடப் பருகுபு சொரிக என; பருகுபு - பருகி. பணித்திட்டான் - கட்டளையிட்டான்.

2971. ஏழ் பெருங் கொண்டல் - ஏழு பெரிய மேகங்கள்; ஏழ்-எழுச்சி எனலுமாம். வான் வளீஇ - ஆகாயத்தை வளைத்து. ஊழியின் இறுதியின் - ஊழிக் காலத்து முடிவைப் போல். ஊறி - முழங்கி. ஒல்லென - விரைய. சூழி - முகபடாத்தை யணிந்த. தாழ் இரு - தாழ்ந்த பெரிய. தடக்கையின் - துதிக்கையைப் போல். தாரை கான்ற - மழை வரிசையைப் பொழிந்தன; தாரை - மழைக் கால்கள். மழைத் தாரைக்கு யானைத் துதிக்கை உவமை. (2971); "பெருங் களிற்றுத் தடக்கை புரையக் கால் வீழ்த்தது" (அகநா. 334 : 5).

2972. வெருவுறும் - அஞ்சும். இடித்து மின்னுகின்ற மின்னற் கொடியினால். மாரியின் - மழையால். அவ்வழி - அம் மலையிடத்தே. படு மணி - ஒலிக்கின்ற மணியை யுடைய. ஆனிரை - பசுக் கூட்டம். பட்டது - பட்ட துன்பத்தை.

2973. சென்னிய - தலையை யுடையன. இளங் கன்றினைக் காத்துக் கரந்த மெய்யன. ஆத் திரள் - பசுக் கூட்டம். மறுகின - மயங்கின. அல

ஆத்திரன் மறுகின வலமந் துற்றன
பார்த்தன்மான் றேர்க்கொரு பாகன் றன்னையே. (௧௮)

2974. முடிந்ததோ வூழியம் முதல்வ னண்டமாங்
கிடிந்ததோ வுலகிய விறந்து போயதோ
கடும்புய லின்னது கண்டி லேமென
நடுங்கினர் கோவலர் நனிக லங்கினர். (௧௯)

2975. ஆரழல் வளைத்தநா ளாவி காத்தனை
கார்முகில் வண்ணநீ காப்ப வேண்டுமிம்
மாரியு மென்றனர் மல்லன் முல்லையந்
தாரவன் சேயடி தாழ்ந்து போற்றினர். (௨௦)

2976. வம்மினீர் யாவரு மறுகு மாவெலாம்
தம்மினிவ் வழியெனத் தண்டு ழாய்முகில்
செம்மையந் தாமரைச் செங்கை யொன்றினல்
பெய்ம்முகி றவழ்வரை பிடுங்கி னனரோ. (௨௧)

கலிநிலைத்துறை.

2977. காவற் றொழில்பூண் டுலகேழையுங் காக்க வந்தோன்
ஆவுக் கிடரொன் றணுகாவகை யாழி மேய்ந்த
தூவற் கருங்கார் சொரிகின்றவம் மாரி காத்தான்
கோவத் தனமோர் குடையாமெனக் கொண்டு நின்றே. (௨௨)

---

மந்து - வருந்தி. பார்த்தன் - அருச்சுனனுடைய. மான் - குதிரை. பாகன் - கண்ணபிரான். பாகன்றன்னை உற்றன.

2974. ஊழி முடிந்ததோ. முதல்வன் - பிரமனுடைய. ஆங்கு இடிந்ததோ. இன்னது - இது போன்றதை. கோவலர் - இடையர்.

2975. அழல் - காட்டுத் தீ. ஆவி - எம் உயிரை. வண்ண - கண்ண பிரானுக்கு விளி. இம் மாரியும் காப்ப வேண்டும் என்றனர். மல்லல் - பெருமை. முல்லையந் தாரவன் - கண்ணபிரானுடைய.

2976. நீர் யாவரும் வம்மின். மறுகும் - மயங்குகின்ற. ஆவெலாம் - பசுக்களை யெல்லாம். இவ்வழித் தம்மின் என. என - என்று கூறி. முகில் - கண்ணபிரான். கையொன்றினல் வரையைப் பிடுங்கினன்.

2977. வந்தோன் - கண்ணபிரான். ஆவுக்கு - பசுக்களுக்கு. ஆழி மேய்ந்த - கடலில் நீரை உண்ட. தூவல் - தூவுதலை யுடைய. அம்மாரி - அம் மழையை. கோவர்த்தன மலையைக் குடையாமெனக் கொண்டு மாரி காத்தான்.

2978. பாரே ழுதவும் பனிமாமல ரண்ண லோடும்
ஈரே ழுலகத் துயிர்யாவையு மீன்ற வண்ணல்
ஓரேழ் பகனின் றுயரண்டம் வெடிப்ப வார்த்துக்
காரேழ் பொழியுங் கனைவெம்பெயன் மாரி காத்தான். (உங)

2979. பாட்டா யிரம்வீழ்ந் திளவண்டினம் பாடு முல்லைச்
சூட்டா யிதழ்ப்பூந் துளவோடுமி லைந்த தொல்லோன்
கோட்டா டகமால் வரையேந்திய கோல நோக்கி
மீட்டான் பொழியும் புயலேழும்விண் காவல் வேந்தன். (உச)

2980. தந்தா வளமோர் தடந்தாமரை யேந்தி யாங்குச்
செந்தா மரைக்கட் டிருமால்வரை யேந்த னோக்கி
நந்தா மகிழ்ச்சி தழைகோவலர் நந்த கோனே
டந்தாம மார்பன் றனையோர்ந்தன ரைய முற்றே. (உரு)

2981. ஏர்வண்ணம் வெவ்வே றெதிரூழிதொ றெய்து மீங்குக்
கார்வண்ண மெய்திக் கருங்கண்ணனென் றேத்த நின்றான்
போர்வண்ண நேமிப் புயலென்றனன் கர்க்க னென்னு
ஓர்வண்ண நோக்கி யுயர்நந்தனுவந்து ரைத்தான். (உசா)

---

2978. மலரண்ணல் - பிரமன். மலரண்ணலோடு உயிர் யாவையும் ஈன்ற. அண்ணல் - கண்ணபிரான். ஓரேழ் பகல் - ஏழு நாட்கள். கார் ஏழ் - ஏழு மேகங்கள். கனை - ஒலி மிகுதி. பெயல் மாரி - பெய்தற் றொழிலை யுடைய மழையை.

(பி - ம்.) 2. ஈன்ற நம்மான்.

2979. ஆயிரம் இள வண்டினம் வீழ்ந்து பாட்டுப் பாடும் முல்லைச் சூட்டு. முல்லைச் சூட்டைப் பூந்துளவோடு மிலைந்த தொல்லோன் - கண்ண பிரான். கோடு ஆடக மால்வரை - உச்சியை யுடைய பொன்னுலாகிய பெரிய மலையை. கோலம் - கண்ணபிரானுடைய வடிவத்தை. பொழியும் புய லேழையும் விண் காவல் வேந்தன் மீட்டான். வேந்தன் - இந்திரன்.

2980. தந்தாவளம் - யானை. தாமரை ஏந்தியாங்கு - தாமரை மலரை ஏந்தினாற் போல. திருமால் - கண்ணபிரான். வரை - கோவர்த்தன மலையை. ஏந்தலை - ஏந்தியிருத்தலை. நந்தா - குறையாத. மகிழ்ச்சி தழைக்கின்ற கோவலர். மார்பன்றன்னை - கண்ணபிரானை. ஐயம் உற்று ஓர்ந்தனர்.

2981. ஏர் - அழகு. எய்தும்-பெறுவான். கார் வண்ணம் - கரு நிறம். நேமிப் புயல் கருங்கண்ணனென் றேத்தி நின்றான் என்றனன் கர்க்கன் என்னு; என்னு - என்று கூறி. ஓர் வண்ணம் - ஒப்பற்ற கண்ணபிரானுடைய நிறத்தை. நந்தன் - நந்தகோபன் ழ : 2753.

2982. ஓரேழ் பருவத் தொருதோன்றலொர் குன்ற மேந்தி
ஓரேழ் கருங்கா ரொழியாதுபொ ழிந்த மாரி
ஓரேழ் பகல்காத் தளித்தானென வுன்னி யுன்னி
ஓரே ழுலகத் தெவர்நெஞ்சமு வக்க கில்லார். (உஎ)

2983. பண்ணு யிரமஞ் சிறைவண்டுப டிந்து பாடும்
தண்ணுர் துளவோன் றனிநின்றதொர் செவ்வி நோக்கி
விண்ணுடு காக்குந் தனிவெண்குடை வேந்து செய்ய
கண்ணு யிரமுங் களிகூர்தரச் சென்று கண்டான். (உஅ)

2984. கொழுதா மழலைக் குரற்றேனுழு கோதை மார்பன்
எழுதா மறையின் முடிமீதிலி ருந்த தாள்விண்
முழுதாளு மன்னன் முளரிக்கரங் கூப்பி நின்று
தொழுதா னிருதாண் முடிச்சென்னியிற் சூடி ஞனல். (உகூ)

2985. உரைவா யிகந்துள் ளுணர்வுங்கடந் தோங்கி நிற்பாய்
தரைவாய்ப் பிறந்து தனிநல்லறங் காத்தல் செய்வாய்
விரைவாய் மலர்மே லுறைவாய்வரை வீற்றி ருப்பாய்
திரைவாய்த் துயில்வாய் நினையெங்ஙனந் தேர்வல் யானே. ()

---

2982. ஏழ் பருவத்து - ஏழாண்டினை யுடைய. தோன்றல் - கண்ண பிரான். ஏழ் கருங்கார் - ஏழு கரிய மேகங்கள். ஒழியாது - நீங்காமல். மாரி - மழையை. ஏழ் பகல் - ஏழு நாட்கள். உன்னி - நினைத்து. இப் பாடலில் ஏழு என்ற எண்ணிக்கையை நான்கு வகையாகக் கூறி யிருத்தல் அறியத்தக்கது.

2983. ஆயிரம் வண்டுகள் படிந்து பண்ணைப் பாடுகின்ற துளவு; 2979. துளவோன் - கண்ணபிரான். செவ்வி - அழகு. வேந்து - இந்திரன். செய்ய - சிவந்த. களி கூர்தா - களிப்பு மிக.

2984. மழலைச் குரலையுடைய தேன் கொழுதா உழும் கோதை; தேன் - வண்டின் சாதி. கொழுதா - கிழித்து. உழும் - உழுகின்ற. கோதை - மார்பின் மாலை. மார்பன் - கண்ணபிரான். மார்பனுடைய தாளை, எழு தாமரையின் முடி மீதிருந்த தாளை. விண் முழுதும் ஆளுகின்ற மன்னன் - இந்திரன். இரு தாளை முடியணிந்த சென்னியிற் சூடினன்.

2985. உரைவாய் இகந்து - சொல்லிடத்தைக் கடந்து. தனி - ஒப் பற்ற. விரை - வாசனை. வரை - மலையில். திரை - கடல். தேர்வல் - அறிவேன்.

2986. மலர்மே லவன்கைம் மலைமேலுளென் மாசில் வெள்ளி
மலைமே லவனே னவருள்ளம யங்கித் தம்மைத்
தலையா யவரே யெனநெஞ்சு தருக்கும் வேலை
உலையா முதல்வா வொழிப்பாயஃ தொல்லை மாதோ. (௩௧)

2987. மாற்றற்ற பொற்ரு மரையாள்புணர் மாலை மார்ப
ஆற்றற் றிகிரிப் படையாய்வெறுப் பார்வ மில்லாய்
சீற்றத் திழைத்த செயலீது பொறுத்தி யென்னுப்
போற்றிப் பணிந்தான் பசும்பொன்னகர் போற்றும் வேந்தன்.

2988. ஒளியுற்ற பொன்னுட் டுயரின்ப மருந்தி யுள்ளம்
களியுற் றனையக் களிமம்மர் கனன்ற நெஞ்சம்
தெளிவுற் றிடவித் திறன்செய்தன மென்று செங்கண்
அளியுற்ற தாரா னளிகூர்ந்துரை யாடி னுனல். (௩௩)

2989. நிலங்காத்த கோவே நெடுங்குன்றினின் மாரி காத்தென்
குலங்காத்த தெய்வக் கொழுந்தேயருள் வாழி யென்னுப்
புலங்காத் துயர்விட் புலஞ்சேர்பொலங் கோதை மாதர்
கலங்காத்த கண்ணன் றனைச்சார்ந்தது காம தேனு. (௩௪)

2986. மலர் மேலவன் - பிரமன் கைம்மலை மேலுளேன் - ஐராவத மென்னும் யானைமேலுள்ள யான்; என்றது இந்திரனை. வெள்ளி மலை மேலவன்-சிவபெருமான். ஏனவர் - மற்றுமுள்ள தேவர்கள். தலையாயவர் - முதன்மையானவர். உலையா - கெடாத. அஃது ஒல்லை ஒழிப்பாய். அஃது - அத் தருக்கை. ஒல்லை - விரைவில். இப் பாடல் ஒரு பிரதியிற் காணப்பட வில்லை.

2987. மாற்றற்ற - ஒப்பற்ற. மார்ப, படையாய், இல்லாய் என்பன கண்ணபிரானை நோக்கிய விளி. வெறுப்பு ஆர்வம் - வேண்டாமையும் வேண்டுதலும். சீற்றத்து - கோபத்தால். வேந்தன் - இந்திரன்.

2988. பொன்னுடு - தேவருலகம். களியுற்றனை - மயக்கமுற்ருய். மம்மர் - மயக்கத்தால். கனன்ற - கோபித்த. செங்கண்ணை யுடைய தாரான், அளியுற்ற தாரான் - கண்ணபிரான். அளி - வண்டுகள். கண்ணில் அளியுற்ற தாரான் எனலுமாம்; அளி - கிருபை. அளி கூர்ந்து - அருள் மிக்கு. இப் பாடல் கண்ணன் கூற்று.

2989. கோவே, தெய்வக் கொழுந்தே; கண்ணபிரானுக்கு விளி. என் குலம் காத்த - எனது குலத்துதித்த பசுக் கூட்டங் காத்த - என்று கூறியது காமதேனு. என்னு - என்று கூறி. புலம் - அறிவு, இடம். மாதர் கலம் காத்த - தேவ மாதரது தாலியைக் காத்த. காமதேனு சார்ந்தது.

2990. மாலைக் கதிர்வான் மதிநின்று வயங்கு கோல
நீலக் கிரிமே னிலவுக்கதிர் கால்வ தென்ன
ஆலக் கருஞ்சே றுமிழ்பாப் பினின் றாடி னானைப்
பாலிற் பரிப்பரிந் தாட்டல் புரிந்த தன்றே. (௩௫)

2991. பாட்டுற்ற வண்டு படிந்தூதுபொற் பாரி சாதக்
கோட்டுற்ற தெய்வக் குளிர்நாண்மலர் கோத்தி றுத்துச்
சூட்டிற்று நீண்ட தொளைக்கைகொடு கங்கை வாரி
ஆட்டிற்றுக் கண்ணற் கயிராவத மாங்க டைந்தே. (௩௬)

2992. நாவந்த மாது புணர்நான்மறை யோனை யுந்திப்
பூவந் தளித்தோற் கொருபொன்னெடுங் குன்ற மேந்தி
ஆவந் தளிக்கு மடலாழியஞ் செங்கை யாற்குக்
கோவிந்த னென்றோர் பெயர்கூறினன் கொற்ற வேந்தன். ()

2993. காலக் கமஞ்சூற் கருங்கார்முகில் கண்டு வந்து
கோலக் கலவக் குலமஞ்ஞை குனிக்கு மாபோல்
வேலைக் கடல்வாய் வினையின்னமு தன்ன தீஞ்சொல்
ஆலக் கருங்க ணரமங்கைய ராடி னாரால். (௩அ)

---

2990. வயங்குகின்ற கோலத்தை யுடைய நீலக்கிரிமேல் மாலைக் காலத்து மதி, நிலவுக் கதிரைக் கால்வதென்ன; கால்வதென்ன - சொரிவதைப் போல. ஆலக் கருஞ் சேறு - விஷமாகிய கரிய சேற்றை. பாம்பு - காளியன். ஆடினானை - கண்ணபிரானை. பரிந்து - அன்புடன். பாலினால் ஆட்டலைப் புரிந்தது. கண்ணபிரானுக்கு நீலக்கிரியும், காமதேனுவின் பாலுக்கு நிலவும் உவமை.

2991. பாட்டுற்ற - பாடுதலைப் பொருந்திய. ஊதுதல் - தாதுக்களை உண்ணுதல். கோடு - கிளை. மலரைக் கோத்து, தொளைக்கை கொடு சூட்டிற்று, தொளைக்கை கொடு கங்கையை வாரி ஆட்டிற்று என்க. ஐராவதம் ஆங்கு அடைந்து, கண்ணற்குச் சூட்டிற்று ஆட்டிற்று என்க.

2992. நாவில் வந்த மாதைப் புணர்ந்த நான்மறையோனை - பிரமனை. மாது - கலை மகள். உந்திப் பூவில் வந்தளித்தாற்கு; வந்து - வர, எச்சத் திரிபு. ஆ வந்து அளிக்கும் - பசுக்களிடம் வந்து காக்கின்ற. அளித்தோற்கு, செங்கையாற்கு; என்றது கண்ணபிரானை. வேந்தன் - இந்திரன்.

2993. காலக் கமஞ்சூல் கருங்கார் - மாரிக் காலத்து நிறைந்த கருப்பத்தை யுடைய கரிய மேகத்தை. கலவம் - தோகை. குனிக்குமா போல் - ஆடுவதைப் போல. ஆலம் - விடம். அர மங்கையர் - தேவ மாதர்.

2994. நந்தாது பொன்வார்ந் தனயாழி னரம்பு ளர்ந்து
பைந்தே னுறைப்ப வுயர்கின்னரர் பாட லுற்றுர்
செந்தேறல் சிந்தச் சிறைவண்டர் செறிந்து பாடும்
மந்தார மன்றன் மலர்வானவர் தூவி யார்த்தார். (நகூ)

2995. நறைவார் முளரிப் பொலம்போதுறை நங்கை மேவும்
இறைவா கமலத் தெழில்வாய்ந்தநின் செய்ய பொற்ருள்
மறவா தருள்வா யெனமாயனை நின்று வாழ்த்தி
அறைவார் கழற்கா லமரர்க்கிறை போயி னுனல். (சo)



# 12. கோவியரை மணந்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

2996. ஈராறு சேர்ந்த திதியெய்தலு நந்த கோபன்
ஓராறு நண்ணி யொலிதீம்புன லாட னேக்கிக்
காரேறு போலு மொருதானவன் கைக்கொ டேகப்
போரேறு போல வெழுந்தான்றிகழ் பூவை வண்ணன். (க)

2997. அணைந்தா யெவணெ ன் றலாடகப் போது தூவி
வணங்கா வழுத்த வருணன்பதி சென்று வல்லே

---

2994. நந்தாது - குறையாமல். பொன் வார்ந்து அன - பொன் ஒழுகினற் போன்ற; நரம்பி னெழுக்குக்கு உவமை. நரம்பை உளர்ந்து; உளர்ந்து - தடவி. உறைப்ப - துளிக்கும்படி. தேறல் - தேன். சிறைவண்டர் - சிறகுகளையுடைய வண்டுகள். மந்தார மன்றல் மலர் - மந்தாரமாகிய வாசனையை யுடைய பூக்களை.

2995. நறை வார் - தேன் ஒழுகுகின்ற. நங்கை - திருமகளை. நின் பொற்ருளை மறவாதிருக்க அருள் செய்வாய் என. அறைதல் - ஒலித்தல். அமரர்க் கிறை - இந்திரன்.

2996. ஈராறு - பன்னிரண்டு. திதி - துவாதசி திதி. புனலாடுதலை நோக்கித் தானவன் கைக்கொடேக. தானவன் - ஓர் அசுரன். பூவை வண்ணன் போரேறு போல எழுந்தான்; பூவை வண்ணன் - கண்ணபிரான்.

2997. எவண் அணைந்தா யென்று போது தூவி வணங்கி வழுத்த. வழுத்த - கோபியரும் கோவலரும் கண்ணபிரானைத் துதிப்ப.

கொணர்ந்தான் கமழ்பூங் குருந்தம்புனை நந்தர் கோனைப்
பணந்தா ழரவின் றலைநின்று பதம்பெ யர்த்தான். (உ)

2998. மன்னுஞ் சிறப்பின் வருணன்மறை வண்ணன் மல்லற்
பொன்னங் கழற்கால் புனைந்தேத்தினன் பூவில் வாழும்
அன்னம் புணருங் கரியோனிவ னுங்கோ லென்னுத்
தன்னுந் தொறுவர்க் குயர்நந்த னுவந்து சொன்னான். (ங)

2999. தண்ணந் துணர்தூஉய்த் தடந்தாமரைச் செல்வ னோடு
விண்ணும் பரவித் தொழுந்தன்னிலை காண வேட்ப
வண்ணந் தெரிந்த மழைவண்ணனவ் வண்ண மாயர்
கண்ணும் மனமுங் களிக்கும்படி காட்டி னனால். (ச)

3000. தலைவந்த கதிர்ப் பருவத்தினி லேர்த யங்கு
கலைவந்த கற்றைக் கதிர்மாமதித் தோற்ற நோக்கி
அலைவந்து லாவும் யமுனைக்கரை யெய்தி யந்தண்
இலைவந்த தாரா னிசைவேய்ங்குழ னின்றி சைத்தான். (ரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3001. நஞ்சுகொப் புளிக்கும் பேழ்வாய் நாகணை துறந்த நம்பி
கஞ்சநாண் மலர்வாய் வைத்த குழையிசை யமிழ்த மாரி

---

குருந்தம் - குருந்த மரத்துப் பூ. பணம் - படம். பதம் பெயர்த்தவன், நந்தர் கோனைக் கொணர்ந்தான்.

2998. மன்னும்-நிலை பெற்ற. மழை வண்ணனுடைய காலைப் புனைந் தேத்தினன். மழை வண்ணன் - கண்ணபிரான். பூவில் வாழும் அன்னம் புணரும் கரியோன் - தாமரை மலரில் வாழ்கின்ற திருமகளைப் புணர்கின்ற கண்ணபிரான். என்னு - என்று கூறி. தொறுவர்க்கு - இடைச் சிறுர்க்கு.

2999. துணர் - பூங்கொத்து. தூஉய் - தூவி. தாமரைச் செல்வன் - பிரமன். விண்ணும் - தேவருலகத் துள்ளவர்களும். வேட்ட வண்ணம் - ஆயர்கள் விரும்பிய வண்ணத்தை. மழை வண்ணன் - கண்ணபிரான். ஆயருடைய கண்ணும் மனமும்.

(பி - ம்.) 2. காணல் வேட்ப.

3000. தலை வந்த - எதிர்ப்பட்ட, தோன்றிய. ஏர் - அழகு அம் தண் - அழகிய குளிர்ந்த. இலை வந்த தாரான் - இலை விரவித் தொடுத்த மாலையை யணிந்த கண்ணபிரான்.

3001. நஞ்சு கொப்புளிக்கும் - விஷத்தைக் கக்கிவிடுகின்ற. நம்பி - கண்ணபிரான். கஞ்சம் - தாமரை. குழையின் து இசையாகிய அமிழ்த மாரி.

அஞ்செவி தவழ்த லோடு மாய்ச்சியர் நிறத்து மாரன்
செஞ்சிலை பழுத்துக் கான்ற செஞ்சரந் தவழ்ந்த மாதோ. (சு)

3002. வழிந்தமு தொழுகு மாலை மதிநிலா மேனி வெம்பச்
செழுந்தழ லிறைக்கு நெஞ்சந் தெருமா லுழப்ப வாயர்
கொழுந்தின்வே யிசைவெங் காமக் கொழுங்கனல் வளர்க்கு மென்னே
பிழிந்துகொள் வினைய பெண்மைப் பேதையர் பிழைக்கு மாறே. (எ)

3003. காதளை வோடி நீண்டு கடைசிவந் தகன்று போர்க்குப்
போதரு கென்னு நீலப் போதினுக் கோலை போக்கும்
மாதர்மென் னோக்கி னுண்கண் மயிலியன் மாத ரெல்லாம்
தாதுறு மறுகு சூழ்ந்த தம்புல மகன்று மொய்த்தார். (அ)

3004 விசும்பிடஞ் சிறிய தென்ன வீங்கிளங் கொங்கை தாங்கி
ஒசிந்தநுண் மருங்கு நோவ வொலிகருங் கூந்த ருழல
அசும்புபொற் கலாப மேங்க வணிசிலம் பாற்ற வோடிப்
பசும்புயல் வண்ணத் தண்ணல் பண்வலைச் சென்று பட்டார். (௯)

3005. நெடுநிலாக் குவித்தா லன்ன நீண்மணற் குன்ற மெல்லாம்
படுநிலாத் தெறுவெண் டூவிப் பவளவா யன்னம் போன்று

---

கழை - வேய்ங்குழல். ஆய்ச்சியர் நிறத்து - கோவியரது மார்பிடத்தே. மாரன் - மன்மதனுடைய. கான்ற - கக்கிய.

3002. மாலைக் காலத்து மதியினது நிலாவால் மேனி வெம்ப. தழல் இறைக்கும் நெஞ்சம் - காமக் கனல் தங்குகின்ற மனம். தெருமா லுழப்ப - சுழன்று வருந்த. ஆயர் கொழுந்தின் - கண்ணபிரானுடைய; "கோவலர் கொழுந்து" (2899.) இசை காமக் கனலை வளர்க்கும்; "இசையுங் கூத்துங் கேழ்த் தெழுந்தீன்ற காம, விளைபயன்" (சீவக. 2598; குறிப்புரை.) பிழிந்து கொள்வினைய பெண்மைப் பேதையர் - வடித்துக் கொண்டாற் போலும் பெண்மைத் தன்மையை யுடைய மகளிர். பிழைக்குமாறு என்னே.

3003. போதருக - போக. என்னு - என்று கூறி. நீலப் போதினுக்கு - குவளை மலருக்கு; ஓலை போக்கல்; "ஓடரி நெடுங்கணென்னு மோலையை யெழுதி விட்டாள்" (சீவக. 683.) மாதர் மென் நோக்கின் - காதலை யுடைய மெல்லிய நோக்கத்தைக் கொண்ட. மாதர் - ஆய்ச்சியர். தாது - பூந்தாதுகள். மறுகு - வீதி. தம்புலம் - தம் இடத்தை.

3004. என்ன - என்று சொல்லும்படி. மருங்கு - இடை. ஒலி - தழைக்கின்ற; பதிற் 13 : 7, உரை. அசும்பு - ஊற்றெழுகின்ற. கலாபம் - மேகலை. அண்ணல் - கண்ணபிரானுடைய. பண் வலை - இசையாகிய வலையில்.

3005. நிலாக் குவித்தா லன்ன மணற் குன்றம்; "பனிநிலாக் கதிர் பரப்பிய முத்த வெண் மணலால் (2925.) நிலாவைத் தெறுகின்ற வெண்

மடலவிழ் முல்லை வேலி மாதவிப் பந்த ரெல்லாம்
சுடர்பொலங் கொம்பர் போன்றுந் தோகையர் துவன்றி னரால். (கo)

3006. ஏரிள மயிலின் மொய்த்த வேழையர் வதன நோக்கித்
தார்விரிந் தகன்ற மார்வத் தலைவரைப் பிழைத்துக் கானத்
தாரிருட் காலை யெம்பா லடைதனல் லறங்கொல் போமின்
நேரிழை மடவீ ரென்று நெடியவ னெடிது சொற்றான். (கக)

3007. அல்லியங் கமலக் கண்ண னறைந்தசொற் கேட்ட லோடும்
சில்லரித் தடங்கண் முத்தந் திருமுலைக் கோட்டிற் சிந்த
நல்லறங் கேட்ப வென்றோ நம்பியா மடைந்தே மென்னு
மெல்லெனப் பவளச் செவ்வாய் விண்டனர் மிழற்றல் செய்தார். (கஉ)

3008. துளிப்பதத் தேறன் மாந்தத் துதைந்துதா தளைந்து சூழ்ந்து
களிச்சுரும் பாற்று தாரோய் காட்டழல் கடிந்தி லாயோ
இளைத்தனந் துயரும் வண்ண மெண்டிசா முகமும் வந்து
வளைத்தவெண் ணிலவுத் தீயை மாற்றலை யென்னே யென்பார். (கங)

3009. பொருப்பினுன் மாரி காத்த பூவைபோ னிறத்தா யென்னே
கருப்புவார் சிலைகால் கோட்டிக் கலம்பெய்தோள் கழிய வாங்கிச்

---

துவி; தெறுதல் - கோபித்தல். மடல் - இதழ். மாதவிப் பந்தர் - குருக்கத்திக் கொடியா லாகிய வீடு. பொலங் கொம்பர் - பொற் கொம்பு. தோகையர் - கோவியர். தோகையர் அன்னம் போன்றும், கொம்பர் போன்றும் துவன்றினர்.

3006. மயிலின் - மயிலைப் போல. ஏழையர் - கோவியருடைய. தலைவரை - கணவரை. பிழைத்து - தப்பி. கானத்து - காட்டில். அறம் கொல் - தரும மாகுமோ! போமின் - மீண்டு செல்லுங்கள். நெடியவன் - கண்ணபிரான்.

3007. கண்ணினின்றும் முத்தம் முலைக் கோட்டிற் சிந்த ; முத்தம் - துளி. கோடு - உச்சி. நம்பி - கண்ணபிரானுக்கு விளி. அறம் கேட்ப வென்றோ அடைந்தேம் என்னு ; என்னு - என்று. விண்டனர் - திறந்து ; முற்றெச்சம்.

3008. துளிப்பதத் தேறல் - துளியாகிய செவ்வியையுடைய தேனை. துதைந்து - நெருங்கி. சுரும்பு - வண்டு. தாரோய் ; கண்ணபிரானுக்கு விளி. காட்டழலைக் கடிந்திலாயோ! ; கடிந்திலாயோ - நீக்கவில்லையோ. இளைத்தனமாகித் துயரும் வண்ணம் வளைத்த வெண்ணில வாகிய தீயை. மாற்றலை - நீக்கவில்லை.

3009. பொருப்பினுல் - கோவர்த்தன கிரியால். மாரி - இந்திரன் மழையை. கருப்பு - கரும்பு. சிலையின் காலைக் கோட்டி ; கோட்டி -

சுருப்புநாண் டொடுத்துத் தூணி தொலைவுற மார னெய்யும்
அருப்புவெம் பகழி மாரி யமைத்திலை யைய வென்பார். (கச)

3010. மல்லனீர் யமுனை யாற்று வல்விட மகற்ற வல்லாய்
முல்லைவாய் பொழிந்த தேறன் மூழ்கிவெவ் வழல்வாய் கான்று
கொல்லிய வெழுந்த வாடைக் கொலைவிட மகற்று யென்னே
அல்லியங் கமலச் செங்க ணமலவென் றயர்ந்து நிற்பார். (கரு)

3011. பண்ணுறு கிளைநின் செங்கேழ்ப் பவளவாய் முத்த நாளும்
உண்ணவைத் திலையோ நங்கட் குதவிலை யொருநா ளென்னே
பெண்ணலங் கனிய வந்த பேய்முலை யூறு பாலும்
வெண்ணெயு மினிது மாந்து விடைநடைக் குரிசி லென்பார். (கசு)

3012. உருகினர் நிறையு நாணு முகுத்தனர் நெகிழ்ந்து வீழும்
குருகினர் கொங்கை முத்தங் கொதித்திடக் கரிந்த தண்பூஞ்
சருகினர் விளர்க்கு மேனித் தளிரினர் கருங்கட் கையால்
பருகினர் வாரி வாரிப் பசும்புய லழகின் வெள்ளம். (கஎ)

3013. கழைபுரை தோளும் பச்சைக் கழைதரு கதிர்முத் தன்ன
ஒழுகொளி நகையும் பெற்ற வோடரித் தடங்க ணல்லார்

---

வளைத்து. சுருப்பு நாண் - வண்டாகிய நாணை. தொலைவுற - ஒன்றுமில்லையாக. அருப்புவெம் பகழி - அரும்பாகிய வெவ்விய அம்பு; அம்பு மாரியை. அமைத்திலை - நீக்கவில்லை. ஐய - விளி.

3010. மல்லல் - பெருமை. விடம் - காளியன் கக்கிய விஷத்தை. முல்லை பொழிந்த தேறலில் மூழ்கி, அழலைக் கான்று கொல்லிய எழுந்த வாடை யாகிய விடத்தை அகற்றுய்.

3011. பண் உறு கிளை - இராகத்தைக் கொண்ட வேய்ங்குழல். நின் வாய் முத்தத்தை, கிளை உண்ண வைத்திலையோ! நங்கட்கு ஒரு நாள் உதவிலை. பெண்ணலம் கனிய - பெண்ணின் அழகு முற்ற. பேய் - பூதனை. விடை நடைக்குரிசில் - கண்ணபிரான். விளி.

3012. உருகினர் - மன முருகினர். நிறையையும் நாணையும் உகுத்தனர்; உகுத்தனர் - கைவிட்டனர். குருகினர் - கைவளையை யுடையவர். முத்தம் - முத்து மாலை. சரிந்த பூஞ்சருகினர். விளர்க்கின்ற மேனியாகிய தளிரினர். கருங் கண்ணுகிய கையால் பருகினர். புயல் - கண்ணபிரானுடைய.

3013. கழை - மூங்கில். கழைதரு - மூங்கில் ஈன்ற. மூங்கிலில் முத்தம் பிறக்கும். நகை யென்றது பற்களை. நல்லார் - இடைச்சியாது. இழை - நூலின் பாதி, குழைதர - உருகும்படி. கழையை வாயில் வைத்த

இழைபுரை மருங்கு றேய்க்கு மிளமுலை மணந்தான் குன்றம்
குழைதாக் கழைவாய் வைத்த கோவலர் கொழுந்து மன்னே.

3014. திகழ்மணிக் கூந்த லங்கை பற்றியுஞ் செய்ய கோங்கின்
முகிழெனு முகிழ்த்த கொம்மை முலைமுகந் தழீஇயு நீவி
நெகிழ்தரப் புரிந்து மந்த ணிரையிதழ்ப் பூங்கொம் பன்னார்
மகிழ்தரு மின்பத் தேறன் மாந்தினன் மணிவண் டன்னான். ()

3015. துளும்புநன் னலத்த செவ்வாய்த் தோகையர் சிலர்வண் டீட்டம்
உளர்ந்தசெங் குமுத மாக வொழுகொளி மதியம் போன்றும்
தெளிந்தவின் முறுவ னல்லார் சிலர்செழுங் கமல மாக
இளங்கதிர் பருதிப் போன்று மெழினலந் திகழ்வித் தானால். ()

3016. அருப்பிள நிலவு கால வாமொக் திலங்கு மந்தண்
சிரிப்பினும் புருவஞ் செய்யுஞ் செயலினு நகைகூர் தீஞ்சொல்
விருப்பினு மலர்க்க ணோக்கின் விளைவினுங் களிநல் யானை
மருப்பிளங் கொங்கை மாதர் மனமகிழ் விளைத்தல் செய்தான்.

3017. பொங்கிணர்க் காவு தோறும் புதுமணற் குன்று தோறும்
பங்கயச் செங்க ணெம்மான் பானிலாப் பயன்கொண் டேங்கு
கங்கையந் திரைவா யுற்ற களியிள வன்னம் போலும்
கொங்கவிழ் கோதை மாதர் குழாத்தொடு மாடல் செய்தான். (உ௩)

---

கோவலர் கொழுந்து ; கண்ணபிரான் ; 2899. கோவலர் கொழுந்து நல்லார் முலையை மணந்தான்.

3014. மணிக் கூந்தல் - நீலமணி போன்ற நிறமுடைய கூந்தலை. கோங்கின் முகிழ் - கோங் கரும்பு. முகிழ்த்த - தோன்றிய. கொம்மை - பெருமை. தழீஇயும் - தழுவியும். நீவி - தடவி. நெகிழ்தர - கோவியர் மனம் நெகிழும்படி. கொம்பன்னார் - கோவியரது. இன்பமாகிய தேறலை. மணிவண்டன்னான் - கண்ணபிரான். மகளிர்க்குப் பூங் கொம்பையும் அவரைச் சேரும் ஆடவர்க்கு வண்டையும் உவமையாகக் கூறுதல் ; “தோடணி மகளிர் போன்ற துணர்மலர்க் கொம்பர் கொம்பின், ஆடவர் போல வண்டு மடைந்தன” (சீவக 852)

3015. துளும்புதல் - அசைதல். தோகையர் - கோவியர். உளர்ந்த - பரவிய. குமுதம் - ஆம்பல் மலர். கமலம் - தாமரை. தோகையர் சிலர் குமுதமாகத் தான் மதி போன்றும், முறுவல் நல்லார் சிலர் கமலமாகத் தான் பருதி போன்றும் இருந்து அவர்கள் நலத்தைத் திகழ்வித்தான்.

3016. அருப்பு இள நிலவு கால - அரும்பின் இள நிலவொளி கக்கும்படி. சிரிப்பினும் செயலினும் விருப்பினும் விளைவினும் மாதர் மனத்தை மகிழ் விளைத்தல் செய்தான்.

3017. காவு - சோலை. எம்மான் - கண்ணபிரான். பால் போலும் நிலாவின் பயனைக் கொண்ட கங்கைத் திரையிடத்து. கங்கையை உற்ற அன்னம் போலும் மாதர். ஆடல் செய்தான் - விளையாடினான்.

(பி - ம்.) 2. பானலார் பயன்.

3018. முருகுவாய் சொரியு முல்லை மொய்ம்மலர் தெரிந்து வேய்ந்தோர்
வரிமுலைத் துவர்வா யேழை வணரிருங் கூந்த னோக்கும்
இருள்படப் பொதுளுஞ் சோலை யின்னிணர் கிழித்து வீழ்ந்து
விரிகதிர் நிலவு பாய்ந்து விளங்குபூங் கான நோக்கும். (உ௩)

3019. சிறைச்சுரும் பெழுந்து பாடச் செவ்விதிற் றிகழ்சிந் தூரம்
பொறித்தமற் றொருத்தி நீலப் புரிகுழற் காடு நோக்கும்
எறித்தசெம் பவள வல்லி யிடைத்தவழ்ந் தழகு பூத்து
நெறித்தபைந் தோட்டு மன்ற னெய்தலங் காடு நோக்கும். ()

3020. மருக்கமழ் கமலக் கையான் மான்மதத் திலகந் தீட்டி
முருக்கித ழொருத்தி யந்தண் முகிழ்நகை வதன நோக்கும்
உருக்கிளர் மறுவிற் றூகி யொண்கலை நிறைந்து தோன்றும்
திருக்கிளர் நிலவு பூத்த திங்களங் கவினு நோக்கும். (உ௫)

3021. தீட்டுசாந் தழித லானே தேங்கமழ் நாந்தங் கோட்டி
வாட்கணு ளொருத்தி கொம்மை வரிமுலைச் செவ்வி நோக்கும்
பாட்டயர்ந் தொழுகு நீலப் பனிச்சிறை வண்டு மொய்க்கும்
மோட்டிருஞ் சுனையிற் பூத்த முளரிமெல் லரும்பு நோக்கும். ()

3018. முருகு - தேன். முல்லை மலரைத் தெரிந்து வேய்ந்து; தெரிந்து - ஆராய்ந்து. வேய்ந்து - ஒரு கோபியின் கூந்தலில் அணிந்து. ஏழை - ஒரு கோபிகை. வணர் - வளைவு. நோக்கும் - பார்ப்பான். பொதுளும் - தழைத்த. இணர் - பூங்கொத்து. வீழ்ந்து - நிலத்தே பட்டு. கானம் - காட்டை. இருள் நிறைந்த சோலைக்குக் கோபிகையின் கூந்தலும் முல்லை மலருக்கு நிலவும் உவமை.

3019. சுரும்பு - வண்டு. செவ்விதின் - நன்றாக. சிந்தூரம் - நெற்றியி லணிதற்குரிய ஒருவகைச் சிவப்புப் பொடி; கம்ப. மிதிலைப். 151. ஒருத்தியின் குழற்காட்டை நோக்குவன். எறித்த - ஒளி வீசிய. வல்லி - கொடி. நெறித்த - நெருங்கிய. தோடு - இதழ். மன்றல் - வாசனை. நெய்தல் - கருநெய்தற் பூவை யுடைய. குழற்காட்டிற்கு நெய்தற் காடும், சிந்தூரத்திற்குப் பவள வல்லியும் உவமை.

3020. மரு - வாசனை. தாமரை மலர் போன்ற கையால். மான்மதத் திலகம் - கஸ்தூரிப் பொட்டை. தீட்டி - எழுதி. உருகிளர் - அழகு விளங்கும். மறுவிற்றூகி - களங்க முடையதாய். திங்கள் - முழுச் சந்திரன். பொட்டிட்ட முகத்திற்கு மறுவையுடைய முழுச் சந்திரன் உவமை.

3021. சாந்து - மார்பிற் பூசிய குங்குமச் சாந்தம். தேம் - இனிமை. நாந்தம் - கஸ்தூரிக் குழம்பு. கோட்டி - குழைத்து. கொம்மை - பெருமை. செவ்வி - அழகு. பாட்டு அயர்ந்து - பாடுதலைச் செய்து. நாந்தம் கோட்டிய முலைக்கு, வண்டுகள் மொய்க்கும் முளரி யரும்பு உவமை.

3022. ஒளிக்கரு மணியிற் செய்த வெண்டொடி திருத்தி மற்றோர்
கிளிக்குல மருட்டு மந்தீங் கிளவியஞ் செங்கை நோக்கும்
துளிப்பசுந் தேறன் மாந்தத் தோடுவாய் வைக்கு நீலக்
களிச்சுரும் புடுத்த வந்தண் காந்தண்மென் முகிழு நோக்கும். (உஎ)

3023. வண்ணநுண் சுண்ண மாட்டி வளரிளந் திங்க ளன்ன
ஒண்ணுத லொருத்தி மாமை யொழுகுமா மேனி நோக்கும்
பண்ணமர் மழலைப் பல்காற் பறவைவீழ்ந் துழுத மென்பூந்
தண்ணறுந் தாது துற்றுத் தயங்குசெந் தளிரு நோக்கும். ()

கலிநிலைத்துறை.

3024. வள்ளுறை சிந்து மழைப்புயன் மின்னு மணந்தாங்குத்
தெள்ளற லெக்கர் சிறப்பவொர் மாதொடு சென்றூடி
ஒள்ளிழை நின்முக மொப்பில வாகியு டைந்தெங்கும்
கள்ளவிழ் தாமரை மாமலர் வாடுதல் காணென்னும். (உகூ)

3025. தொங்க லணிந்தொரு சோர்குழ லாளொடு சூன்முற்றும்
சங்க முழங்கிய தண்டுறை சென்று தலைப்பெய்யா
மங்கைநி னங்கலுழ் வாண்முக மஞ்சிய வண்ணத்தால்
பைங்கதிர் மாமதி காரி லொளிப்பது பாரென்னும். (௩௦)

---

3022. மணி - மாணிக்கம். தொடி - தோள்வளையல். கிளவி - ஒரு கோபிகை; ஆகு பெயர். மாந்த - உண்ணும் பொருட்டு. தோடு - இதழில். சுரும்பு - வண்டு. உடுத்த - சூழ்ந்த. காந்தள் முகில் - காந்த ளரும்பு. கருமணியிற் செய்த தொடியையுடைய கைக்குச் சுரும்புடுத்த காந்தள் உவமை.

(பி - ம்.) 1. ஒளிக் கதிர் மணியிற்.

3023. வண்ணம் - அழகு. சுண்ணம் - வாசனைப் பொடி. சுண் ணத்தை ஆட்டி மாமை யொழுகும மேனியை நோக்கும். மாமை - பொன் னிறம். பண் அமர் - இராகத்தை விரும்புகின்ற. மழலை ஒலியை யுடைய பல்காற் பறவை - வண்டுகள். தாது - மகரந்தப் பொடி. துற்று - நெருங்கி. சுண்ண மாட்டிய மாமை மேனிக்குத் தாது துற்றிய தளிர் உவமை.

3024. வள் உறை - பெரிய துளிகளை. புயல் மின்னு மணந்தாங்கு - மேகம் மின்னலைக் கலந்தாற் போல. எக்கர் - இடுமணலில். ஓர் மாது - ஓர் இடைப் பெண். ஒள்ளிழை - இடைப் பெண்; விளி. உடைந்து - விரிந்து. கள் - தேனை. என்னும் - என்று கூறுவான்.

3025. தொங்கல் - மாலை. சூல் முற்றும் சங்கம் - கருப்பம் முற்றிய சங்கு. தலைப்பெய்யா - அம் மங்கையை முற்படுத்தி. மங்கை - விளி. நின் அம் கலுழ் - உன்னுடைய அழகு ஒழுகுகின்ற. முகத்திற்கு அஞ்சிய வண் ணத்தால். மதி - சந்திரன். காரில் - மேகத்தில்.

3026. ஓடரி மைக்க ணொருத்தியொ டின்னற வூறுந்தண்
கோடணி கைதை வனத்து மலர்ந்தலர் கொய்தாய்நின்
காடு படுங்குழல் காண்டொறு மென்றுகொல் காளிந்தி
ஆடு திரைக்கையின் முத்த மளிக்கு மதிர்ந்தென்னும். (௩௧)

3027. கோழரை நாக மணந்த மணற்சிறு குன்றேறி
மாழைமென் னோக்கியொர் மாணிழை யோடு மகிழ்ந்தாடித்
தாழ்குழ னின்னகை யொப்பநி னைந்துகொ றண்முத்தம்
சூழ்பவ ளக்கிளை யூடு செறிந்த சுடர்த்தென்னும். (௩௨)

3028. ஆடு மொருத்தியொ டாங்கரு விப்புன லாய்கோதை
சூடு மொருத்தியொ டின்றொடை யாழிசை சூழ்வந்து
பாடு மொருத்தியொ டுற்ற பளிக்கறை சென்றெய்திக்
கூடு மொருத்தியொ டின்னிள வாடை குளிர்ப்பெய்த. (௩௩)

3029. பாட திருத்தி யிளங்களி வண்டு பரந்தாடும்
ஆட திருத்தி யரும்புக வீழுறு மந்தாமச்
சூட திருத்து மொருத்தியை மென்மொழி சொல்லாநின்
றூட திருத்து மொருத்தியை யுள்ள முவப்பூர. (௩௪)

---

3026. அரி - செவ்வரி. ஒருத்தியொடு - ஓர் இடை மாதுடன். நறவு - தேன். கோடு - தாழையின் கொம்பு. கைதை - தாழை. மணந்து - கலந்து. காடுபடும் குழல் - காட்டை ஒப்புமையாகப் பெற்ற கூந்தல். காளிந்தி - யமுனை. அதிர்ந்து அளிக்கும்.

3027. கோழரை நாகம் - கொழுவிய அரையையுடைய சுரபுன்னை. மணந்த - கலந்த. மாழை - இளமை. நோக்கியாகிய மாணிழையோடு; ஓர் இடை மாதுடன். தாழ் குழல் - இடைமாது; விளி. நகை - பற்களை. முத்தம் - முத்துக்கள். சுடர்த்து - ஒளியை யுடையது.

3028. ஒருத்தியோடு ஆங்கு அருவிப் புனலாடும். ஒருத்தியோடு ஆய் கோதை சூடும்; கோதை - பூ மாலை. தொடை - நரம்புடைய. ஒருத்தி யோடு சூழ் வந்து யாழிசையைப் பாடும். ஒருத்தியோடு பளிக்கறை சென்று வாடை குளிர்ப்பக் கூடும்.

3029. ஒருத்தியைப் பாடுதலைத் திருத்தி, ஆடுதலைத் திருத்தத் தாமச் சூடலைத் திருத்தும்; தாமச் சூடல் - மாலை யணிதல். திருத்தும் - திருத்து வான். உள்ளம் உவப்பூர மென் மொழி சொல்லா நின்று ஒருத்தியை ஊடலைத் திருத்தும். ஊடல் - புலவி.

3030. இம்முறை காம முழந்தவ ஞகி யியைந்தாட
நம்முழை யார்வம் விழைந்தன னென்று நயப்பெய்திச்
செம்மல ராணிகர் சின்மொழி மாதர் செருக்குற்றூர்
மைம்முகி லன்னவ னவ்வழி மின்னின் மறைந்தானல். (௫௫)

கலிவிருத்தம்.

3031. இடிபோ லதிரீர்ங் கவுள்வே ழமனுன்
கொடிபோ லுமொர்கோ தையொடாங் ககல
வடிபோ லமர்ங் தகண்மா ரியுகப்
பிடிபோன் மறுகுற் றனர்பே தையரே. (௫௬)

3032. மறைதே டருமா யவனு குமெனு
நறைவார் குழலார் சிலர்நண் ணினரால்
வெறிமே வியபூஞ் சினைவிள் ளுமிணர்ப்
பொறையான் மெலிபூ வையிளந் தருவே. (௫எ)

3033. ஆலப் பகுவா யரவத் துயிரீர்
மாலுற் றனனு மெனமா லுழவா
நீலச் சிறுகுன் றினைநீள் விழிசெஞ்
சேலிற் பிறழ்வார் சிலர்சேர்ந் தனரால். (௫அ)

---

3030. காமத்தி லுழந்தவனுகி. நம்முழை - நம்மிடத்து ; என்றது கோவியரை. ஆர்வம் - ஆசையை. நயப்பு எய்தி - பெருமித மடைந்து. மலராள் நிகர் - திருமகளை ஒத்த. மாதர் - கோவியர். முகிலன்னவன் - கண்ணபிரான். அவ்வழி - அவ்விடத்து. மின்னின் - மின்னலைப் போல.

3031. அதிர் - முழங்குகின்ற. கவுள் - கன்னம். வேழமனுன் - கண்ணபிரான். கோதையொடு - ஓர் இடை மாதுடன் ; என்றது நப்பின்னைப் பிராட்டியையோ வென்று ஊகிக்கப்படுகிறது. வடுபோல - மாவடுவின் பிளவு போல. பிடி - பெண் யானை. மறுகுற்றனர் - மயங்கினர்.

3032. மறை தேடரும் - வேதம் தேடுதற் கரிய. குழலார் - கோவியர். வெறி - வாசனை. சினை - கிளை. இணர்ப் பொறையான் - பூங் கொத்துக்களின் பாரத்தால். பூவை யாகிய இளந்தரு - காயா மரம். பூவைத் தருவை, மாயவ னுகுமெனுக் குழலார் நண்ணினர்.

3033. ஆலம் - விஷத்தை யுடைய. அரவம் - ஆதிசேடன். அரவத் துயிலைத் தீர்ந்த மால். மால் - திருமால். மாலுழவா - மயக்கத்தால் உழன்று. நீலக் குன்றினை மாலென்று மயங்கினர் என்றபடி. பிறழ்வாராகிய சிலர் ; கோவியர் சிலர்.

3034. புவியிற் றிகழ்பொற் றருவல் லியெனக்
கவினிற் பொலிவார் சிலர்கண் ணனெனப்
பவளக் கொடியுற் றபளிக் கறைமேல்
தவழப் புயல்சென் றுதழீஇ யினரால். (௩௯)

3035. மண்ணு மணியே மழவே றனையாய்
உண்ணு வமுதே யெமதுள் ளுயிரே
கண்ணு வெமகண் ணெதிராய் கொலென்னப்
பண்ணார் மொழியார் பலபன் னுவரால். (௪0)

3036. தளரா நிலவுத் தழலிற் றமியேம்
குளியா வுருகிக் குழையத் தனிநீ
விளையா டுதியோ விரிதா ரவனே
இளவா ளரியே யெழுதற் கரியாய். (௪௧)

3037. வார்கொண் டிதழ்வாய் மழைவிண் டொழுகக்
கார்கண் டலருங் கமழ்வெண் டளவே
நீர்கொண் டெழுகார் நிகரா யவனெம்
ஏர்கொண் டனனெவ் வழியே கினனே. (௪௨)

---

3034. புவி - பூமி. பொற்றரு வல்லியெனக் கவினிற் பொலிவார் - கற்பக தருவைச் சேர்ந்த காமவல்லிக் கொடியைப் போல் அழகால் விளங்குகின்ற கோவியர். புயல் தவழுதலால்; புயல் - மேகம். தழீஇயினர் - தழுவினர். புயலைக் கண்ணனெனத் தழுவினர்.

3035. மண்ணு மணியே-கழுவாத நீலமணி போன்றவனே. மண்ணு - வேகடம் செய்யாத எனலுமாம். மழ ஏறு - இளைய வெருது. கண் எதிராய் கொல் என - கண்ணிற்கு எதிர்ப்படாயோ என்று. மொழியார் - கோவியர். பன்னுவர் - கூறுவர்.

3036. தளரா - தளர்ந்து. நிலவாகிய தழலில்; தழல் - தீ. குளியா - மூழ்கி. குழைய - வருந்த. தனியாக நீ விளையாடுதியோ; தனி நீ - ஒப்பற்ற நீ எனலுமாம். அரி - சிங்கம். எழுதற்கு அரியாய் - எழுதுதற்கரிய வடிவ முடையவனே.

3037. இதழ்வாய் - இதழினிடத்து. இதழின் வாய் மழையால் விண்டு ஒழுக எனலுமாம். கார் கண்டு அலருகின்ற தளவே; கார் - மேகம். தளவு - முல்லை. கார் நிகராயவன் - கரு மேகத்துக்கு ஒப்பானவன். எம் ஏர் கொண்டனன் - எமது அழகைக் கைக்கொண்டனன்.

3038. தளவே யறியாய் தடமார் பணியும்
துளவே யறியுஞ் சொலவல் லகொலோ
களவே யுரைநின் கனிபோல் பவனெம்
அளவே பிறிவுற் றகலும் புலமே. (சங)

3039. இரவுத் தலையுந் துயிலா திழுமென்
றுருவுக் கதிர்மா மணிகொண் டொழுகும்
அருவித் திரைகா ளறிவீ ரறையீர்
மருவிப் பிரியும் மணிவண் ணனையே. (சச)

3040. கன்றால் விளவின் கனிசிந் தியமால்
சென்றா டிடனீர் தெரிவுற் றிலிரோ
பொன்றா ழிணரிற் பொலிவுற் றிடுதண்
கொன்றாய் குரவே கொடியீ ருரையீர். (சரு)

3041. தாதா டிடியவர் தளிர்மா தவியே
போதார் துளவப் புயலின் செயலீங்
கேதோ புகல்வா னிதழ்விண் டதுமற்
றோதா யளிநீ யுடையா யலையோ. (சசா)

---

3038. தளவே - முல்லையே. மார்பு - கண்ணபிரானுடைய மார்பிலே, துளவு சொல வல்ல கொல். களவே - களா மரமே. நின் கனி போல்பவன் எம்மைப் பிரிவுற்று அகன்ற புலத்தை உரை ; கனி - களவின் கனி. இது கண்ணபிரானுடைய நீல நிறத்திற்கு உவமை.

3039- இரவுத் தலையும் - இரவினிடத்தும். இழுமென்று ஒழுகும் அருவித் திரைகாள் ; மணி கொண்டு ஒழுகும் அருவித் திரைகாள் என்க ; இழுமென்று என்றது ஒலிக் குறிப்பு. மருவி - எம்மைத் தழுவி. மணி வண்ணனை அறிவீராயின் அறையீர்.

3040. கன்றால் விளவின் கனியைச் சிந்திய மால் - கண்ணபிரான். 2792-2793. சென்று ஆடுகின்ற இடனை நீர் தெரிவுற்றிலிரோ ; ஆடுதல் - விளையாடுதல். இணர் - பூங்கொத்து. கொன்றாய் - கொன்றை மரமே. குரவு - குரவ மரம். கொடியீர் - கொடுமையை யுடையீர் ; கொடியை யுடையீர்.

3041. தாது - மகரந்தப் பொடி. மாதவி - குருக்கத்தி. துளவப் புயலின் - கண்ணபிரானுடைய ஏதோ புகல்வான் இதழ் விண்டது - எக் காரியத்தையோ சொல்லும் பொருட்டு இதழ் அலர்ந்தது ? ஓதாய் - சொல்வாயாக. அளி - கருணை.

தாவு கோச்சகக்கலிப்பா.

3042. தண்ணெனுங்கூர் வெண்முறுவற் றண்டாள நிரைமுகிழ்க்கும்
வண்ணநில வுக்கொழுந்தான் மடநாணும் பெண்ணலமும்
உண்ணிறையு நெஞ்சமதொ டொருங்குகொடு போயகன்ற
கண்ணன்று னிறுத்தபுலங் காட்டாய்கொல் கழைமுத்தே. ()

3043. வண்டா யிதழ்குடைய வாயவிழ்ந்து செய்யபொலந்
தண்டா துறைத்ததடந் தாமரைக்கண் டுஞ்சுனியால்
கண்டாய்நீ யிலையோகொல் களவத்தெங் காதலனை
விண்டாயின் றிலையோதண் விரிநீரக் கொழுஞ்சுனையே. (சஅ)

3044. தேம்புசிறு மருங்கொசிக்குஞ் செம்மாந்த கொங்கையெனத்
தேம்படுந் தீங்கிளவி சிலகிளந்து தோடோய்ந்த
ஆம்பலந்தீங் குழலிசையெம் மாயர்கடம் போரேற்றை
ஆம்பனீ யறிதின்யறே யஃதுரையா திருக்குதியே. (சகூ)

3045. மட்டருந்து வாகைபுனை மழலையிசைச் சுரும்பூதி
நெட்டிதழ்தே யப்பெரிது நெறிக்குமிதழ்க் கருநெய்தால்
பட்டமாந் தளிர்தளிர்ப்பப் பண்ணூருங் குழலிசைத்த
கட்டெழிலங் காளையுருக் காட்டுதற்கென் செய்வேமே. (ருo)

---

3042. தண் - குளிர்ச்சி. முறுவலாகிய தாள நிரையை முகிழ்க்கும் நிலவுக் கொழுந்தால், நாணையும், நலத்தையும், நிறையையும், நெஞ்சத்தொடு கொடு போய் அகன்ற கண்ணன் இறுத்த புலத்தைக் காட்டாய் கொல். தாள நிரை - முத்து வரிசை. முகிழ்க்கும் - தோற்றுவிக்கும். இறுத்த - தங்கிய. புலம் - இடம். கழை முத்தே - மூங்கிலிற் றோன்றிய முத்தமே.

3043. வண்டு இதழைக் குடைதலால். பொலந் தண்டாது - பொன் போன்ற குளிர்ந்த பூந்தாது. உறைத்த - உதிர்ந்த. தாமரையாகிய கண்; சுனையில் உள்ள தாமரை, அதற்குக் கண் போன்றுள்ளது. காதலன் - கண்ண பிரான். இன்று விண்டாயிலையோ. நீரம் - நீர்.

3044. தேம்பு - கெடுகின்ற; வருந்துகின்ற எனலுமாம். மருங்கு - இடை. செம்மாந்த - இறுமாந்த. தேம்படு - இனிமை பொருந்திய. கிளந்து - கூறி. உன் கொங்கை சிறு மருங்கை ஒசிக்கும் எனக் கிளவி சில கிளந்து தோளைத் தோய்ந்த போரேற்றை; குழலிசைக்கும் போரேற்றை; எம் ஆயர்கள் தம் போரேற்றை; என்பன கண்ணபிரானை. ஆம்பற் குழல் 1 : 3146. வெண் கலத்தால் ஆம்பற் பூ வடிவாக அணைசு பண்ணிச் செறித்த குழல் என்பர். அடியார்க்கு நல்லார்; சிலப். பக். 445, 457 ஆம்பலென்னும் பண்ணையுடைய குழல் என்பர் நச்சினர்க்கினியர்; கலி. 108 : 62; 3. ஆம்பல் - ஆம்பற் பூ.

3045. மட்டு - தேன். சுரும்பு - வண்டு. ஊதி - தாதுக்களை உண்டு. நெறிக்கும் - ஒடிக்கின்ற. தளிரைத் தளிர்க்கும்படி. பண் - இராகம். கட்டெழில் - மிக்க அழகையுடைய. காளை - கண்ணபிரான்.

3046. முள்வாய்வெண் சங்குநனி முரலுமிசை செவியோர்ந்து
கள்வாய்ச்செங் கழுநீர்நீள் காலனைய செங்கமலத்
துள்வாய்க்கண் டுயில்குருகே யொன்றுமுணர்ந் தாயிலையே
புள்வாயங் கிடந்தகரும் புயல்காந்து போயதுவே. (ருக)

3047. என்றென்று ளம்முருகி யிளமாக்கா வகத்துழையே
தென்றலெனும் பசுங்கொழுந்துந் தெள்ளுநிலா வெண்மதியும்
கொன்றுநனி குறைத்திட்ட குறையாவி கொண்டயரா
நின்றுநிறை தாமழிந்த நெஞ்சமது கலுழ்ந்தனரால். (ருஉ)

கலிவிருத்தம்.

3048. தடங்கொடா மரைக்கையாற் றண்ணந் தாரினன்
பிடுங்கிய வரைத்தலை பெய்யு மாரிபோல்
நெடுங்கணீர் முலையுக நின்று நீணிலம்
கடந்தமா முகில்செயல் காட்டன் மேயினர். (ருங)

3049. மைதவழ் நெடுவரை மாரி காப்பநல்
கொய்துழாய்ப் படலையங் கொண்ட லேந்தல்போல்
ஐதெழின் முலைத்தலை யழுந்த வேனிலான்
எய்ததா மரைபறித் தேந்து வார்சிலர். (ருச)

---

3046. முள்ளை வாயிலே யுடைய சங்கு. முரலும் - முழங்குகின்ற. சங்கின் இசையைச் செவியா லோர்ந்து கமலத்துள் வாய்க்கண் துயில்கின்ற குருகே; குருகு - ஒரு வகைப் பறவை; காரையன்று புள்ளின் வாயை அங்கு இடந்த கரும் புயல்; புள் - பகாசுரன். இடந்த - பிளந்த. புயல் - கண்ணபிரான்.

3047. இள மரக்கா அகத்து உழை - இளைய மரங்களையுடைய சோலை யிடத்தின் பக்கத்தே. தெள்ளு - தெளிந்த. நனி - மிக. குறை யாவி கொண்டு - எஞ்சியுள்ள உயிரைக் கொண்டு. அயரா - அயர்ந்து, சோர்ந்து. நெஞ்சமது - நெஞ்சம்; அது, பகுதிப் பொருள் விகுதி.

3042—3047-ஆம் பாடல்களில் ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வோரடி களில் ஒவ்வொரு சீர்கள் குறைந்தும், பாடங்கள் பலவகையாக வேறுபட்டும் ஓரேட்டுப் பிரதியிற் காணப்படுகின்றன.

3048. தாரினன் தாமரைக் கையால் பிடுங்கியவரைத் தலையில் மாரி பெய்வதைப் போல் முலையில் கண்ணீர் உக நின்று; தாரினன் - கண்ண பிரான். தலை - உச்சி. நின்றது கோவியர். நிலம் கடந்த முகிலின் செய லைக் காட்டுதலை மேயினர்; மேயினர் - பொருந்தினர்.

3049. படலை - மாலை. கொண்டல் - கண்ணபிரான். ஐது எழில் - மெல்லிய அழகுடைய. வேனிலான்-மன்மதன். மன்மதனுடைய ஐந்து அம்பு களுள் தாமரையும் ஒன்று. கொண்டல் மாரியைக் காப்ப வரை ஏந்துதலைப் போல, சிலர் தாமரையைப் பறித்து ஏந்துவார்.

3050. கரியவன் வெண்டுகில் கவர்தல் காட்டுவான்
விரிமலர்ப் பசுந்தொடை வேனின் மன்னவன்
பொருகணை முகத்தெழு புகைமு கந்தற
நிரைவளைச் செங்கா நீட்டு வார்சிலர். (ருஙு)

3051. தொளைவழி யிளநறுச் சொரியுந் தீங்கழை
ஒளிமணி வண்ணனின் றாது மாறுபோல்
முளைமதிக் கவிகையான் முரிய வாங்கிய
வளரிளம் பசுங்கழை வாய்வைப் பார்சிலர். (ருசு)

3052. வெஞ்சின வரவென வெறுத்த தாரின்மேல்
துஞ்சிய களியளித் தொழுதி பாண்செய
நஞ்சுவாய் வழிந்திட நாகத் தாடிய
அஞ்சனப் புயலினின் றூடு வார்சிலர். (ருஎ)

3053. மோட்டிளங் குரும்பைபோன் முகிழ்த்த வெம்முலை
ஆட்டுசெஞ் சாந்தினை யள்ளி யங்கையால்
பாட்டளித் துளவினன் பருக வாரிவெங்
காட்டழ லேந்துதல் காட்டு வார்சிலர். (ருஅ)

---

3050. கரியவன் - கண்ணபிரான். துகில் கவர்தலைக் காட்டும் பொருட்டு. வேனில் மன்னவன் - மன்மதன். புகை - பனி. வளையை யணிந்த கரத்தை.

3051. நறு - தேன். கழை - வேய்ங்குழலை. மணிவண்ணன் - கண்ணபிரான். முளைமதி - தோன்றிய சந்திரன். மதிக் கவிகையான் - சந்திரனைக் குடையாக வுடையவன்; மன்மதன். முரிய - வளைய. கழை - கரும்பு.

3052. அரவென - பாம்பென்று. தாரின் மேல் - மாலையின் மேல். துஞ்சிய - உறங்கிய. அளித் தொழுதி - வண்டுக் கூட்டம். பாண் செய - பாடுதலைச் செய்ய. நாகம் - காளியன். அஞ்சனப் புயலின் - கண்ணபிரானைப் போல். மாலைக்குப் பாம்பு உவமை.

3053. மோடு - பெருமை. முகிழ்த்த - அரும்பிய. முலையில் ஆட்டு கின்ற சாந்தினை அங்கையால் அள்ளி. துளவினன் - கண்ணபிரான். சிலர் செஞ் சாந்தினை அள்ளி நின்று, துளவினன் காட்டழ லேந்துதலைக் காட்டு வார்.

3054. நனிவரும் பனிமலர் நான்ற கூந்தலார்
அனைவருங் குழீஇயிள வன்ன நேர்பவர்
வனைவருங் குருசில்கார் வண்ணங் காட்டிய
துனைவருங் கடும்புனல் யமுனை துன்னினர். (ருகூ)

3055. இடுமண லெக்கரி னிறுமென் சாயலங்
கொடியிடை மடந்தையர் கொய்து மாய்முகில்
மடலவிழ் மலரடி வைப்பு நோக்கினர்
கடிகமழ் தாமரைக் கண்க ளிப்பவே. (கூ0)

3056. பூவைமென் முகையவிழ் பூவை யன்னவன்
சேவடி யழுந்தின தேம்பெய் கோதையோர்
பாவையை யெடுத்தனன் படர்கின் றூன்கொலென்
றேவுறு பிணையனா ரிரங்கி யேகினர். (கூக)

3057. நெட்டிடை கழிதலு நிலக்கு வித்தென
விட்டொளிர் வெண்மணற் குன்ற மீமிசை
இட்டிடை யொசிதர வெழுந்த வெம்முலை
மட்டவிழ் மலரடி வைப்பு நோக்கினர். (கூஉ)

3058. உருவவெண் ணிலாக்கதி ருகுத்த முத்தவெண்
பருமணன் ஞெமரிய பனிகொள் பூந்துறைத்
தெரியிதழ் நறுமலர் சிதர்ந்து தாழ்ந்தவை
கருநெறிக் குவளையங் கண்ணிற் கண்டனர். (கூங)

---

3054. நனி - மிக. பனி - குளிர்ச்சி. நான்ற - தொங்கிய. கூந்தலார் அனைவரும் - கோவியரெல்லாரும். குழீஇ - கூடி. வனைவரும் - எழுதுதற்கரிய. குருசில் - கண்ணபிரானுடைய. துன்னினர் - அடைந்தார்.

3055. இடு மணலாகிய எக்கரில்; எக்கர் - மணல் மேடு. இறுமென் - முறியுமென்று சொல்லத்தக்க. மடந்தையர் - கோவியர். முகில் - கண்ணபிரானுடைய. வைப்பு - வைத்த இடத்தை. கடி - வாசனை. மடந்தையர், எக்கரில் முகிலின் அடி வைப்பைக் கண் களிப்ப நோக்கினர்.

3056. பூவை - காயா மரத்தின். பூவை யன்னவன் - காயா மலரைப் போன்ற கண்ணபிரான். கோதையை யுடைய ஓர் பாவையை எடுத்துப் படர்கின்றூன் கொல் என்று. ஏ - அம்பு. பிணையனார் - கோவியர்.

3057. நெட்டிடை கழிதலும் - நீண்ட வழியிடம் நீங்கியவுடன். நிலாக் குவித்தென ஒளிர்கின்ற வெண் மணற் குன்றின் மிசை; 2428, 3058. இட்டிடை - சிறிய இடை. ஒசிதர - முறியும்படி. வெம்முலை - கொங்கையின்.

3058. உருவம் - அழகு. வெண்ணிலாக் கதிரை உகுத்தாற் போன்ற முத்த வெண் மணல்; 3057. ஞெமரிய - பரந்த. பூந்துறையில் மலர் சிதர்ந்து தாழ்ந்தவற்றைக் கண்ணினுற் கண்டனர்.

3059. பாடல்சால் சிறப்புடைப் பவள வாய்முகில்
தோடவிழ் நறுமலர் சூட்டிப் பாவையோ
டாடிய சூழலீ தாகு மென்றுநின்
ருேடரித் தடங்கண்முத் துறைப்ப மாழ்கினர். (சுச)

3060. தணந்தவ ரின்னணந் தளர்வுற் றையபொன்
சுணங்கணி வனமுலை சுமந்து பின்செல
மணங்கொளஞ் சாயலம் மதர்வை நோக்கியைப்
புணர்ந்துடன் போயினன் பூவை வண்ணனே. (சுரு)

3061. அல்லிநாண் மலர்புரை யஞ்செஞ் சீறடி
மெல்லிய னின்னடை வெருளி யன்றுகொல்
ஒல்லென மடவன மொதுங்கு மீங்கெனச்
சொல்லினன் புல்லினன் றொடையல் சூட்டினன். (சுசு)

3062. அரும்பவிழ் நறுமல ரலங்கல் சூட்டியும்
மருங்கிறு மென்னவீழ் வரிவண் டோச்சியும்
கரும்புய லளிசெயக் கண்டு சாலவும்
விரும்பின னெனக்களி விளைஇவி யந்தனள். (சுஎ)

3063. நடத்தலோ வரிதினி நம்பி வேண்டுழி
எடுத்தெனை யேகுவா யெனமி ழற்றலும்

3059. முகில் - கண்ணபிரான். பாவையோடு - ஓர் இடை மாதுடன். ஆடிய சூழல் - விளையாடிய சோலை. முகில், பாவையோடாடிய சூழல் இது ஆகு மென்று. முத்து உறைப்ப - முத்துப் போல் துளி துளிப்ப. மாழ்கினர் - மயங்கினர்.

3060. தணந்தவர் - பிரிந்தவராகிய கோவியர். ஐய - வியக்கத்தக்க. பொன் போலும் சுணங்கு சாயலையுடைய மதர்வை பொருந்திய நோக்கியைப் புணர்ந்து. பூவை வண்ணன் - கண்ணபிரான்.

3061. அல்லி மலரைப் புரையும் அடியையுடைய மெல்லியல்; அல்லி மலர் - அக விதழையுடைய தாமரையுமாம்; மெல்லியல் விளி. நின் நடைக்கு வெருவி; வெருவி - அஞ்சி. ஒல்லென - விரைய. ஈங்கு ஒதுங்கும் என; என - என்று. தொடையல் - மாலை.

3062. அலங்கல் - மாலை. மருங்கு இறும் என்ன - இடை முறியு மென்று. வரிகளை யுடைய வண்டை. கரும் புயல் - கண்ணபிரான். அளி செயக் கண்டு - அன்பு செய்தலைப் பார்த்து. சாலவும் - மிகவும். விரும்பினன் - என்னை விரும்பியுள்ளான். களி விளைஇ - களிப்பை விளைத்து.

3063. நம்பி, இனி நடத்தல் அரிது; நம்பி - கண்ணபிரான்; விளி. வேண்டுழி - விரும்பு மிடத்திற்கு. மிழற்றலும் - கண்ணனுடன் சென்ற

சுடர்த்தொடி மடநலாய் தோளி னேறென
வடித்தபூந் துளவினன் வழங்கி னனரோ. (சுஅ)

3064. இங்கிலே மடவர லேறு வானெழும்
அங்கிலே யாடல்வா ளரவி னுடிய
கன்னியங் துளவினன் காப்பக் காண்கலள்
பொன்னலர் கோதையும் புலம்புற் றேங்கினள். (சுகூ)

வேறு.

3065. வழிந்தநறை தோய்ந்தவிள வாடைவர வொல்கா
விழுந்தவள வான்மதிசெய் வெங்கதிரின் வாடும்
எழுந்தளரு மென்மெலவி யங்கியிடை தேடும்
அழுந்தமிய ளுற்றதுய ரார்புகல்வ ரம்மா. (எ0)

3066. அரக்கெறியு நீலமல ரன்னவிழி நல்லார்
புரிக்குழல்பு லம்புறுபு லத்திடையி றுத்தார்
மருக்கமழும் வல்லிபுரை மாதிவளு முள்ளம்
செருக்கினள்கொ லென்றுதம சிந்தைநினை வுற்றார். (எக)

3067. ஐயனெவ னுற்றன னணங்கென விறைஞ்சிப்
பொய்யளி புரிந்துமுலே புல்லியிவ ணெய்தா

---

மங்கை கூறுதலும். சுடர்த் தொடியை யுடைய மடநலாய் ; விளி. துளவி னன் - கண்ணபிரான்.

3064. மடவரல் - அம் மங்கை. ஏறுவான் எழும் அங்நிலே - ஏறும் பொருட்டு எழுகின்ற அங் நிலேயில். துளவினன் - கண்ணபிரான். காப்ப - மறைய. காண்கலளாய்க் கோதையும் புலம்புற்று ஏங்கினள்.

3065. நறை - தேன். ஒல்கா - ஒல்கி. விழும் - விழுவாள். தவளம் - வெண்மை. மதி செய்கின்ற கதிரினல் ; வாடு - வாடுவாள். எழும் - எழு வாள். தளரும் - தளர்வாள். மென்மெல - மெத்தென. இடை - வழியில். தேடும் - தேடுவாள். அழும் - அழுவாள். தமியள் - தனியளாகிய அம் மங்கை.

3066. அரக்கு எறியும் - சிவப்பு நிறம் வீசுகின்ற. நல்லார் - கோவியர். புரிக் குழல் - கண்ணனுடன் சென்ற மாது. புலம் - இடம். இறுத்தார் - தங்கினர். மரு - வாசனே. மாதாகிய இவளும் ; என்றது கண்ணபிரானேப் பிரிந்து வருந்தும் மாதை. செருக்கினள் கொல் - கர்வம் கொண்டாள் போலும். தம சிந்தை - தம் மனத்தில்.

3067. அணங்கு ; ஐயன் எவண் உற்றனன் என ; அணங்கு - இடை மாது ; விளி. ஐயன் - கண்ணபிரான். பொய் அளி புரிந்து - பொய்ம்மை

வெய்யனெனை யுந்தனிவி டுத்தன னெனத்தன்
மையுலவு செய்யவிழி மாரியுக நின்றாள். (எஉ)

3068. வண்ணமதி கொண்டுள மயங்கி மெலிகின்றேம்
கண்ணினெதிர் நின்வதன காந்தியு முறாதோ
அண்ணன்மத வேழமனை யாயெனவி ரங்கிப்
பண்ணின்மொழி வஞ்சியர்கள் பாடல்பயில் வுற்றார். (எங)

3069. நிறங்குலவு நித்திலநி ரைத்தனைய மூரல்
பிறங்குநில வாலுருகு பேதையரை யெல்லாம்
வெறுங்கனலு றைக்குநெடு வெண்ணிலவி ளித்தல்
அறங்கொலா சேயமுத மேயுலக ளிப்பாய். (எச)

3070. வண்ணமுறு தாமரை மலர்ந்தனைய வாநின்
கண்வலை யகப்படுதல் கண்ணநினை யாமே
அண்ணன்மதன் விற்பொழியு மம்புய மலைப்பத்
தண்மலர்வ னத்திடைத ணத்தறகை மைத்தோ. (எரு)

3071. அறந்தலை மணந்தபுய லேயரு மருந்தே
மறந்தலை மணந்துபொரு மாரனமர் தன்னால்
இறந்துபடு மாவியிறை செல்லினென வேங்கிப்
பிறங்கினாவ் வல்லிபுரை பேதைய ரயர்ந்தார். (எசு)

---

யான அன்பைக் காட்டி. எய்தா - எய்தி. வெய்யன் - கண்ணபிரான். என - என்று கூறி.

3068. மதியைக் கண்டு உளம் மயங்கி மெலிகின்றேம். காந்தி-ஒளி. அண்ணல் - பெருமை பொருந்திய ; விளியுமாம். வேழ மனையாய் - கண்ண பிரானுக்கு விளி. வஞ்சியர்கள் - கோவியர்கள்.

3069. நிறம் - ஒளி. நிரைத்தனைய - வரிசையாக வைத்தாற் போன்ற. கனலை உறைக்கின்ற நிலவால் விளித்தல் ; உறைத்தல் - துளித்தல். விளித்தல் கொல்லுதல். அறங்கொல் - தருமமோ.

3070. தாமரை மலர்ந்தனையவா - தாமரை மலர்ந்தாற் போன்றவனே. கண்ண - விளி. அண்ணல் - பெருமை பொருந்திய. மதன் - மன்மதன். அம்புயம் அலைப்ப - தாமரை வருத்த. தணத்தல் - பிரிதல்.

3071. அறம் தலைமணந்த புயலே - தருமத்தோடு கலந்த திருமாலே. மறம் தலைமணந்து - பாபத்தைக் கலந்து. மாரன் - மன்மதனுடைய. இறை செல்லின் ஆவி இறந்துபடும் என ; இறை - சிறிது பொழுது. பிறங்கினர் - பெருகினராய். அயர்ந்தார் - சோர்வடைந்தார்.

3072. தேனுமமு தம்பொருவு சின்மழலை நல்லார்
மானுமெறி வேலுநிகர் மைவிழிக ளிப்ப
வேனிலர சாளனும் வியக்குமுரு வுற்ற
நீனிறமு குந்தனெதிர் நின்றன னுவந்தே. (எஎ)

3073. கண்டனர் வியந்தனர் களித்தனர் துளித்தேன்
உண்டவரி வண்டினின மொத்தனர் கருங்கண்
தெண்டிரை முகத்தெழு செழும்பருதி கண்ட
புண்டரிக மென்னவெழில் பூத்தனர் முகங்கள். (எஅ)

3074. மன்னியொரு வர்க்கொருவ னுகிமணி வண்ணன்
புன்னைமண நாறுமுயர் பூம்புளின மீதும்
கன்னிநறு ஞாழல்கமழ் காவுமிரு கைகோத்
தன்னநடை மாதருட னுடினன் மகிழ்ந்தே. (எகூ)

3075. பொடித்தபிறை போலவெழில் பூத்தநுத னுண்வேர்
துடைத்தணிய ணிந்துமலர் சூட்டிமட வாரோ
டடுத்துநெடு மால்குரவை யாடியதொர் தோற்றம்
எடுத்துநவி லுந்திற னெவர்க்குளது மன்னே. (அ0)

கலிநிலைத்துறை.

3076. மைக்க ருங்கணூர் மாணெழிற் புணரியிற் பொடித்த
மொக்கு ளன்னவெம் முலைமுகம் பொறித்தசெஞ் சாந்தும்

---

3072. சில வாகிய மழலையை யுடைய நல்லார்; கோவியர். மானும் - மானின் பார்வையையும். வேனி லரசாளன் - மன்மதன். முகுந்தன் - கண்ணபிரான்.

3073. தேனை உண்ட வண்டின் இனத்தை கண்களால் ஒத்தனர் - பருதி கண்ட புண்டரிக மென்ன முகங்கள் பூத்தனர்.

3074. மன்னி - நிலை பெற்று. மணிவண்ணன் - கண்ணபிரான். புளினம் - மணற் குன்று. ஞாழல் - புலி நகக் கொன்றை. காவும் - சோலை யிலும். மாதருடன் - கோவியருடன்.

3075. பொடித்த பிறை - தோன்றிய பிறைச் சந்திரன். வேரைத் துடைத்து, அணியை அணிந்து, மலரைச் சூட்டி, மடவாரோடு அடுத்து; வேர் - வியர்வை. நெடுமால் - கண்ணபிரான். குரவை - ஆய்ச்சியருடன் ஆடிய குரவைக் கூத்து; இதன் விரிவைச் சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவை என்னும் பகுதியால் அறியலாம்.

3076. கணூர் - கோவியர். மாண் - மாட்சிமைப்பட்ட. புணரியிற் பொடித்த - கடலிற் றோன்றிய. மொக்குள் - கொப்புளம்; மொட்டு.

நக்க நாண்மலர் நறியசெஞ் சுண்ணமு மாடிச்
செக்கர் வானெனச் சிறந்தனன் பாற்கடற் சேர்ப்பன். (அக)

3077. குரவை யாடியுங் குளிர்நதி யாடியுங் கோதை
அருவி யாடியு மகன்சுனை யாடியுங் கொண்டற்
கருவி யாடிய காவினுங் கடிமணற் றடத்தும்
மருவி யாடினன் மாதர்தங் குழாத்தொடு மாயன். (அஉ)

3078. பலரி றைஞ்சினர் பாவுறு பச்சைமான் றடந்தேர்
அலரி மண்டில மதிர்திரைக் கடன்முகட் டரும்பு
புலரி முல்லையம் புலத்துவந் தடைந்தனன் புனிதன்
மலரி வர்ந்தபைங் கூந்தலார் மனையகம் படர. (அங)

3079. நெறிந்து நெய்த்திரு ணேமிமால் வரையிறந் தோடச்
செறிந்த கார்க்குழற் சிறுநுதற் கோவிய ரெல்லாம்
நறுந்து ழாய்முகி னின்றுழி நண்ணியுந் தம்பால்
உறைந்து ளாரெனத் தோன்றினர் காதலர்க் கொருங்கே. ()

3080. எனலு மன்னவ னென்னைகொ லறந்தலை மணப்பப்
பனியி ருங்கடற் பாரகம் புரப்பவந் துதித்தோன்

---

பொறித்த - பூசிய. நக்க - ஒளி விளங்குகின்ற. நறிய - வாசனையை யுடைய. மலரும் சுண்ணமும். செக்கர் வான் - செவ்வான். பாற்கடற் சேர்ப்பன் - கண்ணபிரான்.

3077. குரவைக் கூத்தை ஆடியும். கோதை - மாலையை யுடைய. கொண்டற் கருவி - மேகத் தொகுதி. கா - சோலை. மருவி - பொருந்தி. மாதர் - கோவியர். மாயன் - கண்ணபிரான்.

3078. பலர் - தேவர் பலர். பச்சை மான் - பச்சைக் குதிரைகளை யுடைய. அலரி மண்டலம் - சூரிய மண்டலம். அலரி மண்டலம் கடல் முகட்டில் அரும்புகின்ற புலரியில். அரும்புதல் - தோன்றுதல். புலரி - விடியற் காலம். புனிதன் - கண்ணபிரான். கூந்தலார் - கோவியர். படர - செல்ல.

3079. நெறிந்து - அறல் பட்டு ; "நெறிந்த குரற் கூந்தல்" (கலித். 93 : 22.) நெய்த்து - நெய்ப்புடைய தாகி. நேமி மால் வரை - சக்கரவாள கிரி. நெறிந்து நெய்த்த குழல், நேமி மால்வரை யிறந்தோடச் செறிந்த குழல் ; குழல் - கூந்தல். நின்றுழி - நின்ற விடத்தை. காதலர்க்குத் தம்பால் உறைத்துளாரெனத் தோன்றினர் ; காதலர் - கணவர்.

3080. எனலும் - என்று சுக முனிவன் கூறியவுடன். மன்னவன் பரீக்ஷித்து. அறம் தலை மணப்பவும், பாரகத்தைப் புரப்பவும் - வந்துதி

அனைய வாய்ச்சிய ராய்நல நுகர்ந்ததோ சறங்கொல்
முனைவ வென்றலு மூர்ல்வாண் முகத்தினன் மொழியும். (அ௫)

3081. அழல னைத்தையு நுகர்ந்தில தேகொலொள் ளழலின்
எழில்வி ரிந்தசெஞ் சடைமிசை யின்னமு துறைக்கும்
குழவி வெண்பிறைக் கொழுங்கொழுந் தணிதரு வெவ்வாய்
மழுவ லானன்றிப் பிறர்விட மாந்தினுய் குவரோ. (அசு)

3082. இழைப்பன் யாவையு மிறையவ னிறையவ னொழுகும்
ஒழுக்கம் யாவரும் மொழுகமேற் கொள்ளுத லொல்லா
விழுச்சி றப்புடை யிறையவன் விதியினில் விதித்த
வழக்கி னிற்பதே யறனெனப் பழமறை வழங்கும். (அஎ)

3083. நிறுத்தி யாரையு நெறியினி னெகிழ்ந்துதண் டேறல்
உறைத்த தாமரை யிறையவற் குருத்தடர் விடைமேல்
இறைக்கு நாடரு மிறைவனு யெங்கணு நிறைந்த
அறத்தின் வித்தினுக் கறமெவன் பாவமென் னம்மா. (அஅ)

---

தோன், ஆய்ச்சியர் நலத்தை நுகர்ந்தது அறங்கொல்? முனைவ என்றலும்; முனைவ - முனிவனே; சுக முனிவனுக்கு விளி. முகத்தினன் - சுகன்.

3081. அழல் அனைத்தையும் நுகர்ந்திலதே கொல் - தீ எல்லாவற்றையும் உண்கின்றதன்றோ? அழலின் - தீயைப் போல்; சடைக்கு உவமை. இறைக்கும் - துளிக்கின்ற, குழவி யாகிய பிறையினது கொழுவிய கொழுந்தை; குழவி - இளமை. வெவ்வாய். மழுவுக்கு அடை. மழுவலான் - சிவ பெருமான். பிறர் விடத்தை மாந்தினல் உய்குவரோ?

3082. இறையவன் யாவையும் இழைப்பன்; இழைப்பன் - செய்குவான். ஒழுக - ஒழுகும்படி. ஒல்லா - முடியாது. இறையவன் - கடவுள். விதியினில் - கட்டளையில். விதித்த வழக்கில் நிற்பதே அறன்.

3083. யாரையும் நெறியினில் நிறுத்தி. தேறல் - தேன். உறைத்த - துளித்த. தாமரை யிறையவற்கு - பிரமனுக்கும். உருத்து - கோபித்து. விடைமேல் இறைக்கு - சிவபெருமானுக்கும். நாடரு - நாடுதற் கரிய. அறத்தின் வித்தினுக்கு - திருமாலுக்கு. எவன் - எது. அறமும் பாவமும் இல்லை யென்றபடி.

3084. தோய்ந்துந் தோய்விலான் றுகளிலா மாணியி னெழுக்கம்
ஏய்ந்த ளான்றனி யிறையவ னுயிழை யவர்க்கு
நீந்த லில்லதோர் நீணல நெடிதுதந் தனன்றற்
சார்ந்து ளார்க்கற னுதிய தாலவன் வழக்கே. (அகூ)



# 13. சங்கசூடனைக் கொன்ற அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

3085. கேட்டி மன்னவ கேழ்கிள ரிளவெயில் கிளைக்கும்
சூட்ட ராவணை துயின்றவன் முதலினோர் தொடர
வேட்டு நந்தகோன் விழாவய ரம்பிகா வனத்து
நாட்ட மூன்றுடை நம்பனை யிறைஞ்சுவா னடைந்தான். (க)

3086. ஆற றிந்தவவ் வாயர்கோ னடைந்தனுான் றருந்தா
தாறெ னப்பகர் தொழிலுடை யந்தணர்க் கெல்லாம்
ஆறெ னப்படு மஞ்சுவை யடிசிலூட் டினனால்
ஆறெ னப்பொழி நெய்யொடு பால்பொரு தலைப்ப. (உ)

---

3084. ஆய்ச்சியரைத் தோய்ந்தும் தோய்விலானு யுள்ளான். துகள் - குற்றம். மாணி - பிரம்மசாரி; கண்ணபிரானை நித்திய பிரம்மசாரி யென்பர். ஒழுக்கத்தை ஏய்ந்துளான். இறைவன், தோய்விலான், ஏய்ந்துளான். ஆயிழையவர்க்கு - ஆய்ச்சியருக்கு. நீள் நலம் - நீண்ட இன்பத்தை. தன்னைச் சார்ந்துளார்க்கு அறனுதியவற்றைத் தரல் அவன் வழக்கு.

3085. மன்னவ: பரீக்ஷித்துக்கு விளி. கேழ்கிளர் - ஒளி விளங்குகின்ற. கிளைக்கும் - தோன்றுகின்ற. துயின்றவன் முதலினோர் - கண்ணபிரான் முதலியவர். வேட்டு - விரும்பி. விழா அயர் - திருவிழாச் செய்கின்ற. அம்பிகா வனம் - அங்குள்ள வனத்தின் பெயர். நம்பனை - சிவபெருமானை. இறைஞ்சுவான் - தொழும் பொருட்டு.

3086. ஆறு அறிந்த ஆயர்கோன் - வேத நெறியை உணர்ந்த நந்தகோபன். அருந்தாது - உணவுண்ணுமல்; விரதம் பூண்டு என்றவாறு. ஆறெனப் பகரும் தொழில் - ஓதல் முதலியன. ஆறெனப்படும் சுவை - உவர்ப்பு முதலிய அறுசுவை. ஆறு என்று சொல்லும்படி பொழிகின்ற நெய்யும் பாலும் அலைப்ப; ஆறு - நதி.

3087. வள்ளி தழ்த்தொடை நந்தகோன் வள்ளவாய் முளரி
வெள்ளி மண்டபத் துறைபவள் பெயரினுல் விளங்கும்
தெள்ளு தீம்புனற் றிருநதி குடைந்தனன் மலர்தூஉய்ப்
பிள்ளை வெண்மதி பிறங்குசெஞ் சடையவற் பணிந்தான். (௩)

3088. அங்கண் மாநிலம் விளங்குறத் தோன்றலா லளியால்
பொங்கு பல்கலை தழைதலாற் புகழ்நிலா வுறலால்
திங்க ளாமெனத் திகழ்தரூஉ நந்தகோன் றன்னைக்
கங்குல் வாயொரு கட்செவி விழுங்கிய தன்றே. (௪)

3089. துயிலு மேல்வையின் விழுங்குறு சுடுசினப் பகுவாய்
வெயின்ம ணிக்கொடுஞ் சுடிகைவா ளரவினை வெள்ளை
அயிலெ யிற்றுவா ளரவினின் றூடிய செங்கட்
புயல்க ருங்கடற் புவிபொதி காலினெற் றினனுல். (௫)

3090. கஞ்ச நாண்மலர்க் கண்ணினன் கடற்புவி கவைஇய
அஞ்செஞ் சீறடி படுதலி னரவுரு வகலா
மஞ்சு கொண்டொளிர் மின்னென மணிமுடி யிமைப்ப
விஞ்சை மன்னவ னுதலு நோக்கினன் வியந்தான். (௬)

---

3087. வள் இதழ் - பெரிய இதழை யுடைய. வள்ளம் போலும் வாயை யுடைய முளரி ; வள்ளம் - கிண்ணம். முளரி யாகிய வெள்ளி மண்டபத்து உறைபவள் என்றது, வெண்டாமரையில் வதியும் சரஸ்வதியை. திருநதி: சரஸ்வதி நதி. குடைந்தனன் - மூழ்கினுன். தூஉய் - தூவி. சடையவன் - சிவபெருமானை.

3088. தோன்றலால் - நந்தகோபன் உதித்தமையால்; சந்திரன் தோன்றியமையால். அளியால் - அருளால் ; குளிர்ந்த தன்மையால். கலை தழைதலால் - நூற் கலைகள் தங்குதலால் ; கிரணங்கள் தழைத்தலால். புகழ் நிலா உறலால் - புகழாகிய நிலாப் பொருந்தியமையால் ; புகழ்படுகின்ற நிலாவைக் கொண்டமையால் ; திங்கள் - சந்திரன். முதல் இரண்டடிகளும் முறையே நந்தகோபனுக்கும் சந்திரனுக்கும் சிலேடை. கங்குல்வாய் - இரவில். கட்செவி - சுதரிசனன் என்ற பாம்பு.

3089. துயிலும் ஏல்வையில் - உறங்கும் போது. பகுவாய் - பிளவு பட்ட வாயை யுடைய. அரவினை - சுதரிசனன் என்ற பாம்பை. செங்கட் புயல் - கண்ணபிரான். புவியைப் பொதிந்ததாளினுல் எற்றினுன் ; எற்றினுன் - மோதினுன்.

3090. கண்ணினன் - கண்ணபிரான். புவி கவைஇய - பூமியைச் சூழ்ந்து அளந்த. கண்ணினனுடைய அடிபடுதலின். அகலா - அகன்று. மஞ்சு - வெண்மேகம். மணி முடி - மாணிக்கத்தா லாகிய கிரீடம்,

3091. ஆரை நீயென வண்ணனின் வலம்படு திகிரிப்
பேரி னேனொரு விஞ்சையன் பெருந்தவ முனிவர்
ஏரி லாரென வெள்ளின னகைத்தன னிதற்குச்
சார்க வெவ்வரா வுருவென வாங்கவர் சவித்தார். (எ)

3092. மன்னு வெஞ்சின வாலெயிற் றரவின துருவம்
பின்னல் வெண்டிரைப் பெருகுமந் தாகினி பூத்த
பொன்னந் தாமரைப் பூங்கழல் படுதலிற் றீர்ந்தேன்
அன்ன மாய்மறை யறைந்துளா யெனத்தொழு தகன்றான். ()

3093. மருப்பி ளம்பிறை வாலெயிற் றரவுநாண் கொளுவு
பொருப்பு வில்லினுற் புரஞ்சுடு முக்கண்வா னவனை
விருப்பி னூற்றொழு தியாவரும் விழாக்கழி வுறுநாள்
அருப்பு முல்லையம் புலத்திடை யினிதுவந் தடைந்தார். (கூ)

கலிவிருத்தம்.

3094. அள்ளி ருட்படல மள்ளி விழுங்கும்
வெள்ளி வெண்ணிலவு விண்ணெழு காலைக்
கள்ளுண் வண்டுதுயில் காவக மேவி
வள்ளல் வேயிசைவ டித்தனன் மன்னோ. (க0)

---

3091. நீ ஆரை என - நீ யார் என்று கண்ணபிரான் கேட்க. அண்ணல் - கண்ணபிரான்; விளி. திகிரிப் பேரினேன் - சுதரிசனன் என்ற பெயரை யுடையேன். தவ முனிவரை ஏரிலாரென எள்ளினன் நகைத்தனன்; ஏர் - அழகு. எள்ளினன் - இகழ்ந்து; முற்றெச்சம். இதற்கு அரா உருவைச் சார்க என அவர் சவித்தார். பிரகஸ்பதி முனிவரைச் சுதரிசனன் என்ற வித்தியாதரன் இகழ்ந்தமையால், அவர், அவனைப் பாம்பாகும் படிச் சபித்தார் என்றும், கண்ணபிரானால் அவன் பாம்புரு நீங்கப் பெற்றானென்றும் முதனூல் கூறும்.

3092. பின்னல் - மடங்குதலையுடைய. மந்தாகினி - ஆகாய கங்கையை. பூத்த - தோன்றச் செய்த. கழல் - கண்ணபிரானுடைய பாதம். அரவினது உருவம் தீர்ந்தேன். அன்னமாய் மறை அறைந்துளாய்; கண்ணபிரானுக்கு விளி; "அன்னமா யருமறைக ளறைந்தாய் நீ" (கம்ப. விராதன் 60.)

3093. மருப்பையும் இளம் பிறையையும் போன்ற எயிற்றையு முடைய அரவை நாணாகக் கொளுவி; கொளுவி - கொண்டு. வானவன் - சிவபெருமான். விழாக் கழிவுறுகின்ற நாளிலே. அருப்பு - அரும்பு.

3094. அள் - செறிவு. விழுங்குகின்ற நிலவு. வண்டு துயில்கின்ற காவகத்தை மேவி. வள்ளல் - கண்ணபிரான். வடித்தனன் - பயிற்றினன்.

3095. செம்மல் வேயிசை செவிப்பட லோடும்
அம்மெ லோதிய ரகங்களி கூர
மைம்மு கிற்குமகிழ் மாமயில் போலக்
கொய்ம்ம லர்ப்பொழில் குறித்தனர் சென்றார். (கக)

3096. அண்ண லம்பருதி கண்டலர் கின்ற
வண்ண வாண்முளரி போல்வத னங்கள்
வெண்ணி லாவினிடை விட்டு விளங்கக்
கண்ண னின்றநிலை கண்டுக ளித்தார். (கஉ)

3097. மங்குல் கண்படு வனத்திடை மேய
கொங்கு டைந்தொழுகு கோதைய ரெல்லாம்
அங்கு டைந்திடவ டைந்து துரந்தான்
சங்கு சூடனெனு மோர்தறு கண்ணன். (கங)

3098. மின்றி கழ்ந்தகரு மேகநி றத்தோன்
சென்றெ திர்ந்துவிழி சென்றழல் கால
நின்ற தீயவனி றத்தினி லெற்றிக்
கொன்று சென்னிமணி கொண்டனன் மாதோ. (கச)

3099. மேய தோகையிள மென்மயி லன்ன
சாய லார்முலைத ழீஇவிளை யாடி
மாயன் வைகறையில் வண்டுளர் தண்டார்
ஆயர் பாடியில டைந்தனன் மன்னோ. (கரு)

---

3095. செம்மலுடைய வேயிசை; செம்மல் - கண்ணபிரான். அம் மெல் ஓதியர் - அழகிய மெல்லிய கூந்தலை யுடைய ஆய்ச்சியர். மைம்முகிற்கு - கரிய மேகத்திற்கு. பொழிலைக் குறித்துச் சென்றார்.

3096. அண்ணலம் பருதி - பெருமை பொருந்திய சூரியன். முளரி - தாமரை. விட்டு - ஒளி வீசி.

3097. மங்குல் கண்படு - மேகம் உறங்குகின்ற. மேய - மேவிய. கொங்கு - தேன். கோதையர் - ஆய்ச்சியர். உடைந்திட - கெட்டோடும் படி. துரந்தான் - துரத்தினன். சங்கசூடன் - குபேரனுடைய வேலைக் காரன். தறுகண்ணன் - அஞ்சாதவன்.

3098. மின் - மின்னல். கருமேக நிறத்தோன் - கண்ணபிரான். அழல் கால - தீயைக் கக்க. தீயவன் நிறத்தினில் - சங்கசூட னுடைய மார்பி னில். எற்றி - உதைத்து. சென்னி மணி - சங்கசூட னுடைய தலையில் இருந்த இரத்தினத்தை.

3099. தோகை - கலாபம். சாயலார் - ஆய்ச்சிய ருடைய. தழீஇ - தழுவி. மாயன் - கண்ணபிரான். வைகறையில் - விடியற் காலையில். தாரை யணிந்த ஆயரது பாடியில். மாயன் விளையாடி. ஆயர் பாடியில் அடைந்தனன்.

3100. நிலம்பு ரக்குமுகி னித்தில மென்ன
விலங்கி வில்லுமிழு மேனியி னாற்கு
வலங்கொள் செங்கதிரின் மல்கிரு ணூறி
இலங்கு செக்கர்மணி யீந்தன னன்றே. (கசு)

# 14. நாரதர் கஞ்சனோடு உரைத்த அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3101. குரவெலாம் வெருவ முருகுகொப் புளித்துக்
குழன்றிடை நெறித்தபூங் குழலார்
அரவெலா மறுக வயிலெயிற் றாவி
னுடிய கூத்தனோ டாடி
இரவெலாங் கதிர்வா னிலாக்குவித் தென்ன
விடுமணற் குன்றமுங் காவும்
மருவுலா முல்லை விரிந்துமட் டுயிர்க்கு
மாதவிப் பந்தரும் பயின்றார். (க)

---

3100. முகில் - கண்ணபிரான். நித்திலம் - முத்து, விலங்கிவில் உமிழும் - குறுக்கிட்டு ஒளியைச் சிந்துகின்ற; "விலங்கிவில் லுமிழும் பூணன்" (சீவக. 1167, அடிக்.) மேனியினாற்கு - பலராமனுக்கு. வலம் கொள் - மேருவை வலம் கொள்கின்ற; வெற்றியைக் கொண்ட எனலுமாம். கதிரின் - சூரியனைப் போல். இருளை நூறி ; நூறி - அழித்து. இலங்கு செக்கர் மணி - விளங்குகின்ற சிவந்த மாணிக்கத்தை ; சங்கசூடனிடம் பறித்த மணியை. மேனியினாற்கு மணியை ஈந்தனன்.

3101. குரவு - குராமரம். வெருவ - அஞ்சும்படி. முருகு - வாசனை. குழன்று - குழைவை யடைந்து. குழலார் - கோவியர். மறுக - மயங்க. கூத்தனோடு - கண்ணபிரானோடு. நிலாக் குவித்தென்ன இடு மணலையுடைய குன்றம் ; 3057. மரு - வாசனை. மாதவிப் பந்தர் - குருக்கத்திக் கொடியா லாகிய வீடு.

3102. அரந்தினப் படுபொ னரும்பிளங் கொங்கை
யாய்ச்சியர் பகற்பொழு தெல்லாம்
திருந்தெழில் பெருகி யலையெறி திங்கட்
டிருமுகஞ் சிறிதிடங் கோட்டி
விரும்பெழிற் செங்கை விரலொளைப் பொதிந்தும்
விடுத்துநல் வேயிசை வடிப்போன்
கருங்கொடிப் புருவச் செயலும்வெண் ணகையுங்
கருதினர் நெஞ்சகங் கனிவார். (உ)

3103. பழமறைக் கொழுந்து செழுமல ரவனும்
பாசிழை பாகனு மருளக்
கழையிசை வடித்தல் கருங்குயில் கேட்டுக்
களிக்குமே சுரும்புகண் படுமே
உழையுழை பரந்து நோக்குமே யென்னு
வோடரித் தடங்கண்முத் துறைப்ப
எழுதுபொற் பாவை யனையவ ரேக்கற்
றிருத்தலா ரெடுத்தன ரிசைப்பார். (ந)

3104. நீனிற நெடியோ னினநிரை மேய்த்து
நீலயாற் றடைகரை நிவந்த
பானிலாச் சொரியும் படுமண லெக்கர்ப்
பரப்பினின் றுடுமோர் காலைக்

3102. அரம் தினப்படு பொன் - அரத்தால் தின்னப்படுகின்ற பொன்; ஈண்டு ஆபரணத்திற் காயிற்று. திங்கள் போலும் திருமுகத்தைச் சிறிது இடம் கோட்டி. விரலால் தொளையைப் பொதிந்தும் விடுத்தும் வேயினிசையை வடிப்போன்; பொதிதல் - மூடுதல். வடிப்போன் - கண்ணபிரான். வடிப்போனுடைய புருவச் செயலையும் வெண்ணகையையும் கருதினராய். கனிவார் - உருகுவார்.

3103. மலரவனும், பாசிழை பாகனும் மருளும்படி மறைக் கொழுந்து கழையிசை வடித்தலைக் கேட்டு; பாசிழை பாகன் - சிவபெருமான். மறைக் கொழுந்து - கண்ணபிரான். குயில் களிக்கும். சுரும்பு கண்படும் - வண்டுகள் உறங்கும். உழை உழை பரந்து நோக்கும் - மான்கள் பக்கத்தே பரந்த பார்வையுடன் பார்க்கும். என்னு - என்று கூறி. முத்து உறைப்ப - நீர்த் துளியைச் சிந்த. பாவை யனையவர் - கோவியர். ஏக்கற்று இருத்தல் - ஆசையாற் றாழ்ந்து இருத்தல்.

3104. நெடியோன் - கண்ணபிரான். இன நிரை - பசுக் கூட்டத்தை. நீல யாற்றடை கரை - யமுனையின் கரையில். நிவந்த மணலெக்கர்ப் பரப்பில். ஓர் காலை - ஒரு சமயம். காலால் நிலத்தைக் கீறி. வாலை

கானிலங் கீறி வான்மிசை யுயர்த்துக்
கதிர்மணி மருப்புநேர் தூக்கி
ஆனிள வேறு யடுசமர்க் கெழுந்தா
னசனியே றென்னவோ ரவுணன். (௪)

3105. தீக்கனன் றெழுகு செங்கண்வெள் ளேறு
திருகுவெஞ் சினத்தலைக் கொண்டு
தாக்குவா னடைதன் முருகவிழ் செய்ய
தாமரைக் கண்ணினா னோக்கி
மாக்கடல் வேலி நெடுநிலப் பாப்போர்
மரைமல ரடியினுட் பொதிந்தோன்
நூக்கிநூ றடிமுன் சென்றுவீழ்த் தினனு
னுதிமருப் பங்கைகொண் டடர்த்தே. (ரு)

3106. விரிநிலங் கிழிய வீழ்ந்தெழுந் தழன்று
விண்டொடு நெடுவரை குலுங்க
உருமென வுாறி யுடன்றுமே னடந்த
வுருகெழு செவ்விமால் விடையைச்
சொரிபசுங் குருதி யாறலைத் தொழுகத்
துளக்கில்கூர்ங் கோடுறப் பற்றி
அருமணிக் கடகக் கையினாற் சுற்றி
நந்தியும் வெருக்கொள வறைந்தான். (சு)

---

உயர்த்து. மருப்பை நேராகத் தூக்கி. ஏறு - இடபம். அசனி யேறு - இடியேறு. அவுணன் : அரிஷ்டாசுரன்.

(பி - ம்.) 3 மருப்பிடை நோக்கி.

3105. ஏறு - இடப வடிவம் கொண்டு வந்த அரிஷ்டாசுரன். திருகு வெஞ்சினம் - மாறுபடுகின்ற கொடிய கோபம். தாக்கும் பொருட்டு அடைதலைப் பொதிந்தோன் தாமரைக் கண்ணினால் நோக்கி; பொதிந்தோன் - கண்ணபிரான். நூக்கி - தள்ளி. நுதி மருப்பு - கூர்மையை யுடைய தந்தம். மருப்பைக் கைக்கொண்டு அடர்த்து வீழ்த்தினன்.

3106. கிழிய - பிளவுபட. வரை - மலை. உருமென முாறி - இடியைப் போல முழங்கி. உருகெழு - அச்சம் பொருந்திய. குருதி யாறு - இரத்த வெள்ளம். துளக்கில் - அசைவில்லாத. கோடு - கொம்பை. கடக மணிந்த கையினால். நந்தி - சிவபெருமா னுடைய ஊர்தி; இனம் பற்றி நந்தியைக் கூறினர்.

3107. ஏற்றம ருழந்த வேற்றுவா ளவுண
னிறந்துபா டெய்தலு முவந்து
போற்றிசைத் தமரர் புதுமதுத் துளிக்கும்
பூமழை பொழிந்தன ரமுதம்
ஊற்றிருந் தொழுகு பாடல்யாழ் முனிவ
னூழிவெங் கனல்விழி யொழுகத்
தாற்றெடுத்தெறியுந் தழைசெவிப் புழைக்கைக்
களிற்றுவெங் கஞ்சன்மாட் டடைந்தான். (எ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3108. மன்னநீ யறிந்தி லாயே மதிநுத லசோதை யீன்ற
கன்னிநீ யடர்த்த கன்னி காரிருட் பிழம்பு வாரிப்
பின்னிவிட் டன்ன வைம்பாற் றேவகி பெற்ற தோன்றல்
மின்னுநக் கொளிருங் கூர்வாள் விறல்கெழு கண்ண னன்றே.

3109. மற்றுனை யொளித்தா ரம்ம மறந்தன னின்னு மொன்று
கொற்றவ கேட்டி வெள்ளிக் குன்றெனப் பணைத்த திண்டோள்
விற்றிற லிராம னென்பான் வெள்வளை யுரோகி ணிப்பேர்ப்
பொற்றொடி வயிறு வாய்த்த பொங்கெழிற் புதல்வ னுமால் ()

3110. உடைத்திளந் தேறல் பாய வூதுவண் டுழுது தாது
மடுத்துணு மலங்கன் மாலை மார்பவாய்ப் பாடி மற்றுங்
கடுத்தனர் வளரா நின்ற வாசிளங் குமார் கண்டாய்
விடுத்தவா ளவுண ராவி வீட்டினு ரென்று சொற்றான். (கo)

---

3107. அமரை எற்று உழந்த அவுணன்; அரிஷ்டாசுரன். அமரர் - தேவர். மது - தேன். முனிவன் - நாரதன். தழைத்த செவி. புழைக்கை - துதிக்கை. முனிவன் கஞ்சன்மாட் டடைந்தான்.

3108. மன்ன; கஞ்சனுக்கு விளி. அசோதை ஈன்ற கன்னியே நீ அடர்த்த கன்னியாவள்; கன்னி - ரோஹிணி. ஐம்பாலை யுடைய தேவகி பெற்ற தோன்றல் கண்ணன்; ஐம்பால் - குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்பன; (சீவக. 2437, ந.)

(பி - ம்.) 4. ஒளிகால்.

3109. மற்று, அம்மா, அசைகள். உனை ஒளித்தார், மறந்தனன் - ஒரு காரியத்தைச் சொல்ல மறந்தேன். கொற்றவ; கஞ்சனுக்கு விளி. இராமன் - பலராமன். உரோகிணிப் பேர்ப் பொற்றொடி - ரோஹிணி. வயிறு வாய்த்த - பெற்ற.

3110. தேறல் - தேன். ஊது வண்டு - உண்ணுகின்ற வண்டு. அலங்கல் - அசைதல். மார்ப; கஞ்சனுக்கு விளி. ஆய்ப்பாடி - ஆயர்பாடி. ஆய்ப்பாடியை அடுத்தனர் வளரா நின்ற குமார்; அடுத்தனர் - அடுத்து; முற்றெச்சம். விடுத்த - நீ அனுப்பிய. வீட்டினர் - அழித்தார்.

3111. அத்திறங் கேட்ட லோடு மழலுகு கடைக்கண் சேப்ப
முத்தவெண் முறுவ னற முரிவுறப் புருவம் வல்லே
மைத்துனன் றன்னைக் கொல்வான் வன்றிறற் கஞ்சன் சீறித்
தத்துவெங் குருதி யொள்வா டடறுரீஇ நடந்தா னங்கே. ()

3112. மலைக்கும்வெண் கோட்ட தாகி மலைமதம் பட்டா லன்ன
கொலைக்களிற் றுழவ கொல்லல் கொல்லலீங் கிவனை யென்னு
விலக்கிய மகதி நல்யாழ் வித்தகன் கண்ண னோடவ்
வலப்படை யவனைக் கொல்வா னமைகவென் றேகி னனல். ()

3113. தாதுக மழலை வண்டு தளையவிழ்த் துறங்கு மந்தண்
போதுலாந் தெரியன் மாலை புனைவசு தேவ னோடு
தீதறு சிறப்பு வாய்ந்த செழுமறைக் கொழுந்தை யீன்ற
மாதவக் கொழுந்து தன்னை வன்றளைப் படுத்தல் செய்தான். ()

3114. பூசுறு பருதி போலப் பொன்னணிந் திலகு மார்பன்
பாசிலைப் படலை மாலைப் பங்கயக் கண்ண னோடு
மாசறு திங்கண் மேனி வள்ளலை யடுக வென்னுக்
கேசியை யழல்வெஞ் சீற்றங் கிளர்ந்தெழ வேவி னனல். (கச)

3115. இழைக்கவில் வேள்வி மற்றீங் கியற்றுக மல்லர் சாலை
மழைக்கடாஞ் செருக்கித் துஞ்சு மணிநெடுங் கோட்டு நால்வாய்ப்
புழைக்கைவெங் களிற்றுச் சாலை பொன்னெடு வாயில் சேர்க்க
அழைக்கமற் பழுத்த திண்டோ ளரசர்தங் குழுவை யென்றான். (கரு)

---

3111. சேப்ப - சிவப்ப. நாற - தோன்ற. புருவம் முரிவுற. மைத்துனன் றன்னை - வசுதேவனை. கொல்வான் - கொல்லும் பொருட்டு. வாள் தடறு உரீஇ - வாளை உறையினின்றும் உருவி.

3112. மலைக்கும் - பொருகின்ற. களிற்றுழவ: கஞ்சனுக்கு விளி. இவனைக் கொல்லல் என்னு; இவனை - வசுதேவனை. கொல்லல் - கொல்லாதே. வித்தகன் - நாரத முனிவன். அலப்படையவனை - பலராமனை. அமைக - பொருந்துக.

3113. மழலை யொலியை யுடைய வண்டு. தளை அவிழ்த்து - கட்டை உடைத்து. தெரியல் மாலை - விளங்குகின்ற மாலை. மறைக் கொழுந்தை - கண்ணபிரானை. மாதவக் கொழுந்து - தேவகி. வன்தலை - வலிய சிறை.

3114. மார்பன் - கஞ்சன். வள்ளலை - பலராமனை. அடுக என்னு - கொல்லுவாயாக வென்று கூறி. கேசி - குதிரை வடிவ முடைய அசுரன்.

3115. வில் வேள்வி இழைக்க. மல்லர் சாலையை ஈங்கு இயற்றுக. மழை போலும் கடாம்; கடாம் - மதம். நால் வாய் - தொங்குகின்ற வாயை யுடைய. களிற்றுச் சாலையை வாயிலில் சேர்க்க. மல் யுத்தத்திற்குப் பழுத்த அரசர் குழுவை அழைக்க என்றான்.

3116. மண்ணெழு வனைய தோளான் மல்லர்தம் வதன நோக்கித்
துண்ணெனப் பொருது நுங்க டோள்வலி யொருங்கு காட்டி
வெண்மடற் கரிய போந்தை மீமிசை யுயர்த்தோ னேடும்
கண்ணனைப் படுத்தி ரென்னக் கண்ணறக் கழறி னானால். (கசு)

3117. கூற்றுறழ் குருதிக் கோட்டுக் குஞ்சரப் பாகன் றன்னைச்
சீற்றவா ளரச னேக்கிச் செஞ்சிலை வேள்விக் கெய்தும்
பாற்கடல் வண்ண னேடும் பசும்புயல் வண்ணன் றன்மேல்
காற்றெனக் களிறு தூண்டிக் காய்கெனப் பணித்தான் மாதோ. (கஎ)

3118. சீந்துதீ முகத்த வைவேற் றெவ்வடு தானை வேந்தன்
காந்தினி புதல்வன் றன்னைக் கனன்றகட் கடையி னேக்கிப்
பாந்தண்மே லாடி னானைப் பானிற வண்ண னேடு
கூந்தன்மான் றேரின் வல்லே கொணர்கெனக் குறித்தான் மன்னே. ()

3119. அவிருளை யுதறி வான மலக்கணுற் றிரிய வார்த்துப்
புவிமுது குளுக்கப் பாய்ந்து பூந்துழாய்க் கொண்டன் முன்னர்க்
கவிகுளம் பெறியுந் தூளி கருங்கட றூர்ப்ப மற்றாங்
கிவுளியாய்க் கேசி யென்னு மெறுழ்வலி யவுண னேற்றான்.()

---

3116. மண் எழு வனைய - கழுவிய தூணைப் போன்ற. தோளான் - கஞ்சன். நுங்கள் - உங்களுடைய. வெண் மடலையுடைய கரிய போந்தையை மீமிசை உயர்த்தோன் - பலராமன்; போந்தை - பனைமரம். மீமிசை மேலே; ஒரு பொருட் பன்மொழி. படுத்திர் - கொல்லுவீராக. கண்ணற - இரக்க மில்லாமல்.

3117. கூற்றுறழ் - யமனை ஒத்த. குஞ்சரம் - குவலயா பீடமென்னும் யானை. அரசன் - கஞ்சன். சிலை வேள்விக்கு எய்தும் - தனுர் யாகத்திற்கு அடைகின்ற. பாற்கடல் வண்ணன் - பலராமன். புயல் வண்ணன் - கண்ண பிரான். களிறு தூண்டி - குவலயாபீடத்தைச் செலுத்தி. காய்க - சோபிக்க.

3118. தீயைச் சிந்துகின்ற முகத்தை யுடைய வேல்; "தீத் தும்மும் வேலான்" சீவக. 2348.) தெவ் - பகைவர். வேந்தன் - கஞ்சன். காந்தினி புதல்வன் - அக்குரூரன்; சுவபல்கு வென்பவனுக்கும் காந்தினி என்பவளுக்கும் பிறந்தவன் அக்குரூரன்; "குந்தி மைந்தன்" 'கங்கை மைந்தன்' என்பது போல் தாயின் பெயரைச் சார்த்திக் கூறுதல் வழக்கு. கனன்ற - கோபித்த. பாந்தள் மேலாடினனை - கண்ணபிரானை. பானிற வண்ணனேடு - பலராமனேடு. கூந்தல் மான் தேர் - பிடரி மயிரை யுடைய குதிரை பூட்டிய தேர்.

3119. அவிர் உளை - விளங்குகின்ற பிடரி மயிரை. அலக்கண் - துன்பம். இரிய - கெட்டுப் போக. முதுகு உளுக்க - முதுகு நெளிய. கொண்டல் முன்னர் - கண்ணபிரானுக்கு முன்பு. தூளி - தூசி. ஆங்கு - அவ்விடத்தே. இவுளியாய் - குதிரையாகி. எறுழ் வலி - மிக்க வலிமை யுடைய.

3120. விழுங்குவான் போலச் சால விரித்ததீ வாயி னூடு
பிழிந்துபே யாவி யுண்டோன் பிறங்குபொற் றொடிக்கை நீட்டி
வழிந்தழ கொழுகு செங்கை வளர்த்தனன் வளர்ப்ப வாகம்
கிழிந்துவாம் புரவி யாய கேசிமாண் டுயிர்நீத் தானல். (உ0)

3121. பண்ணுறு மகதி நல்யாழ்ப் பழமறை முனியாங் கெய்தி
அண்ணலங் களிநல் யானை யடுதிறற் கஞ்ச னாதி
நண்ணியோர் மாய்வ தின்று நாமினிக் காண்கு மென்னாக்
கண்ணனைப் பரவி நெஞ்சங் களிகொள வேக லுற்றான். (உக)



# 15. அக்குரூரன் வந்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

3122. கள்வர்சில ராச்சிலர்கள் காக்குநர்க ளாகத்
துள்ளுமறி யாச்சிலர் துளங்குபனி மாலை
வெள்ளருவி வெற்பின்விளை யாடினர் விரிந்த
அள்ளிலைய பைந்துள வணிந்தமுகி னண்பர். (க)

3123. உந்துதிரை நீருலகு மும்பரு நடுங்கும்
வெந்திறன் மயன்புதல்வன் வேற்படை வியோமன்
அந்தளி ரலங்கல்புனை யாயர்மக னாகி
வந்துவிளை யாடினன் வரைத்தலையி வர்ந்தே. (உ)

3120. சால விரித்த - மிகத் திறந்த. அசுரனுடைய வாயினூடு; ஊடு - நடுவே. பேயின் ஆவியைப் பிழிந்து உண்டோன் - கண்ணபிரான். கையை வளரச் செய்தனன். ஆகம் - கேசியின் உடல். வாம் புரவி - தாவுகின்ற குதிரை.

3121. பண் உறு - இராகம் பொருந்திய; சமைத்த எனலுமாம். முனி - நாரதன். அண்ணல் - பெருமை. கஞ்சனாதி நண்ணியோர் - கஞ்சன் முதலிய நண்ணினவர்கள். மாய்வது - இறத்தலை. காண்கும் - பார்ப்போம். பரவி - புகழ்ந்து.

3122. சிலர் கள்வராகவும், சிலர் காக்குநராகவும், சிலர் துள்ளுகின்ற மறியாகவும் வெற்பில் விளையாடினர். மறி - ஆடு. மாலை போன்ற அருவியை யுடைய வெற்பு. அள் இலைய - செறிந்த இலைகளை யுடைய. முகில் நண்பர் விளையாடினர்; முகில் - கண்ணபிரான்.

3123. உம்பரும் - தேவருலகமும். மயன் புதல்வனாகிய வியோமன் ஆயர் மகனாகி வந்து விளையாடினன்; மயன் - அசுரத் தச்சன். வரைத்தலை - மலையி னுச்சியில்.

3124. காழக வுடைச்சிறிய கள்வனென நண்ணு
மேழக மெனக்குலவு மெல்லிணர் நறுந்தார்
வாழியெழின் மைந்தர்தமை வவ்வின னடந்தான்
தாழ்புயல் கிழித்துயர் தடங்கிரிமு ழைஞ்சின். (ங)

3125. கொல்லிய வடைந்தது குறிப்பினி லறிந்தான்
மல்லடுபு யத்தவனை மாய்த்துமணி வண்ணன்
கல்லளை யகத்திளையர் கண்ணுற நடந்தான்
மெல்லமருண் மாலைவர மேதகு நிரைப்பின். (ச)

3126. கங்கைவள நாடுடைய காந்தினி புதல்வன்
அங்கணில மாதுபுண ரண்ணலை யழைப்பான்
பொங்குளை வயப்புரவி பூண்டதொரு தேர்மேல்
செங்கதி ரெழக்கடிது சென்றன னெழுந்தே. (ரு)

3127. சேணுலகில் வாழுமுயர் தேவருள மாலும்
மாணெழி லுடைக்கமலை மன்னவனை யின்னே
காணலுறு மேநமது கட்புலமு மென்னு
யாணர்நறு மூல்லைநில மெய்தினன் விழைந்தே. (சா)

---

3124. காழக உடை - கரிய உடை. ஒரு உடை விசேடமுமாம் "காழகஞ் செறிந்த வுடையினன்" (சிலப். 22 : 9i.) நண்ணு - நண்ணி. மேழகமெனக் குலவும் மைந்தர்தமை; மேழகம் - ஆடு. மைந்தர் - இடைச் சிறுர். வவ்வினனுய் முழைஞ்சில் நடந்தான்; முழைஞ்சு - குகை.

3125. கொல்லிய - கொல்லுதற்கு. புயத்தவனை - வியோமனனை. மணிவண்ணன் - கண்ணபிரான். கல்லளை - மலைக் குகை. இளையர் - இடைச்சிறுர். மாலை - மாலைக் காலம். நிரைப்பின் - பசுக்களுக்கு பின்.

3126. காந்தினி புதல்வன் - அக்குரூரன். அண்ணல் - கண்ண பிரானை. அழைப்பான் - அழைத்துவரும் பொருட்டு. புரவி - குதிரை. கதிரெழ - சூரியன் தோன்றும்படி.

3127. தேவர் உளம் மாலும் - தேவருடைய உள்ளம் மயக்கம் கொள் ளுதற்குரிய. கமலை - திருமகள். மன்னவனை - திருமாலை; என்றது கண்ண பிரானை. நமது கட்புலமும் காண லுறுமே என்னு; என்னு - என்று நினைந்து. யாணர் - புது வருவாயை யுடைய; அழகுடைய எனலுமாம்.

3128. நலங்கிளரு மாளியின டந்தவெழி னம்பன்
இலங்கெழில தாமரையொ டேரெழில் கிளைக்கும்
வலம்புரிபொ றித்தவடி வைப்பினெழில் காணுக்
கலந்தனன் மகிழ்ச்சியிரு கண்மலர் குளிர்ப்ப. (எ)

3129. மேதகு சிறைப்புடைய விண்ணவர் பசும்பொன்
கோதைபுனை நீண்மகுட கோடிமிடை கின்ற
ஆதியிரு செங்கமல மன்னவடி வைப்பின்
தாதுக விரிந்துகமழ் தாமமுடி தாழ்த்தான். (அ)

3130. மீளிமை யுடைக்கனகன் வெஞ்சமா டர்க்க
வாளரியு ருப்புணரு மல்லல்வரை மார்பன்
தாளகம லத்தழகு தந்தவிரு பொற்றாட்
டுளியில்வி ழுந்தொழுதெ ழுங்களிது ளங்கும். (கூ)

வேறு.

3131. இத்திற மகிழ்சிறந் தெறிக்குஞ் செங்கதிர்
அத்தமால் வரைசெல வாவின் பைத்தலைக்
கொத்தின்மே லாடிய குருசில் சேவடி
வைத்தொளிர் நீணெறி வல்லை யேகினான். (க0)

---

3128. நலம் கிளரும் - அழகு விளங்குகின்ற. ஆளியின் - சிங்கத்தைப் போல. நம்பன் - கண்ணபிரான். எழில - அழகுடைய. கிளைக்கும் - தோற்று விக்கின்ற. வலம்புரி பொறித்த அடி வைப்பின் எழில் காணு - சங்கத்தின் வடிவம் பொறிக்கப்பட்ட பாதங்கள் வைத்த இடத்தின் அழகைக் கண்டு. கண் மலர் குளிர்ப்ப மகிழ்ச்சி கலந்தனன்.

3129. விண்ணவரது மகுட கோடிகள் மிடைகின்ற அடி வைப்பில்; கமல மன்ன அடி வைப்பில். தாமத்தை யுடைய முடியைத் தாழ்த்தான்; தாமம் - மாலை. தாழ்த்தான் - வணங்கினான்.

3130. மீளிமை - வன்மை. கனகன் - இரணியாக்கனுடைய. சமர் - போரை. அரியுருப் புணரும் - சிங்கத்தின் உருவத்தைக் கொண்ட. மார்பன் - கண்ணபிரான். தாள கமலத்து - தண்டை யுடைய தாமரையின். தாளின் - தூளியில். விழும் - விழுவான். தொழுது எழும் - வணங்கி எழுவான்.

3131. செங்கதிர் - சூரியன். அத்த மால்வரை - அத்தமான மலையை. கொத்து - தொகுதி. குருசில் சேவடி வைத்தமையால் ஒளிர்கின்ற நெறியில்; குருசில் - கண்ணபிரான்.

3132. துளங்கொளி நீலநுண் டுகிலு டுத்தநல்
இளங்களி றன்னவவ் விராம னேடுற
விளங்குசெம் பொற்றுகின் மிளிரச் சார்த்திய
களங்கனி வண்ணனைக் கண்டி றைஞ்சினன். (கக)

3133. அல்லியந் தாமரை யனைய சேவடி
எல்லையி லுவகையி னிறைஞ்சு வான்றனை
முல்லையந் தாரணி முழவுத் தோளினர்
புல்லின ருடன்கொடு போயி னாரோ. (கஉ)

3134. விருந்தினி தூட்டினர் விருந்து வண்டுதா
தருந்துதார் மாலையு மருவி மாலைதாழ்
திருந்துதண் டமிழ்வரைத் தெய்வச் சாந்தமும்
நாந்தமு நல்கினர் நன்று வப்பவே. (கங)

3135. கனைகழற் காலவேற் கஞ்சன் வாழ்தலால்
இனிதிருந் தாய்கொலென் றெங்ஙன் கூறுகேன்
வினையினே னெனச்சில விளம்பி னன்புது
நனைவிரி பூந்தொடை நந்த கோபனே. (கச)

3136. வெந்திற லாழியான் வேறு கொண்டிருந்
தெந்தையு மாயுமற் றென்பொ ருட்டினல்

---

3132. துளங்குதல் - விளங்குதல். நீல நிறத்தை யுடைய துகிலை. இளங்களிறன்ன இராமனேடு; பலராமனேடு. பொற்றுகிலை சார்த்திய களங்கனி வண்ணனை - கண்ணபிரானை.

3133. அல்லி - அகவிதழை யுடைய. சேவடியை உவகையினல் இறைஞ்சுவான்றன்னை - அக்குரூரனை. முல்லைத் தாரை யணிந்த தோளினர், முழவுப் போலுந் தோளினர் - ஆயர்கள். புல்லினர் - அக்குரூரனைத் தழுவி.

3134. வண்டு தாதை விருந்தாக அருந்தும் தாரையும் மாலையையும்; தார் - மார்பின் மாலை. மாலை - முடி மாலை. அருவி யாகிய மாலை தாழ்கின்ற தமிழ் வரை - பொதிய மலை. அருவிக்கு மாலை உவமை; (3122. சீவக. 35. அடிக்.) நாந்தம் - கஸ்தூரி.

3135. கனை கழல் - ஒலிக்கின்ற வீரக் கழலை யுடைய. இனி திருந்தாய் கொல் என்று - இன்பமுட னிருப்பா யென்று என்று. வினையினேன் - தீவினையுடையேன். நந்தகோபன் விளம்பினன்.

3136. ஆழியான் - கண்ணபிரான். வேறு கொண்டிருந்து - அக்குரூரனைத் தனியே அழைத்திருந்து. எந்தையும் ஆயும் - வசுதேவரும் தேவகி

நொந்ததை யல்லது நுவல்வ துண்டுகொல்
வந்ததென் கூறென வழங்கி னனரோ. (கரு)

3137. நல்லிசை நாரத னவின்ற மாற்றமும்
கொல்சின மன்னவன் கொற்ற வேந்தனை
வல்லியிற் படுத்ததும் வந்த வண்ணமும்
சொல்லினன் மல்லடு தோளி னுற்கரோ. (கசு)

3138. அரசுவெஞ் சிலைமக மாற்று கின்றனன்
வருகவென் றழைத்தனன் வல்லை சேறுமென்
றுரைசெய்தா னந்தனுக் கோங்கு கற்பகத்
தருமுதல் பிடுங்குகைத் தடக்கை மாயனே. (கஎ)

3139. வண்டுசூழ் கானக நாடன் வல்லையே
தெண்டிரை யமுதினைச் சிரிக்குந் தீஞ்சுவை
வெண்டயிர் நறுநெய்பால் விரைசெ லற்பெரும்
பண்டியிற் பரப்பினன் படர்தன் மேயினன். (கஅ)

3140. மழகதி ரெழுதலு மழலை வண்டுணப்
பொழிமதுக் கமழ்மலர்ப் பூவை கொண்கனை
எழுகவென் றிசைத்தன னிளநி லாச்சொரி
குழைமுகக் காந்தினி குமர னென்பவே. (கசூ)

---

யும். நொந்ததை அல்லது - வருந்தியதை யல்லாமல். நுவல்வது - வேறு செய்தியைச் சொல்லுவது. என் - என்ன காரணம்.

3137. நாரதன் கஞ்சனுக்கு நவின்ற மாற்றத்தையும். மாற்றம் - வார்த்தை. மன்னவன் - கஞ்சன். வேந்தனை - வசுதேவனை. வல்லி - தளை. தான் வந்த வண்ணத்தையும் தோளினுற்குச் சொல்லினன். தோளினன் - கண்ணபிரான்.

3138. அரசு - கஞ்சன். சிலை மகம் - தனுர் யாகம். வல்லை சேறும் - விரைவிற் செல்லுவோம். மாயன் நந்தனுக்கு உரை செய்தான்; மாயன் - கண்ணபிரான்.

3139. கானக நாடன் - கண்ணபிரான்; நந்தகோபன் எனலுமாம். வல்லையே - விரைவில். சிரிக்கும் - எள்ளி நகுகின்ற. விரை செலல் - விரைந்து செல்லுதலையுடைய. பண்டி - வண்டி.

3140. மழ கதிர் - இளஞ் சூரியன். வண்டு உண்ணும்படி மதுவைப் பொழிகின்ற மலர். பூவை கொண்கனை - கண்ணபிரானை. குழை - குண்டலம். காந்தினி குமரன் - அக்குரூரன்.

3141. செய்யபொற் கொடிஞ்சியந் தேரின் மீமிசை
ஐயதா ரண்ணலை யழைப்பத் தோன்றினன்
வெய்யவ னளியிலன் வெங்க ணனென
மையகட் கோவியர் மறுகி னாரோ. (உ0)

3142. வளைக்கையீர் வருந்தன்மின் வழிய மும்மதக்
களிற்றடு கஞ்சனைக் கண்டு மீடுமென்
றளிக்குல மாற்றுதா ரண்ணன் மாதரைத்
தெளித்தனன் கதிர்மணித் தேர்சென் றேறினன். (உக)

3143. நாலைமா நிலம்புகழ் நந்த கோபனும்
எரிமணிக் குன்றிரண் டென்ன வேந்துதோள்
ஒருகுழை யொருவனு முடனி வர்ந்தனர்
விரைசெலற் பரிபுணர் வியன்பொற் றேரோ. (உஉ)

3144. மவ்வலங் கருங்குழன் மாதர் நெஞ்சமும்
நவ்விமென் னோக்கமுந் தொடா நன்பகல்
பவ்வவெண் டிரைத்துயில் பச்சை மாமுகில்
கவ்வைநீர் யமுனையங் கரைசென் றெய்தினன். (உஙு)

---

3141. கொடிஞ்சியையுடைய தேர். ஐயதார் அண்ணலை - மெல்லிய மாலையை யுடைய கண்ணபிரானை. தோன்றினன் - தோன்றிய அக்குரூரன். வெய்யவன் - கொடியவன். அளியிலன் - கருணையில்லாதவன. வெங்கணன் - தறுகண்மை யுடையவன். அண்ணலை அழைப்பதற்குத் தேரின் மீமிசைத் தோன்றியவன் வெய்யவன், அளியிலன், வெங்கணன் எனக் கோவியர் மறுகினர் ; மறுகினர் - மயங்கினர்.

3142. வளைக்கையீர் - கோவியருக்கு விளி. மீடும் என்று - மீள்வோம் என்று கூறி. அளிக் குலம் - வண்டுக் கூட்டம். அண்ணல் - கண்ணபிரான். தெளித்தனன் - தெளிவித்தான்.

3143. நாலை - ஒலித்தலையுடைய. எரி மணிக் குன்று - விளங்குகின்ற மாணிக்கத்தா லாகிய மலைகள். ஏந்திய தோளை யுடைய ஒரு குழை ஒருவன் - பலராமன். விரை செலல் பரிபுணர் - விரைந்து செல்லுதலை யுடைய குதிரையைப் பூட்டிய தேரில் இவர்ந்தனர்.

3144. மவ்வல் - முல்லை. மாதர் - ஆய்ச்சிய ருடைய. நவ்வி - மான். பவ்வம் - கடல். பச்சை மாமுகில் - கண்ணபிரான். கவ்வை - ஒலியை யுடைய. நன் பகலில் எய்தினன்.

3145 முடம்படு முள்ளிலை முடங்கல் மூரிசால்
கடப்படு கரிமருப் பீன்று கட்கமழ்
தடந்துறை யமுனையந் தண்ணந் தீம்புனல்
படிந்தனன் காந்தினி பயந்த தோன்றலே. (உச)

3146. தூம்புடை யெயிற்றவிர் சுடிகைப் பாழிவாய்ப்
பாம்பின்வெம் பஃறலை பனிப்ப வாடிநின்
றாம்பலந் தீங்குழ லிசைக்கு மண்ணலைப்
பூம்புனல் குடைகுவான் புனலுட் கண்டனன். (உரு)

3147. ஒழுகுதீம் புனலிடை யுற்ற தென்னெனச்
செழுமணிக் கொடிஞ்சியந் தேரை நோக்குமால்
எழில்கனிந் தொழுகிய வெழிலி வண்ணனேர்
பொழிபொலந் தேரினும் பொலியக் காணுமால். (உசு)

3148. நீரிடைக் காண்டல்போ னிலவு பொற்கொடித்
தேர்மிசை யிருந்தனன் செல்வ னுமென
ஓர்தரு முளத்தின னெழுகு பூம்புனல்
வேரியந் தாரினன் மீட்டு மூழ்கினன். (உஎ)

3149. கறங்குதண் புனலிடைக் கமலக் கண்ணனை
அறம்புரை வெண்ணிறத் தரவப் பாயன்மேல்

---

3145. முடம்படு - வளைவுபட்ட. முள் இலையை யுடைய முடங்கல். முடங்கல் - தாழை. முடங்கலைக் கரியின் மருப்பைப் போல் ஈன்று கமழ்கின்ற துறையை யுடைய யமுனையின் புனலில். தோன்றல் - அக்குரூரன்.

3146. தூம்பு - துளை; எயிற்றுக்கு அடை. பாழி - பெருமை. பஃறலை - பல தலைகள். பனிப்ப - நடுங்கும்படி. ஆம்பலந் தீங்குழல்; 3044. அண்ணலை - கண்ணபிரானை. குடைகுவான் - மூழ்குபவனாகிய அக்குரூரன்.

3147. மணியா லாகிய கொடிஞ்சியை யுடைய தேரை. நோக்கும் - பார்ப்பான். எழில் கனிந்து - அழகு முற்றி. எழிலி வண்ணன் - கண்ணபிரான். பொலியக் காணும் - வீற்றிருக்கக் காண்பான்.

3148. காண்டல் - காணப்படுதல். செல்வன், நீரிடைக் காண்டல் போல் தேர்மிசை இருந்தனன் என; செல்வன் - கண்ணபிரான். என - என்று. ஓர்தரும் - உணருகின்ற. உளத்தினனாய்த் தாரினன் மீட்டும் புனலில் மூழ்கினன்; தாரினன் - அக்குரூரன்.

3149. கறங்கு - ஒலிக்கின்ற. கமலக் கண்ணனை - கண்ணபிரானை. அறம்புரை - தருமத்தை ஒத்த; தருமத்தின் நிறம் வெள்ளை. வெண்ணிறத்

உறங்குவா னுகசெஞ் சுவந்து கண்டனன்
இறைஞ்சினன் கைம்முகிழ்த் தேத்தி னுனரோ. (உஅ)

3150. ஏத்தலு மறைத்தன னெடுத்த வவ்வுருக்
கூத்தினர் கொண்டதங் கோல மாற்றல்போல்
பூத்தளித் தேழிரும் பொழிலு மூழியில்
தீத்திடு தாமரைச் செங்கண் மாயனே. (உகூ)

3151. மதிநுதற் காந்தினி மகன்வி யப்பினன்
விதிர்விதிர்ப் பெய்திய மெய்ய னெய்தலும்
புதுவது கண்டனை போலு நீயெனு
முதல்வனின் னகைநிலா முகிழ்த்துக் கூறினுன். (௩0)

3152. பொன்னவங் தாமரைப் பூம்பொ குட்டுறை
அன்னமென் னடைமயி லன்ன சாயலாள்
மன்னவ நிலமகண் மணுள நின்னுழை
என்னகாண் பரிதென வேத்தி னுனரோ. (௩க)

3153. உளமலி யுவகைய னுயர்பொற் றேர்விடத்
தளையவிழ் தாமரைத் தலைவி மன்னவன்
வளமலி மதுரைமா நகர்ம ருங்கினேர்
இளமாக் காவுசென் றெய்தி னுனரோ. (௩உ)

---

தரவம் - வெண்மை நிறமுடைய ஆதிசேடன்; (தக்க. 282. அடிக்.) உறங்குவானுக - அறிதுயில் செய்பவனுக. இறைஞ்சினன் - வணங்கினுன். கைம் முகிழ்த்து - கையைக் குவித்து.

3150. கூத்தினர் - நாடகமாடுபவர். கோலம் - வடிவத்தை. பூத்து - உண்டாக்கி. அளித்து - காப்பாற்றி. பொழில் - உலகங்கள். ஊழியில் - யுகாந்த காலத்தில். தீத்திடும் - அழித்திடுகின்ற. மாயன் - கண்ணபிரான். மாயன் அவ்வுருவை மறைத்தனன்.

3151. காந்தினி மகன் - அக்குரூரன். விதிர் விதிர்ப்பு எய்திய மெய்யன் - நடுங்குதலையுற்ற மேனியனுய். நீ புதுவது கண்டனை போலும் எனு முதல்வன் நகை முகிழ்த்துக் கூறினுன்; புதுவது - புதுமையான காட்சியை. முதல்வன் - கண்ணபிரான்.

3152. அன்னம் போலும் நடையையும் மயில் போலும் சாயலையுமுடையாளது மன்னவ; மணுள; கண்ணபிரானுக்கு; விளி. நின்னுழை - உன்னிடத்து.

3153. உவகையன் - அக்குரூரன். மன்னவன் - கண்ணபிரான். மருங்கின் - பக்கத்தில். இளமரக்காவு - சோலை.

3154. கொழுந்திறன் மடங்கலங் குருளை குன்றினின்
றிழிந்தெனத் தேரினின் றிழிந்து தண்ணறுப்
பொழிந்தெழுந் துளவினன் போதி நீயென
வழங்கினன் காந்தினி மைந்தன் றன்னையே. (௩௩)

கலிநிலைத்துறை.

3155. தண்ணந் தாமரைக் கண்ணினன் சேவடி தாழ்ந்து
நண்ணல் வேண்டுமென் மனையென நண்ணுது மெனலும்
பண்ண மைந்ததேர் கடாயினன் படர்ந்துமன் னவற்குக்
கண்ண னுற்றமை கூறினன் காந்தினி புதல்வன். (௩௪)

# 16. மதுரை கண்ட அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

3156. வெதிரி சைத்தகார் வண்ணனும் விரியல்வெண் டோட்டுப்
புதுந றுப்பொழி போந்தைமீ மிசையுயர்த் தவனும்
முதிருங் காதலர் தம்மொடு முழவுகண் டுயிலா
மதுரை காணிய வெழுந்தனர் மாலைவந் திறுப்ப. (க)

3154. மடங்கலங் குருளை - சிங்கக் குட்டி. இழிந்து - இறங்கி. கண்ணபிரானுக்குச் சிங்கக் குட்டியும் அவனேறியிருந்த தேருக்கு மலையும் உவமை. நறு - தேன். துளவினன் - கண்ணபிரான். காந்தினி மைந்தனை நீ போதியென வழங்கினன்; போதி - போவாயாக.

3155. கண்ணின னுடைய சேவடியைத் தாழ்ந்து; கண்ணினன் - கண்ணபிரான். என - என்று அக்குரூரன் கூற. எனலும் - என்று கண்ணபிரான் கூறியவுடன். பண்ணமைந்த - ஆயத்தம் பண்ணப்பட்ட. தேரைக் கடாயினன்; கடாயினன் - செலுத்தினன். மன்னவற்கு - கஞ்சனுக்கு.

3156. வெதிர் இசைத்த - வேய்ங்குழலை ஊதிய. போந்தை - பனைமரம். உயர்த்தவன் - பலராமன். முதிரும் - முற்றிய. காதலர் - அன்பர். முழவு கண்துயிலா மதுரை - மத்தளத்தின் ஒலி இடைவிடாத மதுரை. காணிய - காண்பதற்கு. இறுப்ப - தங்க.

3157. தேன்ற தும்புதார்த் தேவா திருக்கைமற் றுலகம்
மூன்று முந்தியந் தடத்தலர் முளரியம் பொருட்டின்
ஈன்று காத்தழி யிமையவர் தலைவன்வீற் றிருப்பத்
தோன்று மந்நகர்க் குவமையொன் றெங்ஙனஞ் சொல்கேம்.()

3158. படுதி ரைத்திருப் பாற்கடல் போலவெம் மருங்கும்
அடைதல் வேண்டுமென் றான்முடிக் கம்புன லளித்த
மடல விழ்ந்ததா மரையடி வணங்குவா னீலக்
கடல்கி டந்தெனக் கிடந்தது கடிமதிட் கிடங்கு. (ரு)

3159. உறைபி லிற்றிய வுருவமா முகிலியைந் ததனுல்
பொறிம ணத்தலாற் பொலமு கடுடையநீண் டதனுல்
கறைய ணற்கடுங் கட்செவி யணையினிற் றுயின்ற
இறையெ னத்திகழ் வுற்றதா லெழின்மணிப் புரிசை. (சு)

3160. வடித்த பைந்துழாய் வனைமுகில் சேவடிக் கமலம்
உடைத்த வண்டநீள் முகட்டின்வீழ் கங்கையி னொளிர்வ
விடந்த பாழிவாய் வெவ்வரா வுண்டுமிழ் திங்கள்
துடைத்து மாளிகைச் சூளிகை தொடக்குவெண் கொடிகள். (எ)

---

3157. தேவாது இருக்கையையும் உலகம் மூன்றையும் ஈன்று காத்து அழிக்கின்ற இமையவர் தலைவன்; திருமால். நகர்க்கு - மதுரைக்கு. சொல்கேம் - சொல்லுவேம்.

3158. படுதிரை - ஒலிக்கின்ற அலைகளை யுடைய. எம்மருங்கும் - எல்லாப் பக்கமும். அரன் முடிக்குப் புனல் அளித்த அடி; அரன் - சிவபெருமான். புனல் - கங்கை. அடி - திருமால் பாதம். அடி வணங்குவான் - பாதத்தை வணங்கும் பொருட்டு. கடிமதிள் கிடங்கு - காவலையுடைய மதிளின் புறத்துள்ள அகழி.

3159. உறை பிலிற்றிய - துளியைச் சிந்திய. முகில் இயைந்ததனுல் - மேகம் பொருந்தி யிருத்தலால். பொறி மணத்தலால் - இயந்திரங்கள், திருமதன் கலந்திருத்தலால்; சிலேடை. கறை அணல் - விஷத்தை மேல்வாயிலே உடைய. இறை - திருமால். புரிசை - மதில்.

3160. வடித்த - திருத்தப் பெற்ற. துழாயை வனைகின்ற முகில்; முகில் - திருமாலுடைய. கங்கையின் ஒளிர்வ - கங்கையைப் போல் விளங்குவன. விடந்த - விஷத்தையுடைய. திங்களைத் துடைத்து. சூளிகை - உச்சியில். தொடக்கு - கட்டப்பட்ட. கொடிகளுக்குக் கங்கை உவமை.

3161. ஒளிரும் வெண்மருப் பொசிப்பவ னெதிர்தன னென்னுப்
பிளிறி யஞ்சின பெயர்வபோன் றனவெழில் பிறங்கி
அளறெ ழுக்கடி மறுகெலா மழிமதம் பொழியும்
களிறு கௌவையிற் காழ்வரை நிற்கில கழிவ. (௬)

3162. ஒன்னி றப்பரி யுருவெடுத் தவனுடல் கீண்ட
அண்ண லுற்றன னெனவெரீஇ யலமா லுற்று
மண்ணி னிற்கில வானிடைப் பறப்பன போலும்
பண்ண மைந்திடு பல்லுளைப் பசும்பரி பாய்வ. (எ)

3163. செழுந்த டங்கிரி புரைமணித் தேர்கிழித் தோடக்
கிழிந்து பொன்னிலங் கிளைத்திரு விசும்பக மறைய
எழுந்த தூளியாங் கேழுல களிப்பவ னெய்தப்
பொழிந்த தண்ணறும் பூந்துக ளாமெனப் பொலிந்த. (அ)

3164. பைந்தண் கோதையர் புலவியிற் பரிந்தவெண் முத்தம்
மந்த ரத்துயர் மாடநீண் மறுகினிற் றிகழ்வ
அந்த ளிர்ப்பனி முல்லையந் தாரினு னடையச்
சிந்து வெண்பொரி சிதர்ந்தென கிடந்தன சிறந்த. (௯)

---

3161. ஒளிரும் - விளங்குகின்ற. ஒசிப்பவன் - கண்ணபிரான். பெயர்வ போன்றன - இடம் விட்டுப் போவன போன்றன. அளறு - சேறு. கடி - வாசனையை யுடைய. அழி மதம் - ஒழுகுகின்ற மதம். கௌவையின் - முழக்கத்தோடு. காழ்வரை நிற்கில - குத்துக் கோலால் குத்தவும் தமக்குரிய எல்லையில் நில்லாதனவாய். கழிவ - நீங்குவன. களிறு காழ்வரை நிற்கில கழிவ; "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்" (கலித். 2: 26.)

3162. பரி உரு எடுத்தவன் உடல் கீண்ட - குதிரை வடிவம் கொண்ட கேசி என்பவனது உடலைக் கிழித்த. அண்ணல் - கண்ணபிரான். வெரீஇ - அஞ்சி. அலமாலுற்று - வருந்துதலுற்று. பண் அமைந்திடு - ஊர்தற்கேற்ப ஆயத்தம் செய்யப்பட்ட. பரி - குதிரை.

3163. கிரிபுரை மணித்தேர் - மலையைப் போன்ற அழகிய தேர். பொன்னிலம் கிழிந்து. விசும்பகம் மறையக் கிளைத்து எழுந்த; கிளைத்து - தோன்றி. எழுலகு அளிப்பவன். ஆங்கு எய்த - கண்ணபிரான் மதுரையை அடைதலால். பூந்துகளாமென - மகரந்தப் பொடியா மென்று.

3164. கோதையர் - மகளிர். புலவியில் - ஊடலில். பரிந்த - அறுத்தெறிந்த. மந்தரத்தைப்போ லுயர்ந்த மாடத்தையுடைய மறுகில்; திகழ்வ - விளங்குவன. முல்லையந் தாரினன் - கண்ணபிரான். சிதர்ந்தென - சிதறினாற் போல. முத்தத்திற்குப் பொரி உவமை.

3165. அளப்பில் வெஞ்சுடர் மணிதிக ழாவணம் புள்வாய்
பிளக்கும் வன்றிறற் பெய்ம்மதக் களிறனு னெய்தத்
துளக்க மில்லெனத் தூங்கிருட் குறும்பெறிந் தோட்டும்
விளக்கெ றிந்தன வாமென விளங்கொளி படைத்த. (கo)

3166. கூந்த லம்பிடிக் குலமெனக் குலவிய மடவார்
சாந்த ளாவிய தடமுலை யெதிரெதிர் தயங்கல்
பாந்த ளங்கதிர்ப் பணுடவிப் பாப்பினின் றூடும்
ஏந்த லெய்துதற் கேந்திய மணிக்குட னிகர்த்த. (கக)

3167. பின்னல் வெண்டிரைப் பிறந்ததண் முத்தினுற் குயின்ற
கன்னி மாடநின் றெழுதரு பனிநிலாக் கற்றை
பொன்னந் தாமரைப் பொகுட்டுறை செய்யபொற் கொழுந்தின்
மன்ன வற்கெதிர் வைத்தவெண் கவரியை மானும். (கஉ)

3168. மாலை முற்றிய வணரிருங் கூந்தலார் துணைக்கண்
கால தர்ப்புறத் தொளிர்வன கனைபெயல் காப்பச்
சோலை முற்றிய வரையெடுத் தாற்கொளி சொரிநல்
நீல மொப்பவற் கேந்திய விணைக்கய னிகர்த்த. (கங)

---

3165. ஆவணம் - கடைத்தெரு. புள்ளின் வாயைப் பிளக்கும் களி றனுன் ; கண்ணபிரான் ; புள் - பகாசுரன். எய்த - அடைதலால். துளக்கம் இல்லென - விளக்கம் இல்லையே யென்று. ஆவணம் படைத்த என்க.

3166. கூந்தலை யுடைய பிடிக்குலம் ; “ கூந்தன் மாலைக் குமரிப் பிடிக்குழாம் ” (சீவக. 858.) கூந்தல் - பிடரி மயிர். பிடி - பெண் யானை. மடவார் முலையுடன் எதிரெதிர் தயங்கல் ; தயங்கல் - விளங்குதல். பணுடவி - படக்காடு. ஏந்தல் எய்துதற்கு - கண்ணபிரான் மதுரையை அடைவதற்கு. மணிக்குடன் - மாணிக்கத்தாலாகிய குடம் ; பூர்ண கும்பம். முலைக்குக் குடம் உவமை.

3167. பின்னல் - ஒன்றோடொன்று பிணித்தலை யுடைய. நிலாக் கற்றை - நிலவின் தொகுதி. பொற் கொழுந்து - திருமகள். மன்னவற்கு - கண்ணபிரானுக்கு. நிலாக் கற்றைக்கு வெண்கவரி உவமை.

3168. முற்றிய - நிறைந்த. வணர் - வளைவு. கூந்தலார் - மகளி ருடைய. துணைக்கண் - இரட்டைக் கண்கள். காலதர்ப் புறத்து - சாளரத் தின் புறத்தே. காலதர் - சாளரம் ; “ காலதர் மாளிகை ” (சிலப். 5 : 8.) கனை பெயல் - மிக்க மழையை. முற்றிய - சூழ்ந்த. காப்பதற்கு வரை யெடுத்தாற்கு, நீலமொப்பவற்கு ; என்றது கண்ணபிரானை. இணைக்கயல் - இரட்டைக் கயல்மீனை.

3169. கோடு டைப்பனி மதிவடிம் பிடறுபொற் சூடுமி
மாட மீண்டிய வருமுலை மகளிராற் சிறத்தல்
ஆட லந்தனி நேமியா னடைந்தன னென்னு
ஏட விழ்ந்தபல் கோதையாற் புனைந்தவை யேய்க்கும். (கச)

3170. திருந்தொ ளிப்பசுந் தொடிக்காங் கோல்பொரச் சிவப்ப
முருந்தொ ளித்திட முகிழ்த்தவெண் முறுவலார் பாடல்
பரந்த ளிக்குலம் பாடுபூந் துளவினன் றனக்கு
விருந்த ளிப்பது போலுமால் விளைசுவை யமிழ்தம். (கரு)

3171. இன்ன மாநகர் நோக்கின னிறைவன்விண் ணெழுந்த
பொன்னங் கொம்பெனப் பொழிகமஞ் சூற்புயல் கிழித்த
மின்னெ னக்குழீஇ மென்னகை மாதரா ரவன்றன்
கன்ன வின்றதோட் பணைப்பெழி னோக்கினர் களிப்ப. (கசு)

3172. மழைம தம்பொழி மதக்களி றனையவம் மாலோன்
நிழலும் வெண்மதி நெற்றிதோய் மாடநீண் மறுகில்
அழலும் வேற்படைக் கஞ்சன தந்துகின் மாசு
கழுவு வான்றனைக் கண்டனன் கலைதரு கென்றான். (கஎ)

---

3169. கோடு - நுனி. மதி வடிம்பு - சந்திரனின் விளிம்பு. குடுமி யையுடைய மாடம் மகளிரால் சிறத்தல். வருமுலை - எழுகின்ற முலை. நேமி யான் - கண்ணபிரான். கோதை - மாலை. சிறத்தல், ஏய்க்கும்.

3170. தொடிக் கரம் - தோள் வளையை யணிந்த கை. கோல் பொரச் சிவப்ப - வீணையின் நரம்பைப் பொருவுதலால் சிவக்கும்படி. முருந்து - மயிற் பீலியின் அடிக் குருத்து ; பற்களுக்கு உவமை. சிவக்கும்படி முறுவ லார் பாடுதல், துளவினன் றனக்கு அமிழ்தத்தை விருந்தளிப்பது போலுமால்.

3171. இறைவன் இன்னவாகிய நகரை நோக்கினன் ; இறைவன் - கண்ணபிரான். கமஞ்சூல் புயல் - நிறைந்த கருப்பத்தையுடைய மேகம். மாதரார், பொன்னங் கொம்பெனவும் மின்னெனவும் குழீஇ ; அவன்றன் தோள் பணைப்பைக் களிப்ப நோக்கினர். குழீஇ - கூடி. பணைப்பு - பெருத் தலை.

(பி - ம்.) 1. நோக்கிய விறைவன். 3. மாதரார் தனது.

3172. மழை போலும் மதத்தை. மாலோன் - கண்ணபிரான். நிழலும் - ஒளி வீசுகிற. மறுகில் - தெருவில். கஞ்சனது துகில் மாசைக் கழுவவான்றனை ; வண்ணானை. கலைதருக - வெளுத்த ஆடையைக் கொடுப் பாயாக.

3173. பொன்னந் தூசணி பொருவிலோன் புகன்றமை கேட்டு
மன்னு கானினு மலையினும் வாழ்பவ ருடுப்ப
தின்ன பூந்துகி லாங்கொலென் றியம்பலு மவன்றிண்
சென்னி சிந்தினன் செம்முகத் திகிரியஞ் செல்வன். (கஅ)

3174. கையி னுலவன் கருந்தலை துமித்தபின் கழுமச்
செய்ய தாமரை கருமுகில் பூத்தெனத் திகழ்வோன்
ஐய பூந்துகி லொன்றுடீஇ யந்துகி லனைத்தும்
வெய்ய தோழருக் குதவினன் விடையென நடந்தான். (கசு)

3175. ஊசி நுண்வினை குயில்பவ னொருவன்வந் தெய்திப்
பாசி லைத்துழாய்ப் படலையம் பரம்பொரு ளவற்குக்
கோசி கப்பொலம் பட்டொடு கோலம்வீற் றிருப்பக்
காசில் பொன்றெளித் தெழுதுபூங் கச்சினி தணிந்தான். (உo)

3176. அந்நுண் டுசுநல் லணிபெற வணிந்தவன் றனக்குப்
பின்னல் வெண்டிரைக் கருங்கடல் வயிற்றிடைப் பிறந்து
பொன்னந் தாமரைப் பூம்பொகுட் டுறைந்தபொற் கொழுந்து
மன்னு மார்பினன் றன்னுரு வழங்கினன் மாதோ. (உக)

---

3173. பொன்னந்தூசு - பொற்கலை. பொருவிலோன் - கண்ணபிரான். கான் - காடு. கானிலும் மலையிலும் வாழ்பவர் இன்னதாகிய பூந்துகிலையோ உடுப்பது என்று இயம்பலும். இயம்பலும் - வண்ணான் இகழ்ந்து சொன்னவுடன். சென்னி - தலையை. செல்வன் - கண்ணபிரான்.

3174. அவன் - கஞ்சனது வண்ணானுடைய. துமித்தபின் - வெட்டிய பின். கழும - நிறைய. தாமரையைக் கருமுகில் பூத்ததெனத் திகழ்வோன்; கண்ணபிரான். ஐய - மெல்லிதாகிய. உடீஇ - உடுத்து. வெய்ய - விரும்பிய; (சீவக. 237, ந.) விடையென - ஏற்றைப் போல.

3175. ஊசி நுண்வினை குயில்பவன் ஒருவன் - ஊசியால் நுட்பமான தொழில்களைச் செய்பவனான சேணிய னொருவன். பரம்பொருளவற்கு - கண்ணபிரானுக்கு. கோசிகப் பொலம் பட்டு - வெண்மை யாகிய பொன்னாலாகிய பட்டாடை; "பாதிரிப் போது பிரித்தன்ன அங்கோசிகமும்" (பெருங். 1. 42 : 204—5.) கோலம் - அழகு. தெளித்து - கரைத்து. பட்டொடு, கச்சையும் அணிந்தான்.

3176. அணிந்தவன் - அணிவித்தவனாகிய சேணிகனுக்கு. பொற்கொழுந்து - திருமகள். மன்னும் - நிலை பெற்ற. மார்பினன் - கண்ணபிரான்.

3177. அலர்ந்த காவியு மரக்ககிதழ்க் கமலமு மொருபால்
கலந்த வாமெனக் கண்கவர் கட்டெழில் படைத்த
இலங்க லாழியா னிரும்பொழில் வரைப்பெலாங் கமழ
மலர்ந்த பன்மலர் தொடுப்பவன் மருங்குசென் றடைந்தான் ()

3178. எண்டி சைக்களிற் றீர்ங்கவுள் படிந்தவஞ் சிறகர்
வண்டு மொய்த்தெழ மருப்பரந் துலாயபூந் தெரியல்
கொண்ட லிற்சிலை குலாயதோர் கோலம்வீற் றிருப்பப்
புண்ட ரீகக்கட் புராதனற் காங்கவன் புனைந்தான். (உரு)

3179. விழைவ தென்னென வெந்திறல் பழுத்தகூ ராழி
உழவ நின்னிடத் துளங்கனிந் துருகுபே ரன்பு
தழைய நல்கெனத் தாமரைக் கண்ணருள் பெருகிப்
பொழியுங் கார்முகில் பூந்தொடை யளித்தவற் களித்தான். ()

கலிவிருத்தம்.

3180. எண்ணரிய யோசனை யிருங்கடி கமழ்ந்து
விண்ணும்விழை யப்படும் விழுக்கலவை யேந்தி
வண்ணமகள் கூனியெதிர் வந்துமழை வண்ணத்
தண்ணலை யணிந்தன ளகங்களி சிறந்தே. (உரு)

---

3177. காவி - நீலோற்பலம். அரக்கு - சிவப்பு. கலந்த - சேர்ந்தன. கட்டெழில் - மிக்க அழகு. ஆழியான் - கண்ணபிரான். வரைப்பு - இடம். மருங்கு - பக்கம்.

(பி - ம்.) 3. வரை வெலாங் கமழ.

3178. கவுள் - கன்னம். சிறகையுடைய வண்டு. மரு - வாசனை. தெரியல் - மாலை. கொண்டலில் சிலை குலாயதோர் - மேகத்தில் இந்திர வில் விளங்கினாற் போல. பூமாலைக்கு இந்திரவில் உவமை. கோலம் - அழகு. புராதனற்கு - கண்ணபிரானுக்கு. பூத்தொடுப்பவன் புனைந்தான்.

3179. விழைவது - விரும்புவது. என - என்று கண்ணபிரான் கேட்க. ஆழி உழவ: கண்ணபிரானே; விளி. தழைய நல்க - தழைக்கும்படி கொடுக்க. கார்முகில் - கண்ணபிரான். பூந்தொடை யளித்தவற்கு - பூ மாலை கொடுத்தவனுக்கு.

(பி. - ம்.) 2. 'உழவ நின்கழற் பொதுமைநீங் குருகு'

3180. கடி - வாசனை. விழுக் கலவை - சிறந்த சந்தனத்தை. மகளாகிய கூனி; திரிவக்கரை என்பர் முதனூலார்; 3181. அண்ணலை - கண்ணபிரானை. அணிந்தனள் - பூசுவித்தாள்.

3181. சேவடி சிலம்படி மிதிப்பவிறை செங்கை
பாவையனை யாளணரி பற்றின னெடுப்ப
மூவகைய கூனொருவி மூவுலகின் மாதர்
மேவரிய செவ்வியின் விளங்கினள் விழைந்தே. (உசா)

3182. நனைத்துணரு நானமு நறும்புகையும் விம்மிக்
கனைத்துவரி வண்டிமிர் கருங்குழன் மடந்தை
புனைத்துளவி னனணி பொலந்துகில் பிடித்தென்
மனைக்குவரு கென்றுசில மாற்றமுரை செய்தாள். (உஎ)

3183. சிந்தரி மழைக்கணவள் சின்மழலை கேளா
உந்துதிரை வேலியுல குண்டமணி வண்ணன்
வந்தவினை முற்றியபின் வந்தருடு மென்னு
அந்தாள வாணகை யரும்பின னகன்றான். (உஅ)

3184. இடங்கர்கது வத்தள ரிளம்பிறை மருப்பின்
கடங்கலுழ்க ருங்களிறு காத்தபுயல் வல்வில்
கிடந்ததெவ ணென்றுரை கிளந்துவிடை யென்னத்
தடஞ்சிலை மகங்குலவு சாலையி னடைந்தான். (உகூ)

---

3181. இறை, சேவடியால் பாவையனையாளது சிலம்படியை மிதித்து அணரியைப் பற்றினனாய் எடுப்ப; இறை - கண்ணபிரான். பாவையனை யாள் - கூனி. அணரி - பிடரி. மூவகைய கூன் ஒருவி - மூன்று வகை யான கூனல் நீங்கி. மாதர் - மங்கையர். மேவரிய - மேவுதற்கரிய. செவ்வி யின் - அழகுடனே.

3182. நனைத்துணர் - அரும்பையுடைய கொத்து. நானம் - கஸ்தூரி. கனைத்து - செறிந்து. மடந்தை - கூனி. துளவினான் அணிந்த துகிலைப் பிடித்தது. என் மனைக்கு - என் வீட்டிற்கு.

3183. அவள் - கூனியினுடைய. சின் மழலை - சிலவாகிய மழலைச் சொற்களை. கேளா - கேட்டு. மணி வண்ணன் - கண்ணபிரான். வினை - காரியம். அருடும் என்னு - அருள் செய்வோம் என்று கூறி.

3184. இடங்கர் - முதலை. கதுவ - பற்றுதலால். இளம்பிறை போலும் மருப்பினையுடைய களிறு; கடங்கலுழ்கின்ற களிறு: என்றது கஜேந்திரனை. இடங்கர் கதுவுதலால் தளர்ந்த களிற்றைக் காத்த புயல்: கண்ணபிரான். வில் எவண் கிடந்தது என்று உரை கிளந்து; வில் - தனுர் யாகத்தில் வைக்கப்பட்ட வில். விடை - இடபம். சிலைமகம் குலவு சாலையின் - தனுர் யாகம் செய்யும் இடத்தை.

3185. வரைக்குலம் வெருக்கொள வளர்ந்ததிணி தோளால்
சிரித்தெயி லெரித்தவிறை செஞ்சிலை யிறுத்தான்
கரைக்குமத வேழமொர் கரும்பினை வளைத்து
முரித்தென வெடுத்துநெடு மூரிவிலி றுத்தான். (௩௦)

3186. பொற்றகம லத்தழகு பூத்ததொரு கையில்
இற்றவரி விற்றுணி யெடுத்துல களிப்பான்
விற்றொழில் பழுத்தமர் விளைப்பவவ னேரும்
கொற்றமற வீருயிர் கூற்றுண வளித்தான். (௩௧)

3187. பைத்தவா வத்துவளர் பச்சைமுகி லன்னான்
அத்தவரை வெங்கதி ரடைந்திடலு மந்தண்
முத்தென முகிழ்ந்துமென் முறுக்கவிழு முல்லைக்
கொத்தணியு நந்தனுறை கொய்பொழி னடந்தான். (௩௨)

3188. ஆலுமழல் வெவ்விட வாரவரசு நீத்தோர்
சோலைநிழன் மேயபுய லேழுருடன் மேவி
வேலையமு திற்சுவை விளைந்தெழு கொழுந்தீம்
பால்விரவு மின்னடிசில் பாற்பட வயின்றான். (௩௩)

3185. வெருக்கொள - அஞ்சும்படி. சிரித்து எயில் எரித்த இறை செஞ்சிலை இறுத்தான் - புன்முறுவலால் மதிலை எரித்த சிவபெருமானது வில்லை முறித்தவனாகிய திருமால்; என்றது இராமாவதாரத்தை. தோளால் இறுத்தவன் மூரி வில்லை இறுத்தான்.

3186. பொற்ற - பொலிவு பெற்ற. கமலத்தின் அழகு பூத்ததாகிய ஒரு கையில். இற்ற - முறிந்து போன. விற்றுணி - வில்லின் துண்டை. அளிப்பான் - காக்கும் பொருட்டு. பழுத்து - முற்றி. அமர் விளைத்தற்கு அவன் நேருகின்ற வீரரது உயிரை. கூற்று உண - யமன் உண்ணும்படி.

3187. பைத்த - படத்தை விரித்த. முகிலன்னான் - கண்ணபிரான். வெங்கதிர் அத்தவரையை அடைந்திடலும்; அத்தவரை - அஸ்தமன மலை. முகிழ்ந்து - அரும்பி. முறுக்கு - பிணிப்பு. நந்தன் - நந்தகோபன்.

3188. ஆலையும் அராவரசையும் நீத்து ஓர் சோலையின் நிழலை மேய புயல்; கண்ணபிரான். ஆல் - ஆலிலை; ஆல மரத்தையும் அரச மரத்தையும் நீத்து என்பது ஒரு நயம். மேய - மேவிய. வேலை - கடல். பால்விரவும் - பால்கலந்த. பாற்பட - பகுதியுண்டாக.



# 17. கஞ்சனைக் கொன்ற அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

3189. பூத்த பல்லிரும் பொழிலெலாம் விழியருள் பெருகிக்
காத்த ளிப்பவெங் கட்செவித் துயிலொரீஇ யாவிற்
கூத்து வந்தவன் கொடுஞ்சிலை முரித்தது கேளா
நீத்த னன்றுயில் கஞ்சனும் புழுங்கின னெஞ்சம். (க)

3190. கல்லென் வெண்டிரைக் கருங்கடன் முகட்டிருள் பருகி
எல்லெ ழுந்திட வினமலர்ப் பள்ளிநின் றெழுந்து
பல்லி யத்திர ளதிர்வுறப் பால்வளை யலற
மல்லர் சாலைசென் றடைந்தனன் மானவேற் கஞ்சன். (உ)

3191. கதிர்நி லாப்பொழி கடவுள்வெண் கவிகைமீக் கவிப்ப
எதிர்நி லாப்பொழி யெயிற்றினா ரேந்திணைக் கவரி
பொதிய விழ்ந்துகா லுயிர்ப்பநீள் பொன்னெயி லுடுத்த
மதுரை மன்னவன் மஞ்சமீ மிசையிவர்ந் தனனால். (ங)

---

3189. பூத்த - தோன்றுவித்த. பொழில் - உலகங்கள். அளிப்ப - அளித்தற்கு. ஓரீஇ - நீங்கி. அரவில் கூத்து உவந்தவன் - காளியன் என்னும் பாம்பின்மீது கூத்தாடுதலை மகிழ்ந்த கண்ணபிரான். கேளா - கேட்டு. கஞ்சனும் துயில் நீத்து நெஞ்சம் புழுங்கினன்.

3190. கல்லென்; ஒலிக்குறிப்பு. கடல் முகட்டினினின்றும் எல் எழுந்திட. எல் - சூரியன். இனமலர் - தொகுதியான மலர்களாலாகிய. பல் இயத்திரள் - பல வாத்தியங்களின் தொகுதி. அதிர்வுற - முழங்கிட. வளை - சங்கு. மல்லர் சாலை - மல் யுத்தம் செய்யும் வீரரது இடத்தை.

3191. கதிராகிய நிலாவைப் பொழிகின்ற கடவுள் - சந்திரன். கவிகை - குடை. எதிர் நிலாப்பொழி எயிற்றினார் - சந்திரன்போலக் கவித்த குடைக்கு எதிராக நிலவைப் பொழிகின்ற பற்களையுடைய மகளிர். ஏந்திணைக்கவரி - ஏந்திய இரண்டாகிய சாமரை. பொதி - கட்டு. கால் உயிர்ப்ப - காற்றை வீச. மன்னவன் - கஞ்சன். மஞ்சம் - அரசு கட்டில்; சிங்காசனம்.

3192. கட்ட மைந்தவார் கழலினர் களிச்சுரும் பாற்ற
விட்ட லர்ந்தபூந் தாரினர் வெண்ணிலாப் பொழியும்
வட்ட வெண்குடை யாதவர் மற்றொழில் காண்பான்
இட்ட பொற்றவி சிவர்ந்தரி யேறென விருந்தார். (௪)

3193. மழைக்க ருங்கணார் வளரிள வனமுலைக் கோடு
கிழிப்ப மென்முகை கிழிந்துபச் சிளநறுக் கலுழி
கொழித்த பைந்தொடை குலவுதோட் கொடுந்திறற் கஞ்சன்
அழைப்ப நந்தர்கோ னடைந்துவேத் தவைசிறந் தனனால். (௫)

3194. அலங்கு செந்துவ ராடைய ராடகப் பசும்பொன்
விலங்க றன்னெடு வெஞ்சமர் விளைத்திட வேட்ட
உலங்கொ டோளின ருறுவலி தழைந்துமற் பூத்து
மலர்ந்த மார்பினர் மல்லர்வந் தீண்டினர் மாதோ. (௬)

கலிவிருத்தம்.

3195. வென்றி மற்பறை கறங்கலும் விளங்குவெயில்சூழ்
குன்றெ னக்குலவு மாடமறு கிற்குளிர்துழாய்
மன்ற லந்தெரியன் மார்பன்வளை மேனியனெடு
நன்று வந்துமழ வேறென நடந்தனனரோ. (௭)

3196. கஞ்ச நாண்மல ரணங்குபுணர் கண்ணனுறலும்
பிஞ்சு நாண்மதி பிறங்குநுதன் மாதருயர்வான்

---

3192. களிச்சுரும்பு - களிப்பை யுடைய வண்டு. விட்டு - விண்டு. கழலினரும் தாரினருமாகிய யாதவர். மற்றொழில் காண்பான் - மல்யுத்தத்தைப் பார்க்கும் பொருட்டு. தவிசில் இவர்ந்து. அரியேறு - ஆண் சிங்கம்.

(பி - ம்.) 2. வெண்ணிலா விரியும்

3193. கணார் - மகளிர். கோடு - உச்சி. கிழிப்ப - கிழித்தலால். நறுக்கலுழி - தேனாகிய ஒழுக்கை. தொடை - மாலை. கஞ்சன் அழைத்தலால். வேத்தவையை அடைந்து; வேத்தவை = வேந்தவை - இராச சபை.

3194. அலங்கு - விளங்குகின்ற. துவரூட்டிய ஆடையர்; துவர் - செந்நிறம். விலங்கல்-மலை. உலங்கொள் - உருண்டைக் கல்லின் தன்மையைக் கொண்ட. உறுவலி - மிக்க வன்மை. மல் பூத்து - மற்றொழில் தோன்றி.

3195. மல்பறை கறங்கலும் - மல்யுத்தம் தொடங்குவதற்கான பறை ஒலித்தவுடன். மறுகில் - வீதியில். மார்பன் - கண்ணபிரான். வளைமேனியன் - பலராமன். மழ ஏறு - இளைய எருது.

3196. அணங்கு - திருமகள். உறலும் - மல்லர் சாலையை அடைந்தவுடன். பிஞ்சு நாண்மதி - இளம்பிறை; 3232. மாதர் - மகளிர். உயர்ந்த

நெஞ்சு போழுநெடு மாளிகை நிலங்கடொறுநீள்
மஞ்சு கண்டுமகிழ் மஞ்ஞையென மொய்த்தனர்களால். (அ)

3197. வண்டு சூழ்தரு மணிக்குவளை வண்ணன்வாலும்
கண்டு கட்குவளை மாமலர் களிப்பநிலவுத்
துண்ட மன்னநுதன் மாதர்சிலர் சூழுமுகைவாய்
விண்ட பன்மலர்செய் மாலையின் விளங்கினர்களால். (கூ)

3198. அம்பொ னாழிவளை யங்கைதிக ழண்ணல்புகலும்
செம்பொ னாழிவளை சென்றொழிய மின்பொழிதருப்
பைம்பொன் வார்குழை துளங்கவளி பாய்தருமலர்க்
கொம்பி னின்றுசில கோதையர் குழைந்தனர்களால். (கo)

3199. ஆவி யாயவ னடைந்திடலு மாவிமகிழா
மேவி யன்பினெடு பின்படர மேதகுகருங்
காவி நாண்மலர் கடந்தவிழி மாதர்சிலர்பொற்
பாவை போலெழில் பரந்தொழுக நின்றனர்களால். (கக)

---

வானின் நெஞ்சைப் போழுகின்ற மாளிகை. மஞ்சு - மேகம் மாதர், மாளிகையின் நிலந்தோறும் மொய்த்தனர். கண்ணபிரானுக்கு மேகமும் மாதர்க்கு மயிலும் உவமை.

3197. மணிக்குவளை-அழகிய நீலோற்பலம்; நீலமணிபோன்ற குவளை எனலுமாம். வண்ணன் - கண்ணபிரான். கண்ணாகிய குவளைமலர் களிப்ப. நிலவுத் துண்டம் - பிறைச் சந்திரன்; நுதலுக்கு உவமை. மாதர், முகையின் வாய் விண்ட பல மலராற் செய்த மாலையைப் போல் விளங்கினர்.

3198. ஆழி வளை திகழ் அங்கை அண்ணல் - சக்கரமும் சங்கமும் விளங்குகின்ற கையையுடைய கண்ணபிரான். புகலும் - மல்லர் சாலையில் நுழைந்தவுடன். ஆழி வளை சென்று ஒழிய - மோதிரமும் வளையும் கெட்டு நீங்க. குழை - குண்டலம். மலர்க்கொம்பின் - பூங்கொம்பு போல. கோதையர் - மகளிர். குழைந்தனர் - வருந்தினர்.

3199. ஆவி ஆயவன் - எல்லாருக்கும் உயிராயுள்ள கண்ணபிரான். மகிழா - மகிழ்ந்து. படர - கண்ணபிரானிடத்துச் செல்ல. மாதாது ஆவி படர. பொன்பாவை போல் - பொன்னாலாகிய பிரதிமையைப்போல.

(பி - ம்.) 4. பாவை போலிய பரந்துதவ.

3200. எல்வி ளங்குவளை யேழையர்க ளித்தகையராய்ச்
செல்லு றங்குநெடு மாடமறு கிற்செறியவோர்
நல்வி ளங்களிறு போன்மென நடத்தல்புரியா
மல்லர் சாலையயன் மாதவ னடைந்தனனரோ. (கஉ)

கலிநிலைத்துறை.

3201. ஏறு போனடந் தேகுழி யிளங்களி யானை
மாறு வந்தெதிர் நிற்றலு மாயவ னோக்கி
ஆற கன்றிட வடுகளி றுய்த்திமற் றன்றேல்
கோறு நாமெனக் குஞ்சரப் பாகொடு குறித்தான். (கங)

3202. மாற்ற மன்னது கேட்டலும் வயங்குவாண் முறுவல்
தோற்ற வல்லழற் சுடுசினங் கதுவிவெம் பாகன்
காற்றெ னத்தெறு கனலெனக் கனைகட லென்னக்
கூற்ற மென்னமேற் றூண்டினன் குவலயா பீடம். (கச)

3203. களிக்கும் வண்டுணக் கடாந்திறந் தொழுகுபோர்க் களிறு
வளைக்குங் கைப்படு மழைமுகின் மின்னென மறியா

---

3200. எல் - ஒளி. ஏழையர்கள் - மகளிர்கள், செல் - மேகம். மறுகில் செறிய - வீதியில் நெருங்க. போன்மென - போலுமென்று கூறும் படி. நடத்தல் புரியா - நடந்து. மல்லரது சாலையின் அயலில். மாதவன் - கண்ணபிரான்.

(பி - ம்.) 1. ஏழையரிரிந்த கையராய்.

3201. ஏறு - இடபம். ஏகுழி - கண்ணபிரான் செல்லுமிடத்து. யானை - குவலயா பீடம் என்னும் யானை. இது கஞ்சனால் கண்ணபிரானைக் கொல்லும்படி அனுப்பப்பட்டது. மாறு வந்து - எதிரே வந்து. மாயவன் - கண்ணபிரான். களிற்றை ஆறு அகன்றிட உய்த்தி அன்றேல் நாம் கோறும் என; ஆறு அகன்றிட - வழியை விட்டு நீங்க. கோறும் - கொல்வேம். குஞ் சரப் பாகொடு - யானைப் பாகனோடு.

3202. மாற்றம் - கண்ணபிரான் மொழிந்த வார்த்தை. வாள்முறுவல் தோற்ற - ஒளியுள்ள சிரிப்புத் தோன்ற. சினம் கதுவி - கோபத்தை உண் டாக்கி. குவலயாபீடத்தைக் காற்றென்னவும் கனலென்னவும் கடலென்ன வும் கூற்றமென்னவும் தூண்டினன்; "கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென, உடல்சின வுருமென ஊழித்தீயென........தோன்றிய........ அசனி வேகமே" (சீவக. 973.)

3203. கடாம் - மதம். உரல்காலிடை ஒளிக்கும் - உரல்போன்ற காலின் நடுவில் மறையும். ஒருப்படும் நெஞ்சத்தையுடைய கரி; கரி:

ஒளிக்குஞ் சென்றுரற் காலிடை யொருப்படு நெஞ்சத்
தொளேக்கை மால்கரி யழைப்பமுன் ஞேன்றிய தோன்றல். ()

3204. மஞ்செ னக்குலாய் வளேத்திரும் பனேக்கையாற் ஜெடாக்
கஞ்ச நாண்மலர்க் கண்ணன்வால் பற்றிநின் றிருபத்
தஞ்சு விற்கிடை வாங்கிநின் றழிமதஞ் செருக்கித்
துஞ்சு ருக்கரி சுழல்வுற வொல்லேயிற் சுற்றும். (கசு)

3205. மும்மை சாலுல களித்தகார் முகிலெதிர் தோன்றிச்
செம்மை வாலொளி சிந்துபொன் ஞேடைசூழ் நுதலிற்
கொம்மை கொட்டிடுங் கோக்களி றழன்றுமே னடப்ப
வெம்மை கூர்விளே யாட்டின ஞேடினன் வீழும். (கஎ)

3206. குளிறு தெண்டிரை மேய்ந்தகார்க் குலமெலா மயங்கப்
பிளிறு வெங்குரற் பிணர்படு பணேநெடுந் தடக்கைக்
களிறு கட்கடை கனலுகக் கவிழ்ந்துமேற் குத்த
ஒளிறு வெண்பிறை மருட்டுவார் மருப்பிடை யொளிக்கும். ()

3207. ஏட விழ்ந்தபூந் துழாய்முகி லித்திறன் களிற்ரு
டாடி மண்மிசை வீழ்த்தின னழிபெருங் குருதி
மோடு கொண்டவம் மும்மதக் கலுழியிற் பெருகி
ஒட வங்கையா லொளிறுவெண் மணிமருப் பொசித்தான். ()

---

கஜேந்திரன். தோன்றல் - கண்ணபிரான். தோன்றல், களிறுவளேக்கின்ற கையில்படும், ஒளிக்கும்.

3204. மஞ்சு - மேகம். தொடர - களிறு தொடரா நிற்க. பற்றி - பிடித்து. இருபத்தஞ்சு - இருபத்தைந்து. விற்கிடை - வில்லினளவு. வாங்கி நின்று - வளேத்துப் பிடித்து நின்று. செருக்கி - தருக்கி. துஞ்சுரு - உறங்காத. கரி - குவலயாபீடம். சுற்றும் - சுற்றுவான்.

3205. கார்முகில் - கண்ணபிரான். எதிர் - யானேயின் முன்னர். செம்மை ஒளியும் வால் ஒளியும் சிந்துகின்ற; வால் - வெண்மை. ஓடை - நெற்றிப் பட்டம். கொம்மை கொட்டிடும் - புறத்தைத்தட்டுவான்; சீவக. 529; பொய்க்கத் தட்டுதல் என்றுமாம்; "அங்கையந் தலத்திஞெ லப்புதாதையெனக், கொங்கலர் கண்ணியான் கொம்மைதான் கொட்டலும்" (சீவக. 1834.) நடப்ப - நடக்கும்படி. விளேயாட்டினஞய் ஓடிவீழும்.

3206. குளிறு - முழங்குகின்ற. கார்க்குலம் - மேகக் கூட்டம். கண்ணின்கடையினின்று கனல் உக. குத்த - குத்துதலால். ஒளிறு - விளங்குகிற. மருட்டு - மயங்கச் செய்கிற. ஒளிக்கும் - மறைவான்.

3207. ஏடு - இதழ். முகில் - கண்ணபிரான். ஆடி - விளேயாடி, களிற்றை மண்ணின்மிசை வீழ்த்தினன். மோடு - பெருமை. கலுழியின் பெருக்கைப் போல. ஓட - ஓடும்படி. குருதி ஓட. மணிமருப்பு - முத்துக்களேயுடைய தந்தத்தை.

3208. பகடு தூண்டிய பத்திரன் முதலியோர் நெடுவான்
முகட டைந்திட முருக்குபு வெந்திறற் கஞ்சன்
அகடு தீயெழ வேந்துகோ டையசீ றடியால்
சகட மாய்த்தவன் றடக்கைவெண் சங்குகாட் டியதால். (உ0)

3209. அடங்க ருந்திறற் கனகன தடுசமங் கடப்ப
மடங்க லாயவன் மாலைவெள் ளருவியிற் பெருகக்
கடங்க விழ்க்கும்வெங் காடமாக் களிற்றுவெண் கோடு
பிடுங்கு கொற்றத்தும் பெருந்திறன் மடங்கல்போன் றனனால்.

3210. பாடல் சான்றபொற் பாரிசா தத்தைவே ரகழும்
ஆடன் மேம்படு மருமறை யுருக்கொள்புட் பாகன்
பீடு தாங்கிய நடையினு லல்லது பிறங்கு
கோடு தாங்கியு நிகர்த்தனன் மழைமதக் குன்றம். (உஉ)

3211. செருவி ருப்பினுற் செழுங்கவி னேங்குகால் படைத்து
வருபொ ருப்புறழ் களிற்றுவெண் மதிக்கொழுந் தன்ன
ஒரும ருப்பொசித் தேந்தின னுலகெலா மோம்பும்
இருபொ ருப்பென வேந்தெழில் வாய்ந்ததோ ளிராமன். (உங)

---

3208. பகடு - குவலயாபீடத்தை. பத்திரன் - பத்திராசுவன் என்னும் பெயர்; குவலயாபீடத்தின் பாகன். முருக்குபு=முருக்கி - அழித்து. கஞ்சனது அகடு தீயெழும்படி ; அகடு - வயிறு. ஏந்துகோடு - கண்ணபிரான் கையிலேந்திய தந்தம். ஐய - மெல்லிய. சகடம் மாய்த்தவன் - சகடாசுரனைக் கொன்ற கண்ணபிரானுடைய. கோடு சங்கின் தன்மையைக் காட்டியது.

(பி - ம்.) 2. முகட டைந்திட முனையுபு.

3209. கனகனது - இரணியனுடைய. கடப்ப - வெல்லுதற்கு. மடங்கலாயவன் - நரசிங்க உருவம்கொண்ட திருமால். கடம் பெருகக் கவிழ்க்கும். கடம் - மதம். களிற்று - குவலயாபீடத்தினுடைய. கொற்றத்தும் - வெற்றியிலும். மடங்கல் - சிங்கம். மடங்கலாயவன், மடங்கல் போன்றனன்.

3210. ஆடல் - வெற்றி. மறை உருக்கொள் புள்பாகன் - வேதத்தின் உருவத்தைக் கொண்ட கருடனுக்குத் தலைவனை கண்ணபிரான் ; கருடன் வேத உருவத்தினன் என்பது ; 852. பீடு - பெருமை. அல்லது - அல்லாமல். கோடு - தந்தம். மழைமதக்குன்றம் - யானை. குன்றத்தை நிகர்த்தனன்.

3211. செரு - போர். காலைப் படைத்துவரும் பொருப்பு உறழ்களிற்றினது ; உறழ் - ஒத்த. களிறு - குவலயாபீடம். மதிக்கொழுந்து - பிறைச்சந்திரன். ஓம்பும் - காக்கின்ற. இராமன் - பலராமன். இராமன், ஒரு மருப்பை ஒசித்து ஏந்தினன்.

3212. சோரி துண்டுளி சொரிமதத் துளியொடு துவலைக்
காரி லங்கிய கண்கவர் மேனியிற் கவின
ஏர்து ளும்பிய விலங்கொளி மதிமுகத் தரும்பு
வேர்த யங்குற வெண்மருப் பேந்தினன் விரைந்தான். (உச)

3213. குடுமி மால்வரைக் குலனெனப் பணைத்ததோண் மல்லர்க்
கிடியெ னப்பொரு கஞ்சனுக் கெய்தகூற் றென்ன
மடல விழ்ந்துதேன் மழைபொழி மன்றலந் துளவப்
படலை மாமுகில் படர்ந்தன னவைக்களப் பரப்பின். (உரு)

3214. கொண்ட லாமெனப் பிளிறுவெங் கொலைக்களி றட்டு
மண்டு வெஞ்சின மடங்கலங் குருளையின் வயங்கும்
புண்ட ரீகக்கட் பொருவிலான் செவ்விபார் புரப்போர்
கண்டு கண்டுகண் குளிர்ந்தனர் நெஞ்சகங் களித்தார். (உசா)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3215. கொங்குடைந் தொழுகு கோதை குளிர்மதத் துவலை தூற்றப்
பங்கயக் காடு பூத்த பசும்புய லென்ன நின்றோன்
அங்கதிர்க் குழவித் திங்க ளவிர்நுதற் புயலைங் கூந்தற்
செங்கய லன்ன வுண்கட் டேவகி மைந்த னென்பார். (உஎ)

3216. கருவரை யுழுவை யன்னான் காலவேற் கஞ்சற் கஞ்சும்
மருவிரி தெரியன் மாலை வாள்வசு தேவ னுய்ப்ப

---

3212. சோரி - இரத்தத்தின். துவலைக்கார் - துளியையுடைய மேகம். சோரித் துளி மதத்துளியொடு மேனியிற்கவின. ஏர் - அழகு. அரும்பு இன்ற வேர் தயங்குற ; வேர் - வியர்வை.

3213. குடுமி - சிகரம். குலன் - தொகுதி. பணைத்த - பெருத்த. மல்லர்க்கு இடியென்னவும் கஞ்சனுக்குக் கூற்ற மென்னவும் அவைக்களப் பரப்பில் முகில் படர்ந்தனன் ; முகில் - கண்ணபிரான்.

3214. கொண்டல் - மேகம். மண்டு - மிகுகின்ற. மடங்கலங்குருளையின் - சிங்கத்தின் குட்டியைப்போல். பொருவிலான் - கண்ணபிரானுடைய.

3215. கொங்கு - வாசனை. கோதை - மாலை. துவலை - தேன் துளியை. பங்கயம் - தாமரை. நின்றோன் : கண்ணபிரான். குழவித் திங்களைப்போல் அவிர்கின்ற நுதல். உண்கண் - மையுண்ட கண்.

3216. கருவரை உழுவை அன்னான் - கரிய வரிகளை யுடைய புலியைப் போன்ற கண்ணபிரான். கஞ்சற்கு அஞ்சுகின்ற வசுதேவன் ; மாலையையுடைய வசுதேவன். உய்ப்ப - செலுத்த. நாலை - கடல். நந்த

நாலைமா ஞால மேத்து நந்தகோ னன்பு பூத்துப்
புரியவிழ் நறிய முல்லைப் புலத்தினில் வளர்ந்தா னென்பார். ()

3217. கடுஞ்சிலை வேள்வி நென்னற் காணிய புகுந்து வென்றிக்
கொடுஞ்சிலை முரிய வாங்கு குங்குமக் குவவுத் தோளான்
நெடுஞ்சிலை வானம் பெய்த நீள்பெயன் மாரி காப்பத்
தடஞ்சிலை பிடுங்கிச் செங்கை தாங்கிய குருசி லென்பார். (உகூ)

3218. பொழிகதிர் மணியி னீலப் பூஞ்சிறை வரிவண் டாட
மழைமத வருவி தூற்று மத்தமா நாகஞ் செற்றோன்
நிழன்மணிச் சுடிகை யுச்சி நெரியவாய் குருதி கால
அழல்விடம் பொழியு நாகத் தாடினன் போலு மென்பார். ()

3219. பாடல்சா லோடை நெற்றிப் பாவடிச் சிறுகண் யானைப்
பீடுசால் கோடு தோளிற் பிறழ்தர வைத்து நின்றோன்
தோடுவாய் வைத்து வண்டு துதையுமென் முல்லை சூடிக்
கோடுவாய் வைத்து முல்லைக் குழலிசை குறித்தோ னென்பார்.

3220. வெற்பகம் வெறுத்த தோகை விளங்குமஞ் சாய லாரும்
மற்பக மலர்ந்த திண்டோண் மைந்தரு மகிழ்ச்சி கூர்ந்து
கற்பகங் கொணர்ந்தான் செவ்வி கண்களாற் பருகு வார்போல்
அற்பகந் தழைய நோக்கி யாடம ரரங்கு மொய்த்தார். (௩உ)

---

கோன் அன்பு பூத்து - நந்தகோபனிடத்து அன்பு கொண்டு, புரி - முறுக்கு.

3217. சிலைவேள்வி - தனுர்யாகத்தை. நென்னல் காணிய - நேற்றுக் காண்பதற்கு. தோளான் - கண்ணபிரான். சிலைவானம் - இந்திரவில்லையுடைய மேகம். பெயல்மாரி - பெய்தலையுடைய மழை. காப்ப - காத்தற்கு. தடஞ்சிலை - பெரிய மலை ; என்றது கோவர்த்தன கிரியை.

3218. மணியின் - நீலமணியைப்போன்ற ; வண்டுக்கு உவமை. மத்தமாநாகம் - மதம்பிடித்த பெரிய யானையை. செற்றோன் - கோபித்தவனை கண்ணபிரான். நிழல் - ஒளி. மணிச்சுடிகை - மணியாகிய சூட்டையுடைய. குருதிகால - இரத்தத்தைக் கக்க. நாகத்து - காளியன்மீது. ஆடினன் : கண்ணபிரான்.

3219. ஓடை - நெற்றிப் பட்டம். பாவடி - பரந்த அடி ; யானையின் கோட்டை. பிறழ்தர - மாறுபட்டுக் கிடக்க. தோடு - இதழ். கோடு - சங்கம். வாய்வைத்து - ஊதி. முல்லைக் குழலிசை ; “முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி” (சிலப். 17 : பாட்டு, 3.)

3220. வெற்பகம் - மலையிடத்தை. தோகை விளங்கும் - மயிலைப் போல் விளங்குகின்ற. சாயலார் - மகளிர். மல்பக மலர்ந்த - மல்லர்கள் பிளக்கும்படி விரிந்த. மைந்தர் - வீரர். கற்பகம் கொணர்ந்தான் - கண்ணபிரானுடைய. அன்பு அகம் தழைய - அன்பு உள்ளத்தே தழைக்கும்படி. அமர் ஆடுகின்ற அரங்கில் மொய்த்தார்.

கலிநிலைத்துறை.

3221. தளைய விழ்ந்ததார்க் கண்ணனை யடைந்துசா ணூரன்
களிமு கக்கடாக் களிற்றுவேற் காவலன் காண
விளையு மல்லமர் விளைக்குதும் யாமென விளம்ப
இளைய மெங்ஙன நின்னொடு பொருதுமென் றிசைத்தான். ()

3222. ஓடை சூழ்நுத லொருபதி னாயிரங் களிற்றுப்
பீடு சால்வலி பெற்றதோர் பெரும்பனைத் தடக்கை
ஆடல் யானையி னணிமருப் பொசித்தனை நின்போல்
எடு லாவுதா ரிளையர்மற் றுளர்கொலிவ் வுலகின். (௩௪)

3223. வருதி வல்லைநீ வருதிநின் மற்றொழில் விளங்கப்
பொருதி யாலெனப் பொருப்புறழ் தோளினன் புகலக்
குருதி தோய்பிறைக் கோடடி பிடுங்கிய கொற்றப்
பருதி மார்பின னேற்றனன் வேந்துளம் பனிப்ப. (௩௫)

3224. காரி டித்தெனக் கண்ணனோ டெதிர்ந்தசா ணூரன்
போர்வி ளைத்தலும் பொருசினத் தலாயுதன் றன்னோ
டார மர்த்தொழி றொடங்கின னடன்மற் பழுத்து
மூரி வெற்பெனப் பணைத்ததோண் முட்டிகன் முட்டி. (௩௬)

3225. தாளிற் றாள்பொரத் தலையொடு தலைபொர வுலங்கொள்
தோளிற் றோள்பொரத் துன்னியும் பின்னியுஞ் சுழன்றும்

---

3221. தளை - கட்டு. சாணூரன் : மல்லர்களில் ஒருவன் பெயர். கடாக்களிறு - ஆண்யானை. காவலன் - கஞ்சன். மல்லமர் - மற்போர். இளையம் - இளமையையுடையேமாகிய யாம். பொருதும் - போர் செய்வோம்.

3222. ஓடை - நெற்றிப் பட்டம். பீடு - பெருமை. ஆடல் யானையின் - வெற்றியை யுடைய குவலயாபீடத்தின். எடு - அலர்.

3223. வருதி - வருவாயாக. வல்லை - விரைவாக. பொருதியால் - போர்செய்வாயாக. தோளினன் - சாணூரன். குருதி - இரத்தம். கொற்றம் - வெற்றி. மார்பினன் வேந்து உளம் பனிப்ப எற்றனன். மார்பினன் - கண்ணபிரான். வேந்து - கஞ்சன். பனிப்ப - நடுங்க.

3224. கார் - மேகம். அலாயுதன்றன்னோடு - பலராமனோடு; அலாயுதன் - கலப்பையை ஆயுதமாக உடையவன். அமர்த்தொழில் - போர்த் தொழிலை. ஆடல்மல் பழுத்து - வெற்றியையுடைய மல்யுத்தத்தில் முதிர்ந்து. முட்டிகன் - முஷ்டிகன்; மல்லர்களில் ஒருவன். முட்டி - முட்டுதலுற்று. முட்டிகன் அலாயுதனோடு முட்டி அமர்த்தொழில் தொடங்கினான்.

3225. தாள் - கால். பொர - மோத. உலமகொள் தோளில் - உருண்டைக் கல்லின் தன்மையைக் கொண்ட தோளினோடு. துன்னியும் -

வாளு டைத்திறன் மன்னவர் மணிமுடி துளக்க
ஆளி மொய்ம்பின ராடமர் விளைத்தன ரன்றே. (௩எ)

3226. இலங்கு பூணெழி லின்னிளங் குமரர்மே லமர்க்கு
விலங்க லன்னவெம் மல்லரை விடுத்தனர் நோக்கல்
அலங்கல் வெண்குடை மன்னவர்க் கறங்கொன்மற் றென்னு
நிலந்த ளர்ந்துழி நெடியவன் வீழ்த்தின னிலத்தின். (௩அ)

3227. தொடித்த டக்கையாற் றுழாய்முகி லெடுத்திரு நிலத்தில்
அடிப்ப மாய்ந்தன னருவரை பொருவுசா ணூரான்
இடித்த காருரு மேறென வெறுழ்வலி யிராமன்
முடிப்ப வெந்திறன் முட்டிக ளுருயிர் முடிந்தான். (௩௯)

3228. தத்தி வீழ்ந்தளி தவழ்ந்ததார் மாயவ னவனி
பொத்து தாளினுற் சலனொடு கவுசலன் பொன்ற
முத்தெ னத்திக ழுருவினன் முழுவலிக் காத்தாற்
குத்த மாய்ந்தனன் குன்றெனப் பணைத்ததோட் கூடன். (௪0)

3229. ஒளித்து மல்லர்மற் றேனையோ ருழையுழை யொதுங்கத்
துளித்த கார்முகி லன்னவன் றேழரோ டாட

---

நெருங்கியும். மன்னவர் தம் முடியைத் துளக்க ; துளக்க - அசைக்க. ஆளி மொய்ம்பினர் - சிங்கம்போலும் வலியுடைய மல்லர்.

3226. இளங்குமரரென்றது, பலராமனையும் கண்ணபிரானையும். விலங்கல் அன்ன - மலையைப்போன்ற. நோக்கல் - வேடிக்கை பார்த்தல். அறம்கொல் - தருமமோ. இளங்குமார்மேல் மல்லரை விடுத்து நோக்கல் அறங் கொல். என்னு - என்று கூறி. நிலம் தளர்ந்துழி - பூமியிலுள்ளவர் மனம் தளர்ந்த இடத்து. நெடியவன் - கண்ணபிரான்.

3227. துழாய்முகில் - கண்ணபிரான். சாணூரனை எடுத்து. அடிப்ப - அடித்தலால். சாணூரன் மாய்ந்தனன். எறுழ்வலி இராமன் - மிக்க வன்மை யையுடைய பலராமன். முடிப்ப - முட்டிகன் உயிரை முடித்தலால்,

3228. அளி - வண்டு. தார் - மாலை. மாயவன் - கண்ணபிரான். அவனி பொத்து தாளினுல் - பூமியை மறைத்த பாதத்தினுல். சலனும், கவுசலனும் பொன்ற ; பொன்ற - அழிய. முத்தெனத் திகழ் உருவினன் - முத்தைப் போல் வெண்மையுடன் விளங்குகின்ற உருவத்தையுடைய பலராமன். கூடன் மாய்ந்தனன். சலன், கவுசலன், கூடன் என்பவர்கள் மல்லர்கள்.

3229. மல்லராகிய ஏனையோர், ஒளித்து உழை உழை ஒதுங்க ஒளித்து - மறைந்து. உழை - பக்கம். ஒதுங்க - ஒதுங்கினராக. முகிலன்;

வெளிற்றி ளம்பனே வெருட்டிய விறல்கெழு தடக்கைக்
களிற்று மன்னவ ருவந்தனர் சிவந்தனன் கஞ்சன். (சக)

3230. பூட்டு மின்றளை நந்தனைப் புதல்வரை வல்லே
ஓட்டு மின்மகி ழுக்கிர சேனனே டொருங்கே
வீட்டு மின்வசு தேவனை யென்றுவாய் வெம்பித்
தீட்டு மின்னெனத் திகழ்ந்தவேற் கஞ்சனுங் குரைத்தான். ()

3231. மதுக்க மழ்ந்தமென் மழலைவாய் வண்டினம் பாய்ந்து
மிதிக்க வாய்நெகிழ் வேரியந் துழாய்முகி னேக்கிக்
கதக்க டாக்களி றன்னபோர்க் கஞ்சன்மெல் லணைதாய்க்
குதித்த னன்பொரு சினத்திளங் கோளரி கடுப்ப. (சங)

3232. பிஞ்சு நாண்மதி தவழ்தரப் பிறங்குதண் டுளிவான்
நெஞ்சு போழ்ந்துயர் நெடுநிலைத் தவளநீண் மாட
மஞ்ச நின்றெழா வாளொடு கேடகந் தாங்கிக்
கஞ்ச னெஞ்சொடு கட்கடை கனலுகக் கனன்ருன். (சச)

---

னவன் - கண்ணபிரான். தோழரோடு ஆட - தன் தோழராகிய இடைச்சிறு ருடன் விளையாடினுனை. பனையை வெருட்டிய கை; வெருட்டிய - கோபித்த. கஞ்சன் சிவந்தனன் ; சிவந்தனன் - கோபித்தான்.

3230. நந்தனைத் தளை பூட்டுமின்; தளை - விலங்கு. புதல்வரை - கண்ணபிரானையும் பலராமனையும். ஓட்டுமின் - துரத்துங்கள். உக்கிரசேன னேடு வசுதேவனை வீட்டுமின்; வீட்டுமின் - கொல்லுங்கள். வாய் வெம்பிக் கஞ்சன் உரைத்தான்.

3231. மது - தேன். மழலைவாய் - மழலைச் சொற்களை வாயிலே உடைய. மிதிக்க - மிதித்தலால். வாய் நெகிழ்ந்த துழாய். வேரி - தேன். முகில் - கண்ணபிரான். கதக் கடாக் களிறு - கோபத்தையுடைய ஆண் யானை. கஞ்சனுடைய அணையில் தாய் இளங்கோளரி கடுப்பக் குதித்தனன் ; அணை - அரசு கட்டில். தாய் - தாவி. கோளரி - பகைவருயிரைக் கொள்ளு தலையுடைய சிங்கம். கடுப்ப - ஒப்ப.

3232. பிஞ்சு நாண்மதி - இளம்பிறை; 3196. வான் நெஞ்சு - மேகத்தின் நடுவிடத்தை. மதி தவழ்தாப் பிறங்குகின்ற மாடம்; வானின் நெஞ்சு போழ்ந்துயர்ந்த மாடம். மாடத்திற் கருகிலுள்ள மஞ்சம். மஞ்சம் - அரசு கட்டில்; 3191. எழா - எழுந்து. கேடகம் - கிடுகு. நெஞ்சிலும் கண்ணின் கடையிலும் கனல் உக. கனன்ருன் - கோபித்தான்.

3233. மல்ல லைத்தபோர் மாயவன் வளைத்தனன் றொடாக்
கல்லெ னத்திரண் டேந்துதோட் கஞ்சன்வெஞ் சினத்தன்
வில்லி லங்குபூண் பிறழ்தா வென்றிவாண் மிளிரத்
தொல்வி சும்பிடைச் சுலாவுறு பாறெனச் சுழன்றான். (சரு)

3234. வெவ்வ ராவினை விரிசிறைப் பசியபுள் ளரசு
வௌவி யாங்கணி மலர்த்தொடை வஞ்டெழுந் தார்ப்பத்
தெவ்வ டுந்திறற் கஞ்சனைக் குஞ்சியைச் சேர்த்துப்
பௌவ வெண்டிரைத் துயில்பசுங் கொண்டல்பற் றினனால். ()

3235. அலங்கு தாதுக வலைத்ததார் முடியினன் செங்கை
இலங்கு வாளின னெரிமணி மாளிகை யிறந்து
விலங்க லாமென வீழ்பவன் மேலுடன் வீழ்ந்தான்
நிலங்க டந்ததா ணீலமால் வரைபுரை நெடியோன். (சஎ)

3236. பஞ்சி யூட்டிய பங்கயச் சீறடி மடவார்
அஞ்செஞ் சாந்தணி யலர்முலைக் களிற்றொடு பொருத
மஞ்சு தோய்வரை மார்பொடு மணிப்புய நெரிந்து
துஞ்சி னனடு கஞ்சன்வெஞ் சோரிவாய் சொரிய. (சஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3237. கட்பாங் தொழுகு பைந்தார்க் கருங்கழற் கஞ்ச னஞ்சி
நட்பொடு பகையி லானை நாடொறு நினைத்த வாற்றால்

---

3233. மாயவன் - கண்ணபிரான். வளைத்தனன் தொடர - கஞ்சனை வளைத்துத் தொடர்ந்தானாக. ஏந்து தோள் - உயர்ந்த தோள். வில் - ஒளி. பிறழ்தா - மாறுபட. மிளிர - ஒளிவிட. சுலாவுறு - சுழல்கின்ற. பாறு - பருந்து.

3234. அரா - பாம்பு. விரிந்த சிறையையுடைய புள்ளரசு; பசிய புள்ளரசு; கருடன். சிறை - சிறகு. பசிய - பசியையுடைய. வௌவி யாங்கு - அபகரித்தாற் போல. தொடை - மாலையில். தெவ் அடும் - பகைவரைக் கொல்கின்ற. கஞ்சனது குஞ்சியை. பசுங் கொண்டல் - கண்ணபிரான்; கண்ணபிரானுக்குக் கருடனும், கஞ்சனுக்கு அரவும் உவமை.

3235. அலங்கு தாது உக - விளங்குகின்ற மகரந்தப் பொடி சிந்தும் படி. முடியினன், வாளின னென்றது கஞ்சனை. மாளிகையை இறந்து; இறந்து - விட்டு நீங்கி. விலங்கல் - மலை. வீழ்பவன் கஞ்சன். நெடியோன் - கண்ணபிரான்.

3236. பஞ்சி ஊட்டிய - செம்பஞ்சி ஊட்டப் பெற்ற. முலையாகிய களிற்றொடு பொருத மார்பொடு புயம் நெரிந்து சோரி சொரியக் கஞ்சன் துஞ்சினன்.

3237. கள் - தேன். நட்பொடு பகையிலானை - கண்ணபிரானை. அஞ்சி நினைத்தவாற்றால். நம்மான் - கண்ணபிரானுடைய. பொலங் கழல்

புட்கொடி யுயர்த்த நம்மான் பொலங்கழல் புல்கு நோன்றாள்
விட்புல விபுத ரெல்லாம் வியப்புற வெய்தி னானே. (சகூ)

3238. தடஞ்சிலை வளைத்துக் கஞ்சன் றம்பிய ரெண்மர் சீறிக்
கொடுஞ்சமம் விளைப்ப வெள்ளிக் குன்றெனப் பணைத்த திண்டோள்
மடங்கலஞ் சீற்றத் துப்பின் வால்வளை மேனி வள்ளல்
உடன்றவ ராவி பேழ்வாய்க் கூற்றினுக் கூட்டி னானால். (ருo)

3239. பருஉத்தடம் பனைக்கை யானைப் பருமதத் துவலை யாடிக்
குருஉத்துளிக் கமஞ்சூற் கொண்டற் கொழுந்தென நின்ற தோன்றல்
அராத்தலைக் குனித்த செம்பொ னடிதொழு தமர ரெல்லாம்
விராய்ப்பசுந் தேற லூற்றும் விரைமலர் தூவி யார்த்தார். (ருக)

3240. இந்திர நகர மெல்லா மெழுகருங் கொண்ட னாணத்
துந்துபி முழங்கி யார்ப்பச் சொரிமத வருவி தூங்கி
மந்தர வரையிற் றோன்று மத்தமால் யானைக் கஞ்சன்
அந்தின்மா நகர மெல்லா மழுங்கியுண் மயங்கிற் றன்றே. (ருஉ)

3241. மறந்தலை மணந்த வெள்வேன் மலைந்தகண் மாரி கற்ப
நறுந்துணர்க் கூந்தல் சோர நங்கைய ரழுதன் மாற்றி

---

புல்கு நோன்றாள் - பொன்னாலாகிய வீரக் கழல் பொருந்திய வலிய பாதம். விட்புல விபுதர் - விண்ணிடத்திலுள்ள தேவர். நம்மானுடைய தாளை எய்தினான்.

3238. சிலை - வில்லை. சீறி - கோபித்து. சமம் - போர். துப்பு - வன்மை. வால்வளைமேனி வள்ளல் - பலராமன். உடன்றவராவி - மாறுபட்ட கஞ்சன் தம்பியரது உயிரை. ஊட்டினான் - உண்பித்தான்.

3239. பருஉ தட - பெரிய அகன்ற; தட - வளைவு எனலுமாம். பனைக்கை யானை; "பனைத் தடக்கை, ஆடல் யானை" (3222.) துவலை - துளியில். குருஉத்துளி - நிறத்தையுடைய துளியைக் கொண்ட. தோன்றல் - கண்ணபிரானுடைய. அராத்தலை குனித்த - காளியன் தலைமீது நடித்த. விராய் - கலந்து. தேறல் - தேன்.

3240. எழு கருங் கொண்டல் நாண - எழுகின்ற கரிய மேகங்கள் நாணும்படி. எழு - எழு என்ற எண்ணுமாம். துந்துபி - வாத்தியத்துள் ஒன்று. மதமாகிய அருவி தூங்கி; தூங்கி - ஒழுகி; யானைக்கு அடை. யானையையுடைய கஞ்சன். அந்தில்: அசை. கஞ்சனது நகரமெல்லாம். அழுங்கி - வருந்தி.

3241. மறம் தலை மணந்த வேல் - வீரத்தைக் கொண்ட வேல். வேலோடு மலைந்த கண் மாரிகற்ப. மாரி கற்ப - மழையைச் சொரிய. நங்கையர் - கஞ்சனது மனைவியர். அழுதலை மாற்றி. இறந்து பாடுற்ற - இறத்தலை யுற்ற. ஈம நல்வினை - ஈமக்கிரியை. அறம் தலை மணந்த ஆழி

இறந்துபா டுற்ற கஞ்சற் கீமகல் வினைக ளெல்லாம்
அறந்தலை மணந்த கூர்வா யாழியான் புரிவித் தானால். (ருக)

3242. ஆயிரம் பகுவாய் நாகத் தறிதுயி லுணர்ந்த செங்கண்
மாயனும் வெள்ளை மேனி வள்ளலும் வல்லி நீக்கித்
தாயொடு தந்தை தாளிற் றாமரை புனைவ தென்னச்
சேயபொற் றொடிக்கை கூப்பிச் சென்னியி னிறைஞ்சி நின்றார். (ருச)

3243. எம்மைநீ ருயிர்த்த வாற்றா லின்பொன்றுந் துய்த்தி லீர்மற்
றும்முழை வளர யாங்க ளொருதவ முஞற்றி லேமே
அம்மவென் றுலகங் காக்கு மாழியந் தடக்கை வீரர்
செம்மைசால் பவளச் செவ்வாய் திறந்தனர் செப்பி னாரால்.()

3244. இறைவரே யிவரென் றெண்ணி யீன்றவ ரிறும்பூ தெய்த
மறுவறு சிறப்புத் தொல்லோன் மாயையின் மறைத்த லோடும்
பெறலரும் புதல்வ ரென்னாப் பிறந்ததோர் காதல் கூரக்
கறவைகன் றெதிர்ந்த தென்னக் கசிந்துளங் கரைய லுற்றார்.

---

யான் - தருமத்தைக் கொண்ட சக்கரத்தையுடைய கண்ணபிரான்; "அற வாழி யந்தணன்" (குறள். 8, பரிமேல்.)

3242. பகுவாய் - பிளக்கப்பட்ட வாயையுடைய. நாகத்து - ஆதிசேடன் மீது. மாயன் - கண்ணபிரான். வள்ளல் - பலராமன். வல்லி - விலங்கு. தாயின் தாளிலும் தந்தை தாளிலும். சேய - சிவந்த. கூப்பி - குவித்து.

3243. உயிர்த்தவாற்றால் - பெற்றமையால். இன்பு ஒன்றும் துய்த்திலீர் - இன்பத்தைச் சிறிதும் அநுபவித்தீரல்லீர். உம்முழை - உங்களிடத்து. ஒரு தவம் - ஒப்பற்ற தவத்தை. உஞற்றிலேமே - செய்யவில்லை; ஏ; அசை. அம்ம: அசை. ஆழி - ஆஞ்ஞா சக்கரம். வீரர் - கண்ணபிரானும் பலராமனும்.

3244. இறைவர் - கடவுளர். இவர் - கண்ணபிரானும் பலராமனும். இறும்பூது எய்த - மகிழ்ச்சி அடைந்தாராக. தொல்லோன் - கண்ணபிரான். மறைத்தலோடும் - பெற்றோரது எண்ணத்தை மறைத்தவுடன். என்னா - என்று எண்ணி. பிறந்ததோர் - உண்டாகியதொரு. கூர - மிக. கறவை கன்று எதிர்ந்ததென்ன - பிரிந்து சென்ற பசு, தன் கன்றைக் கண்டாற் போல; "கறவைகாண் கன்றின் வெஃகி" (சீவக. 1125); "தாயருக் கன்று சார்ந்த கன்றெனுந் தகைய னானான்" (கம்ப. மீட்சி. 337.)

3245. சேட்டிளங் குமரர் தம்மைச் செங்கையான் முகந்து புல்லி
மோட்டிளம் பருதி கண்ட முளரிவாண் முகத்த ராகி
ஆட்டின ருவகைக் கண்ணீ ரங்கண்வா னுறைந்தோர் தூற்று
நாட்டுணர்க் கண்ணீ ரோடு நறியமெய் திகழ மன்னோ. (ருள)

3246. உள்ளுயிர் தளிர்ப்ப வாகந் தீண்டியு முச்சி மோந்தும்
முள்ளரை முளரி வென்று முழுமதி யென்னத் தோன்றுந்
தெள்ளொளி முறுவற் செவ்வாய்த் திருமுகச் செவ்வி கண்டும்
விள்ளரு முவகை வேலை வீழ்ந்தன ரழுந்தி னூரல். (ருஅ)

3247. மாற்றருஞ் சிறப்பு வாய்ந்த வலம்புரி பொறித்த செங்கைக்
கோற்றொடிப் புதல்வர் செம்பொற் குழைமுக முளரித் தண்போ
தூற்றிருந் தொழுகு தீந்தே னொத்தமென் மழலை கேட்ப
நோற்றன மல்லே மென்னு நொந்துநெஞ் சுருகிச் சோர்வார்.

3248. உரைப்பரும் பரமா னந்த னேங்கெழி லுருவு தாங்கித்
திருப்பொலி பவளச் செவ்வாய் திறந்துநின் றத்தா வென்றும்
விருப்பமுற் றன்னை யென்று மிழற்றுமா கேட்கப் பெற்ற
வாத்தினர் மகிழ்ச்சி யாரே வகுத்தன ருரைக்க கிற்பார். (சு0)

---

3245. சேடு - பெருமை. முகந்து - ஏந்தி. மோடு - பெருமை. முளரிபோலும் முகத்தராகி. வானுறைந்தோர் தூற்றுகின்ற நாள்தணர்கள் நீரோடு உவகைக் கண்ணீரையும் மெய் திகழ ஆட்டினர்; நாள்துணர்கள் நீர் - விடியற் காலத்துப் பூத்த பூங்கொத்திலுள்ள தேனாகிய நீர். மெய் திகழ - கண்ணபிரான் மேனியும் பலராமன் மேனியும் விளங்கும்படி.

3246. தளிர்ப்ப - அன்பு தளிர்த்திட. ஆகம் - கண்ணபிரான், பலராமனென்ற இருவரது மேனியையும். முள் அரை முளரி - முள்ளை அரையில் உடைய தாமரை. செவ்வி - அழகு. விள்ளரும் - சொல்லுதற்கரிய.

3247. வலம்புரி பொறித்த - சங்கரேகை பொறிக்கப்பட்ட. புதல்வர் - கண்ணபிரான், பலராமன் என்ற இருவரது. குழை - குண்டலம். மழலை - குழந்தைப் பேச்சு. கேட்பதற்கு நோற்றன மல்லேம் என்னு; என்னு - என்று கூறி.

3248. உரைப்பரும் - கூறுதற்கரிய. பரமானந்தன் - கண்ணபிரான். உருவு - வடிவம். அத்தா - அப்பா. அன்னாய் - தாயே. மிழற்றுமா - மொழியும் விதத்தை. வாத்தினர் - நந்தகோபன், அசோதை என்பவர்; வசுதேவன் தேவகி என்றலுமாம். வாத்தினரது மகிழ்ச்சியை யாரே வகுத்து உரைக்க கிற்பார்.

3249. வாட்டிறற் செறுந ராவி வன்றிறற் பேழ்வாய்க் கூற்றுக்
கூட்டிய பருதி வைவே லுக்கிர சேனன் றன்னை
நாட்டின னரச னாக நகுமணிச் சுடிகை நெற்றிச்
சூட்டுவா ளரவி னுடுந் தொடுகழற் காலி னெம்மான். (கூக)

3250. தடந்தவழ் முதலை வௌவத் தடக்கைவின் கிளை நீட்டிக்
கடந்தவழ் கடாத்த நால்வாய்க் கருங்களி றழைப்ப வந்தோன்
படந்தவ ழாவிற் சீறும் படுகொலைக் கஞ்சற் கோடும்
விடந்தவழ் குடுமி வெள்வேல் வேந்தரை யழைப்பித் தானால். ()

3251. மூப்புடை யவரும் பாந்தண் முடிமிசைக் கிடந்த ஞாலம்
காப்பவந் துதித்த செங்கட் கண்ணனைக் கண்டு கண்டு
நீப்பிலா விளமை யெய்தி நிறைந்தபே ரின்ப மாந்திப்
பூப்புறு போக பூமி பொருந்தின ரனைய ராஞர். (கூங)

3252. பைந்துழா யலங்க லானும் பால்வளை மேனி யானும்
நந்தகோன் றன்னைப் பல்கா னகைமுக மலர்ந்து புல்லி
மைந்தரின் வளர்த்தல் செய்தீர் மற்றுநீ ரல்லீர் கொல்லோ
தந்தையு முருகு காதற் றாயுமென் றியம்பி னால். (கூச)

3253. எண்ணனீ யொன்று மெந்தா யெய்துது நின்பா லென்று
வெண்ணிலா விரிக்குந் தூசும் வெயில்கிளைத் தொழுகுஞ் செக்கர்
வண்ணமா மணிப்பொற் பூணும் வரம்பில வழங்கி மன்றற்
றண்ணுலாங் கான முல்லைத் தலைவனை விடையீந் தாரால். (கூரு)

---

3249. செறுநர் ஆவி - பகைவரது உயிரை. கூற்றுக்கு ஊட்டிய வேலையுடைய உக்கிரசேனனை. நாட்டினன் - நிலை பெறச் செய்தான். எம்மான் - கண்ணபிரான். எம்மான் உக்கிரசேனனை அரசனாக நாட்டினன்.

3250. தடம் - தடாகத்தில். தடக்கை - வளைந்த கையை. கிளை - கிழியும்படி. கடம் - காடு. கடாத்த - மதத்தையுடைய. நால்வாய் - தொங்குகின்ற வாயையுடைய. களிறு - கஜேந்திரன். வந்தோன் - கண்ண பிரான். கஞ்சற்கு அஞ்சி ஓடும் வேந்தரை அழைப்பித்தான்.

3251. மூப்புடையவரும் - முதியவரும். கண்ணனை - கண்ண பிரானை. நீப்பிலா - நீங்குதலில்லாத. பூப்புறு - பொலிவு பெற்ற. பொருந் தினரனையர் ஆனர் - அடைந்தவர் போலாயினர்.

3252. அலங்கலான் : கண்ணபிரான். மேனியான் : பலராமன். நகை - புன்முறுவல்; ஒளி எனவுமாம். மைந்தரின் - புதல்வரைப்போல. தந்தையும் தாயும் நீர் அல்லீர் கொல்லோ.

3253. நீ ஒன்றும் எண்ணல். எந்தாய் : நந்தகோபனுக்கு விளி. தூசு - ஆடை. மன்றல் - நறுமணம். முல்லைத் தலைவனை - நந்தகோப னுக்கு ; வேற்றுமை மயக்கம்.

3254. வெள்ளிவெண் முல்லைப் பைந்தார் விரைகமழ் மார்வ மெல்லாம்
வள்ளிதழ்க் கமலக் கண்ணீர் வார்தர நந்த கோபன்
கள்ளவிழ் துளவ மாலைக் காதலர் தம்மை நீங்கா
துள்ளமு முயிரும் வைக வொருதனிப் போக லுற்றான். (சுசு)

3255. வருபிறப் பின்றி நாளு மலர்தலை யுலகங் காப்ப
ஒருபிறப் பெய்தித் தோன்று முயர்நல முடைய மைந்தர்
இருபிறப் படைந்தா ராக விளநிலா வொழுகு முந்நூல்
தருபிறப் பெறிந்த கர்க்க முனிவனாற் புனைந்தான் றாதை. (சுஎ)

# 18. குரவன் மைந்தற்கொணர்ந்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

3256. பூந்தா துழக்கிப் பொறிவண்டுதண் டேறன் மாந்திக்
காந்தாரம் பாடுங் கமழ்சோலை யவந்தி மேய
சாந்தி வினிபாற் படர்குற்றுயர் தான்றன் முன்னோ
டாய்ந்தான் கலைபண் டருநான்மறை சொற்ற வையன். (க)

3257. சிறையுற்ற நீலச் சுரும்பின்னிளந் தேற லாடி
வெறியுற்ற தாது விருந்துண்டிசை பாடு மந்தண்

3254. தார் - மாலை. விரை - வாசனை. வார்தர - ஒழுக. கள் - தேன். காதலர் தம்மை - கண்ணபிரானையும் பலராமனையும்.

3255. மைந்தர் - கண்ணபிரானும் பலராமனும். இரு பிறப்படைந்தாராகும்படி கர்க்க முனிவனால் முந்நூலைப் புனைந்தான் தாதை; முந்நூல் - முப்புரி நூல்.

3256. உழக்கி - கலக்கி. பொறி வண்டு - புள்ளிகளையுடைய வண்டு. தேறல் - தேன். காந்தாரம்: ஒருபண். சோலையையுடைய அவந்தியில் மேய; அவந்தி: ஒரு தேசம். மேய - மேவிய. சாந்தீவினி; சாந்தீப முனி; இவர் கண்ணபிரான் முதலியவர்களுக்குக் கல்வி கற்பித்தவர். படர் குற்று - சென்று. தன் முன்னோடு - தன் முன்னவனான பலராமனுடன். கலையை ஆய்ந்தான். ஐயன் - கண்ணபிரான்; எழுவாய்.

3257. சிறை - சிறகு. சுரும்பு - வண்டு. இன் இளம் தேறல் ஆடி - இனிய செவ்வியுடைய தேனில் மூழ்கி. வெறி - வாசனை. தாதாகிய

நறையுற்ற தாரார் பகலோரறு பத்து நான்கின்
அறுபத்து நான்கு கலையும்பகுத் தாய்ந்த றிந்தார். (உ)

3258. திருவிற் கிளைக்குங் கதிர்மாமணிச் செய்ய செஞ்சுட்
டரவிற் குனிக்குங் கருங்கார்முகி லன்பு பூத்துப்
பரவற் கமைந்த குரவன்றனைப் பண்பி னேத்திக்
குரவற்கு நல்குங் கடனெம்வயிற் கோடி யென்றான். (ங)

3259. கோடற் கிவர்பா லுரித்தென்னெனக் கோதை மாலை
சூடுற்ற மன்றற் குழலாளொடு சூழ வன்னாள்
பாடுற்ற வேலைப் பரப்பின்றலைப் பட்டு முன்னம்
வீடுற்ற மைந்தன் றனைக்கோடல் விரும்பு கென்றாள். (ச)

3260. மடலாட்டு வண்டு துதைபூந்தொடை மாது சொற்றாங்
குடலாட்ட மெய்தித் தளர்பாம்பின துச்சி மேனின்
றடலாட் டுவந்த மழைவண்ணனை நோக்கி யன்னோன்
கடலாட்டின் மைந்தன் கழிந்தான்றனைத் தம்மி னென்றான்.()

---

விருந்தை உண்டு. நறை - தேன். தாரார் - கண்ணபிரானும் பலராமனும். அறுபத்து நான்கு பகலில் அறுபத்து நான்கு கலையையும் அறிந்தார். பகல் - நாள்.

3258. திருவில் கிளைக்கும் - இந்திர வில்லைப்போல் ஒளி வீசுகின்ற. அரவில் குனிக்கும் - காளியனென்னும் பாம்பின்மீது நடித்த. முகில் - கண்ணபிரான். பரவற்கு - புகழ்தற்கு. குரவன் - சாந்தீவினி முனிவர். கடன் - தக்கிணை. எம்வயின் கோடி - எம்மிடம் பெற்றுக் கொள்வாயாக.

3259. இவர்பால் கோடற்கு உரித்து என் எனக் குழலாளொடும் சூழ; கோடற்கு உரித்து என் - கொள்ளுதற்குரிய தக்கிணை யாது. குழலாள் - சாந்தீவினியின் மனைவி. சூழ - ஆராய. கோதையையும் மாலையையும் சூடுற்ற; சூடுற்ற - சூடுதலைப் பொருந்திய. அன்னாள் - சாந்தீவினியின் மனைவி. பாடுற்ற - ஒலியைக் கொண்ட. பட்டு - வீழ்ந்து. வீடுற்ற - இறத்தலைப் பொருந்திய. மைந்தன் - புதல்வன். கோடல் - திரும்பக் கொள்ளுதலை.

3260. மடல் ஆட்டு வண்டு - இதழை ஆட்டுகின்ற வண்டு. தொடை - மாலை. மாது - சாந்தீவினியின் மனைவி. சொற்றாங்கு - சொல்லியவாறு. உடல் ஆட்டம் எய்தி - மேனி ஆடுதலை யுற்று. அடல் ஆட்டு உவந்த - வீர விளையாட்டை மகிழ்ந்த. மழை வண்ணனை - கண்ணபிரானை. அன்னோன் - சாந்தீவினி முனிவன். கடலாட்டில் - கடல் விளையாட்டில். கழிந்தான் றனை - இறந்தவனை. தம்மின் - கொண்டு தாருங்கள்; பலராமனையும் உளப் படுத்திப் பன்மையில் கூறினர்.

3261. என்னுந் துணையிற் றுணையாகிய வேந்த லோடு
வின்னுங்க வீங்கு திரடோட்கரு மேக வண்ணன்
மன்னுந் திரைநீர் வருணன்பதி வல்லை யோட்டிப்
பொன்னங் கொடிஞ்சித் தடந்தேர்மிசைப் போயி ஞனல். (சு)

3262. வருணன் றெருமந் தெதிர்வந்தெவன் வந்த தென்னுப்
பரவும் பொழுதைப் படர்வெண்டிரைப் பட்டு மாய்ந்த
குரவன் புதல்வன் றனைவல்லை கொடுத்தி யென்றான்
அரவஞ் சுமந்த வகன்ஞால மளந்த வண்ணல். (எ)

3263. கடலுற்று வாழுங் கனலிற்கனல் கான்ற வெங்கண்
மிடலுற்ற பாஞ்ச சனன்வவ்வி விழுங்கி னுன்கொல்
அடலுற்ற வாழிப் படையாயென வாழி புக்கு
மடலுற்ற பைந்தார் மணிமார்பினன் றேடி னனே. (அ)

3264. வஞ்சம் படைத்து மறிவெண்டிரை வேலை யூடு
துஞ்சுந் திறல்வா ளவுணன்றனைச் சூழ்ந்து பற்றி
நெஞ்சம் பிளந்து நிலவுக்கதிர்ச் சங்கு கொண்டான்
கஞ்சங் கடுக்குங் கருணைத்தடங் கண்ணன் மாதோ. (கூ)

---

3261. என்னும் துணையில் - என்று கூறிய அளவில். ஏந்தல் - பலராமன். வில் நுங்க - வில் மறையும்படி. வீங்குதல் - பெருத்தல். கருமேக வண்ணன் - கண்ணபிரான். திரை நீராகிய வருணன் பதியில். ஓட்டி - தேரை ஓட்டி. பொன்னலாகிய கொடிஞ்சியையுடைய தேர்.

3262. தெருமந்து - மனங் கலங்கி. வந்தது எவன் என்ன - வந்த காரியம் என்னவென்று கூறி. பரவும் பொழுதை - புகழும் பொழுது; ஐ : அசை நிலை. திரைப்பட்டு - கடலில் அகப்பட்டு. வல்லை - விரைவில். அண்ணல் - கண்ணபிரான். அண்ணல் கொடுத்தி யென்றான்.

3263. கடலுற்று வாழும் கனலின் - வடவைக் கனலைக் காட்டிலும். கான்ற - கக்கிய. மிடல் - வலி. பாஞ்சசனன் - ஓர் அசுரன். வவ்வி - பற்றி. விழுங்கினன் சொல் - விழுங்கினனோ? ஆழிப் படையாய்; கண்ணபிரானுக்கு விளி. என - என்று வருணன் கூற. ஆழி புக்கு - கடலில் நுழைந்து. மார்பினன் - கண்ணபிரான். (பி - ம்.) 4. மார்பின னுடினனல்.

3264. ஊடு - நடுவே. துஞ்சும் - உறங்குகின்ற; அவுணன்றனை - பாஞ்சசனனை. பற்றி - பிடித்து. சங்கு; பாஞ்சசனனுடையது. கஞ்சம் கடுக்கும் - தாமரையைப் போன்ற; என்றது கண்களை. கண்ணன் சங்கைக் கொண்டான். பாஞ்சசனனிடமிருந்து பற்றிய சங்கிற்குப் பாஞ்சசனியம் என்பது பெயர்.

3265. மின்னுப் பிறைவா ளெயிற்றந்தகன் வீற்றி ருக்கும்
தென்னம் புலத்திற் கதிர்மாமணித் தேர்க டாவிப்
பின்னுந் திரையிற் கவர்சங்கு பிறங்க யாவும்
முன்னம் படைத்த முகினின்று முழக்கல் செய்தான். (கo)

3266. வெருவுற்ற கூற்றம் விரைவோடெதிர் வந்தி றைஞ்சி
வரவுற்ற தென்கொ லெனவேத்தலும் வந்த வண்ணம்
தெரிவுற்ற தாக்கிச் சிறுவற்றர வொல்லை மீளக்
குரவற் பணிந்து குமரன்றனைக் கொள்க வென்றான். (கக)

3267. பண்டார் கலிநீர்ப் பரப்பின்றலைப் பட்டு மாய்ந்த
வண்டா ரலங்கற் சிறுதோன்றன்முன் வந்து நிற்றல்
கண்டார் களித்தார் களியாமு தள்ளி யள்ளி
உண்டார் நிகர்த்தா ரெவரேயவ ரோகை சொல்வார். (கஉ)

3268. அடித்தா மரையா லகன்ஞால மளந்து காப்போன்
தொடித்தா மரையாற் றொழுதின்னுநின் னுள்ளம் வேட்ட
துடைத்தே லுயர்ந்தோ யுரையின்றென வும்மை யிங்ஙன்
படைத்தேற் குளதோ குறையென்று பழிச்சி னனல். (கங)

---

3265. அந்தகன் - யமன். தென்னம்புலம் - தென்புலம்; அம் : அசை; என்றது யமலோகத்தை. தேர் கடாவி - தன் தேரைச் செலுத்தி. திரையில் - கடலிடத்து. யாவும் முன்னம் படைத்த முகில் - கண்ணபிரான். சங்கை முழக்கல் செய்தான்.

3266. வெருவுற்ற - அஞ்சிய. கூற்றம் - யமன். வரவுற்றது - இங்கு வாலுற்றது. ஏத்தலும் - துதித்தவுடன். தெரிவுற்றதாக்கி சிறுவற்றா - யமனுக்கு உரைத்துக் குரவன் மைந்தனைக் கொண்டுவாலும். ஒல்லை - விரைவில். குரவற் பணிந்து - சாந்தீவினி முனிவரை வணங்கி.

3267. ஆர்கலி நீர் - கடல் நீர். வண்டாரலங்கல் - வண்டுகள் பொருந்திய மாலையையுடைய. தோன்றல் - சாந்தீவினியின் மகன். உண்டாரை நிகர்த்தார். அவர் ஓகையை எவரே சொல்வார்.

3268. காப்போன் - கண்ணபிரான். தொடித்தாமரையால் - வளையலை அணிந்த தாமரை போலும் கையால். வேட்டது உடைத்தேல் - விரும்புவது உளதேல். இன்று உரை என; என - என்று கண்ணபிரான் கேட்க. உம்மைப் படைத்தேற்குக் குறை உளதோ என்று பழிச்சினன்.

(பி - ம்.) 3. 'உம்மையிஞ்ஞன்'.

3269. நஞ்சூட்டு பேயின் முலையுண்டொரு நச்ச ராவின்
அஞ்சூட்டி னுடுங் கருங்கொண்ட லலர்ந்த கஞ்சப்
பைஞ்சூட் டணிந்த மறையோன்விடை கொண்டு பைம்பொன்
செஞ்சூட் டெயில்சூழ் மதுரைப்பதி சென்ற டைந்தான் (கச)



# 19. உத்தவனைக் கோகுலத்தில் விடுத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

3270. அருட்டந்தை தாயி னிடராற்றுப லங்கல் வெள்வேல்
வெருட்டுங் கருங்கண் மடக்கோவியர் வெய்ய நெஞ்சம்
தெருட்டும் பொருட்டு விடுத்தான்றிக ழொற்றை யாழி
உருட்டுங் கதிரிற் றிகழுத்தவன் றன்னை மாயன். (க)

3271. தேதா வெனவண் டொருகோடி சிலம்பு தொங்கற்
றூதாடு மன்றற் குழற்காடு தயங்க மல்லற்
கோதூளி மொய்ப்ப மருண்மாலையிற் கொண்டல் வண்ணன்
தூதாகி நின்றே னுயர்கோகுலந் துன்னி னானால். (உ)

3269. நஞ்சு - விஷம். பேய் - பூதனை. அராவின் அம் சூட்டில் - காளியனின் அழகிய உச்சியில். கருங் கொண்டல் - கண்ணபிரான். கஞ்சப் பைஞ்சூட்டு அணிந்த மறையோன் - தாமரையாகிய பசுமையான மாலையை அணிந்த சாந்தீவினி முனிவனிடம். சூட்டு - மதிலுறுப்புள் ஒன்று. மதுரை - வடமதுரை.

3270. தந்தை தாயின் - நந்தகோபன் அசோதை என்னும் இருவருடைய. இடர் ஆற்றுபு - துன்பத்தை நீக்கி. அலங்கல் - மாலை. கோவியர் - ஆய்ச்சியருடைய. தெருட்டும் பொருட்டு - தெளிவடையும் பொருட்டு. மாயன் உத்தவன்றன்னை விடுத்தான்; மாயன் - கண்ணபிரான். உத்தவன் - யாதவகுலத்துதித்தவன்; கண்ணபிரானுடைய பக்தன்.

3271. ஒரு கோடி வண்டு தேதாவெனச் சிலம்பும்; "தேதாவென்றே தேனுடு வண்டு திசைபாடும்" (சூளா. சுயம். 194.) சிலம்பும் - ஒலிக்கின்ற. தொங்கல் - மாலையில். மன்றல் - வாசனை. மல்லல் - வளப்பம். கோதூளி - பசுவின் காலாலுண்டாகிய துகள். மருள் மாலையில் - மயங்குகின்ற மாலைக் காலத்தில். கொண்டல் வண்ணனுடைய தூதாகி நின்றேன்: உத்தவன், துன்னினான் - அடைந்தான்.

**கலிவிருத்தம்.**

3272. தோட்டெழுந் துளவினன் றுணைவன்வந் தனனெனு
நாட்டுணர் விரவுதார் நந்தகோ னெதிர்கொளாச்
சேட்டிளம் பருதியிற் றிகழுமார் புறத்தழீஇ
ஊட்டினன் விருந்தினி துளங்களி சிறப்பவே. (௩)

3273. பொன்னலந் தாமரைப் பூமகள் காமுறும்
கன்னியந் தண்டுழாய்க் கமழ்தொடை யணிந்ததோள்
இன்னெழிற் புதல்வனோ டினிதிருந் தனன்கொலோ
மன்னவர் திலகனென் மனமகிழ் தோழனே. (௪)

3274. கனைக்குமா வண்டுணக் கலுழிபாய் கருங்கவுட்
பனைக்கைமால் யானையின் பான்மருப் பொசித்தநம்
தனிப்பெருஞ் சங்கொளிர் தாமரைக் காத்தினன்
நினைக்குமே யெம்மையு நிரைமலர்த் தாரினாய். (௫)

3275. கறங்குவெள் ளருவிபாய் கனவரைச் சாரலும்
சிறந்தசெங் கதிர்தரு தெய்வமா நதியும்வண்
டுறங்குபூஞ் சோலையு முடன்குலாந் தோழரும்
மறந்தனன் போலுமம் மணிநிற வண்ணனே. (௬)

---

3272. தோட்டெழும் - இதழ் தோன்றுகின்ற; விரித்தல் விகாரம். துளவினனுடைய துணைவன்: உத்தவன்; துணைவன் - அன்பன். நாள்துணர் விரவு - விடியற் காலத்துப் பூத்த பூங்கொத்துக்கள் கலந்த. எதிர்கொளா - எதிர் கொண்டு. சேடு - பெருமை. பருதி - சூரியன். சேட்டிளம் பருதியிற் றிகழும் மார்பு; "சேட்டிளம் பருதி போலுந் திருமகிழ் மாலை மார்பன்" (சீவக 442, அடிக்.) தழீஇ - தழுவி. உள்ளம் களி சிறப்ப விருந்தை இனிதாக ஊட்டினன்.

3273. பொன்னலந் தாமரை - பொற்றாமரை; அல், அம்: சாரியைகள். பொன்னின் நலம் கொண்ட தாமரை யெனினும் ஆம். காமுறும் - விரும்புகின்ற காமுறுகின்ற தோளையுடைய புதல்வன்: கண்ணபிரான். மன்னவர் திலகனாகிய தோழன்: வசுதேவன். தோழன் புதல்வனோடு இனிதிருந்தனன் கொலோ.

3274. கனைக்கும் மா வண்டு - ஒலிக்கின்ற கரிய வண்டு. கவுள் - கன்னம். யானையின் - குவலயாபீடத்தின். தாமரைக் காத்தினன்: கண்ணபிரான். எம்மையும் நினைக்குமே; நினைக்குமே - நினைப்பானா? தாரினாய்: உத்தவனுக்கு விளி.

3275. கறங்கு - ஒலிக்கின்ற. வரைச்சாரல் - மலைச்சாரல். கதிர் தரு தெய்வமா நதி - சூரியன் பெற்ற யமுனை நதி. குலாம் - குலாவுகின்ற. மணிநிற வண்ணன், மறந்தனன் போலும்; மணிநிற வண்ணன் - கண்ணபிரான்.

3276. மனமெலா முருக்கிய மகரவார் குழையுமென்
பனிநிலா முறுவலும் பவளவாய் மலருமேர்
கனியுஃவாண் முகமுமெங் கண்களாற் காணுமா
றினமலர்த் தாரினு னின்னுமிங் கெய்துமே. (எ)

3277. முல்லையந் தாரினுன் மூரிமால் வரைநிகர்
வில்லிறுத் தெண்டிசை வேழமே போல்வரும்
மல்லடர்த் தேந்திய மணிவரைத் தோளினுற்
புல்லுநா ளின்னமும் பொருந்தலுண் டாகுமே. (அ)

3278. கோட்டுமால் வரையினுற் குளிர்மழை தாங்கியும்
காட்டழல் பருகியுங் காத்தகார் பயின்றதோர்
ஏட்டிணர்க் கானமு மிளமரச் சோலையும்
நாட்டமுற் றிடுதொறு நாடுமெம் முள்ளமே. (கூ)

3279. எனப்பல நந்தகோ னிசைத்தலு மன்னையும்
புனத்துழாய் மாலையம் புதல்வனை நினைந்துகண்
பனிப்பவெம் முலைசுரந் தொழுகுபால் பாரெலாம்
நனைத்திடக் கலுழ்ந்தன ளன்னர்நெஞ் சுருகியே. (க0)

---

3276. மனத்தை உருக்கிய. மகர வார்குழை - மகர குண்டலம். பனி - குளிர்ச்சி. வாயாகிய மலரும். ஏர் கனியும் - அழகு முற்றிய. காணுமாறு - பார்க்கும்படி. தாரினன் - கண்ணபிரான். எய்துமே - எய்துவானு?

3277. தாரினன் : கண்ணபிரான். வரையை நிகர்த்த வில்லை இறுத்து. வேழமே போல் வரும் மல்லை அடர்த்து ; மல் - மற்போர் வீரர்கள். ஏந்திய - உயர்ந்த. தாரினனுடைய தோளினுல் புல்லுகின்ற நாள் இன்னமும் பொருந்தலுண்டாகுமோ.

3278. கோடு - சிகரம். வரை - கோவர்த்தனகிரி. காட்டழல் - காட்டுத் தீ. கார் பயின்றதோர் - மேகம் போலும் கண்ணபிரான் பழகிய தொரு. பயின்றதோர் கானமும், சோலையும். நாட்ட முற்றிடுதொறும் - பார்க்குந்தோறும். எம் உள்ளம் நாடும் ; நாடும் - கண்ணபிரானைத் தேடுகின்றது.

(பி - ம்.) 2. கார் பயின்ற வால்.

3279. இசைத்தலும் - கூறியவுடன். அன்னை : அசோதை. புதல்வன் : கண்ணபிரான். கண் பனிப்ப - கண்கள் நீரைச் சொரிய. நெஞ்சுருகிக் கலுழ்ந்தனள்.

கலிநிலைத்துறை.

3280. அத்திற ஞேக்கி யலங்க லாழி யான்மேல்
இத்திற மன்புறு மும்மை யார்நி கர்ப்பார்
பைத்தா வேந்தமிப் பாரி லென்று பைந்தார்
உத்தவ னெஞ்ச முவந்து ரைக்க லுற்ருன். (கக)

3281. சங்கமி லங்கிய தாம ரைக்கை மாயோன்
உங்கண்ம னத்தினு மென்ம னத்து முண்டால்
வெங்கன ருருவின் மேவி நின்ற வாபோல்
எங்கணு முண்டவ னெங்ங னும்மை நீத்தான். (கஉ)

3282. வெள்ளிவெண் முல்லை மிலைந்த செம்பொன் மார்பன்
உள்ள முவப்ப வுமக்கு தித்த காதற்
பிள்ளைகொல் விண்ணொடு மண்ணு மன்று பெற்ற
தள்ளில் சிறப்புறு தந்தை யல்ல னேகொல். (கங)

3283. என்றவர் நெஞ்சு தெளித்து வண்டி சைக்கும்
மன்றல் விரிந்த மலர்த்து ழாய லங்கற்
குன்றனை யானிலை கூறி ஞன லங்கூர்
மின்றிகழ் வெள்ளியும் விண்மு ளைத்த தன்றே. (கச)

3284. குடைந்திள வண்டினங் கோதை தாழ மின்னின்
சுடர்ந்தில கொண்குழை தோடி யங்க நல்லார்

3280. அலங்கல் - மாலை. ஆழியான்மேல் - கண்ணபிரானிடத்து. பைத்தரவு - படத்தையுடையதாகிய பாம்பு. இப்பாரில் உம்மை நிகர்ப்பார் யார் என்று உத்தவன் உரைக்கலுற்ருன்.

3281. இலங்கிய - விளங்கிய. மாயோன் - கண்ணபிரான். உங்களுடைய மனத்திலும் என் மனத்திலும் உண்டு கனல் - தீ. தாருவில் - அரணிக் கட்டையில்; அத்திக் கட்டை எனினுமாம். அவன் உம்மை எங்ஙனம் நீத்தான்; நீங்கவில்லை என்றவாறு.

3282. முல்லை - முல்லை மாலையை. மார்பன் - கண்ணபிரான். உமக்கு உள்ளம் உவக்கும்படி உதித்த காதற்பிள்ளை கொல்; அன்று என்றவாறு. விண்ணையும் மண்ணையும் அன்று பெற்ற தந்தை அல்லனே கொல்; தந்தையே யாவான் என்றவாறு.

3283. நெஞ்சு தெளித்து - மனத்தைத் தெளிவித்து. வண்டிசைக்கும் அலங்கலையுடைய. குன்றனையான் - கண்ணபிரானுடைய. நலம் கூர் - நன்மை மிக்க. வெள்ளி - சுக்கிரன். முளைத்தது - தோன்றியது.

3284. வண்டினம் கோதையில் தாழ; தாழ - தங்க. மின்னின் - மின்னலைப் போல். குழையும் தோடும் இயங்க; இயங்க - அசைய. நல்லார் -

கடைந்தனர் வெண்டயிர் காய்சி னத்த பாம்பின்
நடப்புரி கார்செய ஞவி ஞன வின்றே. (கரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3285. திரைபொறி துளியுஞ் சிந்த செழுமணித் திரளுஞ் செய்ய
மரைமலர் வீழும் வண்டும் வயின்வயின் வயங்க லுற்ற
உரவுநீர் யமுனை யாட வுத்தவ னெழுந்து சென்றான்
பருதியஞ் செல்வன் போலப் பசும்பரித் தேரின் மன்னே. (கசு)

3286. கதிர்மணிக் கொடிஞ்சித் திண்டேர் காண்டலு மமுதங் கால
வெதிரிசை வடித்த செவ்வாய் வேரியந் துளவி ஞனை
மதுரையிற் கொண்டு போயான் வந்தனன் கொல்லோ வென்னச்
சிதரரி மழைக்கண் மாதர் திரண்டனர் நெருக்கி ஞரால். (கஎ)

3287. முகினிற வண்ணன் செய்ய மூளரியங் கண்ணன் றாழ்ந்த
மகரவார் குழையன் வட்ட வாண்மதி முகத்தன் பைம்பொன்
துகிலின னிவனம் மாயன் றோழனே யாகு மென்ன
அகிலுண விரிந்த கூந்த லாய்ச்சியர் வளைந்து மொய்த்தார். (கஅ)

3288. மடங்கலங் குருளை போல மத்தமால் யானைக் கோடு
பிடுங்கிய தடக்கை யானைப் பெற்றெடுத் தவர்தந் துன்பம்
கடிந்திடந் தாய்நீ யன்றே காவல வென்று வெள்வேல்
கிடந்தபோற் பிறழுங் கண்ணார் கிளியெனக் கிளக்க லுற்றார். (ககூ)

---

ஆய்ச்சியர். பாம்பில் நடம்புரி கார் செயல் - காளியன்மீது நடந்தைச் செய்த கண்ணபிரானுடைய செயலை. நல்லார், கார் செயலை நாவினால் நவின்று தயிர் கடைந்தனர்.

3285. துளியும், மணித்திரளும், வண்டும் வயங்கலுற்ற யமுனையில்; உரவு - வலி; பரப்பு எனலுமாம். வயின் வயின் - இடந்தோறும். ஆட - நீர் மூழ்க. பருதியாகிய செல்வனைப் போல் தேரில் உத்தவன் சென்றான்; பருதி - சூரியன்.

3286. கொடிஞ்சி : கொடுஞ்சி எனவும் வழங்கப் பெறும்; தேரின் முன்னர்த் தாமரை யரும்பின் வடிவமாகச் செய்து அமைக்கப்படுவதோர் உறுப்பு. காண்டலும் - பார்த்தவுடன். கால - சொரியும்படி. வெதிரிசை - வேய்ங்குழலிசையை. துளவினானை - கண்ணபிரானை. போயான் - போன வன்; என்றது அக்குரூரனை எண்ணி. மாதர் - ஆய்ச்சியர். கோபத்தால் நெருக்கினர்.

3287. வண்ணன், கண்ணன், குழையன், முகத்தன், துகிலினன்; என்றது உத்தவனை. மாயன் தோழனே - கண்ணபிரானுடைய நண்பனே. என்ன - என்று கருதி. அகில் உண - அகிற்புகையை உண்ணுதற்கு.

3288. மடங்கலங் குருளை - சிங்கக் குட்டி. கோடு - தந்தம். தடக் கையான் - கண்ணபிரான். கடிந்திடந்தாய் - போக்கினாய். வேல் கிடந் தவை போலப் பிறழும் கண். கண்ணார் - ஆய்ச்சியர்.

கலிவிருத்தம்.

3289. நறையுணின் வரிவண்டந் நாண்மலர் விடுமன்றே
அறைகட லமுதூறு மாய்கனி நுகர்வுற்றால்
பறவையும் மரம்விட்டுப் படர்குவ துளதன்றே
எறிகதிர் மணிமார்பற் கெம்முழை யெவனென்றார். (௨௦)

3290. கண்டலின் முகைவிண்டேழ் காவத மணநாறும்
தண்டலை விளையாடத் தாதளை தருசெங்கண்
வண்டெதிர் வரல்காணா மாயவன் விடுதூதாக்
கொண்டொரு முகில்மூரற் கோல்வளை யுரைசெய்வாள். (௨௧)

3291. வெம்மது நுகர்கிற்பாய் விரைகமழ் துளவத்தார்
மைம்முகில் வரைமார்வ மருவிய மடநல்லார்
கொம்மைவெம் முலையாடுங் குங்கும மெழுகுற்ற
செம்முக முடையாய்நீ தீண்டலெம் மடிவந்தே. (௨௨)

3292. விடவர வினிலாடும் விண்ணவ னிசைகானத்
திடையர்தம் மடவார்முன் னென்னைகொ னவில்கிற்பாய்
வடவரை புரைசெம்பொன் மாடநன் மதுரைக்கட்
படைவிழி மடவார்முன் பாடுதல் புரிசென்றே. (௨௩)

3293. மற்றிணை பெறுகல்லா மதுரையி னுறைகின்ற
பொற்றொடி மடவார்தம் புதுநல னுகராமே

---

3289. வண்டு நறை உணின் நாண்மலரை விடுமன்றே; நறை - தேன். உணின் - உண்டால். அன்றே - அல்லவோ. அமுதூறும் - அமிர்தம் போலச் சுவை ஊறுகின்ற. படர்குவது - வேறிடம் செல்வது. மார்பற்கு - கண்ணபிரானுக்கு. எம்முழை - எம்மிடம். எவன் - என்ன காரியம்?

3290. கண்டலின் முகை - தாழையின் மொட்டு. விண்டு - அலர்ந்து. காவதம் - காதம். தண்டலை - சோலையில். தாதை அளைகின்ற வண்டு. காணா - கண்டு. மாயவனுக்கு விடுகின்ற தூதாகக் கொண்டு. கோல்வளை : ஓர் ஆய்ச்சி.

3291. வெம்மது - விரும்புகின்ற தேனை. வெம்மை - விருப்பம்; சீவக. 2. ந. கொம்மை - பெருமை. எம் அடியை வந்து தீண்டல்; தீண்டல் - தீண்டாதே.

3292. விண்ணவன் - கண்ணபிரான். என்னை கொல் - எதற்காக. வட வரை - மேரு மலை. சென்று பாடுதல் புரிவாய்.

3293. மற்று; அசை. இணை பெறுகல்லா - ஒப்புப் பெற முடியாத. புது நலன் - புதிய இன்பம். சிற்றிடை மடவார் தம் - சிறிய இடையை

சிற்றிடை மடவார்தோள் சேர்தா நினைவானே
கொற்றமும் மதயானைக் கோடுகொ ணெடியோனே. (உச)

3294. போக்கறு பொலன்வண்ணம் பூப்புற மெலிவேமைக்
காக்கவு நினைவானே காமரு கொடியேபோல்
எக்கற வுடனெய்து மின்னகை மடமாதின்
மூக்கற முனிவுற்ற மொய்யடு சிலையோனே. (உரு)

கலிநிலைத்துறை.

3295. ஓர்குற ளாயருண் மூவடி மண்ணென வுற்றோதா
நீர்செல வானக நெஞ்சு பிளப்ப நிவந்தானல்
வார்கடன் மண்புகழ் வாலியை முன்பு மறைந்தெய்தான்
காருரு வத்தனை யார்கொ றெளிந்தனர் கற்றோரே. (உசு)

3296. மட்டவிழ் தாமரை மாமலர் மேலுறை மாமா தும்
பெட்ட வுருப்புணர் பூதனை யாவி பிழிந்துண்டோன்
கட்டுரை யானிறை போய்மட நெஞ்சு கலுழ்ந்தாளாய்
விட்டிலள் செக்கர் மணித்திரு மார்வம் விழைந்தாளே. (உஎ)

---

யுடைய ஆய்ச்சியாது. கோட்டைக் கொண்ட நெடியோன் : கண்ணபிரான்; எழுவாய். கொற்றம் - வெற்றி ; யானைக்கு அடை.

3294. போக்கறு - குற்றமற்ற. பொலன் வண்ணம் பூப்புற மெலிவேமை - பொன்னிறமாகிய பசலை தோன்றிட வருந்துகின்ற எம்மை. காமரு - விருப்பம் மருவிய. எக்கறவு - ஆசையால் தாழ்தல். மாதின் - சூர்ப்பநகையின். மூக்கு அற - மூக்கு அறும்படி. சிலையோன் - இராமன்; என்றது ஈண்டுக் கண்ணபிரானை. சிலையோன் காக்கவும் நினைவானோ.

3295. குறளாய் - குறுகிய வடிவமாய்; என்றது வாமனவதாரத்தை. நீர்செல - கையில் தாரைநீர் சென்றவுடன். நெஞ்சு - நடுவிடம். நிவந்தான்- உயர்ந்தான். மண்புகழ் - உலகோர் புகழும். காருருவத்தனை - கண்ணபிரானை. தெளிந்தனர் - அறிந்தனர். அறியவில்லை யென்றவாறு.

3296. மட்டு - தேன். மாது - திருமகள். பெட்ட - விரும்பிய. உண்டோன் கட்டுரையால் - கண்ணபிரான் கூறிய வார்த்தையால். நிறை போய் - மனத்தை ஒருவழி நிறுத்தும் தன்மை கெட்டு. மலர்மேலுறை மாதும் கலுழ்ந்தாளாய் விட்டிலளாய் மார்வத்தை விழைந்தாள்.

3297. தண்ணகை யாலுயி ருண்டு விடுங்குளிர் தார்மார்பன்
கண்ணன் வளைந்த திருப்புரு வச்செயல் கண்ணுற்றால்
எண்ணறு நெஞ்சு குழைந்து விரும்புதல் யாமேயோ
விண்ணம் விளங்கிய வெம்முலை மாதரும் வீழாரோ. (உஅ)

3298. மங்கை யொருத்தி மணித்தட மார்பினில் வாழ்வாளாம்
செங்கய லுண்க ணொருத்தி புயத்திடை சேர்வாளாம்
கொங்கு படிந்தெழ வண்டுல குக்கொரு கோவோடே
எங்களை யித்திற மின்று புணர்க்க வெழுந்தாயே. (உகூ)

3299. பொற்ற விலங்கித ழாயிரம் விண்டலர் பூமேவும்
நற்றிரு மாது மணந்தவ னின்னரு ணன்றுமால்
பற்றுபு தன்னை மனத்து நினைத்தவர் பார்மேலே
அற்று மணிச்சிறை வண்டினை யொப்ப வளிப்பானே. (௩0)

3300. நாமு மறக்குது நம்மை மறந்த நறுந்தேறற்
பூமகள் கொண்கனை யென்னின் விளங்குமொர் பொன்னாழிக்
காமரு செங்கதிர் நல்கிய மாநதி கண்டாலும்
மாமணி காணினு நெஞ்சு நினைக்குறு மாறாதே. (௩க)

---

3297. தண் நகையால் - குளிர்ந்த புன்சிரிப்பால். மார்பனாகிய கண்ணனது புருவச் செயலைக் கண்ணுற்றால். எண்ணறு - நினைத்தல் அற்ற. யாமேயோ - நாங்கள் மட்டுமோ. விண்ணம் - தேவாலகில்; அம் : சாரியை. வீழாரோ - விரும்பார்களோ; "வீழ்வார்கட்டோன்றும்" (கலி. 145 : 16, ந.)

3298. மங்கை ஒருத்தி - திருமகள். தடமார்பு - அகன்ற மார்பு. புயத்திடை ஒருத்தி சேர்வாளாம்; ஒருத்தி - நிலமகள். கொங்கு - வாசனை; தேன் எனலுமாம். வண்டு : விளி. உலகுக்கொரு கோவோடு - கண்ணபிரானோடு. புணர்க்க - சேர்க்க.

3299. பொற்ற - பொலிவு பெற்ற. ஆயிரம் இதழ் விண்டு அலர்கின்ற பூவில் மேவும் திருமாதை மணந்தவன் : கண்ணபிரான். பார்மேல் தன்னைப் பற்றுபு மனத்து நினைத்தவர் அற்று; அற்று - இல்லாதபடி. வண்டு : விளி. அளிப்பான் - காப்பான்.

(பி - ம்.) 3 - 4. பார்மேலொற்றறு.

3300. தேறல் - தேன். கொண்கனை - கண்ணபிரானை. பூமகள் கொண்கனை நாமும் மறக்குதும் என்னின்; நாமும் என்ற உம்மையால், அவன் மறந்தானென்றவாறு. என்னின் - என்று கூறினால். பொன் ஆழி - பொன்னாலாகிய சக்கரத்தையுடைய. கதிர் - சூரியன். நதி - காளிந்தி. நதியைக் கண்டாலும் மணிகளைக் காணினும் மாறாது நெஞ்சு நினைக்குறும். 3299 - 3300 முடிய வண்டை நோக்கி ஓர் இடைமாது கூறியவை.

3301. என்றலு மஞ்சன வண்ண னிடத்தினி லிவ்வாறே
ஒன்றிய காதல் விளைத்த திறத்தினி லுய்ந்தீரால்
மன்றல் விளங்குழ லீரென வஞ்சிறை வண்டூது
மென்றளிர் சேர்தரு பைந்தொடை யுத்தவன் விண்டானல். (௩௨)

3302. அங்க ணிலம்புன றீவளி வானெனு மைப்பூதம்
எங்கு முறைந்தன னுங்கண் மனத்து மிருந்தானல்
வெங்கதை தாமரை நேமி நிலாவுமிழ் வெண்கேழொண்
சங்கொளிர் கைம்முகி லெங்குமை யென்று தணந்தானே. (௩௩)

3303. மற்றிறை சேய்மையின் வைகிய துய்மை மறந்தேயோ
பற்றிட வன்றுகொ னும்மன மன்பு பழுத்தென்னு
விற்றிகழ் பொற்குழை பற்றி யலைத்திடும் வேலுண்கட்
சிற்றிடை வெம்முலை மங்கையர் நெஞ்சு தெளித்தானல். (௩௪

3304. இவ்வழி நல்வெதி ரின்னமு தூற விசைத்தான்மற்
றுவ்வழி தோழரொ டாடின னுள்ள முருக்காநின்
றவ்வழி யெம்மொ டமர்ந்தன னென வந்தேனார்
மைவழி வார்குழன் மங்கையர் கூற வதிந்தானே. (௩௫)

---

3301. என்றலும் - என்று அம்மங்கை கூறியவுடன். அஞ்சன வண்ணன் - கண்ணபிரான். ஒன்றிய - பொருந்திய. உய்ந்தீர் - பிழைத்தீர். மன்றல் - வாசனை. இளமைத் தன்மையையுடைய குழலீர்; இடைச்சியருக்கு விளி. வண்டு ஊதும் தளிர் சேர்கின்ற. தொடை - மாலை. ஊதல் - உண்ணல். விண்டான் - மொழிந்தான்.

3302. வளி - காற்று. வான் - ஆகாயம். கதையும், தாமரையும், சக்கரமும், சங்கும் ஒளிர்கின்ற கையையுடைய முகில்: கண்ணபிரான். உமை எங்கு என்று தணந்தான்; உமை - உங்களை. என்று - எப்பொழுது. தணந்தான் - பிரிந்தான்.

3303. மற்று: அசை. இறை - கண்ணபிரான். சேய்மையின் வைகியது - தூரத்தில் தங்கியது. நும் மனம் அன்பு பழுத்துப் பற்றிட அன்று கொல் என்னு மங்கையர் நெஞ்சைத் தெளித்தான்; பற்றிட அன்று கொல் - கண்ணபிரானிடத்து அவாக் கொண்டிடவல்லலோ? என்னு - என்று கூறி. வில் - ஒளி. குழை - குண்டலம். மங்கையர் - ஆய்ச்சியரது. தெளித்தான் - தெளிவித்தான்.

3304. இவ்வழி - இவ்விடத்தே. வெதிர் - வேய்ங்குழலின். மற்று: அசை. உவ்வழி - நடுவிடத்தே. தோழரொடு - இடைச்சிறுரோடு. உருக்கா நின்று - உருக்கி. அவ்வழி - அவ்விடத்தே. அவ்வழி எம்மோடு உள்ளம் உருக்கா நின்று அமர்ந்தனன். என - என்று. அம்தேன் ஆர் - அழகிய தேன் பொருந்திய. மங்கையர் - ஆய்ச்சியர். வதிந்தான் - அங்குத் தங்கினன்.

3305. நாந்த நறைக்குழன் மாத யசோதை நடந்தேழ்பார்
பரந்த பெரும்புகழ் நந்த னுவப்பொடு பாராட்ட
விரிந்த மலர்த்தொடை வேள்சில திங்கள் விருப்பாலங்
கிருந்து திருந்தெயில் சூழ்மது ரைக்க ணெழுந்தானே. (௩௬)

3306. வண்டிசை பாடு மலர்த்தொடை யுத்தவன் வந்தெய்திப்
புண்டரி கம்பல பூத்த கரும்புயல் போல்வானைக்
கண்டன னெஞ்சு களித்தன னன்பொடு கார்முல்லை
அண்டர் தமக்கிறை நல்கின யாவு மளித்தானே. (௩௭)

3307. காருவ ரித்துகில் சுற்றி விளங்கிய காரோதிப்
பார்மகள் கொம்மை முலைத்தட மேவு பரந்தாமன்
ஏர்வளர் கூனி யெனப்பெயர் பெற்றவ ளில்லின்கண்
ஓர்தரு முத்தவ னோடு மெழுந்தன னுற்றானே. (௩௮)

3308. வெள்ளிவெண் முல்லைய மெல்லிணர் துன்று விரைக்கோதைக்
கள்ளவி ழோதிய ரிற்றொறும் வெண்ணெய் கவர்ந்துண்டோன்
அள்ளிலை வேல்விழி யாமு தம்புரை யஞ்சாயல்
ஒள்ளிழை பச்சிள வேய்புரை தோணல முண்டானால். (௩௯)

---

3305. நாரந்தத்தையுடைய குழல்; நறையூட்டப் பெற்ற குழல் 2929; "நரந்தநாறிருங் கூந்தல்" (கலி. 54 : 5.) நாரந்தம்: ஒருவகைப் பூ. நறை- புகை. மாதர் - காதலையுடைய. எழ்பார் பரந்த - எழு பூமியிலும் பரவிய. நந்தன் - நந்தகோபன். அசோதையும் நந்தனும் பாராட்ட. தொடை - மாலை. வேள் - உத்தவன். திங்கள் - மாதம். அங்கு இருந்து - கோகுலத்தில் இருந்து.

3306. புண்டரிகம் - தாமரை. கரும்புயல் போல்வானை - கண்ண பிரானை. கார் காலத்து முல்லையை அணிந்த அண்டர் தமக்கு இறை; நந்தகோபன்; அண்டர் - இடையர். நல்கின - கொடுத்த. கூறிய.

3307. கார் உவரித்துகில் சுற்றி - கரிய கடலை ஆடையாக உடுத்து பார் மகள் - நில மகளுடைய. கொம்மை - பெருமை. பரந்தாமன் - கண்ண பிரான். ஏர் - அழகு. இல்லின்கண் - வீட்டிடத்தே.

3308. வெள்ளி வெண் முல்லை: 3282. விரைக்கோதை - வாசனை யையுடைய மாலை. கள் - தேன். ஓதியர் - இடைச்சியர். ஓதி - கூந்தல். இல்தொறும் - வீடுதோறும். அள் - கூர்மை. ஒள் இழை - ஒளி பொருந் திய ஆபரணங்களை அணிந்த கூனியினுடைய. விழியையும் சாயலையுமுடைய ஒள்ளிழையது தோள் நலத்தை உண்டான்.

3309. மின்னி னுடங்கு நுணங்கிடை யுள்ளம் விருப்பூர
இன்னண மென்னை மணந்தனை நாளு மிருக்கென்ன
அன்னது நேர்ந்தன னின்னிள மூர லரும்பாத்தன்
பொன்னெடு மாட மடைந்தனன் மைப்புயல் போல்வானே.()

3310. விருந்துண வண்டு நெகிழ்ந்த நறுவுமிழ் வெண்டோட்டுக்
கரும்பனை மீதுயர் காவல னேடெழு கார்வண்ணன்
அருந்ததி நேர்வரு காந்தினி யீன்றரு ளக்ரூரன்
திருந்தொளி மேவிய செம்பொன் மனைத்தலை செலலுற்றான்.()

3311. உள்ள முவந்தெதிர் வந்து கணின்பனி யூர்கின்றோன்
வெள்ளிய வெண்டிரை யாடிய கங்கை விளங்கும்பொன்
கள்ளவிழ் தாமரை தீம்புனல் கொண்டு கழீஇயேத்த
வள்ளிதழ் விண்ட துழாய்மணி மார்பன் மகிழ்ந்தானல். (சஉ)

---

3309. மின்னின் - மின்னலைப் போல். நுடங்கு நுணங்கு இடை - அசைகின்ற நுண்ணிய இடையையுடைய கூனி. இன்னணம் - இவ்வாறு. நாளும் இருக்க என்ன - நாள்தோறும் இங்கேயே இருப்பாயாக என்று கூற. அன்னது - கூனியின் வேண்டுகோளுக்கு. அரும்பா - அரும்பி. மூா லரும்பா - புன்மூறுவல் செய்து. தன் மாடத்தை அடைந்தனன். மைப் புயல் போல்வான் - கண்ணபிரான்.

3310. வண்டு விருந்தாக உண்ணும்படி நறுவை நெகிழ்ந்து உமிழும் வெண்டோடு; நறு - தேன். தோடு - இதழ்களையுடைய. பனையைமீது உயர்த்திய காவலனோடு: பலராமனோடு. கார் வண்ணன் - கண்ணபிரான். அக்குரூரன் மனைத்தலைக்குச் செலலுற்றான்.

3311. பனி - நீர்த்துளி. கண்பனி யூர்கின்றோன்: அக்குரூரன். கங்கை விளங்கும் தாமரையைப் புனல் கொண்டு கழீஇ ஏத்த; தாமரை - கண்ணபிரானுடைய பாதம். கழீஇ - கழுவி. மார்பன் - கண்ணபிரான்.

# 20. அக்குரூரனை அத்தினபுரத்து விடுத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3312. தந்தை யிறப்பத் தளர்ந்த தண்டா ரைவர் தம்மை
மைந்தர்க் கிணையாக் கண்ணின் மன்னன் காப்பான் கொல்லோ
அந்தி னீசென் றறியென் றருட்காந் தினியின் றெடுத்த
பைந்தார் மார்பன் றன்னைப் பசும்புட் பாகன் பணித்தான். (க)

3313. ஆயும் பழநான் மறையு மறிய லாகாச் செங்கண்
மாயன் பணிப்ப மகிழ்ந்து மல்லற் கங்கை நாடன்
பாயுங் கலினப் புரவிப் பைம்பொற் றேர்மே லிவராக்
காயுங் கனல்கால் சிறுகட் களிற்று நகர்சென் றடைந்தான். ()

3314. நிழல்வாய் நேமி யுருட்டி நிலவுக் கதிர்வெண் டிங்கள்
எழில்வாய்க் கவிகை நீழ லெறிநீ ருலகங் காக்கும்

---

3312. தந்தை - பாண்டு ராசன். ஐவர் - பாண்டவரைவர். மைந்தர்க்கு இணையா - தன் புதல்வர்களாகிய துரியோதனன் முதலிய நூற்றுவர்க்கு ஒப்பாக. கண்ணில் மன்னன் - திருதராஷ்டிரன். கண்ணில் மன்னன், ஐவர் தம்மை மைந்தர்க்கு இணையாகக் காப்பான் சொல்லோ? நீ சென்று அறி என்று மார்பன் றன்னைப் புட்பாகன் பணித்தான். அந்தில் : அசை. மார்பன் - அக்குரூரன். புட்பாகன் - கண்ணபிரான்.

3313. அறியலாகாத மாயன்; கண்ணபிரான். பணிப்ப - கட்டளையிட. கங்கை நாடன் - அக்குரூரன். கலினம் - கடிவாளத்தை உடைய. இவரா - இவர்ந்து. காயும் - கோபிக்கின்ற. களிற்று நகர் - அத்தினபுரம்.

3314. நிழல் - ஒளி. நேமி உருட்டி - ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தி. நேமி உருட்டி, திங்கட் கவிகையின் நிழலில் உலகத்தைக் காக்கின்ற அரசனை; வடசொற் பெயரால் விளங்கும் பருதி வதனத்தரசனை: திருதராஷ்டிரனை; "வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற, முகத்தவன்" (கலி. 25 : 1 - 2) என்பதற்கு. 'வடமொழிப் பெயர் பெற்ற வயக்குறு மண்டிலம் போலு முகத்தவனென்றது ஆதித்தரிலே பகனென்னும்

வழுவில் சிறப்பு வாய்ந்த வடசொற் பெயரால் விளங்கும்
அழல்வெய் பருதி வதனத் தாசற் கண்டா னன்றே. (ங)

3315. அரவக் கொடியோன் முதலா மரசர் குமரர் தம்மோ
டுரவுத் திரைநீர்க் கங்கை யுயிர்த்தோன் றன்பா லெய்தா
விரைகொப் புளிக்கும் பசுந்தார் விதுரற் காணு வுலகம்
பரவத் தகுசீ ரைவர்ப் பயந்தாண் மனைசென் றுற்றான். (ச)

3316. ஆலக் கருஞ்சே றுமிழு மரவின் னழல்வெஞ் சீற்றக்
காலக் கதிர்வேற் றடக்கைக் கஞ்சன் வெம்போர் கடந்த
நீலக் கொண்ட லெமையு நினைக்குங் கொல்லோ வென்னாக்
கோலக் குவளைக் கருங்கட் குந்தி நெஞ்சங் கலுழ்ந்தாள். (ரு)

---

வடமொழிப் பெயரைப் பெற்று விளங்குதலுறும் ஆதித்தனைப் போலும் முகத்தை யுடையவனென்பது, அவன்தான் குருடாயினமையிற் பிறரைக் காணாதவாறு போல இவனும் பிறரைக் காணாத முகத்தை யுடையவனென்றவாறு; என்றது திருதராஷ்டிரனை. இனி விளக்கமுற்ற கண்ணாடியின் பெயரை வடசொல்லாகிய பெயராற் பெற்ற முகத்தவ னென்றலுமாம்; அது தர்ப்பணானனன் என்னும் பெயரை. அது பிறரைத்தான் காணாதவாறு போல இவனும் பிறரைக் காணானென்றதாம். இனி விளக்கமுற்ற நாடென நின்ற அச் சொல்லினைத் திருதராஷ்டிரனென்னும் வடமொழிப் பெயராலே தமிழ்ச் சொலீறாகத் திரித்த ததராயனென்னும் பெயர்பெற்ற பாண்டுவுக்கு மூத்தவனென்றும் உரைப்ப' என்று நச்சினார்க்கினியர் உரை யெழுதியிருத்தலும், அக் கருத்துப்பற்றி, "முகுரவானனனும்", "முகமுகுரம்புரை முதலோடு", "ஆடித்திருமுக மன்னவன்", "முகுரானனன் மைந்தனும்" (வி - பா. சம்பவ. 115; வாரணாவத. 102; அருச்சுனன்றவ. 165; பதினெட்டாம் போர். 194.) என்று வில்லிபுத்தூரார் கூறியிருத்தலும் ஈண்டு அறியத்தக்கன.

3315. அரவக் கொடியோன் - பாம்புக் கொடியை யுடையவனான துரியோதனன். உரவு - பரப்பு; வன்மை எனலுமாம். கங்கை உயிர்த்தோன்றல் - பீஷ்மன். எய்தா - எய்தி. விரை - வாசனை. விதுரனைக் கண்டு. உலகம் பரவத்தகு - உலகத்தவரால் புகழத்தக்க. ஐவர்ப் பயந்தாள் மனை - பாண்டவரைவரைப் பெற்ற குந்தியின் வீட்டை.

3316. ஆலக் கருஞ்சேறு - விஷமாகிய கரிய சேற்றை. அரவின் - பாம்பைப் போல. அழல்கின்ற சீற்றத்தையுடைய கஞ்சன்; வேலையுடைய கஞ்சன். நீலக் கொண்டல் - கண்ணபிரான். என்னா - என்று கூறி. கோலம் - அழகு. கலுழ்ந்தாள் - வருந்தினள்.

3317. நஞ்ச மூட்டன் முதலா நச்சு நாக முயர்த்த
வஞ்ச மனத்தான் செய்தி வகுத்து மொழிவா டன்னை
நெஞ்சந் தளரே னும்மை நெடியோன் காக்கு மென்னச்
செஞ்சொற் பலவாங் கியம்பித் தெருட்டல் செய்தா னன்றே. (௬)

3318. வெங்க ணரவ முயர்த்த வெள்வேற் குமரன் செயலும்
அங்கண் ஞால மளிக்கு மரசன் செயலு நாடாத்
திங்கள் சிலவாண் டுறைந்தான் றிங்க ணிலவிற் றிகழும்
பொங்கற் றிரைநீர்க் கங்கை புரக்கு நாடு கிழவோன். (௭)

3319. பெற்ற புதல்வர் போலப் பிள்ளைச் சுரும்பர் பாடும்
பொற்ற ரைவர் தம்மைப் போற்றிக் கொள்ளல் வேண்டும்
ஒற்றைத் திகிரி யுருட்டி யுலகம் புரப்பா யென்னு
வெற்றிக் கதிர்வேற் றடக்கை வேந்தற் குரைத்தல் செய்தான். (௮)

3320. பொது நின் றுலகம் புரத்தி பொங்கு புகழே யல்லால்
எதுநின் றதுமற் றென்ன வினிய பலவாங் கியம்ப
மதுநின் ஞெழுதுக் தாரான் மைந்தர் தம்மேற் காதல்
முதிர்கின் றதனு லுளத்தின் மொழிசார் கிலதென் றுரைத்தான். (௯)

---

3317. நஞ்சம் ஊட்டல் - விஷத்தை உண்பித்தல்; நஞ்சு - விடம். வஞ்சமனத்தான் - துரியோதனனுடைய. மனத்தானுடைய நஞ்சம் ஊட்டல் முதலான செய்தியை. மொழிவாள் தன்னை - குந்தியை. தளரேல் - தளராதே. நெடியோன் - கண்ணபிரான். காக்கும் - காப்பான். தெருட்டல் - தெளிவித்தல்.

3318. குமரன் - துரியோதனன். அரசன் - திருதராஷ்டிரன். நாடா - ஆராய்ந்து. ஆண்டு சில திங்கள் உறைந்தான் - அத்தினபுரத்தே சில மாதங்கள் தங்கினன். பொங்கல் - மிகு; எழுதல். கங்கை புரக்கு நாடு கிழவோன் : அக்குரூரன் ; 3126.

3319. பிள்ளைச் சுரும்பர் - இளைய வண்டுகள். உலகம் புரப்பாய், பெற்ற புதல்வரைப் போல ஐவர் தம்மைப் போற்றிக் கொள்ளல் வேண்டும் என்னு ; உலகம் புரப்பாய் : திருதராஷ்டிரனுக்கு விளி. என்னு - என்று. வேந்தற்கு - திருதராஷ்டிரனுக்கு.

3320. பொது நின்று உலகம் புரத்தி - பகை நட்புப் பாராமல் பொதுவாக இருந்து நடு நிலைமையுடன் உலகத்தைக் காப்பாயாக. புகழல்லால் நின்றது எது என்னு. இயம்ப - அக்குரூரன் சொல்ல. தாரான் - திருதராஷ்டிரன். மைந்தர் தம்மேல் காதல் முதிர்கின்றதனுல் - துரியோதனன் முதலிய புதல்வர்மீது அன்பு பழுக்கின்றமையால். உளத்தில் மொழி சார்கிலது - என் மனத்தில் உன் வார்த்தை பொருந்தவில்லை.

3321. விடப்பாந் தளின்மேற் கிடந்த விரிநீர் நிலத்தின் விழுமம்
துடைப்பான் பிறந்த கண்ணன் றுளவோன் விதிக்கும் விதியார்
கடப்பா ரென்னுச் செங்கட் கண்ணற் பாவிக் கடுகி
அடுத்தான் மதுரைப் பதிசென் றண்ணற் கனைத்துங் கிளந்தான். (கo)



# 21. சராசந்தனெடு பொருத அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

3322. ஏழ்கடன் ஞால மளித்திடு கஞ்ச னிறப்பெய்த
மாழ்கிய வன்பனி மால்வரை மார்வ மணப்புற்ற
தாழ்குழ லாரிரு பேதையர் தந்தை சராசந்தன்
சூழ்கழல் சென்று விழுந்தன ருற்றது சொற்றூரே. (க)

3323. அங்கலுழ் கோதையர் கண்கலுழ் கின்றன ராங்கோதும்
பொங்கழல் வெவ்வுரை கேட்டலு நெஞ்சு புழுங்குற்றேன்

---

3321. விழுமம் - துன்பத்தை. துடைப்பான் - கெடுக்கும் பொருட்டு. கண்ணனுகிய துளவோன் விதிக்கின்ற விதியை யார் கடப்பார் என்னு ; துளவோன் - திருமால். விதி - கட்டளை. என்னு - என்றுகூறி. கண்ணனைப் பாவி. கடுகி - விரைந்து. மதுரைப் பதியை அடுத்து அண்ணற்கு அனைத்தும் கிளந்தான் ; அடுத்து - சேர்ந்து. அண்ணற்கு - கண்ணபிரானுக்கு. கிளந்தான் - கூறினன்.

3322. அளித்திடு - காக்கின்ற. கஞ்சன் இறப்பெய்தலால் மாழ்கிய குழ்லாராகிய இரு பேதையர் ; மாழ்கிய - மயங்கிய. மார்வம் மணப்புற்ற - கஞ்சனுடைய மார்பத்தைக் கலந்த. இரு பேதையர் : கஞ்சனுடைய மனைவியர் இருவர் ; இவர் சராசந்தனுடைய மகளிர். சராசந்தனுடைய கழலில் சென்று விழுந்தனர்.

3323. அம் கலுழ் கோதையர் - அழகு ஒழுகுகின்ற மகளிர். வெவ்வுரை - கஞ்சனைக் கண்ணன் கொன்றான் என்ற கொடிய வார்த்தையை.

செங்குரு திப்புன லோடு சுழன்றிமை தீகின்ற
வெங்க ணழற்பொறி சிந்த வுருத்து வெகுண்டானே. (உ)

3324. பல்லுளை வாம்பரி பண்ணுக பான்மருள் வெண்கோட்டுக்
கொல்கரி பண்ணுக பண்ணுக வாடு கொடித்திண்டேர்
வெல்படை யாதவர் தம்முயிர் கூற்று விருந்தூட்டச்
செல்க கடற்படை யென்றனன் வெவ்விய தீயொப்பான். ()

3325. எதிர்ந்ததொ ரூழி யிடிக்கு மிடிப்பொலி யின்றென்னு
வெதும்புறு தீவிட நாகமொ ரெட்டும் வெருக்கொள்ளத்
ததும்பின பேரி தழங்கின வெள்வளை கண்காரின்
அதிர்ந்தன வார்முர சண்ட கடாக மதிர்ப்பெய்த. (ச)

3326. கொண்டன் முழங்கு கடாக்களி யானை குழுக்கொள்ளத்
தெண்டிரை போல வலங்குளை வாம்பரி சென்றீண்ட
மண்டமர் வேட்கை மலிந்திடு மாகதன் மான்றேரின்
எண்டிசை மன்னவர் கண்டு வணங்க வெழுந்தானல். (ரு)

---

கண்கலுழ்கின்றனராய் ஆங்கு ஓதுகின்ற வெவ்வுரையை. புழுங்குற்றோன் - சராசந்தன். இமை தீகின்ற அழற்பொறியைச் சிந்தும்படி. உருத்து - முழங்கி.

3324. உளை - தலையாட்டம். பரி பண்ணுக - குதிரைகளைப் போருக்கு ஆயத்தம் செய்க. பண்ணுதல் - சமைத்தல். கொல்லுகின்ற கரியைப் பண்ணுக; கரி - யானை. ஆடுகின்ற கொடியையுடைய தேரைப் பண்ணுக. யாதவர் உயிரைக் கூற்றுக்கு விருந்தாக ஊட்டக் கடற்படை செல்க; கடற் படை; 3359. யாதவர் - ஆயர். கூற்றுக்கு - எமனுக்கு. தீயொப்பான் - சராசந்தன்.

3325. ஊழியில் இடிக்கும் இடிப்பொலி இன்று என்னு நாக மெட்டும் வெருக் கொள்ள; ஊழி - யுகாந்த காலம். இன்று - இன்றைக்கு. என்னு - என்று கருதி. வெருக் கொள்ள - அஞ்சும்படி. பேரி ததும்பின. வளை முழங்கின; வளை - சங்கு. முரசு காரின் அதிர்ந்தன. காரின் - மேகத் தைப் போல். அண்ட கடாகம் - அண்டத்தின் சுவர்.

3326. கொண்டலைப் போல் முழங்குகின்ற யானை. குழுக் கொள்ள - கூட்டம் கொள்ள. திரை - அலை. பரி - குதிரை. ஈண்ட - நெருங்க. மண்டமர் - மிக்க போரில். மாகதன் - மகத தேசாதிபதியான சராசந்தன். மன்னவர் வணங்க. மாகதன் தேரில் எழுந்தான்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியச் சந்த விருத்தம்.

3327. வழிந்த தேனொழுகு பாரி சாதமுகை
வாய்நெ கிழ்ந்தன வயின்றொறும்
பொழிந்த செந்துகடு டைத்த சென்றுபல
பொன்னெ டுங்கொடி யெனக்கொலோ
முழங்கு தெண்டிரை முடங்கு வேலையென
மொய்த்தெ ழும்படை யெழுச்சியால்
எழுந்த தூளிபட லம்ப ரந்தன
விலங்கு பொன்னுலக மெங்குமே. (சு)

3328. நேரெ ழுந்துபொரு மன்னர் செங்குருதி
நீர்கு டித்துநிண முண்டுவெம்
போர்வி ழைந்தழலும் வென்றி வாட்படை
பொழிந்த தீயுண வறந்துமே
ஏர்த ழைந்தமணி யோடை மால்களி
றிரும்ப னைக்கையின் முழங்குமேழ்
கார்பொ ழிந்திட வெழுந்த தீம்புனல்
கலத்த லாற்கடல் சிறந்தவே. (எ)

3329. கற்றை வாணிலவு கான்ற வெண்மதி
கடுக்கும் வெண்குடை செறிந்துமேல்
ஒற்றை யாழியினன் வெய்ய செங்கதி
ரொளித்து நீடிருள் விளைத்தவே

---

3327. முகை - மொட்டு. நெகிழ்ந்தன - அலர்ந்தன. வயின் தொறும் - இடம் தோறும். செந்துகள் - சிவந்த மகரந்தப் பொடிகள்.

3328. மன்னரது குருதியாகிய நீரைக் குடித்து. நிணம் - கொழுப்பு. விழைந்து - விரும்பி. அழலும் - கோபிக்கின்ற. தீ உண வறந்தும் - தீ உண்ணுதலால் நீர் வற்றியும். ஏர் - அழகு. பனைக்கையின் - பனை மரத்தைப் போன்ற துதிக்கையால். ஏழ்கார் - ஏழு மேகங்கள்; மதநீருக்கு உவமை. ஏழ் - எழுச்சி எனலுமாம். தீ உண்ணுதலால் வறந்தும் கார் பொழிந்த புனல் கலத்தலால் கடல் சிறந்தன.

3329. கற்றை - தொகுதி. மதி கடுக்கும் - சந்திரனை ஒத்த. வெண் குடைகள், ஒற்றை ஆழியினுடைய கதிரை ஒளித்து இருள் விளைத்தன.

மற்ற ழைந்ததினி தோண்மறங் குலவு
மான வேன்மகத மன்னர்தம்
கொற்ற நீண்மகுட கோடி செஞ்சுடர்
கொழித்து வல்லிருள் கிழித்தவே. (அ)

3330. குழவி ஞாயிறு கடுப்ப வாரிருள்
குடித்து வாள்வெயில் விரித்திடும்
எழின்ம ணிச்சுடிகை யரவி னுக்கிறை
யெருத்து ளுக்கவெழு தானைபோய்ப்
பொழிம தக்கரி மருப்பொ சித்தசிறு
பூந்துழாய்ப் படலை நம்பிபோல்
மழைத வழ்ந்துவிளை யாடு மாடமலி
மதுரை மூதெயில் வளைத்தவே. (கூ

3331. அக்கு ரோணியிரு பத்து மூன்றென
வறைந்த தானையெதிர் முற்றலும்
திக்க யங்களென வென்றி யாதவர்
சினந்த லைக்கொள வெழுந்துதீக்
கக்கு கண்ணினர் விசித்த கச்சினர்
கதிர்த்தி லங்குகனை கழலினர்
மைக்க ரும்புயல் கிழித்த மின்னென
வயங்கு வாள்கொடெதிர் மண்டினார். (கO)

---

யாழியினன் - சூரியன். மல் - மற்றொழில். மறம் - வீரம். மகதமன்னருடைய மகுடகோடியின் சுடர் இருளைக் கிழித்தன.

3330. குழவி ஞாயிறு கடுப்ப - இளஞ்சூரியனை ஒப்ப. சுடிகை - உச்சிச் சூட்டையுடைய. அரவினுக்கு இறை எருத்து உளுக்க - ஆதிசேடன் பிடரியை அசைக்கும்படி. எழுகின்ற தானை போய். கரி - குவலயாபீடம். நம்பி - கண்ணபிரான். மழை - மேகம். மதுரையின் எயிலை வளைத்தன; எயில் - மதில்.

3331. இருபத்து மூன்று அக்குரோணியென அறைந்த தானை. முற்றலும் - சூழ்ந்தவுடன். திக்கயங்கள் - திசைகளிலுள்ள யானைகள். சினம் தலைக்கொள - கோபம் மேற்கொள்ள. தீயைக் கக்குகின்ற கண்ணினர். விசித்த - கட்டிய. கதிர்த்து - ஒளியுடையதாய். புயலைக் கிழித்த மின் என, மண்டினர் - நெருங்கினர்.

3332. நீனி றப்பரவை வெள்ளி வெண்டிரை
நிரைத்து வெண்டிரையொ டெதிர்வபோல்
பானி றக்கவரி நெற்றி மாவினெடு
பல்லு ளோப்பரி யெதிர்ந்தவால்
வானு றத்திகழும் வரையி னோடருவி
மாலை மால்வரை மலைந்தபோல்
கூனி றப்பிறை மருப்பு வேழமொடு
கொலைம தக்கரி மலைந்தவே. (கக)

3333. அறைக ருங்கட லுடுத்த மாநில
மளிக்கு மன்னர்முடி யுழுதலால்
பறைக ருங்கழ லலம்ப யாதவர்
படைப்ப ரப்பினி னடந்திடா
உறைக ழித்தவடி வாள முன்றுதழ
லுமிழ்த லாடம ருழந்தவேற்
செறுந ரூனனி சுவைத்து மற்றது
தெவிட்டி நின்றுமிழ்தன் மானுமே. (கஉ)

3334. கொற்ப ழுத்தகொலை வேலி னோடுசில
கொற்ற மாகத ரெடுத்தபோர்
விற்ப ழுத்துமிழும் வெய்ய வாளியொரு
கோடி மேலெதிரும் யாதவன்

---

3332. பரவை - கடல். திரை - அலை. நிரைத்து - வரிசையாகி. கவரியை நெற்றியிலே உடைய மா: குதிரை. குதிரைக்கு அலை உவமை. எதிர்ந்த - எதிர்த்துப் பொருதன. அருவியாகிய மாலையையுடைய வரை; 3134, 3355. கூன் - வளைவு. வரையினோடு வரை மலைந்தபோல் வேழமோடு கரி மலைந்தன.

3333. அறைதல் - ஒலித்தல். பறை கருங்கழல் - தேய்ந்த, பெருமையுள்ள கழல். அலம்ப - ஒலிக்கும்படி. யாதவர் - இடையர். நடந்திடா - நடந்து. உறையினின்றும் கழித்த வாள். தழல் - தீயை. ஆடமர் உழந்த-வெற்றிப் போரைச் செய்த. செறுநர் - பகைவீருடைய. ஊன் - மாமிசத்தை. வாள், தழலை உமிழ்தல், செறுநரது ஊனைச் சுவைத்துத் தெவிட்டி நின்று அதனை உமிழ்தலை மானும்; மானும் - ஒக்கும்.

3334. கொல் பழுத்த - கொலைத் தொழில் முற்றிய; கொல்லன் தொழிலுமாம். கொற்றம் - வீரம். போர் - யுத்தத்தில். வாளி - அம்பு. யாதவன் - யாதவகுலத்து வீரன். வேலுடன், ஒரு கோடி வாளி, யாதவ

மற்ப ழுத்ததிணி தோளின் மொய்ப்பன
வடித்த நாண்மல ரலங்கல்சூழ்
அற்ப ழுத்தகுழன் மாதர் செங்கணம
ராடு கின்றன கடுக்குமே. (கங)

3335. அழிந்து மட்டொழுகு தாரி ஞொருவ
னம்ப கட்டுவரை மார்பின்மேல்
குழந்தை வெண்பிறை மருட்டு கோடடி
குளிப்ப வெஞ்சின மிகுந்துபாய்
செழுங்க டாக்கரியின் மத்த கத்தெழுது
சிந்துரஞ் செறித னெஞ்சகம்
விழைந்த மாதர்முலை யெழுது குங்கும
மெழுக்கெ றிந்தென விளங்குமே. (கச)

3336. வளைந்த தெண்கடல் கிளைத்த செம்பவள
வல்லி போலொளி பிறங்குமாண்
குளம்பு டைப்புரவி பார்மி திக்கில
குழீஇய மன்னர்நெடு முடியுகல்
இளங்க ளிச்சிறுகண் யானை நெற்றியு
மிவர்ந்தி யங்கினும் வலங்கொள்போர்
விளைந்த செங்குருதி பாய்க ளத்தினின்
மிதித்தெ ழுந்தன கடுக்குமே. (கரு)

---

னுடைய தோளில் மொய்ப்பன; மொய்ப்பன - மொய்ப்பவை. அல் பழுத்த குழல் - கருமை முதிர்ந்த கூந்தலையுடைய. மாதரது கண் அமராடுகின்றன வற்றைக்கடுக்கும்; கடுக்கும் - ஒக்கும். வேல்களுக்கும் அம்புகளுக்கும், மாதரது கண்கள் உவமை.

3335. அழிந்து - மிக்கு. தாரினன் ஒருவன் - ஒரு வீரன். பகடு - பெருமை. குழந்தை வெண்பிறை - இளம்பிறை; யானைத் தந்தத்திற்கு உவமை. கோடு அடி - தந்தத்தின் முதல். குளிப்ப - மூழ்கும்படி. பாய்கின்ற கரியின். தாரினனொருவனுடைய மார்பில் கரியின் மத்தகத்து எழுதிய சிந்தூரம் செறிதல், மாதரது முலையிலெழுதிய குங்கும மெழுக்கெறிந்தென விளங்கும். யானைத் தந்தத்திற்கு மாதரது முலையும், சிந்தூரத்திற்குக் குங்குமச் சாந்தும் உவமை.

3336. தெண் கடல் - தெளிந்த கடலில். கிளைத்த - தோன்றிய. மாண் - மாட்சிமைப்பட்ட. பாரில் மிதிக்கிலவாய் மன்னர் முடியிலும் யானையின் நெற்றியிலும் இவர்ந்து இயங்கினும் குருதி பாய் களத்தினில் மிதித்தெழுந்தனவற்றைக் கடுக்கும்; கடுக்கும் - ஒக்கும்.

3337. ஏர்தி ரண்டொழுகு மாதர் வெம்முலை
யிளங்க ளிற்றினெடு போர்புரிந்
தோரி ரண்டுவரை யென்ன மேம்படு
முலங்கொ டோண்மகத மன்னவன்
போர்மு ரண்டொலைய வெஞ்சமம் புரிதல்
பூவை வண்ணனினை யப்பொலந்
தேரி ரண்டொரு விசும்பி னின்றெளிர்
திசாமுகங் கிழிய வந்தவால். (கசு)

3338. நம்பி பான்மதி நிறத்தி னனெடு
நனந்த லைப்புவி பரந்திடும்
ஐம்ப டைக்கிழவன் வந்து முன்னுறு
மலங்கு ளைப்புரவி பூண்டதேர்
வெம்பு செம்பருதி நாண வேறினன்
விடுத்த னன்கடிது வேரியந்
தும்பை சூடினன் மிடைந்து கன்னியெயில்
சூழ்பெ ரும்படை துளங்கவே. (கஎ)

3339. வெண்ணி லாக்கதி ருமிழ்ந்த தண்மதியை
வெங்கு ரற்புயல் வளைந்தபோல்
அண்ணல் யானைபல கொண்டு முற்றமுகை
யவிழ வண்டின மாற்றுதார்க்

3337. ஏர் - அழகு. முலையாகிய இளங்களிற்றினேடு. வரை - மலை. மகதமன்னவன் - சராசந்தனுடைய. போர் முரண் தொலைய - போரின் மாறுபாடு கெடும்படி. சமம்புரிதலைப் பூவைவண்ணன் நினைய; பூவை வண்ணன் - கண்ணபிரான். இரண்டுதேர்கள், திசாமுகம் கிழிய வந்தன.

3338. நம்பியாகிய பால்மதி நிறத்தினனெடு - பலராமனேடு. ஐம்படைக் கிழவன் - கண்ணபிரான். ஐம்படைக் கிழவன் பால்மதி நிறத்தினனெடு தேரில் பருதி நாண ஏறினன் : வெம்பு செம்பருதி - விரும்பத்தக்க சிவந்த சூரியன். "வெம்புஞ் சுடரிற் சுடரும்" (சீவக. 2.) பகைவரோடு போருக்கெழுவோர் தும்பை சூடுவர். மிடைந்து - நெருங்கி. கன்னி எயில் - அழிக்கமுடியாத மதில்.

3339. வெங்குரற் புயல் - வெவ்விய ஒலியையுடைய மேகம். அண்ணல் - கண்ணபிரான். முற்ற - சூழ. கண்ணபிரானுக்கு மதியும் அவனைச் சூழ்ந்த யானைப்படைகளுக்கு மேகமும் உவமை. கண்ணன் இளையனுத லால் நிற்க ; நிற்க - போருக்கு வராமல் நிற்கட்டும். 'பால்வண்ண, என்னெடு சமர்த்தொழில் விளைத்தி' என்று வளைமேனி வள்ளலொடு மகதன் சமர்

கண்ணன் மற்றிளைய னிற்க வென்னொடு
கடுஞ்ச மர்த்தொழில் விளைத்திபால்
வண்ண வென் றுவளை மேனி வள்ளலொடு
மகதன் வெஞ்சமர் தொடங்கினன். (கஅ)

3340. மறுவ றத்திகழு மதிய மாமென
வயங்கு வெண்கவிகை மகதர்கோன்
விறல்வி ளங்குபடை வெள்ள மொல்லையினில்
வீட்டி வெண்டிரை யுடுத்தபார்ப்
பொறைய கற்றுது மெனத்த டக்கையெழு
பொருசி லைக்குடுமி கோட்டினன்
கறைமி டற்றரவ வரச னுச்சிமிசை
கால்பெ யர்த்ததிற லாட்டினன். (கக)

3341. பட்ட முற்றகரி நெற்றி மேலுமெழு
பச்சை வாம்பரி முகத்தினும்
வட்டு டைக்கொடிய வீரர் மார்பினும்
வடித்த வாளிமழை தூவினன்
கட்டெ ழிற்பிறை கடுப்ப வெய்யதொரு
கார்மு கக்கடை குழைத்திடா
விட்டி லங்குகுழை மின்னெ னத்திருவில்
வீச நின்றகரு மேகமே. (உ0)

---

தொடங்கினன்; பால் வண்ண என்றது பலராமனுக்கு விளி. சமர் - போர். வளைமேனி வள்ளல் - பலராமன். மகதன் - சராசந்தன்.

3340. மறு அற - களங்கம் இன்றி. மதியம் கவிகைக்கு உவமை. விறல் - வீரம். படையின் வெள்ளத்தை. ஒல்லை - விரைவு. வீட்டி - அழித்து. பார்ப்பொறை அகற்றுதும் - பூமியின் பாரத்தை நீக்குவோம். சிலைக்குடுமி கோட்டினன் - வில்லின் நுனியை வளைத்தான். கறை மிடற்று அரவ அரசன் - விடத்தைக் கழுத்திலுடைய பாம்புகளின் அரசனை காளியனுடைய. ஆட்டினன் - நடனத்தையுடைய கண்ணபிரான். ஆட்டினன் கோட்டினன் என்க.

3341. பட்டம் - நெற்றிப்பட்டம். கரி - யானை. பரி - குதிரை. வட்டுடை - முழங்கா லளவாக வீரர் உடுக்கும் உடை விசேடம். வடித்த - கூர்மையான. வாளி - அம்பு. கடுப்ப - ஒப்ப. கார்முகக் கடை குழைத்திடா - வில்லின் நுனியை வளைத்து. திருவில் - இந்திரவில். கருமேகம் - கண்ணபிரான்.

3342. குண்ட லத்திளெடு கொற்ற நீண்மகுட
கோடி சிந்துகன மணிகொழித்
தெண்டி சாமுக கடுங்க நின்றெதி
ரிரட்டும் வெள்வளை சுழித்திடா
வண்டி ரைத்துமிழு மாலை வேன்மகதர்
மான வெண்கவரி நுரைகுலாய்
வெண்டி ரைக்கடல் சிவப்ப வோடின
விரிந்து பாய்குருதி வெள்ளமே. (௨௧)

3343. சூடு பொன்முடி துணிந்து வாணிலவு
தூற்று வெண்குடை கவிழ்ந்துபோர்
ஆடல் வன்மகத ரனைவருந் தொலைய
வண்ண னின்றநிலை யெண்ணினுல்
பாடல் சால்பருதி வீழ்ந்து வட்டமதி
பட்டு வானவ ரொடுங்குநாள்
சேட னென்றுல கிசைத்தி டத்தனி
சிறந்து நிற்குநிலை தோற்றுமே. (௨௨)

3344. போந்தை மீமிசை யுயர்த்து வெள்ளிவரை
போல நின்றதிற லண்ணல்கண்
சேந்து பாகனது சென்னி மண்மிசை
தெறித்திடப் பசிய புள்ளியற்

---

3342. மகுடகோடி சிந்திய மணி. இரட்டும் - முழங்குகின்ற. வளை - சங்கம். சுழித்திடா - சுழித்து. இரைத்து - ஒலித்து. உமிழும் - தேனை உமிழ்கின்ற. மாலை - பூமாலை. மகதர் - மகத மன்னன் வீரர்கள். கவரியாகிய நுரைகுலாய்; குலாய் - குலாவி. கவரிக்கு நுரை உவமை. கடல் சிவக்கும்படி குருதிவெள்ளம் ஓடின. போர்க்களத்தைக் கடலாக உருவகம் செய்தார்.

3343. பொன்னுலாகிய முடிகள். துணிந்து - அறுபட்டு. நிலவைத் தூற்றுகின்ற குடை. போர் ஆடலையுடைய மகதர். தொலைய - அழிந்தாராக. அண்ணல் - கண்ணபிரான். பருதி வீழ்ந்து மதிபட்டு வானவர் ஒடுங்கும்நாள் என்றது ஊழியின் இறுதியை. சேடன் - சேஷன்- மிஞ்சியவன்.

3344. போந்தை - பனைமரத்தை. வெள்ளிவரை பலராமனுக்கு உவமை. அண்ணல் - பலராமன். சேந்து - சிவந்து. பாகன்: சராசந்தனுடைய தேர்ப்பாகன். புள்ளியல் கூந்தல்மா - பறவையைப்போல் நிலம்

கூந்தன் மாபுரள விண்கி ழித்துநிகர்
குன்றின் வீழசனி யேறுபோல்
ஏந்து தோண்மகத னூர்ந்த தேர்மிசை
யிருப்பு லக்கைகொடு மோதினன். (உக)

3345. நெட்டெ யிற்றபல பேய்கு னித்திட
நெடுஞ்சி லைக்கடை குழைத்துமேல்
விட்ட விட்டகணை யாவும் விண்ணுற
விலக்கி நின்றவளை மேனியான்
வட்ட வான்முக டளந்த பொங்கர்மலி
மகத மன்னனை வளைத்திடாக்
கட்டி னன்வருண பாசம் வீசிநனி
கண்ட வானவர் களிப்பவே. (உச)

3346. விளைவ துண்டிவனை விடுதி யாலென
விரைத்து ழாய்முகில் விடுத்திடா
அளிப ரந்துசுழல் பாரி சாதமல
ரங்கண் வானவ ரிறைப்பவால்
உளைவ யப்புரவி பூண்ட தேர்கடிதி
னூர்ந்து மீண்டமரி லெய்துநல்
வளம னைத்தினெயு மாறிலா மதுரை
மன்னவன் பெறவ ழங்கினன். (உரு)

---

நீண்டாமல் இயங்குகின்ற, பிடரி மயிரையுடைய குதிரைகள். அசனி யேறு - பெரிய இடி. ஏந்து - உயர்ந்த.

3345. நெட்டெயிற்ற - நீண்ட பற்களையுடைய. குனித்திட - நடித்திட. சிலையின் கடையைக் குழைத்து. கடை - நுனி. வளைமேனியான் - சங்கைப்போன்ற வெண்ணிற மேனியையுடைய பலராமன். வான்முகடு - வானின் உச்சியை. பொங்கர் மலி - சோலை நிறைந்த; மகதநாட்டுக்கு அடை. வளைத்திடா - வளைத்து. வானவர் களிக்கும்படி வருணபாசம் வீசி மகதமன்னனைக் கட்டினன்.

3346. துழாய்முகில் விளைவதுண்டு இவனை விடுதியால் என; முகில்- கண்ணபிரான். விளைவது - மேல்நடக்கும் காரியம். இவனை - சராசந்தனை. என - என்று கூற. விடுத்திடா - விடுத்து. அளி - வண்டு. இறைப்ப - இறைத்திட. வால் உளை - வெண்மையான பிடரி மயிரையுடைய. கடிதின் - விரைவாக. அமரில் - போரில். எய்தும் - பெற்ற. மாறிலா - மாறுபாடில்லாத. மதுரை மன்னவன் - உக்கிரஸேனன்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3347. வாளினை நோக்கு ஞாஞ்சில் வலத்தினன் சிக்க யாத்த
தோளினை நோக்கு மிற்ற சுற்றமை வல்வி னேக்கும்
கேளினை நோக்கல் செய்யான் சினைவரால் கெளிறு பாயப்
பாளைவாய் விரியும் பூகப் படப்பைசூழ் மகத வேந்தே. (உசு)

3348. பரந்தரன் பழியை நோக்கும் பாந்ததன் பழியே போலச்
சுரும்பொடு வண்டு பாடச் சொரிமதஞ் செருக்கித் துஞ்சாக்
கருங்களிற் றீட்ட மெல்லாங் களத்திடைக் கவிழ்ந்து துஞ்சி
இரும்பெருங் குருதிச் சேற்றி னிடையிடைக் குவித னேக்கும். (உஎ)

3349. அற்றதன் புகழை நோக்கு மற்றதன் புகழே போலக்
கற்றைவெண் ணிலவு கான்ற கவிகையுங் கவரிக் காடும்
ஒற்றைவெள் வளையுஞ் சிந்தி யொழுகொளி யோடை நெற்றிக்
கொற்றமால் களிறு மாய்க்குங் குருதியா றெழுக னேக்கும். (உஅ)

3350. நிழலும்வெண் டிங்க ளன்ன நித்திலக் கவிகை வேந்தர்
அழலவி ருளைய செங்க ணரியணை யிருத்த னேக்கும்

---

3347. ஞாஞ்சில் வலத்தினன் சிக்கயாத்த தோளினை நோக்கும்; ஞாஞ்சில் = நாஞ்சில் - கலப்பை. சிக்கயாத்த - அகப்படக் கட்டிய. கேளினை - சுற்றத்தாரை. கேளினை நோக்கல் செய்யான்: கம்ப. கும்பகருண. 3. வரால், கெளிறு என்பன மீன்வகைகள். பாளை - கமுகம்பாளை. பூகப்படப்பை - கமுகந் தோட்டம். மகதவேந்து - சராசந்தன்; எழுவாய்.

(பி - ம்.) 2. சுற்றமை வரவை.

3348. பழி - கண்ணபிரானுக்குத் தோற்றமையால் உண்டான பழி. சுரும்பு, வண்டு: வண்டின் வகைகள். செருக்கி - களிப்புக்கொண்டு. துஞ்சா - உறங்காத. துஞ்சி - இறந்து. குருதிச்சேற்றினிடையிடை - இரத்தமாகிய சேற்றின் நடுநடுவே. நோக்கும் - பார்ப்பான்.

3349. அற்ற - முடிந்துபோன. கான்ற - கக்கிய. கவரிக்காடு - சாமரைத் தொகுதி. வளை - சங்கு. ஒழுகு ஒளி - நீண்ட ஒளியையுடைய. ஓடை - நெற்றிப்பட்டம். கொற்றம் - வெற்றி. களிறு மாய்க்கும் - யானையை மறைக்கின்ற.

3350. நிழலும் - ஒளி வீசுகின்ற. அழல் அவிர் உளைய - தீயைப் போல் விளங்குகின்ற பிடரிமயிரையுடைய. அரியணை - சிங்காதனம். புழைதுளை. தடக்கை - வளைந்த துதிக்கை. கழைசுளி - குத்துக் கோலக்

புழைபடு தடக்கை யற்றுப் பொன்வரை துளங்க வீழ்ந்த
கழைசுளி சிறுக ணல்வாய்க் களிற்றினைக் கிடத்த னேக்கும் (உக)

3351. ஆடல்விடை நடந்த தென்ன வரசிளங் குமரர் முத்தக்
குடையொடு பிச்சம் பெய்த குளிர்நிழல் குறுக னேக்கும்
படுபசுங் குருதி மாந்தப் பனியிரு விசும்பு போர்த்து
மிடைதரு பருந்தி னீழன் மேயதோர் வண்ண நோக்கும். (நூ௦)

3352. மானவேன் மகதர் மார்பின் மன்றலந் தெரியன் மூசித்
தேனுகர் பறவை சூழச் செருக்களம் படர்த னேக்கும்
ஆனைசாய்த் தொழுகு கின்ற வரத்தநீ ராறு மூழ்கி
ஊனுகர் பறவை சூழ வோங்கலிற் கிடத்த னேக்கும். (நூக)

3353. ஏழுயர் களிற்று மன்ன ரெறியும்வெண் கவரிக் காற்றின்
தாழ்பசுந் தெரிய லாடச் சமர்க்களங் குறுக னேக்கும்
வீழ்தரு வளைவாய்ப் புள்ளின் விரிசிறை யெறிந்த காற்றின்
சூழ்சுடர் மாலை யாடத் துஞ்சினர் கிடத்த னேக்கும். (நூஉ)

---

கோபிக்கின்ற. நால்வாய் - தொங்குகின்ற வாயையுடைய. களிறு கிடத்தலை நோக்கும்.

3351. அடல் விடை - கொல்லுதலையுடைய இடபம்; அடல் - வெற்றி எனவுமாம். குடையும் பிச்சமும்; " குடையும் பிச்சமு மொழிய " (சீவக. 416.) பிச்சம் - பீலியாற் கட்டுவன. பெய்த - வீழ்ந்த. குமரர் குறுகுதலை நோக்கும். குருதி மாந்த - இரத்தத்தை அருந்துதற்கு. விசும்பு போர்த்து - ஆகாயத்தை மறைத்து. மிடைதரு - நெருங்குகின்ற. மேயதோர் - மேவிய தொரு.

3352. மகதர் - மகதநாட்டு வீரர். மன்றல் - வாசனை. தெரியல்மூசி - மாலையில் மொய்த்து. பறவை - வண்டு. மகதர் படர்தலை நோக்கும். அரத்தநீர் - இரத்த நீர். ஆற்றில் மூழ்கி ஊனை நுகர்கின்ற பறவை. ஓங்கலின் - மலையைப் போல.

3353. ஏழ் உயர்களிறு - ஏழு முழம் உயர்ந்த யானை. " ஏழுயர் போதக மினத்தொ டேற்றதே " (சீவக. 775.) எறியும் - வீசுகின்ற. மன்னர் கவரிக் காற்றினல் தெரியலாடும்படி சமர்க்களத்தைக் குறுகுதலை நோக்கும்; மன்னர் - தனக்கு உதவியாக வந்த அரசர். வளைந்த வாயையுடைய புள் - பருந்து. சிறை - சிறகு. துஞ்சினர் - இறந்த மகதவீரர்.

3354. வடிமலர்த் தும்பை யார்த்து வாளம ரழுவத் தேற்ற
முடிகெழு வேந்தர் கொற்ற முரசுகண் டுயில னோக்கும்
கடவுள ரெழுந்து துள்ளக் கல்லெனக் கலித்து மல்லற்
சுடர்தவழ் விசும்பிற் றெய்வ துந்துபி முழங்க னோக்கும். (ரு௩)

3355. இன்னன பலவு நோக்கி யெள்ளின னரசின் வாழ்க்கை
மன்னிய சிறப்பு வாய்ந்த மாதவம் புரித னன்றென்
றுன்னினன் மற்றென் செய்வா னொளிறுவெள் ளருவி மாலைப்
பொன்னெடுங் குன்ற நோக்கிப் போவது புரிந்தான் மன்னோ. (ரு௪)

3356. வெல்லலுந் தோற்ற லானும் விளைகில தெவர்மாட் டைய
செல்லனீ தவத்தி னென்னச் செறிந்தவா ளரசர் தேற்றக்
கொல்லிய வெழுந்த கூற்றிற் கொடுஞ்சமம் புரிய நாடி
மல்லலைத் தெழுந்த தோளான் மகதநா டெய்துற் றானால். (ரு௫)

3354. வடிமலர் - வடித்த மலர். ஆர்த்து - நிறைவித்து; யாத்து என்ற பாடத்திற்குக் கட்டி என்று கொள்க. வாளமர் அழுவத்து - வாட்போராகிய பரப்பில். கண்துயிலல் - ஒலியவிந்திருத்தலை. கடவுளர் - தேவர். கலித்து - முழங்கி. கண்ணபிரான் வெற்றி பெற்றமைக்காகத் தெய்வதுந்துபி முழங்கியது.

3355. அரசின் வாழ்க்கையை எள்ளினன்; எள்ளினன் - இகழ்ந்தான். மன்னிய - நிலைபெற்ற. தவம்புரிதல் நன்று என்று. உன்னினன் - நினைத்தான். ஒளிறு - விளங்குகின்ற. அருவியாகிய மாலையையுடைய பொற்குன்றத்தை நோக்கி.

3356. ஐய, வெல்லலும் தோற்றலும் எவர் மாட்டுவிளைகிலது நீ தவத்திற் செல்லல் என்ன அரசர் தேற்ற; ஐய: சராசந்தனுக்கு விளி. விளைகிலது - உண்டாகவில்லை. செல்லல் - செல்லாதே. கொல்லிய - கொல்லுதற்கு. கூற்றின் - யமனைப்போல. நாடி - ஆராய்ந்து. மல் - மல்லரை. தோளான் - சராசந்தன்.



# 22. முசுகுந்தற்கு அருள்புரிந்த அத்தியாயம்.

---

கலிச்சந்த விருத்தம்.

3357. முதிருங்களி யினவண்டின மூலத்தகை தொடுதார்
தகைபைந்தொடை புனைகின்றச ராசந்தனல் வலத்தால்
பதினேழ்முறை யிவ்வாறெறி படைவெள்ளமொ டெய்தா
மதுரைக்கடி யரண்முற்றினன் மலைந்தாடமர் தோற்றான். (க)

3358. பின்னுஞ்சமர் புரிதற்கடல் பெருகும்படை திரட்டா
மன்னும்பொழு தினிலின்றொடை மகதித்தனி யாழோன்
பொன்னங்கிரி புரைதோட்பசும் புலவுப்படை யவனன்
தன்னைக்கடி தடையாவமர் தலைப்பெய்திட வுரைத்தான். (உ)

3359. இளைத்தானிகன் மகதன்பொர வினியெம்மொடு வெம்போர்
விளைப்பாரிலை யெனச்செஞ்சின வேல்யாதவ ரெல்லாம்
களித்தாரென முக்கோடிக டற்றானைகொண் டெழுந்தான்
வளைத்தான்விரி புனற்குண்டகழ் மதுரைக்கடி யரணம். (ங)

---

3357. முதிரும் - முற்றிய. மூல - ஒலிக்க. தொடுதார் - மார்பின் மாலை. த கை த ல் - நெருங்குதல். தொடை - மாலை. வலம் - வெற்றி. எய்தா - அடைந்து. கடியரண் - காவல் பொருந்திய அரணை. முற்றினன் - சூழ்ந்தான். மலைந்து - பொருது. அமரில் தோற்றான்.

3358. சமர்புரிதற்கு - போர் செய்தற்கு. திரட்டா - திரட்டி. தொடை - நரம்பு. மகதித்தனியாழோன் - மகதியென்னும் பெயருடைய ஒப்பற்ற வீணையை யுடையோன்; நாரதன். புரை - ஒப்பு. புலவு - மாமிசம். யவனன்றன்னைக் கடிது அடையா; அடையா - அடைந்து. யவனன் - காலயவனன் என்னும் அசுரன். அமரில் தலைப்பெய்திட; தலைப்பெய்திட - கலக்கும்படி.

3359. மகதன் பொர இளைத்தான்; இனி எம்மொடு போர் விளைப்பார் இல்லை என யாதவர் களித்தார் என; என - என்று நாரதர் கூற. யவனன் தானைகொண்டு எழுந்தான். குண்டகழ் - ஆழமான அகழ். அரணத்தை வளைத்தான்.

3360 மலைக்குந்திறல் யவனன்படை வளைக்கும்மம ரொருபால்
அலைக்குஞ்சின மகதன்படை யொருபாலினி யடையின்
கலக்குற்றிடு நகராமெனக் கதிர்கான்மர கதப்பா
சிலைக்கொத்தவிழ் துளவத்தொடை யெம்மானினைத் தனனல். (௪)

3361. கார்மேவிய பரவைத்திரைக் கடறன்னகட் டிடையே
ஈராறெனப் பகர்யோசனை யிடனல்கவவ் விடத்தின்
ஓராயிரப் பெயரோன்விசும் புறைதச்சனைக் கூவாச்
சீர்மேவிய துவரைப்பெயர்த் திருமாநக ரமைத்தான். (௫)

3362. சிந்தாமணி யொன்றேவுயர் செம்பொற்றிரு நாடன்
பைந்தா துண வளிகோடிப ரந்தாடிய வந்தண்
மந்தாரம லர்ச்சோலையு மழைமட்டிழிந் தொழுகும்
அந்தார்புனை யிமையோருறை யத்தாணியும் விடுத்தான். (௬)

3363. விரைமட்டுறு தண்டாமரை விரியக்கதிர் விரியாத்
திரைபட்டவெங் கதிராமெனத் திகழ்கின்றன செஞ்சூட்
டரவெட்டையும் விழைவிப்பன வருமாமணி யுடனே
வரவிட்டன னளகைக்கிறை வளங்கூரிரு நிதியம். (௭)

---

3360. யவனன் படை ஒருபால் அமர்விளைக்கும், மகதன்படை ஒருபால் அடையின் நகர் கலக்குற்றிடும் என எம்மான் நினைத்தனன். அலைக்கும்-வருத்துகின்ற. மகதன் - சராசந்தன். மரகதம்போன்ற பசிய இலைக்கொத்து. எம்மான் - கண்ணபிரான்.

3361. கார் - மேகம். கடல், தன் அகட்டிடை ஈராறெனப் பகரும் யோசனை இடத்தை நல்க ; ஈராறு - பன்னிரண்டு. ஆயிரம் பெயரோன் - கண்ணபிரான். விசும்புறை தச்சன் - விசுவகர்மா. கூவா - கூவி; துவரையென்னும் பெயருடைய நகரத்தை அமைத்தான் ; துவரை - துவாரகை.

3362. சிந்தாமணி : தேவருலகில் உள்ள மணி. நாடன் - இந்திரன். அளி - வண்டு. மந்தாரம் - கற்பகத்தருவில் ஒன்று. மழைமட்டு - மழை போன்ற தேனை. அத்தாணி - ஆஸ்தான மண்டபம். நாடன், சிந்தாமணி யொன்றே கொடுத்தான், மந்தாரச் சோலையையும் அத்தாணியையும் விடுத்தான்.

3363. விரைமட்டு - வாசனை பொருந்திய தேன். திரைபட்ட - கடலிற் றோன்றிய. கதிர் - சூரியன். விழைவிப்பன - விரும்பச் செய்வனவாகிய. மணி - இரத்தினம். அளகைக்கு இறை - குபேரன். அளகைக் கிறை அரு மணியுடன் இரு நிதியத்தையும் வரவிட்டனன்.

3364. எண்ணற்றன வெறிவெண்டிரை யேழ்பாரையுங் கடப்ப
விண்ணத்திடை பறக்கின்றன விழுப்புள்ளியல் படைத்த
பண்ணுற்றன பால்போல்வன பழிதீர்பசும் பச்சை
வண்ணத்தன கலினப்பரி வருணன்விடுத் தனனல். (அ)

3365. செறிவுற்றபல் வளத்தாலருஞ் சிறப்பெய்துமங் நகர்வாய்
நெறியுற்றதண் மடற்றாமரை நிலவத்திகழ் செம்பொன்
மறுவற்றெளிர் வரைமார்பினன் மதுரைத்திரு நகர்க்கண்
உறைவுற்றவர் தமைமாயையி னுணராவகை யுய்த்தான். (கூ)

3366. சீர்முற்றிய மதியாமெனத் திகழ்தம்முனை யொன்னர்
போர்முற்றுமிந் நகர்காக்கெனப் புகலாப்புயல் வண்ணன்
கார்முற்றிய மதுரைக்கடி யெயினீள்கடைக் கண்ணுற்
றேர்முற்றிய படையேந்தல னெழுந்தோடின னன்றே. (கo)

3367. மணிகுண்டலம் வெயில்சிந்திட மணிமார்பினிற் றிகழ
அணிகின்றபைந் துளவத்தொடை யணிதார்துயல் வரமின்
பணியுங்கதிர் கான்றுடகப் பசும்பொற்றுகில் குலவத்
திணிதோளொரு நான்கொண்மணிச் சிகரங்களிற் றிகழ. (கக)

3364. எண்ணற்றன - அளவுகடந்தன. திரைசூழ்ந்த ஏழ்பாரையும் கடப்பன. விண்ணத்து - ஆகாயத்தில். பறக்கின்றன; "பறந்திய றருக்கின" (சீவக. 2215.) புள் இயல்படைத்த - பறவையின் இயல்பைக் கொண்டன; "புள்ளியற் கலிமா வுடைமையான" (தொல். கற்பு. 53.) பண் உற்றன - ஆயத்தம் செய்யப்பட்டன. வண்ணம் - நிறம். கலினம் - கடிவாளம்.

3365. நகர் - துவரை. மடல் - இதழ். தாமரையில் நிலவுகின்ற பொன் - திருமகள். மறு - மச்சம். பொன்னாகிய மறு ஒளிர்கின்ற மார்பினன்: கண்ணபிரான். மறு - ஸ்ரீவத்ஸம். மார்பினன், மதுரைநகரிலுறைவுற்றவர்தமை மாயையினல் உணராவகை அந்நகரில் உய்த்தான்.

3366. மதி - சந்திரன். தம்முனை - தன் தமையனாகிய பலராமனை. ஒன்னர் - பகைவர். இந்நகர் காக்கென - இம்மதுரையைக் காப்பாயாக வென்று; துவரையைக் காப்பாயாக எனலுமாம் புகலா - புகன்று. புயல் வண்ணன் - கண்ணபிரான். கடைக்கண் உற்று - வாயிலை அடைந்து. படை ஏந்தலனாய் ஓடினன்.

3367. வெயில் - ஒளி. மார்பினில் மணி திகழ; மணி - கௌஸ்துபம். தொடையும் தாரும்; 3357. தொடுத்தலமைந்த தார் எனலுமாம். துயல்வர - அசைய. பணி - ஆபரணங்கள். கான்று - கக்கி. குலவ - விளங்க. நான்கு தோள்களும் சிகரங்களைப்போல் திகழ.

3368 உருவப்பசும் புயல்போலெழுந் தோடுந்திறங் காணுப்
புரையற்றதண் டமிழ்யாழ்முனி புகல்கண்ணன்மற் றிவனென்
றெரிகக்குசெங் கதிர்வேற்படை யவனன்பசும் பொற்றூர்த்
துரகத்தடந் தேர்தூண்டலன் றெடர்ந்தோடினன் மாதோ. (கஉ)

3369. செய்ப்பட்டசெங் கமலம்புரை செம்பொற்கழல் சேப்பக்
கைப்பட்டன னெனவோடியொர் கருங்கல்லளை புகுதா
மெய்ப்பட்டதொன் மறையுச்சியின் மிசைவீற்றிருந் தருளும்
மைப்பட்டதண் புயலொப்பவன் மறைந்திட்டனன் மன்னே. (கங)

3370. ஆரத்திரள் பொழிமாலைவெள் ளருவிக்கிரி முழையின்
காரொப்பவற் றெடர்ந்தேகிய காலக்கதிர் வேலான்
சீருற்றவைந் துளவோனெனச் செங்கண்டுயில் கின்ற
மூரிச்சிலை வலந்தாங்கிய முசுகுந்தனைக் கண்டான். (கச)

3371. எயில்வந்துவெம் படைமுற்றவு மிகல்வெங்களத் தெய்தா
அயில்வாளமர் தருகின்றிலை யறியார்பிற ரெனக்கொல்
துயில்கின்றனை யிவணீயெனச் சுடர்கின்றசெங் கதிர்போல்
வெயில்சிந்திய வெவ்வாய்வடி வேலேலான்றனை யுதைத்தான். (கரு)

---

3368 உருவம் - அழகு. காணு - யவனன் கண்டு. புரை - குற்றம். யாழ்முனி - நாரதர். முனி புகன்ற கண்ணன் இவன் என்று. பொற்றூர்த் துரகம் - பொன்னுலாகிய கிண்கிணிமாலையையுடைய குதிரை.

3369. செய்ப்பட்ட - வயலில் தோன்றிய. கழல் - பாதம். சேப்ப - சிவக்கும்படி. கைப்பட்டனன் என - அகப்பட்டானென்று சொல்லும்படி. சேப்ப ஓடி. கல் அளை - மலைக்குகையில். மெய்ப்பட்ட - உண்மையிற் றோன்றிய. மைப்பட்ட - கருநிறம் தோன்றிய. புயலொப்பவன் - கண்ணபிரான்.

3370. ஆரத்திரள் - முத்தின் தொகுதிகள். மாலைபோன்ற அருவியை யுடைய கிரி. காரொப்பவன் - கண்ணபிரானை. முழையில் ஏகிய வேலான்; வேலான் - யவனன். துளவோனென - திருமாலைப்போல. மூரி - வன்மை.

3371. எயில் வந்து - மதிலிடத்துவந்து. முற்றவும் - சூழவும். எய்தா - அடைந்து. அயில் - கூர்மை; வேல் எனலுமாம். அமர்தருகின் றிலை - போர் செய்யவில்லை. இவண் பிறர் அறியார் எனக்கொல் நீ துயில் கின்றனை என; இவண் - இக்குகையிடத்தே. என - என்றுகூறி. வேலோன் றனை - முசுகுந்தனை.

3372. அழித்தார்கலி யுலகேழையு மணியுற்றத னுந்திச்
சுழித்தாமரை மலரிற்றரு துளவப்புய லேபோல்
எழிற்றாமரை விழிதுஞ்சிய விகல்வேன்முசு குந்தன்
விழித்தானெதிர் பார்த்தானுடல் வெந்தான்விறல் யவனன். (கசு)

3373. என்னுமுன முசுகுந்தனெனன் றிசைப்பானெவ னென்னுப்
பொன்னுழியொன் றுருட்டாக்கடற் புவிகாத்தசெங் கதிரோன்
அன்னுன்விருப் பொடுகூறலு மறைவானரி றபவோர்
பன்னுண்மதி யெனத்தோன்றிய பழநான்மறை முனிவன். (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3374. கொய்யுந் துணர்ப்பூந் தொடைமார்ப
குன்றே டெட்டுங் கடாக்கலுழி
பெய்யுங் காடக் களிறெட்டும்
பேழ்வா யரவும் பொறையுயிர்ப்ப
வையம் புரக்குந் தனிக்கவிகை
மாந்தா தாவின் றிருமைந்தன்
எய்யுஞ் சிலைக்கை முசுகுந்த
னென்னு நாமத் தினன்மன்னே. (கஅ)

3375. ஆலக் கருஞ்சே றுமிழ்பாந்த
ளரசு சுமந்த புவிநிழற்று
மாலைக் கவிகை நிழலொதுங்கி
மலர்த்தா ரிமையோர் குறையிரப்பக்

---

3372. ஆர்கலி - கடல். உலகேழையும் அழித்துத் தன் உந்திச் சுழியாகிய தாமரையில் தருகின்ற துவைப்புயலே போல்; துளவப் புயல் - கண்ணபிரான். தாமறைபோன்ற விழி. யவனன் உடல் வெந்தான்.

3373. என்னுமுனம் - என்று சுகமுனிவன் கூறுவதற்கு முன்பு. எவன் - யார். கதிரோன் அன்னுன் : பரீக்ஷித்து. அரில்தபவாழ் - குற்றம் கெட வாழ்கின்ற. முனிவன் அறைவான். முனிவன் - சுகன்.

3374. மார்ப ; பரீக்ஷித்து ; விளி. பொறை உயிர்ப்ப - இளைப்பாற. எட்டு மலைகளும், எட்டு யானைகளும், ஆதிசேடனும் பூமியைத் தாங்குகின்றனர் என்பது ஐதிஹ்யம். மாந்தாதாவினுடைய மகன் முசுகுந்தன்.

3375. ஆலக் கருஞ் சேறு - விடமாகிய கரிய சேறு ; 3316. பாந்தள் அரசு - பாம்புகளுக்கு அரசனை ஆதிசேடன் : புவியில் நிழற்றுகின்ற கவிகை

காலக் கனல்போ லுருத்தவுணர்
களத்திற் கவிழக் கற்பகப்பூஞ்
சோலைத் திருநா டினிதளித்தான்
சுடர்செய் வடிவேற் படையோனே. (கக)

3376. குருகின் பெயரால் விளங்குமுது
குடுமி நெடுமால் வரைகிழியத்
திருகு சினவேற் படையெறிந்த
செம்பொற் றொடித்தோட் டிறன்முருகன்
முருகு கமழ்தா ரமரர்படை
முழுதுங் காப்பத் தோன்றியபின்
பருகு பசும்பொற் கழலானைப்
பார்த்தா ரிமையோர் பகர்குற்றார். (உ0)

3377. மருவின் சாயன் மடமகளிர்
மைந்தர் யாரு மாங்கிறந்தார்
புரவு பூண்டிங் கெமையளித்தாய்
பொழியுங் கதிர்மா மணிச்சுடிகை
அரவிற் கிடந்த புயலன்றி
யளிப்பா ரில்லை தனிவீடு
தருநும் பெறநீ வேட்டவரஞ்
சாற்றென் றமர ரிசைத்தனரால். (உக)

---

யின் நிழலில் ஒதுங்கி. காலக்கனல் போல் - ஊழித் தீயைப்போல். உருத்து- கோபித்து. கற்பகப் பூஞ்சோலைத் திருநாடு - தேவருலகத்தை. அளித்தான்- காப்பாற்றினன். வேற்படையோன் - முசுகுந்தன்.

3376. குருகு - கிரவுஞ்சம் என்னும் பறவை. வரை - கிரவுஞ்சகிரி. திருகுசினம் - மாறுபட்ட கோபத்தையுடைய. முருகு - வாசனை. தோன்றிய பின் - தேவசேனுபதியாகத் தோன்றிய பின்பு. கழலானை - முசுகுந்தனை.

(பி - ம்.) 3. 'தோன்றலுமல்'

3377. மருவுஇன் சாயல் - மருவுதற்கு இனிய மென்மை. புரவு - காத்தல். அளித்தாய் - காப்பாற்றினய். அரவிற்கிடந்த புயலன்றித் தனிவீடு அளிப்பார் இல்லை; புயல் - திருமால். வீடு - மோட்சம். நீ வேட்ட வரம் தருநும்; சாற்று; வேட்ட - விரும்பிய. சாற்று - சொல்லுவாயாக.

3378. அழிவின் றுயர்ந்த தனிமுத்தி
யல்லால் வரங்க ளணுகுதற்கு
விழைவொன் றில்லான் பன்னெடுநாள்
விண்காத் துறங்கா வேல்வேந்தன்
ஒழிவின் றுயர்ந்த விண்ணுட
ருதவு முறக்கத் தினனுகி
மழைகண் டுயிலு மலைமுழைஞ்சின்
மலர்த்தா மரைக்கண் டுயின்றனனல். (உஉ)

3379 மலைச்செஞ் சிகா மெனப்பணைத்த
மல்லற் றடங்தோ ளவுணர்குலம்
தொலைச்சிக் குடுமி வேற்றலையிற்
சுடர்ப்பூ வாகை நறுந்தெரியல்
மிலைச்சிப் பசும்பொ னுடளித்த
வேந்த னியலார் விரிக்குநரொன்
றலைச்சங் கணிந்த தடக்கைமுகிற்
கன்ப னன்பி னுரைசெய்தான். (உ௩)

3380. பதுமப் பொகுட்டு வட்டவணைப்
பாவை மணக்குந் தடமார்பில்
கதிர்கொப் புளிக்கு மணிதிகழக்
கவின்செய் மகரக் குழைதாழ

---

3378. விழைவு ஒன்று இல்லான் - விருப்பம் சிறிதும் இல்லாதவன். வேந்தன் - முசுகுந்தன். ஒழிவின்று - நீக்கமில்லாமல். மழைகண் துயிலும் - மேகம் தங்குகின்ற.

3379. மல்லல் - வளப்பம். தொலைச்சி - அழித்து. தெரியல் - மாலை. மிலைச்சி - அணிந்து. வேந்தன் இயல் - முசுகுந்தனுடைய தன்மையை. அலைச்சங்கு - கடலினலை யிடத்துப் பிறந்த சங்கு. முகிற்கு - திருமாலுக்கு. அன்பன் - சுகமுனிவன்.

3380. பதுமம் - தாமரை. பதுமப் பொகுட்டாகிய வட்டவணையில் உள்ள பாவை : திருமகள். கொப்புளிக்கும் - உமிழ்கின்ற. திகழ - விளங்க. மகாக்குழை - மகா மீன் வடிவமாகச் செய்யப்பட்ட குண்டலம். குமட்டி -

உதிரங் குமட்டி நிணங்குதட்டு
மொளிறு வடிவேன் மன்னவற்கு
வெதிர்நின் றிசைத்த செங்கனிவாய்
விமல னருளால் வெளிப்பட்டான். (உச)

3381. அருண மணிகள் விளிம்படுத்த
வம்பொ னுடைத் திருமருங்கும்
தருண வெயில்கான் மணிமார்புந்
தாடோய் தடக்கை யொருநான்கும்
இருணன் ககற்று மதிமுகமு
மிருளுஞ் சுருளார் குழற்காடும்
கருணை பொழியுஞ் செங்கமலக்
கண்ணு மெதிர்கண் டுவந்தனனால். (உரு)

3382. தழைக்கும் பரிதி யொருகோடி
தலைவந் தெறிக்குந் தகைபோற்கண்
வழுக்குற் றிடநின் றிமைத்திடுபேர்
வனப்பா ருருவ முத்தொழின்மற்
றிழைக்கின் றவருட் சிறக்கின்ற
யாரை நீயென் றெறிகங்கை
சுழிக்குங் கமல மலர்ப்பொற்று
டொழுது குழைவுற் றேத்தினனால். (உசா)

---

கக்கி. மன்னவற்கு - முசுகுந்தனுக்கு. வெதிர் - வேய்ங்குழல். விமலன் - திருமால்.

3381. அருண மணிகள் - சிவந்த மாணிக்கங்களால். விளிம்படுத்த - விளிம்புசெய்த. மருங்கு - இடை. தருண வெயில்கால் - இளங்கிரணத்தைச் சிந்துகின்ற; தருணம் - இளமை; "தருணாவிகிரணம்" (காதம்பரி.) தாள்தோய் தடக்கை - முழங்காலளவும் தோய்ந்த விசாலமான கை; இவ்விதமிருத்தல் உத்தம லட்சணம் என்பர். குழற்காடு "ஐம்பாற்காடுஞ் சுமக்குங் கரும்பே" (சகலகலாவல்லி மாலை.)

3382. தழைக்கும் - ஒளிதழைக்கின்ற. தலைவந்து - முன்வந்து. தகைபோல் - தன்மையைப்போல். வனப்பு ஆர் உருவ - அழகு நிறைந்த வடிவமுடையவனே. நீ யாரை என்று; யாரை - யார். குழைவுற்று - மனமுருகி.

3383. முரியுந் திரைப்பாற் கடற்றுயிலு
முகுந்தன் யாமே பனிமுருகு
சொரியுந் தாரோ யளவிலவெந்
தோற்றம் புவியின் பொறைதவிர்ப்பான்
குருதி வடிவேல் வசுதேவன்
குமா னென்னத் தோன்றினமால்
வரமிங் குனக்குத் தரவடைந்தேம்
வழங்கென் றிசைத்தான் மறைமுதல்வன். (உஎ)

3384. ஊழி யிருபத் தெட்டிலழ
லொழுகும் வடிவாள் வசுதேவற்
காழி வளருங் கூராழி
யமலன் றேன்றி யளிக்குமெனத்
தாழ்வின் முதிய கர்க்கமுனி
சாற்றிக் கிடந்த வுரைசூழ்ந்தான்
சூழு முள்ளங் குளிர்ப்புற்றுன்
றுளித்தான் கண்ணீ ரிவைசொற்றுன். (உஅ)

3385. இறக்கு முடலம் யானெனப்பட்
டிறந்து போய வித்துணைநாள்
பிறப்பின் மக்கட் பிறப்பம்ம
பெறுதற் கரிதா வினிப்பிறவாச்
சிறப்பு நெறிதந் திடல்வேண்டுந்
தெவிட்டா வமுதே யருட்கடலே
துறக்கு முனிவ ருளக்கமலந்
துறவாத் தெய்வச் சுடரொளியே. (உகூ)

---

3383. முரிதல் - மடங்குதல். பனிமுருகு - குளிர்ச்சி பொருந்திய தேனே. எம் தோற்றம் அளவில. பொறை தவிர்ப்பான் - பாரத்தை நீக்கும் பொருட்டு. உனக்கு வரம் தா இங்கு அடைந்தேம். வழங்கு - கேட்பாயாக. மறை முதல்வன் - கண்ணபிரான்.

3384. ஊழி இருபத்தெட்டில் - இருபத்தெட்டாவது யுகத்தில். அழல் - தீ; வாளுக்கு அடை. ஆழிவளரும் - பாற்கடலில் அறிதுயில் செய்கின்ற. அமலன் - திருமால். அளிக்கும் - காப்பான். உரைசூழ்தான் - வார்த்தையை எண்ணினன். சூழும் - எண்ணிய. கண்ணீர் துளித்து இவை சொற்றுன்.

3385. எனப்பட்டு - என்று கூறப்பட்டு. இத்துணை நாள் இறந்து போய; போய - போயின. பிறப்பில் - பிறவிகளில். அம்ம; அசை. பிறவாத சிறப்பு நெறியை இனித் தந்திடல் வேண்டும். துறவா - நீங்காத.

3386. யாழின் மிழற்று மாதர்முத
லெல்லாப் பொருளும் போயதுவும்
ஆழித் தடக்கை முதல்வநின
தருளால் விளைந்த தென்றறிந்தேன்
வீழ்த லிலன்மற் றனியொன்றின்
வீழ்ந்தே னமரர் முடிசூடி
வாழி வளநான் மறைமுடிமேல்
வைத்த நின்றாட் டாமரையே (ரு0)

3387. பொலந்தா மரையி னரசிருக்கும்
பொன்னங் கொழுந்தின் முலையுழக்க
மலர்ந்தாய் பிழிதா துறைக்கின்ற
மன்றற் றுளவ மணிமார்பா
நிலந்தாய் விசும்பிற் றவழ்கங்கை
நீர்பூத் தலர்ந்த தாண்முளரி
அலந்தார்க் களிக்க லாகாதோ
வமலா வெனநின் றிறைஞ்சினனால். (ருக)

3388. நாட்ட மிதுவந் ததுநன்று
நன்று லம்ம நறுந்தாரோய்
வேட்ட மாடுந் திறந்தன்னால்
விளைந்த பாவந் தவமியற்றி

---

3386. முசுகுந்தனுக்கு மாதர் முதலிய எல்லாப் பொருளும் போயது; 3377. முதல்வ: கண்ணபிரானே; விளி. இனி ஒன்றையும் வீழ்தல் இலன்; வீழ்தல் - விரும்புதல். வாழி - அசை. அமரரது முடியைச் சூடி, மறையின் முடியின் வைத்த தாளாகிய தாமரை. தாட்டாமரையை வீழ்ந்தேன்; வீழ்ந்தேன் - விரும்பினேன்.

3387. தாமரையில் அரசாக இருக்கும் பொன்னங் கொழுந்து; திருமகள். உழக்க - உழக்கலால். மலர்ந்து - விரிந்து. பிழிதாது உறைக்கின்ற - தேன் மகரந்தப் பொடியில் துளிக்கின்ற. பிழியும் தாதும் உறைக்கின்ற எனலுமாம். நிலம் தாய் - பூமியைத் தாவி. தாளாகிய முளரியை. அலந்தார்க்கு - வருந்தியவர்களுக்கு.

3388. நாட்டம் இது - முத்தியடைய வேண்டுமென்ற நோக்கமாகிய இது; ஆராய்ச்சி என்னலுமாம். நன்று நன்று; ஆல், அம்ம இரண்டும் அசைகள். தாரோய்; முசுகுந்தனுக்கு விளி. வேட்டம் - வேட்டை. பாவத்

வாட்டி மறையோர் குலத்துதித்து
வந்தெம் மடிசேர் கெனப்பணித்தான்
ஆட்டுந் திரைமாக் கடல்கலக்கி
யமுத மமரர்க் களித்தோனே. (௩௨)

3389. உழுதா யிரம்வண் டலம்பநற
வூற்றுந் தொடைமார் பினன்கையின்
தொழுதான் குழைந்தான் றுள்ளினன்
றுள்ளிப் புனல்கட் டுணைபனிப்ப
அழுதா னுவகைத் தடங்கடலி
னாழ்ந்தான் வீழ்ந்து தனிமுதல்வன்
எழுதா மறையின் முடிபுனைந்த
விருதாள் சென்னி மிசைப்புனைந்தான். (௩௩)

3390. விடைபெற் றெழுந்தா னூற்றிசையும்
விழியிற் பார்த்தா னிற்பனவும்
நடைபெற் றனவுங் குறைந்தவகை
நாடிக் கலிவீற் றிருந்ததெனப்
படைபெற் றோங்கு தடம்புயத்தான்
படரும் வதரி காச்சிரமம்
அடைவுற் றொழியா வாசையைவே
ரரிந்தோர் விருந்தா யினனன்றே. (௩௪)

---

தைத் தவமியற்றி வாட்டி. வாட்டி - கெடுத்து. சேர்க - அடைவாயாக. பணித்தான் - கட்டளையிட்டான். அளித்தோன் - கண்ணபிரான்.

3389. ஆயிரம் வண்டு உழுது அலம்ப; அலம்ப - ஒலிக்க. நறவு - தேன். மார்பினன் - முசுகுந்தன். கையினால் தொழுதான், கட்டுணை புனல் பனிப்ப - கண்களிரண்டில் நீர் துளிக்க. உவகையால் அழுதான். மறையின் முடி புனைந்த இருதாள்; ''நான்மறை முடிமேல் வைத்த நின்றாள்'' 3386. தனி முதல்வனுடைய இரு தாளை.

3390. நிற்பனவும் நடைபெற்றனவும் - சராசரங்கள். வதரிகாச்சிரமம்- பதரிகாச்சிரமம். ஒழியா - நீங்காத; ஆசையை வேர் அறிந்தோர்; முனிவர் களுக்கு; " ஆர்வ வேரரிந் தச்ச ணந்திபோய் " (சீவக. 409.) அரிந்தோர்க்கு விருந்தாயினன்.

கலிநிலைத்துறை.

3391. கோட்டி னன்சிலை குரைகடல் வெதும்பவெம் பகழி
மாட்டி னொருமடங்கல்போன் மதுரைவந் தெய்திச்
சூட்டி னன்விளங் கெயிற்புறஞ் சூழ்படை நூழில்
ஆட்டி னன்பல கவந்தநின் றடுகளத் தாட. (௩௫)

3392. வேழ வெண்மருப் பொசித்தவன் வெண்டிரைப் பாயல்
ஆழி யன்னவன் றன்னொடு மாடல்வேல் யவனன்
பாழி வெம்படை படுத்தனன் படுபொரு ளெல்லாம்
சூழுங் கட்டெயிற் றுவரையில் விடுத்தன னெழுந்தான். (௩௬)

3393. முளைத்த வெண்பிறைக் கோட்டகார் முகிலென வதிர்வ
களித்து வண்டுவீழ் கடாத்தநீள் கழையெனக் கனல்வ
வெளிற்றி னம்பனைக் கரத்ததின் வெங்கரி நிரைத்து
வளைத்தெ திர்ந்தனன் வால்வளை கலிப்பவேன் மகதன். (௩௭)

3394. கரைக்கு றும்பெறி கடல்புரை கதழ்சினத் தானைப்
பெருக்கி னனிணம் பில்குவேற் படைச்சரா சந்தன்
நெருக்க வோடின னிலைக்கள மிழந்தவன் கடுப்ப
அரக்கர் வேறற வடற்சிலை குழைத்தபோ ரண்ணல். (௩௮)

---

3391. சிலை கோட்டினன் - வில்லை வளைத்தான். பகழி - அம்பை. மாட்டினன் - வில்லின் நாணில் மாட்டினன். சூட்டினன் விளங்கு : எயிலுக்கு அடை. சூழ்கின்ற படையை நூழிலாட்டினன். நூழிலாட்டினன் - கொன்று குவித்தான்.

(பி - ம்.) 3. சூழ்பவர்.

3392. மருப்பொசித்தவன் - கண்ணபிரான். ஆழியன்னவன் - பலராமன். யவனனுடைய படையைப் படுத்தனன். பாழி - பெருமை ; வலி. படுத்தனன் - அழித்தான். படுபொருள் - அகப்படுத்திக் கொண்ட பொருள். எயிலையுடைய துவரையில்.

3393. முளைத்த - தோன்றிய. கோட்ட - தந்தத்தையுடையன. அதிர்வ - முழங்குவன. கடாத்த - மதத்தையுடையன. கழை - குத்துக்கோல். பனைபோன்ற கரத்தையுடையன. கரி - யானை. நிரைத்து - வரிசையாய் நிறுத்தி. வளை - சங்கம். மகதன் - சராசந்தன்.

3394. கரையாகிய குறும்பை எறிகின்ற கடல். கதழ் சினத் தானை - விரைகின்ற கோபத்தையுடைய சேனையை. சராசந்தன் பெருக்கினன். நிலைக்களம் - நிலையான தன்னுடைய இடம். கடுப்ப - ஒப்ப. சிலை குழைத்த போரண்ணல் - இராமபிரான். ஈண்டுக் கண்ணபிரான். அண்ணல் ஓடினன்.

3395. அருவி மாலையந் தடவரைக் குடையெடுத் ததிரும்
கருவி மாமழை காத்தவ னிதியெலாங் கைவிட்
டுருவ வார்குழை யொன்றணிந் தவனொடு மோடிப்
பருவ மாமுகில் போலவோர் பருப்பதம் படர்ந்தான். (௩௯)

3396. காரி ருப்புயல் கண்படு பாளைவாய்க் கமுகின்
ஆர ருவிய வகன்பணை மகதநா டாளும்
மூரி வேற்படை மன்னவன் முளரியாற் பொத்தும்
சாரல் வெற்பெலாந் தயங்கழ லூட்டினன் மன்னோ. (௪0)

3397. மோட்டி ருங்கடல் புழுங்கவெம் முனையடு பகழி
வாட்டி னானொடு வால்வளை மேனியான் றன்னை
ஊட்டு வெவ்வழ லுண்ணுமென் றெழுகுநீர் மகத
நாட்ட கந்தனிப் புரப்பவ னடந்தன னகரம். (௪௧)

3398. கப்பு வாயிப்பி கான்றவெண் முத்தொடு செங்கேழ்த்
துப்பு வெண்டிரை சுழித்தெறி துவரையம் பதியின்
மைப்பு யற்குலந் தவழ்தரு வரைமுக டிவர்ந்து
குப்புற் றானொரு குழையினன் றன்னொடு குழகன். (௪௨)

---

3395. அருவியாகிய மாலையையுடைய வரையைக் குடையாக எடுத்து மழையைக் காத்தவன்: கண்ணபிரான். அதிர்கின்ற கருவிமாமழை; கருவி - தொகுதி. குழை ஒன்று அணிந்தவன்; பலராமன். பருவமாமுகில் - பருவ காலத்து மழை பெய்யும் கரிய மேகம்.

3396. புயல் கண்படு - மேகம் தங்குகின்ற; கமுகுக்கு அடை; கண் படுதல் - உறங்குதல். கமுகில் ஆரல் தாவிய பணை; ஆரல்: ஒருவகை மீன். பணை - வயல். மன்னவன் - சராசந்தன். முளரியால் பொத்தும் சாரல் - தாமரைகளால் மறையப்பட்ட சாரலையுடைய. அழல் - தீ.

3397. மோடு - பெருமை. கடல் புழுங்கும்படி பகழியால் வாட்டினான்; என்றது இராமாவதாரத்தில் வருணன்மீது அம்பு விட்டதைக் குறித்தது; ஈண்டுக் கண்ணபிரானை. வளைமேனியான் - பலராமன். ஊட்டிய அழல் உண்ணும் என்று நகரம் அடைந்தனன்; புரப்பவன் - சராசந்தன்.

3398. கப்புவாய் இப்பி கான்ற - பிளவுபட்ட வாயையுடைய சங்கு ஈன்ற. செங்கேழ்த் துப்பு - சிவந்த நிறத்தையுடைய பவளம். துவரை - துவாரகை. புயல் குலம் - மேகக் கூட்டம். வரைமுகடு - மலையுச்சி. குப்புற்றான் - குதித்தான். ஒரு குழையினன் - பலராமன். குழகன் - கண்ணபிரான்.

# 23. உருக்குமிணி மணத்திறம் உரைத்த அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

3399. ஆனத்த நாடுதனி யாளுமடன் மன்னன்
ஊனுற்ற வேல்விற லிரேவத னுயிர்த்த
தேனுற்ற சின்மொழி யிரேவதியை மைதீர்
வானுற்ற தண்பனே யுயர்த்தவன் மணந்தான் (க)

3400. சேறுற்ற நாண்முளரி செம்முக நகைக்கும்
வீறுற்ற தண்பணே விதர்ப்பன்மகள் பைந்தேன்
ஊறுற்ற மென்மொழி யுருக்குமிணி தன்னே
மாறற்ற பொற்றிகிரி மான்மண மயர்ந்தான். (உ)

3401. என்னுமுன் வெந்திற லிராக்கத மணத்தால்
பொன்னுழி மாமுகில் புணர்ந்த துணர்கிற்பான்
அந்நீர்மை யாவையு மறைந்தருள்க வென்னு
மன்னு தாத்தொடு வழங்கமுனி கூறும். (ந)

---

3399. ஆனத்த நாடு - ஆனர்த்த தேசம். அடல் - வெற்றி. மன்னனுகிய இரேவதன் உயிர்த்த இரேவதியைப் பனேயுயர்த்தவன் மணந்தான். தேன் உற்ற - தேனே ஒத்த ; உற்ற ; உவம உருபு ; "வாளுற்ற கண்ணுன்" (சீவக. 10.) பனே உயர்த்தவன் - பலராமன்.

3400. சேறு உற்ற - சேற்றிலே பொருந்திய. முளரியை நகைக்கின்ற செம்முகத்தையுடைய உருக்குமிணி, விதர்ப்பனுடைய மகளாகிய உருக்குமிணி. தேன் ஊறு உற்ற மென் மொழி - தேனின் இனிமை இடைவிடாது பொருந்திய மெல்லிய சொல்; "தேனூறு தீஞ்சொற் குணமாலே" (சீவக. 15 ) மாறு - மாறுபாடு. திகிரியையுடைய மால் - கண்ணபிரான்.

3401. என்னு முன் - என்று சுக முனிவன் கூறி முடிப்பதற்கு முன். முகில் - கண்ணபிரான். இராக்கத மணத்தால் புணர்ந்ததை. உணர்கிற்பான் - யான் உணரும்படி. நீர்மை - தன்மை. என்னு - என்று. மன் - பரிக்ஷித்து. ஆதாம் - அன்பு. வழங்க - கூற.

3402. விண்ணுற்ற தண்டலை விதர்ப்பவள நாடன்
மண்ணுற்ற செக்கர்மணி மானுமெழின் மாதைப்
பண்ணுற்ற வண்டுபடு பைந்துளவ மாலைக்
கண்ணற் களிப்பது கருத்துற விழைந்தான். (ச)

3403. வீடாத வென்றிகெழு வேந்தனது நாட்டம்
நாடா வவன்புதல்வ னச்சிலைய வேலான்
வாடாத வாகைமலர் மாலைதலை யாத்த
ஓடா வயப்படை யுருக்குமி யுரைப்பான். (ரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3404. விரியல்வெண் டோட்டு முல்லை வேயிசை வடித்த செங்கட்
கரியவற் குதவ வெண்ணல் கரும்புறழ் கிளவி யாளைச்
செருமுகங் கடந்த வென்றித் திறற்சிசு பால னென்னும்
வரிசிலை வடித்த திண்டோண் மன்னவற் கீது மென்றான். (சு)

3405. துப்பிதழ் முளரிச் செங்கட் டுளவினன் செவ்வி கேட்டு
வெப்புறழ் காம மேன்மேல் விளைதர விரைமென் சாந்தம்

---

3402. தண்டலை - சோலை. மண்ணுற்ற - கழுவிய. செக்கர் மணி - சிவந்த மாணிக்கத்தை. மானும் - ஒக்கும். மாது - உருக்குமிணி. பண் உற்ற - இராகத்தைப் பாடலுற்ற. துளவ மாலையையுடைய கண்ணற்கு. விதர்ப்ப நாடன், மாதைக் கண்ணற்கு அளிப்பதை விழைந்தான்.

3403. வீடாத - அழியாத. வேந்தனது நாட்டத்தை நாடா; நாட்டம் - நோக்கம். நாடா - ஆராய்ந்து. நச்சு இலைய வேல் - விடம் பூசிய இலையையுடைய வேல்; இலை - வேலின் நுனி. தலையில் யாத்த; யாத்த - கட்டிய. ஓடா வயப்படை உருக்குமி: "ஓடாததானை" (சீவக. 7.) உருக்குமி - விதர்ப்ப வேந்தனுடைய மகன்.

3404. வடித்த - பயிற்றிய. கரியவன் - கண்ணபிரான். முல்லையை யணிந்த கரியவன், வேயிசை வடித்த கரியவன். கரும்பு உறழ் கிளவியாள் - கரும்பின் சாறு போன்ற இனிய மொழியையுடைய உருக்குமிணி. கிளவி யாளைக் கரியவற்கு உதவ எண்ணல்; எண்ணல் - நினையாதே. செரு - போர். சிலை வடித்த தோள் - சிலைத் தழும்பு பயின்ற தோள். ஈதும் - கொடுப்போம்.

3405. துப்புப் போன்ற இதழையும் முளரி போன்ற செங்கண்ணையு முடைய துளவினன்: கண்ணபிரான். செவ்வி - அழகு. வெப்பு உறழ் - வெம்மை யையொத்த. விளைதர - உண்டாக. விரை - வாசனை. அணங்கு -

அப்பினும் வெதும்பா நின்ற வலர்முலை யணங்கு முன்னோன்
செப்பிய மாற்றங் கேட்டுச் செவிமுதல் வெதும்பி னாளால். (எ)

3406. கவிமதங் கடந்த யாணர்க் கவின்குடி யிருந்த கொம்மைக்
குவிமுலைப் பவளச் செவ்வாய்க் கோற்றொடி காதல் கூறி
உவவுவெண் டிங்க ளன்ன வொருமறை யவனை யாங்குப்
புவிபொதி கமலப் பொற்றாட் புயலுழை விடுத்தல் செய்தாள். (அ)

3407. உப்புநீர்ப் பரவை யெல்லா மொண்மதுப் பரவை யாக்குங்
குப்பைவெண் மணலிற் செய்த குளிர்மதுக் கலுழி தூற்றும்
துப்பிதழ் மலர்ப்பூஞ் சோலை சூழ்தரு துவரை யெய்திச்
செப்பினன் கண்ணற் கண்டு சென்றவம் மறைவ லோனே. (கூ)

3408. புடைதவழ் வான யாற்றுப் பொங்குவெண் டிரையே போலக்
கொடிபல நுடங்கு மாடக் குண்டின புரத்து வேந்தன்
மடமகண் மறிமா னன்ன மதர்வைமென் னோக்கி மற்றுன்
தடவரை யகலந் தோயத் தழைத்தனள் காதன் மன்னோ. (கo)

3409. ஆங்கவ டன்னை யைய வாயிரம் பகுவாய் நாகம்
தாங்குபே ருலகின் மன்னர் தருக்கறப் பொருது வென்ற
தேங்கம ழலங்கன் மாலைத் திறற்சிசு பால னென்னும்
வாங்குவிற் றடக்கை யாற்கு வழங்குவா னிருக்கின் றூரால். (கக)

---

உருக்குமிணி. முன்னோன் - தனக்கு முன் பிறந்தவனாகிய உருக்குமி. செவிமுதல் - காதின் அடி.

3406. கவிமதம் கடந்த யாணர்க்கவின் குடியிருந்த கொம்மைக் குவிமுலை - கவிஞர் கற்பிக்கின்ற கொள்கையைக் கடந்த புதிய அழகு வீற்றிருந்த பெருமையையுடைய குவிந்த முலை ; "கவிமதங் கடந்து காமர் வனப்பு வீற்றிருந்த கண்ணார், குவிமுலை" (சீவக. 2292.) கவிமதம் : 1697. கோற்றொடி - உருக்குமிணி. மறையவனை - அந்தணனை. மறையவனுக்குச் சந்திரன் ; 3373. புவியைப் பொதிந்த தாளையுடைய புயலுழை - கண்ணபிரானிடத்து.

3407. பரவை - கடல். மதுப் பரவை - தேன் கடல். மதுக் கலுழி - தேனொழுக்கு. அம்மறைவலோன் கண்ணனைக் கண்டு செப்பினன்.

3408. புடை - பக்கம். வானயாறு - ஆகாய கங்கை. கொடிக்குத் திரை உவமை. குண்டினபுரம் விதர்ப்பநாட்டின் தலைநகர். மறி மான் - மான் கன்று. மதர்வை - மயக்கம். வேந்தனுடைய மகளாகிய நோக்கி உன் அகலத்தைத் தோயக் காதல் தழைத்தனள். இதுமுதல் மூன்று பாடல்கள் மறையவன் வார்த்தை.

3409. அவள் தன்னை - உருக்குமிணியை. ஐய - கண்ணபிரானுக்கு விளி. மன்னர் தருக்கு அறும்படிப் பொருது வென்ற சிசுபாலனென்னும் தடக்கையாற்கு. வழங்குவான் - கொடுக்கும் பொருட்டு,

3410. விழவயர் நாளின் முன்னாள் வெற்பிளங் கன்னி தன்னை
வழிபட வெழுவ லாங்கு வந்தெனைக் கவர்ந்தி லானேல்
அழலிடை யவிந்து தோன்றி யஞ்சன வண்ணன் செய்ய
எழில்வரை யகலந் தோய்வ லென்றன ளணங்க னாளே. (கஉ)

3411. என்னலு முந்நீர் வேலி யிருநில வலயங் காக்கும்
மன்னவர் யாருங் காண மானவேல் விதர்ப்பன் காதற்
கன்னியைக் கவர்ந்து கோடுங் காண்டிநீ யென்று கண்ணன்
சொன்னவில் புரவித் திண்டேர் கொணர்கெனக் கூறி னானல். (கங)

3412. நிலப்பொறை தவிர்ப்ப வந்தோ னிலமுது குளுக்க வீண்டிக்
கலித்தெழு கடலந் தானை சூழ்வரக் கமழ்தேன் கான்ற
இலைப்பசுங் கோதை தூதா மிருபிறப் பாள னோடு
சிலைப்புறு கலின வாமான் றேரிவர்ந் தேக லுற்றான். (கச)

3413. கடற்படை கனுல வந்து களத்தெதிர் வேந்தர் கொற்றம்
முடித்துமென் முருகார் முல்லை முடித்தலர் கூந்தற் கன்னி
தொடுத்ததா ரெம்பி தோளிற் சூட்டுவித் திடுது மென்னா
அடற்பெருந் தானை யோடு மலாயுத னெழுந்து சென்றான். (கரு)

---

3410. விழவு அயர் நாளின் முன்னாள் - கலியாணம் செய்யும் நாளுக்கு முதல் நாள். வெற்பிளங் கன்னி - பார்வதி; துர்க்கை எனலுமாம். எழுவல் - வருவேன். வந்து - கண்ணபிரான் வந்து. அழலிடை - தீயில். அவிந்து - இறந்து. அஞ்சனவண்ணன் - திருமாலுடைய. அகலம் - மார்பு. அணங்கனாள் - உருக்குமிணி. இப்பாடல், உருக்குமிணி கூறியதாக அந்தணன் கூறியது.

3411. என்னலும் - என்று மறையவன் கூறுதலும். விதர்ப்பனுடைய கன்னியை - உருக்குமிணியை. கோடும் - கொள்வோம்.

3412. நிலப்பொறை - பூமியின் பாரத்தை. தவிர்ப்ப - நீக்க. வந்தோன் - கண்ணபிரான். நிலம் முதுகு உளுக்க - நிலத்தின் முதுகு நெளிய. ஈண்டி - நெருங்கி. கான்ற - கக்கிய. கோதை - உருக்குமிணி; ஆகுபெயர். இருபிறப்பாளன் - மறையவன். சிலைப்புறு - ஒலித்தலுற்ற. வாமான் - குதிரை.

3413. கனுல - நெருங்க. களத்து எதிர்ந்தவேந்தரது கொற்றத்தை; கொற்றம் - வெற்றி. முல்லை கற்பிற்குச் சூடுதல்மரபு. கன்னி - உருக்குமிணி. தார் - மாலை. எம்பி - கண்ணபிரான். என்னா - என்றுகூறி அலாயுதன் - பலராமன்.

3414. ஊனகு பருதி வைவே லுறுவிறல் விதர்ப்ப வேந்தன்
கானகு மலர்த்தார் மைந்தன் கட்டுரை கடக்க லாற்ருன்
தேனகு மாலை யம்பொற் றிறற்சிசு பாலற் கீவான்
மாநகர் புனைக வென்று மணிமுர சறைவித் தானல். (கசு)

3415. திருமகள் வளர்த லானுங் தெண்டிரை வேலி ஞாலத்
துரைபெறு மன்ற லாலே யோங்கிய திறத்தி னானும்
சொரிகதிர்ப் பனிவெண் முத்தங் தோற்றுபு சுடர்த லானும்
மரைமல ரென்னத் தோன்றும் வளநகர் மன்னி னாரே. (கஎ)

3416. விண்ணிகர் குடுமி மாட வீதிவாய் நிரைத்த பைம்பொன்
கண்ணவிர் கமுகும் பொன்செய் கதலியும் விளங்கு தோற்றம்
பெண்ணமு தோடு முந்நீர்ப் பிறந்தபொற் பாரி சாதம்
மண்ணிடை விழவு காண்பான் வந்ததோர் மாட்சித் தாமால். (கஅ)

3417. மாமழை தவழு மாட மழைமுதிர் சூற்கொண் டன்ற
தாமவெண் டாள மாலை தயங்கொளி யுமிழுந் தோற்றம்
தேமொழி மன்றல் வேட்ட திறற்சிசு பால னென்னும்
நாமவேற் றடக்கை யானை நகையசி புரிவ போன்ற. (கக)

3418. பொன்னிதழ்க் கோதை மாதர் புரிகுழல் கமழ வூட்டும்
இன்னகிற் புகைவெண் மாடத் திடைவிரா யெழுந்த தோற்றம்

---

3414. ஊன் - மாமிசம். கான் - வாசனை. விதர்ப்ப வேந்தன் மைந்த னுடைய கட்டுரையைக் கடக்கலாற்ருனய்; மைந்தன் - உருக்குமி. ஈவான்- கொடுக்கும் பொருட்டு. புனைக - அலங்காரம் செய்க.

3415. திருமகள் - இலக்குமி; செல்வம். மன்றல் - வாசனை; மணம். பனித் துளியாகிய முத்தம்; தாமரைக்கு. முத்துக்கள்; நகருக்கு. தோற்றுபு- தோற்றி. மரைமலர் - தாமரைப்பூ. நகரை மன்னினர்; மன்னினர் - பொருந்தினர். இப்பாடல் தாமரைக்கும் நகருக்கும் சிலேடை.

3416. குடுமி - உச்சி. நிரைத்த - வரிசைசெய்த. கண் அவிர் - இடம் விளங்குகின்ற. கதலி - வாழை; கொடி. பெண் - திருமகள். முந்நீர் - கடல். விழவு - கலியாணம். காண்பான் - காண்பதற்கு.

3417. மழை - மேகம். மழைமுதிர் சூல்கொண்டு - மேகம் முற்றிய கருப்பங்கொண்டு. தாமம் - ஒளி. தாளம் - முத்து; மேகத்திடத்தும் முத்துப் பிறக்குமென்பர். தேமொழி - உருக்குமிணியை. நகையசி புரிவ போன்ற - நகைத்துச் சிரிப்பன போன்றன.

3418. மாதர் குழலில் கமழ ஊட்டுகின்ற அகிற்புகை. விராய் - கலந்து. கன்னி - இளமை. துளவமேகம் - கண்ணபிரான். கள் - தேன்.

கன்னியங் துளவ மேகங் கள்ளவிழ் கமல வீட்டு
மின்னினைக் கோடல் காண்பான் மேகம்வந் தீண்டல் போலும். (உ०)

3419. தாமரை துறந்த செங்காற் றளர்நடை யன்ன மேபோல்
கோமறு கீண்டு மாதர் குழைமுகஞ் சுடருந் தோற்றம்
காமரு கமல மாதைக் கமலலோ சனன்கொண் டேகல்
தேமரு கமலங் காண்பான் றிரண்டெழு செவ்வி மானும். (உக)

3420. பைந்தொடை முருகு தூற்றும் பகட்டெழிற் பருதி மார்பின்
அந்திவான் மருப்புத் திங்க ளலர்கதி ரார மின்ன
உந்துநீ ருலகம் விற்கு மொளிமணி யோடை நெற்றிச்
சிந்துரக் களிநல் யானைத் திறற்சிசு பாலன் வந்தான். (உஉ)

342!. மாக்கடல் வண்ணன் வந்து வளைப்பினு முழுவெண் டிங்கள்
ஏக்கறு முகத்துக் கன்னி யிகற்சிசு பாலன் பால
ளாக்குவ னென்று பொங்கு மடற்சரா சந்த னுதிக்
கோக்கண மெழுந்து செம்பொற் கொடிநகர் குழீஇய தன்றே. (உங)

3422. இருபிறப் பாள னென்கொ லெய்தில னின்னு மென்னு
வரிமிடற் றளிவீ ழோதி மனத்தினி லுணரு மேல்வை

---

கமலவீட்டுமின் - இலக்குமி; ஈண்டு உருக்குமிணியை. கோடல் - மணம் புரிந்துகொள்ளுதலை. ஈண்டல் - நெருங்குதல்.

3419. செங்காலையுடைய அன்னம், தளர்நடையை யுடைய அன்னம். கோமறுகு - இராசவீதி. குழை - குண்டலம். சுடரும் - ஒளி விடுகின்ற. காமரு - விருப்பம் மருவிய. கமலமாதை - உருக்குமிணியை. கமலலோசனன் - கண்ணபிரான். ஏகல் - செல்லுதலை. தேமரு கமலம் - தேன் பொருந்திய தாமரை ; மாதர் முகத்திற்கு உவமை. ஏகலைக் காண்பதற்கு. செவ்வி - அழகு.

3420. தொடை - மாலை. முருகு - தேன். பருதிபோலும் மார்பு. மருப்புப் போலும் திங்கள் ; பிறைச்சந்திரன். ஆரம் - முத்துமாலை. மார்பிற்கு அந்திவானும் ஆரத்திற்குத் திங்களும் உவமை ; "மேல்பாற் பிறையென விளங்க வமைந்த, தொரு காழார மொளிபெற வணிந்து" (பெருங். 3. 22 : 220-1.) ஓடை - நெற்றிப்பட்டம்.

3421. மாக்கடல் வண்ணன் - கரிய கடல் போன்ற நிறமுடைய கண்ணபிரான். ஏக்கறும் - ஆசையால் தாழ்கின்ற. கன்னி - உருக்குமிணியை. கோக்கணம் - அரசர் கூட்டம். குழீஇயது - கூடியது.

3422. இரு பிறப்பாளன் - கண்ணபிரானிடம் தூதுசென்ற அந்தணன். இன்னும் என்கொல் எய்திலன் ; என்கொல் - என்ன காரணம். என்னு - என்று. அளி - வண்டு. ஓதி - உருக்குமிணி. ஏல்வை - சமயம்.

முருகுகொப் புளிக்குஞ் செய்ய முளரியம் போது பூத்த
கருநெறிக் குவளை யன்ன கண்ணிட னுடிற் றன்றே. (உச)

3423. துளிக்கருங் கொண்ட லென்னத் தோன்றிமூ துலக மெல்லாம்
அளிப்பவன் விடுக்கப் பட்டாங் களிக்குல மாற்ற நுண்டேன்
தளிர்க்குமா யிரமென் றோட்டுத் தாமரைத் தெரியன் மார்பன்
களிக்கய லன்ன வுண்கட் கன்னிமுன் னெய்தி னுனல். (உரு)

3424. மறுவறு சிறப்பு வாய்ந்த மாமறை யந்த ணுளன்
முறுவல்வாண் முகமோ ரந்தண் முழுமதி போன்ற தேனும்
ஏறிகதிர்ப் பருதி யாயிற் றிளநிலாக் கற்றை தூற்றும்
செறிதொடி மடந்தை செவ்வித் திருமுக முளரிக் கன்றே. (உசு)

3425. கொந்தழ லுமிழும் வெவ்வாய்க் குருதிவாட் படையி னேடும்
பைந்தடத் தலர்ந்த நீலப் பனிமல ரெதிர்ப்ப வாற்றுச்
சிந்தரி மழைக்கட் பேதை செவிமுதல் குளிர்க்கு மாறு
வந்தனன் கண்ண னென்று மறையவன் வழங்கி னுனல். (உஎ)

3426. வெயில்பொர வாட்ட முற்ற மென்றளிர்ப் பசிய வல்லி
புயல்பொழி துவலை மாந்திப் பொங்கெழில் படைக்கு மாபோல்

---

முருகு - தேன். முளரியம்போது முகத்துக்கு உவமை. மகளிர்க்குக்கண் இடனுடுதல் நற்சகுனம் என்பர்.

3423. துளியையுடைய கரிய கொண்டல்; மேகம். அளிப்பவன் - காப்பாற்றுபவன்; கண்ணபிரான். அளிப்பவனுல் விடுக்கப்பட்டு. அளிக் குலம் - வண்டின் கூட்டம். தளிக்கும் - துளிக்கின்ற. ஆயிரம் தோடு; தோடு - இதழ். தாமரைத் தெரியல் மார்பன் - தாமரை மாலையை மார்பி லுடைய அந்தணன். களிக்கயல் - களிப்பை யுடைய கயல்மீன். உண் கண் - மையுண்டகண். கன்னி - உருக்குமிணி.

3424 அந்தணுளனுடைய முகம் மதியைப் போன்றதேனும் மடந்தை யது முகமாகிய முளரிக்குப் பருதியாயிற்று; என்றது உருக்குமிணி மகிழும் படி அந்தணன் மூகப்பொலிவுடன் தோன்றினுன் என்பதை உணர்த்தியது.

3425. வாட்படையும் நீல மலரும் கண்களுக்கு உவமை. பேதை - உருக்குமிணியினுடைய. செவிமுதல் - காதின்அடி. வந்தனன் கண்ணன் என்று; "நீண்டு வந்தெனத் தேனின் மிழற்றினுள்" (சீவக. 1509); "கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்" (கம்ப. திருவடி. 58.) என்றாற்போல வந்தது. வழங்கினுன் - கூறினுன்.

3426. வல்லி - கொடி. புயல் - மேகம். துவலை - துளி. அடி, 1-2: "நீரற்ற புலமேபோற் புல்லென்றுள் வைகறை, கார்பெற்ற புலமே போற் கவின் பெறும்" (கலி. 38: 11 - 2); "கார்வந்து தொடத்தொட வுய்ந்தின

மயிலெருத் துறழு மேனி மாயவன் வாவு கேளாக்
குயிலென மிழற்று மாது கொழுங்கவி னெய்தி னாளே. (உஅ)

3427. புரிவளை யலறி முத்தம் பொழிபுனற் றடங்க ளெல்லாம்
விரைகமழ் கமலம் பூத்த விதர்ப்பநா டணைதல் செய்தான்
குரைதிரைப் பரவை முந்நீர்க் குவலயம் வந்து தோன்றும்
ஒருபெருங் கமலம் பூத்த வுந்தியந் தடத்து நம்மான். (உகூ)

3428. பொழிமத வருவி மாலைப் பொருப்பின்வெண் கோடு கொண்ட
எழுவுறழ் தோளி னானம் மின்னகைக் கனிவாய் மாதின்
விழவினுக் கடைந்தா னென்று வீங்குநீர் விதர்ப்பங் காக்கும்
கழைசுளி களிநல் யானைக் காவல னெதிர்கொண் டானால்.

3429 ஆயிரம் பகுவாய் நாகத் தறிதுயி லேற்குஞ் செய்ய
ஆயிரங் கண்ணி னானவ் வடைதலு மிடைந்து பாண்வண்
டாயிர மலம்பு தாரிவ் வண்ணலேர் காணக் கண்கள்
ஆயிரம் பெற்றி லேமென் றகங்கனிந் துருகி நிற்பார். (ஙக)

---

குவ், காடொத்த னென்யானிவர் கைப்படவே" (தக்க. 200); "காரிற் குளிர்ந்து குழைத்த செழுங் கானம்பூத்த தெனக்கவினி" (வி - பா. 12 - ஆம் போர். 82.) மயில் எருத்து உறழுமேனி மாயவன் - மயிலின் கழுத்தை ஒத்த கரியமேனியை யுடைய கண்ணபிரான்: 2915; "மயிலெருத்து வண்ணத்து மாயோய்" (கலித். 108 : 38.) மாது - உருக்குமிணி. கவின் - அழகு.

3427. புரிவளை - முறுக்குடைய சங்கு. தடம் - குளம். விரை - வாசனை. விதர்ப்ப நாட்டை அணைதல் செய்தான். அணைதல் - சேர்தல். குரை - ஒலி. குவலயம் - பூமி. கமலம் - பிரமன் தோன்றற்குரிய தாமரை. நம்மான் - நமக்குச் சிறந்தவன்; கண்ணபிரான்; எழுவாய்.

3428. மத அருவியாகிய மாலையையுடைய பொருப்பு: யானை; என்றது குவலயாபீடத்தை. கோடு - தந்தம். எழுவுறழ் தோளினன் - கணைய மரத்தை ஒத்த தோளையுடைய கண்ணபிரான். மாதின் விழவினுக்கு - உருக்குமிணியின் கலியாணத்திற்கு. வீங்கு - பெருமைகொண்ட; பொங்குதலுமாம். கழைசுளி - குத்துக்கோலைக் கோபிக்கின்ற. காவலன் - விதர்ப்பராசன்.

3429. பகுவாய் - பிளக்கப்பட்ட வாய். அறிதுயில் எற்கும் - யோகத்துயில் செய்கின்ற. ஆயிரம் கண்ணினன் - கண்ணபிரான். மிடைந்து - நெருங்கி. பாண்வண்டு ஆயிரம் - பாடுதலையுடைய வண்டுகள் ஆயிரம். அலம்பும் - ஒலிக்கின்ற. அண்ணல் ஏர் - கண்ணபிரானுடைய அழகை. கனிந்து - குழைந்து.

3430. வலம்புரி பொறித்த செங்கை மரைமல ரதனி லொண்கேழ்
வலம்புரி திகழத் தாங்கி வருவது மிகையென் றேயோ
வலம்புரி தாங்கல் செய்யான் வந்தன னிலவு காலும்
வலம்புரித் தடக்கை யானே வாழியிவ் வள்ள லென்பார். (௩௨)

3431. ஆழியம் பொருப்பு வேலி யவனியோ ரேழு மொற்றை
ஆழியே காக்குந் தீவா யாழிமற் றென்கொ லென்றோ
ஆழிகைத் தாங்கல் செய்யா னடைந்தன னாழி யானே
ஆழியந் தேரிற் றோன்று மரசிளங் குமா னென்பார். (௩௩)

3432. நாமெலாம் பண்டு செய்த நற்றவ முடையே மாயின்
தாமரை மலரி னீங்கித் தண்பணை விதர்ப்பங் காக்கும்
கோமகன் மனையிற் றோன்றுங் கொழுங்கயற் கருங்கட் செவ்வாய்க்
காமரு வனப்பி னாளைக் கவருமிக் காளை யென்பார். (௩௪)

3433. எழுதருஞ் செவ்வி வாய்ந்த வீங்கிவன் றனக்கே யந்தண்
முழுமதி புரையு மூரான் முகத்தவ ளுரிய ளென்பார்
மழைமதர் நெடுங்கட் செவ்வாய் மாணிழை யவட்கே மற்றித்
தழைவிரி துளவத் தண்பூந் தாரவ னுரிய னென்பார். (௩௫)

---

3430. வலம்புரி பொறித்த - சங்கரேகை பொறிக்கப்பட்ட. கையாகிய மரைமலரதனில். கேழ் - ஒளி. வலம்புரி - சங்கவாத்தியம். என்றேயோ - என்றோ. வலம்புரி - சங்கம். இவ்வள்ளல் வலம்புரித் தடக்கையானே; வாழி என்பார்.

3431. ஆழியம் பொருப்பு வேலி அவனி - சக்கரவாளகிரியாகிய வேலியை யுடைய பூமி. ஒற்றை ஆழி - ஆஜ்ஞா சக்கரம். காக்கும் - காத்திடும். தீவாய் ஆழி - தீயை வாயிலேயுடைய சக்கரம். என்கொல் - எதற்கு? ஆழியைக் கையில் தாங்கல் செய்யானாய். ஆழியான் - திருமால். ஆழியந் தேர் - சக்கரத்தை யுடைய தேர். அரசிளங் குமரன் - கண்ணபிரான்.

3432. பண்டு - முன்பு. பணை - வயல். விதர்ப்ப நாட்டைக் காக்கும் கோமகன்; அரசன். காமரு - விருப்பம் மருவிய. வனப்பினாள் - உருக்குமிணி. காளை - கண்ணபிரான். இக்காளை வனப்பினாளைக் கவரும் என்பார். தாமரைமலரின் நீங்கிக் கோமகள் மனையிற்றோன்றும் வனப்பினாள்; 3438.

3433. எழுதருஞ்செவ்வி - எழுதுதற்கரிய அழகு. இவன்றனக்கே - கண்ணபிரானுக்கே. மதிபுரையும் முகத்தவள், மூரலுடைய முகத்தவள். உருக்குமிணி. மூரல் - புன்முறுவல். மழை - குளிர்ச்சி. மாண் இழைய வட்கே - மாட்சி பொருந்திய ஆபரணமணிந்த உருக்குமிணிக்கு. தாரவன் - கண்ணபிரான்.

3434. கருங்கட லன்ன காதல் கைம்மிக வளைத்து நீண்ட
கருங்கட லன்ன கண்ணார் கருந்துழாய்ப் படலை மாலைக்
கருங்கடல் வண்ணன் றன்னைக் காண்டோறுங் கதிர்கள் பொங்கு
கருங்கடற் படுவெண் சங்கங் கையிகந் தொழிய நிற்பார். (௩௬)

3435. நுணங்குமென் மருங்கு நோவ நுண்ணெழில் வாய்ந்த மாமைச்
சுணங்கணிந் தேந்து கொங்கைத் தோகையர் தூசு வாரி
மணங்கமழ் கடம்பி னேறு மாயனைக் காணுந் தோறும்
அணங்கா வுரியி னன்ன வந்துகி னெகிழ நிற்பார். (௩௭)

3436. அலங்குவெண் மதியை வென்ற வண்ணல்வான் முகத்தை மானும்
மலர்ந்தசெங் கமல மென்று மதிப்பதோர் மதிகொ லென்பார்
பொலங்கிரி மருள வீங்கு புயத்தொடு பொருவு மென்ன
இலங்கொளி நீலக் குன்ற மெத்தவம் புரிந்த தென்பார். (௩அ)

---

3434. கைம்மிக - அதிகரிக்க. கண்ணார் - மகளிர். கருங்கடல் வண்ணன்றன்னை - கண்ணபிரானை. காண்டொறும் - பார்க்குந்தோறும். படுதல் - தோன்றுதல். சங்கம் - சங்கத்தாலாகிய வளையலை; ஆகுபெயர். கையிகந்து - கையை விட்டு.

3435. நுணங்கு - நுண்மையையுடைய. மருங்கு - இடை. மாமையும் சுணங்கும் அணிந்து; 3023; "மாவின், தளிரே ரன்னமேனித் தளிர்ப் புறத், திர்க்கி னரும்பிய திதலையர்" (மதுரைக் 706 - 8.) என்பதும், "மாயவண் மேனிபோற் றளிரீன வம்மேனித், தாய சுணங்குபோற் றளிர் மிசைத் தாதுக" (கலி 35 : 3 - 4); என்பதும் "பூத்ததைந்த தாழ்சினைத் தளிரன்ன வெழின்மேனித தகைவாட" (கலி. 40 : 19 - 20.) என்ற விடத்து, 'பூத்தாழ்ந்த தளிரெனவே சுணங்கும் மாமைநிறமும் கூறிற்று'. என்றெழுதிய நச்சினார்க்கினியருரையும் ஈண்டறியற்பாலன. தோகையர் - மகளிர். தூசு வாரி கடம்பில் ஏறிய மாயனை; என்றது கோவியர் துகிலைக் கண்ணபிரான் முன்பு கவர்ந்த நிகழ்ச்சியைக் கூறினபடி. தூசு - ஆடை. அணங்கு அரவு - வருத்துகின்ற பாம்பு. அரவுரியின் அன்ன அம்துகில் - பாம்பின் சட்டைபோன்ற அழகிய ஆடை. "அரவுரி யன்ன வறுவை" (பொருந. 83, குறிப்புரை); "பாப்புரி யன்னமீக்கொ டானை" (பெருங். 1, 43 : 244.)

3436. அலங்கு - விளங்குகின்ற. அண்ணல் - கண்ணபிரானுடைய. கமலம் மானும் என்று; மானும் - ஒக்கும். மதிப்பது - நினைப்பது. மதி கொல் - அறிவோ? மருள - மயங்கும்படி. புயம் - தோள். பொருவும் என்ன - ஒப்பாகும் என்று கூற.

3437. செஞ்சுடர் விரிக்கு மின்னுத் திரண்டெழு தோற்றம் போல
மஞ்சிவர் குடுமி மாட மறுகுதோ றீண்டு மாதர்
நெஞ்சக முருகா நிற்ப நித்தில முறுவற் செவ்வாய்
அஞ்சன வண்ண ஞங்கோ ரகன்மணிக் கோயில் புக்கான். (ங கூ)

3438. உரைப்பரும் பொலிவிற் றாகி
யோசனை நாறு தெய்வ
மருக்கமழ் மாலைக் காங்கோர்
மலர்மணங் கொளுத்து மாபோல்
அரக்கிதழ்க் கமல நீங்கி
யாசரிற் பிறந்த மன்றற்
புரிக்குழற் பவளச் செவ்வாய்ப்
பூவையைப் புனைதல் செய்தார். (சo)

3439. முள்ளரை முளரி யன்ன
முழுமைகை முகத்தி னுடன்
வள்ளைவார் காதிற் றாழ்ந்த
மணிக்குழை குலாய தோற்றம்

---

3437. மின்னு - மின்னல். மஞ்சு - மேகம். மாடத்தையுடைய மறுகு; மறுகு - வீதி. மாதருக்கு மின்னல் உவமை. அஞ்சன வண்ணன் - கண்ண பிரான். கோயில் - அரண்மனை.

3438. பொலிவிற்றாகி - அழகுடையதாய். நூறு யோசனை தெய்வ மருக் கமழும் மாலைக்கு; தெய்வமரு - தெய்வத்தன்மை பொருந்திய வாசனை. மாலை - பாரிசாதம். மலர்மணம் - பூவின் மணத்தை. கொளுத்துமா போல் - ஊட்டினாற் போல. அரக்கு - சிவப்பு. அரசர் இல் - விதர்ப்பராசனுடைய வீட்டிடத்தே. பூவை - உருக்குமிணி. கமலம் நீங்கி அரசர் இவ்விடத்துப் பிறந்த பூவை; என்றது இலக்குமியின் அம்சமாகிய உருக்குமிணியை; 3432. உருக்குமிணிக்குத் தெய்வ மருக்கமழ் மாலையும், அவட்கணிந்த புனைவிற்கு ஓர் மலர்மணமும் உவமை. புனைதல் - அலங்கரித்தல்.

3439. முள்ளரை முளரி - முள்ளை அரையிலேயுடைய தாமரை. முகத்தினுள் தன் - உருக்குமிணியினுடைய. வள்ளைவார் காது - வள்ளைக்கொடி போல் நீண்ட காது. மணிக்குழை-நீல மணியாலாகிய குண்டலம். குலாய் - விளங்கிய. கிள்ளையிற் சிறந்த சுரும்பு; பாராள் கேள்வனிடம் தூது போக்குஞ் சுரும்பு; பிள்ளையஞ் சுரும்பு எனப் பிரிக்க; கிள்ளை - கிளி. தூது போதும்

கிள்ளையிற் சிறந்த பாராள்
கேள்வன்மேற் றாது போக்கும்
பிள்ளையஞ் சுரும்பு வந்து
பேசுவ போன்மற் றம்மா. (௩௯)

3440. முருகுண மழலை வண்டு
மூசுபூங் கூந்தற் பேதை
அரிபரந் தகன்ற வாட்க
ணஞ்சன மணிந்த தோற்றம்
திரைபடிந் தெழுந்த காரிற்
றிகழ்பவ னுருவக் காந்தி
பருகின தெவிட்டிக் காலும்
பான்மையே போலு மாலோ. (௪௰)

3441. ஓடிக்கவஞ் சுடர்கால் பச்சை
யொண்மணி யாரந் தாழ்ந்து
வடிக்கருங் கண்ணி கொம்மை
வரிமுலை திகழுந் தோற்றம்
கடற்புவி பொதிந்த செம்பொற்
கனைகழற் காளை காமர்
அடைத்துழா யலங்கன் மாலை
யணிந்தது போலு மன்றே. (௪௧)

---

குரிய தன்மையால் வண்டுக்கு ஒப்புக் கூறினர். பாராள் கேள்வன்: கண்ண பிரான். பிள்ளை - இளமை. சுரும்பு - வண்டு. மணிக்குழைக்கு வண்டு உவமை.

3440. முருகு உண - தேனை உண்ணுதற்கு. மழலை - மழலைச்சொல் போலும் ஒலி. மூசுதல் - மொய்த்தல். பேதை - உருக்குமிணி. அரி - செவ்வரி. கண்ணில் அஞ்சனம் அணிந்த தோற்றம்; அஞ்சனம் - மை. காரிற் றிகழ்பவன் - கண்ணபிரானுடைய. காந்தி - கருநிறமாகிய ஒளியை. பருகினவற்றைத் தெவிட்டிக்காலும் பான்மையே போலும். தெவிட்டுதல் - நிரம்ப உண்ட பின் தோன்றும் வெறுப்பு. காலும் - கக்குகின்ற.

3441. சுடர் - ஒளி. வடி - மாவடுப் போன்ற. கண்ணி - உருக்குமிணியின். கொம்மை - பெருமையையுடைய. ஆரம் முலையில் திகழ்கின்ற தோற்றம். பொதிந்த - மூடின. காளை - கண்ணபிரானுடைய. காமர் - அழகிய. அடை - இலை. அலங்கல் - அசைகின்ற. பச்சைமணி யாரத்திற்குத் துழாய்மாலை உவமை.

3442. கழைக்கரும் பனுக்கு மின்சொற்
கன்னிமென் மருங்கிற் கொம்பு
குழைத்தெழு கொங்கை முன்றிற்
குங்கும மெழுகுந் தோற்றம்
அழைத்தமால் களிறு காத்தோ
னம்பகட் டலங்கன் மார்வம்
தழைத்தசெம் மணியின் காந்தி
தவழ்ந்தது போலு மன்னோ. (சச)

3443. புரிநரம் பிரங்கு சொல்லாள்
புணர்முலைக் களிநல் யானைச்
சொரிகதிர்ப் பனிவெண் முத்தஞ்
சுடர்தரச் சூடுந் தோற்றம்
பெருமத வரைநீள் கோடு
பிடுங்கினான் குவவுத் திண்டோள்
வரையொடு மலையத் தும்பை
மலைந்தன போலு மாதோ. (சரு)

3444. மலர்தலை யுலகங் காத்தோன்
மலரடி கங்கை சேர்ந்த
தலகெலா முயிர்த்தாள் பொற்று
ளுறுதுநா மென்று நாடி

---

3442. கழைக்கரும்பு அனுக்கும் - கோற்கரும்பின் இனிமையைக் கெடுக்கின்ற. கழை - கோல். "தீங்கட் கரும்பின் கழைவாங்கு மூற்றுரின்" (கலி. 40 : 28); "கழைமூற்று தீந்தேன் கரும்பார் வயல்" (சீவக. 1(64.) கன்னி - உருக்குமிணியின். மருங்கு - இடை. கொம்பு குழைத்து - கொம்பை வருத்தி. முன்றில் - முன் இடம். மருங்கில் எழுகின்ற கொங்கையின் முன்றிலில். களிறுகாத்தோன் - கண்ணபிரானுடைய. பகடு - பெருமை. மார்வத்துச் செம்மணியின் காந்தி.

3443. புரி - முறுக்கு. நரம்பு இரங்கு சொல்லாள் - வீணையின் நரம்பைப்போல் ஒலிக்கின்ற சொல்லையுடைய உருக்குமிணி. சொல்லாளது முலையாகிய யானையில். பனி - குளிர்ச்சி. முத்தம் - முத்தமாலை. மதவரை - குவலயாபீட மென்னும் யானையின். பிடுங்கினான் - கண்ணபிரானுடைய. குவவு - திரட்சி. தோள்வரை - தோளாகிய மலை. மலைய - பொருதற்கு. தும்பை மாலை சூடிப் போர்க் கெழுதல் (மரபு : 3338.)

3444. உலகங் காத்தோன் - கண்ணபிரான். கங்கை உலகங்காத்தோனுடைய மலரடியைச் சேர்ந்தது; உலகெலாம் உயிர்த்தாள் - உருக்குமிணியி

அலைதவழ் யமுனை செய்ய
வடிமல ரடைந்த தேய்க்கும்
சிலைநுதல் புனையு நீலச்
சில்லரிச் சிலம்பு மன்னோ. (௪௪)

3445. மருப்பிளந் திங்க ளன்ன
வாண்மருப் பொசித்த மைக்கார்
விருப்பிளந் தோகை வெவ்வாய்
வேற்படை வெள்ளஞ் சூழ
அருப்பிள முலையா ரீண்ட
வாடகப் பசும்பொற் கோட்டுப்
பொருப்பிளங் கன்னி நோன்பு
போற்றுவான் போயி னாளே. (௪௫)

3446. மூதுமறை முதலி செம்பொன்
மொய்வரை மார்வ மேவி
விதுபுனை சடிலன் றாய
விரிஞ்சனை தியரைப் பூத்துப்

னுடைய; 3447. நாம் உறுதும்; உறுதும் - அடைவோம். நாடி - சென்று. முதலிரண்டடிகளும் யமுனையின் உட்கோள். அடிமலர் - உருக்குமிணியி னுடைய பாதமாகிய மலரை. எய்க்கும் - ஒக்கும். சிலை நுதல் - உருக்கு மிணி. சில்அரி - சிலவாகிய பரல்களையுடைய நீலச்சிலம்புக்கு யமுனை உவமை.

3445. மருப்பு - பிறைச் சந்திரனுடைய இரு கோடு. மருப்பு - குவ லயா பீடத்தின் தந்தத்தை. கார்விருப்பு இளந்தோகை - கண்ணபிரானை விரும்பிய இளைய மயில் போலும் உருக்குமிணி. விரும்பிளந்தோகை என் பது செய்யுள் நோக்கி வலித்தது. அருப்பு - அரும்பு; முலைக்குவமை. ஈண்ட - நெருங்க. ஆடகம் என்ற பசிய பொன். கோடு - உச்சி. பொருப் பிளங் கன்னி - பார்வதி; 3410.

(பி - ம்.) 4. போற்றுவான் போயாண் மன்னோ.

3446. மறைமுதலி - கண்ணபிரானுடைய. மேவி - கலந்து. விது - சந்திரன். சடிலன் - சிவபெருமான். விரிஞ்சன் - பிரமன். பூத்து - உண்டாக்கி. நம் அன்னை யென்றது உருக்குமிணியை. மது - தேன்.

பொதுமலி யருளி னேம்பிப்
புரக்குநம் மன்னை தண்பூ
மதுவரு கூந்தற் கன்னி
வணக்கமேற் கொளல்வி யப்பே. (சஅ)

3447. கன்னிநன் னகரி னெய்திக்
கள்ளயா வுயிர்க்கு மந்தண்
கன்னியந் துளவு சூடுங்
கண்ணனே கணவ னாகக்
கன்னிநீ யருள்செய் கென்னுக்
கண்ணுதல் வேட்குங் கொங்கைக்
கன்னியை யுலக மீன்ற
கன்னியாங் கேத்தி னாளால். (சகூ)

3448. சில்லரிச் சிலம்பு பாடக்
கிண்கிணி சிலம்பக் காஞ்சி
ஒல்லென வொலிப்பச் செம்பொ
னெழுகுமா லிமய மீன்ற
வல்லியை வலங்கொண் டேகி
மடநடை யன்ன மன்னாள்
எல்லிலங் காழித் திண்டே
ரேறுவா னெண்ணி நின்றாள். (ருo)

---

கன்னி வணக்கம் - பார்வதியை வணங்குதலை. அன்னை மேற் கொள்ளல் வியப்பு.

3447. கன்னி நன்னகரின் - அழிக்க முடியாத குண்டினபுர நகரத்தி னின்றும். கள் அயா வுயிர்க்கும் - தேனைக் கொப்புளிக்கின்ற. கன்னியந் துளவு - இளைய அழகிய துளவ மாலையை. கணவனாகும்படி. கன்னி; பார் வதிக்கு விளி. என்னு - என்று கூறி. கண்ணுதல் வேட்கும் கன்னியை; பார்வதியை. உலக மீன்ற கன்னி - உருக்குமிணி; எழுவாய்.

3448. சில்லரிச் சிலம்பு; 3444. சிலம்பும் கிண்கிணியும்; "இன் னரிச் சிலம்போ டேங்கிக் கிண்கிணி யிகலியார்ப்ப" "சிலம்பு செம்பொற் கிண்கிணி மிழற்ற" (சீவக. 1985. 2068.) காஞ்சி - மேகலை. ஒல்லென; ஒலிக்குறிப்பு. மால் - பெரிய. இமயமீன்ற வல்லியை; பார்வதியை. அன்னமன்னாள் - உருக்குமிணி. எல் இலங்கு - ஒளி விளங்குகின்ற. ஏறு வான் - ஏறுவதற்கு.

3449. நறையகி லாவி யுண்டு
நாந்தமு மலரு நாறி
உறைமுகி லாவி யுண்ணு
மொலிகருங் கூந்தற் கற்றை
செறிதொடி யிடக்கை யேந்திச்
செம்மலெங் கிறுத்தா னென்னுக்
கறையுறு வடிவே லன்ன
கண்மலர் பாப்பி னுளால். (ருக)

3450 சூழ்படை கிழியத் தெய்வச்
சுடர்மணிப் பொலந்தேர் தூண்டி
ஆழ்கட லவனி யாளு
மாசருங் காண வாங்குப்
போழ்படு திங்க ளன்ன
புதுநிலாக் கற்றை தூற்றும்
காழிள முலையி னுளைக்
கவர்ந்தனன் கமலக் கண்ணன். (ருஉ)

3451. வெண்டலைப் புணரி யாடும்
விரிகடல் கலக்கிக் கொண்ட
பண்டரு கிளவி யாளைப்
படைக்கடல் கலக்கிக் கொண்டு

---

3449. நறை - நறைக்கொடி; "நறைக்கொடி கொண்டு" (ஐங் குறு. 276.); "நறையு நானமும்" (சீவக. 131.) அகிலாவி - அகிற்புகை. கூந்தலுக்குப் புகை யூட்டல்; 3418. நாந்தம் - ஒருவகைப்பூ. உறை முகில் - துளியைக் கொண்ட கருமேகம். ஒலி கருங் கூந்தல் - தழைத்த கரிய கூந்தல். நாந்தமும் மலரும் நாறிய கூந்தல்; 2929, குறிப்புரை. கற்றை - தொகுதி. கூந்தற் கற்றையைச் செறி தொடி இடக்கையால் ஏந்தி. செம்மல் - கண்ணபிரான். எங்கு இறுத்தான் - எவ்விடத்தே வந்து தங்கியுள்ளான். கறை - விடம்.

3450. கிழிய - பிளவுபட. தூண்டி - செலுத்தி. போழ்படு திங்கள் - பிளவுபட்ட சந்திரன்; இளம்பிறை. காழ் - முத்துமாலை. முத்து மாலைக்கு இளம்பிறை உவமை; 3420. முலையினுளை - உருக்குமிணியை.

2451. வெண்டலை புணரி ஆடும் விரிகடல் - வெண்மையான தலை பொருந்திய அலை அலைகின்ற விரிந்தகடல்; "வெண்டலைப் புணரிக் குடகடல்", "வெண்டலைப் புணரியின் மான்குளம் பலேப்ப" (புறநா. 2: 10, 31: 14.) பண்தரு கிளவியாளை - இராகத்தை ஒத்த சொற்களை

கொண்டலங் கொழுந்து மின்னுக்
கொடிதலை மணந்த தொத்தான்
வண்டுண மலர்ந்த தெய்வ
மாகதத் துளவத் தாரான். (ருங)

3452. ஆலமுற் றிருந்த வெள்வே
லடற்சரா சந்த னுதி
மாலைவெண் கவிகை வேந்தர்
மறலிவா ளரவிற் சீறிக்
கோலவெந் துணி யாத்துக்
கொடுமரங் குழைய வாங்கிக்
காலியற் புரவித் திண்டேர்
கதுமெனக் கடாஅய்ச்சூழ் வுற்றார். (ருச)

கலித்துறை.

3453. மாற்றுத வென்றி மறமன்னர் மலங்கி வீற்று
வீற்றாக வோட விறற்பால்வளை மேனி வள்ளல்
கூற்றுட வாடுங் கொடித்தேர்கடி தோட்டி யாங்கே
எற்றா னிடிக்கு மிடிபோலவின் னாணை றிந்தான். (ருரு)

3454. மாமன்ன தோன்றன் மறலாவரி வில்வ ணக்குஞ்
சராசந்த னோடு தனியேறெனச் சென்று தாக்க

---

யுடைய உருக்குமிணியை; இலக்குமியின் அமிசமாதலின் கடல் கலக்கிக் கொள்ளப்பட்டவள் என்றார். கொண்டலங்கொழுந்து கண்ணபிரானுக்கு உவமை. மின்னுக்கொடி உருக்குமிணிக்கு உவமை. தலை மணத்தல் - கலத்தல். மரகதம் - பச்சை. துளவத்தாரான் - கண்ணபிரான்.

3452. ஆலம் - விடம். மாலையையுடைய கவிகை. மறலி - மாறுபட்டு. அரவிற் சீறி - பாம்பைப்போல் கோபித்து; "ஐவா யரவி னவிராரழல் போன்று சீறி" (சீவக. 2345.) கோலம் - அழகு. துணியாத்து - அம்பறாத் துணிகட்டி. கொடுமரம் - வில். குழையவாங்கி - வளைய வளைத்து. கால் இயல் புரவி - காற்றைப்போல் இயங்குந் தன்மையுடைய குதிரை. கதுமென - விரைவாக. கடாஅய் - செலுத்தி.

3453. மலங்கி - கலங்கி. வீற்று வீற்றாக - வேறு வேறாக. விறல் - வீரம், வெற்றி. பால் வளை மேனி வள்ளல் - பலராமன்; எழுவாய். கூற்று - யமன். எற்றான் - எதிர்த்தான். வில்நாண் - வில்லின் நாண் கயிற்றை. எறிந்தான் - தெறித்தான்.

3454. மாமன்ன தோன்றல் - மரா மரம் போன்ற பலராமன்; "மரா மரமருளு மேனி வள்ளலோடு" (2835.) மறலா - கோபித்து. வணக்கும் -

அராவின் றெழுந்தோ னரவத்தடந் தேரி னந்தண்
குராமன்னு நீழற் குழற்கொம்பினைக் கொண்டெ ழுந்தான். (௫௬)

3455. வாடாத வென்றி கெழுவால்வளை வண்ணன் வல்வில்
கோடாத முன்னங் குலைவுற்றுவிற் கோட்டல் செய்யான்
ஆடாத வெம்போ ரினியாடுது மென்றெ திர்ந்த்
ஓடாத தானை மகதர்க்கர சோடி னான். (௫௭)

3456. கார்வாய்க் கிழிக்குங் கதிர்மின்னனை யாளை வந்து
போர்வாய்த் திகிரிப் புயல்வவ்வின னென்று வாடும்
தார்வாய்த் தினிதோட் சிசுபாலனைச் சென்று சார்ந்து
சீர்வாய் மகதத் திருநாட்டிறை தேற்ற லுற்றான். (௫௮)

3457. மல்லுங் களிறுங் கடந்தானொடு மாறு டன்று
செல்லுஞ் செருத்தோ றுடைந்தேனெதிர் சென்று தாக்கி
வெல்லுந் திறனு மொருகால்விளை வுற்ற தன்றே
சொல்லுந் திறனென் கலங்கேலெனச் சொற்று நீத்தான். (௫௯)

3458. முளைநாண் மதியிற் றிகழ்வாணுதன் முல்லை மூரல்
இளையாளை மாய னெறுழாற்கவர்ந் தேக நோக்கி

---

விளக்கின்ற. தனியேறு என - ஒப்பற்ற இடபம் போல. தாக்க - தாக்குதலால். அராவின் றெழுந்தோன் - காளியன் மீது நடனமாடி நின்று எழுந்தோனாகிய கண்ணபிரான்; ஆதிசேடனாகிய படுக்கையினின்றெழுந்த கண்ணபிரான் எனலுமாம். அரவம் - ஒலியையுடைய. குரா - குராவமரம். நீழலில். குழற் கொம்பினை - உருக்குமிணியை.

3455. வாடாத - கெடாத. வால்வளை வண்ணன் - பலராமனுடைய. கோடாத முன்னம் - வளையாததற்குமுன். குலைவுற்று - சராசந்தன் கெடுதலுற்று; வில்லைக்கோட்டல் செய்யானாய்; கோட்டல் - வளைத்தல். ஓடாத தானை; "ஓடா வயப்படை" (3403, குறிப்புரை.) மகதர்க்கு அரசு - சராசந்தன். மகதர்க்கரசு, குலைவுற்றுக் கோட்டல் செய்யானாய் ஓடினான்.

3456. கார் - மேகம். மின்னனையாளை - உருக்குமிணியை. திகிரிப் புயல் - கண்ணபிரான். வாடும் - வருந்துகின்ற. தார் - மாலை. சீர் - சிறப்பு. மகதத் திருநாட்டிறை - சராசந்தன்.

3457. மல்லும் - சாணூரன், முட்டிகன் என்ற மல்லர்களையும். களிறும் - குவலயாபீடம் என்னும் யானையையும். கடந்தான் - வென்றவனாகிய கண்ணபிரான். உடன்று - கோபித்து. செருத்தோறு உடைந்தேன் - போர்தோறும் தோற்றேன். ஒருகால் - ஒருமுறை. கலங்கேல் - கலங்காதே. சொற்று - மொழிந்து.

3458. முளை நாண்மதி - தோன்றிய நாட்பிறை; 740. நுதலையும் மூரலையு முடைய இளையாளை - உருக்குமிணியை. மாயன் - கண்ணபிரான். எறுழால் - வன்மையால். விளையாத - என்றும் உண்டாகாத. விளையாத

விளையாத சீற்றம் விளைவுற்றன னீள்வி தர்ப்ப
வளநாடன் மைந்தன் வடவானலம் போலெ ழுந்தான். (சூ0)

3459. தெரிவுற்ற முல்லைக் குழலான் றனைச் செற்றுத் தீந்தேன்
விரையுற்ற முல்லைக் குழனங்கையை மீட்கி லேனேல்
முருகுற்ற பைந்தார் முடிமன்னவர் முன்ன மீண்டு
வரையுற்ற மாட மணிமாநகர் வார லேனல். (சூக)

3460. வாட்டானை யெல்லா மெழுகென் றுவில் வாங்கி மான்றேர்
ஒட்டா வழல்வா யுமிழ்வாளி தெரிந்து செல்லா
நாட்டா மரைமே லுறைகின்றவந் நங்கை முன்னோன்
தாட்டா மரைக்கட் கரியானொடு தாக்கி நின்றான். (சூஉ)

3461. பூத்துந்தி யந்தா மரைவாய்ப்பொழி லேழொ டேழும்
காத்தெங்கு நின்ற கருணைக்கடன் மேற்க னன்று
கோத்தண்ட முற்றுங் குலுங்கச்சிலை நாணெ றிந்து
தீத்தும்மு வாளி சிலசிந்தினன் றீயொ டொப்பான். (சூஙு)

---

சீற்றம் விளைவித்தனன்; "விளையாத சீற்றம் விளைவித்து வெறுத்தல் செய் தான்" (740.) விதர்ப்ப நாடனது மைந்தன் விளைவுற்றனன்; மைந்தன் - உருக்குமி. வடவானலம் - வடவைத்தீ.

3459. தெரிவுற்ற - ஆராய்தல் செய்த. முல்லைக் குழலான் - கண்ண பிரான்; "முல்லைக் குழலிசை குறித்தோ னென்பார்" (3219.) செற்று - அழித்து. தேனும் விரையும் உற்ற முல்லை. முல்லைக்குழல் நங்கை: உருக்கு மிணி; முல்லை கற்பிற்குச் சூடியது; "முல்லை முடித்தலர் கூந்தற் கன்னி" (3413.) முருகு - தேன், வாசனை. மீண்டு - திரும்பி.

3460. வாளையுடைய தானை; தானை - சேனை. எழுக என்று - போர்க்கு எழுக என்று கூறி. வில்வாங்கி - வில்லை வளைத்து. ஒட்டா - ஓட்டி. அழலை வாயினின்றும் உமிழ்கின்ற வாளி; வாளி - அம்பை. தெரிந்து- ஆராய்ந்து. செல்லா - சென்று. நாள்தாமரை - விடியற்காலத்து அலர்ந்த தாமரை. நங்கைமுன்னோன் - உருக்குமிணியின் முன்னோனாகிய உருக்குமி. கரியானொடு - கண்ணபிரானோடு.

(பி - ம்) 3. உறைகின்ற வணங்கை.

3461. உந்தித் தாமரைவாய் ஏழொடேழு பொழிலையும் பூத்துக் காத்து; பொழில் - உலகம். கருணைக்கடல் மேல் - கண்ணபிரான்மீது. கனன்று - கோபித்து. குலுங்க - குலுங்கும்படி. சிலையின் நாணை எறிந்து; எறிந்து - தெறித்து. தீத்தும்மு - தீயைக் கக்குகின்ற; "தீத்தும்மு வேலான்" (சீவக. 2348.) தீயொடொப்பான் - உருக்குமி.

3462. வாரும் பசுந்தேன் படிந்தஞ்சிறை வண்டு பொற்ரு
தாருஞ் செழுந்தார் புரளம்பகட் டார மார்பன்
தேரும் பரியுஞ் சிலேயோடு துணிந்து சிந்தக்
காருங் கடலும் புரைவான்சில கால்கு ழைத்தான். (கூசு)

3463. துஞ்சா மணிப்பூண் டுயல்கொங்கை சுமந்தொ சிந்த
அஞ்சாய் மருங்கி னமுதன்னவன் முன்னு தித்தோன்
செஞ்சோரி கான்று திகழ்கின்றவொள் வாள்வி திர்த்து
நஞ்சூறு நாகத் துயிறீர்ந்தவன் முன்ன டந்தான். (கூரு)

3464. வில்லற்று வாளோ டெதிர்ந்தோன்றனை வீட்ட மாயன்
எல்லிற் கதிர்கான் றெரிவெஞ்சின வெஃக மேந்தக்
கொல்லற்க வென்று கொடிமின்னின் வயங்கு கோதை
மல்லற் கமஞ்சூன் மழைவண்ணனே வேண்டி னாளால். (கூசு)

3465. ஊனாறு வெள்வேல் விறலோனேயொர் தூசி னேங்கி
வானாறு நக்குங் கொடித்தேர்மிசை மன்ன யாத்துத்

---

3462. வாரும் - ஒழுகுகின்ற. அஞ்சிறை - அகத்தே சிறகையுடைய. பொற்ருதை ஆரும் தார்; ஆரும் - உண்ணுகின்ற. புரளுகின்ற மார்பன்; ஆரத்தையுடைய மார்பன்: உருக்குமி. ஆரம் - முத்துமாலே. பரி-குதிரை. காரும் கடலும் புரைவான் - மேகத்தையும் கடலேயும் ஒப்பவனுன கண்ண பிரான். சிலேகால் குழைத்தான் - வில்லின் நுனியை வளைத்தான். சிந்தும் படி குழைத்தான்.

3463. துஞ்சா - கெடாத. துயல் - அசைகின்ற. ஒசிந்த - நுடங்கிய. அம் சாய் மருங்கின் - அழகிய மெலிதலுள்ள இடையை யுடைய. அன்னவளது முன் உதித்தோன்: உருக்குமி. சோரி - இரத்தம். விதிர்த்து - சுழற்றி. நஞ்சு - விஷம். நாகத்துயில் தீர்ந்தவன்முன் - கண்ணபிரானுக்கு முன்பு.

3464. எதிர்ந்தோன்றனே - உருக்குமியை. வீட்ட - கொல்லுதற்கு. மாயன் - கண்ணபிரான். எல்லின் - சூரியனைக் காட்டிலும். எஃகம் - வேல். மின்னற் கொடியைப்போல் வயங்குகின்ற கோதை: உருக்குமிணி. மல்லல் கமஞ்சூல் மழை - வளப்பம் பொருந்திய நிறைந்த கருப்பத்தையுடைய மேகம். மழைவண்ணன் - கண்ணபிரான். கோதை, கொல்லற்க வென்று மழைவண்ணனே வேண்டினுள்.

3465. ஊன் நாறுகின்ற வேல். விறலோனே - உருக்குமியை. தூசின்- ஆடையால். வானாறு நக்கும் கொடி - ஆகாயகங்கையை தடவுகின்ற கொடியையுடைய. மன்ன யாத்து - நிலேபெறக் கட்டி. தாமம் - மாலே.

தேனூறு தாமஞ் செறிகுஞ்சி குறைத்தல் செய்தான்
மீனூறு வேலைக் கடல்வெம்பவில் வாங்கு மேகம். (சுஎ)

3466. பால்வண்ண னுங்குப் படுவெஞ்சம ரேற்று நின்ற
கோல்வண்ண வல்விற் குலமன்னவர் பாற வென்று
சூல்வண்ண மேகக் கொழுந்தாமெனத் தோற்றம் வாய்ந்த
நீல்வண்ண நேமி நெடியோ னுழை யெய்தி னானே. (சுஅ)

3467. வீக்குஞ் செயற்கு முனியாவிறல் வேலி னானை
யாக்கும் பிணிப்பி னிடைநின்று மகற்றி யாவும்
காக்குங் கருணைக் கடன்முன்ன முதித்த காளை
சேக்குங் குவளைத் தடங்கண்ணியைத் தேற்றி னானல். (சுகூ)

கலிவிருத்தம்.

3468. பொருப்புறழு மாடமலி போசகட மென்னும்
திருக்கிளரு மாநகர் திறப்பட வியற்று
உருக்கிமி யுறைந்தன னுருக்கமை பசும்பொன்
தருக்கிளர் துறக்கநிகர் தன்னகர் தணந்தே. (எ0)

3469. தன்னிகரில் கற்பக தருக்கொணர் கருங்கார்
பொன்னெழுகு வல்லிகொடு போவது கடுப்ப

---

குஞ்சி - உருக்குமியின் தலைமயிரை. கடல் வெம்பும்படி வில்லைவாங்கிய மேகம்; என்றது இராமாவதாரத்தை; ஈண்டுக் கண்ணபிரானை; " கோட்டி னன்சிலை குரைகடல் வெதும்பவெம் பகழி, மாட்டினான்" (3391.) வாங்கிய- வளைத்த.

3466. பால்வண்ணன் - பலராமன். சமர் - போர். கோலையும் வல் வில்லையுமுடைய மன்னர்; கோல் - அம்பு. பாற - கெட. சூல் - கருப்பம். நீல் - நீலம்; கடைக்குறை. நெடியோனுழை - கண்ணபிரானிடத்து.

3467. வீக்கும் செயற்கு - உருக்குமியைத் தேரோடுகட்டிய செய லுக்கு. முனியா - கண்ணபிரானை முனிந்து. வேலினானை - உருக்குமியை. யாக்கும் - கட்டிய. பிணிப்பு - கட்டு. கருணைக்கடலுக்கு முன்னம் உதித்த காளை; பலராமன்; எழுவாய். கருணைக்கடல் - கண்ணபிரான். சேக்கும் கண்ணபிரான் உருக்குமியைக் கட்டியமையால் கோபித்துச் சிவந்த. கண் ணியை - உருக்குமிணியை. காளை, முனிந்து, அகற்றித் தேற்றினன்.

3468. பொருப்புறழும் - மலையை ஒத்த. போசகடம் - போஜகடம்; உருக்குமியால் புதியதாக நிருமிக்கப்பட்ட நகர். இயற்று - இயற்றி. உருக்குத லமைந்த பொன்னாலாகிய தரு. தரு - கற்பகம். தன் நகரத்தைத் தணந்து போசகட நகரில் உருக்குமி உறைந்தான்; தணந்து - நீங்கி.

3469. கற்பக தருவைக் கொணர்கின்ற கார்: கண்ணபிரான். பொன் னெழுகுவல்லி - காமவல்லியை. கொடு - கொண்டு. கடுப்ப - ஒப்ப. மின் -

மின்னெழுகு பூணணியு மெல்லிய றனைக்கொண்
டின்னெழில் சிறந்தநக ரின்புற வடைந்தான். (எக)

3470. துளும்புகதிர் முத்தலை சுருட்டுநெடு முந்நீர்
விளிம்புதிகழ் மாநகர மேவிவிரி பொற்றா
தளைந்தளி யலம்பலரி னன்னமென வாழ்வாள்
இளம்பவள வல்லியென வின்னெழில் சிறந்தாள். (எஉ)

3471. வேழநகர் மன்னர்முதல் வெண்டிரை யுடுத்த
ஏழிரு நிலத்தரசர் யாவரு மிறுப்ப
வாழிநெடு வானவர் வழுத்தமணி வண்ணன்
ஆழிதரு மின்னமுத மன்னவளை வேட்டான். (எங)

3472. இக்கதை யிசைக்குந ரிசைப்பது விருப்பால்
புக்கினிது கேட்குநர்கள் பொன்னிதழ் விரிக்கும்
செக்கர்கம லத்தவ டிருந்தருள் வழங்க
மக்களொடு மிப்புவி மகிழ்ந்துறைவர் மாதோ. (எச)

---

ஒளி. மெல்லியல் - உருக்குமிணி. நகரில் இன்புற அடைந்தான்; நகர் - துவரை.

3470. துளும்புகதிர் - அசைகின்ற ஒளியையுடைய. முத்தை அலை சுருட்டுகின்ற முந்நீர்: கடல். முந்நீரின் விளிம்பில் திகழ்கின்ற நகரம்: துவரை. பொற்றாதை அளைந்து அளி அலம்புகின்ற அலரின் அன்னம்; அளைந்து - குடைந்து. அளி - வண்டு. அலம்புதல் - ஒலித்தல்; அலரின் அன்னம் - தாமரைப்பூவில் வாழ்கின்ற அன்னம்போலும் திருமகள்; ஈண்டு உருக்குமிணி. அன்னம் நகரம் மேவி வாழ்வாள். பவளவல்லி - பவளக் கொடி. எழில் - அழகு.

3471. வேழநகர் மன்னர் - அத்தினபுரத்து அரசர். இறுப்ப - துவரையில் வந்து தங்க. மணிவண்ணன் - கண்ணபிரான். ஆழி - கடல். அமுத மன்னவளை - உருக்குமிணியை. வேட்டான் - மணந்தான்.

3472. இசைக்குநர் - சொல்லுபவர். செக்கர் - சிவப்பு. கமலத்தவள் - திருமகள். அருள் வழங்க - அருளை வழங்கிட.



# 24. பிரத்துமனன் அவதரித்த அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3473. தெண்டி ரைத்து யின்ற நம்பி
செம்பொ னா மார்புதோய்
வண்ட ரற்று கோதையவ்
வயிற்று வந்து தித்தனன்
துண்ட வெண்பி றைக்கொ ழுந்து
சூடு நக்க னெண்ணுதற்
கண்டி றந்த காலே யிற்க
ரிந்தி றந்த காமனே. (க)

3474. ஊற்றி ருந்து பச்சி ரத்த
மொழுகு கின்ற பருதிவேற்
சீற்ற மிக்க சம்ப ரன்றெ
ரிந்து வெய்ய பகையென
மாற்ற ருஞ்சி றப்பு வாய்ந்த
மன்றல் வேனி லானையவ்
வீற்ற றைக்க ரந்தெ டுத்தி
ருங்க டற்ப டுத்தினன். (உ)

---

3473. திரை - கடல். நம்பி - கண்ணபிரானுடைய. மார்பு தோய்ந்த கோதையின் அவ் வயிற்றில்; கோதை - உருக்குமிணி. அ - அழகு. நக்கனுடைய நுதற்கண்; நக்கன் - சிவபெருமான். நுதல் - நெற்றி. காமன் - மன்மதன். காமன் உதித்தனன்.

3474. சம்பரன்: இரணியாக்கனுடைய மகன் என்பர்; சம்பராசுரன் என்றும் அழைக்கப்பெறுவான். மன்மதனுக்கு இவன் பகைவன். தெரிந்து- மன்மதன் உருக்குமிணியிடம் பிறந்திருப்பதை அறிந்து. வேனிலானை - மன் மதன் அமிசமாகிய பிரத்துமனனை. ஈற்றறை - ஈன்ற அறையிலிருந்து. கரந்து - மறைத்து. கடற்படுத்தினன் - கடலிற் போட்டான்.

3475 அலைகு ளித்த வேனி லானை
யாங்கு மீன்வி ழுங்கவோர்
வலைஞன் மற்று மயிலை வீசு
வலைய கப்ப டுத்திட
நலமி குத்த திதெ ஞந
யந்து போர்க டந்தவேற்
றலைய லங்கல் வாகை வேய்ந்த
சம்ப ரற்கு நல்கினன். (௩)

3476. மட்ட ருந்தி வண்டு பாடு
மன்றன் மாலை மார்பினன்
அட்டி லிற்கொ டுப்ப வட்டின்
முதல்வி யாய மர்ந்திடும்
இட்டி டைத்த டங்கொள் கொங்கை
யிரதி மீன்கு றைத்தலும்
விட்டி லங்கு குழவி மீனுள்
விழிக ளிப்ப நோக்கினள். (௪)

3477. மெல்லென் முல்லை மூர வாள்வி
யந்தெ டுத்த காலையாழ்
வல்ல மாத வத்த னெய்தி
வாணெ டுங்கண் மங்கையிவ்
வெல்லி லங்கு குழவி மாய
னீன்ற தோன்றல் வேனிலஞ்
செல்வ னின்ம ணாள னென்று
தேர்ந்து தன்மை செப்பினன். (௫)

---

3475. வேனிலானை - பிரத்துமனனை. மயிலை - ஒருவகை மீன். வேலின் தலையில் வாகை அலங்கல்வேய்ந்த சம்பரற்கு; அலங்கல் - மாலை.

3476. மட்டு - தேன். மார்பினன் - சம்பரன். அட்டிலில் - சமைலறையில். அட்டில் முதல்வி - சமைத்தற்குத் தலைவி. இட்டிடை - சிறிய இடை. அட்டில் முதல்வியாய் அமர்ந்திடுகின்ற இரதி. இரதி - இரதியின் அமிசமாகிய மாயாவதி. குறைத்தலும் - நறுக்கியவுடன். குழவி - பிரத்துமனனை.

3477. முல்லைபோன்ற மூரலாள்: மாயாவதி. எடுத்த காலை - குழந்தையை எடுத்தபோது. யாழ்வல்ல மாதவத்தன் - நாரத முனிவன். மங்கை: மாயாவதிக்கு விளி. எல் - ஒளி. இக்குழவி மாயன் ஈன்ற தோன்றல்; வேனிலஞ் செல்வன்; நின்மணாளன் என்று செப்பினன்; மாயன் - கண்ணபிரான்.

3478. இளங்க ளிச்சு ரும்பர் கோடி
யேடு லாவு முகைகிழித்
துளர்ந்து பாட வூறு மட்டு
றைத்த மாலை வேனிலான்
விளங்கு வானி லாவு குத்த
வெண்பி றைக்கொ ழுந்துபோல்
வளர்ந்த னன்ற ளர்ந்த நுண்ம
ருங்குன் மாதர் மயரவே. (சு)

3479. காளை யாய காலை யிற்க
ருப்பு விற்கு ழைத்தபோர்
வேளை யேர்த ணிந்த நீல
வெற்பெ னப்ப ணைத்ததிண்
டோளை நோக்கி நீல் முந்து
ளங்கு கொற்றம் வாய்ந்தகூர்
வாளும் வென்ற கண்ணி காதல்
வாரி வீழ்ந்த ழுந்தினள். (எ)

3480. கன்னல் வில்லி செங்க யற்க
ருங்க ணாள்கு றிப்பறிந்
தன்னை நீவி ழைந்த தென்னை
யம்ம வென்றி யம்பலும்

---

3478. சுரும்பர் கோடி - கோடி வண்டுகள். ஏடு - இதழ். மட்டு - தேன். உறைத்த - துளித்த. வேனிலான் - பிரத்துமனன். நிலா உகுத்த - நிலவைச் சொரிந்த. வெண்பிறைக் கொழுந்து ; "துண்ட வெண்பிறைக் கொழுந்து" (3473.) மாதர் மயர வளர்ந்தனன் ; மயர - மயங்க.

3479. காளையாய காலையில் - பிரத்துமனன் காளைப்பருவம் அடைந்த போது. கருப்புவில் - கரும்பாகிய வில்லை. வேளை - பிரத்துமனனை. பணைத்த - பெருத்த. நீலமும் - நீலோற்பலமலரையும். கொற்றம் - வெற்றி. கண்ணி - மாயாவதி. வாரி - கடல். கண்ணி வேளைக் காளை யாய காலையில் தோளைநோக்கிக் காதல்வாரி வீழ்ந்து அழுந்தினள்.

3480. கன்னல் வில்லி - கரும்பு வில்லையுடைய பிரத்துமனன். கருங்கணாள் - மாயாவதியினுடைய. அன்னை: மாயாவதிக்கு விளி. எனக்கு நீ மன்னன் ; மன்னன் - கணவன். மாயன் மைந்தனாகிய வேனிலான்,

மன்ன னீயெ னக்கு மாயன்
மைந்தன் வேனி லானென
மின்னி னுண்ம ருங்கு லாள்வி
ளைந்த வாவி ளம்பினள். (அ)

3481. நஞ்ச ளாவி யமுது தோய்ந்த
நாம வேற்க ருங்கணாள்
கஞ்ச னைக்க ளத்து வென்ற
கண்ணன் மைந்த விண்ணுலாம்
மஞ்சி லங்கு மின்னி னன்ன
வாள்வ லங்கொள் சம்பரன்
வெஞ்ச மங்க டத்தி யென்று
விஞ்சை யொன்று நல்கினள். (கூ)

3482. அரிம ழைத்த டங்க ணாள
ளித்த விஞ்சை யெய்தலும்
விரைகொ ழித்த தும்பை சூடி
வேனி லாளி வல்லைபோய்ப்
பொரவ ழைப்ப விழிசி வந்து
பொரும டங்க லேறுபோல்
எரிய ழற்சி னத்தி னனெ
திர்ந்து போரி யற்றினன். (க0)

3483 தண்ட மொன்று தாங்கி யும்பர்
தலைப னிப்ப நெடியமு
தண்ட கோள மதிர நின்ற
டித்த சம்ப ராசுரன்

---

என - என்று. மின்னைக்காட்டிலும் நுண்ணிய மருங்குலாள் : மாயாவதி. விளைந்தவா - நடந்த விதத்தை.

3481. கணாள் - மாயாவதி. கண்ணன் மைந்த : பிரத்துமனனுக்கு விளி. மஞ்சு - மேகம். சம்பரனை வெஞ்சமத்தில் கடத்தி ; சமம் - போர். கடத்தி - கடப்பாயாக. விஞ்சை - மந்திரம்.

3482. அரி - செவ்வரி. தடங்கணாள் - மாயாவதி. எய்தலும் - பெற்றவுடன். விரை - வாசனை. வேனிலாளி - பிரத்துமனன். வல்லை - விரைவில். பொர அழைப்ப - போர்செய்ய வரும்படி சம்பரனைக் கூப்பிட, மடங்கலேறு - ஆண் சிங்கம். சினத்தினன் - சம்பரன்.

3483. தண்டம் - தண்டாயுதம். உம்பர் - தேவர். பனிப்ப - நடுங்க.

துண்ட மாக மின்னெ னச்சு
டர்ந்த வாளின் வீட்டினன்
வண்டு பாட வாய்நெ கிழ்ந்த
வாகை மாலை சூடினன். (கக)

3484. வெளிமு கங்கி ழித்தெ ழுந்து
மின்னி னன்ன மாதொடும்
துளிம தூக்க டுக்கை யான்று
ளங்க வெய்த வேனிலான்
அளிகி டந்த லம்ப வாய
விழ்ந்த கண்ணி மாயன்வாழ்
நளிக டற்கி டங்கு டுத்த
நன்ன கர்க்கு ணண்ணினன். (கஉ)

3485. வேழ வெம்ப டைத்த டக்கை
வேனி லானி றுத்தலும்
கேழ்கி ளர்ந்த தண்ணி லாக்கி
ளைத்த சங்கி னோடுகூர்
ஆழி தாங்கு செங்கை நங்க
ளைய னென்று கோநகர்
காழ ணிந்த வெம்மு லைக்க
ருங்க ணார்ம யங்கினர். (கங)

---

அதிர - முழங்க. துண்டமாக - இரண்டாகும்படி. வாளினல் வீட்டினன்; வீட்டுதல் - அழித்தல். வெற்றிபெற்ற அரசர் வாகைப்பூச் சூடுவர்.

3484. மாது - பார்வதி. கடுக்கையான் - சிவபெருமான். துளங்க - மனம் சலனமடையும்படி. வேனிலான் - பிரத்துமனன். அளி - வண்டு. அலம்ப - ஒலிக்க. கண்ணியை யணிந்த மாயன்: கண்ணபிரான். நளி - பெருமை. கடலாகிய கிடங்கு உடுத்த நகர்: துவரை. உடுத்த - சூழ்ந்த.

3485. வேழ வெம்படை - கரும்பாகிய வெவ்விய வில். வேனிலான் - பிரத்துமனன். இறுத்தலும் - துவரையில் வந்து தங்குதலும். கேழ் - ஒளி. கிளைத்த - தோன்றிய. கூர் ஆழி - கூர்மையான வாயையுடைய சக்கரம். செங்கையை யுடைய ஐயன், நங்களது ஐயன்: என்றது கண்ணபிரானை. கோநகர் - துவரை. காழ் - முத்து மாலை, கருங்கணார் - மகளிர். கோநகரி லுள்ள கருங்கணார் மயங்கினர்.

3486. அழலு நச்செ யிற்று வாள
ராவ ணைத்து யின்றமால்
எழில்வி ளங்கு தேவி நோக்கி
யீற்ற றைக்க ரந்தபைங்
குழவி கோல மன்ன தேந்தல்
கோல மென்று முலைசுரந்
தொழுகு பாலி னிலனெ கிழ்த்து
ளுருகி நின்றி ரங்கினாள். (கச)

3487. அறிந்த மாய னென்று மாங்க
றைந்தி லன்னி ருப்பவேல்
எறிந்த மைத்த டங்க ணாள்முன்
னெய்தி நின்வ யிற்றிடைப்
பிறந்த தோன்ற லிவனெ னப்பி
றந்த வண்ண மோதினான்
உறழ்ந்து மென்ன ரம்பு ளார்ந்த
வொற்றை மாத வத்தினான். (கரு)

3488 காவி வென்று வேல்பொருங்க
ருங் கயற்க ணீருகக்
கோவை முத்த ணிந்த தன்ன
கொங்கை பால்கொ ழிப்பநின்

---

3486. அழலும் - கோபிக்கின்ற. மால் - கண்ணபிரான். மாலினுடைய தேவி: உருக்குமிணி. நோக்கி - பிரத்துமனனைப் பார்த்து. ஈற்றறைக் கரந்த - கருப்பம் ஈன்ற அறையில் மறைந்துபோன. ஏந்தல் கோலம் ஈற்றறைக் கரந்த குழவி கோல மன்னது என்று; ஏந்தல் கோலம் - பிரத்துமனனுடைய வடிவம். அன்னது - போன்றுள்ளது. நிலன் நெகிழ்த்து - பூமியை நெகிழச் செய்து.

(பி - ம்.) 2. இத்தறைக் கரந்தபைங்.

3487. அறைந்திலனாய் இருப்ப. வேல் எறிந்த - வேலின் தன்மையை அழித்த. தடங்கணாள் முன் - உருக்குமிணியின் முன்பு. இவன் - பிரத்துமனன். உறழ்ந்து - மயங்கி. உளர்ந்த - தடவிய. தவத்தினான் - நாரதன். மாதவத்தினான் தடங்கணாள் முன் எய்தி ஓதினான்.

3488. காவி - நீலோற்பலம். உக - சிந்த. கோவை முத்து - கோத்த முத்துமாலை. கொழிப்ப - சிந்த. மைந்தனை - பிரத்துமனனை.

ருவி யன்ன மைந்த னைத்த
னங்கை யிற்ற ழீஇயினள்
ஒவி யப்பொ லங்கொ ழுந்து
வப்பி னுள்ள முருகியே. (கசு)

3489. மலைக்கு மாழி யானு மாழி
மாலை நல்கு மன்னனும்
சிலைக்கை மன்னன் மன்பெ ருஞ்சி
றப்பு வாய்ந்த தேவியும்
கலித்த வெண்டி ரைக்க டங்க
டற்சு ருவு யர்த்ததம்
குலக்கொ ழுந்தை யன்பி னிற்கு
ழைந்து புல்லி னாரோ. (கஎ)

வேறு.

3490 எழில்வளர் மாயா வதியெனும் பேர்பெற்
றிருந்தவவ் வின்னகை மங்கை
கழைவளர் தோளி லெழுதுதீங் கரும்பு
கன்னவி ரோளினிற் கதுவத்
தழுவுதற் கடங்காத் தடமுலை முகட்டிற்
றண்மலர்த் தார்வடுப் பொறிப்ப
விழைவினிற் றழுவி விழிகவர் வனப்பின்
வேனிலஞ் செல்வன்வீற் றிருந்தான். (கஅ)

---

தன் கையினால் தழீஇயினள்; தழீஇயினள் - தழுவினாள். ஓவியப் பொலங்கொழுந்து - சித்திரத்தி லெழுதிய பொற்கொழுந்து போன்ற உருக்குமிணி. உவப்பினள் உள்ளமுருகித் தழீஇயினள்.

(பி - ம்.) 4. உவப்ப சும்பு னாரவே.

3489. ஆழியானும் - கண்ணபிரானும். ஆழிமாலை - கண்ணபிரானை. மன்னனும் - வசுதேவனும். தேவி - தேவகி. கலித்த - முழங்கிய. சுருவுயர்த்த குலக்கொழுந்தை; பிரத்துமனனை; மீனைக் கொடியாகவுடையவன் பிரத்துமனன். சுரு: ஒருவகை மீன்.

3490. மங்கை - இரதி. கழைவளர் - மூங்கிலைப்போல் வளர்கின்ற, மங்கையுடைய தோளில். கல்நவில் தோளினில் - மலையை உவமையாகச் சொல்லுகின்ற தோளில். கதுவ - பொருந்த. கரும்பு கதுவ. முலையின் முகட்டில் தாரின் வடுப் பொறிப்ப; தார் - பிரத்துமனன் அணிந்த மாலை. விழைவு - ஆசை. வனப்பினையுடைய வேனிலஞ் செல்வன் - பிரத்துமனன். வேனிலஞ் செல்வன், கதுவ, பொறிப்ப வீற்றிருந்தான்.

# 25. சத்தியபாமை மணத்திறம் உரைத்த அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3491. கொத்தலை தவழுங் குரைகடற் பொடித்த
குழவியஞ் செங்கதிர்ப் பருதி
ஒத்தொளி கிளர்க்குஞ் சயந்தக மணியோ
டொருதனித் திகிரியான் றனக்கு
முத்தவெண் கவிகை மன்னவர் பசும்பொன்
முடிபொரச் சிவந்தபூங் கழற்காற்
சத்திர சித்து நித்தில முறுவற்
சத்திய பாமையைத் தந்தான். (க)

3492. என்னலும் பின்னற் றிரைமுகஞ் சிவப்ப
வெழுந்தமா மணிகிடந் திமைக்கும்
பொன்னுறை யலங்கன் மார்பினன் றனக்குப்
பொழிகதிர் மணியொடு துவர்வாய்
அன்னமென் னடைய வணங்கினை யரச
னளித்தது விரித்தரு ளென்ன
மின்னகு பரிதி வேலினன் கிளப்ப
மெய்த்தவன் விளம்பலுற் றனனால். (உ)

---

3491. கொத்து அலை - தொகுதியான அலைகள். கடலில் பொடித்த; பொடித்த - தோன்றிய. குழவி - இளமை. பருதியை ஒத்து. கிளர்க்கும் - தோற்றுகின்ற. சமந்தகமணி: சியமந்தகமணி என்னும் இரத்தினம்; நாள்தோறும் நூற்றறுபது துலாம் பொன்னைக் கொடுப்பது; 3496. திகிரியான் - கண்ணபிரான். அடி, 3: 3333. சத்தியபாமை: சத்திராசித்து என்னும் அரசனுடைய பெண். சத்திராசித்து, சியமந்தகமணியுடன் தன் பெண் சத்தியபாமையையும் கண்ணபிரானுக்குக் கொடுத்தான்.

3492. என்னலும் - என்று சுக முனிவன் கூறலும். பின்னுதலையுடைய திரை. பொன் உறை - திருமகள் தங்குகின்ற. மார்பினன் றனக்கு - கண்ணபிரானுக்கு. மணி - சியமந்தகமணி. துவர் பூசிய வாயையும் அன்னம் போன்ற நடையையுமுடைய அணங்கினை; சத்தியபாமையை. அரசன் - சத்திராசித்து. வேலினன் - பரிக்ஷித்து. கிளப்ப - கூற. மெய்த்தவன் - சுக முனிவன்.

3493. எரிமணிச் செஞ்சூட் டாரவணைத் துயிலு
மேந்தல்பொன் மார்பினிற் கிடந்த
திருமணி கடுப்பப் புணரிமேன் மூளைத்துச்
செம்பொன்மால் வரைவலந் திரியும்
ஒருதனி யாழித் தேரவற் பரவி
யுடைதிரை யாழியே ழுடுத்த
பெருநிலங் காக்குஞ் சத்திரா சித்துப்
பெற்றனன் சமந்தக மணியே. (ங)

3494. விழுத்தவப் பேற்று லடைந்தமா மணியை
விரைமதுத் துளித்தபூந் தாரான்
கழுத்தினிற் புனைந்து வருதலு மற்றைக்
கடிநகர் மாக்களேக் கினர்கண்
வழுக்குசெஞ் சுடர்செய் பருதியஞ் செல்வன்
வருமெனத் திருமறு மார்பன்
தழைத்தவெண் ணிலவு பொழிமதிக் கவிகைச்
சத்திரா சித்தெனக் கிளந்தான். (ச)

3495. விரிகடல் வயிறு கீண்டுசெங் குருதி
வெள்ளம்வந் தெழுந்தெனத் தவழும்
எரிகதிர்க் கற்றை சொரிமணி பிறங்க
வெறுழ்வலி யாவுகால் யாத்த
வரையினிற் கலக்கும் வலம்புரித் தடக்கை
வள்ளலம் மன்னனை நோக்கித்
திருவிழை பவளச் செய்யவாய் திறந்து
செம்மணி தருகெனக் கிளந்தான். (ரு)

3493. மணி - இரத்தினம். ஏந்தல் - திருமாலினுடைய. மணி கடுப்ப - கௌஸ்துப ரத்தினத்தை ஒப்ப. புணரி - கடல். மூளைத்து - தோன்றி. ஆழித்தேரவன் பரவி - சூரியனைத் துதித்து. சத்திராசித்து ஆழித்தேரவனைப் பரவிச் சமந்தக மணியைப் பெற்றனன்.

(பி - ம்.) 1. துயிலு மிறையவ ரிறைவன்மார் வத்துத்.

3494. மணி - சியமந்தகமணி. தாரான் - சத்திராசித்து. மாக்கள் - மக்கள். வரும் என - வருகின்றான் என்று சொல்ல.

3495. கீண்டு - கிழித்து. கதிர்க் கற்றை - ஒளியின் தொகுதி. மணி - சியமந்தகமணி. எறுழ் வலி - மிக்க வலி. கால்யாத்த - அடியிற் கட்டிய. வரை - மந்தரமலை. வள்ளல் - கண்ணபிரான். மன்னனை - சத்திராசித்தை. திருவிழை - திருமகள் விரும்புகின்ற. செம்மணி - சியமந்தக மணியை.

3496. செறியிருட் குறும்பு திசைதிசை யிரியத்
திகிரியொன் றுருட்டுசெங் கதிரோன்
மறைதரத் திகிரி வழங்கிய தடக்கை
மரகத வுருவினுன் றனைக்கூய்
உறுபொருள் வேட்கை யுடையனுய்க் களித்தவ்
வுலம்பொரு தோளினு னொருநூற்
றறுபது துலாம்பொ னுடொறு மீனு
மழன்மணி கொடுக்கிலே னென்றான். (௬)

3497. வெள்ளிவெண் டிங்கண் மீமிசை கவிப்ப
விளங்கிள ஞாயிறு நடந்தாங்
கொள்ளொளி யெறிக்குஞ் சமந்தக மணிபூண்
டொற்றைவெண் கவிகைமே னிழற்ற
ஜள்ளருந் துப்பிற் சத்திரா சித்துக்
கிளவலா மெழிற்பிர சேனன்
வள்ளுகி ரரிமா வழங்குதண் சாரல்
வரையிடை வேட்டமே லெழுந்தான். (எ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3498. அருவரைச் சாரல் வேட்ட மாடுழி யழன்று பொங்கி
நிரையுளே யரிமா னேறு நிழல்சுளி களிறு மானும்

---

3496. இருட் குறும்பு - இருளாகிய பகை. இரிய - கெட்டோட. கதிரோன் மறைதரத் திகிரி வழங்கிய - பாரத யுத்தத்தில் சூரியன் மறையும்படி சக்கரத்தை எடுத்த. மரகத வுருவினுன்றனைக் கூய் - கண்ணபிரானை அழைத்து. உறு பொருள் - மிக்க பொருள். உலம் - உருண்டைக் கல். தோளினுன் - சத்திராசித்து. ஒரு நூற்றறுபது துலாம் பொன்னை யீனுகின்ற மணியைக் கொடுக்கிலேன் ; மணி - சியமந்தகமணி.

3497. திங்கள் கவிப்ப இள ஞாயிறு நடந்தாங்கு ; நடந்தாங்கு - நடந்ததைப் போல். எறிக்கும் - வீசுகின்ற. கவிகை - குடை. வெண்குடைக்குச் சந்திரனும் சியமந்தகமணிக்குச் சூரியனும் உவமை. எள்ளருந் துப்பின் - இகழ்தற்கரிய வன்மையையுடைய. இளவல் - தம்பி. பிரசேனன் - பிரஸேனன். வள்ளுகிர் - கூரிய நகத்தையுடைய. வரை - மலை. வேட்டமேல் - வேட்டையாடுதற்கு. பிரசேனன் சியமந்தகமணியை அணிந்து வேட்டையாடச் சென்றான்.

3498. வரைச் சாரலில் வேட்டம் ஆடுழி. நிரையுளே அரிமானேறு - வரிசையான பிடரி மயிரையுடைய ஆண் சிங்கம் ; நிழல் சுளிகளிறு - தன் நிழலைக் கோபிக்கின்ற யானை ; "நிழறுழாய்க் குனிந்து குத்து, மழறிகழ்

வரிசிலை யுழவற் கொன்று மழகதிர்ப் பருதி யென்ன
எரிசுடர்க் கற்றை தூற்று மெழின்மணி கவர்ந்த தன்றே.(அ)

3499. கோக்களிற் றுழவன் மார்பிற் குருதிநீர் தெறித்த தென்னத்
தீக்கடை தவழ்ந்த செங்கட் டெறுசின வரிமாத் துஞ்சத்
தாக்கினன் மணிகைக் கொண்டு சாம்பவன் பிலத்து நண்ணித்
தூக்கினன் குழவி யாடுந் தொட்டின்மேற் சுடர மன்னோ.(கூ)

3500. தம்பியைக் காண்கி லானுய்ச் சத்திரா சித்து மாழ்கி
வெம்புசெஞ் சுடர்செய் சீர்சால் விழுமணிப் பொருட்டுப் பற்றித்
தும்பிவெண் கோடு கொண்ட தொடிபொலி தடக்கை யானே
எம்பியைச் சவட்டி னுனென் றெடுத்தெடுத் தியம்ப லுற்றான். (கo)

3501. கடங்கலுழ் களிற்று மன்னன் கரைவது கேட்டுக் கண்ணன்
தடங்கிரிச் சார லெய்தித் தாமவேற் காளை மாண்டு
கிடந்தது மரிமாத் துஞ்சிக் கிடந்தது மெண்கொன் றாங்கு
நடந்ததுங் கண்டு மற்றந் நடவையி னடந்தான் வல்லே. (கக)

---

கதத்த யானை '' (சீவக. 2220.) களிறுமானும் வரிசிலை உழவன் - யானையை ஒக்கும் பிரசேனனை. மழ - இளமை. என்ன - என்று கூறும்படி. மணி - சியமந்தகமணியை.

3499. உழவன் - பிரசேனனுடைய. செங்கண்ணையும் தெறுசினத்தையுமுடைய அரிமா ; அரிமா - சிங்கம். தெறுதல் - அழித்தல். துஞ்ச - இறக்கும்படி. சாம்பவன், உழவனுடைய மார்பினது குருதிநீர் தெறித்த தென்ன, தீக்கடைத் தவழ்ந்த அரிமாவைத் துஞ்சும்படி தாக்கினன். மணியைக் கையிற் கொண்டு. பிலத்து - தான் வாழும் மலைக் குகையில். குழவி - சாம்பவனுடைய குழந்தை. தொட்டிலின்மேல் சுடராத் தூக்கினன் ; தூக்கினன் - மணியைக் கட்டினுன். சாம்பவன் : கரடிகளின் அரசன்.

3500. தம்பி - பிரசேனன். மாழ்கி - மன மயங்கி. வெம்புதல் - விரும்புதல் ; (சீவக. ?.) மணிப் பொருட்டு - சியமந்தகமணியின் பொருட்டு. தும்பி - யானையின். தொடி - தோள்வளை. தடக்கையான் - கண்ணபிரான். எம்பியை - பிரசேனனை. சவட்டினுன் - கொன்றான்.

3501. கடம் - மதம். மன்னன் - சத்திராசித்து. கரைவது - சொல்லுவதை. கிரிச்சாரல் - மலையின் சாரலை. காளை - பிரசேனன். அரிமா - சிங்கம். எண்கு ஒன்று ஆங்கு நடந்ததும் - கரடி ஒன்று அவ்விடத்தே நடந்து சென்றிருப்பதையும். அந் நடவையின் - அந்த நடைவழியே.

3502. இருட்பில மொன்ற தோன்ற விருள்படு பிலத்தி னெல்லைக்
கரைக்குறும் பெறிந்து பொங்கு கருங்கடற் றூனே நிற்பத்
திரைத்தலை பிளந்து தோன்றுஞ் செங்கதிர்ப் பருதி நாண
உருத்தெறி ஞான நந்த வுருவின னொல்லை புக்கான். (கஉ)

3503 குழவியின் விளையாட் டாகக் குழவியம் பருதி போலும்
எழின்மணி சுடா நோக்கி யிந்திர நீல வெற்பின்
ஒழுகொளி விரியு நம்மா னுற்றன னாகத் துண்ணென்
றழுதன ளழைத்தாண் மற்றவ் வரும்பெறற் குழவி கைத்தாய். (கங)

3504. அஞ்சனத் தடங்க ணல்லா ளழுதன ளழைத்தல் கேளா
நஞ்சுகொப் புளிக்கும் பேழ்வாய் நகுதலை நாக மேபோல்
வெஞ்சினந் திருகி யெண்கின் வேந்துவந் தெழுத லாகா
மஞ்சனன் றன்னொ டேற்று மல்லமர் மலைதல் செய்தான். (கச)

3505. வெலற்கருங் களிறு போல வெந்திற லெண்கின் வேந்து
மலைத்தலு மலையி னலேழ் மைம்முகின் மாரி காத்தோன்
கொலைப்படை யெடுக்க கில்லான் குங்குமக் குவட்டின் வீங்கிச்
சிலைத்தழும் பிருந்த தோளாற் செஞ்சமம் புரிந்தா னன்றே. (கரு)

---

3502. இருட்பிலம் - இருட்டையுடைய குகை. பிலத்தி னெல்லையில் தானே நிற்ப. திரைத்தலை - கடலினிடத்து. பருதி - சூரியன். ஞானனந்த உருவினன் - கண்ணபிரான். ஒல்லை - விரைவில்.

3503. குழவியின் - சாம்பவனுடைய குழந்தையின். விளையாட்டாக - விளையாட்டுக் கருவியாக. மணி - சியமந்தகமணி- நோக்கி - அம்மணியைப் பார்த்து. நீல வெற்பினைப்போல் ஒழுகுகின்ற ஒளி விரிகின்ற நம்மான்: கண்ணபிரான். உற்றனனாக - அவ்விடத்தே சென்றானாக. குழவியின் கைத்தாய் துண்ணென்று அழுது அழைத்தாள். கைத்தாய் - வளர்க்கின்ற தாய். குழவி என்றது சாம்பவனுடைய பெண்ணாகிய சாம்பவதியை.

3504. அஞ்சனம் - மைபூசிய. நல்லாள் - கைத்தாய். கேளா - கேட்டு. நஞ்சு - விஷம். நாகமே போல் சினம் திருகி; 3452. திருகி - மாறுபட்டு. எண்கின் வேந்து - கரடிகளுக்கு அரசனான சாம்பவன். எழுதலாகா மஞ்சனன் றன்னொடு - கண்ணபிரானோடு. ஏற்று - எதிர்த்து. மல்லமர் - மல் யுத்தம்.

3505. வெலற்கரும் - வெல்லுதற்கரிய. வேந்து - சாம்பவன். மலைத்தலும் - போர் செய்தலும். மலையினால் - கோவர்த்தனகிரியால். எழு முகிலின் மாரியைக் காத்தோன்; கண்ணபிரான். கொலைப்படை - திகிரி. எடுக்ககில்லான் - எடுக்காதவனாய். சிலைத் தழும்பு இருந்த தோளால்; "சிலைப்பொலி தடக்கையிற்" (பெருங். 3. 25 : 3); "சிலைகண்டெதிர் கொண்டவாறும்" (சீவக. 21.) சமம் - போர்.

3506. ஒல்லென வுருமின் வெம்போ ருழந்துரு வொன்பான் வைகல்
செல்லலு மெண்கின் வேந்து தெள்ளிதிற் றெளிந்து கொற்ற
வில்லினு லிலங்கை செற்ற விறல்கெழு தடக்கை வீரன்
அல்லகொ னீயிங் கென்னே வடைந்ததென் றேத்தி ஞனல். (கசு)

3507. பணிபுரை சீற்றத் துப்பிற் பஃறலை யரக்கன் சூடும்
துணிகதிர் மகுட பந்தி துணியவெஞ் சிலைகால் கோட்டும்
அணிமணிக் குன்ற மன்னு னலர்கதி ரெறிக்குஞ் செக்கர்
மணியினுக் கடைந்த வண்ண மணியிதழ் விண்டு சொன்னுன். (கள)

3508. வெண்மணி சுழிக்குந் தெண்ணீர் வியன்பணை விதர்ப்ப வேந்தன்
கண்மணி யனைய நங்கை காதலங் கொழுநற் காங்குப்
பெண்மணி யோடு முந்நீர்ப் பிறந்தசெங் கதிரி னன்ன
ஒண்மணி யெண்கின் வேந்த னுவப்பொடு முதவி நின்றான். (கஅ)

3509. எண்கின்வேந் தளித்த சாம்ப வதியெனு மிலவச் செவ்வாய்ப்
பண்கனி மழலைத் தீஞ்சொற் படாமுலைப் பவள வல்லி
கண்கவர் மணியி னேடு காண்டக விளங்கக் கொண்டு
மண்கவர் கமலத் தாளான் மாகட லென்ன மீண்டான். (கசு)

---

3506. ஒல்லென - விரைய. உழந்து - செய்து. ஒன்பான் வைகல் - ஒன்பது நாட்கள். எண்கின் வேந்து - சாம்பவன். தெள்ளிதின் - தெளிவாக. கொற்ற வில் - வெற்றியையுடைய வில். வீரன் நீ அல்லகொல்; வீரன் - இராமன். அல்லகொல் - அல்லவா? என்னே - எதற்கு.

3507. பணிபுரை சீற்றம் - பாம்பைப் போன்ற கோபத்தையுடைய; 3504. துப்பின் - வன்மையையுடைய. பஃறலை அரக்கன் - இராவணன். மகுட பந்தி - கிரீடங்களின் வரிசை. துணிய - இரண்டு படும்படி. சிலை கால் கோட்டும் - வில்லின் நுனியை வளைக்கின்ற. குன்ற மன்னுன் - கண்ண பிரான். செக்கர் மணியினுக்கு - சியமந்தகமணிக்கு. விண்டு - திறந்து.

3508. மணிகளைச் சுழிக்கின்ற நீரையுடைய. விதர்ப்ப வேந்தனுடைய நங்கை: உருக்குமிணி. நங்கையின் கொழுநற்கு - கண்ணபிரானுக்கு. பெண்மணி - சாம்பவதி. முந்நீர் - கடல். ஒண்மணி - ஒளி பொருந்திய சியமந்தகமணி. எண்கின் வேந்தன், பெண்மணியோடு ஒண்மணியை நங்கை கொழுநற்கு உதவி நின்றான்.

3509. எண்கின் வேந்து - சாம்பவன். இலவச் செவ்வாய் - இலவம் பூப்போன்ற சிவந்த வாய். பண்கனி - இராகத்தின் தன்மை முற்றிய. படா - சாயாத. வாயையும், சொல்லையும், முலையையும் உடைய சாம்பவதி யென்னும் பவளவல்லியை. மணி - சியமந்தகமணி. மண்கவர் கமலத்தாளான்- கண்ணபிரான். பவளவல்லியும், மணியும் கூறியதற்கேற்பக் கண்ணபிரானைக் கடல் என்றார்.

3510. பன்னிரு வைகல் காறும் பாயிருட் பிலத்தி னெல்லை
துன்னிய தானை நம்பி தோன்றுதல் காண்க லாமே
மன்னிய நகர மெய்தி மால்வர வருள்செய் கென்னக்
கன்னியந் துளவு சூடுங் கன்னியைப் பாவிற் றன்றே. (உ0)

3511. சிந்துர வருவி போலச் செய்யபூஞ் சுண்ண மாடி
அந்தளிர் தொடுத்த கோதை யழிமதுக் கலுழி பாய
இந்திர நீல வெற்பி னெழில்பெறப் பணைத்த தோளான்
வந்தனன் புணரி வேலி மாநகர் மகிழ மன்னோ. (உக)

3512. நளிகடல் கடைந்து வான நாட்டினர்க் கமுது நல்கி
அளைகவர்ந் துண்ட வம்மா னவைக்களத் தழைத்தல் செய்யாத்
தளையவி ழலங்கன் மாலைச் சத்திரா சித்துக் காங்கு
விளைதிற முழுதுங் கூறி விழுமணி நல்கி னானல். (உஉ)

3513. பிழைத்தன மென்று வேந்தன் பிழைத்தவப் பிழைப்புத் தீர்ப்பான்
விழைத்தகு மணியி னோடு வெண்டலைப் புணரி வேலை
தழைத்ததெள் ளமுதின் சாயற் சத்திய பாமை தன்னை
மழைப்புய லன்ன மேனி வள்ளலுக் குதவி னானே. (உங)

---

3510. பன்னிருவைகல் - பன்னிரண்டு நாட்கள். பாயிருள் பிலம் - பரந்த இருளையுடைய மலைத்துவாரம். தானை - சேனை. நம்பி - கண்ணபிரான். நகரம் - துவரை. மால்வர - கண்ணபிரான் வருமாறு. கன்னி - புதுமை. துளவு சூடுங் கன்னியை - துர்க்கையை. பாவிற்று - துதித்தது. தானை பரவிற்று.

3511. சிந்துரம் - சிவப்புத்தூள். சுண்ணம் - வாசனைப் பொடி. கோதை - மாலை. மதுக்கலுழி - தேனொழுக்கு. தோளான் - கண்ணபிரான். கண்ணபிரானுக்கு இந்திர நீலவெற்பு உவமை; 3503. புணரியை வேலியாகவுடைய நகர் மகிழும்படி வந்தனன்; நகர் - துவரை.

3512. நளி - பெருமை. வான நாட்டினர்க்கு - தேவர்க்கு. அளை - வெண்ணெய். அம்மான் - கண்ணபிரான். அழைத்தல் செய்யா - அழைத்து. தளை - கட்டு. விளை திறம் - நிகழ்ந்த தன்மையை. மணி - சியமந்தக மணியை.

3513. பிழைத்தனம் - தவறு செய்தோம். வேந்தன் - சத்திராசித்து. பிழைத்த - தவறிய. தீர்ப்பான் - நீக்கும் பொருட்டு. விழைத்தகு - விரும்பத்தக்க. மணி - சியமந்தகமணி. வெண்டலைப் புணரி வேலையில்; 3451, குறிப்புரை. தழைத்த - தோன்றிய. அமுதின் சாயல், "அமிர்தன்ன சாயல்" (சீவக. ம.) சத்தியபாமை: சத்திராசித்தின் பெண். வள்ளலுக்கு - கண்ணபிரானுக்கு.

3514. பொன்னிதழ்க் கமல வீட்டுப் பொற்கொழுந் தணிந்த மார்பன்
கன்னலு மமிழ்துங் கூட்டிக் கவின்குழைத் தெழுது பாவை
அன்னமென் மருங்குற் செவ்வா யலர்முலை யணங்கை வேட்டு
மின்னகு மணியை மீட்டும் வேந்தனுக் கருளி னானல். (உச)



# 26. சததன்னுவாவைக் கொன்ற அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3515. அனலுமிழ் திகிரி மாய னறிந்தன னிருந்து மைவர்
புனையரக் கில்லஞ் சேர்ந்து பொன்றினா ரென்ன லோடும்
பனைவல னுயர்த்த செங்கட் பானிற வண்ண னோடு
நனைகவுட் களிநல் யானை நகர்க்கெழுந் தேகி னானே. (க)

3516. கங்கையாள் காதன் மைந்தன் கல்லென்வெண் டரங்க வேலை
அங்கண்மா ஞாலங் காக்கு மம்பிகை புதல்வன் மற்றை
வெங்களிச் சிறுகண் யானை விதுரனூற் றுவரை யீன்ற
நங்கையென் றிவரைக் கண்டு நம்பியாங் கிருந்தான் மன்னோ. (உ)

---

3514. பொற் கொழுந்து - திருமகளை. மார்பன் - கண்ணபிரான். கன்னல் - கரும்பு. கவின் - அழகு. எழுது பாவை யன்ன அணங்கை - சத்தியபாமையை. வேட்டு - கலியாணம் செய்து. மணியை - சியமந்தக மணியை வேந்தனுக்கு - சத்திராசித்துக்கு.

3515. அனல் - தீ. மாயன் - கண்ணபிரான். அறிந்தனன் இருந்தும் - எல்லாவற்றையும் அறிந்தவனாய் இருந்தும். ஐவர் - பாண்டவர். புனை அரக்கில்லம் - புதிதாகச் செய்த அரக்கு மாளிகையில். பொன்றினார் - இறந்தார்கள். பனைவலன் உயர்த்த - பனைமரத்தைக் கொடியாக வலத்தே உயர்த்திய. பானிற வண்ணன் - பலராமன். நனைகவுள் - மதத்தால் நனைந்த கன்னத்தையுடைய. யானை நகர்க்கு - அத்தினபுரத்திற்கு.

3516. கங்கையாளுடைய காதல் மைந்தன்: பீஷ்மன். கல்லென்: ஒலிக்குறிப்பு. அம்பிகை புதல்வன் - திருதராஷ்டிரன். நூற்றுவரை ஈன்ற நங்கை - காந்தாரி; திருதராஷ்டிரனுடைய மனைவி. நம்பி - கண்ணபிரான்

3517. களிமுகச் சுரும்புண் கோதைக் காந்தினி மகனுஞ் செய்ய
கிளரொளிப் பருதி வைவேற் கிருதவன் மாவு மற்றுங்
கஃளயுறை யரியே றன்ன வடற்சத தன்னு வாவின்
வளமனை குறுகி மெல்ல வகுத்துரை யாட லுற்றார். (௩)

3518. மாறிலாய் நினக்கு நேர்ந்த மழைமதர் நெடுங்க ணாளைத்
தேறல்பாய் தெரியன் மாலைத் தேவகி குமரற் கீந்த
தாறுபாய் களிநல் யானைச் சத்திரா சித்தை யின்னே
கோறல்செய் தவன்கைக் கொண்ட குருமணி கோடி யென்றார். (௪)

3519. அணைபுரை பணைமென் றோளா ரலர்கதி ராரந் தாழ்ந்த
பணைமுலை பொருத தாரான் பள்ளிகொள் களிறு போலத்
துணர்விரி யமளி மீது துஞ்சுழிக் கொன்று துஞ்சா
மணியினைக் கவர்ந்தான் மற்ற மானவேற் றடக்கை யானே. (௫)

3520. தண்ணறுங் கோதை சோரச் சத்திய பாமை நெஞ்சம்
துண்ணெனச் சோர்ந்து மாழ்கிச் சுடர்செய்வேற் றந்தை தன்னை

---

3517. சுரும்பு - வண்டு. காந்தினி மகன் - அக்குரூரன். கிளர் - விளங்குகின்ற. கிருதவன்மா: ஒருயாதவன். அளை - குகையில். அரி யேறு - ஆண் சிங்கம். சததன்னுவா: சத்தியபாமையின் மீது காதல் கொண்டவன்.

3518. மாறிலாய் - மாறுபாடில்லாதவனே; என்றது சததன்னுவா வுக்கு விளி. நெடுங்கணாளை - சத்தியபாமையை. தேறல் - தேன். தெரி யல் - விளங்குகின்ற. தேவகி குமரற்கு - கண்ணபிரானுக்கு. தாறு - குத்துக் கோலை. இன்னே - இப்பொழுதே. கோறல் செய்து - கொன்று. குரு மணி - சிவந்த நிறத்தையுடைய சியமந்தக மணியை. கோடி - கொள்வாயாக.

3519. அணைபுரை பணைமென் றோளார் - அணையைப் போன்ற பெருத்த மெல்லிய தோளையுடைய மகளிர்; "பணையெழி லணைமென்றோள்" (கலி. கடவுள். 9); மகளிர் தோளை அணையாகக் கூறுதல் மரபு. ஆரம் தாழ்ந்த - முத்துமாலை தங்கிய. பணைமுலை - பெருமையையுடைய முலை. தோளாரது முலை பொருத தாரான்; சத்திராசித்து. சத்திராசித்து உறங்குவ தற்குப் பள்ளி கொள்களிறு உவமை; "காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந் தாங்குப், பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னுங்கண்" (பெரும்பாண். 372-3.) துணர் - பூங்கொத்து. அமளி - படுக்கை. துஞ்சுழி - உறங்கும்போது. துஞ்சா மணியினை - கெடாத சியமந்தக மணியை; "துஞ்சா மணிப்பூண்" 3463.) தடக்கையான் - சததன்னுவா. (பி - ம்.) 3. எருக்கித் துஞ்சா.

3520. கோதை - மாலை; கூந்தல் எனலுமாம். மாழ்கி - மயங்கி. தந்தை தன்னை - சத்திரா சித்தை. இறந்தவரை எண்ணெய் பெய்தோணியி விடல்; கம்பராமாயணத்தில் தைலமாட்டுப் படலத்தாலும் உணரலாம். கொழுநன்றன்பால் எய்தினள்; கொழுநன் றன்பால் - கண்ணபிரானிடத்து.

எண்ணெய்பெய் தோணி யிட்டாங் கெய்தினள் கொழுநன் றன்பால்
புண்ணுறு புலவு வாட்கட் புலம்புமுத் துகுப்ப நின்றாள். சு)

3521. கேட்டனன் விளைந்த வண்ணங் கிளர்கட லுலகங் காப்பச்
சூட்டுவா ளரவப் பள்ளித் துயிற்சுவை துறந்த தொல்லோன்
மோட்டுவெண் டிங்கண் மேனி முன்னவன் றன்னொ டொல்லை
ஓட்டினன் கொடுஞ்சித் திண்டே ருற்றன னகர மாதோ. (எ)

3522. உந்துநீ ருலகங் காக்கு மொருதனித் திகிரி மாயன்
வந்தன னென்ன லோடும் வயிறெரி தவழ வஞ்சிக்
கொந்தழல் வேலி னானைக் கொன்றெரி மணிகைக் கொண்ட
கந்தடு களிற்றுத் தானைக் காவலன் கலக்க முற்றான். (அ)

3523. மழைத்தலை மின்ன னார்தம் வரிமுலைக் கோடு பாய்ந்து
கிழித்ததண் படலை மாலைக் கிருதவன் மாவை நண்ணி
அழற்சினந் திருகு கூர்வா யாழியா னோடும் வெம்போர்
இழைத்துமென் றியம்பி னானவ் வெழுவுறழ் தோளி னானே. (கூ)

3524. புரையறு பசும்பொற் கோட்டுப் பொருப்பொடு பொருத யானைக்
குருவளர் குழவித் திங்கட் கோட்டடி யகழ்ந்த கொற்றத்
தெரிசின நேமி யானொ டெங்ஙனம் பொருது மென்னா
வரிசிலைத் தடக்கை மன்னன் வழங்கநெஞ் சழுங்கி நைந்தான். (கo)

புலவு - மாமிசம்; வாளுக்கு விசேடம். புலம்பு முத்து - வருத்தத்தாலுண்டாகிய நீர்த்துளியை. கண்ணினின்றும் புலம்பு முத்துக்களை உகுக்கும்படி நின்றாள்.

3521. உலகத்தைக் காப்பதற்குப் பள்ளியினின்றும் துயிற்சுவை துறந்த தொல்லோன் விளைந்த வண்ணம் கேட்டனன். மோடு - பெருமை. முன்னவன் - பலராமன். ஒல்லை - விரைவில். தேரை ஓட்டினன். நகரத்தை உற்றனன்; நகரம் - துவரை.

3522. திகிரிமாயன் - கண்ணபிரான். வயிறு எரிதவழ - சததன்னுவாவின் வயிற்றில் பயத்தால் தீத்தவழ. வேலினானை - சத்திராசித்தை. மணி - சியமந்தக மணியை. கந்து அடு - கட்டுத்தறியை முறிக்கின்ற. காவலன் - சததன்னுவா.

3523. மழைத்தலை - மேகத்திடத்து. மின்னனார் - ஆய்ச்சியர். வரி - இரேகை. படலை மாலை - வகை மாலை. ஆழியானோடும் - கண்ணபிரானோடும். இழைத்தும் - செய்வோம். தோளினன் - சததன்னுவா; எழுவாய்.

3524. புரையறு - குற்றமற்ற. பொற்கோடு - பொன்னுலாகிய சிகரம். யானை - குவலயாபீடத்தின். குரு - நிறம். கோட்டடி - தந்தத்தின் முதலை. அகழ்ந்த - பறித்த. நேமியானொடு - கண்ணபிரானொடு. பொருதும் - போர் செய்வோம். மன்னன் - கிருதவன்மா. வழங்க - கூறிட. நைந்தான் - சததன்னுவா மனம் வருந்தினன்.

3525. விழாவரி மிழற்ற வண்டு விரைகமழ் முகைவாய் விள்ள
உழாவெரி பசும்பொற் றூதுண் டறங்குபூந் தாம மார்பன்
கழூஉவிளங் கார மார்பிற் காந்தினி புதல்வன் றன்பால்
எழாமழை வண்ணன் றன்மே லெதிர்பொர வியைது மென்றான்- (கக)

3526. அலையெழு தழலின் வெம்பி யாடம ருழந்த மல்லர்
கொலையுறப் பணைத்து வீங்கு குங்குமக் குவவுத் திண்டோள்
மலையொடு மலைய வல்லார் மண்ணினில் விசும்பின் மற்றை
உலகினி லுளர்கொ லென்ன வுரைபல வதவி னானல். (கஉ)

3527. காய்சமர் விழைவு தீர்ந்து காந்தினி புதல்வன் றன்மேல்
மாசற விளங்கு செங்கேழ் மணியினை யெறிதல் செய்யா
ஓசனை நூறு தாவு முளைவயப் புரவி யூர்ந்து
பூசல்வேற் றடக்கை மன்னன் பொருக்கெனப் போயி னானே. (கங)

3528. கடங்கலுழ் களிறன் னானைக் காயழல் கவிழ்க்குஞ் செங்கண்
மடங்கலே றன்ன துப்பின் வால்வளை யன்ன மேனிக்
கொடுஞ்சிலை யுழவ னோடு கொடுஞ்சியந் தடந்தே ரூர்ந்து
தொடர்ந்தன னவனி பொத்துஞ் சூழ்கழற் காலம் மானே. (கச)

---

3525. விழா - விழுந்து. வரி மிழற்ற - பாட்டை ஒலிக்க. உழா - உழுது. தாமம் - மாலை. மார்வன் - சததன்னுவா. கழூஉ - கழுவிய. ஆரம் - முத்துமாலை. காந்தினி புதல்வன் தன்பால் - அக்குரூரனிடத்து. எழா - எழுந்துசென்று. மழை வண்ணன்றன்மேல் - கண்ணபிரான் மீது.

3526. தழலின் - தீயைப்போல். அமர் - போர். மல்லர் கொலையுற வீங்கிய தோளையுடைய மலையொடு ; கண்ணபிரானோடு ; மல்லர் - சாணூரன் முஷ்டிக னென்பவர். மலையவல்லார் - போர் செய்ய வல்லவர்கள். உளர் கொல் - உள்ளாரோ ? இல்லை என்றவாறு. இப்பாடல் அக்குரூரன் மொழி.

3527. காய்சமர் - கோபிக்கின்ற போரின். காந்தினி புதல்வன் றன்மேல் - அக்குரூரன்மேல். கேழ் - ஒளி. மணியினை - சியமந்தக மணியை. செய்யா - செய்து. நூறு யோசனை தாவுகின்ற புரவியை ஊர்ந்து ; புரவி - குதிரை. பூசல் - போர். மன்னன் - சததன்னுவா. பொருக்கென - விரைய.

(பி - ம்.) 4. போயான் மன்னோ.

3528. கடம் - மதம். களிறன்னானை - சததன்னுவாவை. மடங்கலேறு - ஆண் சிங்கம். துப்பின் - வன்மையை யுடைய. வளை - சங்கு. உழவனோடு - பலராமனோடு. அவனிபொத்தும் - பூமியை மறைக்கின்ற. அம்மான் - கண்ணபிரான். அம்மான் உழவனோடு தேரூர்ந்து களிறன்னானைத் தொடர்ந்தனன்,

3529. ஒளிமதி கமலத் தோடு முறவுகொண் டுலவு மாபோல்
தளையவிழ் முளரிக் காட்டிற் சங்குசூ லுளைந்து சூழும்
வளவயன் மிதிலே யெல்லே மருவலும் பரிமா வீழக்
களிமதக் களிற்று மன்னன் கால்வலி காட்டி னுைல். (கரு)

3530. நொறில்வயப் புரவித் திண்டேர் நூக்கலன் கண்ண னேடிக்
குறுகின னுழி வெந்தீக் கொழுந்து விட்டெரிந்தா லன்ன
எறிசுட ரலங்க னேமி யெறிந்தன னிரியல் போய
கறையுறு வேலி னுன்றன் கருந்தலே தடிந்தான் மன்னே. (கசு)

3531. கட்டுயின் மேய கூர்வேற் காவல னொருவற் கொன்று
நெட்டுறக் கெய்தி னுன்பா னிழன்மணி காண்கி லானுல்
விட்டொளிர் மணிச்செஞ் சூட்டு விடவாாப் பள்ளி நீத்து
வட்டவெண் டிரைப்பார் போற்றும் வலம்படு திகிரிப் பெம்மான். (கஎ)

3532. திரைமுகங் கருக வென்றிச் சிலேகடை குழைத்து நீண்ட
வரைமுக முருக்கு முல்லே வனேபசுங் கழைவாய் வைத்த
கருமுகில் வண்ண னிங்குக் காண்கலன் மணிமற் றென்னு
முருகுவீற் றிருந்த பைந்தார் முன்னவற் கியம்பி னுைல் (கஅ)

---

3529. மதி - சந்திரன். கமலம் - தாமரை. தளே - கட்டு. முளரிக்காடு - தாமரைக் காடு. சூல் - கருப்பம். சங்குகளுக்கு மதி உவமை. மிதிலே - ஒரு நகர். பரிமா - குதிரை. மன்னன் - சததன்னுவா. கால்வலி காட்டினுன் - ஓடினுன்.

3530. நொறில் - விரைந்து செல்லுதலே யுடைய. நூக்கலன் - செலுத்தாதவனுய். கண்ணன் தேரை நூக்கலனுய் ஓடி. குறுகினன் - சததன்னுவாவின் அருகே அடைந்தான். நேமி - சக்கரத்தை. இரியல் போய - ஓடிச் சென்ற. வேலினுன்றன் - சததன்னுவாவினுடைய தடிந்தான் - வெட்டினுன்.

3531. கண்துயில் மேய - கண்ணுறங்குதலேச் செய்த. காவல னொருவன் - சத்திராசித்தை. நெட்டுறக்கு - இறத்தலே. எய்தினுன்பால் - சததன்னுவாவினிடத்து. நிழல் மணி - ஒளியை யுடைய சியமந்தக மணியை. விட்டு ஒளிர் - ஒளிவிட்டு விளங்குகின்ற. அராப்பள்ளி - ஆதிசேடனுகிய படுக்கையை. நீத்துப் பாரைப் போற்றுகின்ற திகிரிப் பெம்மான் : கண்ணபிரான். பெம்மான் காண்கிலான்.

3532. திரைமுகம் - கடலிடம். சிலேயின் கடையைக் குழைத்து : என்றது இராமாவதார நிகழ்ச்சியை. வரைமுகத்தை உருக்குகின்ற கழை; வரைமுகம் - மலேயிடம். கழை - வேய்ங்குழலே. கருமுகில் வண்ணன் - கண்ணபிரான். மணியை இங்குக் காண்கலன் என்னு முன்னவற்கு இயம்பினுன். முருகு - வாசனே. முன்னவற்கு - பலராமனுக்கு.

3533. இளவெயிற் கற்றை காலு மெரிமணி யிவன்றேத் தின்றேல்
வளநக ரொருவன் கைப்பால் வைத்தன னாகல் வேண்டும்
நளிமதி முகத்தாய் நீபோய் நாடுதி வருவ லென்னா
வெளிமுக டுடைக்கு மாட மிதிலைசென் றெய்தி னானே. (கக)

3534. ஓங்கிருந் தாழை நெற்றி யொண்பழன் வருக்கை போழ்ந்து
தீங்கரும் பெருத்திற் றாழ்ந்த தேனிறால் சிதைய வீழும்
வீங்குநீர் மருத வேலி மிதிலைமா நகாங் காக்கும்
வாங்குவின் மருவு தோளான் வழிபட வைகி னானல். (உ0

3535. சொரிமதக் களிறு போலத் துள்ளிவீ ழருவி மாலைத்
திருமணிச் செய்குன் றோங்கித் திகழ்தரு மிதிலை மன்னும்
ஒருகுழை யொருவன் றன்பா லொளிமணிச் சுடிகை நெற்றி
அரவுயர் கொடியி னான்வந் தடற்கதை பயின்றா னன்றே. (உக)

3536. கேழ்கிள ரார மார்பிற் கிருதவன் மாவுங் கொற்றக்
காழணி கதிர்மென் கொங்கைக் காந்தினி புதல்வன் றானும்
எழுயர் களிநல் யானை யிகற்சத தன்னு வாவை
ஆழியான் றுணித்தல் கேளா வஞ்சினர் பாற லுற்றார். (உஉ)

---

3533. கற்றை - தொகுதி. காலும் - கக்குகின்ற. மணி - சியமந்தக மணி. இவன்தேத்து - இவனிடத்து. நகரில் ஒருவன் கைப்பால்; கைப்பால் - கையிடத்து. நளி - பெருமை. மதிமுகத்தாய்: கண்ணபிரானுக்கு விளி. நாடுதி - தேடுவாயாக. பலராமன் மிதிலை சென்றான்.

3534. தாழை நெற்றி - தென்னை மரத்தின் உச்சியிலுள்ள. பழன் - தெங்கின் பழம். வருக்கை - பலா. கரும்பு எருத்தில் தாழ்ந்த - கரும்பின் கழுத்தில் தங்கிய. தேன் இறால் - தேன் கூடு. சிதைய - கெடும்படி. "காய்மாண்ட தெங்கின் பழம் வீழக் கமுகினெற்றிப், பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து" (சீவக. 31.) வாங்குவில் - வளைத்த வில்லை யுடைய. தோளான் - மிதிலை மன்னன். பலராமன் வைகினன்.

3535. மதத்திற்கு அருவியும் யானைக்குக் குன்றும் உவமை. மன்னும் - பொருந்திய. ஒருகுழை ஒருவன் - பலராமன். அரவுயர் கொடியினன் - துரியோதனன். கதை - கதை யுத்தம்.

3536. கேழ் - ஒளி. ஆரம் - முத்துமாலை. கொற்றம் - வெற்றி. காழ் - முத்துமாலை. காந்தினி புதல்வன் - அக்குரூரன். எழுயர் - எழு முழம் உயர்ந்த ; எழு உறுப்பு உயர்ந்த எனினும் ஆம். ஆழியான் - கண்ணபிரான். துணித்தல் கேளா - வெட்டியது கேட்டு. பாறலுற்றார் - கெட்டு ஓடலுற்றனர்.

3537 பண்ணெழ வண்டு பாடும் பனிமலர்ப் பாரி சாதத்
தண்ணிழ லடைந்த கூர்வாட் சத்திரா சித்துக் காங்குக்
கண்ணகன் ஞால முண்டு காய்சின வாவிற் றுஞ்சும்
அண்ணலம் பசும்புட் பாக னருங்கடன் புரிவித் தானல். (உ௩)

கலிவிருத்தம்.

3538. அத்தலை விரிதிரை யாழி மீமிசைப்
பைத்தபாம் பணைத்துயில் பச்சை மாமுகில்
முத்தவா ணகைமுக முளரி நோக்கினர்
உத்தவன் முதலின ருரைசெய் தாரரோ. (உ௪)

3539. எழில்வளர் காந்தினி புதல்வ னிவ்வழி
ஒழிதலிற் போலுமா லோங்கு வெண்ணிலாப்
பொழிதரு வலம்புரி பொறித்த செங்கையாய்
மழைவளங் கரந்ததிம் மல்ல னாடரோ. உ௫)

3540. கார்வளங் காத்தலிற் காசி மன்னவன்
ஆருட் சுபல்கனை யாங்க ழைத்திடா
ஏர்வளர் காந்தினி யென்னு மின்னகைப்
பேரெழிற் கன்னியைப் பெட்பி னல்கினான். (உ௬)

---

3537. பண் எழ - இராகம் உண்டாம்படி. பாரிசாதத் தண் ணிழலடைந்த சத்திராசித்து ; என்றது சத்திராசித்து சுவர்க்கம் சென்றான் என்பதுணர்த்தியது. ஆங்கு - துவரையில். ஞாலம் - பூமியை. புட்பாகன் - கண்ணபிரான். கடன் - நீர்க்கடன்.

(பி - ம்.) 3. கற்றிலை யாவிற் றுஞ்சும்.

3538. அத்தலை - அவ்விடத்து. ஆழி - கடல். பைத்த - படம் விரித்த. முகிலின் முகமாகிய முளரியை நோக்கினர். முகில் - கண்ணபிரான். உத்தவன் : ஒரு யாதவன் ; கண்ணபிரானுடைய அன்பன்.

(பி - ம்.) 2. துயில் பரம வானவன்.

3539. காந்தினி புதல்வன் - அக்குரூரன். இவ்வழி - இவ்விடத்தை விட்டு. ஒழிதலிற்போலும் - நீங்கியமையாற் போலும். ஆல் - ஆசை. வலம்புரி - சங்கம். செங்கையாய் : கண்ணபிரானுக்கு விளி. மல்லல் - வளப்பம் பொருந்திய. இந்நாடு மழைவளம் கரந்தது காந்தினி புதல்வன் ஒழிதலிற்போலும்.

3540. கார் - மேகம். காத்தலின் - மறைத்தலினால். சுபல்கனை - சுவபல்கு என்பவனை ; இவன், அக்குரூரனுடைய தந்தை. அழைத்திடா - அழைத்து. ஏர் - அழகு. காந்தினி - காசிமன்னனுடைய பெண் ; சுவபல்குவின் மனைவி ; அக்குரூரனுடைய தாய். பெட்பின் - விருப்புடன்.

3541. அங்கலுழ் மேனியவ் வணங்கின் வெம்முலை
பொங்கிய புகழினன் புணர்ந்து வைகலால்
மங்குலேய் மழைவள மல்கின் றோங்கிய
கங்கையந் தீம்புனற் காசி நாட்டகம். (உஎ)

3542. தாதையை யொத்தவத் தண்ணந் தாரினன்
போதரின் மழைவளம் பொலியு மீங்கென
ஓதலுங் காந்தினி யுயிர்த்த தோன்றலைத்
தூதினு லழைத்தனன் சுடர்செய் நேமியான். (உஅ)

3543. எரிமணித் திறத்தினு லெனையுந் தேறலன்
ஒருகுழை யொருவனவ் வுருவ மாமணி
தருகெனக் கரியவன் சாற்ற நல்கினன்
பரிவுறு காந்தினி பயந்த தோன்றலே. (உகூ)

3544. சேட்டிளங் கதிர்புரை தெய்வ மாமணி
சூட்டுவா ளாவணைத் தோன்றல் கைக்கொளாக்
காட்டின னவைக்களங் கண்டு வப்புற
மீட்டவற் களித்தனன் விருப்பி னென்பவே. (ங0)

---

3541. அம் கலுழ் மேனி - அழகு ஒழுகுகின்ற மேனியையுடைய. அணங்கின் - காந்தினியென்ற மங்கையின். புகழினன் - சுவபல்கு. வைகலால் - காசியில் தங்குதலால். மங்குல் - மேகம். காசி நாட்டகத்தில் மழை வளம் மல்கின்று ; மல்கின்று - நிறைந்தது.

3542. தாதையை - சுவபல்குவை. தாரினன் - அக்குரூரன். ஈங்குப் போதரின் மழைவளம் பொலியும் ; போதரின் - வந்தால். என ஓதலும் - என்று உத்தவன் முதலியவர் கூறலும். தோன்றலை - அக்குரூரனை. நேமியான் தூதினுல் அழைத்தனன் ; நேமியான் - கண்ணபிரான்.

3543. ஒருகுழை யொருவன் மணியின் திறத்தினுல் எனையும் தேறலன் ; ஆதலால் மணியைத் தருக எனக் கரியவன் சாற்ற ; ஒருகுழை யொருவன் - பலராமன். மணி - சியமந்தகமணி. தேறலன் - நம்பவில்லை. கரியவன் - கண்ணபிரான். சாற்ற - கூறிட. தோன்றல் நல்கினன் ; தோன்றல் - அக்குரூரன்.

3544. சேடு - பெருமை. மணி - சியமந்தகமணியை. தோன்றல் - கண்ணபிரான். கைக்கொளா - கையில் கொண்டு. அவைக் களத்தோர் கண்டு உவப்புறக் காட்டினன். அவற்கு - அக்குரூரனுக்கு.



# 27. காளிந்தியை மணஞ்செய்த அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

3545. அளைத்தலை வளர்ந்தவா ளரியின் மாண்டக
வெளிப்படு மைவரைக் காண வீழ்ந்திளங்
களிச்சுரும் பாற்றுதார்க் கமல லோசனன்
துளிப்புய லெனவளை துவைப்ப வேகினான். (க)

3546. நேரிலா வச்சிர நிலவத் தாங்கியும்
சோர்மதுக் கற்பகச் சோலை துன்னியுங்
காரிவர் மாளிகைக் கடவு ளிந்திரன்
பேர்பெறு மிந்திரப் பிரத்த மேவினான். (உ)

3547. தருமனோ டுளர்வளித் தநயற் கைதொழாப்
பொருசிலை விசயனைப் புல்லி யேனையோர்
இருவரும் பணிந்தெழ வினிது வந்தனன்
மருடரு பிறப்பிலி மகிழ்சி றந்தரோ. (ங)

3548. களிகொண்மா தவத்தினர் காண வெஃகிய
துளிமுகில் வண்ணநின் றோற்றங் காணிய

---

3545. அளைத்தலை வளர்ந்த - மலைக்குகையினிடத்து உறங்கிய. அரியின் - சிங்கத்தைப்போல். மாண்தக - மாட்சிமைப்பட. ஐவரை - பாண்டவரை. காண - பார்ப்பதற்கு. கமல லோசனன் - கண்ணபிரான். துளியையுடைய புயல் என; புயல் - மேகம். வளை துவைப்ப - சங்கம் முழங்க.

3546. வச்சிரம் - வைர ரத்தினம் (நாட்டுக்கு); வச்சிராயுதம்: (இந்திரனுக்கு) நிலவ - விளங்க. துன்னியும் - பொருந்தியும். கார் - மேகம். கடவுளாகிய இந்திரனது பேரைப் பெறும் இந்திரப்பிரத்த நகரை. இப்பாட்டு இந்திரனுக்கும் இந்திரப்பிரத்தநகருக்கும் சிலேடை.

3547. தருமனோடு - தருமபுத்திரனோடு. உளர்வளித் தநயன் - அசைகின்ற காற்றின் புதல்வனான பீமனை. கைதொழா - கையால் தொழுது. விசயனை - அருச்சுனனை. புல்லி - தழுவி. இருவரும் - நகுல சகதேவர். மருள்தரு பிறப்பிலி - மயக்கத்தைத் தரும் பிறவியில்லாத கண்ணபிரான்; எழுவாய்.

3548. மாதவத்தினர் - முனிவர்கள். காணவெஃகிய - காணுதற்கு விரும்பிய. முகில்வண்ண: கண்ணபிரானுக்கு விளி. காணிய - காணு

அளியமெத் தவமுன மாற்றி னேமெனத்
தளையவிழ் நெஞ்சினன் றரும னேத்தினன். (ச)

3549. இந்திர நீலமொத் தெறிக்கு மேனியன்
இந்திரப் பிரத்தநின் றெழுந்து வேட்டமேல்
இந்திரன் சிலையென விலங்கு பூந்தொடை
இந்திர குமரனோ டேகி னனரோ. (ரு)

சந்தக் கலிநிலைத்துறை.

3550. அளிகோடி விளையாடு மந்தார நறுநீழ லணியெய்தவோர்
இளவஞ்சி யெனமாத ரின்சொற் பசுங்கிள்ளை யெனவெல்லுலாம்
வெளிசேர் கமஞ்சூற் கருங்கொண்ட லூேய்கின்ற மின்னென்னவோர்
களியன்ன மெனநின்று காளிந்தி விளையாடல் கண்டானரோ. (சு)

3551. அரக்குண்ட செந்தாம ரைப்போது நிகர்செங்கை யலர்மீதிலோர்
விரைக்கொந்து மலர்தாங்கி விளையாடு வாள்செவ்வி விழிகண்டுபாய்
திரைக்கொந்த லம்புங் கடற்கட் பொலம்போது திகழ்மாதெழா
வரக்கண்ட நாளிற் களித்தான் மணிக்கோல வரைமார்பினன். (எ)

---

தற்கு. அளியம் - அளிக்கத்தக்க யாங்கள். முனம் எத்தவத்தை ஆற்றினேம்; முனம் - முற்பிறப்பில். என - என்று. தளை - கட்டு. நெஞ்சினனாய்த் தருமன் ஏத்தினன்.

3549. எறிக்கும் - ஒளி வீசுகின்ற. மேனியன் - கண்ணபிரான். வேட்டமேல் - வேட்டையாடுதற்கு. இலங்கும் - ஒளிவிடுகின்ற. பூந்தொடை - பூமாலை. பூமாலைக்கு இந்திரவில் உவமை; "திருவிற் றூம முருவுபட நாற்றி" (பெருங். 1. 49 : 82); "மழைச்சிலையால் வழிதோ ரணமிட்டனன் வாசவனே" (தக்க. 182.) இந்திர குமரனொடு - அருச்சுனனோடு. மேனியன் குமரனொ டேகினன்.

3550. அளி - வண்டு. அணியெய்த - அழகுபெற. வஞ்சி - கொடி. மாதர் - காதலையுடைய. கிள்ளை - கிளி. எல்லுலாம் - ஒளி பரக்கின்ற. கம சூல் - நிறைந்த கருப்பத்தைக் கொண்ட. கொண்டல் - மேகம். காளிந்தி - சூரியனுடைய பெண்.

3551. அரக்கு - சிவப்பு. நிகர் - ஒத்த. செங்கையாகிய அலர்மீதில் மலரைத்தாங்கி. விரைக்கொந்து மலர் - வாசனையையுடைய கொத்தாகிய பூ. விளையாடுவாளது செவ்வியைக் கண்டு. செவ்வி - அழகு. திரைக்கொந்து - அலையின் தொகுதி. அலம்பும் - ஒலிக்கின்ற கடற்கண் - கடலினிடத்து. போது திகழ்மாது - தாமரைப்பூவில் விளங்குகின்ற திருமகள். எழா - எழுந்து. நாளின் - அந்நாளைப்போல். மார்பினன் களித்தான்; மார்பினன் - கண்ணபிரான்.

3552. பிறைக்கூ ரெயிற்றுட லரவிற் றிருத்தாள் பெயர்ந்தாடுவோன்
குறிப்பா லடைந்தாடல் விசயன் பசும்பொற் கொழுந்தென்னவோர்
வெறிப்பாரி சாதத்தி னிழனின்ற மடமாதை விரைவிம்முதார்
அறற்கோதை நீயாரை விழைவென்னு ளாயென் றறைந்தானரோ. (அ)

3553. பருதிக்கு மகளோர் பசுங்கொண்டல் போன்மன்னு பாலாழிசேர்
விரைகக்கு துளவக் கருங்கொண்டன் மணமெய்த விழைவேனெனத்
திரையுற்ற வமுதூறு சேதாம்பன் மலரன்ன செவ்வாய்திறந்
துரையற்ற பொன்னங் கொழுந்தன்ன வெழினங்கை யுரையாடினுள். ()

3554. பண்டோயு மழலைப் பசுங்கிள்ளை யினமென்று பாலெய்தவாய்
விண்டாளை யம்பொற் றடந்தேரின் மிசைகொண்டு மீண்டெய்தினன்
வண்டா யிரங்கோடி யிசைபாடி முகைவிண்டு மழைமட்டுவார்
தண்டா மரைச்செல்வி முலையானை விளையாடு தடமார்பினன். (கo)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3555. ஏர்முகந் தெடுக்க லாகு மிளமுலை மலராள் கொண்கன்
நீர்முகந் தெழுகார் தோயு நெடுங்கொடித் தடந்தேர் தூண்டப்

---

3552. பிறைக்கூர் எயிற்று - பிறைச்சந்திரன் போன்ற கூரிய பற்களை யுடைய. அரவில் - காளியன்மீது. தாள்பெயர்த்து - கால்மாறி. ஆடுவோன் - கண்ணபிரான். ஆடுவோனுடைய குறிப்பால் விசயன் அடைந்து. விசயன் - அருச்சுனன். வெறி - வாசனை. மாதை - காளிந்தியை. விரை - வாசனை. அறல்கோதை - கருமணல்போன்ற கூந்தலை யுடையவளே ; விளி. யாரை - யார்? விழைவு என் உளாய் - என்ன விருப்பமுடையாய்.

3553. பருதிக்கு மகள் - யான் சூரியனுக்குப் பெண். கொண்டல் - மேகம். பாலாழி - பாற்கடல். விரை - வாசனை. கருங்கொண்டல் மணம் எய்த - கண்ணபிரானை மணந்திட. விழைவேன் - விரும்புவேன். திரை - கடல். உரையற்ற பொன் - மாற்று இல்லாத பொன். நங்கை - காளிந்தி. என உரையாடினுள்.

3554. பண் - இராகத்தின் தன்மை. கிள்ளை - கிளிகள். இன மென்று பாலெய்த - தம்முடைய இனமான கிளியின் மொழியென்று காளிந்தியின் அருகே செல்லும்படி, வாய்விண்டாளை - வாய்திறந்து மொழிந்த காளிந்தியை. ஆயிரம்கோடி வண்டுகள். முகை - அரும்பு. மழைமட்டு வார் - மழையைப்போல் தேன் ஒழுகுகின்ற. தாமரைச் செல்வி - திருமகளுடைய. முலையாகிய யானை விளையாடுகின்ற. மார்பினன் - கண்ணபிரான். மார்பினன் எய்தினன்.

3555. ஏர் - அழகு. மலராள் - திருமகளுடைய. கொண்கன் - கண்ணபிரான். நீர் - கடல் நீரை. கார் - மேகம். தூண்ட - செலுத்த. பொன்னம் பொருப்பு - மேருமலை. பார்த்தன் - அருச்சுனன். கார்முகம்

போர்முகங் கடந்து பொன்னம் பொருப்பென வளர்தோட் பார்த்தன்
கார்முகங் குழைய வாங்கிக் காவெரி யூட்டி னானால். (கக)

3556. அரிவயி றாரத் தேனுண் டாற்றுதன் கான மெல்லாம்
எரிவயி றார நுங்கி யீந்தது வெண்ணெய் வாரித்
திருவயி றார மாந்து செம்மன்மைத் துனற்குத் திண்டேர்
வரிவயி றார்ந்த பாந்தள் வடிக்கணைத் தூணி வல்வில். (கஉ)

3557. வீறுசால் வரிவிற் பார்த்தன் வெவ்வழ லூட்டு கின்ற
நாறிணர்க் காவி னாவி நல்கிய திறத்தி னாலே
தேறுநீர் நிலமீங் கென்னத் தெரிவரு மாடஞ் செய்தான்
மாறிலா மயனென் றோது மன்பெருந் தச்சன் மன்னோ. (கங)

3558. வான்பொழி கால மெல்லாம் வலம்புரித் தடக்கை மாயன்
ஊன்பொழி வடிவே லைவ ருவப்புற வாங்கு வைகிக்
கான்பொழி யலங்கன் மாலைக் காமர்கா ளிந்தி யோடும்
தேன்பொழி கைதை வேலித் திருநகர்க் கெய்தி னானால். (கச)

3559. தெளிந்தவா னொழுகு கங்கைத் திருநதி நீர மாந்தி
வளர்ந்தமந் தாரத் தம்பொன் மலர்மழை யமரர் தூற்றக்
களங்கனி வண்ணத் தண்ணல் கற்பகக் கொழுந்து போல
விளங்குகா ளிந்தி மன்றல் விதியுளி யியற்றி னானே. (கரு)

---

குழைய வாங்கி - வில்லை வளையவளைத்து. கா எரி ஊட்டினான் - காண்டவ வனத்தைத் தீயா லுண்ணச்செய்தான்.

3556. அரி - வண்டுகள். ஆற்று - ஒலிக்கின்ற. கானம் - காண்டவ வனம். எரி - தீ. நுங்கி - உண்டு. மாந்தும் - உண்ணுகின்ற. செம்மல் மைத்துனற்கு - கண்ணபிரானுடைய மைத்துனனாகிய அருச்சுனனுக்கு. வரி - இரேகை. பாந்தளாகிய கணை. எரி, தேரையும், கணையையும், தூணியையும் வில்லையும் மைத்துனற்கு ஈந்தது.

3557. வீறு - பெருமை. பார்த்தன் - அருச்சுனன். நாறு - மணம் வீசுகின்ற. காவின் - காண்டவ வனத்தில். ஆவி - தன் உயிரை. நீர்ஈங்கு என்னவும் நிலம் ஈங்கு என்னவும் தெரிவரும் மாடத்தை ; தெரிவரும் - அறிதற்கரிய. மயன் என்னும் தச்சன் செய்தான்.

3558. வான் - மேகம். வலம்புரி - சங்கு. மாயன் - கண்ணபிரான். ஊன் - மாமிசம். ஐவர் - பாண்டவர். ஆங்கு - அம்மாடத்தே. வைகி - தங்கி. கான் - வாசனை. அலங்கல் - அசைகின்ற. காமர் - விருப்பம் மருவிய. கைதை - தாழை. நகர்க்கு - துவரை நகர்க்கு.

3559. வான் - ஆகாயம். கங்கைநதியின் நீரத்தை மாந்தி ; நீரம் - நீர். மந்தாரத்து மலராகிய மழையை. அமரர் - தேவர். களங்கனி வண்ணத் தண்ணல் - களாப்பழம் போன்ற நீலநிறமுடைய பெருமை பொருந்திய கண்ணபிரான். மன்றல் - மணத்தை. விதியுளி - விதிப்படி.

# 28. மித்திரவிந்தையை மணம்புணர் அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3560. மருவுயிர்த் தலர்ந்த மாலை வாள்வசு தேவன் றன்னே
டொருவயிற் றுதித்த நங்கை யுயிர்த்தவள் வரிவண் டூத
விரையெடுத் தெறிபூங் கோதை மித்திர விந்தை வையம்
திருவயிற் றொருபால் வைத்த செம்மன்மேல் விழைதல் செய்தாள். (க)

3561. வரிச்சிறை யுவணப் பைம்புள் வலவயி னுயர்த்த கார்மேல்
விருப்புறு மிளையா டன்னை வீறுசா லவந்தி யாளும்
அரத்தமுண் டொளிருங் கூர்வே லடல்செய்விந் தானு விந்தர்
உருத்தெழு சினத்த பாந்த ளுயர்த்தகா வலற்கு நேர்ந்தார். (உ)

3562. கொவ்வைவாய்ப் பதித்த முத்தக் கோவையிற் றிகழு மூரல்
அவ்வளைத் தளிர்க்கை மாதி னரும்பெறன் மன்றல் வேட்டுக்
கவ்வைநீர் வேலி காக்குங் காவலர் குழாத்தோ டுற்றான்
வெவ்வழ னச்சு நாக வெல்கொடி யுயர்த்த வேந்தே. (ங)

---

3560. மரு - வாசனை. வசுதேவன் றன்னோடு ஒரு வயிற்று உதித்த நங்கை - வசுதேவனுடைய உடன்பிறந்தவளான ராஜாதிதேவி. நங்கை உயிர்த்தவளாகிய மித்திரவிந்தை : பூங்கோதையை யுடைய மித்திரவிந்தை. வையத்தை வயிற்றி னொருபாலில் வைத்த செம்மல் : கண்ணபிரான். வையம் - பூமி. மித்திரவிந்தை செம்மல்மேல் விழைதல் செய்தாள் ; விழைதல் - விரும்புதல்.

3561. உவணப் பைம்புள் - கருடனை. உயர்த்த - தனக்குரிய கொடியாக உயர்த்திய. கார்மேல் - கண்ணபிரான்மீது. இளையாள்தன்னை - மித்திரவிந்தையை. வீறுசால் - பெருமைமிக்க. அவந்தி - ஒரு தேசம். அரத்தம்- இரத்தம். விந்தானு விந்தர் - விந்தர், அநுவிந்தர் ; இவர்கள் மித்திரவிந்தையின் தமையன்மார்கள் ; தந்தையின்பெயர் ஜயத்சேனன் என்பது. உருத்து- கோபித்து. பாந்தளுயர்த்த காவலற்கு - பாம்பைக் கொடியாக உயர்த்திய துரியோதனனுக்கு. நேர்ந்தார் - மணம்செய்து கொடுப்பதாகக் கூறினர்.

3562. கொவ்வைக்கனி போன்ற வாயில். மூரல் - பற்கள். அவ்வளை- அழகிய வளைகளையுடைய. மாதின் - மித்திரவிந்தையின். மன்றல்வேட்டு - கலியாணத்தை விரும்பி. கவ்வை - ஒலி. காவலர் - அரசர், வேந்து - துரியோதனன் ; எழுவாய்.

3563. காரெழில் கவற்றுங் கூந்தற் கைபுனைந் தியற்றாக் காமர்
ஏர்குடி யிருந்து வீங்கு மிளமுலைக் கொடிய னாளை
ஆரமர் கடந்த கூர்வா ளரசவை பனிக்கப் புக்கு
வார்மதுக் கமழும் பைந்தார் மாயவன் கவர்ந்து கொண்டான். (௪)

3564. மொய்வரை துளக்குங் காற்று முகந்தெறி சிறைப்புட் பாகன்
மௌவலங் குழலி னாளை வௌவின னிற்றல் கண்டான்
வெவ்வரா வுயர்த்தோ னங்கு விழுச்சமம் புரிய கில்லான்
செவ்வடி சிலைக்கை மன்னர் திரளொடு சென்றான் மன்னோ. (௫)

3565. வெம்மதஞ் செருக்கித் துஞ்சா வெண்பிறைக் கோட்டு வேழம்
கைம்முகந் தெடுத்த வேழக் கரும்பொடு நடக்கு மாபோல்
வைம்முக மணிந்த வேற்கண் மாதொடு வடவை காலும்
செம்முகத் திகிரி மாயன் றேரிவர்ந் தேகி னானல். (௬)

3566. நடாக்கரும் பெழுதி நட்ட நாகுவே யன்ன மென்றோட்
படாக்களி யிளமென் கொங்கைப் பவளவாய் மயில னாளை
விடாக்களிச் சுரும்புண் கோதை விதியினிற் புனைந்து வேட்டான்
கடாக்களி றழைப்ப வந்த காயழற் றிகிரி மாயோன். (௭)

---

3563. கார் எழில் கவற்றும் - மேகத்தின் அழகை வருந்தச்செய்கின்ற. கைபுனைந் தியற்றாக் காமர் ஏர் - கையால் அலங்கரித்தல் செய்யாத விருப்பம் மருவிய அழகு. கூந்தலையும் முலையையுமுடைய கொடியனாளை; மித்திர விந்தையை. அமர் - போர். பனிக்க - நடுங்கும்படி. மாயவன் - கண்ண பிரான்.

3564. மொய்வரை துளக்கும் காற்று - பலமுடைய மலைகளை அசைக்கின்ற காற்றை. புட்பாகன் - கண்ணபிரான். மௌவல் - முல்லை. குழலினாளை - மித்திர விந்தையை. அரா வுயர்த்தோன் கண்டான்; அராவுயர்த்தோன் துரியோதனன். சமம்புரிய கில்லானாய் மன்னர் திரளொடு சென்றான்; சமம் - போர். புரிய கில்லான் - செய்ய முடியாதவனாய்.

3565. மதத்தால் செருக்கி; செருக்கி - களிப்புற்று. துஞ்சா - உறங்காத. வேழம் - யானை. கையால் முகந்தெடுத்த வேழக் கரும்பொடு; கை - துதிக்கை. வேழக்கரும்பு: ஒருவகைக் கரும்பு. வை - கூர்மை. மாதொடு- மித்திர விந்தையோடு. வடவை காலும் - வடவைத்தீயைக் கக்குகின்ற; திகிரிக்கு விசேடம். மாயன் - கண்ணபிரான். கண்ணபிரானுக்கு யானையும், மித்திர விந்தைக்கு வேழக் கரும்பும் உவமை.

3566. நடாக் கரும்பு - எழுது கரும்பு; "நடாஅக் கரும்பமனற தோளாரை" (கலி. 112 : 6.) நாகுவேய் - இள மூங்கில். படா - சாயாத. மயிலனாளை - மித்திர விந்தையை. விடாத களிப்புடைய சுரும்பு. கோதை- மாலையை. மயிலனாளுக்குக் கோதையைப் புனைந்து. வேட்டான்-மணம் செய்து கொண்டான். கடாக்களிறு - மதத்தையுடைய கஜேந்திரன். மாயோன் - கண்ணபிரான். மாயோன் வேட்டான். (பி - ம்.) 4. திகிரி மாலோன்.

# 29. சத்தியையை மணம் புரிந்த அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியச் சந்த விருத்தம்.

3567. குளிறுவெண் டாங்கக் கருங்கடல் பசும்பொற்
குடுமிமால் வரையினாற் கலக்கி
அளறெழக் கடைய விளையமு தன்ன
வலர்முலைச் சத்தியை தன்னைக்
களிறுமாய் செந்நெற் கழனிசூழ் கிடந்த
கோசல நாடுகாத் தளிக்கும்
ஒளிறுவேற் றடக்கை நக்கின சித்தென்
றுரைபெறு மன்னவ னுயிர்த்தான். (க)

3568. ஏழிருங் கடலுங் கூப்பிடப் பாவை
யெழுந்தகெள் ளமுதினை வெருட்டி
ஏழிசை கடந்த மழலையந் தீஞ்சொ
லிளநகைப் பவளவாய் மகளை
ஏழிருங் குன்று மெதிர்பொரு துடைய
வேந்துதோட் கோசலத் திறைவன்
ஏழ்விடை தழுவு மெறுழ்வலி படைத்தாற்
கீகுவ னெனவுரை யிசைத்தான். (உ)

3567. குளிறு - முழங்குகின்ற. தாங்கம் - அலை. குடுமி - உச்சியை யுடைய. கடலை வரையினாற் கலக்கி. அளறு - சேறு. அமுதன்ன சத்தியை; களிறுமாய் செந்நெற்கழனி - யானைநின்றால் மறையும் செந்நெல்லையுடைய வயல்; "களிறுமாய் கழனியாக்கமும்," "களிறுமாய் கதிர்ச் செந்நெற்கழனி நாட்டிடை" (சீவக. 54, 1617.) ஒளிறு - ஒளி வீசுகின்ற. நக்கினசித்து என்னும் மன்னவன் சத்தியையை உயிர்த்தான்.

(பி - ம்:) 1. தாங்கக் குரவைவாள் பசும்பொன்; வரைவினால் மறுகி.

3568. பாவை - கடலில். வெருட்டி - வெருளச் செய்து. ஏழ் இசை - ஏழு இராகங்களை. வெருட்டிக், கடந்த சொல்லையுடைய மகளை; சத்தியையை. ஏந்து - உயர்ந்த. கோசலத் திறைவன் - நக்கினசித்து. ஏழ் விடை - ஏழு எருதுகளை. எறுழ்வலி - மிக்க வன்மை. மகளை ஈகுவன்.

(பி - ம்) 4. ஈகுது மெனவுரை யிசைத்தான்.

3569. செறிதிசை தழுவு கொற்றவேற் றானைத்
திரளினர் திங்கள்வெண் குடையர்
மறிதிரை தழுவு குழவிவெங் கதிர்போல்
வயங்குநீண் முடியினர் தெய்வ
நறுவிரை தழுவு மாலைதாழ் மார்பர்
நாகிள விடைபுரை நடையர்
இறுவரை தழுவு திணிபுயத் தரச
ரெழுவிடை தழுவுவா னிறுத்தார். (௩)

3570. இடியுரு மேற்றிற் சிலைத்தெதிர் நடக்கு
மேழ்விடை தழுவுவா னேற்ற
படுகளிச் சுரும்பு படிந்துழக் கிழிந்த
பனிமலர்ப் பசுந்தொடை மார்பும்
குடவரை பொருவு திணிதடந் தோளுங்
கூர்நுதிக் கோடுழக் கலங்கி
வடியுறு நெடிய குடுமிவேற் றடக்கை
மன்னவர் மதவலி யழிந்தார். (௪)

3571. வாளைவெம் போர்க்கு வருகெனப் பிறழு
மழைக்கணார் மனங்கவர் வனப்பின்
வேளையீன் றெடுத்த வேரியந் துளவோன்
விற்றிறல் விசயனே டெழுந்து

---

3569. கொற்றம் - வெற்றி. தானைத் திரளினர் - சேனைக் கூட்ட முடையவர். மறிதிரை - மடங்குகின்ற அலையில். கதிர் - சூரியன். தெய்வ நறுவிரை - தெய்வத்தன்மை பொருந்திய நல்ல வாசனை. தாழ் - தங்கிய. நாகிள் விடைபுரை - மிக்க இளமையை யுடைய எருதுபோன்ற. இறுவரை - பெரிய மலை. திணி - நெருங்கிய. தழுவுவான் இறுத்தார் - தழுவுதற்கு வந்து தங்கினர்.

3570. இடிக்கின்ற உருமேற்றைப்போல் சிலைத்து ; சிலைத்து-முழங்கி. ஏற்ற - எதிர்த்த. படுதல் - ஒலித்தல். தொடை - மாலை. குடவரை - அத்தமன மலை. கூர்நுதிக் கோடு உழ - கூர்மையான நுனியையுடைய கொம்புகள் உழுதலால். வடி - கூர்மை. குடுமி - உச்சி. விடையைத் தழுவுவான் ஏற்ற மன்னவர், மார்பும் தோளும் கலங்கி மதவலி அழிந்தார் ; மதவலி - மிக்க வன்மை.

3571. வாளை - வாளாயுதம் ; வாளை என்னும் மீன் ; "வாளையா நெடுங்கண்" (சூளா. கலியாணச் 227.) வருக என ; என - என்று கூறி. பிறழும் - மாறுபடுகின்ற. மழைக்கணார் - மகளிரது. மனத்தைக் கவர்கின்ற வனப்பினை யுடைய வேளை : மன்மதனை ; என்றது பிரத்துமனனை. துள

பாளைவாய்க் கமுகின் பழக்குலை சிதறப்
பகட்டிள வாரலொடு மறலிக்
காளையங் கயல்பாய் கமழலந் துறைசூழ்
கோசல நாடுசென் றடைந்தான். (ரு)

3572. வெண்டயி ருரைத்த காரிரும் பித்தை
விரைகமழ் முல்லையம் பசுந்தார்
அண்டர்தங் கொழுந்து தெண்டிரைப் பிறந்த
வாரமு தன்னவஞ் சாயற்
பண்டரு மழலைப் பவளவா யணங்கின்
பணையிள வனமுலை தழுவக்
கொண்டலி னேரே ழுருவுகொண் டோரேழ்
கொல்சின விடைதழீஇ யினனால். (சு)

3573. திலகவெண் கவிகை மன்னவ னுவந்து
செஞ்சுடர் வலங்கொள்பொற் கோட்டு
மலைபக விடிக்கு மத்தமால் யானை
மணிமருப் பொசித்தகார் வண்ணற்
கிலவிதழ் குலிக மூட்டிவைத் தன்ன
வின்னகைச் செய்யவாய்க் கருங்கட்
கலவமா மஞ்ஞை கடுக்குமஞ் சாயற்
கதிர்முலைக் கன்னியைக் கொடுத்தான். (எ)

---

வோன் - கண்ணபிரான். விசயன் - அருச்சுனன். பழக்குலை சிதறும்படி கயல், வராலொடு மறலிப் பாய்கின்ற துறை; காளை - இளமைத் தன்மையை யுடைய. கயல், வரால்: மீன் வகைகள். மறலி - மாறுபட்டு.

3572. உரைத்த - பூசிய. பித்தை - தலைமயிர். பித்தையையும் தாரையு முடைய அண்டர்தம் கொழுந்து; கண்ணபிரான்; அண்டர் - இடையர். திரை - கடலில். அமுதன்ன சாயலை யுடைய அணங்கு; பண் தரு மழலையை யுடைய அணங்கு; என்றது சத்தியையை. பண்தரும் - இராகத்தை ஒத்த. தழுவ - தழுவும்பொருட்டு. கொண்டலின் - மேகத்தைப்போல். எழு உருவங்கொண்டு, எழு விடையைத் தழீஇ யினன்.

3573. திலக வெண்குடை; "திலக வெண்குடைப், பெருமகன்" (சீவக. 183); திலகம் - மேலாதல். மன்னவன் - நக்கினசித்து. பொற் கோட்டு - பொற் சிகரத்தையுடைய. பக - பிளவுபட. யானை - குவலயா பீடத்தின். கார் வண்ணற்கு - கண்ணபிரானுக்கு. இல விதழ் - முள்ளில வமலர் போன்ற இதழில். குலிகம் - சாதிலிங்கத்தின் சிவப்பை. கலவம் - தோகை. மஞ்ஞை - மயில். கடுக்கும் - ஒத்த. கதிர் - கதிர்த்த; ஒளி எனலுமாம். கன்னியை - சத்தியையை.

(பி - ம்.) 1. செஞ்சிலை வளங்கொள்.

3574. குரைதிரைப் பரவை யமுதுவாய் நிறைசெங்
குடம்புரை செருத்தலா னினமும்
விரிநிலாச் சொரியும் வாலுளைப் புரவி
வெள்ளமு மழிமதக் களிற்றுத்
திரளுநீள் கொடிஞ்சித் தேரது தொகையுஞ்
சிலைப்பசுந் தெரியல்வேந் துதவ
ஒருதனி மூவா வறுகுணப் பெருமா
னுறைதரு திருநகர்க் கெழுந்தான். (அ)

3575. மழைக்கருங் கண்ணு டன்னொடு கமஞ்சூன்
மழைமருண் மேனியா னெழலும்
தழைத்தகூர்ங் கோட்டுத் திரளிமி லேறு
தழுவுவான் படர்ந்திக லழிந்த
புழைக்கைமால் யானைப் புரவல ரீண்டிப்
பொருதொறும் பொருதொறு முடையக்
குழைத்தனன் வரிவிற் குழைத்ததண் கானங்
கொந்தழ லூட்டுபோர்க் குருசில். (கூ)

3576. உடைதிரை யிடறு வலம்புரி முழங்க
வொளிறுவெண் சங்கினங் கலிப்பச்
சுடர்விடு பவளக் கொழுங்கொடி நுடங்கத்
தூச்சிறை மடவனம் பூத்த

---

3574. குரை திரை - ஒலிக்கின்ற அலையையுடைய. குடம்புரை செருத்தல் ஆன் இனம் - பாற்குடம் போன்ற மடியையுடைய பசுக் கூட்டம்; "பாற்குடமருட்டு செருத்தலான் கன்று" (2802, குறிப்புரை.) வால் உளைப் புரவி - வெண்மையான தலையாட்டத்தை யுடைய குதிரை. அழிமதம் - ஒழுகுகின்ற மதம். திரள் - கூட்டம். சிலைப்பசுந்தெரியல் - இந்திரவில்போன்ற பசுமையான மாலை; "இந்திரன் சிலையென விலங்கு பூந்தொடை" (3549.) வேந்து - நக்கினசித்து. மூவா - மூத்தலில்லாத. அறுகுணப் பெருமான் - பகவன்; என்றது கண்ணபிரானை; (குறள், 1. பரி.) நகர்க்கு - துவாரகைக்கு.

3575. கண்ணாள் தன்னொடு - சத்தியையொடு. கமஞ்சூல் - நிறைந்த கருப்ப முடைய. மேனியான் - கண்ணபிரான். கோட்டு - கொம்பையுடைய. இமில் ஏறு - கொண்டையை யுடைய இடபத்தை. இகல் அழிந்த - வீரம் இழந்த. புழை - துளை. புரவலர் - அரசர். பொரு தொறும் - போர் செய்யுந்தோறும். உடைய - தோற்றுக் கெடும்படி. வில்லைக் குழைத்தினன். குழைத்த தண்கானம் - தளிர்த்த குளிர்ச்சி பொருந்திய காண்டவ வனத்தை. குருசில் - அருச்சுனன். குருசில் குழைத்தனன்.

(பி - ம்) 4. பொற்குரிசில்.

3576. இடறு - செலுத்துகின்ற. வலம்புரி - ஒருவகைச் சங்கம். கலிப்ப - முழங்க. நுடங்க - அசைந்து ஒளிவிட. மடவனம் பூத்த -

முடமுதிர் தடந்தாண் முள்ளிலைத் தாழை
முருகுவந் தெதிர்கொள முந்நீர்க்
கடல்விளிம் படுத்த கன்னிமா நகரங்
கருங்கடல் வண்ணன்வந் தடைந்தான். (கo)



# 30. பத்திரையை மணம்புரி அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3577. தழலும்வெஞ் சினவாட் படைவசு தேவன்
றங்கைதன் டுளிமுகில் வயிறு
கிழிபட நிவந்த தண்டலை வேலிக்
கேகய நாட்டினுக் கிறைவன்
எழில்வரை யகலம் புணர்சுத கீர்த்தி
யீன்றசெவ் வாய்ப்பசுங் கிள்ளை
மழலையந் தீஞ்சொற் பத்திரை பூவை
வண்ணன்மேற் காதல்கூர்ந் தனளால். (க)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3578. தெளித்தொளி விரிக்கும் பச்சைத் திருமணி குயின்ற லென்னக்
கிளைத்தபைந் துளவோன் செவ்வி கேண்மையிற் கேட்ட ஞான்றே
வளர்த்தபைங் கிளியி னம்மென் மழலைகேட் டுவக்கு மேனும்
ஙளிப்புயற் கூந்தல் யாழி னல்லிசை கேட்கி லாளால். (உ)

---

அன்னப் பறவைபோற் றோன்றிய. முடம் - வளைவு. முருகு - வாசனை. முந்நீர் - கடல். கன்னி - அழிவின்மை. நகரம் - துவரையை. கடல் வண்ணன் - கண்ணபிரான்.

3577. தழலும் - கொதிக்கின்ற. நிவந்த - உயர்ந்த. தண்டலை - சோலை. வசுதேவன் தங்கையாகிய சுதகீர்த்தி; கேகய நாட்டினுக்கு இறைவனது அகலம் புணர்ந்த சுதகீர்த்தி; சுதகீர்த்தியீன்ற பத்திரை. பூவை வண்ணன்மேல் - கண்ணபிரான்மீது.

3578. தெளித்து - தெளிவித்து. பச்சைமணியால் குயின்றலென்ன; குயிலல் - பண்ணுதல். கிளைத்த - தோன்றிய. துளவோன் - கண்ணபிரானுடைய. செவ்வி - அழகை. கேண்மையின் - உறவினரால். கிளியினது மழலையை. அம்மென் மழலை - அழகிய மெல்லிய மழலைச்சொற்களை. ஙளிப் புயல் கூந்தல் - செறிந்த மேகம்போன்ற கூந்தலையுடைய பத்திரை. காமத்தை வளர்க்குமாதலின் யாழினிசையைக் கேட்கிலாள் என்றாள்.

3579. திகழ்மணி வண்ணன் செவ்வி செவிமுத லுற்ற போதே
நகுமணி தழைந்த பொற்பூ ணலத்தகப் புனையு மேனும்
தகைபடு மொருகாழ் முத்தந் தயங்கிணர்க் கோங்கின் யாணர்
முகிழெனு முகிழ்ந்த கொங்கை முன்றிலிற் புனைக லாளால். (௩)

3580. (1) அஞ்சன வண்ணன் செவ்வி யஞ்செவிப் பட்ட வன்றே
அஞ்செனக் கிடந்த வம்பி னாடமர் கடந்த கண்ணிற்
கஞ்சன மெழுது மேனு மஞ்சனம் புரைபைங் கூந்தல்
அஞ்சுமற் றஞ்செஞ் சாந்த மணிமுலை யெழுத வம்மா. (௪-1)

3580. (2) பாகடு களிநல் யானைப் பான்மருப் பொசித்தோன் மற்றப்
பாகடு குதலை மாதின் படாமுலைப் போகம் வேண்டிக்
கேகயங் குனிப்ப வண்டின் கிளையிசை முரலுஞ் சோலை
கேகய நாடு சென்று கெழீஇயின னென்ப மன்னோ. (௪-2)

3581. கொத்தளி கொழுது கஞ்சக் கொழுமுகை யனைய செவ்வி
அத்தகு காத னங்கை யாக்கமுங் குறிப்பு நாடி

---

3579. மணிவண்ணன் - பச்சைமணி போன்ற வண்ண முடைய கண்ணபிரானது. செவிமுதல் - காதினிடத்தே. நகும் - ஒளிவிடுகின்ற பொற்பூண் - பொன்னாலாகிய ஆபரணம். நலத்தக - அழகு சிறக்க. ஒரு காழ் - ஒற்றை வடம்; ஏகாவலி யென்பர். முத்தம் - முத்துமாலையையும். கோங்கின்யாணர் முகிழெனு முகிழ்ந்த கொங்கை - கோங்கினது அழகிய அரும்பைப்போல அரும்பிய முலையின். முத்தைக் கொங்கையின் முன்றிலிற் புனைகலள்.

3580. (1) அஞ்சன வண்ணன் - கண்ணபிரானுடைய. அஞ்சு எனக் கிடந்த அம்பின் ஆடமர் கடந்த - ஐந்து எனப் பொருந்திய மன்மதனது மலரம்புகளின் வெற்றிப்போரை வென்ற. அஞ்சனம் - மை. எழுதுதல் - இடுதல். அஞ்சனம் புரை - மையை ஒத்த. கூந்தல் - பத்திரை. முலையில் செஞ்சாந்தத்தை எழுத அஞ்சும்.

3580. (2) பாகு அடு - பாகனைக் கொல்கின்ற. யானை - குவலயாபீடத்தின். ஒசித்தோன் - கண்ணபிரான். பாகு அடு குதலை மாதின் - தேன் பாகை வென்ற மழலைச் சொல்லையுடைய பத்திரையது. படா - சாயாத. போகம் - இன்பம். கேகயம் குனிப்ப - மயில்கள் நடிக்க. கிளை - கூட்டம். முரலும் - ஒலிக்கின்ற. சோலையையுடைய கேகய நாடு. கெழீஇயினன் - பொருந்தினன். இப்பாடல் ஓர் ஏட்டுப் பிரதியிற் காணப்படுகிறது.

3581. கொத்து அளி கொழுது-தொகுதியாகிய வண்டுகள் கிழிக்கின்ற. அத்தகு - அதற்குத் தக்க. நங்கை - பத்திரை. நங்கையது செவ்வியையும், காதலையும் ஆக்கத்தையும் குறிப்பையும் நாடி; ஆக்கம் - அமைத்துக் கொள்ளல்; சீவக. நாடி - ஆராய்ந்து. முன்னவன் - பத்திரையின் தமையனான சங்

முத்தவெண் கவிகைப் பைந்தார் முன்னவன் கருங்கா ரன்ன
மைத்துனத் தோழற் கீவான் மனத்தினில் வலித்தல் செய்தான். (ரு)

3582. பொன்னிண ரமரர் தூற்றப் புரிவளை யலற முந்நீர்
இன்னமு தனைய சாய லேரிள முலையி னுளை
முன்னவ னளித்தல் செய்தான் முழங்கழல் சான்ற தாகக்
கன்னியந் துளவு சூடுங் கார்முகில் வண்ணற் கன்றே. (சு)

3583. மரைமல ருறைவோ னாதி வானவர் வணங்கி யேத்த
நரலையம் புணரி தீர்ந்து நல்லற நிறுத்து நம்பி
சுரியிருங் கூந்த னங்கை தோனல மினிது மாந்திக்
கரையிறந் தோங்கு மின்பக் கடலகத் தழுந்தி னானல். (எ)

3584. முடப்பசுந் தாழை யீன்ற முழுமடன் முருகு கான்று
கடற்படு புலவு மாற்றுங் கண்ணகன் புரிசை மூதூர்
இடிக்குரன் முரச மார்ப்ப விளமழைக் கொழுந்து போல்வான்
சுடர்த்தொடி யுடுத்த செங்கைத் தோகையோ டெழுந்து சென்றான்.()

---

தர்த்தனன். மைத்துனத் தோழற்கு :- கண்ணபிரானுக்கு ; " மைத்துனத் தோழனென்றான் " (சீவக. 1264.) ஈவான் - கொடுத்தற்கு. வலித்தல் - நிச்சயித்தல்.

3582. இணர் :- பூங்கொத்து. புரிவளை - முறுக்குடைய சங்கு. அலற - முழங்க. முலையினுளை - பத்திரையை. முன்னவன் - சந்தர்த்தனன். அழல் சான்றதாக - அக்கினி சாட்சியாக. கார்முகில் வண்ணற்கு - கண்ணபிரானுக்கு.

3583. உறைவோன் - பிரமன். நரலை - ஒலியையுடைய. புணரி - கடல். நம்பி - கண்ணபிரான். சுரிந்த இருண்ட கூந்தலை யுடைய நங்கை - பத்திரையினுடைய. நலம் - இன்பத்தை. கரையிறந்து - அளவுகடந்து.

3584. முடம் - வளைவு. முருகு கான்று - வாசனையை வீசி. புலவு :- புலால் நாற்றத்தை. கண்ணகல் - இடமகன்ற. புரிசை - மதிலை யுடைய. மூதூர் - துவரைக்கு. மழைக் கொழுந்து போல்வான் - கண்ணபிரான். சுடர்த்தொடி உடுத்த - ஒளிபொருந்திய தோள்வளையல் சூழ்ந்த. தோகை - பத்திரை.

பத்திரையுடன் கைகேயி என்பவளை மணம் செய்துகொண்டதாக முதனூல் கூறும்.



# 31. இலக்கணையை மணம்புரி அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3585. எழில்வளர் தளிர்மா மேனி யிலக்கணை யென்னு நாமத்
தொழுகரித் தடங்க ணாளை யுயிர்த்தன னுவரி மேய்ந்த
மழைகிடந் துறங்கு சோலை மத்திர நாடு காக்கும்
நிழல்வளர் திங்க ளன்ன நித்திலக் கவிகை வேந்தே. (க)

3586. தண்ணற லகத்திற் றோன்றுந் தன்னிழ னோக்கி யன்றிக்
கண்ணுற லரிதாய் வெய்ய கடுவிசைக் கறங்கிற் பொங்கி
விண்ணிடைக் கொட்கா நிற்கும் விழுக்கயற் பொறிநீர் வேலி
மண்ணகம் வியப்பச் செய்தான் மணிமுழ வனைய தோளான். (உ)

3587. குடவரை யன்றி மற்றைக் கோதைவெள் ளருவி சூடுங்
நெடுவரை பொடிக்கு மொற்றை நேமியஞ் செல்வன் சூழும்
வடவரை வணக்கி னானும் வணக்கருந் தன்மைத் தாய
தடநெடுஞ் சிலையு மொன்று தந்தனன் பசும்பொற் றாரான். (ங)

3588. சிலைகடை குழைத்துச் செய்ய செங்கயல் சிதைய வெய்தாற்
கிலமல ரன்ன செவ்வா யிலக்கணை யுரிய ளென்று

---

3585. எழில் - அழகு. அரி - செவ்வரி. உயிர்த்தனன் - பெற்றான். உவரி - கடலில். மழை - மேகம். நிழல் - ஒளி. மத்திராநாட்டு வேந்து இலக்கணை என்னும் தடங்கணாளை உயிர்த்தான்.

3586. அறல் அகத்தில் - நீரினிடத்தில். நிழல் - பொறியின் நிழலை கண்ணுற லரிதாய் - பார்த்தற் கரியதாய். கறங்கின் - காற்றாடியைப்போல். பொங்கி - மிக்கு. கொட்கா நிற்கும் - சுழலும். கயற்பொறி - மீன் யந்திரத்தை, நீரை வேலியாகவுடைய மண்ணகம் வியக்கும்படி. தோளான் - மத்திராநாட்டு மன்னன். தோளான், பொறியைச் செய்தான்.

3587. குடவரை - மேலைத் திசையிலுள்ள மலை. பொடிக்கும் - தோன்றுகின்ற. நேமியஞ் செல்வன் - சூரியன். வடவரை - மேருமலையை. வணக்கினானும் - வில்லாகவளைத்த சிவபெருமானும். வணக்கரும் - வளைத்தற் கரிய. சிலை - வில். தாரான் - மத்திராநாட்டரசன்.

3588. சிலை - வில்லை. குழைத்து - வளைத்து. கயல்சிதைய எய் தாற்கு - மீன்பொறி கெட்டு வீழும்படி அம்பெய்தவனுக்கு. இலமலர் அன்ன- இலவமலரைப் போன்ற. உரியள் - மனைவியாகும் உரிமை யுடையவள்.

மலைமதம் பட்டா லன்ன மத்தமால் களிற்று மன்னன்
உலகுடை மன்னர்க் கோலை யுவப்புறப் போக்கி னானல். (ச)

3589. முத்தரிச் சிலம்பு போல மொய்த்திள வெகின மார்ப்பச்
செய்த்தலைக் கமல மாதர் சீறடி யழகு காட்டும்
மத்திர நாட்டு மன்னன் மன்னெயி லுடுத்த மூதூர்த்
தத்துநீர்ப் படுசங் கார்ப்பத் தாணிபர் வந்து தொக்கார். (ரு)

3590. அயின்முகப் பகழி போல வணிமணிக் குழைமே லோடிக்
கயலெனப் பிறழ்ந்து செய்ய கமலமொத் தலர்ந்த வுண்கட்
குயிலினைக் குயிலாப் பொன்னங் கொழுந்தினைக் கொழுந்தா ரோதி
மயிலினைப் புனைந்து செம்பொன் மாளிகைக் கொணர்தல் செய்தார். ()

3591. அருவிபெய் மலயச் செஞ்சாந் தலர்கதி ராரந் தாழ்ந்த
வரைமரு ளகலத் தப்பி வார்கழ னரல வீக்கிக்
குரைகடற் சுறவின் கோலக் கொடுங்குழை துளங்க வார்த்துப்
பொருகய றுணித்து மென்று புரவலர் குழீஇயி னாரால். (எ)

---

என்னா - என்று கூறி. மலையிடத்து மதம்பட்டாலன்ன; பட்டாலன்ன - தோன்றினாற் போன்ற; களிற்றுக்கு விசேடம். மன்னன் - மத்திர நாட்டரசன். ஓலை - திருமுகம்.

3589. முத்துக்களாகிய அரியையுடைய சிலம்புபோல; அரி - பரற்கற்கள். எகினம் - அன்னப்பறவை. சிலம்பொலிக்கு அன்னத்தின் குரல் உவமை; “மின்னார் சிலம்பிற் சிலம்புங் குரலன்னம்” (சீவக. 2890.) செய்த்தலை - வயலிடத்து. கமலம் மாதாது அடியின் அழகைக் காட்டும். எயில் - மதில். உடுத்த - சூழ்ந்த. மூதூரிடத்துத் தாணிபர் தொக்கார்; தொக்கார் - கூடினார்.

3590. அயில் முகப்பகழி - கூரிய நுனியையுடைய அம்பு. குழை - குண்டலம். பிறழ்ந்து - மாறுபட்டு. உண்கண் - மையுண்ட கண்ணையுடைய. குயிலினை - இலக்கணையை. குயிலா - இயற்றாத. கொழுந்தார் ஓதி - கொழுவிய தாரையணிந்த கூந்தலையுடைய. புனைந்து - அலங்கரித்து.

3591. மலயம் - பொதியமலையிற் பிறந்த. ஆரம் தாழ்ந்த அகலம், வரைமருள் அகலம்; ஆரம் - முத்துமாலை. தாழ்ந்த - தங்கிய. அகலம் - மார்பில். வரைமருள் - மலையை ஒத்த. சாந்தை அகலத்து அப்பி. (அடி 1-2: சீவக. 2187.) நரல - ஒலிக்க. வீக்கி - கட்டி. சுறவின் கோலக் கொடுங்குழை துளங்க - சுறாமீனின் வடிவமமைந்த வளைந்த குண்டலம் அசையும்படி. ஆர்த்து - முழங்கி. கயல் துணித்தும் - மீன் பொறியை அறுத்திடுவோம். புரவலர் - அரசர். குழீஇயினார் - கூடினார்.

3592. உலைமுகம் பழுத்த செம்பொ ஞேடைமாக் களிறு சாய்த்துக்
கொலைமுகம் பழுத்த கூர்வாட் கொற்றவ ஞெருவ னெய்வான்
மலையெனக் கிடந்த வல்வி லெடுத்தனன் வணக்க லாற்ருன்
நிலவுகொப் புளிக்கு முத்த நெடுமுடி வணக்கி நின்ருன். (அ)

3593. அலங்குசெங் கதிரிற் சூழ்ந்த வணிமணி வலய மின்னப்
பொலங்கிரி கடுக்குந் திண்டோட் புரவல ஞெருவன் போந்து
வலம்பட வெடுத்த வார்வில் வணக்கிஞா ணேற்ற வாற்ருன்
இலங்கொளி விரிக்கும் பொன்ஞா ணேற்றின னணிந்து நின்ருன். (கூ)

3594. கடற்பெரும் புவனங் காக்குங் காவல ஞெருவன் வார்வில்
எடுத்துநா ணேற்றி மின்னி னெரியுமிழ்ந் திலங்கு வாளி
தொடுத்தனன் ருெடுத்த வம்பின் ருெடைநனி வாங்க லாற்ருன்
வடித்தபூந் தொடையல் வாங்கி மணிமுடி திருத்தி ஞனல். (க0)

3595. சரிந்துதார் புரள வொள்வாட் டந்தவக் கிரன்வில் வாங்கி
பருந்துசூழ் முகத்த வாளி பணைத்ததோள் கழிய வாங்கி
விரிந்தநீ ரகத்திற் ருேன்று மீனது நிழலை நோக்கும்
இரும்பெரு வானை நோக்கு மிலக்கமோர்ந் தெய்ய கில்லான். (கக)

3596. அள்ளிலை யணிந்த வெள்வே லடற்சிசு பால னெய்த
ஒள்ளழற் பகழி யோடி யுறுகய லுருது விண்வாய்

---

3592. உலைமுகம் - கொல்லனுலையிடத்தே. பொன்னலாகிய ஓடையை யணிந்த. ஓடை - நெற்றிப் பட்டம். பழுத்த - முற்றிய. கொற்றவன் - அரசன். வணக்க லாற்ருன் - வளைக்க முடியாதவனுகி. வணக்கி - சாய்த்து.

3593. கதிரின் - சூரியனைப்போல. கடுக்கும் - ஒக்கின்ற. புரவலன் - அரசன். வலம்பட - வெற்றி யுண்டாக. வணக்கி - வளைத்து. ஞாண் - நாணை. ஆற்ருன் - முடியாதவனுய். பொன் ஞாண் - தலையிற் கட்டிய பொன்நாணை. ஏற்றினன் - உயர்த்தியவனுகி.

3594. புவனம் - பூமியை. மின்னின் - மின்னலைப்போல். வாளி - அம்பை. தொடுத்தனன் - எய்தான். தொடை - தொடுத்தலை. வாங்க லாற்ருன் - வளைக்க முடியாதவனுகி. வடித்த - திருத்திய. தொடையல் - மாலையை. திருத்திஞன் - அழகு செய்தான்.

3595. தார் - மாலை. வாளையுடைய தந்தவக்கிரன். வில்லை வாங்கி; வாளியைத் தோளினின்றும் கழிய வாங்கி; கழிய - நீங்க. வாங்கி - வளைத்து. நீரகத்தில் தோன்றுகின்ற மீனின் நிழலை. வானை - ஆகாயத்தை. இலக்கம் ஓர்ந்து - குறி யறிந்து. எய்யகில்லானுக நோக்கும்.

3596. அள் - செறிவு; கூரிய எனலுமாம். இலை - இலை விரவிய மாலை. அடல் - வலிமை. எய்த - செலுத்திய. பகழி - அம்பு. கயல் -

கள்ளவிழ் பாரி சாதக் காடலைத் தொழுகு கங்கை
துள்ளுசெங் கயலின் மேலே தொடர்ந்துதாய் வீழ்ந்த தம்மா. (கஉ)

3597. வில்விடப் பசும்பொ னாரம் விற்கடை குழைய வாங்கி
மல்லனீர் மகதங் காக்கு மணிமுடி வேந்த னெய்த
கொல்சினப் பகழி விண்ணிற் கொட்குமீன் கழிய வோடிப்
பல்சுடர் வான மீனின் பாற்படப் படர்ந்த தன்றே. (கங)

3598. கட்டவிழ் சிலைப்பூந் தாமங் கதிர்நிலா முடியிற் றாழ
வட்டவார் சிலைகால் கோட்டி மல்லடு திணிதோள் வீமன்
விட்டவெம் பகழி பொங்கி விழுக்கயல் பிழைத்து விண்வாய்
முட்டிவெண் டிங்கள் வாழு முயன்முகங் கிழித்துச் சென்ற. (கச)

3599. எரிமணிக் குழைபொற் றோளி னெழுதுசாந் தழுந்து மின்ன
அருவரை புரையு மார்வத் தாரமும் பூணு மொல்க
வரிசிலை தளர வாங்கி வாளர வுயர்த்தோ னெய்த
தெரிகணை பொறிமே லோடிச் செவ்வனே யெழுந்தே கிற்றே. (கரு)

3600. கற்பகந் தளிர்த்த தேபோற் கதிர்மணிக் கடகங் கான்ற
பொற்றசெங் கதிர்கள் சூழும் பொங்கெழிற் பொருதோட் கன்னன்

---

மச்சயந்திரத்தை. கள் - தேன். கங்கையில் துள்ளுகின்ற கயலின் மேல். தாய் - தாவி. வீழ்ந்தது - விழுந்தது.

3597. பொன்னாரம் வில்விட; வில் - ஒளி. விற்கடை - வில்லின் நுனி. வாங்கி - வளைத்து. மல்லல் - வளம்பெற்ற. மகதங் காக்கும் வேந்தன் - சராசந்தன். கொட்கும் மீன் - சுழலுகின்ற மச்சயந்திரம். கழிய - நீங்க. வான மீனின் - நட்சத்திரங்களின்.

3598. சிலைப் பூந்தாமம் - பூமாலை; இந்திர வில்லைப் போன்ற அழகுள்ள மாலை. முடியில் - கிரீடத்தில். வார்சிலை - நீண்ட வில்லின். சால் கோட்டி - நுனியை வளைத்து. பிழைத்து - தவறி. வீமன் விட்ட பகழி கயலைப் பிழைத்துத் திங்களில் வாழும் முயல்முகத்தைக் கிழித்துச் சென்றது; சென்ற - சென்றது; கடைக்குறை.

3599. குழை - காதணி. சாந்து - சந்தனத்தை. வரைபுரையும் - மலையை யொத்த. ஒல்க - அசைய. சிலை - வில்லை. வாங்கி - வளைத்து. அரவுயர்த்தோன் - துரியோதனன். கணை - அம்பு. பொறிமேல் - யந்திரத்தின் மேலே.

3600. கடகம் - காப்பு. கான்ற - வெளிவிட்ட. பொற்ற - பொலிவு பெற்ற. கடகம் கான்ற கதிர்களுக்குக் கற்பகத்தளிர் உவமை. பொரு தோள் - போர் செய்யும் தோள். கன்னன் - கர்ணன். கோல் - அம்பு. பொறி -

விற்கடை குழைய வாங்கி விட்டகோல் பொறியின் மேலே
உற்றுரு தாகிச் சென்ற துயரிரு விசும்பு போழ்ந்தே. (கசு)

3601. நிழல்புன லகத்து நோக்கி நின்றவவ் விலக்கை நாடி
அழிபெருங் குருதி யாடி யவிர்தல்போற் பற்ப ராகக்
குழையொளி தவழ வாங்கிக் கொடுஞ்சிலைப் பார்த்தன் விட்ட
முழுவிறற் பகழி செஞ்சேன் மோந்துகொண் டேகிற் றன்றே. (கஎ)

3602. திகழ்மணிக் குவட்டின் வீங்கிச் செஞ்சிலை வடித்த திண்டோட்
டகைமலி யாச ரின்ன தன்மைய ராகி நின்றார்
அகலிரு விசும்பிற் சூழ்ந்த வள்ளிருட் பிழம்பு சீத்து
நகுகதிர்ப் பருதி வட்ட நடுவண்வந் துற்ற தாங்கே. (கஅ)

3603. பார்நனை மதத்த யானைப் பருஉச்சுடர்ப் பனிவெண் முத்தக்
கூர்நுதிக் கோடு கொண்ட கொற்றவன் பொற்ற தாமம்
வார்மதுத் துளிப்பச் செக்கர் மணிதிரு மார்பின் மின்ன
கார்முகி லென்னச் சென்று கார்முகம் வணக்கி நின்றான். (கசு)

3604. விடம்பொதி மிடற்றுப் புத்தேள் வெஞ்சிலை யிறுத்த வீரன்
கொடுஞ்சிலை குழைத்த வாறுங் குழைத்துநாண் கொளீஇய வாறும்

---

யந்திரம். உற்று உருதாகி - பட்டும் படாததுமாகி. விசும்பு போழ்ந்து - ஆகாயத்தைப் பிளந்து. போழ்ந்து சென்றது.

3601. நிழல் - யந்திரத்தின் நிழலை. புனலகத்து - நீரில். இலக்கை - கயல் யந்திரத்தை. அழிதல் - பெருகுதல். குருதியாடி - இரத்தத்தில் நீராடி. அவிர்தல் - ஒளிவிடுதல். பற்பராகத்தின் ஒளிக்குக் குருதியுவமை. பார்த்தன் - அருச்சுனன். விறற்பகழி - வலிமை பெற்ற அம்பு. சேல் - மச்ச யந்திரத்தை. மோந்து - தொட்டு. ஏகிற்று - போயிற்று.

3602. குவட்டின் - சிகரத்தைப்போல. சிலைவடித்த - விற்பயின்ற; (சீவக. 1450.) தகை - அழகு. விசும்பில் - ஆகாயத்தில். பிழம்பு - திரட்சியை. சீத்து - துடைத்து. பருதி வட்டம் - சூரியன். நடுவண் - ஆகாயத்தின் நடுவில். உச்சி வேளையாயிற்று என்றபடி.

3603. மதத்த - மதத்தையுடைய. யானை - குவலயா பீடத்தினது. பருஉச்சுடர் - மிக்க ஒளியையுடைய. முத்துக்களையுடைய கோடு; 3611. நுதி - நுனி. கோடு - கொம்பை. கொற்றவன் - கண்ணன். பொற்ற தாமம் - பொலிவுபெற்ற மாலையில். செக்கர் மணி - சிவந்த மணி. கார்முகில் என்ன - கார்காலத்து மேகம்போல. கார்முகம் - வில்லை. வணக்கி - வளைத்து.

3604. புத்தேள் - பரமசிவனது. வீரன் - திருமாலாகிய கண்ணன். சிலை - வில்லை. குழைத்த வாறும் - வளைத்த விதத்தையும். நாண் - நாண் கயிற்றை. கொளீஇயவாறும் - பிணைத்தவாறும். கணை - அம்பை. தூர்ந்த

அடுங்கணை தூரந்த வாறு மார்கொலோ தெரியக் கண்டார்
கடுங்கய றுணிந்து மண்ணிற் கவிழ்ந்தது கண்ணிற் கண்டார். (உ0)

3605. ஒளிமணி விசும்பி னெல்லென் றொலித்தகா ருவரி மேய்ந்த
துளிமுகி லதிரு மாபோற் றுந்துபி துவைத்த சூழ்ந்து
களிமுகச் சுரும்பு மூசாக் கற்பகக் கனகப் பைம்பூ
வெளிமுகம் புதைய மொய்த்து விண்ணவர் சிதறி யார்த்தார். (உக)

3606. ஆடகப் பசும்பொற் றிண்டே ரசெலாங் காண வாய்பொற்
பாடகப் போது சூழ்ந்த பன்மணிச் சிலம்பு பாட
நாடக மயிலஞ் சாய னாகிள வல்லி யொல்கிச்
சூடகத் தளிர்ப்பூங் கோதை சூட்டினள் கண்ணற் கன்றே. (உஉ)

3607. தருமல ரமரர் தூற்றத் தாக்கணங் கனையா டண்டேன்
சொரிமலர் நறுமென் றொங்கல் சூட்டுதல் கண்டு நோனார்
குரைகடல் வெதும்ப வல்விற் கோட்டிய குழகன் றன்மேல்
விரிதிரைக் கடலந் தானை வேந்தர்போர் விளைத்தார் மாதோ. (உங)

3608. கான்குலா மலங்கல் சூடிக் கடைகுழன் றிருண்ட கூந்தற்
றேன்குலா மழலை யாளைச் செறிமணித் தேரிற் கொண்டு
நான்குதோ ளுடையா னாகி நம்பிவிற் குழைத்துச் சென்றான்
மான்குழா நடுவட் செல்லும் வள்ளுகிர்த் தாக்குப் போன்றே. (உச)

---

வாறும் - விடுத்ததையும், தெரியக் கண்டார் ஆர்கொல்? ஒருவருமில்லை என்றபடி. கயல் - மச்சயந்திரம். துணிந்து - அறுபட்டு.

3605. விசும்பில் மணி ஒலித்த. கார் - கார்காலத்தில். உவரி - கடலில். முகில் - மேகம். துவைத்த - முழங்கின. மூசா - மொய்க்காத. வெளிமுகம் - ஆகாயம். புதைய - மறைய. விண்ணவர் கற்பகப் பூச் சிதறி ஆர்த்தார்.

3606. ஆடகம் - ஒருவகைப் பொன். பாடகம் - மகளிர் காலணி. வண்டு பாடுகிற அகத்தையுடைய எனலுமாம். நாகிளவல்லி - இலக்கணை. ஒல்கி - அசைந்து. வல்லி கண்ணற்குக் கோதை சூட்டினள்; கோதை - மாலை.

3607. தரு - கற்பக தரு. அணங்கனையாள் - இலக்கணை. தொங்கல் - மாலையை. நோனார் - பொறுதவராகி. குரைகடல் - ஒலிக்கின்ற கடல். வெதும்ப - கலங்க. குழகன் - கண்ணன். கடல் வெதும்ப வில் கோட்டியது இராமாவதாரத்தில். வேந்தர், அணங்கனையாள் தொங்கல் சூட்டுதல் கண்டு நோனாராகிப் போர் விளைத்தார்.

3608. கான் குலாம் - வாசனை பொருந்திய. குழன்று - சுருண்டு. மழலையாளை - இலக்கணையை. நமபி - கண்ணன். மான்குழாம் - மான் கூட்டம். தாக்குப் போன்று நம்பி சென்றான்; தாக்கு - புலி.

3609. தேர்விட்டுக் களிறு விட்டுத் திண்டிறற் பரிமா விட்டுக்
கார்விட்டுத் திகழ்த டித்திற் கனன்றெரி படைகள் விட்டுத்
தார்விட்டு மலர்ந்த மார்பிற் றருக்குடை மன்ன ரெல்லாம்
போர்விட்டு நடப்ப வாளி பொழிந்தனன் புயலோ டொப்பான். (உரு)

3610. பொலமுக டுடைந்த தென்னப் பொருகடற் படுவெண் சங்கம்
அலறவார் முழவு விம்ம வதிர்குரன் முரச மார்ப்பக்
கலுழனின் னமுது கொண்டு காண்டகச் செல்லு மாபோல்
சிலைநுத லணங்கைக் கொண்டு செம்மன்மா நகர்சென் றுற்றான். (உகூ)

3611. முத்துடைக் கோட்டு வேழ முரிதிரைப் பவளந் தன்னோ
டொத்தவெங் குளம்பிற் பாய்மா வொழுகொளி வயிரக் குப்பை
பித்திகைப் பிணையன் மாலை பெண்மணி பிறகொண் டெய்தி
மத்திர நாட்டு மன்னன் மலர்மகண் மகிழ்நற் கீந்தான். (உஎ)

3612. அளவில்வெங் காதற் பௌவத் தளறெழ வழுந்த லுற்ற
இளமயி லன்ன சாய லிலக்கணை மன்ற லாற்றி
முளையிள முல்லை மூரன் முருக்கித ழமுதந் துய்த்தான்
தளையவிழ் தடைந்தோர்க் கீறி றனியின்பு தருநந் தொல்லோன். ()

3613. நெய்ம்முக மணிந்து காய்ந்து நிழலுமிழ் தழல்வாய் நேமிக்
கைம்மல ரணிந்த செங்கட் கரியவ னின்ன வாறே

3609. பரிமா - குதிரை. கார் - மேகத்தை. தடித்தின் - மின்னலைப் போல். தார் - ஒழுங்கு; (பதிற். 64.) தருக்கு-வலிமை. மன்னர் - பகையரசர். புயலோ டொப்பான் வாளி பொழிந்தனன்; புயலோ டொப்பான் - கண்ணன்.

3610. பொலமுகடு உடைந்ததென்னச் சங்கம் அதிர ; 3618. அதிர்கின்ற குரலையுடைய முரசம். கலுழன் - கருடன். காண்டக- அழகு பொருந்த. அணங்கை - இலக்கணையை. செம்மல் - கண்ணன். நகரம் - துவாரகை.

3611. பாய்மா - குதிரை ; பவளம்போன்ற குளம்பு ; 3656 ; (பதிற். 65 : 1-2; புறநா. 97 : 11-3. 98 : 5-7.) ஒழுகுகின்ற ஒளியையுடைய வயிரக் குப்பை. குப்பை - தொகுதி. பித்திகை - மல்லிகை. மாலையையுடைய பெண்மணி. மத்திராட்டு மன்னன் வேழம், பாய்மா, வயிரம், பெண்மணி கொண்டு எய்தி மலர்மகள் மகிழ்நற்கு ஈந்தான். மலர்மகள் மகிழ்நன் - கண்ணபிரான்.

3612. காதலாகிய பௌவத்து ; பௌவம் - கடல். அளறு - சேறு. மன்ற லாற்றி - மணந்து. அடைந்தோர்க்கு - தன்னை யடைந்தவர்க்கு. ஈறில் - முடிவில்லாத. இன்பு - இன்பத்தை. தொல்லோன் இலக்கணையை மன்ற லாற்றி, துய்த்தான் ; தொல்லோன் - கண்ணன்.

3613. நிழல் - ஒளியை. நேமி - சக்கராயுதத்தை. கரியவன் - திரு

அம்மலர் முருகு விம்மி யகில்வயி ரூர்ந்த கூந்தற்
பொம்மல்வெம் முலேயி ஞர்தம் புதுமணம் பொருந்தி ஞனல். (உக)



# 32. நரகாசுரனைக் கொன்ற அத்தியாயம்.

கலிச்சந்தவிருத்தம்

3614. வாட்டானைய னரகாசுரன் மாயப்பொரு தம்மென்
பாட்டாயிரங் களிவண்டறை பைம்பொற்ருெடை புனையா
வேட்டாள்பதி ஞறுயிரம் விரைக்கோதையர் தமைவெஞ்
சூட்டாடர வணைகண்வளர் துளவப்பசுங் கொண்டல். (க)

3615. என்றேதலு நாகாசுர னெனும்வீரனை யமரில்
கொன்றேர்பதி ஞறுயிரங் குலமாதரை மலர்மேல்
மின்றேய்கரு முகில்வேட்டது விளம்பாயென வேந்தன்
நன்றேகையி னுரைசெய்குற நவின்ருன்முனி யண்ணல். (உ)

3616. அழிவெம்மதம் பொழியோங்கலி னயிராவதப் பாகன்
மழைவண்ணனை யடைந்தன்னைதன் வார்காதணி மகாக்

---

மால். அம்மலர் - அழகிய மலராது. முருகு - தேன். முலேயினர்தம் - மகளிருடைய.

(பி - ம்.) 2. செங்கட் காரணன்.

3614. தானையன் - படைகளை யுடையவன். மாய - இறக்க பொருது - போர்செய்து. தொடை புனைந்து - மாலை யணிந்து. கோதையா தமை - மகளிரை. சூட்டு - உச்சி. கொண்டல் நரகாசுரன் மாயப் பொருது, பதினாயிரம் கோதையர்தமை வேட்டான்; கொண்டல் - கண்ணன். வேட்டான் - மணம்புரிந்தான்.

3615. ஓதலும் - சுகன் கூறலும். மலர்மேல் மின் - திருமகள். முகில்-கண்ணன். வேட்டது - மணம்புரிந்த வரலாற்றை. வேந்தன் - பரிட்சித்து. ஓகையின் - மகிழ்ச்சியொடு. வேந்தன் 'விளம்பாய்' என முனியண்ணல் நவின்ருன்; முனியண்ணல் - சுகன்.

3616. அழிகின்ற வெம்மதத்தை; அழிதல் - பெருகுதல். ஓங்கலின்-மலையைப் போன்ற. அயிராவதப் பாகன் - இந்திரன். மழை வண்ணனை -

குழைதன்னொடு பனிமாலைவெண் குடையுஞ்செழுங் கொடியும்
கழிவெஞ்சின நரகாசுரன் கவர்ந்தேகின னென்றான். (௩)

3617. விண்ணுங்கிய தோண்மாயவன் விண்ணந்தனி புரக்குந்
மன்னன்புகல் வருகேட்டெழில் வளர்சத்திய பாமை
என்னுங்கதி ரிளமாமுலை யிணர்ப்பூங்குழ லோடும்
பொன்னங்கிரி யெனத்தோன்றிய புள்ளின்னெருத் திவர்ந்தான். (௪)

3618. பிளக்கும்பொல முகடாங்கெனப் பிறழ்சங்கதிர் தரவான்
விளக்குங்கதிர் சூழ்குன்றினை விரிசெஞ்சிறைக் காற்றால்
துளக்கும்பசும் புள்ளூர்ந்தனன் றுனைவிற்படர்ந் தெழுபார்
அளக்கும்புய லவுணர்க்கிறை யரண்முற்றின னன்றே. (௫)

3619. புயலேய்வரை யரண்சிந்திடப் புடைத்தான்பொரு கதையால்
வெயிலேயெரி யரண்கட்டற விறனேமியின் விழுத்தான்
உயர்நீரா ணெரிகாற்றா ணுடலும்படை யரணோ
அயில்வாளியி னழித்தான்புகுந் தறுத்தான்முர பாசம். (௬)

3620. மழைமுற்றிய நெடுவெற்பரண் மாநீரரண் வானில்
சுழல்காற்றரண் சுடுதீயரண் சுழல்வாட்படை யரணோ

---

கண்ணனை ; மழை - மேகம். அன்னை தன் - அதிதியினுடைய. கழி - மிகுதி. பாகன் கண்ணனை யடைந்து 'நரகாசுரன் என் அன்னையின் குழையையும், குடையையும், கொடியையும் கவர்ந்து ஏகினான்' என்றான்.

3617. நுங்கிய - விழுங்கிய. விண்ணம் - தேவலோகத்தை. மன்னன் - இந்திரன். இணர் - கொத்து. பொன்னங் கிரியென - மேரு மலையைப்போல. புள்ளின் எருத்து - கருடனது கழுத்தில். மாயவன் சத்தியபாமையொடு புள் இவர்ந்தான் ; இவர்ந்தான் - ஏறினான்.

3618 பொலமுகடு பிளக்கும் எனச் சங்கு அதிர்தர. கதிர் - சூரியன். குன்றினை - மேரு மலையை. சிறை - சிறகினது. துளக்கும் - அசைக்கின்ற. புள் - கருடனை. ஊர்ந்தனன் - ஊர்ந்து ஏறி. துனைவில் - விரைவில். படர்ந்து - சென்று. புயல் - கண்ணன். அவுணர்க்கிறை - நரகாசுரனுடைய. அரண் - மதிலை.

3619 புயல் தோயும்வரை போன்ற அரண் ; புயல் - மேகம், கதையால் புடைத்தான். வெயில் - ஒளி. எரி யரண் - நெருப்பாலாகிய அரண். கட்டற - காவல்கெட. நேமியின் - சக்கராயுதத்தால். விழுத்தான் - விழும்படி செய்தான். நீரரணையும் காற்றரணையும், படையரணையும் வாளியால் அழித்தான் ; படை - ஆயுதம். வாளி - அம்பு. அழித்தான் - அழித்து. முரபாசம் அறுத்தான் - முரன் என்பவனது பாசங்களையும் அறுத்தான். நரகாசுரனது நகரம், மலை, நீர், தீ, காற்று, படை, பாசமாகிய ஆறு அரண்களால் சூழ்ந்துள்ளன என்பது அறியத்தக்கது.

3620. மழை - மேகத்தை. வெற்பரண் - மலையரண். அழிவுற்றமை-

டழிவுற்றமை காணுவிழி யழல்சிந்துற வெகுளா
முழைவிட்டெழு வயமாவென முரன்வந்தெதிர் முனைந்தான். (எ)

3621. புலவுஞ்செற் பூவுங்கமழ் பொருவெம்படை வழங்காக்
கொலைவெஞ்சின வரவாமெனக் கொதித்தாடம ருடலும்
மலையஞ்சிய திணிதோண்முரன் மன்றற்றொடை கமழும்
தலையஞ்சையு முலகுண்டவன் றனியாழியிற் றடிந்தான். (அ)

3622. முரன்மாய்தலு முரன்மைந்தர்கண் முரணுஞ்சின முதிர்ந்தோர்
எரிகான்றழல் செங்கண்ணின ரெழுகாளையர் குழுமா
வரையானெடு மழைகாத்தவம் மழைவண்ணனை வளையாச்
சரமாரியிற் பொழிந்தார்பொரு தடக்கைச்சிலை குழைத்தே. (௯)

3623. மழுவிற்பொரு குலிசத்தினின் மாயாவலந் தழையா
எழுவிற்பணைத் தெழுதோள்வலத் தெழுவீரர்த மெழிலார்
செழுவிற்பொழி சரமாரியுஞ் சிரமுந்துணி செய்தான்
குழவிப்பிறை புரைமால்கரிக் கூர்வெண்மரும் பொசித்தோன். (க௦)

3624. மாலைக்கதிர் வேல்வெம்படை மால்வெஞ்சம மாற்ரு
தோலக்கட லுடைந்தாலென வுடைகின்றமை காணுக்

---

அழிவுற்றதை. காணு - கண்டு. வெகுளா - வெகுண்டு. முழை - குகையை. வயமா என - புலி போன்று. முரனென்பவன் வயமாவென எதிர்ந்தான்.

3621. புலவு - மாமிசம். படை வழங்கா - ஆயுதம் வழங்கி. அரவாமென - பாம்புபோல. அமர் உடலும் - போர் புரிகின்ற. மன்றல் - வாசனை. உடலும் முரனது தலை அஞ்சையும் உலகுண்டவன் ஆழியின் தடிந்தான். முரனுக்குத் தலை ஐந்து. உலகுண்டவன் - கண்ணன். ஆழியின் - சக்காத்தால்.

(பி - ம்.) 1. புலவுஞ்செறி பலவுங்கமழ்.

3622. முரனுடைய மைந்தர்கள். முரணும் - பகைக்கின்ற. முதிர்ந்தோர் - மிக்கவர். எரி கான்று - நெருப்பைக் கக்கி. முரன்மைந்தர்கள், முதிர்ந்தோர், கண்ணினரான எழுகாளையர் குழுமா; எழுகாளையர் - எழு வீரர்கள். குழுமா - கூடி. வரையால் - கோவர்த்தன கிரியால். மழை வண்ணனை - கண்ணனை. வளையா - வளைத்து. சரம் - அம்புகளை. மாரியின் - மழைபோல. சிலைகுழைத்துச் சரம் பொழிந்தார்.

3623. மழுவினும் குலிசத்தினும் மாயா; குலிசம் - வச்சிராயுதம். மாயா - இறவாது. வலம்தழையா எழுவீரர் - வெற்றிதழைந்து எழுகின்ற வீரர். தோள் வலத்து எழு வீரர்தம் - தோள் வலிமையையுடைய எழு வீரர்களுடைய. சிரமும் - தலைகளையும். துணிசெய்தான் - துண்டித்தான். பிறைபுரை மருப்பு; கரியின் மருப்பு; கரி - குவலயா பீடம். ஒசித்தோன் - துணிசெய்தான்; கண்ணன்.

3624. படை - படைகள். மால் - கண்ணனது. சமம் ஆற்ருது - போரைச் செய்யாமல். ஓலக்கடல் - ஒலியையுடைய கடல். படை உடைகின்

காலக்கத ழெரிகட்கடை காலக்கனன் றெரியும்
சூலப்படை நாகாசுரன் சூழ்தானையொ டெழுந்தான். (கக)

3625. வில்லார்வடி வாளார்சின வேலாருரு மிடிக்கும்
சொல்லார்கடை யெழுவெங்கனல் சொரிகின்றசெங் கண்ணர்
பல்லாயிர மடற்றானவர் பரிதேர்கரி கடவா
செல்லார்மழை காத்தான்றனைத் தெழித்தாரமர் விளைத்தார். (கஉ)

3626. பச்சைக்கிளி நிறப்பாய்பரி பவளக்குளம் பற்ற
கச்சைக்கருங் களிறெண்பிறைக் கதிர்வெண்மருப் பற்ற
அச்சற்றன பொன்னங்கொடி யணிதேர்நறை யகிலின்
செச்சைத்தடம் புயத்தான்சினத் திகிரிப்படை தொடவே. (கங)

3627. விழுந்தார்சிலர் திரைவேலையில் விரியுந்திரைக் கடல்வாய்
அழிந்தார்சிலர் விண்கீறிய வகன்குன்றிடைக் கவிழ்ந்தார்
கொழுந்தாரணி யளந்துண்டுமைக் கொழுந்தாமெனத் திகழும்
செழுந்தாரவ னிவர்புள்ளினஞ் சிறைக்காலினின் மறுகா. (கச)

3628. நடையிற்சின விடையிற்றிகழ் நாகாசுரன் விண்ணோர்
அடையத்தெரு மாலுற்றிட வயனண்டக டாகம்
உடையத்தனி யுரருவழ லுயிர்க்குஞ்சுட ரிலைவேற்
படையைத்தகு கலுழன்பெரும் பணைத்தோளினி லெறிந்தான். (கரு)

---

றனைம காணு ; காணு - கண்டு. கட்கடை கால எரியைக் காலக்கனன்று ; காலஎரி - ஊழித் தீயை. கால - கக்க. தானை - படை.

3625. வில்லார் - வில்லை யுடையவர். உரும் - இடி. கடை - யுகாந்தத்தில். அடல் - வலிமை. பரி - குதிரைகளையும். கரி - யானைகளையும். கடவா=கடவி - செலுத்தி. செல் - மேகம். காத்தான்றனை - கண்ணனை. தெழித்தார் - அதட்டினராய்.

3626. பரி - குதிரை ; குளம்பற்றன. கச்சை - வயிற்றிலிடப்படும் கயிறு. மருப்பு அற்ற ; மருப்பு - கொம்பு. அணிதேர் அச்சு அற்றன. செச்சை - சிவப்பான ; (திருவிளை. வலை. 24.) புயத்தான் - கண்ணன். திகிரிப்படை - சக்காயுதத்தை. திகிரிப்படைதொட, அற்ற.

3627. சிலர் வேலையில் விழுந்தார் ; வேலை - கடல். தாரணி - பூமியை. மை - மேகம். தாரவன் - கண்ணன். புள்ளின் - கருடனுடைய. சிறைக்காலினில் - சிறகின் காற்றால். மறுகா - மறுகி. காலினின் மறுகிச் சிலர் வீழ்ந்தார், அழிந்தார், கவிழ்ந்தார்.

(பி - ம்.) 3. கொழுந்தாரளை யளந்துண்டு.

3628. விடையின் - ரிஷபத்தைப்போல. தெருமால் - சுழற்சி. அயன் - பிரமனது. உரரு=உரறி - முழங்கி. கலுழன் - கருடனது. நாகாசுரன் உரரு வேற்படையைக் கலுழனது தோளினில் எறிந்தான்.

3629. மறிவெண்டிரை வடவானல மறுகக்கொழுந் தழல்வெம்
பொறிசிந்துபு வருவெந்திறற் புலவுப்படை கலுழன்
செறிகுன்றுறழ் தோளுற்றது சினமாமத கரிமேல்
எறிகண்ணறு மலர்மென்றொடை யெனலாயது மன்னே. (கசு)

3630. செஞ்சோரியிற் படிகின்றது செறியூன்சுவைப் பதுகார்
நஞ்சூறுவ தழல்காலவது நகுமின்பொழி குவதோர்
வெஞ்சூலம தெடுத்தான்மத வெற்பாமென நடந்தான்
பஞ்சாயுத முடையான்முனம் படுவெங்கொலை யவுணன். (கஎ)

3631. பெருகாழியிற் குருதிப்புனற் பெருக்கெண்டிசை பிறங்கக்
கருகார்கலி சுவறச்சிலை கால்கோட்டிய கண்ணன்
முருகாயிரம் வரிவண்டுண முகைவிண்டலர் தண்டார்
நரகாசுரன் முடிவெங்கதிர் நகுநேமியிற் றடிந்தான். (கஅ)

3632. தகைசானில மகளவ்வழி தண்டாமரை மயில்சேர்
அகன்மார்வனைப் பணிந்தேத்தின ளளிப்பாயினி யென்று
நகுதார்முடி நாகாசுர னறைவிம்மிய பசும்பொன்
முகைவாயவிழ் திருநாட்டினின் முகக்கும்பொரு ளளித்தே. (கசு)

3633. மந்தாகினி யொடுபொங்கொளி மணிவார்கழ லலப்பும்
செந்தாமரை புகழ்பார்மகள் செஞ்சொற்றெவி தினையா
நந்தாவலந் தழைத்தோங்கிய நரகாசுரன் மதலைக்
கந்தாதவிழ் துளவப்புய லபயங்கொடுத் தனனால். (உ0)

---

3629. வடவானலம் - வடவாக்கினி. மறுக - மயங்க. சிந்துபு - சிந்தி. படை - வேற்படை. படை கலுழன் தோளையுற்றது; தொடை - மாலை. உற்றது கரிமேல் தொடை எனலாயது.

3630. சோரி-இரத்தம். ஊன்-மாமிசத்தை. கார்-கறுப்பான. மின் - ஒளியை. மதவெற்பு - மதயானை. பஞ்சாயுத முடையான் - கண்ணன். அவுணன் சூலம் எடுத்தான் நடந்தான்; அவுணன் - நரகன். எடுத்தான் - எடுத்து.

3631. ஆழியின் - கடலைப்போல. குருதிப் புனல் - இரத்த நீரினது. ஆர்கலி - கடல். சுவற - உலர. சிலைகால் கோட்டிய - வில்லை வளைத்த. முருகு - தேனை. கண்ணன் நரகாசுரனது முடியை நேமியின் தடிந்தான்; நேமியின் - சக்கராயுதத்தால்.

3632. தகை - பெருமை. நிலமகள் - பூமிதேவி. தாமரை மயில் - திருமகள். மார்வனை - கண்ணனை. என்று - என்று கூறி. நகுதல் - மலர்தல். நறை - தேன். திருநாட்டினில் - செல்வம் உள்ள நாட்டில். பொருள் அளித்து அளிப்பாய் என்று ஏத்தினள்.

3633. மந்தாகினி - கங்கை. பார்மகள் - பூதேவியினது. தினையா - இடைவிடாமல் மகிழ்ந்து. நந்தாவலம் - அழியாத வெற்றி. நரகாசுரன் மதலைக்கு - பகதத்தன் என்பவனுக்கு. துளவப் புயல் - திருமால்.

3634. கந்தப்பிய களியானையின் கதிர்மாமருப் பொசிக்கும்
சந்தப்பெரு வரைத்தோளவன் சமரின்றலை யிமையோர்
சிந்தப்பொரு திறற்றானவர் திலகன்பெருஞ் சிறப்பார்
அந்தப்புர மோர்மாநிதி யறைநோக்கின னன்றே. (உக)

3635. வளந்தங்கிரு நிலவைப்பினின் மறமன்னவ ரெல்லாம்
துளங்கப்பொரு தவுணர்க்கிறை தோளாற்றலிற் கவர்ந்தோர்
விளங்கும்பதி னாறாயிரர் வெண்மாமதி வதனத்
திளங்கன்னியர் தனைவேட்டவ ணிருக்கின்றமை கண்டான். (உஉ)

3636. கழுவுற்றமென் றூசும்புனை கலனும்பல நல்கா
எழிலிற்றிரு மாவிற்றிக ழிளங்கன்னியர் தம்மைச்
செழுவிற்பொழி திருமாமணிச் சிவிகைத்தலை சிறப்பால்
மழையிற்பொலி தருமாயவன் மல்லற்பதி விடுத்தான். (உங)

3637. மால்கூர்ந்தவவ் வயிராவத மாபிற்பிறந் தனதீம்
பால்வெண்ணிறத் தனவானெழு பனிவெண்பிறை மருப்போர்
நால்குற்றன நான்கீற்றிடு மருப்பானனை கவுண்மா
ஆலம்பொழி பகுவாயர வணையான்கவர்ந் தனனால். (உச)

---

3634. கந்து - கட்டுத்தறியை. அப்பிய - தாக்கிய; (வி. பா. பதினேழாம் போர். 147.) யானையின் - குவலயா பீடத்தினது. சந்தம் - சந்தனம். தோளவன் - கண்ணன். தானவர் திலகனது அந்தப்புரமாகிய நிதியறையை நோக்கினன்; தானவர் திலகன் - நரகாசுரன்.

(பி - ம்.) 4. அந்தப் புரமொடு மாநிதி.

3635. வளம் - செழிப்பு. துளங்க - அசைய. பொருது - போர் செய்து. அவுணர்க்கிறை - நரகாசுரன். தனை - தன்னை; என்றது கண்ணனை. வேட்டு - விரும்பி. இறை கவர்ந்தோர் பதினாறாயிரர் கன்னியர் அவண் தனை வேட்டு இருக்கின்றமை கண்டான்; கவர்ந்தோர் - நரகனால் அபகரிக்கப்பட்டோர். அவண் - அந்த இடத்தில்.

3636. கழுவுதலையுற்ற. கலன் - ஆபரணம். நல்கா - நல்கி. எழிலில் - அழகில். மாவில் - திருமகளைப்போல. வில் - ஒளி. சிவிகைத் தலை - பல்லக்கில். மழையின் - மேகத்தைப்போல. மல்லற்பதி - துவாரகைக்கு; மல்லல் - வளம். மாயவன் கன்னியர் தம்மைப்பதி விடுத்தான்; விடுத்தான் - போகும்படி செய்தான்.

3637. மால் கூர்ந்த - பெருமை மிக்க. அயிராவத மாபில் - அயிராவதத்தின் வமிசத்தில். மருப்பு - கொம்பு. நால்கு - நான்கு. பிறந்தன, வெண்ணிறத்தன, உற்றன ஆகிய நான்கினை அரவணையான் கவர்ந்தான்.

கலிவிருத்தம்.

3638. கட்க மழ்ந்ததார் களுலுங் திண்புயம்
மட்ப சுங்கொடிக் களித்த மாயவன்
விட்பு லஞ்சிறப் பெய்த மேதகு
புட்க ழுத்தினிற் போயி னனரோ. (உரு)

3639. ஈன்ற செங்கதிர்க் குழவி யெய்தல்போல்
தோன்று வெவ்வெயிற் சுடர்செய் குண்டலம்
ஆன்ற பொற்புலா மதிதிக் கீந்தனன்
கான்ற தும்புதார்க் கண்ண னென்பவே. (உசு)

3640. ஆட னேமியா னைய தண்டுழாய்
சூடு திண்புயந் தோயு மின்னனுள்
பாடல் வண்டுலாம் பைம்பொற் கற்பகக்
காடு கண்டுளங் காமுற் றுளரோ. (உஎ)

3641. காரி ருங்குழற் கலவ மாமயில்
ஒருஞ் சாயல ளுள்ள நோக்கினன்
வேர்பி டுங்கினன் வேரி மாமலர்ப்
பாரி சாதகப் பைம்பொன் மார்பனே. (உஅ)

3642. கள்ளு லாந்துணர்க் காமர் கற்பகம்
கொள்ள னீயெனக் குழுமு வானுளோர்

---

3638. கள் - தேன். மட்பசுங் கொடிக்கு - பூமியாகிய நங்கைக்கு. மாயவன் - கண்ணன். புள் - கருடனது.

3639. கதிர்க்குழவி - இளஞ் சூரியன். வெயில் - ஒளி. ஆன்ற - நிறைந்த. பொற்பு - அழகு. அதிதி - இந்திரனுடைய தாய். கான்றதும்பு தார் - வாசனை வீசுகின்ற மாலை. கண்ணன் குண்டலத்தை அதிதிக்கு ஈந்தனன். குண்டலங்கள் முன் நரகாசுரனால் அபகரிக்கப்பட்டன ; 3616.

3640. ஆடல் - வெற்றி. நேமியான் - கண்ணனது. ஐய - அழகிய. மின்னனுள் - சத்தியபாமை. கற்பகக் காடு - கற்பகச் சோலையை. காமுற்றுள் - விரும்பினுள்.

3641. கலவம் - தோகை. மயில் ஒரும் சாயலள் - சத்திய பாமையினது ; ஒரும் - ஒக்கும். வேரி - வாசனை. பொன் மார்பன் சாயலது உள்ளம் நோக்கிப் பாரிசாதத்தை வேரோடு பிடுங்கினன் ; பொன் - திருமகள். மார்பன் - கண்ணன்.

3642. கள் - தேன். துணர் - பூங்கொத்து. காமர் - அழகிய. நீ கற்பகத்தைக் கொள்ளல் ; கொள்ளல் - கொள்ளாதே. என - என்று கூறி வானுளோர் - தேவர். திறல் - வலிமை. சாய - கெட. மாறு - பகை.

தள்ள ருந்திறல் சாய மாறிலா
வள்ளல் வால்வளை வாய்வைத் தானரோ. (உகூ)

3643. செய்ய பொற்றருக் கொண்டு செவ்விசால்
ஐய பொற்கொழுந் தன்ன மாதொடு
மைய வேலைசூழ் மல்லன் மாநகர்
வெய்ய புள்ளின்மேல் விமல னெய்தினான். (௩௦)

3644. நாக ணைத்துயி னம்பி வம்புலாம்
போகி தழ்ப்பசும் பொன்னங் கற்பகம்
பாகின் மென்மொழிப் பவளச் செய்யவாய்த்
தோகை யாடவோர் சோலை யாக்கினான். (௩க)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3645. உருவம் பதினா றாயிரங்கொண் டொற்றைத் திகிரி நெடுமாயன்
குரவங் கமழ்ந்து நெறிந்துகடை குழன்று முருகு கூட்டுண்டு
வரிவண் டுறையுங் கருங்கூந்தன் மாதர் பதினா றாயிரவர்
திருவ மணமோர் காலையினிற் சிறப்ப வினிது புரிந்தனனால். (௩உ)

3646. காதல் கனியக் கனியநலங் கனிந்த கதிர்மா முலைக்கனிவாய்
மாதர் மகிழ மந்தார வனங்க டொறுமென் மாதவிப்பூந்
தாது படுந்தேன் பந்தர்தொறுந் தனியா டினானன் மழைகாத்த
கோதை யருவி தவழ்பசும்பொற் குடுமி விலங்கற் குடைநம்மான். (௩௩)

---

வள்ளல் வானுளோரது திறல் சாய வளை வாய்வைத்தான்; வள்ளல் - கண்ணன். வளை - சங்கை.

3643. செய்ய - சிவந்த. பொன்தரு - கற்பக தருவை. செவ்வி - அழகு. ஐய - வியக்கத்தக்க. மாதொடு - சத்தியபாமையொடு. மைய - கருமையான. வேலை - கடல். மல்லல் - வளம்பெற்ற. நகர் - துவாரகையை. புள் - கருடன். விமலன் - கண்ணன்.

3644. நாகணை - பாம்புப் படுக்கையில். நம்பி - கண்ணன். வம்பு - வாசனை. போகிதழ் - நீண்ட இதழ். பாகின் - பாகைப் போன்ற. செய்ய - சிவந்த. தோகை - சத்தியபாமை. ஆட - விளையாட. நம்பி தோகையாடக் கற்பகத்தைச் சோலையாக்கினான்.

3645. திகிரி - ஆஞ்ஞா சக்கரம் மாயன் - கண்ணன். குரவம் - குரவ மலர். கடை - நுனி. முருகு - தேனை. உண்டு - அருந்தி. மாயன் பதினாறாயிரவரை மணம்புரிந்தனன்.

3646. காதல் - அன்பு. நலம் - அழகு. மந்தார வனம் - கற்பக வனம். கோதை போன்ற அருவி; கோதை - மாலை. குடுமி - சிகரம். விலங்கல் - கோவர்த்தனகிரி. நம்மான், மாதர் மகிழ, வனங்கடொறும், பந்தர் தொறும் ஆடினன்; நம்மான் - கண்ணன்.

3647. நம்பால் விழையு நாகணையா னம்பால் விழையு மெனநறிய
ஐம்பான் மகளி ரெல்லோரு மன்பான் மகிழ வாய்வஞ்சிக்
கொம்பால் வகுத்த சிறுமருங்குற் குவளைத் தடங்கண் மடமாதர்
வம்பாற் றிகழு முலைதழுவி மலராள் கொழுநன் வைகினனால். (௩௪)



# 33. உருக்குமிணி யூடறீர்த்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3648. மலர்விற் றிருந்த மடமாது
மானக் கவரி மருங்கிரட்டக்
குலவத் தொடுத்த மல்லிகைப்பூங்
கோதை கமழ மந்தார
அலரிற் றவழ்ந்த பசுந்தென்ற
லந்திங் கொழுந்து முருகுயிர்ப்ப
நிலவுப் பயன்கொண் முற்றத்து
நெடியோன் செம்மாந் திருந்தனனால் (க)

---

3647. நம்பால் - நம்மிடமே. விழையும் - விருப்பங் கொள்கிறான். நாகணையான் - கண்ணன். நறிய - வாசனை பொருந்திய. ஐம்பால் - ஐந்து பகுப்பினை யுடைய கூந்தல். மகளிர் எல்லோரும் - மனைவியர் பதினாறுயிரவரும். மருங்குல் - இடை. வம்பு - கச்சு. மலராள் கொழுநன், மகளிரெல்லோரும் மகிழ, தழுவி வீற்றிருந்தான்; மலராள் - திருமகளது. கொழுநன் - கண்ணன்.

3648. மலர் - தாமரை. மாது - உருக்குமிணி. மானம் - பெருமை. இரட்ட - இருபுறமும் வீச. குலவ - விளங்க. கோதை - பூமாலை. மந்தார அலரில் - மந்தார மலரில். தென்றலாகிய கொழுந்து: இளந் தென்றல் என்றபடி. முருகு உயிர்ப்ப - வாசனையை வீச. நிலவுப் பயன் கொள்முற்றத்து - நிலாவினது பயனைக் கொள்ளுதற்குக் காரணமாகிய முற்றத்தின் கண்; "நிலவுப் பயன் கொள்ளு நெடுநிலா முற்றத்து" (சிலப். 4: 31.) நெடியோன் - கண்ணபிரான். செம்மாந்து - இறுமாந்து.

3649. அவிர்முத் தாய்ந்துஞ் செவிகவரு
மம்மென் மழலைக் கிளிசுமந்தும்
திவவுத் திகழ்யாழ் நரம்புளர்ந்துஞ்
சிவந்த தளிர்க்கை சிவப்பூரக்
கவரி யிரட்டு முருப்பிணிவெண்
கதிர்வாண் முறுவன் முகநோக்கி
உவரி யமுது படக்கடைந்த
வுரவோ ஞென்றுங் குறைசெய்தான் (உ)

3650. அரிமா சுமந்த வட்டவணை
பொலிய வாசு வீற்றிருக்கும்
திருமா வேந்தர் பலர்நினது
செவ்வி விழைய வெய்யநரை
உருமார்த் தனபோன் முழங்குகளிற்
றொன்ன ருடற்று மமர்வெருவி
விரிமாக் கடலு ளமர்ந்தேனை
விழைந்தா யென்கொன் மெல்லியலே. (ந)

3651. எவர்மற் றென்னை விழைகிற்பா
ரேற்றூண் மிசைவாழ்க் கையரன்றி
உவவு மதியிற் கிளர்ந்துகவி
ஞெழுகு முகத்தா யெனக்கலங்கி

---

3649. அவிர் - விளங்குகின்ற. அம்மென் மழலைக்கிளி - அழகிய மெல்லிய மழலைச் சொற்களையுடைய கிளியை. திவவு - நரம்புக்கட்டு. நரம்பு உளர்ந்தும் - நரம்பைத் தடவியும். சிவப்பூர - சிவப்பு மிக. கவரியை யிரட்டுகின்ற உருப்பிணியின். உருப்பிணி - உருக்குமிணி; பாகதச் சிதைவு; (திவ். 309.) உவரி அமுதுபட - உப்புக்கடலில் அமுதுண்டாக. உரவோன் - கண்ணபிரான்.

3650. அரிமா - சிங்கம். அலங்க - விளங்க; அசைய. திருமா வேந்தர் - செல்வத்தையுடைய பெரிய அரசர். செவ்வி விழைய - அழகை விரும்ப. நரை உரும் - பெருமையினையுடைய இடியேறு; "நரையுருமி னேறனையை" (மதுரைக். 63.) ஒன்னர் - பகைவர். உடற்றும் - மாறு பட்டுச் செய்கின்ற. அமர் வெருவி - போருக்குப் பயந்து. அமர்ந்தேனை - அமர்ந்தவனாகிய என்னை. என்கொல் விழைந்தாய். மெல்லியல்: உருக்கு மிணி; விளி.

(பி - ம்.) 2. திருமால்.

3651. ஏற்று ஊண் மிசை வாழ்க்கையரன்றி என்னை எவர் விழைகிற் பார்? ஏற்று - பிச்சை யேற்று. ஊண்மிசை வாழ்க்கையர் - உணவுண்ணு கின்ற வாழ்க்கையை யுடையவர். உவவுமதி - பூர்ண சந்திரன், கிளர்ந்து -

குவவுக் கதிர்மா மூலைசுமந்து
குழைந்த மருங்குற் கொடிகுழைக்கும்
கவரி சோரத் தொடிசோரக்
கையா றுற்று வீழ்ந்தனளால். (ச)

3652. அளிக்கு நெகிழ்பூங் குழலணங்கை
யள்ளி யிருகை யாலணைக்கும்
துளிக்குங் கண்ணீ ரொருகையாற்
றுடைக்குந் தூநீ ரொருகையால்
தெளிக்குஞ் சிறிது தெளிந்ததற்பின்
செவ்வாய் திறந்து சிலகிளக்கும்
களிக்குங் காடக் கடாக்களிற்றின்
கதிர்வெண் பிறைக்கோ டொசித்தானே. (ரு)

3653. கொடிவார் புருவங் கூத்தாடக்
குருதி பாய்ந்த நெடுவானில்
பொடியா வளர்நாண் மதிநுதல்வேர்
பொடிப்பப் பவள விதழ்துடிப்பக்
கடியார் குவளை மலர்க்கருங்கட்
கடைசேப் பூரப் புலந்துரைக்கும்
வடியா ரமுத மென்மழலை
மாதர்க் கிவ்வா றியம்பினனால். (சு)

---

விளங்கி. என - என்று கண்ணபிரான் கூற. குவவு - குவிந்த, திரண்ட. குழைந்த - வாடிய. குழைக்கும் - சாய்க்கின்ற. தொடி - தோள்வளை. கையாறுற்று - செயலற்று.

3652. அளிக்கு நெகிழ் - வண்டுகளுக்கு அலர்கின்ற. அணங்கை - உருக்குமிணியை. அணைக்கும் - அணைப்பான். துளிக்கின்ற கண்ணீரை. ஒருகையால் தூநீரைத் தெளிக்கும். கிளக்கும் - சொல்வான். காடம் - மதச்சுவடு. களிற்றின் - குவலயா பீடத்தின். ஒசித்தான் - கண்ணபிரான்; எழுவாய்.

3653. கொடி - ஒழுங்கு. கூத்தாட - ஏறி யிறங்க. குருதி - சிவப்பு. பொடியா - தோன்றி. மதி போலும் நுதலில். கடி ஆர் - வாசனை பொருந்திய. சேப்பூர - சிவப்பு மிக. புலந்து உரைக்கும் - ஊடல் கொண்டு கூறும். வடி ஆரமுதம் - வடித்த அரிய அமுதம் போன்ற. மாதர்க்கு - உருக்குமிணிக்கு.

3654. மாது மடவை யழேற்கவென
வண்டுஞ் சுரும்பு மெழுந்தாற்றும்
கோதை திருத்தி நுதனீவிக்
கொழிக்குஞ் சுடர்ப்பூண் கைசெய்யக்
காது கடந்து கடைசிவந்து
களித்து மதர்த்துக் கருங்குவளைப்
போது கடந்த வாட்டடங்கட்
பூவை கொழுநற் போற்றினளால். (எ)

3655. முற்றத் துறந்து பற்றின்றி
முருகு பருகு மதுகரம்போல்
பெற்ற பெற்ற வழியருந்து
பெரியோ ரன்றித் திருவுந்திப்
பொற்ற கமலத் துலகேழும்
பூத்தோய் செல்வக் களிமயக்கம்
உற்ற மாக்க ணினையெங்ங
னுணர்வு படைத்து விழைகிற்பார். (அ)

3656. ஏடு படும்பூந் துளவமுகி
லெல்லா வுலகு மிறந்துபட
நீடு தடங்கோட் டாலிலைமே
னீலப் புயல்போ னிமிர்பசும்பொற்

---

3654. மாது, மடவை; இரண்டும் விளி. மடவை - அறிவில்லாய்; "மடவை மன்ற மடவோய்" (பெருங். 1. 47: 251.) அழேற்க - அழாதே; "அழேற்கென் பாவாய்" (பெருங். 1. 36: 74.) அாற்றும் - ஒலிக்கின்ற. கோதை - கூந்தலை; பூமாலையை எனலுமாம். நுதலை நீவி; நீவி-துடைத்து. பூண்கைசெய்ய - ஆபரணத்தை அழகுசெய்ய. திருத்தியது முதலியன கண்ணபிரான் செயல். பூவை - உருக்குமிணி. கொழுநன் - கண்ண பிரானை.

(பி - ம்) 1. மாது மடவை யழற்கவென.

3655. பற்று - ஆசை. முருகு - தேனை. மதுகரம் - வண்டு. பெற்ற பெற்றவழி - கிடைத்தனவற்றைக் கிடைக்கும்போது. திருவுந்தியிற் பூத்தோய்: என்றது கண்ணபிரானை; விளி. பொற்ற - பொலிவு பெற்ற. செல்வக் களிமயக்கத்தையுற்ற மாக்கள்; மாக்கள் - அறிவில்லாதவர். நினை - உன்னை. விழைகிற்பார் - விரும்புவார்.

3656. ஏடு - இதழ். துளவமுகில் - கண்ணபிரான்; விளி. நீடு - நீண்ட. கோடு - கிளை. புயல் - மேகம். கோடு - சிகரம். திகிரிவரை -

கோடு பிடுங்கித் திகிரிவரை
கொன்று நெடுவா னடையவளைத்
தாடு திரைக்கொத் ததிர்கடலி
லார்க்கு வெருவி யமர்ந்தனையால். (௯)

3657. ஆலக் கருஞ்சே றுமிழ்பகுவா
யாவிற் கிடந்த வாரமுதே
நீலப் பொருப்பே யருட்கடலே
நெடுநீர் வேலி யுலகளிக்கு
மாலைத் திகிரி மழைமுகிலே
மணியி லொளியு மலர்மணமும்
போலத் திகழ்வா யெங்குநினைப்
புகலார்க் கென்கொல் புகலம்மா. (க௦)

3658. அண்ட மெலாமன் னுயிரெல்லா
மகத்தும் புறத்துங் காந்தமரும்
புண்ட ரிகக்கட் பொருவிலிநின்
புகழே யன்றி யயலில்லை
பண்டை மறைகள் பறைவதெனிற்
பவர்செஞ் சடையோன் மலருறையுள்
கொண்ட வொருவ னேனோர்நீ
குறித்த பணிசெய் குநாலரோ. (கக)

3659. அழியா வுயிர்யா வையுந்தருநா
ளமர்ந்த கமல மலர்வேட்கை
ஒழியாய் போல விழுத்தவத்தோ
ருள்ளக் கமலத் துறைசுடரே

---

சக்கர வாளகிரி. கொத்து - தொகுதி. வெருவி - அஞ்சி. கடலில் ஆலிலை மேல் அமர்ந்தனையால்.

3657. ஆலக் கருஞ்சேறு - விஷமாகிய கரிய சேற்றை. அரவில் - ஆதிசேடன்மீது. அமுதே : கண்ணபிரானுக்கு விளி. நீராகிய வேலியை யுடைய உலகத்தை. அளிக்கும் - காக்கின்ற. மாலைத்திகிரி - பூமாலையைக் கொண்ட சக்கரத்தையுடைய. மணியில் ஒளியையும் மலரில் மணத்தையும் போல எங்கும் திகழ்வாய். புகலார்க்கு - கூறாதவர்க்கு. புகல்என் கொல்; புகல் - புகலிடம்.

3658. காந்து - மறைந்து. பொருவிலி - ஒப்பில்லாதவனே; கண்ண பிரானுக்கு விளி. அயல் - வேறு. பறைவதெனில் - கூறுகின்றதென்றால். பவர் - கொடி. சடையோன் - சிவபெருமான். மலரை உறையுளாகக் கொண்ட ஒருவன்; பிரமன். ஏனோர் - இந்திரன் முதலியவர்.

3659. தருநாள் - அளிக்கும் நாளில். கமல மலரிடத்து வேட்கை ஒழியாய் போல : என்றது பிரமனை ; ஈண்டுத் திருமாலையே பிரமனாக எண்

மொழியால் வழுத்தற் கெளிதோநின்
முழுச்சீ ரென்ன வருள்பெருகி
வழியா விதழ்த்தா மரைமலர்க்கண்
வள்ள லுள்ள மகிழ்கூர்ந்தான். (கஉ)

3660. அலைவா யெழுந்த மணிகொழிக்கு
மஞ்செங் கதிர்க டவழ்ந்தனபோல்
சிலையா ரலங்கற் றிருமார்பிற்
றேங்கொள் கலவைச் செழுஞ்சாந்தம்
முலையா லெழுது மடமாதின்
முறுவன் மாந்தி யின்புற்றான்
மலையாற் பொழியு மழைகாத்து
மண்காத் தளிக்கு மறைமுதலே. (கரு)

---

ணிக் கூறியது. சுடர்: கண்ணபிரான்; விளி. முழுச்சீர் - முழுப்பெருமை. என்ன - என்று உருக்குமிணி கூற. வழியா - வழிந்து. வள்ளல் - கண்ணபிரான்.

3660. அலைவாய் - கடலின் அலையிடத்து. மணி - கௌஸ்துபம். சிலையாரலங்கல் - இந்திரவில்லையொத்த மாலையையுடைய. தேம் கொள் - இனிமையைக் கொண்ட. மாதின் - உருக்குமிணியின். பொழிகின்ற மழையை மலையாற் காத்து. மறைமுதல் - கண்ணபிரான்; எழுவாய்.



# 34. பிரத்துமனன் மணம்புரி அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3661. பின்னற் றிரையி னமிழ்தென்னப்
பெருந்தே வியர்மற் றெண்மரொடு
பொன்னங் கொடிபோன் மடக்கிளிபோற்
புயல்வாய்ப் பிறழும் புதுமின்போல்
மன்னும் பதினு றுயிரமென்
மழலை மடவா ரோரொருவர்
பன்னற் கருப்பண் புடைப்புதல்வர்
பதின்மர் தமையீன் றெடுத்தன்றால். (க)

3662. தெய்வக் கமல மலர்துறந்து
தெண்ணீர் விதர்ப்ப நாடளிக்கும்
வைவேற் றடக்கை மன்னவன்பொன்
மனைவந் துதித்த மடமாது
பௌவத் திரையிற் கிளைக்குமிளம்
பவளக் கொடிபோல் விளங்குமொரு
கொவ்வைச் செவ்வா யமுதுகுமென்
குதலைத் தீஞ்சொன் மகப்பெற்றுள். (உ)

---

3661. பின்னல் திரையின் - ஒன்றேடொன்று பின்னுகின்ற அலையிடத்து. பெருந்தேவிகள் - பட்ட மகிஷிகள். பொன்னங்கொடி - பொற்கொடி. புயல் - மேகம். மன்னும் - நிலைபெற்ற. ஓரொருவர் - ஒவ்வொருவர். பன்னற்கரும் - புகழ்தற்கரிய. பதின்மர் - பத்துப்பேர்.

(பி - ம்.) 3. மடவா ரோரோவொருவர்.

3662. தெண்ணீர் - தெளிந்த நீரையுடைய. மன்னவனது பொன் மனையில் வந்துதித்த மாது ; உருக்குமிணி. பௌவம் - கடல். கிளைக்கும் - தோன்றுகின்ற. மக - குழந்தை ; ஈண்டுப் பெண் குழந்தை.

3663. மன்றற் கோதை திருவயிறு
வாய்த்த சாரு மதியென்னும்
கொன்றைக் குழலைக் கொழுங்குருதி
குமிழி யெழுவேற் கிருதவன்மா
என்றிப் புவன மீரேழு
மிசைக்குந் திறன்மன் னவனுயிர்த்த
வென்றிக் களிற்று விசாலாக்கன்
விரிதார் புனைந்து வேட்டனனால். (௩)

தரவு கொச்சகக் கலிப்பா.

3664. வார்சிலைக்கை யுருக்குமிநல் வரமதனில் வந்துதித்த
ஆரமுதின் மென்சாய லரும்பெறன்மா மகள்வேட்டுச்
சோரிபடிந் துண்டுதசை சுவைத்துநிணம் வாய்ப்பில்கிப்
போர்விழைந்த வேலரசர் போசகடத் திறுத்தனரால். (௪)

3665. மொய்க்குமிளங் களிவண்டு முருகுயிர்க்கு மலர்த்தாது
விக்கிநறுத் தளிபருகு விரைக்கோதை மணம்வேட்டுச்
செய்க்கமலத் தலரன்ன செங்கணெடு மால்பயந்த
மக்களின்மீ னேறுயர்த்த மதவலியு மாங்கிறுத்தான். (௫)

3666. கூற்றிருந்து விளையாடு குடுமிநெடு வேன்மன்னர்
வீற்றிருந்த மாடத்து விரைகமழும் பசுந்தேறல்

---

3663. மன்றல் - வாசனை. கோதை - உருக்குமிணியின். கொன்றைக்குழலை - கொன்றைக் காயைப் போன்ற கூந்தலையுடையவளை. குருதி குமிழி யெழுகின்ற வேலையுடைய கிருதவன்மா என்று; கிருதவன்மா - யாதவ குலத்து மன்னன். உயிர்த்த - பெற்ற. விசாலாக்கன் - விசாலாக்ஷன்; கிருதவன்மாவின் மகன். விசாலாக்கன், உருக்குமிணியின் பெண் சாருமதியை மணந்தான்.

3664. உருக்குமி : உருக்குமிணியின் தமையன். அமுதினைப்போன்ற மெல்லிய சாயலையுடைய. உருக்குமியின் மகளை வேட்டு. வேட்டு - விரும்பி. சோரி - இரத்தம். பில்கி - கக்கி. போசகடம் : உருக்குமி வாழ்கின்ற நகரம். இறுத்தனர் - தங்கினர்.

3665. முருகு - தேன்; வாசனை. தாதுவிக்கி - தாதுக்களை யுண்டமையால் விக்கி. நறுத்தளி - தேன்துளியை. கோதை - உருக்குமியின் பெண். மால் - கண்ணபிரான். மீனேறுயர்த்த மதவலி - பிரத்துமனன்; இவன் மன்மதனுடைய அமிசம். இறுத்தான் - வந்து தங்கினான்.

3666. கூற்று - யமன். குடுமி - உச்சியையுடைய. மாடத்து - சபையின்கண். விரை - வாசனை. தேறல் - தேன். நிலா - குளிர்ச்சி பொருந்திய

னூற்றிருந்த பூங்கொடிபோ லொழுகிநிலா வழியுமதிக்
கீற்றிருந்த தனையநுதற் கிளிமொழிசென் றெய்தினளால். (சு)

3667. எழிற்குழையொன் றொல்கியணி யெருத்தலைப்ப விருடூங்கு
குழற்பிணையல் புறந்தாழக் குடங்கைநிறைந் தடங்காத
மழைத்தடங்கண் மடமாது வட்டவாய்த் திகிரிவலம்
தழைத்தபுய றருதோன்ற றடம்புயமே நோக்குற்றாள். (எ)

3668. மெல்லியல்வா ளரித்தடங்கண் மீனேற்றுக் கொடியோன்றன்
மல்லியலுந் திணிதடந்தோண் மணிவரையிற் றவழ்தோற்றம்
அல்லியம்பூந் துணரூது மளிநாணிற் றொடுத்துலகம்
கொல்லியவோங் கியகுவளைக் கொழுமலரே போன்றதால். (அ)

3669. எறிக்குநிலாக் கொழுந்தென்ன வேரொழுகு பொறிநுதல்வேர்
உறைப்பவுருத் தொளிர்கின்ற வொள்ளொளிமென் னகைமொக்குள்
மறைத்துநறைக் குழலூழ மழைமின்னிற் றிகழ்வாளைக்
குறிப்பறிந்த விளவேனிற் கோமைந்தன் கவர்ந்தனனால். (சு)

3670. அள்ளிலைப்பூ ணணிந்தேந்து மம்பகட்டு வரைமார்பின்
ஒள்ளிதழ்வெம் முலைமுளரி யோங்கெழின்மெல் லரும்புபொர

---

ஒளி. மதிக்கீற்று இருந்தததனைய நுதல் - சந்திரனின் பிளவு இருந்ததைப் போன்ற நெற்றியையுடைய. கிளிமொழி - உருக்குமியின் பெண்,

3667. எழிற்குழை - அழகு பொருந்திய குண்டலம். ஒல்கி - அசைந்து. எருத்து அலைப்ப - பிடரியிற் புரள. இருள் தூங்கு குழல் - இருட்சி மிக்க கூந்தல். பிணையல் - மாலை. குடங்கை நிறைந்து அடங்காத கண்; "குடங்கை போலுண் கண்" (சீவக. 342.)மாது : உருக்குமியின் பெண். திகிரி வலம் தழைத்த - சக்கரம் வலத்தே பொருந்திய. புயல் - கண்ணபிரான். தோன்றல் - பிரத்துமனனுடைய.

3668. மெல்லியல் - உருக்குமியின் பெண்ணினுடைய. மீனேற்றுக் கொடியோன்றன் - பிரத்துமனனுடைய. மல் - மற்போர். கண், தோளாகிய வரையில் தவழும் தோற்றம். அல்லி - அகவிதழ். அளியாகிய நாணினால் தொடுத்து ; அளி - வண்டு. கொல்லிய - கொல்லுதற்கு.

3669. எறிக்கும் - ஒளி வீசுகின்ற. ஏர் - அழகு. பொறி - புள்ளி. நுதலில் வேர் உறைப்ப ; வேர் - வியர்வை. உறைப்ப - துளிக்க. உருத்து - கோபித்து. நகையையுடைய மொக்குளை மறைத்து ; நகை மொக்குள் - ஒளியையுடைய பற்களை. நறை - வாசனை. தாழ - தொங்க. மழையிடத்து மின்னலைப்போல் திகழ்வாளை. இளவேனிற்கோ மைந்தன் - பிரத்துமனன்.

3670. அள் - கூர்மை ; செறிவு. பூண் - ஆபரணம். அம்பகட்டு - அழகிய பெருமையினையுடைய. பிரத்துமனனுடைய மார்பில் உருக்குமியின் பெண்ணினது முலையாகிய முளரியரும்பு பொர, முள்அரை - முள்ளை

முள்ளரைத்தா மரைமுகையான் மூவுலகுந் தனிபொருத
கள்ளொழுகு பசுந்தாரான் கலவியினிற் களித்தனனால். (கo)

3671. கரும்புகடை குழைத்துநறுங் கார்முல்லை மெல்லரும்பால்
இரும்புவனம் பொருதழித்த வெழுவுறழுந் திணிமொய்ம்பன்
விரும்புறவின் னமுதூறும் வெண்டோட்டுப் பனிமுல்லை
அரும்புறழு முள்ளெயிற்றூட் கநிருத்த னுதித்தனனால். (கக)

3672. செருக்கியவெண் பிறைக்கோட்டுத் திருகுசின மால்யானை
உருக்குமிதன் மகனுயிர்த்த வோடரிக்கட் செங்கனிவாய்ப்
புரிக்குழலைத் தயங்குமெழில் பொலியும்வலம் புரிபொறித்த
அரக்கெறிதா மரைமலர்க்கை யநிருத்தற் களித்தனனால். (கஉ)

3673. என்றலுமா யனைமுனிவுற் றிருக்கின்றோன் மால்பயந்த
மன்றலந்தா ரவன்மகற்கு மகட்கொடைநேர்ந் தமையென்னே
குன்றனையா யெனவேந்தன் கூறுதலுந் தங்கைமனம்
நன்றுவப்ப நல்கினனெ லென்றுமுனி வரனவில்வான். (கங)

---

அரையிலேயுடைய தாமரை முகையான் - தாமரை மொட்டால்; இது மன் மதனுடைய மலரம்பைந்தனுள் ஒன்று. கள் - தேன். தாரான் - பிரத்து மனன். கலவி - மயக்கம்.

3671. கரும்பு கடை குழைத்து - கரும்பாகிய வில்லின் நுனியை வளைத்து. கார் காலத்து முல்லை யரும்பால். இரும்புவனம் - பெரிய பூமி. எழு - கணையமரம். மொய்ம்பன் - பிரத்துமனன். விரும்புற - விரும்புதலால். தோடு - இதழ். பனி - குளிர்ச்சி. எயிற்றூட்கு - பிரத்துமனனுடைய மனை விக்கு.

3672. செருக்கிய - மதங்கொண்ட. திருகுசினம் - மாறுபட்ட கோபத்தையுடைய. உயிர்த்த - பெற்ற. அரிக்கண் - செவ்வரி பரந்த கண் களையுடைய. குழலை : பெண்ணை. தயங்கும் - விளங்குகின்ற. வலம்புரி பொறித்த - சங்கரேகை பொறிக்கப்பட்ட. அரக்கு எறி தாமரைமலர் - சிவப்பு ஒளி வீசுகின்ற தாமரைப்பூ. உருக்குமியின் மகன் பெற்ற பெண்ணை, பிரத்துமனன் மகனாகிய அநிருத்தன் மணந்தான்.

3673. என்றலும் - என்று சுகமுனிவன் கூறுதலும். மாயனை முனி வுற்றிருக்கின்றோன் - கண்ணபிரானைச் சினந்திருக்கும் உருக்குமி. மால் பயந்த - கண்ணபிரான் பெற்ற. தாரவன் - பிரத்துமனன். மகற்கு - அநி ருத்தனுக்கு. மகட்கொடை - பெண் கொடுத்தல். குன்றனையாய்; சுக முனிவனுக்கு விளி; "மல்லன் மலையனைய மாதவரை" (சீவக. 2789.) வேந்தன் - பரிக்ஷித்து. தங்கை - உருக்குமிணி. நன்று உவப்ப - மிக மகிழ. முனிவரன் - சுகன்.

(பி - ம்.) 2. நேர்ந்ததெனை குணம்.

3674. அள்ளிலைவேல் வலனுயர்த்த வநிருத்தன் மணமாற்றக்
கள்ளவிழும் வெண்டோட்டுக் கரும்பனைமீ மிசையுயர்த்த
வெள்ளிவரை யனையானும் வேதவிழுப் பொருட்படிவப்
புள்ளுயர்நீள் கொடியானும் போசகடத் திறுத்தனரால். (கச)

3675. கழுகுசுல வுறநிணம்வாய் கான்றுகதழ் கடுங்குருதி
ஒழுகுகெடு வேற்றடக்கை யுருக்குமிகா தலனுயிர்த்த
புழுகொழுகு கருங்கூந்தற் பொற்கொழுந்தை யழல்சான்று
அழகொழுகு திணிதடந்தோ ளநிருத்தன் வேட்டனனல். (கரு)

அறுசீர்க்கழிநெடிலடி லாசிரிய விருத்தம்.

3676. மோடுசான் மன்ற லாற்றி முருகனு னுறையு நாளில்
பீடுசால் பிறைவெண் கோட்டுப் பிணர்ப்படு பனைக்கை நால்வாய்
ஓடைவேய் களிநல் யானை யுருக்குமி தன்னோ டின்புற்
றூடினன் சூது வென்றி யலப்படை யண்ணன் மன்னோ. (கசு)

3677 முள்ளெயிற் றணங்கி னன்னார் முகிழ்முலைக் கோடு பாய
ஒள்ளிணர் கிழிந்த பைந்தா ருருக்குமி யிருகால் வெல்ல
வெள்ளியங் குன்றம் போலும் விளங்கொளி மேனி யானைத்
தெள்ளொளி முறுவ றோன்றச் சிரித்தனன் கலிங்க வேந்தன்.

---

3674. அள் - கூர்மை. வலனுயர்த்த - வலப்பக்கத்தே உயர்த்திய. மணம் ஆற்ற - கலியாணத்தைச் செய்ய. கள் - தேன். வெள்ளிவரையனை யான் - பலராமன். வேத விழுப்பொருள் படிவப்புள் - வேதமாகிய சிறந்த பொருளின் வடிவத்தைக் கொண்ட கருடனை. கொடியான் - கண்ணபிரான்.

3675. சுலவுற - சுற்ற. கான்று - சிந்தி. ஒழுகுகின்ற நெடிய வேலை யுடைய. உருக்குமி காதலன் - உருக்குமியின் மகன். புழுகு - கஸ்தூரி. அழல் சான்று - அக்கினி சாட்சியாக.

3676. மோடு - பெருமை. மன்றலாற்றி - மணத்தைச் செய்து. முருகனுன் - கண்ணபிரான். பீடு - பெருமை. பிணர் - சர்ச்சரை. நால் வாய் - தொங்குகின்ற வாயையுடைய. ஓடை - நெற்றிப் பட்டம். வென் றியையுடைய அலப்படையைக் கொண்ட அண்ணல் : பலராமன் ; அலம் - கலப்பை. அண்ணல் உருக்குமியோடு சூதாடினன்.

3677. முள்ளெயிற் றணங்கி னன்னார் - முள்ளைப்போன்ற பற்களை யுடைய தெய்வமங்கையரைப் போன்ற மகளிர். முகிழ் - அரும்பு. கோடு - நுனி. இணர் - பூங்கொத்து. இருகால் - இரண்டு முறை. வெல்ல - பலராமனை வென்றனை. மேனியானை - பலராமனைப் பார்த்து. கலிங்க வேந்தன் சிரித் தனன்.

3678. குமுதமென் முகைவாய் விள்ளக் குருஉச்சுடர்க் கற்றை காலும்
அமுதவெண் டிங்க ளென்ன வவிரொளி விரிக்கு மேனி
விமலன்மற் றொருகால் வெல்ல வென்றனன் யானே யென்னு
உமிழ்கதிர்ப் பரிதி வைவே லுருக்குமி யுரைசெய் தானல்.(கஅ)

3679. சந்தனப் படப்பை வேலித் தண்பணை விதர்ப்ப வேந்தன்
மைந்தன்மேல் வென்றி நாட்டி மன்னவ ருரைத்தாராக
வெந்திறன் ஞாஞ்சி லுங்கு விமலனே வென்று னென்னு
அந்தர வாணி மற்றொன் றுயிடை யறைந்த தன்றே. (கசு)

3680. நீணிறப் பரவை வேலி நெடுநிலம் புரக்கும் வேந்தர்
பான்மையி லாட லுற்ற பல்படைத் தொழிலுஞ் சூதும்
ஆனினம் புரந்து கான்சே ராயர்ஊன் கறியா ரென்றுங்
கூனுகு குடுமி வேற்கை யுருக்குமி யசிசெய் தானே. (உ0)

3681. இருட்டறச் சுடரு ஞாயி றெழுந்துசூழ் பசும்பொற் குன்றம்
வெருட்டிய குவவுத் திண்டோள் வெந்திற லிராமன் சீறிச்
சுருட்டுடற் பாந்தள் வேந்து சுமந்தபார் மன்ன ருட்க
உருட்டின னெழுவி னலவ் வுருக்குமி சென்னி மன்னே.(உக)

---

3678. குமுதம் - நீலோற்பலம். முகை - அரும்பு. விள்ள - அலரும் படி. குரு - நிறம். விள்ளும்படி சுடரைக்காலும் திங்களென்ன. மேனியை யுடைய விமலன் - பலராமன். வெல்ல - உருக்குமியை வென்றுனுக. உருக்குமி யானே வென்றனன் என்னு உரை செய்தான்.

3679. படப்பை - தோட்டம். பணை - மருத நிலம். வேந்தனது மைந்தன் மேல் - உருக்குமியின்மேல். வென்றி - வெற்றியை. ஞாஞ்சில் - கலப்பை. விமலன் - பலராமன். அந்தரவாணி - அசரீரி.

3680. பரவை - கடல். வேந்தர் - அரசர். பான்மையில் - முறைப் படி. ஆனினம் - பசுக்கூட்டத்தை. கான்சேர் - காட்டைச் சேர்கின்ற. ஆயர் - இடையர். என்று - என்றுகூறி. ஊன் - மாமிசத்தை. அசி - சிரிப்பு.

3681. அற - கெட. சுடரும் - ஒளிவிடுகின்ற. ஞாயிறு - சூரியன். பொற்குன்றம் - பொன்மலையை. வெருட்டிய - வெருளச் செய்த. இராமன் - பலராமன். சீறி - கோபித்து. பாந்தள் வேந்து - ஆதி சேடன். உட்க - அஞ்சும்படி. உருக்குமியின் சென்னியை எழுவினலுருட்டினன்; சென்னி - தலையை.

(பி - ம்.) 4. உருக்குமி யுவ்வி மன்னே.

3682. சுடர்மணிக் குழைவில் வீசிச் சுழன்றெருத் தலைப்பக் காமர்
கடிமலர்க் கண்ணி சிந்தக் கலிங்கனுங் கோடு வானை
அடியொரு பத்திற் பற்றி யணிமணிக் கடகக் கையாற்
படரொளி முத்த மன்ன பன்னிரை யுகுத்தல் செய்தான். (உஉ)

3683. ஈற்றுவண் டறைந்து செவ்வி யிளமுகை கிழியப் பாய்ந்து
காற்றுதேன் கமழும் பைந்தார் கைபுனை கருமென் கூந்தற்
கோற்றொடிப் பாவை யோடுங் குருதிவேற் றானை யோடும்
ஆற்றலந் திகிரி யம்மா னணிநக ரடைந்தா னன்றே.. (உங)



# 35. அநிருத்தன் மணம்புரி அத்தியாயம்.

---

கலிச்சந்த விருத்தம்.

3684. குழவிப்பிறை புனைவானவன் கூத்திற்கதிர் முழவம்
முழவிற்றிகழ் தோள்வாணன்மைம் முகிலாமென முழக்கத்
தழைவுற்றதொர் மகிழ்வாற்பொரு தந்தாவள முரித்தோன்
விழைவுற்றதென் றருவேமென விண்டானிதழ்ப் பவளம். (க)

---

3682. குழை - குண்டலம். வில் - ஒளி. எருத்து - பிடரி. காமர் - அழகிய. கண்ணி - மாலை. கலிங்கன் - கலிங்கதேச மன்னவன். பத்தடியிற் பற்றி. பல் நிரை - பல் வரிசையை. கலிங்க மன்னன் பல்லையுகுத்தது : 790.

3683. ஈற்று வண்டு - ஈனுதலையுடைய வண்டு. அறைந்து - ஒலித்து. செவ்வி - பருவத்தை யுடைய. பாவை - உருக்குமியின் மகனுடைய பெண். தானை - சேனை. திகிரியை யுடைய அம்மான் - கண்ணபிரான். நகர் - குசஸ்தலீ என்று கூறுவர் முதனூலார்.

3684. குழவிப்பிறை - இளம்பிறைச் சந்திரன். வானவன் - சிவ பெருமானுடைய. கூத்தில் - நடனத்தில். முழவினைப் போல் திகழ்கின்ற தோளையுடைய வாணன்; இவன் ஓர் அசுரன்; முகில் - மேகம். வாணன் முழவத்தை முழக்க. தந்தாவளம் உரித்தோன் - யானைத்தோலை உரித்த சிவபெருமான். உரித்தோன், மகிழ்வால், 'விழைவுற்றது என் தருவேம்' என இதழாகிய பவளத்தை விண்டான். விண்டான் - மொழிந்தான்.

3685. கருணைக்கட லென்மாநகர் காப்பாயெனக் கரைந்தான்
எரிகக்கிய சூலப்படை யிறைகாத்தன னுறைந்தான்
உரவுத்திரை விடமுண்டவ னுழைசென்றுமற் றொருநாள்
செருவேட்கையன் வாணாசுரன் சிலகட்டுரை புகன்றான். (உ)

3686. இடியுற்றன நெடுவான்கிழித் தெழுமேழ்பெருங் குன்றும்
பொடிபட்டன வென்றோளொடு பொருவெஞ்சமர் புரியாப்
பிடிமற்றிவை யெனக்கிம்புரி பிறங்கும்பிறை வெண்கோ
டடியற்றிடப் பொருதோடின வடல்வாய்களி றெட்டும். (ங)

3687. வளர்திண்புயந் தினவுற்றன வாட்போர்பெறு கலனால்
கிளர்வெள்ளியம் பனிமால்வரை கிழவோயுயர் கொற்றம்
விளையுஞ்சம நினையல்லது விளைக்கின்றவ ரில்லையால்
தளராவிறல் கெழுவாளமர் தருவாயெனக் கிளந்தான். (ச)

3688. அரணீறெழ முனஞ்செற்றவ னம்மென்னகை முகிழா
இருநீர்வரைப் பினிலென்னினு மெறுழ்மிக்கவ னெய்தா
வரையாவையுந் திரண்டாலென வளர்ந்தோங்கிய புயத்தாய்
செருவாற்றுவ னின்னோடெனச் செவ்வாய்திறந் திசைத்தான். (ரு)

3689. துன்னுவமர் துன்னப்படு மெனத்தோட்குலம் பணியா
அன்னான்வரு மெந்நாளென வற்றாங்கவன் னடல்சேர்

---

3685. கருணைக்கடல்: சிவ பெருமானுக்கு விளி. என் நகரைக் காப்பாய். வாணன் கரைந்தான். இறை - சிவபெருமான். காத்தனனாய் உறைந்தான். உரவு - பெருமை. விடமுண்டவனுழை - சிவபெருமானிடம். செருவேட்கையன் - போர் செய்யும் விருப்பம் கொண்டவன்.

3686. இடியுற்றனவாகிய வான். எழுகின்ற எழ்குன்றும். என் தோளொடு சமர்புரியா; புரியா - புரிந்து. பிடி - பெண் யானை. கிம்புரி - கோளகை; யானைத்தந்தத்திற்கு இடுவது. அற்றிட - அற்றுப் போக. களிறெட்டும் ஓடின.

3687. புயம் - தோள். தினவு - போர்த்தினவு. பெறுகலன் - பெற வில்லை. பனிமால்வரைகிழவோய்; சிவபெருமானுக்கு விளி. கொற்றம் விளையும் - வெற்றியுண்டாகின்ற. சமம் - போர். நினை - உன்னை. தளராத விறல் கெழுவாளமரை. விறல் - வெற்றி.

3688. அரண் நீறெழ - முப்புரங்கள் சாம்பலாகும்படி. செற்றவன் - அழித்தவனாகிய சிவபெருமான். நகை முகிழா - புன்சிரிப்புக் கொண்டு. இருநீர் வரைப்பினில் - கடலாற் சூழப்பட்ட நிலப்பரப்பில். எறுழ் - வலி. எய்தா - அடைந்து. புயத்தாய்: வாணாசுரனுக்கு விளி. செருவாற்றுவன் - போர் செய்வான்.

3689. துன்னு அமர் துன்னப்படும் என - கிடைக்கப் பெறாத போர் பெறப்படும் என்று. பணியா - பெருத்து. அன்னான் எந்நாள் வரும் என:

பொன்னார்கொடி வீழ்வுற்றிடு போதாமெனப் புகல
மின்னுமெனத் திகழ்வேலினன் விளையாமகிழ் விளைத்தான். (௬)

3690 அனையானெயி லாண்காவல்செ யான்மாமலை மடந்தை
புனைவார்முலை குழையப்புணர் பொழுதத்தட லசுரன்
மனமோகைசெய் மகள்கா ணுபு மயலேறினன் மருவத்
தனைநேர்தரு முமையாளரு டழையாவுரை தருமால். (எ)

3691. சின்னாளினின் கனவின்றலை திமிரக்கருங் களிற்றின்
மன்னுநறு மலர்ப்பூங்கணை மழையிற்பொழி மதனன்
தன்னுண்மையொ டுறுபேரெழி றருமாடவ னொருவன்
நின்னாய்நல நுகர்வானவ னின்காதல னென்றாள். (அ)

3692. தனிவிற்றிறல் வாணாசுரன் றருகன்னியன் னணமே
கனியிற்சுவை கனிமென்மொழி கரும்பன்னவள் கனவிற்
பனிமுத்தணிந் திருகுன்றெனப் பணைத்தேந்திய திணிதோள்
அநிருத்தனை மணந்தெவ்வழி யகன்றானென விழித்தாள். (௯)

3693. என்னாருயிர்த் துணையேயிவ ணிருக்தென்னைகொ லம்ம
பொன்னார்வளை கழல்வுற்றன புனைபூந்துகில் சோர்வ

---

அன்னான் - அப்படிப்பட்டவன். ஆங்கு: அசை; அவ்விடத்தே. அடல் - வன்மை. பொன்னார் கொடி - பொற்கொடி. புகல - கூற. வேலினன் - வாணாசுரன். விளையாமகிழ் - எந்நாளும் உண்டாகாத உவகையை.

3690. அனையான் எயிலரண் - அத்தகைய வாணாசுரனுடைய மதிற்புறத்து அரணை. அரன் - சிவபெருமான். மலைமடந்தை - பார்வதியின். பொழுதத்து - பொழுதில். அசுரன் மனம் - வாணாசுரனுடைய மனத்தை. ஓகை - உவகை. மகள் - வாணாசுரன் பெண்ணாகிய உஷை. காணுபு - கண்டு. மயல் - காதல். மருவ - பார்வதியை யடைய; உமையாள் - பார்வதி. தழையா - தழைத்து.

3691. கனவின்றலை - கனவினிடத்து. திமிரம் - இருட்டு. திமிரமாகிய கரிய களிற்றில் மன்னு; மன்னு - நிலைபெற்று. மதனன்றன் - மன்மதனுடைய. எழில்தரும் ஆடவனொருவன் - அழகு சிறந்த புருடன் ஒருவன். என்றது, பிரத்துமனன் மகனாகிய அநிருத்தனை. நின் ஆய் நலம் - உன்னுடைய ஆராயப்பட்ட அழகை. காதலன் - கணவன்.

3692. தனி வில் திறல் - ஒப்பற்ற வில் வன்மையை யுடைய. தரு - பெற்ற. கன்னி - உஷை. அன்னணமே - அப்பொழுதே. கனியிற் சுவை கனி - பழத்தைக் காட்டிலும் சுவை முற்றிய. கரும்பன்னவள் - உஷை. கனவில் - கனவிடத்தே. முத்து - முத்தமாலை. பணைத்து - பெருத்து. மணந்து - கலந்து. எவ்வழி - எவ்விடத்தே.

3693. துணை - தோழி; விளி. இவண் - இவ்விடத்தே. என்னை கொல் - என்ன காரணம். அம்ம: அசை. சோர்வ - சோர்கின்றன.

கொன்னேநெடு நிலவுத்தழல் கொல்கின்றது குலையா
இன்னேயென துயிர்தேயுமென் றிசைத்தாளழ லுயிர்த்தாள்.

3694. மொழிகுற்றதெ னிவ்வாறொரு மொய்தாரவன் றனைநீ
விழைவுற்றனை போல்வாய்மனம் விழைவுற்றதை யெவனோ
அழிமட்டுமிழ் வனைபூங்குழ லறைவாயெனக் கிளந்தாள்
செழுமுத்தென விளவாணகை திகழ்சித்திர ரேகை. (கக)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3695. கள்ளவிழ் கோதை கண்டேன் கனவினி லொருவன் றன்னை
அள்ளிலைப் பூணி னுன்ற னகம்பகட் டார மார்பும்
புள்ளுண விரிந்த பைந்தார்ப் பொன்வரை பொருவு தோளும்
ஒள்ளொளி நகையு மாவி யுண்டவென் றுருகி னளால். (கஉ)

3696 முழுமதி முகத்து நங்கை மூவகை யுலகின் மூவா
அழகுவீற் றிருந்த திண்டோ ளாடவர் தம்மை யெல்லாம்
கிழியினி லெழுதிக் காட்டக் கிள்ளையங் கிளவி வாளா
எழுதிய பாவை போல விருந்தன ளென்ப மன்னோ. (கங)

3697. அரவுட னெளிய வாடு மஞ்சன வண்ணன் றன்னைத்
திருமணி தெளித்துத் தீட்டிச் சித்திர ரேகை காட்ட
எரிமணி யாரந் தாங்கி யிணைத்தெழு முகிழ்மென் கொங்கைக்
கருமணிக் கூந்தற் கன்னி கண்டுகண் களித்திட் டாளே. (கச)

---

கொன்னே - வீணாக. நிலவாகிய தழல். குலையா - நிலை கெட்டு. இன்னே - இப்பொழுதே. தேயும் - கெடும்.

3694. இவ்வாறு மொழிகுற்றது என்; என் - என்ன காரணம். தாரவன் - ஆடவன். விழைவு - விருப்பம். விழைவுற்றதை எவனோ - நீ விரும்பிய காரியம் என்ன. அழிமட்டு - மிக்க தேனை. பூங்குழல் - உஷை: விளி. அறைவாய் - கூறுவாய். நகை - பல் சித்திரரேகை கிளந்தாள். சித்திரரேகை: உஷையின் தோழி.

3695. கள் - தேன். கோதை: சித்திரரேகை; விளி. கனவினில் ஒருவன்றன்னைக் கண்டேன். அள் - செறிவு. இலைப்பூண் - இலைவடிவமாகச் செய்த அணிகள். அம்பகட்டு - அழகிய பெருமையையுடைய. புள் - வண்டுகள். தாரையணிந்த தோளும். நகையும் - புன் சிரிப்பும். ஆவி - என் உயிரை.

3696. நங்கை - சித்திரரேகை. மூவா - மூத்தலில்லாத. ஆடவர் - புருடர். கிழி - சித்திரம். கிள்ளையங்கிளவி - உஷை. வாளா - பேசாமல்.

3697. அரவுடல் நெளிய - காளியனென்னும் பாம்பின் உடல் நெளியும்படி. அஞ்சன வண்ணன்றன்னை - கண்ணபிரானை. மணி தெளித்து - நீலமணியைக் கரைத்து. தீட்டி - கிழியில் எழுதி. மணியாரம் - முத்துமாலை. இணைத்து - இரண்டாகி. கன்னி - உஷை.

(பி - ம்.) 4. களிமீக் கூர்ந்தாளே,

3698. சுறவுயர் கொடியி ஞனைத் துகிலிகை கொண்டு தீட்டி
இறுமருங் கென்ன வீங்கு மிளமுலைத் தோளி காட்ட
செறிகதிர்க் குழவிக் கோட்டுத் திங்களிற் றிகழு நன்னர்
நறுநுதல் வறிது நாணி நகைமுகங் கோட்டி ஞளால். (கரு)

3699. கனியுற்ற மழலை மாது கண்கவர் செவ்வி வாய்ந்த
அநிருத்த னுருவு தீட்டி யணிபெறக் காட்ட லோடும்
நனியுற்ற நாணி ஞலே நலங்கிள ரெருத்தஞ் சாய்த்தாள்
இனிதிற்றன் குமுத வாய்விண் டிவனிவ னென்று சொற்ருள். (கசு)

3700. கோங்கரும் பென்ன வீங்கு குவிமுலைக் கன்னி கூறும்
தீங்கரும் பன்ன வஞ்சொல் செவிமுதற் சார்த லோடும்
ஆங்கவன் றன்னைத் துஞ்சு மமளியி ஞேடு வவ்விப்
பூங்குழற் ருேகை யன்ஞள் புணர்ப்பினிற் கொடுவந் துற்ருள். (கஎ)

3701. கயலுயர் குரிசி லீன்ற கட்டெழிற் காளை யாங்குத்
துயிலொரீஇ யெழுந்து துஞ்சாச் சுடர்மணி விளக்க மென்னக்
குயில்வதற் கரிய பொன்னங் கொழுந்தென மருங்கு நின்ற
மயிலியல் வதன நோக்கி மதிகொலென் றயிர்த்தல் செய்தான். (கஅ)

---

3698. சுறவுயர் கொடியினுனை - சுறாமீனைக் கொடியாக உயர்த்திய பிரத்தும்னனை. துகிலிகை - எழுதுகோல். மருங்கு இறும் என்ன - இடை முறியும் என்று கூறும்படி. தோளி - சித்திரரேகை. குழவி - இளமை. கோடு - நுனி. நுதல் - உஷை. வறிது - சிறிது. கோட்டினுள் - சாய்த்துக் கொண்டாள்.

3699. கனியுற்ற மழலை - பழத்தின் இனிமை பொருந்திய மழலைச் சொற்களையுடைய. மாது - சித்திரரேகை செவ்வி - அழகு. தீட்டி - எழுதி. நனியுற்ற - மிகப் பொருந்திய. நலம்கிளர் எருத்தம் - அழகு விளங்குகின்ற கழுத்தை. விண்டு - திறந்து. சொற்ருள் - கூறினுள்.

3700. கோங்கரும்பு என்ன - கோங்கின் அரும்பைப் போல. கன்னி - உஷை. செவிமுதல் - காதில். அவன் றன்னை - அநிருத்தனை. துஞ்சும் அமளியிஞேடு - உறங்குகின்ற படுக்கையோடு. வவ்வி - மாயையால் கவர்ந்து. தோகையன்ஞள் - சித்திரரேகை. புணர்ப்பினில் - சூழ்ச்சியால்.

3701. கயல் உயர் குருசில் - கயல்மீனைக் கொடியாக உயர்த்திய பிரத்துமனன். கட்டெழில் காளை - மிக்க அழகையுடைய அநிருத்தன். ஆங்கு - உஷையின் மாளிகையிடத்தே. துயில்ஒரீஇ - உறக்கம் நீங்கி. துஞ்சா - கெடாத. என்ன - என்று கூறும்படி. குயில்வதற்கரிய - பண்ணுதற்கரிய. மருங்கு - பக்கத்தில். மயிலியல் - உஷையின். அயிர்த்தல் - ஐயுறல்,

3702. முறுவல்வா னிலவே யன்றி முகிழ்நகை நிலவு பாய்ந்து
நறைகமழ் குமுதப் போது நலந்திகழ் புரிவு நோக்கிப்
பொறிநுதல் வியர்ப்ப நின்ற பொற்கொழுந் தனைய பேதை
மறுவில்வாண் முகமென் றெண்ணி மைந்தனுண் மகிழ்வு பூத்தான். ()

3703. ஆழிவா யமிழ்து பெற்ற வாயிர முளரிச் செங்கட்
சூழ்கழற் குரிசி லன்ன சுடரிலை நெடுவேற் காளை
காழகில் கழும வுண்டு கடைகுழன் றிருண்டு நெய்த்த
தாழ்குழல் கழுமுற் றெய்தாத் தடமுலை தழுவி னுறல். (உ0)

3704. கூந்தலம் பிடியோ டாடுங் கொல்சினக் களிறு போலக்
காந்தழ லுமிழும் வேலான் கங்குலும் பகலும் விள்ளான்
மாந்தளிர் குழைவு கூர வழிந்தழ கொழுகு மேனி
ஏந்திழை முறுவன் மாந்தி யிருந்தனன் காந்து மன்னோ. (உக)

3705. துவர்ப்பவின் கனிக ளந்தீஞ் சுவைப்படு மழலைப் பேதை
தவப்பசும் பொன்னங் கொம்பிற் றயங்குமெய் வனப்பு முண்கட்
சிவப்புமென் முறுவற் செவ்வாய்த் திருமலர் விளர்ப்பு நெஞ்சத்
துவப்புறு புணர்ச்சி யுண்மை யுணர்த்தின வாயி லோர்க்கே. ()

---

3702. முறுவலாகிய நிலவையன்றி. வால் - வெண்மை. நகையாகிய நிலவு. நறை - வாசனை. குமுதப் போது என்றது வாயை. நலம் - அழகு. நிலவு கூறியதற் கேற்பக் குமுதம் கூறினர். பொறிநுதல் - புள்ளியையுடைய நெற்றி. பேதையின் முகமென்று எண்ணி ; பேதை - பெண். மைந்தன் - அநிருத்தன்.

3703. ஆழி - கடல். கண்ணையும் கழலையு முடைய குருசில்; கண்ண பிரான். காளை - அநிருத்தன். காழ் அகில் - வயிரங் கொண்ட அகிலின் புகையை. கழும - மயங்கும்படி. குழன்று - சுருண்டு நெய்த்த - நெய்ப் புக்கொண்ட. கழுமுற்று - மயங்கி.

3704. கூந்தலம்பிடி - பிடரிமயிரையுடைய பெண்யானை ; "கூந்தன் மாலைக்குமரிப் பிடிக்குழாம்" (சீவக. 858.) களிறு - ஆண் யானை. காந்து - சிந்துகின்ற. வேலான் - அநிருத்தன். கங்குல் - இரவு. விள்ளான் - நீங்கா னய். குழைவுகூர - குழைதல்மிக. மேனியையுடைய ஏந்திழையது - உஷையி னுடைய. காந்து இருந்தனன் ; காந்து - மறைந்து.

3705. இனிய கனிகள் துவர்ப்ப ; துவர்ப்ப - துவர்ப்படையும்படி. தீஞ்சுவைப்படு - இனிய சுவை உண்டாகின்ற. பேதை - உஷையது. தவ - மிக. பொன்னங் கொம்பின் - பொற்கொம்பு போல. வனப்பு - பல உறுப் பும் திரண்ட வழிப் பெற்றதோரழகு. உண்கண் சிவப்பும் - மையுண்ட கண் ணிடத்துச் சிவப்பையும். வாயாகிய மலரின் விளர்ப்பையும். விளர்ப்பு - வெண்மை. நெஞ்சத்து உவப்புறு புணர்ச்சி உண்மை - உள்ளத்தே உவகை யுற்ற புணர்ச்சி உண்டாயினமையை. வாயிலோர்க்கு - வாயில் காப்போர்க்கு.

3706. நாற்றமு நடையு மற்று நன்னுதற் கன்னி மன்னும்
தோற்றமுங் கண்ட வாற்றாற் றுணைபுணர் செவ்வி காட்டும்
ஆற்றல்வே லரச காணென் றகன்கடை காப்போ ரண்மிச்
சாற்றலுங் கன்னி மாடஞ் சார்ந்தனன் வாணன் மன்னே. ()

3707. வாள்விரி பசும்பொன் பூத்த வரிமுலை கிழித்த பைந்தார்த்
தோள்வரை யுறைக்குந் தேறல் சூழ்ந்துண வரிவண் டாட
ஆள்வழக் கொழிக்கு முண்க ணமுதுறழ் சாய லோடு
காளைசூ தாடல் கண்டு கட்கடை சிவந்தான் மாதோ. (உச)

3708. களிச்சுரும் பாற்று கோதை கடைசிவந் தகன்று நீண்டு
விளர்ப்புறு நீல வுண்கண் வேல்பொா விழைந்து வைகும்
அளைத்தலை யரியே றன்ன வாசிளங் குமான் றன்னை
வளைத்தன ரடுபோ ராட வாட்படை வயவர் மன்னே. (உரு)

3709. கரும்புகால் குழைத்த காளை காமரு புதல்வன் வெம்பி
இரும்புசெ யுலக்கை யொன்றுங் கொடுத்தன னிகல லோடும்
பொரும்புலிப் போத்திற் றுஞ்சு பொழிமதக் களிறு போல
அரம்பொரு நெடுவேன் மள்ள ராருயிர் தொலைவுற் றூரால். (உசு)

---

3706. நாற்றம் - வாசனை. கன்னி - உஷையிடத்து. மன்னும் - பொருந்திய. தோற்றம் - புணர்ச்சியாலுண்டாகிய பொலிவு. துணைபுணர் - செவ்வி - காதலனைச் சேர்ந்த அழகை. அரச: வாணுசானுக்கு விளி. காண் - நீகாண்பாயாக. கடை காப்போர் - வாயில் காப்பவர். அண்மி - சென்று. வாணன் கன்னிமாடம் சார்ந்தனன்.

3707. வாள்விரி - ஒளிவிரிந்த. பொன்பூத்த - சுணங்கின் நிறம் தோன்றிய; முலைக்கு விசேடம். தாரையணிந்த தோளாகிய வரையில். உறைக்கும் - துளிக்கின்ற. தேறல் - தேனை. உண - உண்ணுதற்கு. ஆள் வழக்கு ஒழிக்கும் - ஆடவர் போக்கைக் கெடுக்கின்ற; கண்ணுக்கு அடை. சாயல் - உஷை. காளை - அநிருத்தன்.

3708. சுரும்பு - வண்டு. கோதை - உஷையினுடைய. கோதையது கண்ணாகிய வேல் பொருதலால் விழைந்து வைகும் அரசிளங் குமரன்; விழைந்து - விரும்பி. வைகும் - கன்னிமாடத்தே தங்குகின்ற. அளைத் தலை - குகையிடத்து. அரியேறு - ஆண் சிங்கம். குமரன் - அநிருத்தன். போராடுதற்கு வயவர் வளைத்தனர்; வயவர் - வீரர்.

3709. கரும்புகால் குழைத்தகாளை - கரும்பாகிய வில்லின் நுனியை வளைத்த பிரத்துமனனுடைய புதல்வனாகிய அநிருத்தன். வெம்பி - கோபம் கொண்டு. இரும்பாற் செய்த உலக்கை ஒன்றை எடுத்த இகலலோடும்; இகலல் - பொருதல்- புலிப்போத்தின் - ஆண்புலியால். துஞ்சும் - இறக்கின்ற. அரத்தாற் பொருத நெடுவேல். மள்ளர் - வீரர்.

3710. மயிலொடு மாறு கொண்ட மாதாஞ் சாயற் கன்னி
கயன்மலைப் பன்ன நீலக் கண்ணிணை மாரி காலப்
புயலுறழ் மேனி யானைப் பொருசினத் தவுணர் வேந்தன்
அயிலெயிற் றரவின் பாசத் தார்த்தனன் சிறைசெய் தானே. (உஎ)

3711. திங்களோர் நான்கு தண்ணந் தேனெடுத் தொழுகு பைந்தார்
ஐங்கணைக் கிழவன் பெற்ற வரும்பெறற் புதல்வற் காணேம்
எங்குளன் கொல்லோ வென்னு யாதவர் நாடுங் காலைத்
துங்கயாழ் முனிவன் வந்து சொல்லினன் விளைந்த வாறே. (உஅ)

3712. தாட்படு துளவப் பைந்தார்த் தனிமுதல் குமார் வெள்ளம்
கோட்புலிக் குழாத்திற் பொங்கிக் குரைகழ னால வீக்கி
வாட்படை விதிர்த்துத் திண்டோள் வலங்கெழு வாணன் றன்மேல்
ஞாட்பினுக் கெழுந்த தூழி நாளெழும் பரவை நாண. (உகூ)

3713. மல்லலஞ் சிறப்பு வாய்ந்த வால்வளை யலற மன்னும்
வெல்கொடி மகர மோங்க வேனிலஞ் செல்வன் றானை
கல்லெனக் கலிக்கு நீலக் கடற்புறத் தெழுந்த தோற்றம்
ஒல்லென வொலிக்கும் வேலை யுடைந்தது போலு மாதோ. (௩௦)

---

3710. மாறுகொண்ட - எதிராகக்கொண்ட. மாதர் - காதலையுடைய. சாயலையுடைய கன்னி - உஷை. மலைப்பு - பொருதல். மாரி கால - நீரைச் சொரிய. புயல் - மேகத்தை. மேனியானை - அநிருத்தனை. அவுணர்வேந்தன் - வாணாசுரன். அயில் - கூர்மை. அரவின் பாசத்து - நாகபாசத்தால். ஆர்த்தனன் - கட்டினன்.

3711. திங்களோர் நான்கு - நான்கு மாதங்கள். ஐங்கணைக் கிழவன் பெற்ற - பிரத்துமனன் ஈன்ற. புதல்வன் - அநிருத்தனை. நாடுங்காலை - தேடும்போது. துங்கம் - தூய்மை. முனிவன் - நாரதன். விளைந்தவாறு சொல்லினன்.

3712. தனிமுதல் - கண்ணபிரானுடைய. கோட்புலிக் குழாத்தின் - பகைவினுயிரைக் கொள்ளுதலையுடைய புலிக்கூட்டத்தைப் போல. நால - ஒலிக்க. வீக்கி - கட்டி. விதிர்த்து - அசைத்து. வலம் - வெற்றி. ஞாட்பினுக்கு - போருக்கு. ஊழிநாள் - யுகாந்தகாலத்து. பரவைநாண - கடல் நாணும்படி.

(பி - ம்.) 4. நாலெனும் பரவை.

3713. மல்லல் - வளப்பம். வால்வளை அலற - வெண்மையான சங்கு முழங்க. வெல் கொடியாகிய மகரம் ஓங்க; மகரம் - மீன்; பிரத்துமனனுடைய கொடி. வேனிலஞ்செல்வன் - பிரத்துமனனுடைய. கல்லென: ஒலிக்குறிப்பு. கலிக்கும் - முழங்குகின்ற. ஒல்லென: ஒலிக்குறிப்பு. வேலை - கடல்.

கலிவிருத்தம்.

3714. நாணுறத் தாமெலா நலந்தகப் பிறங்கிய
வாணன் மற் குலவுதோண் மாயவன் றுணிப்பன
காணிய வரையெலாங் கண்ணுறல் போன்றன
கோணைவெங் களிற்றினங் குழுமியாங் கெழுபவே. (ருக)

3715. பாழிசான் முழுமடற் பனைவல னுயரிய
தாழிருந் தடக்கையான் றண்மதி போன்றுமாங்
காழியந் தேர்கடா யழல்சினந் திருகிய
ஊழிவெம் பரிதிபோ லுடன்றெழுந் தானரோ. (ருஉ)

3716. வெண்டலைப் புணரிபோல் விரைசெலற் கலினமா
மண்டுவெம் படைக்கடன் மருங்குற வெழுந்தனன்
எண்டிசைத் தலைவரோ டிமையவர் தொழுதெழத்
தெண்டிரைத் துயிலெழுந் திகிரியஞ் செல்வனே. (ருரு)

3717. மின்னுகோ் வாட்படை மிளிரவண் டிமிர்துழாய்
இன்னெழின் முகிற்கொழுந் தெழுமுனங் கெழுதரு
கொன்னவில் படைக்கடற் கொழுந்துபோ யவுணர்கோன்
பொன்னெயிற் சோணித புரத்தினி லிறுத்ததே. (ருச)

---

3714. தாமெலாம் நாணுற; நாணுற - நாணத்தைப் பொருந்த. நலம்தக - அழகுசிறக்க. வாணனது மல் குலவுகின்ற தோளை. மாயவன் துணிப்பவற்றைக் காணிய. காணிய - காணும் பொருட்டு. வரை - மலை. கோணை - மாறுபட்ட. குழுமி - திரண்டு. யானைத்திரளுக்கு வரைகள் உவமை.

3715 பாழிசால் - வன்மைமிக்க. உயர்பனையை வலப்பக்கத்தே உயர்த்திய. தடக்கையான் - பலராமன். ஆழி - சக்கரம். கடாய் - செலுத்தி. சினம் திருகிய - கோபத்தால் மாறுபட்ட. ஊழிக்காலத்துப் பருதியைப் போல். உடன்று - கோபித்து. மதிபோன்றிருந்தும் பருதிபோல் எழுந்தான் என்றது நயம்.

3716. வெண்தலைப்புணரி - வெண்மையான தலையையுடைய அலை. இது குதிரைகளுக்கு உவமை. விரைசெலல்கலினமா; மா - குதிரை. மண்டு - மிக்க. இமையவர் - தேவர். திகிரியஞ் செல்வன் - கண்ணபிரான்; எழுவாய்.

3717. மிளிர - விளங்க. முகிற் கொழுந்து - கண்ணபிரான். எழுமுன் - போருக்கு எழுவதன் முன். கொல் நவில் - கொலைத் தொழிலைப் பழகுகின்ற. படையாகிய கடலின் கொழுந்து; கொழுந்து - முதல்; (கம்ப. எழுச்சிப் 23.) அவுணர்கோன் - வாணாசுரனுடைய. இறுத்தது - தங்கியது.

3718. புரிவளை முழக்கினர் பொலமுக டுடைபடச்
செருவிளை காதலிற் செலவயர் கொடிப்படை
உருமிளைப் பாறவா னேங்குபொன் னிஞ்சிசூழ்
அருமிளை யெறிந்ததா லாழியிற் குழுமியே. (௩௫)

கலிச்சந்த விருத்தம்.

3719. தோராயிரம் பரியாயிரஞ் செம்பொற்புகர் முகவெங்
காராயிர மொருபால்வரக் கனல்கட்கடை கதுவாப்
பாராயிரந் தலைதாங்கிய பதுவாயா வென்ன
ஓராயிரம் புயத்தானவ னுடன்றானமர்க் கெழுந்தான். (௩௬)

3720. முரசங்கட லெனவார்த்திட முகில்போன்முழ விமிழப்
புரிசங்கதிர் தரக்கட்கடை புகைகூபகன் னனும்வான்
உருமேறெனக் கும்பாண்டனு மூழிக்கடை யுடைக்கும்
அரவக்கடல் பொருதானையொ டமர்வேட்கையி னெழுந்தார். (௩௭)

3721. ஆர்க்கும்புயல் கிழித்தோங்குநெட் டலகைக்குல மடையக்
கூர்க்குந்தழ லுமிழ்குண்டுகட் குறுத்தாட்பெரும் பூதம்
பார்க்குந்திசை தொறுந்தோன்றிடப் பாய்வெள்விடை யிவராத்
தார்க்கொன்றைதண் ணறவூற்றுசெஞ் சடைவானவ னெழுந்தான். ()

3718. புரிவளை - முறுக்குடைய சங்கு. உடைபட முழக்கினர். செருவிளை காதலின் - போரை விளைவிக்கும் ஆசையால். செலவயர் - செல்லுதலைச் செய்கின்ற. உருமு - இடி. இஞ்சி - மதில். அருமிளை - செல்லுதற்கரிய காவற் காட்டை. எறிந்தது - அழித்தது. ஆழியிற் குழுமி - கடலைப்போல் திரண்டு. கொடிப்படை குழுமி எறிந்தது.

3719. பரி - குதிரை. புகர் - புள்ளி. கார் - மேகம்; ஈண்டு யானை. கதுவா = கதுவி - பற்றி. பாரை ஆயிரந் தலையில் தாங்கிய அரவென்ன; அரவு - ஆதிசேடன். ஆயிரம் புயத்தானவன் - வாணாசுரன். உடன்றான் - கோபித்தவனாய்.

3720. முழவு முகில்போல் இமிழ; முழவு - மத்தளம். இமிழ - ஒலிக்க. புரி சங்கு - முறுக்குடைய சங்கம். அதிர்தர - முழங்க. கூபகன்னன், கும்பாண்டன் என்ற இருவரும் வாணாசுரனுடைய மந்திரிகள். ஊழிக்கடை - யுகமுடிவில். அரவம் - ஒலி. அமர்வேட்கையின் - போர்விருப்பத்தோடு.

3721. ஆர்க்கும் - முழங்குகின்ற. புயல் - மேகத்தை. அலகைக் குலம் - பேய்க் கூட்டம். கூர்க்கும் - மிகுகின்ற. குண்டு கண் - ஆழ்ந்த கண்ணையுடைய. குறுத்தாள் - குறிய பாதத்தை யுடைய; வலித்தல் விகாரம். விடை இவரா - இடபத்தில் ஏறி. நறவு - தேன். வானவன் - சிவபெருமான்.

3722. இடிக்குஞ்சின வுருமேறென விருங்குன்றகம் பிளக்கும்
வடிக்கும்பனி மலர்த்தார்நெடு வடிவேலவ னுயர்வான்
வெடிக்கும்படி வளையார்த்திட விறன்மஞ்ஞையின் முந்நீர்
பொடிக்குங்கதி ரிளஞாயிறு போலக்கனன் றெழுந்தான். (ங௯)

3723. காராடுமின் புரைவாட்டிறற் கண்ணன்படைக் கடலும்
தாராடுதிண் டோட்டானவன் றனைப்பெருங் கடலும்
போராடின நிணமாந்திய புள்ளின்குல முகுபுண்
நீராடின கவந்தக்குல நின்றாடின நெடிதே. (ச0)

3724. குருகின்பெயர் புணர்மால்வரை கொன்றோங்கிய கொற்றத்
திருகுன்றெனப் பணைத்தேர்ந்திய வெறுழ்த்தோட்சுட ரிலைவேல்
முருகுங்கமழ் முருகுண்டளி மூரல்பூங்கணை யவனும்
திருகுஞ்சின மொடுவெஞ்சரந் தெரிந்தாரமர் புரிந்தார். (சக)

3725. சூழிக்குங்கடுங் குருதிப்புனல் சொரிகின்றதொ ரலத்தால்
உழக்குந்திற லமர்மேம்படு முருமொப்பவ னெடுகால்
குழைக்குஞ்சிலைக் கும்பாண்டனுங் கொலைக்கூபகன் னனுங்கார்
கிழிக்குங்கொடித் தடந்தேரினிற் கிடைத்தாரம ரடர்த்தார். ()

---

3722. குன்றகம் - கிரவுஞ்சமலையின் நடுவிடத்தை. வடிக்கும் - பயிற்றிய. வேலவன் - முருகன். உயர்ந்தவான் வெடிக்கும்படி வளை ஆர்த்திட; வான் - ஆகாயம். வளை - சங்கு. மஞ்ஞையில் - மயிலின் மீது. முந்நீர் பொடிக்கும் - கடலில் தோன்றுகின்ற. கனன்று - கோபித்து. முருகனுக்கு இளஞாயிறு உவமை; "பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" (முருகு. 2.)

3723. கார் ஆடும் மின்புரைவாள் - மேகத்தின் நடுவே அசைகின்ற மின்னலை ஒத்த வாள். தார் - மாலை. தானவன் - வாணாசுரனுடைய. போராடின - போரைச் செய்தன. புள்ளின் குலம் நிணத்தை மாந்தின. கவந்தக் குலம் உகு புண்ணீரில் நெடிது நின்று ஆடின; கவந்தம் - தலையற்றஉடல்.

3724. குருகின் பெயர் புணர்மால்வரை கொன்று - கிரவுஞ்ச மென்னும் பறவையின் பெயரைக் கொண்ட பெரிய மலையை அழித்து; "குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து" (முருகு. 266); "குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து" (பரி. 5.) கொற்றத்து - வெற்றியை யுடைய. எறுழ் - வலி. வேலையுடைய முருகும். முருகு - முருகன்; (மதுரைக். 611.) முருகு உண்டு - தேனை உண்டு. அளி - வண்டு. பூங்கணையவன் - பிரத்துமனன். திருகும் - மாறுபட்ட. சரம் தெரிந்தார் - அம்பை ஆராய்ந்தார்.

3725. குருதி - இரத்தம். அலம் - கலப்பை. உழக்கும் - பகைவர் சேனையைக் கலக்குகின்ற. அலத்தால் உழக்கும் உருமொப்பவன்; பலராமன். சிலையின் கால் குழைக்கும் கும்பாண்டனும்; கால் - நுனி. கார்கிழிக்கும் - மேகத்தைப் பிளக்கின்ற. கிடைத்தார் - எதிர்த்தனர்.

3726. மாலைப்பனி மதிவெண்குடை வாணசுரன் மகனும்
நீலப்புயல் கிழியாவெழு நிழன்மின்னெனத் திகழும்
காலக்கதிர் வேற்சாம்பனும் கடைநாட்பொழில் கனற்றும்
ஆலப்பகு வாய்வெஞ்சின வரவிற்கனன் றடர்த்தார். (சங)

3727. காற்றுமெனக் கனலாமெனக் கனல்சிந்துகட் பேழ்வாய்க்
கூற்றுமென வருவாணனைக் குருதிப்புனல் கமழும்
வேற்றானையும் வாட்டானையும் விற்றானையுந் தூத்தா
எற்றானிகற் பெருஞ்சாத்தகி யிளவாளரி யனையான். (சச)

3728. ஓடும்புனன் மந்தாகினி யுடைத்தாலென வுடலம்
கோடும்பிறைக் கதிர்தங்கிய குளிர்வேணியி லரவம்
சூடுங்கறை மிடற்றண்ணலுந் தொளைவாளெயிற் றரவத்
தாடுங்கரு முகில்வண்ணனு மமராடின ரம்மா. (சரு)

3729. துளவப்பனி மலர்த்தொடை சூடுந்தனி முதற்கும்
தளைவிட்டலர் தார்க்கொன்றையந் தார்சூடுகண் ணுதற்கும்
விளைவுற்றது பெரும்போரென விண்மொய்த்தனர் விரைநா
றிளமட்டுமிழ் மந்தாரமெல் லிணர்சூடிய விமையோர். (சசு)

வேறு.

3730. நீற்றணி யணிந்தவ னெடுங்கிரி தூக்கும்
காற்றின்வடி வெங்கணை கடுப்பொடு தூர்ந்தான்

---

3726. மாலையை யுடைய குடை. நீலப் புயலைக் கிழியா ; புயல் - மேகம். கிழியா - கிழித்து. வாணசுரன் மகனும் சாம்பனும். பொழில் - பூமியை. ஆலம் - விடம். அரவின் - ஆதிசேடனைப் போல்.

3727. பேழ்வாய் - பெரிய வாயையுடைய. கூற்று - யமன். தூத்தா - தூத்தி. எற்றான் - எதிர்த்தான். வாளரியனையானாகிய சாத்தகி எற்றான். வாளரி - கொலைத் தொழிலையுடைய சிங்கம் ; சாத்தகி - சத்யகன் என்னும் யாதவனுடைய பிள்ளை.

3728. மந்தாகினி - கங்கை. உடலம் கோடும்பிறை - உடல் வளைந்த இளம்பிறைச் சந்திரன். வேணி - சடை. அரவம் - பாம்பை. கறை - விடம். அண்ணல் - சிவபெருமான். கருமுகில் வண்ணனும் - கண்ணபிரானும்.

3729. பனி - குளிர்ச்சி. தனிமுதற்கும் - கண்ணபிரானுக்கும். தளை - பிணிப்பு. தார்க்கொன்றை யந்தார் - சரக் கொன்றை மாலையை. கண்ணுதற்கும் - சிவபெருமானுக்கும். விண் - ஆகாயத்தில். விரை நாறு - வாசனை வீசுகின்ற. மட்டு - தேன். இணர் - பூங்கொத்து. இமையோர் மொய்த்தனர்.

3730. நீற்றணி - திருநீறாகிய அலங்காரத்தை. அணிந்தவன் - சிவ பெருமான். தூக்கும் - ஓட்டுகின்ற. காற்றின் வெங்கணை - வாயுவாஸ் திரம். கடுப்பொடு - விரைவுடன். தூர்ந்தான் - விட்டான். எற்றையரி

எற்றையரி மானென விகற்களிறு கொன்றோன்
மாற்றினனவ் வாளியர வக்கணை தொடுத்தே. (சஎ)

3731. தண்ணெனில வுக்கதிர் தவழ்ந்தசடி லத்தோன்
விண்ணகடு தியவழல் வெங்கணை தொடுத்தான்
அண்ணலரா விற்றுயி லமர்ந்த கருமேக
வண்ணன்வரு ணப்படையின் மற்றது துணித்தான். (சஅ)

3732. பழுத்தொழுகு வெங்கொலைய பாசுபத மென்ன
வழுத்துபடை செந்தழலின் வண்ணனனி விட்டான்
சுழித்தநறை பாய்துளவு சூடுமுகில் வண்ணன்
அழற்றிகிரி வெம்படையி னுங்கது துணித்தான். (சகூ)

3733. செங்குருதி தோய்கணை தெரிந்துதிறல் வல்வில்
அங்குவளை சாத்தகி யடுந்திறலை யஞ்சி
பொங்குதிணி யுந்துறு பொருக்கென விழிந்தாங்
கைங்கா னிரிந்தன னமர்க்களம் விரைந்தே. (ருo)

3734. ஆவித்தல் செய்யுமட லம்பினெயி லங்காள்
வேவச் சிரித்தமலை வில்லியை மயக்காத்

---

மான் - ஆண் சிங்கம். களிறு கொன்றோன் - குவலயா பீடத்தைக் கொன்ற கண்ணபிரான். அரவக்கணையைத் தொடுத்து அவ்வாளியை மாற்றினன்; அரவக்கணை - நாகாஸ்திரம். வாளி - வாயுவாஸ்திரத்தை.

(பி - ம்.) 4. வாளியை வடிக்கணை.

3731. சடிலத்தோன் - சிவபெருமான். விண்ணகடு - ஆகாயத்தின் நடுவிடம். தீய - கருகும்படி. அழல் வெங்கணை - ஆக்னேயாஸ்திரம். அண்ணல் - பெருமை பொருந்திய. அராவிற் றுயிலமர்ந்த கருமேகவண்ணன் - கண்ணபிரான் வருணப்படை - வாருணேயாஸ்திரம். துணித்தான் - அறுத்தான்.

3732. பழுத்து - முற்றி. செந்தழலின் வண்ணன் - சிவபெருமான். பாசுபதப் படையை விட்டான். சுழித்து - சுழிவுடையதாகி. நறை - தேன். முகில் வண்ணன் - கண்ணபிரான். திகிரியாகிய படையினால். அது - பாசுபதப் படையை.

(பி - ம்.) 4. அழற்றுதிற னாணன தம்படையின் மாய்த்தான்.

3733. தெரிந்து - ஆராய்ந்து. வல்வில்லை வளைக்கின்ற சாத்தகி. அஞ்சி - பயந்து. உந்துறு பொருக்கென இழிந்து - பெருச்சாளியினின்றும் விரைவாக இறங்கி. ஐங்கான் - விநாயகன். அமர்க்களத்தே விரைந்து இரிந்தனன்.

3734. ஆவித்தல் - கொட்டாவி விடுதல். அம்பின் - அம்பினால்; ஜ்ரும்பணாஸ்திரத்தால். எயில் - திரிபுரத்தை. வேவ - வெந்து போம்படி. மலை வில்லியை - சிவபெருமானை. மயக்கா - மயக்கி. தாவற்ற - கெடுத

தாவற்ற வென்றிகெழு தானவரை மாய்த்தான்
திவிட் டெரித்திடு சினத்திகிரி மாயன். (௫௧)

3735. பாடற் சுரும்புழு பசுந்துளவு சூடும்
கோடுற்ற செங்கைமுகில் விற்கடை குழைப்ப
ஓடற் கமைந்தவம ரூன்றுசுழல் கட்பேய்
ஆடற் கிவர்ந்தநிண மார்ந்துலவு பேய்கள். (௫௨)

3736. வானப் பரப்பினில் வயங்குமிரு கோட்டுக்
கூனற் பசும்பிறை யெனச்சிலை குழைக்கும்
வேனிற்கு மன்னனை வெரீஇவரை பறந்த
தூனுற்ற வேன்முருக் னொக்கமட மஞ்ஞை. (௫௩)

3737. கும்பாண்டன் வென்றிகெழு கூபகன னென்போர்
வெம்பாவ மாத்தொழில் விளைத்து வளைமேனி
வம்பார் மலர்த்தெரியல் வள்ளல்படை யாலே
தம்பாட விந்துபொரு தானையொடு சாய்ந்தார். (௫௪)

3738. வண்டாடு தாரவுணர் மாளநெடு வல்வில்
கொண்டாழி மாயனொரு கொண்டலென நிற்றல்
கண்டா னவற்கெதிர் கடாயினன் மணித்தேர்
தண்டாம வாணனுயர் சாத்தகியை விட்டே. (௫௫)

---

வில்லாத. தானவரை - அசுரரை. திகிரி மாயன் - கண்ணபிரான்; எழு வாய்.

3735. சுரும்பு - வண்டு. கோடு - சங்கம். முகில் - கண்ணபிரான். குழைப்ப - வளைக்க. அமைந்த - அமைந்தன. சுழல்கின்ற கண்ணையுடைய பேய். ஆடல் - கூத்தாடல். ஆர்ந்து - உண்டு. பேய்கள் ஓடற்கமைந்த.

3736. வயங்கும் - விளங்குகின்ற கோட்டு - நுனியையுடைய. கூனல் - வளைவு பொருந்திய. குழைக்கும் - வளைக்கின்ற. வில்லுக்குப் பிறை உவமை. வேனிற்கு மன்னனை - பிரத்துமனனுக்கு. வெரீஇ - அஞ்சி. ஒக்க - சேர. மஞ்ஞை - மயில். மஞ்ஞை வரை பறந்த.

3737. கும்பாண்டன், கூபகன்னன்; வாணாசுரனுடைய மந்திரியர். விளைத்து - உண்டாக்கி. வளைமேனி - சங்கம் போன்ற வெண்மையான மேனியையுடைய. வம்பு - வாசனை. வள்ளல் - பலராமனுடைய. தம் பாடு அவிந்து - தமது பெருமை கெட்டு. தானை - சேனை.

3738. அவுணர் - அசுரர். வில்லைக் கொண்டு ஒரு கொண்டலென மாயன் நிற்றலைக் கண்டான். கொண்டல் - மேகம். மாயன் - கண்ண பிரான். கடாயினன் - செலுத்தினன். தண் தாம வாணன் - குளிர்ந்த மாலையை யணிந்த வாணாசுரன். வாணன் சாத்தகியைவிட்டு அவற்கு எதிர் தேரைக் கடாயினன்; அவற்கு - கண்ணபிரானுக்கு.

3739. ஐந்நூறு செங்கா மடற்சிலே குழைப்ப
ஐந்நூறு செங்கா மழற்கணே தொடுப்ப
பைந்நாக பாரமுழு தும்பதை பதைப்பப்
பைந்நாக ணைத்துயில் பரம்பொருளொ டேற்றான். (ருசு)

3740. புள்வாய் கிழித்தபுயல் புட்கொடியின் மேலும்
கள்வாய் மலர்க்கொடி கலந்தவக லத்தும்,
தெள்வார் திரைப்புவி திளைப்புறு புயத்தும்
வெள்வாள் வலத்தவுணன் வெங்கணை பொழிந்தான். (ருஎ)

3741. தடக்குஞ் சரத்திடர் தவிர்த்தமணி வண்ணன்
கடக்குஞ் சரத்தொடு கடுத்ததிறல் வாணன்
விடுக்குஞ் சரங்களும் விழுச்சிலை குழைத்துத்
தொடுக்குஞ் சரங்களு மறக்கணை தொடுத்தான். (ருஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3742. தழைத்தபைந் துளவ மாலைத் தனிமுத னெடிய சார்ங்கம்
குழைத்தனன் வாணன் வல்விற் குறைத்தனன் வாவு மான்தேர்
அழித்தனன் பாகன் சென்னி யறுத்தனன் பகுவாய்ச் சங்கம்
முழக்கின னெடுமூ தண்ட முகடுகீண் டொழிய மன்னே. (ருக)

3743 வாட்டிறல் வாண னற்றாய் வாளம ரழுவ கண்ணித்
தோட்டபூங் கூந்த ரூழத் தூத்துகி லின்றி நிற்பக்

3739. சிலை குழைப்ப - வில்லை வளைப்ப. கணை - அம்பை. நாகபாரம் முழுதும் - பூமி முற்றும். நாக அணையில் துயில்கின்ற பரம்பொருளொடு - கண்ணபிரானோடு.

3740. புள் - பகாசுரனுடைய. புயல் - கண்ணபிரானுடைய. புட் கொடி - கருடக் கொடி. கள் - தேன். மலர்க்கொடி - திருமகள். அகலம் - மார்பம். புவி - பூமிதேவி. திளைப்புறு - விளையாடுகின்ற. புயம் - தோள். வாள் வலம் - வாள் வெற்றி. அவுணன் - வாணாசுரன்.

3741. குஞ்சரத்து - கஜேந்திரனுடைய. இடர் - துன்பம். மணி வண்ணன் - கண்ணபிரான். கடம் - மதம். குஞ்சரத்தொடு - யானையை. கடுத்த - ஒத்த. வாணன் விடுக்கின்ற. சரம் - அம்பு. அற - கெடும்படி. வாணன் விடுக்கும் சரங்களும் தொடுக்குஞ் சரங்களும் அற, மணிவண்ணன் கணை தொடுத்தான்.

3742. துளவ மாலையை யணிந்த தனிமுதல் - கண்ணபிரான். சார்ங்கம் : திருமாலின் வில்லுக்குப் பெயர். வாணனுடைய வில்லைக் குறைத் தனன் ; குறைத்தல் - துண்டித்தல். வாவு - தாவுகின்ற. கீண்டு ஒழிய - கிழிந்து நீங்க.

3743. வாணனுடைய நற்றாய் ; கோடரை என்னும் பெயரினள். அமரழுவம் - யுத்தப் பரப்பு. தோட்ட - இதழையுடைய. துகிலின்றி - ஆடை

கோட்டலன் வரிவில் வேழக் கோடடி பிடுங்கு கொண்டல்
தீட்டருஞ் செவ்வி வாய்ந்த திருமுகங் கோட்டி நின்றான். (சுo)

3744. தொடுசினப் படையு மின்றித் துனைவயப் புரவி பண்ணி
விடுகொடித் தேரு மின்றி விழுப்பிணக் குப்பை தோறும்
இடறியுங் குருதிச் செஞ்சே றிழுக்கியுங் களத்தி னீங்கி
வடியிடு நெடுவேல் வாணன் மாநகர் வந்து சார்ந்தான். (சுக)

3745. மூன்றுகான் மூன்று சென்னி பெற்றது முழங்கு செந்தீக்
கான்றது புவன மூன்றுங் கனற்றுவ தாய வெப்பு
வான்றவழ் குடுமி வெள்ளி வயங்குமால் வரைய னுங்குத்
தேன்றவழ் துளவப் பைந்தார்ச் செல்வன்மேற் சினந்து விட்டான். ()

3746. கடற்புனல் சுவற வாங்கிக் கனைகடல் கவைஇய ஞாலம்
சுடக்கனன் றெழுந்த தீயிற் றோன்றுமவ் வெதுப்பின் முன்னு
நடுக்கிய குளிர்வெப் பொன்று நனிமுறு வலித்து நம்பி
விடுத்தன னுலக மெல்லாம் விதிர்விதிர்ப் பெய்த மன்னோ. (சுங)

3747. காரழ னஞ்ச முண்ட கண்ணுதல் கடிது விட்ட
கூரழல் வெதுப்பு மற்றைக் குளிர்ப்புறு வெதுப்புக் காற்று
தேரெழிற் கமல மாதி னிளமுலை பொருத திண்டோள
ஆரெழிற் றிகிரி மாய னடிதொழூஉப் பரவிற் றன்றே. (சுச)

---

யில்லாமல். கொண்டல் வில்லைக் கோட்டலன்; வேழக் கோடடி பிடுங்கு கொண்டல் - குவலயாபீடமெனனும் யானையின் தந்தத்தை முதலோடு பறித்த மேகம் போலும் கண்ணபிரான். கோட்டலன் - வளைக்கவில்லை. தீட்டரும் - எழுதுதற்கரிய. கோட்டி - நாணத்தால் சாய்த்து.

3744. தொடு - தொடுக்கின்ற. துனை - விரைவு. புரவியைப் பண்ணி விட்ட கொடித் தேர்; பண்ணி - ஆயத்தம் செய்து. சேற்றில் இழுக்கியும்; இழுக்குதல் - வழுக்குதல். களம் - போர்க்களம். நகர் - சோணிதபுரம்.

3745. சென்னி - தலை. கான்றது - கக்கியது. கனற்றுவதாய - கோபிக்கின்றதாகிய. வெப்பு - ஜ்வரதேவதை. குடுமி - உச்சியையுடைய. வெள்ளி வரையன் - சிவபெருமான். செல்வன்மேல் - கண்ணபிரான் மீது. வெப்பை விட்டான்.

3746. சுவற - வற்றிட. கவைஇய - சூழ்ந்த. ஞாலம் - பூமியை. முன்னு - முன்பு. குளிர்ச்சியையுடைய வெப்பொன்றை. முறுவலித்து - புன்முறுவல் செய்து. நம்பி - கண்ணபிரான். விதிர்ப்பெய்த - நடுங்கிட. நம்பி குளிர்வெப்பை விடுத்தனன்.

3747. நஞ்சம் - விடத்தை. கண்ணுதல் - சிவபெருமான். வெதுப்பு - ஜ்வரதேவதை; மாஹேச்வர ஜ்வரம் என்பர். குளிர்ப்புறு வெதுப்புக்கு - கண்ணபிரான் விட்ட வெதுப்பிற்கு. ஆற்றாது - பொறுக்காமல். திகிரி மாயன் - கண்ணபிரானுடைய. தொழூஉ - தொழுது. பரவிற்று - புகழ்ந்தது.

3748. விடம்பொழி படைக ளெல்லாம் வேண்டுவ முகந்து கொண்டு
தடஞ்சிறைப் பறவை யன்ன தயங்குதார்ப் புரவி பூண்ட
கொடிஞ்சியந் தடந்தே ரேறிக் குரைகடற் றூனே சூழ
மடங்கலே றன்ன வாணன் மண்டமர்க் களத்தி னுற்றுன். (சுரு)

3749. தோமரங் கணிச்சி நேமி சூலம்வேல் பிண்டி பாலந்
திமுகத் துமிழு மொள்வாள் சிலசில தடக்கை சிந்தக்
மாமரஞ் சிலகை யோச்ச மால்வரை சிலகை வீசத்
தாமரைக் கண்ணன் றன்மேற் சமர்த்தொழில் விளைத்தல் செய்தான்.

3750. ஊன்சுவைத் துதிர மாந்தி வொளிறுவேல் வாணன் றிண்டோள்
நான்கொழித் தொழிந்த வெல்லா நளியழற் றிகிரி தாங்கிக்
கான்குறைத் திடுதல் போலக் களப்படத் துணித்தல் செய்தான்
தேன்சுழித் தொழுகு தண்ணஞ் செழுந்துழா யலங்கற் றேவே. (சுஎ)

3751. தணிப்பருஞ் சிற்றத் துப்பிற் றூனவர் தலைவ னுந்து
வணக்கிய சிலைக ளோடும் வாங்கிய படைக ளோடும்
பணைத்தெழு பஃறோட் கானம் படுகளப் பாப்பின் வீழ்த்துத்
துணிக்குமா யவனை யேத்திச் சொல்லுமம் மழுவ லானே. (சுஅ)

3752. நின்னுடை மாயந் தன்னு னெடிதற வழிந்து பல்லோர்
என்னையே னேரை யேத்தி யிழிபெருஞ் செல்வந் துய்ப்பர்

---

3748. வேண்டுவனவற்றை முகந்து கொண்டு; முகந்து - பெற்று. தடஞ்சிறை - அகன்ற சிறகையுடைய. குதிரைக்குப் பறவை உவமை. தார் - கிண்கிணி யணிந்த. கொடிஞ்சி: தேருறுப்புக்களுள் ஒன்று. மடங்கலேறு - ஆண் சிங்கம். மண்டு - நெருங்கிய.

3749. தோமரம் முதலியன ஆயுத வகைகள். கணிச்சி - மழுவாயுதம். நேமி - சக்கரம். பிண்டி பாலம்: ஓராயுதம். சில கை மாமரத்தை ஓச்ச. தாமரைக் கண்ணன் - கண்ணபிரான். சமர் - போர்.

3750. ஊன் - மாமிசம். உதிரம் - இரத்தம். தோள் - கைகளில், நான்கொழித்து - நான்கு கைகள் நீங்க. நளி - பெருமை. திகிரி - சக்கரம். கான் - காட்டை. குறைத்திடுதல் - வெட்டுதல். களப்பட - களத்தில் விழும்படி. துழாய் அலங்கற்றேவு - கண்ணபிரான்; எழுவாய்.

3751. தணிப்பரும் - தாழ்த்தற்கரிய. துப்பு - வன்மை. தானவர் தலைவன் - அசுரர் தலைவனுன வாணுசுரனது. வணக்கிய - வளைத்த. பணைத்து - பெருத்து. பஃறோட் கானம் - பல தோள்களாகிய காட்டை; பல என்றது ஆயிரத்தை. வீழ்த்து - வீழ; எச்சத்திரிபு. மாயவனை - கண்ணபிரானை. மழுவலான் ஏத்திச் சொல்லும்.

3752. நெடிது - மிகவும். பல்லோர் - பலர். என்னையும் ஏனோரையும். இழிந்த பெரிய செல்வத்தை. உலப்பில் - அழிவில்லாத. ஈறில் - முடி

உன்னையே புகல்புக் கோர்மற் றுலப்பில்பே ரின்ப வீடு
தன்னைநன் கடைவ ரீறி றனியற னிறுத்தச் சார்ந்தோய். (சுக)

3753. கைப்படு மமுதா வீசிக் கடுநுகர் கசடர் போல
மைப்படு களத்தேன் மற்றை வானவர்ப் பேணி நின்னை
மெய்ப்படு பெருந்தே வென்னு விழைகிலார் விழலர் யோகர்
எய்ப்பற நினைத்த நெஞ்சத் தியையநோக் குறுவ ரெந்தாய். (எ௦)

3754. பராத்தலை வானீள் பங்கி பனிமுகி லகடு வீரை
தராத்தலை கழல்சூழ் திக்குத் தாழ்குழைச் செவிவிண் கொப்பூழ்
விராட்டுரு வாய வேத விழுப்பொரு ளேபூம் பொய்கைக்
காரத்துயிர் செகுத்த வாதி காரண னீயே யன்றே. (எக)

3755. வரமது தொண்ட னேன்முன் வழங்கினேன் கருணை வள்ளால்
பொருசினக் கனகன் காதற் புதல்வனுக் கருள்செய் தென்ன
அருள்செயல் வேண்டு மாலிவ் வடுதிற லாற்கு மென்ன
விரியிணர்க் கடுக்கை மாலை விண்ணவ னிறைஞ்சிச் சொற்றான். (எஉ)

3756. வல்விறற் கனகன் மைந்தன் மரபின்வந் துதித்தோர் தம்மை
கொல்கில மென்றி யாமுங் கொடுத்தனம் வரமா மேரு
வில்லிநீ விளம்பு மாறும் விழுமிதென் றுலகங் காக்கும்
அல்லியங் கமலக் கண்ண னருள்சுரந் துரைக்க லுற்றான். (எங)

---

வில்லாத. அறன் - தருமத்தை. சார்ந்தோய்: கண்ணபிரானுக்கு விளி.

3753. கைப்படும் - கையிலகப்பட்ட. கடு - விஷத்தை. கசடர் - மூடர். மைப்படு களத்தேன் - கருமை பொருந்திய கழுத்துடைய என்னையும். வானவரையும் பேணி. மெய்ப்படு பெருந்தேவு என்னு - உண்மை பொருந்திய பெரிய தேவனென்று. விழலர் - வீணர். யோகர் - யோகிகள். எய்ப்பற - இளைப்பு இல்லாதபடி. நினைத்து - உன்னை எண்ணி. எந்தாய்: விளி. விழலர் விழைகிலார்; யோகர் இயைய நோக்குவர்.

3754. பராத்தலை - திருமாலின் மேலான தலை. வான் - ஆகாயம். பங்கி - குடுமி. முகில் - மேகம். அகடு வீரை - வயிறு கடல். தராத்தலை - பூமியிடம். கழல் - பாதம். திக்கு: செவி. விண் கொப்பூழ் - சுவர்க்கம் கொப்பூழ். விழுப்பொருளே: கண்ணபிரானுக்கு விளி. பொய்கையில் காரத்து உயிரைச் செகுத்த; காரம் - முதலை. செகுத்த - கொன்ற.

3755. தொண்டனேன் முன்பு வரமது வழங்கினேன்; தொண்டனேனென்றது சிவபெருமானை. வரமது - வரத்தை. வள்ளால்: விளி. கனகன் - இரணியாக்ஷனுடைய. புதல்வனுக்கு - பிரகலாதனுக்கு. அடுதிறலாற்கும் - வாணசுரனுக்கும். கடுக்கை மாலை விண்ணவன் - சிவபெருமான். கடுக்கை - கொன்றை. இறைஞ்சி - வணங்கி.

3756. விறல் - வெற்றி. கொல்கிலம் - கொல்லவில்லை. வரம் கொடுத்தனம். மாமேருவில்லி; சிவபெருமானுக்கு விளி. விழுமிது - சிறந்தது. அல்லி - அகவிதழ். கண்ணன் - கண்ணபிரான்.

3757. இந்நெடுந் தோள்க ளுன்கு மீறிலா வாத்தி னேடு
மன் னுக வென் று வெள்வேல் வாண னுக் களித்தல் செய்தான்
கொன்னிளம் பரிதி போன் று குருதிநீர் குடித்த வாழி
மின்னுவிட் டெரிக்குஞ் செங்கை மேலவ னுவந்து மன்னே. (எச)

3758 வாளுகிர் நுதியிற் பொல்லா வாட்டிறற் கனகன் மார்வம்
கிளவோர் செம்பொற் றாணங் கீண்டுவந் தெழுந்த செங்கட்
கோளரி யவனி போற்றுங் குரைகழன் முளரி வாணன்
தோளொரு நான்கி னேடு தொழுதனன் பாவி னுனை. எரு)

3759. படுமதக் களிறு சூழப் பாய்பரி வெள்ள மீண்ட
இடிமுரச திரப் பொற்றே ரேறிவண் டிரைக்கும் பைந்தார்
அடலநி ருத்தன் றன்னே டாம்பலிற் கமழுஞ் செவ்வாய்
மடமயி லன்ன சாயன் மகளையாங் குதவி னுனே. (எசூ)

3760. குளிர்மதி கங்கை சூடுங் குரிசிலோ டெறுழ்வேல் வாணன்
வளநக ரடைய வாணன் மடமகண் மணந்த மார்பத்
திளவிடை யனையான் கல்லெ னிருங் கடல் வேலி மூதூர்
துளவணி படலை மாலைத் தோன்றலோ டுவந்து சென்றுன். (எஎ)

---

3757. மன்னுக - நிலை பெறுக. அளித்தல் - கொடுத்தல். கொன் இளம் பருதி - விடியற்காலையில் தோன்றும் இளஞ் சூரியனை. ஆழி - சக்கரம். மின்னு - ஒளி. மேலவன் - கண்ணபிரான்.

3758. வாளுகிர் நுதியின் - வாள் போன்ற நகத்தின் நுனியால். கனகனது மார்வத்தை. கீள - கிழிப்பதற்கு. தூணம் - தூணை. அம் : சாரியை. கீண்டு - பிளந்து. கோளரி - நரசிங்கம். கோளரியினுடைய கழலாகிய முளரியை. தோள் - கை.

3759. களிறு - யானை. பரி - குதிரை. ஈண்ட - நெருங்க. அதிர - முழங்க. இரைக்கும் - ஒலிக்கின்ற. அடல் - வன்மை. ஆம்பலிற் கமழும் - ஆம்பற் பூவைப்போல் மணக்கின்ற. மகளை - உஷையை, அநிருத்தனேடு மகளை உதவினுன்.

3760. மதியையும் கங்கையையும் சூடுகின்ற குரிசிலோடு - சிவபெருமானேடு. எறுழ் - வன்மை. வாணனுடைய மகளை : உஷையை. விடையனையான் : அநிருத்தன். மூதூர் - துவாரகைக்கு. தோன்றலோடு - கண்ணபிரானேடு.



# 36. நிருகனுக்கருள்புரி அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

3761. வான்விளை யாட நீண்ட மாமயில் குரங்க மேய
கான்விளை யாடி யுண்ணீர் காமுருக் களித்த செங்கட்
டேன்விளை யாடு பைந்தார்த் திருமறு மார்பன் மைந்தர்
மீன்விளை யாடு கூவன் மேயின ரென்ப மன்னோ. (க)

3762. ஊற்றுநீர்க் கூவ றன்னு ளொருபெருங் கோம்பி காணு
எற்றிள வரிமா வன்ன விளையவ ரெடுக்க லாற்றார்
சாற்றினர் சென்று முட்டாட் டாமரைப் பொகுட்டின் வாழும்
கோற்றொடிக் குவவுக் கொங்கைக் கோடுழு மார்பி னற்கே. (உ)

3763. விம்மிதப் பட்டு மைந்தர் விளம்புதல் கேட்ட லோடும்
கைம்மலை யழைப்ப வந்த கருணையங் கமலச் செங்கண்
மைம்முகில் வண்ண னேகி மலையெனக் கிடந்த கோம்பி
செம்மலர் முளரி யங்கை தீண்டினன் வாங்கி னனால். (ங)

3764. காண்டொறுங் களிப்பு நல்குங் களியமு தனையான் செங்கை
தீண்டலு மமா னாகித் திரைதவழ் பாவை முந்நீர்

---

3761. வானை நோக்கி மயில் விளையாட; வான் - மேகம். குரங்கம் - மான். கான் - காட்டில். உண்ணீர் காமுரு - உண்ணும் நீரை விரும்பி. தேன் - வண்டுகள். திருமறு மார்பன் மைந்தர் - கண்ணபிரானுடைய புதல்வர். கூவல் - கிணற்றை.

3762. ஊற்று நீரையுடைய கூவலுள். கோம்பி காணு - ஓணானைக் கண்டு; கோம்பி - பச்சோந்தி எனலுமாம். எற்றிள அரிமா அன்ன - இளைய ஆண் சிங்கங்கள் போன்ற. இளையவர் - குமரர். சாற்றினர் - சொல்லினர். முள்தாள் தாமரை - முள்ளைத் தண்டிலே உடைய தாமரை. கோற்றொடி - இலக்குமி. கோடு - உச்சி. மார்பினற்கு - கண்ணபிரானுக்கு. மார்பினற்குச் சாற்றினர்.

3763. விம்மிதம் - ஆச்சரியம். கைம்மலை - கஜேந்திரன். மைமுகில் வண்ணன் - கண்ணபிரான். கோம்பியைக் கையால் தீண்டி வாங்கினன்.

(பி - ம்.) 3. கிடந்த வோமான்.

3764. காண்டொறும் - பார்க்குந் தோறும். அனையான் - கண்ணபிரான். தீண்டலும் - தொட்டவுடன். அமரன் - தேவன். கீண்டு -

ஈண்டெழு பரிதி போலக் கிளரொளி யுருப்பெற் றங்கு
நீண்டமு தண்ட கோள நிலவுறத் தோன்றிற் றன்றே. (ச)

3765. எறிகதிர்க் குழவி ஞாயிற் றேர்பெற விளங்கு வானை
அறிகிலான் போல நின்ற வமலனீ யாரை யென்ன
நிறையுயிர் தோறு நின்ற நினக்குநா னுரைப்ப தென்னோ
மறைதுணி வரிய நம்ப மன்னன்யா னிருக னென்பேன். (ரு)

3766. கல்லினுன் மாரி காத்து கணநிரை புரந்த செங்கண்
மல்லலே றனையாய் பைம்பொன் மாரியிற் பொழிந்த தல்லால்
தொல்லைவா னகத்து மீனுந் தொடுகடல் மணலு மாற்றா
எல்லைய வஞ்செஞ் சேதா வீந்தனன் மறைவ லோர்க்கே. (சு)

3767. மன்னிய வெள்ளி வெண்ணூல் வலம்படக் கிடந்த மார்பின்
பொன்னிதழ்க் கமலப் பைந்தார் புனையுமோ ரந்த ணாளன்
இன்னிளம் புனிற்று வந்தென் னினநிரை கலந்த தாக
அன்னதோ ரந்த ணாளற் கறிந்திலன் வழங்கி னேனால். (எ)

3768. புனிறுசேர் பருவச் சேதாப் புனலொடு கவர்ந்து செல்லும்
தனிமறை யவனு மற்றைத் தாமரைத் தாரி னானும்
எனதென தென்று கூறி யிறைவனென் புரிந்தா னென்னாக்
கனலெனக் கனற்சி மிக்கென் கடைத்தலை குறுகி னாரே. (அ)

---

கிழித்து. உருப்பெற்று - வடிவத்தைக் கொண்டு. நிலவுற - விளங்கும்படி. கோம்பி தோன்றிற்று.

3765. குழவி ஞாயிற்று வர் - இளஞ்சூரியனது அழகை. விளங்கு வானை - நிருகனை. அமலன் - கண்ணபிரான். யாரை - யார். என்ன - என்று கேட்க. மறை துணிவரிய - வேதம் நிச்சயித்தற்கரிய. நம்ப: கண்ணபிரானுக்கு விளி.

3766. கல் - கோவர்த்தன மலை. கண நிரை - பசுக் கூட்டத்தை. மாரியிற் பொன்னைப் பொழிந்ததல்லால்; மாரியின் - மழையைப் போல. மீனும் - நட்சத்திரங்களும். ஆற்றா - அளவு கூற முடியாத. எல்லைய -அத் துணைக் கணக்கையுடைய. சேதா - பசுக்களை. மறைவலோர்க்கு ஈந்தனன்.

3767. மன்னிய - பொருந்திய. மார்பில் கமலத்தாரைப் புனையும் ஓர் அந்தணாளனுடைய புனிற்று; அந்தணருக்குத் தாமரை மாலை உரியது; 8. “பைங்கமலத் தண் டெரியற் பட்டர்பிரான்” (திருப்பாவை. 30.) புனிற்று - ஈன்றணிமையையுடைய பசு. இன நிரை - பசுக் கூட்டத்தே வந்து அன்னது - அப்பசுவை. ஓர் அந்தணாற்கு - வேறொரு பிராமணனுக்கு.

3768. புனிறு - ஈன்ற அணிமை. சேதா - பசுவை. புனலொடு - அருக்கிய நீருடன். தாமரைத் தாரினன் - பசுவுக்குரிய முதல் பிராமணன். இறைவன் - அரசன். என் புரிந்தானென்னா - என்ன சூது செய்தானென்று. கனற்சி - கோபம். கடைத்தலை - வாயிலிடத்து.

3769. ஆய்மறைக் கிழவ மற்றிவ் வானின தென்று தேற்று
தாயிதழ் முளரிப் பைந்தா ரந்தணற் குதவி னேனூ
ருயிர மஞ்செஞ் சேதா வளிக்குவ னெனவுங் கொள்ளான்
ஆயவெஞ் சீற்றத் தானவ் வந்தண னகன்று போனான். (கூ)

3770. ஏருறு புனிற்று வேட்ட தீகுவ னருளா யென்ன
நீரொடு பெற்று நின்ற நெடுமறைக் கிழவன் றானும்
ஆரமு தூறு கற்று வாயிரப் பத்தென் றாலும்
கூரழல் வடிவேல் மன்ன கொள்கலே னென்று சென்றான். ()

3771. இறப்புவந் தடைந்த தாக வென்னையம் மறலி நோக்கி
அறப்பயன் பெரிது நெஞ்சத் தறிந்திலை யியற்று பாவத்
திறப்பயன் னென்னிற் சாலச் சிறிதுபூந் தெரியல் வேந்தே
முறைப்படக் கூறல் வேண்டு முன்னெது நுகர்வ தென்றான்.()

3772. தீதுமுன் னுகர்வ லென்று செப்பினன் செப்ப லோடும்
ஓதியாய் வீழ்தி யென்ன வீழ்ந்தன னுலகுக் கெல்லாம்
ஆதிநின் மலர்க்கை தீண்ட வவ்வுருத் தீர்ந்தே னென்னாக்
கோதைநீண் முடியிற் றாழ்ந்து கொழும்பொன்னா டெய்தி னானால். ()

3773. கார்முகில் வண்ணத் தண்ணல் காதலர் வதன நோக்கி
ஆரழல் வெய்ய நஞ்ச மருந்தினுந் தீர்ச்சி யுண்டாம்
ஒருநான் மறைவ லாள ருறுபொரு ளுகர்ச்சி யென்றால்
தீர்வதன் றென்னாச் செவ்வாய் திறந்தனன் கூறி னானே. ()

---

3769. மறைக்கிழவ: முதல் அந்தணனைப் பார்த்து விளி. இவ்வான் நினது என்று தேற்றாது - இப்பசு உன்னுடையதென்று அறியாமல். நூறாயிரம் சேதாவை அளிக்குவன்; அளிக்குவன் - கொடுப்பேன். கொள்ளான் - பெறானாகி.

3770. ஏர் - அழகு. ஆ - பசுவை. வேட்டது - விரும்பியதை. என்ன - என்று கூறவும். அமுதூறு கற்று - அமுதமூறுகின்ற கன்றையுடைய பசு. மன்ன: நிருகனுக்கு விளி. கொள்கலேன் - பெறேன்.

3771. மறலி - யமன். அறப்பயன் பெரிது - தருமத்தின் பயன் மிகுதியாகவுள்ளது. நெஞ்சத்தால் அறிந்திலையாய் இயற்றிய பாவத்துப் பயன் சாலச் சிறிது. வேந்தே: நிருகனுக்கு விளி. எதுமுன் நுகர்வது என்றான்; நுகர்வது - அநுபவிப்பது.

3772. தீது - பாவப் பயனை. ஓதி=ஓந்தி - ஓணான். என்ன - என்று யமன் கூறலும். ஆதி: கண்ணபிரானுக்கு விளி. அவ்வுரு - அந்த ஓந்தியின் வடிவம். என்னா - என்று கூறி. கோதை - மாலையை யணிந்த. முடியால் தாழ்ந்து; தாழ்ந்து - வணங்கி. பொன்னாடு - சுவர்க்கம்.

3773. அண்ணல் - கண்ணபிரான். காதலர் - புதல்வராது. நஞ்சம் - விடத்தை. தீர்ச்சி - நீக்குதல். ஒரும்: அசை. மறைவலாளருடைய பொருளை. நுகர்ச்சி - நுகர்தல். தீர்வதன்று - அதன் பயன் நீக்க முடியாது.

# 37. நம்பிமூத்தபிரான் கோகுல மடைந்த அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

3774. கரும்ப னைக்கொடிக் காவலன் முல்லையங் கானம்
பொருந்தி நந்தகோன் பூங்கழற் ருமரை போற்ரு
அரும்பு மென்னகை யசோதைத னந்துண ரசோகின்
திருந்து செந்தளிர்ச் சீறடி சென்னியிற் சேர்த்தான். (க)

3775. கிளரும் வெள்ளியங் கிரியொடு மாறுகொண் டெழுந்து
வளருந் தன்னிணை மணிப்புயம் விழைந்துநன் மாமை
விளருங் கோவியர் வெம்முலை மணந்தனன் வரிவண்
டுளரும் பூந்தொடை மார்வனவ் வொருகுழை யொருவன்.(உ)

3776. மழைக்க ணேழையர் மன்றலம் பூங்குழன் மானத்
தழைத்த நாண்முகை தளையவிழ்ந் துகுத்ததா தாடிக்
குழைத்த கொம்பினிற் குலவிவாழ் கருங்குயிற் பிள்ளை
அழைப்ப வின்னிள வேனில்வந் திறுத்ததை யன்றே. (ரு)

3777. குரவ வார்குழற் குறுநுதற் கோவியர் குழாத்தோ
டுருவ வொண்சுடர் பரப்பிய வொண்குழை யொருவன்

---

3774. பனைக்கொடிக்காவலன் - பலராமன். கானம் - காட்டை. போற்ரு - போற்றி. அரும்பு போன்ற நகையை யுடைய அசோதை தன்; நகை - பற்கள். அசோகினது திருந்திய தளிர் போன்ற சீறடியை.

3775. கிளரும் - விளங்குகின்ற. மாறு - மாறுபாடு; ஒப்பு. இணை - இரட்டையாகிய. புயம் - தோளை. விழைந்து - விரும்பி. விளரும் - வெளுக்கின்ற. உளரும் - அசைகின்ற. மார்வனுகிய ஒருகுழை ஒருவன் - பலராமன்.

3776. மழைக்கண் - குளிர்ந்த கண்ணையுடைய. ஏழையர் - கோவியருடைய. குழல் - கூந்தல். மான - ஒப்ப. முகை - அரும்பு. உகுத்த - சொரிந்த. தாது - மகரந்தப்பொடி. குழைத்த - தளிர்த்த. பெண்டிருக்குப் பூங்கொம்பும் பெண்டிரது தலைமயிரின் சுருளுக்குக் குயிலும் உவமை. இளவேனிற் காலத்துக் குயில் கூவும்.

3777. குரவம் - குரவம்பூவையணிந்த. குழாத்தோடு - கூட்டத்

விரவு மீனொடு விரிகதிர் விதுநடந் தென்ன
அரவ வண்டிமி ரிளமராக் காவுசென் றடைந்தான். (௪)

3778. திரைக்க டற்படு மமுதெனத் திசைதிசை தெய்வ
மருக்க மழ்ந்திள வண்டொடு சுரும்பினம் பாய்ந்து
விரிக்கும் பூம்பொழில் விளைதரு வாருணி நறவம்
கரைக்கு மாமதக் களிறனான் பருகினன் களித்தான். (௫)

3779. விரைசெய் காவினில் விளைமதுத் துளிதெறித் தென்ன
முருகு விம்மிய முளரிவாண் முகம்வியர்ப் பூரப்
பொருவின் மாதரோ டாடுவான் பூம்புன லாட
வருக வென்றனன் மறிதிரை யமுனையை மகிழ்ந்தே. (௬)

3780. மழைக்க டாக்களி றன்னவன் வருபுன லாடற்
கழைத்த காலையில் யமுனைவந் தடுத்தில தாக
இழுத்த னன்கொடுங் கலப்பையா விழுத்திடே லெனவண்
டுழக்கி ழிந்ததா ரவனினைத் தழியொழு கியதால். (௭)

3781. கொய்யு நாண்மலர் விரைகமழ் யமுனைகொய் யாத
செய்ய பொற்றுணர்த் தேந்தொடை யொன்றொடு செறிந்த

---

தோடு. மீனொடு - நட்சத்திரங்களோடு. விது - சந்திரன். அரவம் - ஒலி. இளமரக்காவு - சோலை. அடி. 3 - 4: சிறுபாண். 219 - 20.

3778. கடற்படும் - கடலில் தோன்றுகின்ற. மரு - வாசனை. சுரும்பினம் - ஒருவகை வண்டின் கூட்டம். பொழில் - சோலையில். வாருணி நறவம் - வருணனுடைய ஏவலால் உண்டாகிய வாருணி என்னும் மது ; மதுவுக்குத் தேவதை என்பர். நறவத்தைக் களிறனான் பருகினான் ; களிறனான் - பலராமன்.

3779. விரை - வாசனை. தெறித்தென்ன - தெறித்தது என்று சொல்லும்படி. முருகு - தேன். வியர்ப்பூர - வியர்வை மிக. பொருவில் - ஒப்பில்லாத. மாதரோடு - கோவியரோடு. யமுனையைப் புனலாடும் பொருட்டு வருக என்றனன்.

3780. கடாக்களிறு - ஆண்யானை. அன்னவன் - பலராமன். அடுத்திலதாக - சேரவில்லையாக. கலப்பையால் இழுத்தனன். தாரவன் - பலராமன். ஒழுகியது - யமுனை பலராமன் பக்கமாக ஓடியது.

(பி - ம்) 3. இழுத்த கூர்ங்கொடுங் கலப்பையா வீர்க்குதுமென.

3781. விரை - வாசனை. யமுனை - யமுனாநதி. செய்ய - சிவந்த. துணர் - கொத்து. தொடை - வைஜயந்தி என்னும் மாலை. கொய்யாத தொடையொன்றொடு. செறிந்த - நெருங்கிய. நெய் - புழுகு; எண்ணெய் பூசிய எனலுமாம். இரேவதி கொழுநற்கு - பலராமனுக்கு. நெய்யா ஐய

நெய்யி ருங்குழ லிரேவதி கொழுநற்கு நெய்யா
ஐய நீலநுண் டுகிலிரண் டளித்ததை யன்றே. (அ)

3782 கங்கை வெண்டிரை கலங்தெனக் கண்கவ ரழகு
பொங்கு தன்னுருப் பொழிதரு நிலவொளி பூப்பக்
கொங்கு விம்மிய குளிர்மலர்க் கொழுங்கரை யமுனை
செங்க ணேறனன் றிளைத்தனன் கோவியர் செறிய. (கூ)

3783. நூறு காவத நூற்றிதழ்த் தாமரை விரிந்து
நாறு தண்டுறை தழுவிய நளிபுனற் றடமும்
ஆறுஞ் சோலையு மாய்ச்சியர் நலனுகர்ந் தாறி
ஏற னுனிரு திங்கள்வீற் றிருந்தன னிப்பால். (கo)

---

நீல நுண்டுகில் இரண்டு - நெய்யாத வியக்கத்தக்க நீலநிறம் பொருந்திய நுண்ணிய ஆடைகளிரண்டை. அளித்ததை - அளித்தது; ஐ: அசை. தொடை யொன்றோடு துகிலிரண்டை அளித்தது.

378'. திரை - அலை. கண்கவர் - கண்களைக் கவர்கின்ற. பொங்கு - மிகுகின்ற. தன்உரு என்றது பலராமன் உருவத்தை. பூப்ப - தோன்ற. கொங்கு - வாசனை. யமுனை - யமுனை நதியில். செங்கணேறனன் - பலராமன். திளைத்தனன் - விளையாடினன்.

3783. நூறு இதழ்களையுடைய தாமரை. நாறுகின்ற தண்டுறை. நளி - பெருமை. தடம் - தடாகம். நலம் - இன்பம். ஆறி - ஆறுதலுற்று. ஏறனன் - பலராமன். இரு திங்கள் - இரண்டு மாதங்கள்.



# 38. பவுண்டரனைக் கொன்ற அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3784. பாட்டளி கொழுது லைபந்தார்ப்
பவுண்டா னென்னும் வேந்தன்
தாட்டுழா யலங்கல் சூடிச்
சங்கொடு திகிரி தாங்கிப்
பூட்டியொண் மணிமற் றொன்று
புட்கொடி யுயர்த்து வெய்ய
வாட்டிறல் வாசு தேவன்
யானென வைகி னானே. (க)

3785. காசிலாக் குருநாட் டேந்தல்
கண்ணுத லவனைப் போற்றி
ஏசிலாச் சங்க நேமி
யிருங்கதை பிறவு மெய்தி
ஆசற வினிது வாழ்ஞான்
றணிகெழு யாழின் வல்ல
தேசுடை முனிவன் கூற்றாற்
சினந்துபோர் கெழுமி நின்றான். (உ)

---

3784. பாட்டையுடைய அளி கொழுது; அளி - வண்டு. கொழுது - கிண்டுகின்ற. தாளையுடைய துழாய். அலங்கல் - மாலை. மணியைப் பூட்டி. மணி - கௌஸ்துப மணி போன்றதை. புட்கொடி - கருடக்கொடி. வெய்ய - விரும்பத்தக்க. வாசுதேவன் - திருமால்.

3785. காசிலா - குற்றமில்லாத. குருநாட்டு ஏந்தல் - பவுண்டரன். கண்ணுதலவனை - சிவபெருமானை. ஏசிலா - பழிப்பில்லாத. நேமி - சக்கரம். ஆசற - குற்றங்கெட. வாழ்ஞான்று - வாழும்போது. அணி - அழகு. தேசு - ஒளி. முனிவன் - நாரதனுடைய. கெழுமி - பொருந்தி.

3786. செங்கதிர்க் கற்றை காலுந்
திகிரியஞ் செல்வன் யானே
சங்கொடு தழல்வாய் நேமி
தாங்குதல் விடுத்தா லுய்ந்தான்
அங்கவை விடுக லானே
லாடமர்க் கெழுக வென்று
வெங்கடக் களிறட் டாற்கு
விடுத்தனன் றூது மன்னே. (௩)

3787. சேட்டிளம் பருதி யென்னத்
திகழ்வெயிற் குப்பை காலும்
சூட்டரா வணையி னனைத்
தூதுரை கேட்ட வோடும்
கோட்டின னிலவு காலுங்
குறுநகை பெறிவேற் றானே
ஈட்டமொ டெழுந்து மன்ன
னெயிற்புறத் திறுத்தா னன்றே. (௪)

3788. பாழிசான் முழவுத் திண்டோட்
பவுண்டர வாசு தேவன்
ஊழியா ரழலிற் சீறி
யொலிகடற் றானே சூழத்
தோழமை கொண்ட காசி
வேந்தொடு சுடருந் தீவாய்
ஆழியம் படைக்கை தாங்கி
யமர்க்களங் குறுகி னனால். (௫)

---

3786. கற்றை - தொகுதி. காலும் - கக்குகின்ற. செல்வன் - திருமால். உய்ந்தான் - பிழைத்தான். விடுகலானேல் - நீக்காவிட்டால். அமர்க்கு - போருக்கு. கடம் - மதம். களிறட்டாற்கு - கண்ணபிரானுக்கு, தூதுவிடுத்தனன்.

3787. சேடு - பெருமை. பருதி - சூரியன். குப்பை - தொகுதி. சூட்டு - உச்சிக்கொண்டையையுடைய. அரவணையினன் - கண்ணபிரான். குறுநகை கோட்டினன் - புன்முறுவல் செய்தான். தானையீட்டமொடெழுந்து மன்னனது எயிற்புறத்து இறுத்தான்; மன்னன் - பவுண்டரன்.

3788. பாழிசால் - வன்மை மிக்க. சீறி - கோபித்து. தோழமை - நட்பு. சுடரும் - ஒளிவிடுகின்ற. ஆழி - சக்கரம்.

3789. பண்ணமை களிநல் யானைப்
பவுண்டரன் வதன நோக்கி
வெண்ணிலா முறுவல் கோட்டி
விடுதிவெந் தழல்வாய் கான்ற
ஒண்ணிற நேமி யென்றுங்
குரைத்தனை விடுது மென்னு
மண்ணமை முழவுத் திண்டோண்
மாலவன் விடுத்திட் டானால். (சு)

3790. ஊற்றிருந் துதிர மாரி
யொழுகுசெந் தழல்வாய் நேமி
சீற்றமொ டெதிர்ந்து வெய்ய
செருத்தொழில் விளையா நின்ற
பாற்றினஞ் சுழலும் வைவேற்
பவுண்டர வாசு தேவன்
மாற்றருஞ் சிறப்பு வாய்ந்த
மணிமுடி துணித்த தன்றே. (எ)

3791. விட்டிரு வினையு நீங்கி
வேரியந் துளவ மாயன்
கட்டெழி லுருவ நாடிக்
கைபுனைந் திருந்த வாற்றால்
பட்டவெங் களிநல் யானைப்
பவுண்டர வாசு தேவன்
வட்டவாய்த் திகிரி தாங்கு
மாலுரு மரீஇயி னானால். (அ)

---

3789. பண்ணமை - ஆயத்தம் செய்த. கோட்டி - செய்து. தழலை வாயிடத்துக்கான்ற நேமி; நேமி - சக்கரம். நேமியை விடுதி என்று உரைத்தனை. விடுதும் என்னு - விடுவோம் என்று கூறி. மண்ணமை - மார்ச்சனையமைந்த. மாலவன் - கண்ணபிரான். சக்கரத்தை விடுத்திட்டான் இப்பாட்டில் விடுதும் என்றது சிலேடை.

3790. உதிரமாரி - இரத்தமழை. நேமி - சச்கரம். செருத்தொழில் - போர்த்தொழிலை. பாறு - பருந்து. பவுண்டர வாசுதேவனுடைய முடியைத் துணித்தது.

3791. இருவினையும் விட்டு நீங்கி. வேரி - தேன். மாயன் - கண்ணபிரானுடைய. கட்டெழில் - மிக்க அழகுடைய. கைபுனைந்து - அழகு செய்து. பட்டம் - நெற்றிப்பட்டம். மாலுரு - திருமாலினுருவத்தை. மரீஇயினன் - பொருந்தினன்.

3792. திங்களை நகுதல் போலத்
தெண்ணிலா விரிக்கு முள்வாய்ச்
சங்கொடு நேமி தாங்குந்
தாமரைத் தடக்கை யண்ணல்
வெங்கொலைப் பகழி தூண்டி
வெல்படை யழுவத் தேற்ற
கங்கைநாட் டிறைவன் சென்னி
காசிமா நகரின் வீழ்த்தான். (௯)

3793. கன்னியம் புரிசை சூழ்ந்த
காசிநா டளிக்குந் தோன்றல்
மன்னவர் மகுட கோடி
மணித்தொகை பொருது மின்கால்
பொன்னெடு வாயில் வீழ்ந்த
புலவருச் சென்னி தந்தை
சென்னியென் றறிந்து மாழ்கிச்
செய்கடன் கழித்தான் மன்னோ. (கo)

3794. காய்க்குலைக் கமுக வேலிக்
காசிநா டளிக்குந் தோன்றல்
பேய்க்குலந் துணங்கை தூங்கு
போமர்க் களத்து நெய்த்தோர்
சாய்க்கமற் றெந்தை செம்பொற்
றூர்முடி தடிந்தான் றன்னை
மாய்க்குவ னென்று முக்கண்
வானவற் பழிச்சி னானல். (கக)

3792. நகுதல் - பரிகசித்தல். முள்ளை வாயிலேயுடைய சங்கு. அண்ணல் - கண்ணபிரான். பகழி - அம்பு. தூண்டி - செலுத்தி. அழுவம் - பரப்பு. ஏற்ற - எதிர்த்த. இறைவன் - காசியின் அரசன். சென்னி - தலையை.

3793. கன்னியம்புரிசை - அழிக்க முடியாத மதில். தோன்றல் - சுதக்ஷிணன் : காசியரசனுடைய மகன். மகுட கோடியின் மணித்தொகை. மின்கால் - ஒளியைச் சிந்துகின்ற. வாயிலின் வீழ்ந்த சென்னியை. மாழ்கி - மயங்கி.

3794. தோன்றல் - சுதக்ஷிணன். பேய்க்குலம் துணங்கை தூங்கு - பேய்களின் கூட்டம் துணங்கை யென்ற கூத்தை ஆடுகின்ற. நெய்த்தோர் - இரத்தம். எந்தையின் முடியைத் தடிந்தான்றன்னை - கண்ணபிரானை; தடிந்தான் - வெட்டினவன். முக்கண்வானவன் - சிவபெருமானை. பழிச்சினான் - வணங்கினான்.

3795. துளிப்புயல் கிழித்த மின்னிற்
சுடர்விடு சடிலத் தண்ணல்
வெளிப்பட வங்கை கூப்பி
வெஞ்சமர்க் களக்க ணெந்தை
களிச்சுரும் பாற்று பைந்தார்க்
கதிர்முடி துணித்தாற் கொல்ல
அளித்தியோர் வரமென் றேத்தி
யணிமுடி வணங்கி நின்றான். (கஉ)

3796. மழலைவண் டாற்று தாரோய்
மாரண வினையிற் றென்பால்
அழலினை வளர்த்தி மற்றவ்
வழலிடை வெதும்பி யூழித்
தழன்முனிந் தெழுந்த தேய்ப்பத்
தடம்பிறை யெயிற்றுப் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பூத மொன்று
தோன்றும்வின் கிழித்து மன்னோ. (கங)

3797. எழும்பிறை யெயிற்றுப் பூத
மெழுதரு மறைவ லோர்க்குத்
தழைந்தபே ரன்பி லார்மேற்
சார்தா விடுத்தி யாயின்
விழைந்தது முடிக்கு மென்னு
வெள்ளிவெண் ணிலவு காலும்
குழந்தைவெண் டிங்கள் சூடுங்
குருசிலாங் கியம்பிச் சென்றான். (கச)

---

3795. புயல் - மேகத்தை. மின்னின் - மின்னலைப்போல். சடிலம் - சடையையுடைய. அண்ணல் - சிவபெருமான். கூப்பி - குவித்து. களக்கண் - களத்தில். எந்தை - காசிவேந்தனுடைய. துணித்தான் - வெட்டிய கண்ணபிரானை. ஓர் வரம் அளித்தி என்று.

3796. மழலைச் சொல்லையுடைய வண்டு. தாரோய்; சுதக்ஷிணனுக்கு விளி. மாரண வினையின் - அபிசாரத் தொழிலால். அடியார், தென்பால் அழலினை - தக்ஷிணாக்கினியை. வளர்த்தி - வளர்ப்பாயாக. ஊழித்தழல் - யுகமுடிவிற் றோன்றும் தீ. ஏய்ப்ப - ஒப்ப. பேழ்வாய் - பெரிய வாயையுடைய. சுழல் விழிப் பூதம்: "சுழல்கட்பேய்" (3735.)

3797. எழுகின்ற பூதத்தை. எழுதரும் - எழுதுதற்கரிய; மறைக்கு அடை. மறைவலோர்க்கு அன்பில்லாதவர் மேல். சார்தா - அடைய. விழைந்தது - நீ விரும்பியதை. என்னு - என்று. குழந்தை - இளமை. குருசில் - சிவபெருமான்.

3798. கூரழ லொழுகு வைவேற்
கோவிளங் குமா ளுங்கே
ஆரழல் வளர்ப்ப மற்றவ்
வழலினோர் பசுங்கட் பூதம்
ஈரெழு பொழிலு மின்னே
யெரிக்குமென் றிமையோ ரஞ்சக்
காரெழு முருமே றென்னக்
கனற்சிமிக் கெழுந்த தன்றே. (கரு)

3799. தழைந்தவெஞ் சினத்திற் றந்தை
தார்முடி துணித்தா னுவி
பிழிந்துண விடுத்த லோடும்
பிறங்குவெண் பிறைப்பற் பூதம்
விழைத்த செங்கமல மாதின்
மென்முலைக் கோடு பாயச்
சுழிந்துமட் டொழுகு தாரான்
றுவரைபோய்ச் சுட்ட தன்றே. (கசு)

கலிநிலைத்துறை.

3800. சேதா மிடையச் செழுந்தீங்குழ னின்றி சைத்தோன்
சூதாடு காலைச் சுடுகின்றதொர் பூத மூதூர்
போதார் துளவப் புயல்வண்ண புரத்தி யென்னுத்
தாதார் முளரித் திருத்தாணிழன் மாந்தர் சார்ந்தார். (கஎ)

---

3798. கூர்அழல் - மிக்க தீ. குமரன் - சுதக்ஷிணன். அழல் - தக்ஷிணுக்கினியை. அழலின் - தீயினிடத்து. . ஈரெழுபொழிலும் - பதினன்கு உலகமும். அஞ்ச - பயப்படும்படி. கார்எழும் - மேகத்தில் தோன்றுகின்ற. கனற்றி - கோபம்.

(பி - ம்.) 4. எழுந்து சென்ற.

3799. சினத்தின் - கோபத்தினுல். தந்தை - காசி மன்னனுடைய. துணித்தான் - கண்ணபிரானுடைய. விடுத்தலோடும் - பூதத்தை அனுப்பிய வுடன். விழைந்த - விரும்பிய. பாய்தலால் மட்டு ஒழுகுகின்ற தாரான் - கண்ணபிரானுடைய. துவரை - துவாரகாபட்டினம்.

(பி - ம்.) 3. கோடு போழ.

3800. சேதா - பசுக்கள். மிடைய - தன்னிடத்தே நெருங்கும்படி. குழல் - வேய்ங்குழலை. இசைத்தோன் - கண்ணபிரான். சூது - சொக்கட்டான்; சதுரங்கம். ஓர்பூதம் ஊரைச் சுடுகின்றது. துளவப்புயல் வண்ண: கண்ணபிரானுக்கு விளி. புரத்தி - காப்பாயாக. தாது - மகரந்தப்பொடி. மாந்தர் - நகரசனங்கள்,

3801. சேடுற்ற ஞாயி றொருகோடி திரண்ட தேபோல்
பாடுற்ற தெய்வத் திகிரிப்படை யண்ணல் பார்ப்பச்
சூடுற்ற செந்தீச் சொரிகட்பெரும் பூத மஞ்சி
ஓடத் துரந்த தழனேமி யுருத்து மன்னோ. (கஅ)

3802. விண்ணந் திகழப் பொடிக்குங்கதிர் நாண வெம்பி
நண்ணுந் திகிரிப் படையஞ்சி நடந்த பூதம்
கண்ணன் புரத்திற் றனையேவிய காமர் கங்கைத்
தண்ணந் துறைவன் றனதாருயி ருண்ட தன்றே. (கசு)

3803. குறுத்தாள பூதங் கொலப்பட்டவக் கொற்ற வெள்வேல்
நறைத்தாம மார்ப னகர்தீமடுத் தாட னேமி
உறைத்தாய் பிழிவண் டொருகோடி யுழக்க விண்ட
வெறித்தா மரைப்பூங் கொடிகேள்வனை மேய தம்மா. (உ0)

3804. என்னுமுன் மன்ன னிளங்கோவிய ரேர்க னிந்த
பொன்னார் திகலைப் புணர்வெம்முலைப் போக மாந்தி
மின்னார்ந் திலங்கு விதுமேனியன் வீற்றி ருக்கும்
அந்நீர்மை சொல்வா யெனக்கூறின னைந்த வித்தான். (உக)

---

3801. சேடு - பெருமை. ஞாயிறு - சூரியன். பாடு - பெருமை. திகிரிப்படையை அண்ணல் பார்ப்ப; அண்ணல் - கண்ணபிரான். சூடு - வெப்பம். நேமி பூதத்தை ஓடத்துரந்தது; நேமி - சக்கரம். துரந்தது - துரத்தியது. உருத்து - கோபித்து.

(பி - ம்.) 2. தெய்வப் பருதிப்படை.

3802. விண்ணம் திகழ - ஆகாயம் விளங்கும்படி; அம்: அசை. பொடிக்குங்கதிர் - தோன்றுகின்ற சூரியன். திகிரிப் படைக்கு அஞ்சி. கண்ணன் புரத்தில் - கண்ணபிரானுடைய ஊராகிய துவரையில். கங்கைத் துறைவன்றனது - காசிமன்னன் குமாரனாகிய சுதக்ஷிணனுடைய.

3803. குறுத்தாளபூதம் - குறுகிய கால்களையுடைய பூதம். "குண்டு கட் குறுத்தாட் பூதம்" (3721.) பூதத்தால் கொல்லப்பட்ட மார்பன்; சுதக்ஷிணனுடைய. தீமடுத்து - தீயால் உண்ணச் செய்து. நேமி - கண்ணபிரானுடைய சக்கரம். பிழியை உறைத்து; உறைத்து - துளித்து. பிழி - தேன். உழக்க - உழுதலால். வெறி - வாசனை. கேள்வனை - கண்ணபிரானை. நேமி, மார்பனுடைய நகரைத்தீமடுத்துக் கேள்வனை மேயது.

3804. மன்னன் - பரிக்ஷித்து. ஏர்கனிந்த - அழகுமுற்றிய. திகலை - தேமல். கோவியாது போகத்தை மாந்தி. மின்ஆர்ந்து - ஒளிநிறைந்து. விதுமேனியன் - பலராமன். நீர்மை - தன்மை. ஐந்தவித்தான் - ஐம்பொறிகளையும் புலன்களில் செல்லவொட்டாமல் கெடுத்தவனான சுகமுனிவன். ஐந்தவித்தான் கூறினன்.



# 39. சாம்பன் மணம்புரி அத்தியாயம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

3805. ஆடமர் கடந்த குருதிவாட் டடக்கை
யடனர காசுரன் ரேழுன்
காடுறை வாழ்க்கைத் துவிதனென் றுரைக்குங்
கடுந்திறற் கவிகுலத் தலைவன்
ஓடைமால் யானை மணிமருப் பொசித்தோ
னொக்கல்வீற் றிருந்தவா னத்த
நாடுமால் வரைவீழ்த் தழித்தனன் கடற்சார்
நகர்கடல் கொளப்புரிந் தழித்தான். (க)

3806. படுமதஞ் செருக்கிப் படர்சின வயிரா
பதப்பெரும் பகடுபண் ணமைந்த
மடநடைப் பிடியோ டாடுதல் கடுப்ப
வால்வளை மேனியான் மகிழ்ந்து
கொடிபுரை மருங்குற் குவிமுலைக் கனிவாய்க்
குழைபொரு குவளையங் கருங்கட்
சுடரிழை யாயர் மாதரோ டாடுஞ்
சோலைசூழ் குன்றகம் படர்ந்தான். (உ)

---

3805. கடந்த - வென்ற. அடல் - வெற்றி. கவிகுலத்தலைவன் - வானர குலத்துத்தலைவன். துவிதன் : இவன் நரகாசுரனுடைய தோழன்; சுக்ரீவனுடைய மந்திரியாக இருந்தவன். ஓடை - நெற்றிப்பட்டம். ஒசித்தோன் - கண்ணபிரானுடைய. ஒக்கல் - சுற்றத்தார். ஆநத்தநாடு; இது யாதவர் வாழும் இடம். நாட்டில் வரையை வீழ்த்து. வீழ்த்து - வீழச் செய்து.

3806. மதத்தாற் செருக்கி; செருக்கி - களித்து. பகடு - யானை. பண்ணமைந்த - அலங்கரித்தல் பொருந்திய. பிடி - பெண் யானை. கடுப்ப - ஒப்ப. வளைமேனியான் - பலராமன். பலராமனுக்கு அயிராபத யானையும் ஆயர் மாதருக்குப் பிடிகளும் உவமைகள்.

3807. சேயுயர் விசும்பின் விளங்குவெண் டிங்கட்
செல்வனிற் றிகழ்பவன் றன்மேல்
காயழற் கதிரிற் கடுஞ்சினந் திருகிக்
கவுளிழி கடாத்தவெண் பிறைக்கோட்
டாயிரங் களிற்று விறல்கெழு துவித
ஞச்சினை நெடுமரந் தூரந்தும்
மீயுயர் குடுமி மால்வரை பிடுங்கி
வீசியும் வெஞ்சமம் விளைத்தான். (ரு)

3808. பைத்தலைப் பாம்பிற் பாரக மேழும்
பணைநெடும் புயத்தினிற் பரிப்போன்
முத்தவெண் முறுவல் வெண்ணிலா விரிக்கு
முளரிவாண் முகத்தின ஞகித்
தத்துவெள் ளருவித் தடவரை முகட்டிற்
றழுங்குரா லுருமுவீழ்ந் தென்ன
குத்தினன் குருதி நீத்தம்வாய் கான்று
குரக்கா சிறந்தனன் மன்னே. (சு)

3809. எழுஞ்சுடர் கடுக்கு மெரிமணிச் செஞ்சூட்
டேந்துபா ராயிரம் பகுவாய்
முழைஞ்சுகொப் புளிக்கும் விடத்தழல் பாந்து
முகத்தழல் பாய்ந்துவெந் தொழிய
ஒழிந்துநின் றதனுற் சேடனென் றுரைக்கு
மோங்குசீர்ப் பெரும்பெயர் படைத்த
செழுங்கதிர் விரிக்கு மொற்றைவார் குழையோன்
றிருவளர் துவரைசென் றடைந்தான். (ஏ)

---

3807. திங்கட் செல்வனின் - சந்திரனைப் போல. திகழ்பவன்றன் மேல் - பலராமன்மீது. கதிரின் - சூரியனைப்போல. சினம்திருகி - கோபம் மிக்கு. கவுள் - கன்னம். விறல் கெழு - வன்மை பொருந்திய. ஆசினை நெடுமரம் - ஆச்சாவென்னும் கிளைகளையுடைய நீண்ட மரத்தை ;ஆ - ஆச்சா மரம். தூரந்தும் - செலுத்தியும். சமம் - போர்.

3808. பைத்தலை - படத்தைத் தலையில் உடைய. பாம்பின் - ஆதி சேடனைப் போல். பரிப்போன் - தாங்குபவனாகிய பலராமன். முகட்டில் - உச்சியில். உருமு - இடி. குருதிநீத்தம் - இரத்த வெள்ளம். குரக்கரசு - துவிதன்.

3809. சுடர் - சூரியன். கடுக்கும் - ஒக்கும். சூட்டில் பாரை வந்து கின்ற. ஆயிரம் வாயாகிய முழைஞ்சில்; முழைஞ்சு - குகை. முகத்து - நெற்றியில். ஒழிய - நீங்க. சேடன் - எஞ்சியவன் ; ஆதிசேடன் : என்றது பலராமனை. ஒற்றைவார்குழையோன் - பலராமன். திருவளர் - செல்வம் வளர்கின்ற.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

3810. கழைபுனை வரிவிற் காமன் கடல்விளை யமுதி னாலே
எழுதிய தன்ன கோலத் திலக்கணை யென்னு மாதைத்
தழையுநற் றவத்தி னீன்றான் றழலெழ வுயிர்க்கும் பேழ்வாய்
ஒழுகுநச் செயிற்றுப் பாந்த ளுயரிய கொடியான் மன்னே. ()

3811. எங்கினிச் சேறு நாமென் றிரங்குபொற் குன்று சூழும்
அங்கதிர்ப் பரிதி யண்ணாந் தகல்விசும் பாறு பார்க்கும்
குங்குமக் குவட்டின் வீங்கிக் குமுதநா றமுதச் செவ்வாய்ப்
பைங்கிளி மழலை மாதின் படாமுலை பணைத்த லாலே. (எ)

3812. நஞ்சமு மமுதுங் காட்டி நம்மொடு நிகர்க்கு மேகொல்
அஞ்சனக் கடன்மற் றென்ன வையரி பாந்து நீரார்
கஞ்சமுங் கயலும் வென்று கட்கடை சிவக்கு மென்றால்
வெஞ்சிலைப் புருவ வல்வில் விழிக்கணை யாவர் வெல்வார். (அ)

3813. எழுபெரும் புவிக்கு மப்பா லிருளெலா மெழுந்து பொங்கி
முழுமதி தன்னை வந்து முற்றிய தன்மை காட்டும்
மழைமுகங் கிழிக்கு மின்னு மயருநுண் ணுசுப்பிற் பாவை
குழைமுகஞ் சூழ்ந்து தாழ்ந்து குழன்றுநெய்த் திருண்ட கூந்தல். (கூ)

---

3810. கழை - கரும்பு. கழையை வில்லாகப் புனைந்த காமன் - மன்மதன். காமன் எழுதியதன்ன கோலத்தையுடைய இலக்கணை; கோலத்து - அழகையுடைய. இலக்கணை - லக்ஷணை. தவத்தின் - தவத்தால். தழல் - தீ. உயிர்க்கும் - மூச்சுவிடுகின்ற. பாந்தள் உயரிய கொடியான் - பாம்பைக் கொடியாக உயர்த்திய துரியோதனன். கொடியான் இலக்கணை என்னும் மாதை ஈன்றான்.

3811. சேறும் - செல்வோம். பொற்குன்று - மேருமலையை. பருதி - சூரியன். அண்ணாந்து - மேலே பார்த்து. ஆறு - வழி. வீங்கி - புடைத்து. மாதின் - இலக்கணையின். பணைத்தலால் - பெருத்தலால். மாதின் முலை பணைத்தலால் பொற்குன்றைச் சூழும் பருதி, எங்கு இனிச் சேறுமென்று விசும்பாறு பார்க்கும்.

(பி - ம்.) 4. பணைத்த மாதோ.

3812. நஞ்சமும் அமுதும் காட்டி - விடத்தையும் அமுதத்தையும் தோன்றச் செய்து. கடல் நம்மொடு நிகர்க்குமே கொல் என்ன. அஞ்சனக் கடல் - கருங்கடல். ஐ அரி - அழகிய இரேகைகள். நீரார் - நீரில் பொருந்திய. கஞ்சம் - தாமரை. புருவமாகிய வில்லையும் விழியாகிய கணையையும்.

(பி - ம்.) 4. விழிக்கிணை யாவர் சொல்வார்.

3813. அப்பால் - சக்கர வாளகிரியிடத்து. பொங்கி - மிக்கு. மதி - சந்திரனை. முற்றிய - சூழ்ந்த, மழை - மேகம். மின்னும் மயரும் நுண் நுசுப்பிற் பாவை - மின்னலும் மயங்குகின்ற நுண்ணிய இடையையுடைய இலக்கணையினது. குழன்று - சுருண்டு. நெய்த்து - நெய்ப்புடையதாய், கூந்தல் காட்டும் என்க.

3814. ஒடிக்குறுண் மருங்கு லென்ன வுருத்தெழு குவவுக் கொங்கை
வடிக்கருங் கண்ணி யாக்க மதித்தனன் வதுவை நாட்டிக்
கடற்புவி காக்குந் தண்ணங் கவிகைமன் னவர்கட் கெல்லாம்
விடுத்தனன் முடங்கல் வெவ்வாய் விடவரா வுயர்த்த வேந்தே. (௧௦)

3815. வரைமுகங் கிழிய வீழு மண்டழ லுருமே றென்னச்
செருமுகத் தேற்ற தெவ்வர் திணிதடம் புயங்கள் போழ்ந்து
குருதிகொப் புளிக்குங் கூர்வேற் கோசல நாட்டு வேந்தன்
பொருகடற் பவளச் செவ்வாய்ப் பூவையைக் கருதி வந்தான். (௧௧)

3816. அவிழிணர்ப் பொலம்பூந் தும்பை யாத்துவா ளமரி லேற்ற
புவிபுகழ் மன்னர் செங்கைப் புண்டரி கங்க ளெல்லாம்
குவிதர நிலவு தூற்றுங் குரைகழல் யாத்த நோன்றாட்
கவிமதங் கடந்த வண்கைக் கன்னிநாட் டிறைவன் வந்தான். (௧௨)

3817. உமிழ்கொழுங் குருதி யொள்வா ளொளிறுமின் பிறழ வீசிச்
சமரெதிர்ந் தாடு மன்னர் தாருடைந் தோயச் செம்பொற்
சிமயமொத் தெழுந்து வீங்கித் திரண்டதிண் டோளிற் றேத்தார்
கமழ்நறுத் தூற்ற வந்தான் காம்பிலிக் காவன் மன்னன். (௧௩)

---

3814. மருங்குலை ஒடிக்கும் என்ன; ஒடிக்கும் - சாய்க்கும். என்ன - என்று கூறும்படி. உருத்து - கோபித்து. குவவு - குவிந்த. வடி - மாவடுவின் பிளவு போன்ற; கண்ணுக்கு அடை. கொங்கையையுடைய கண்ணியின் ஆக்கத்தை. கண்ணி - இலக்கணை. ஆக்கம் - மணப்பருவத்தை. மதித்தனன் - நினைத்தவனாய். வதுவை - மணம். கவிகை - குடை. முடங்கல் விடுத்தனன்; முடங்கல் - ஓலை. அராவுயர்த்த வேந்து - துரியோதனன்.

3815. வரைமுகம் - மலையினிடம். கிழிய - பிளவுபட. உருமேறு - இடி. செருமுகத்து - போரிடத்து. தெவ்வர் - பகைவர். போழ்ந்து - பிளந்து. பூவையை - இலக்கணையை.

(பி - ம்.) 1. மண்டழன் மடங்கலென்ன. 4. போந்தான்.

3816. இணர் - கொத்து. தும்பையாத்து - தும்பைமாலையைச் சூடி; என்றது தமிழ் நாட்டு மரபை. ஏற்ற - எதிர்த்த. மன்னர் - பகையரசரது. கையாகிய புண்டரிகங்களெல்லாம்; புண்டரிகம் - தாமரை. குவிதர - குவிய. கழல் - வீரக்கழலை. நோன்றாள் - வலிய பாதத்தையுடைய. கவிமதம் கடந்த வண்கை - கவிஞரது கற்பனைக் கொள்கையை வென்ற வள்ளற்றன்மையையுடைய கையைக் கொண்ட. கன்னி நாட்டிறைவன் - பாண்டியன். கன்னி நாடு - பாண்டி நாடு.

3817. வாளை மின் பிறழ வீசி; பிறழ - மாறுபட. சமர் - போரில். மன்னர்தார் - பகையரசரது முன்படை. உடைந்து - தோற்று. சிமயம் - மலை. வீங்கி - பெருத்து. தேத்தார் - தேன் பொருந்திய மாலை. நறு - தேனை. காம்பிலி : ஒரு தேசம்.

3818. பாற்றினஞ் சுழலுஞ் செவ்வேற் பற்றல ராவி யெல்லாம்
கூற்றொடு மறலி வாரிக் கொள்ளைகொண் டுண்ணு நால்வாய்க்
கீற்றிளந் திங்க ளன்ன கிளரொளி முத்த வெண்கோட்
டாற்றலங் களிநல் யானை யவந்திநாட் டதிபன் வந்தான்.(கச)

3819. செருப்பெறுன் செருக்கி நின்ற திசைக்கடாக் களிற்றின் கொற்ற
மருப்பிறப் பொருத மார்பன் வாரண வாசி மன்னன்
கருப்புமென் மழலைக் கன்னி கதிர்மணி மருப்பு வென்ற
அருப்பிளங் கொங்கை வெம்போ ராட்டுவந் தடைந்தா னங்கே. (கரு)

3820. சிலையொடு பொருது வென்று செக்கர்வா னரும்பு திங்கட்
கலையொடு மலைய நாடுங் கட்டெழி னுதலி னார்தம்
முலையொடு பொருத போல முகிறவழ் பசும்பொற் கோட்டு
மலையொடு பொருத மார்வன் மாகதன் வந்தான் மன்னோ.(கசு)

3821. அழிமத வருவி தூவு மண்ணலங் களிற்றி னுச்சி
செழுமணிக் குடத்திற் றந்த தெய்வமாக் கங்கைத் தூநீர்
தழையுநல் லழகின் வெள்ளந் ததும்புவாண் முகத்தி னாளைப்
பொழிமதுக் கமழ்பூங் கூந்தற் பூவைய ராட்டி னால். (கஎ)

---

3818. பாற்றினம் - பருந்தின் கூட்டம். பற்றலர் - பகைவரது. கூற்று : யமன். மறலி - மாறுபட்டு. கொள்ளை கொண்டுண்ணும் - கூட்டுணவு கொள்ளும். நால்வாய் - தொங்குகின்ற வாயையுடைய. கீற்றிளந் திங்கள் - பிறைச் சந்திரன்; யானைத் தந்தத்திற்கு உவமை. ஆற்றல் - வன்மையையுடைய. அதிபன் - அரசன்.

3819. செருப்பெறுன் - நீண்ட நாளாகப் போர் செய்தலைப் பெறாதவனாய். செருக்கி - மதத்தால் களித்து. கொற்றம் - வெற்றி. மருப்பிற - தந்தம் முடியும்படி. கருப்பு மென்மழலைக் கன்னி - கரும்பின் இனிமையைப் போன்ற மெல்லிய மழலை மொழியையுடைய இலக்கணை. மணி - முத்துக்களையுடைய. அருப்பு - அரும்பு. வெம்போராட்டு - விரும்பத்தக்க போரை. உவந்து - மகிழ்ந்து.

3820. சிலை - வில். செக்கர்வான் அரும்பு - செவ்வானில் தோன்றுகின்ற. திங்கட் கலையொடு - பிறைச் சந்திரனோடு. மலைய - பொர. நுதலினார் - மகளிர். முகில் - மேகம். கோடு - சிகரம்.

3821. அழிதல் - இழிதல். மதமாகிய அருவியை. அண்ணல் - பெருமை. உச்சியில். தூநீர் - தூய்மையான நீரை. மிக்க அழகுடைமை பற்றி 'அழகின் வெள்ளம்' என்றார். முகத்தினாளை - இலக்கணையை. பூவையர் - மகளிர். பூவையர் முகத்தினாளைக் களிற்றினுச்சியில் மணிக்குடத்திற்றந்த கங்கை நீரால் ஆட்டினர்;

"கங்கையின் களிற்றி னுச்சிக் கதிர்மணிக் குடத்திற் றந்த
மங்கல வாச நன்னீர் மணிநிறங் கழீஇய தொப்ப
நங்கையை நயப்ப வெல்லாம் விரையொடு துவருஞ் சேர்த்தி
அங்கா வல்கு லரிவை யாட்டினா ராம்பை யன்னார்" (சீவக, 623.)

3822. பூம்புகை கழும வுண்ட புரிகுழன் முருகு விம்மு
தேம்பிணை யணிந்து நானத் திலகநன் கெழுதிப் பச்சைக்
காம்பெனப் பணைத்த தோளிற் கரும்பொடு வல்லி தீட்டி
ஆம்பல்வா யணங்கி னுண்க ணஞ்சனந் திருத்தி னாரே. (கஅ)

3823. எழிலெரி பசும்பொற் செவ்வா யிலங்குசெம் பவள நீலக்
குழன்மணிக் கொத்து முத்தங் கூரெயி றாக வெல்லா
அழகும்வீற் றிருந்த நங்கைக் கழகென வணிய ணிந்தார்
மழைமதர் நெடுங்க ணேழை மருங்குலின் பாவ மீதே. (கக)

3824. உவரியா ரமுதத் தேற லூறுமென் மழலைப் பூவைப்
பவளவாய் மடந்தை கூந்தல் பாயிரு ளென்று நாடாக்
குவிமுகிழ் பரந்த வண்டு கொழுதபூங் காவென் றுள்ளத்
தவழ்கதிர் வதனத் திங்க டழீஇயெழி றழைந்த தன்றே. (உ0)

3825. தெண்டிரை யமுதின் சாய றிருமுக முருகு விம்மு
புண்டரி கங்கொ லென்று புள்ளிமான் பிள்ளை யெண்ணு
மண்டில நிறைந்த மாசின் மதியென மகிழ்ந்து நோக்கக்
குண்டலங் குலாய மீனிற் குருஉச்சுடர் கொழித்த தன்றே. (உக)

---

3822. கழும - மயங்க. குழல் - கூந்தல். முருகு - வாசனை. தேம்பிணை - கண்ணிற் கினிய மாலையை. நானம் - கஸ்தூரி. காம்பு - மூங்கில். பணைத்த - பெருத்த. வல்லி - பூங்கொடியினுருவம். தீட்டி - எழுதி. தோளில் கரும்புருவத்தையும் வல்லியினுருவத்தையும் தீட்டி. அணங்கின் - இலக்கணையது. உண்கண் - மையுண்ட கண்ணில். அஞ்சனம் - மையை.

3823. எழில் எரி பசும் பொன் - அழகு, விளங்குகின்ற பசுமையான பொன்னே. செவ்வாய் பவளம். நீலக் குழல் மணிக் கொத்து. முத்தம் - எயிறு. நங்கைக்கு - இலக்கணைக்கு. ஏழை - இலக்கணையது. மருங்குல் - இடை. தேய்தலின் மருங்குலின் பாவம் என்றார்.

3824. அமுதமாகிய தேறல். மழலைச் சொல்லையுடைய பூவை - நாகணவாய்ப் பறவை. பூவை போன்ற மடந்தையது - இலக்கணையினுடைய. கூந்தலைப் பாயிருள் என்று நாடா ; பாயிருள் - பரந்த இருட்டு. நாடா - ஆராய்ந்து. முகிழ் - அரும்புகளில். வண்டு கொழுதுகின்ற பூங்கா என்று உள்ள ; உள்ள - நினைக்கும்படி. வதனமாகிய திங்கள். தழீஇ - தழுவி. எழில் தழைந்தது - அழகு மிக்கது.

3825. அமுதின் சாயல் - இலக்கணையினுடைய. புண்டரிகம் - தாமரை; முகத்தைப் புண்டரிகங் கொல் என்று. எண்ணு - எண்ணுமல். புள்ளியையுடைய மான் பிள்ளை. மண்டிலம் - வட்டம். நோக்க - நோக்கும்படி. குண்டலம் மீனின் சுடர் கொழித்தது. மீனின் - மீனைப்போல், குரு - நிறம்.

3826. தேமரு கோதை யஞ்செஞ் சீறடி சிறந்த தெய்வத்
தாமரை மலரே செய்ய தளிரெலா மல்ல வென்னுக்
காமரு சுரும்பு மூசக் களியிள வெகினம் போல
மாமணிச் சிலம்பு பாடு மழலைவீற் றிருந்த மன்னோ. (உஉ)

3827. கார்க்குழ லாக மெல்லாங் கவர்ந்தெழில் கனிய வீங்கி
ஈர்க்கிடை போக லாகா வெதிரெதிர் பணைத்து வீங்கும்
வார்க்குல மறுத்த கொம்மை வரிமுலை யாட்டு சுண்ணம்
போர்க்குமஞ் சுணங்கு போலும் பொற்புவீற் றிருந்த தன்றே. (உங)

3828. அருப்பிள முலையஞ் சாய லணிமணிக் கதிர்மென் றோளின்
வரித்தபூங் கரும்பின் பாங்கர் வண்டுக டவழுந் தோற்றம்
கருப்புவிற் குழைய வாங்கிக் கடற்சுற வுயர்த்த காளை
சுருப்புநாண் செவ்வி வாய்ப்பத் தொடுத்தது போலு மன்றே. (உச)

3829. மழைக்கருங் கண்ணி செங்கேழ் மாமணித் தொடிகால் கற்றை
நிழற்கதிர் திட்டு வல்லி நேரெழுந் தெறிக்குந் தோற்றம்

---

3826. கோதை - இலக்கணையினுடைய. அம்செஞ்சீறடி - அழகிய சிவந்த சிறிய பாதம். செய்ய தளிரல்ல. என்னு - என்று. சுரும்பு - வண்டு. மூச - மொய்க்க. எகினம் - அன்னம். மணிகளையுடைய சிலம்பு. பாடும் - ஒலிக்கின்ற. சிலம்பொலிக்கு அன்னத்தின் ஒலி; "சிலம்பிற் சிலம்புங் குரலன்னம்" (சீவக. 2890.) மழலை - குதலைச்சொல். சிலம்பில் மழலை வீற்றிருந்த.

3827. ஆகம் - உடம்பு. எழில் கனிய - அழகுமுற்ற. ஈர்க்கு இடை போகலாகா எதிரெதிர் பணைத்து - ஈர்க்கும் நடுவே போக முடியாதவாறு எதிரெதிர் வீங்கி. வீங்கும் - புடைக்கின்ற. வார் - கச்சு. கொம்மை - பெருமை. ஈர்க்கிடை போகலாகா முலை; "ஈர்க்கிடை போகா வேரிள வின முலை" (பொருந. 36.) சுண்ணம் - வாசனைப் பொடி. போர்க்கும் - மறைக்கின்ற. சுணங்கு - தேமல். பொற்பு - அழகு.

3828. அருப்பு - அரும்பு. சாயல் - இலக்கணையினுடைய. வரித்த - எழுதிய. கரும்பின் பாங்கர் - கரும்புவடிவத்தின் பக்கத்தே. கருப்புவில் - கரும்பாகிய வில்லை. சுறவுயர்த்தகாளை - மன்மதன். சுருப்புநாண் - வண்டுகளாகிய நாணை; சுருப்பு=சுரும்பு - வண்டு. செவ்விவாய்ப்ப - அழகு பொருந்த.

(பி. - ம்) 2. மண்டலந்தவழும்.

3829. மழை - குளிர்ச்சி. கண்ணி - இலக்கணையினுடைய. கேழ் - நிறம். தொடி - தோள்வளை. தொடிகால் கற்றை நிழற்கதிர் - தோள்வளை சிந்துகின்ற தொகுதியான ஒளியையுடைய கிரணத்திடத்து. திட்டு வல்லி -

ஏழிற்கழை யன்ன மென்றோ ளெழுதிய காம வல்லி
குழைப்பது போலுஞ் செய்ய குறுமுறிக் கொழுந்து மன்னோ. (உரு)

3830. சுனைமுக மவிழ்ந்த பொன்னந் தோட்டுமா மலரே யன்றிச்
சினைமுக நெகிழ்மென் பூவுந் திறப்படச் சேரு மாபோல்
புனையிழை மடவார் சூழப் போதினுந் தாது விம்மு
நனையினு மிதித்து நல்ல நறுநுத னடக்க லுற்றாள். (உசு)

3831. செழுந்தளிர் மேனி மாதர் திருத்தக விரித்தல் செய்த
கொழுந்துண ருறைப்பப் பூத்த கொப்புளம் போலப் பொற்றாள்
அழுந்துமெல் லரும்பு தோன்ற வனமென வொதுங்கித் தீந்தேன்
வழிந்தபூந் தாம நாற்றி வனைந்ததோர் மாடஞ் சார்ந்தாள். (உஎ)

3832. முட்டிய திங்கள் கான்ற முழுக்களி யமுத மூழ்கி
விட்டொளிர் கின்ற தென்ன விளங்கிய தவள மாடத்
திட்டபூந் தவிசின் வைகு மிருநில வேந்தர் காண
மட்டவிழ் கோதை சென்றோர் மாலையின் வயங்கி னாள். (உஅ)

3833. கவளமார் களிநல் யானைக் காவல னொருவன் செம்பொற்
குவடெனப் பணைத்த தோளிற் கோற்றொடி யொருகாழ் முத்தின்
அவிரொளி தவழ மாத ராய்நகை நிலவு வந்து
தவழ்வதோ வென்னுச் செங்கட் டாமரை பரப்பல் செய்தான். (உகூ)

---

எழுதிய வல்லியின் உருவம். எறிக்கும் - ஒளிவீசுகின்ற. கழை - கரும்பு, மூங்கில். காமவல்லி குறுமுறிக் கொழுந்துகளைக் குழைப்பதுபோலும்; குறுமுறி - சிறியதளிர். குழைப்பது - தளிர்ப்பது.

3830. சுனைமுகம் - சுனைநீரிடத்து. அவிழ்ந்த - மலர்ந்த. தோடு - இதழ். சினைமுகம் நெகிழ்மென் பூ - கிளையிடத்து அலர்கின்ற மெல்லிய பூ. புனைந்த இழையையுடைய மடவார். போது - மலரும் பருவத்து அரும்பு. நனை - அரும்பு. நறுநுதல் - இலக்கணை.

3831. திருத்தக - அழகுசிறக்க. துணர் - பூங்கொத்து. உறைப்ப - குத்துதலால். பூத்த - தோன்றிய. தாளில் அரும்பு தோன்ற அனமென - அன்னத்தைப் போல. ஒதுங்கி - நடந்து. தாமம் - மாலையை. நாற்றி - தொங்கவிட்டு. வனைந்ததோர் - அலங்கரிக்கப்பட்டதாகிய ஒரு.

3832. திங்கள்கான்ற - சந்திரன் சிந்திய. விட்டு - ஒளியை விட்டு. தவளம் - வெண்மை. தவிசு - ஆசனம். வைகும் - தங்கிய. கோதை - இலக்கணை. மாலையின் - பூமாலையைப் போல.

3833. கவளம் - யானைக்கிடும் உணவுருண்டை. காவலன் - அரசன். குவடு - சிகரம். கோற்றொடி - இலக்கணையினுடைய. ஒரு காழ்முத்தின் - ஒற்றைவடமான முத்து மாலையின். அவிர்ஒளி - விளங்குகின்ற ஒளி. காவலனுடைய தோளிற் கோற்றொடியின் முத்தின் ஒளி தவழ. மாதராய் நகை நிலவு - இலக்கணையின் ஆராய்ந்த பற்களின் ஒளி. என்னு - என்று எண்ணி, கண்ணாகிய தாமரையைப் பரப்பல் செய்தான்; பார்த்தா னென்றபடி.

3834. வலம்படு குருதி வைவேன் மன்னவ னொருவன் மார்வத்
தலங்கொளி வயிரப் பூணி னணங்குசெந் தளிர்க்கை தாங்கும்
இலங்கிதழ்க் குவளை தோன்ற வேந்திழை நோக்கு நோக்கம்
கலந்தது போலு மென்று கட்கடை திருப்பி னானல். (ந௦)

3835. கோட்டிளங் களிற னன்னோர் கொற்றவன் குவளை வென்ற
வாட்டடங் கண்ணி செக்கர் மணிக்குழை யெறிக்கு மொண்கேழ்
ஈட்டம்வந் துலவச் செய்ய விளந்தளிர்க் கண்ணி நங்கை
சூட்டினள் கொல்லோ வென்னாத் தோட்டடந் துனைந்து நோக்கும்.()

3836. இத்திற னோக்கி நோக்கி யெறுழ்வலி யரசர் வைகச்
சித்திரத் தெழுத வொண்ணாத் திருமுகஞ் சிறிது கோட்டித்
தத்தரி யொழுகு செங்கட் டாமரை பரப்பி நின்ற
மைத்தவார் குழலி னாளை வௌவினன் வடிவேற் சாம்பன்.(நஉ)

கலிவிருத்தம்.

3837. கோடிவரி வண்டுபடு கோதைபுனை யாமுன்
ஓடரி நெடுங்கண்மயி லொப்பவளை வந்துற்
றேடுபடு தாரவ னெடுத்தொழிதல் காணா
ஆடர வுயர்த்தவ னராவென வழன்றான். (நந)

3834. வலம்படு - வெற்றி பொருந்திய. அலங்குஒளி - விளங்குகின்ற ஒளியையுடைய. பூணில் - ஆபரணத்தில். அணங்கு - இலக்கணையினுடைய. குவளை - குவளைப்பூ. மன்னவ னொருவனுடை மார்வத்தணிந்த பூணில் அணங்கு கையில் தாங்கும் குவளை தோன்ற. ஏந்திழை - இலக்கணை. நோக்கம் - பார்வை. கலந்தது - தன் மார்பிடத்துச் சேர்ந்தது.

3835. கோடு - தந்தம். களிறனைய ஓர் கொற்றவன்; கொற்றவன் - அரசன். கண்ணி - இலக்கணை. கண்ணியது மணிக் குழையின் கேழ் ஈட்டம் உலவ ; கேழ் - ஒளி. உலவ - அவ்வரசனுடைய தோளில் தோன்ற. நங்கை கண்ணியைச் சூட்டினள் கொல்லோ என்னா தோள் தடத்தை நோக்கும் ; நங்கை - இலக்கணை. கண்ணி - மாலையை. துனைந்து - விரைந்து. நோக்கும் - பார்ப்பான்.

3836. எறுழ்வலி - மிக்கவன்மை. வைக - தங்கியிருக்க. முகத்தைச் சிறிது கோட்டி ; கோட்டி - சாய்த்து. தத்துஅரி - பரந்த செவ்வரிகள். மைத்த - கருநிறம் பொருந்திய. குழலினாளை - இலக்கணையை. சாம்பன் வௌவினன் ; சாம்பன் : கண்ணபிரானுக்கு ஜாம்பவதியிடம் பிறந்தவன்.

3837. படுதல் - ஒலித்தல். கோதை புனையா முன் - மாலையை அணிவதற்கு முன்பு. மயிலொப்பவளை - இலக்கணையை. ஏடு - இதழ். தாரவன் - சாம்பன். எடுத்தொழிதல் - கவர்ந்தெடுத்துப் போதலை. காணா - கண்டு. அரவுயர்த்தவன் - துரியோதனன். அராவென - பாம்பைப்போல.

3838. கார்முகம் வணக்கியெழு கன்னன்முதல் பொன்னந்
தேரினர்க ளோரறுவர் தீயெழ விழிக்கும்
போருழுவை யன்னவர்கள் போகலினி யென்னு
ஏரினிள வேறனைய வேந்தலை வளைத்தார். (ரு௪)

3839. பூம்பிணையன் மார்பினவர் போகலென வெவ்வாய்
வேம்பகழி பற்பல விடுத்தனர் வளைப்ப
வாம்பரிய தேரினன் வளைத்தவரி வில்லன்
சாம்பனமர் மேம்படு தருக்கின னெதிர்ந்தான். (ருரு)

3840. (1) ஈரிரு வடிக்கணையி னலெரி பசும்பொற்
றேர்புணர் பரித்தலைகள் சிந்திவிறல் சாயா
ஓரொரு வடிக்கணையி னுலுவரி முற்றும்
பார்புகழு மோரறுவர் பாகருயிர் மாய்த்தான். (ருசு-1)

3840. (2) தேன்குலவு தார்விடலை தேர்புணரும் வாமான்
நான்கினையும் வென்றிகெழு நால்வர்துணி செய்தார்
வான்புகழ்கொள் பாகனை வளைத்தொருவன் மாய்த்தான்
ஊன்கமழும் வேலொருவ னெஞ்சிலை யறுத்தான். (ருசு-2)

3841. நாற்றிசையு முற்றியழ னச்சிலைய வெள்வேல்
ஆற்றலர்கள் கூற்றமென வாடுசம ராற்று

3838. கார்முகம் - வில்லை. கன்னன் - கர்ணன். பொன்னந்தேரினர்கள் - பொற்றேரை உடையவர்கள். உழுவை - புலி. வீரர்க்குப்புலி உவமை; "இனந்தலைப் புலியோ டொக்குந் தோழர்" (சீவக. 1750.) போகல் - போகாதே. ஏந்தலை - சாம்பனை.

3839. பிணையல் - மாலை. என - என்று கூற. வேம் - வெந்து போகின்ற. பகழி - அம்புகளை. வாம்பரிய - தாவுகின்ற குதிரைகளையுடைய. அமர் மேம்படு தருக்கினன் - போரில் மேம்பட்ட தருக்குடையவனாய்.

3840. (1) ஈரிரு - நான்கு. கணையினல் - அம்புகளால். பரித்தலைகள் - குதிரையின் தலைகள். விறல்சாயா - வெற்றியைச் சாய்த்து. உவரிமுற்றும் பார் - கடலாற் சூழ்ந்த பூமி. அறுவர் - கர்ணன் முதலியவரது.

3840. (2) விடலை - சாம்பனுடைய. வாமான் - குதிரை. வென்றி - வெற்றி. துணிசெய்தார் - வெட்டினர். பாகனை - சாம்பனுடைய தேர்ப்பாகனை. சிலை - சாம்பனுடைய வில்லை. இப்பாடல் ஓர் ஏட்டுப்பிரதியிற் காணப்பட்டது.

3841. முற்றி - சூழ்ந்து. நச்சு - விடம். ஆற்றலர் - வீரர். கூற்றம் - யமன். சமர்ஆற்று - போரைச் செய்து. ஏற்று - எதிர்த்து. உடலும் -

ஏற்றுடலும் வெய்யபுலி யாப்புறுத்தல் போலக்
காற்றின்விசை கொண்டுபொரு காளைதனை யாத்தார். (௩எ)

வேறு.

3842. தீப்பட விழித்தவெஞ் சீற்றக் கட்செவி
மீப்பட வுயரிய வேந்த னுதியோர்
பாப்பணைத் துயின்றவன் பயந்த காளையை
யாப்புறுத் தணிநக ரேகி னாரோ. (௩அ)

3843. வழிந்துதே னுகுதொடை மகதி யாழ்பயில்
செழுந்தவ னத்திறஞ் சென்று கூறலும்
கொழும்பிறைக் கோட்டிளங் குஞ்ச ரங்கள்போல்
எழுந்தனர் யாதவ ரிகலுக் கென்பவே. (௩௯)

3844. சிலைத்தொழி லிளையவர் செருக்கிப் போர்க்கெழல்
விலக்கினன் குமரனை மீட்பல் யானென
அலப்படைக் கொற்றவ னமுத மூற்றெழு
கலைக்கதிர் மதியெனக் கடிதி னேகினான். (௪0)

3845. புகாணி பூ ணுதற் புழைக்கை மால்கரி
நகாணித் தாமுகிழ் நனைகு டைந்துதா
துகவரி மிடற்றளி யுழுமோர் காவிடை
இகலரி யேறனு னிறுத்திட் டானரோ. (௪க.

மாறுபடுகின்ற. புலி யாப்புறுத்தல் - புலியைக் கட்டுதல். விசை - விரைவு. காளைதனை - சாம்பனை.

3842. கட்செவி - பாம்பை. மீப்பட உயரிய - மேலே தோன்றும் படி கொடியாக உயர்த்திய. வேந்தன் - துரியோதனன். பாப்பணைத் துயின்றவன் - ஆதிசேடனாகிய பாம்பணையின்மீது அறிதுயில் செய்த கண்ணபிரான். பயந்த - பெற்ற. காளையை - சாம்பனை. யாப்புறுத்து - கட்டி.

3843. உகு - சொரிகின்ற. தொடை - மாலையையுடைய; தொடை - நரம்பு எனலுமாம். மகதியாழ் பயில்செழுந்தவன் - மகதி யென்னும் வீணையைப் பயில்கின்ற நாரத முனிவன். கூறலும் - யாதவர்க்குச் சொல்லலும். குஞ்சரம் - யானை. யாதவர் இகலுக்கு எழுந்தனர்; இகல் - போர்.

3844. சிலைத் தொழிலையுடைய இளையவர் - யாதவ வீரர். செருக்கி - களித்து. குமரனை - சாம்பனை. மீட்பல் - மீட்டுவருவேன். அலப் படைக் கொற்றவன் - பலராமன். மதியென - சந்திரனைப் போல.

3845. புகர் - புள்ளி. பூண் - ஆபரணம். கரிநகர் - அத்தினாபுரம். அணித்தா - சமீபத்திலுள்ளதாக. நனை - அரும்பு. அளி - வண்டுகள். காவிடை - சோலையிடத்து. அரியேறனான் - பலராமன். இறுத்திட்டான் - தங்கினான்.

3846. ஒருகுழை யொருவனுங் குற்ற வன்றனைக்
குருகுல வேந்தொடு கூற வேண்டுநம்
வரவெனப் படர்ந்தவன் வல்லை கூறலும்
அரவுயர் கொடியினு னவண டைந்தனன். (சஉ)

3847. பிறங்கிண ருழுதிளம் பிள்ளை வண்டிசைத்
துறங்குபூ நறவுவா யுறைப்ப நீண்முடி
இறைஞ்சினன் மன்னவ னிருந்த காலையின்
நறுஞ்சினை மாம்புரை நம்பி கூறுவான். (சங)

3848. குரைகழற் காலினங் குமரன் றன்னெடும்
உருமென முழங்கிய வோடை மால்களிற்
றாசர்பல் லோர்பொர லறங்கொ லன்னது
பொருவினங் கேளெனப் பொறுத்தல் செய்தனம். (சச)

3849. விடுகவேற் சாம்பனை விடுத்தி ரில்லையேல்
உடல்சமம் விளையுமென் றுலங்கொ டோளினீர்
படுமதஞ் செருக்கிய பனைக்கை மால்களிற்
றடல்கெழு குருதிவே லாசு கூறினான். (சரு)

---

3846. ஒருகுழை ஒருவன் - பலராமன். நம்வரவைக் குருகுல வேந்தொடு கூறவேண்டும் என; வேந்து - துரியோதனன். என - என்று கூற. அவன் படர்ந்து - அவ்வழிப் போகச் சென்று. வல்லை - விரைவில். அரவுயர் கொடியினன் - துரியோதனன். அவண் - அச்சோலையிடத்து.

3847. இணர் - பூங்கொத்தை. இளம் பிள்ளையாகிய வண்டு. இசைத்து - ஒலித்து. உறங்குகின்ற பூவிலிருந்து. நறவு - தேன். உறைப்ப - துளிப்ப. மன்னவன் - துரியோதனன். சினையையுடைய மாம். சினை - கிளை. மாம் - மாமரம். புரை - ஒத்த. நம்பி - பலராமன்.

3848. குரைகழல்காலின் - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த கால்களை யுடைய. குமரன் - சாம்பன். உரும் - இடி. அரசர் பல்லோர் - பல அரசர். பொரல் - பொருதல். அறங்கொல் - தருமமோ. அன்னது - அக்குற்றத்தை. பொருவில் நம் கேள் என - ஒப்பில்லாத நம்முடைய உறவினரென்று.

3849. சாம்பனை விடுக. சமம் விளையும் - போருண்டாகும். தோளினீர்; துரியோதனன் முதலியவருக்கு விளி. மதத்தாற் செருக்கிய. அடல் - வன்மை.

(பி. - ம்.) 4. கூறிற்றால்.

3850. என்னது நஞ்சுமி ழெயிற்றுப் பாழிவாய்க்
கொன்னவில் பாந்தளங் கொடியி னுடு
மன்னிய பெருவிறன் மன்னர் யாவரும்
மென்னகை முகிழ்த்தனர் விளம்பன் மேயினர். (சகூ)

3851. கற்றைவெண் கவரியுங் கதிர்நி லாப்பொழி
கொற்றவெண் குடையும்யாங் கொடுப்ப வேத்தியல்
உற்றிடும் யாதவ ரூற்ற நன்றெனச்
சொற்றன ரெழுந்தனர் துனைவி னேகினர். (சஎ)

3852. மறுத்தன ருரைத்தது வல்லே யேகினர்
நெறித்தபூந் தாரினர் நிலைமை நன்றெனு
வெறித்துணர் மாராம்புரை வெள்ளை மேனியான்
கறுத்தனன் செய்யகட் கடைசி வந்தவே. (சஅ)

3853. முறம்புரை தழைசெவி மூரி மாநகர்
கறங்குநீர்க் கங்கையிற் கவிழ்ப்பல் யானெனப்
பிறங்கலை யமுனையைப் பெயர்த்த காவலன்
மறங்கெழு ஞாஞ்சிலின் வாங்கி னனரோ. (சகூ)

3854. விரைசெலன் மிதவையின் மிதந்து வெள்ளிவெண்
டிரைதவழ் கங்கையிற் றிருவ மாநகர்

---

3850. என்னலும் - என்று பலராமன் கூறலும். பாழி - பெருமை. பாந்தளங் கொடியினுனெடும் - துரியோதனனோடும். விறல் - வெற்றி. நகைமுகிழ்த்தனர் - புன்சிரிப்புச் செய்தனர்.

3851. கவரி - சாமரை. கொடுப்ப - கொடுத்தலால். வேத்தியல் உற்றிடும் யாதவர் - வேந்தாகும் தன்மையைப் பொருந்திய இடையரது. ஊற்றம் - வன்மை. சொற்றனர் - கூறினர். துனைவின் - விரைவாக.

3852. பலராமன் உரைத்ததை மறுத்தனராய் ஏகினர். நெறித்த - புறவிதழை ஒடித்த. தாரினர் - குருகுலத்து அரசரது. வெறி - வாசனை. மராம் - மராமரம். மேனியன் - பலராமன். கறுத்தனன் - கோபித்தான்.

3853. முறம்புரை தழைசெவி மூரிமா - முறத்தைப் போன்ற தழைத்த காதையுடைய வலியைக் கொண்ட யானை; "முறஞ்செவி வாரண முன்குள கருந்தி" (கலி. 42 : 2;) "முறஞ்செவி யானை" (புறநா. 339 : 13.) மாநகர் - அத்தினபுரத்தை. என - என்று. அலையையுடைய யமுனையைப் பெயர்த்த காவலன் : பலராமன் ; எழுவாய். மறம் - வீரம். ஞாஞ்சிலின் - கலப்பையால். வாங்கினன் - அத்தினபுரத்தை வளைத்தான்.

(பி. - ம்.) 2. கவிழ்க்கும் யாமெனு.

3854. விரை செலல் மிதவையின் - விரைந்து செல்லுதலையுடைய தெப்பத்தைப் போல. மாநகர் - அத்தினபுரம். நகர் மிதவையைப் போல்

வரவொரு குழையினன் வாங்க வாகைவேல்
அரசர்கண் டஞ்சின ரதிர்ப்புற் றாரோ. (ருo)

3855. பாம்புயர் கொடியினுன் பசிய பச்சிளங்
காம்பெனப் பணைத்ததோட் கன்னி தன்னொடும்
சாம்பனை யுய்த்தனன் றவள மேனியான்
மேம்படு சேவடி வீழ்ந்தி றைஞ்சினன். (ருக)

3856. ஒள்ளொளி நெடுநிலா வுதறு வாலுளைப்
புள்ளியற் பொன்செய்தார்ப் புரவி யீட்டமும்
பிள்ளைவண் டுண்மதம் பில்கு மால்கரி
வெள்ளமுஞ் சிறப்பொடு வெறுப்ப நல்கினன். (ருஉ)

3857. முருகுலாங் கொம்பொடு முருக னன்னசெங்
குருதிவேற் காளையைக் கொண்டு மன்னிய
திருநகர்க் கேகினன் செக்கர் மாமணி
ஒருகுழை யுலாவரு முலங்கொ டோளினன். (ருங)

3858. புரவல வின்னுநும் பொன்னஞ் சூட்டெயில்
திருநகர்த் தென்றலைச் சேணி லோங்குறு
விரிதிரைக் கங்கையில் வீழ்தல் போன்றுமற்
றொருகுழை யவன்வலி யுணர்த்து கின்றதால். (ருச)

---

கங்கையில் மிதந்து வரும்படி. ஒருகுழையினன் - பலராமன். வாங்க - கலப்பையை வளைக்க. அதிர்ப்பு - நடுக்கம்.

3855. பாம்புயர் கொடியினுன் - துரியோதனன். காம்பு - மூங்கில். கன்னி - இலக்கணை. உய்த்தனன் - கொடுத்தனன். தவளமேனியான் - பலராமனுடைய.

3856. நிலாப்போன்ற உதறுகின்ற உளை. வாலுளை - வெண்மையான பிடரி மயிர். புள் இயல் - பறவையைப் போன்று நிலம்தீண்டாது இயங்குதலை யுடைய. தார் - கிண்கிணி மாலையை யணிந்த. பிள்ளை வண்டு - இளைய வண்டு. கரிவெள்ளமும்; கரி - யானை. வெறுப்ப - மிக.

3857. முருகு - வாசனை. கொம்பு - இலக்கணை. காளையை - சாம்பனை. நகர்க்கு - துவாரகைக்கு. தோளினன் - பலராமன்.

3858. புரவல: பரிக்ஷித்தை நோக்கிய விளி. பொற் சூட்டையுடைய எயிலைக் கொண்ட நகர்: அத்தினுபுரம். தென்றலை - தென்பகுதியினிடம். சேணில் - தூரத்தில். தென்றலை கங்கையில் வீழ்தல் போன்று. ஒருகுழையவன் வலி - பலராமனுடைய வன்மையை.



# 40. பதினாறாயிரந் திருவிளையாட்டுரை அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

3859. தண்ணந் தாமரைத் தலைவிவீற் றிருந்ததா ரகலத்
தண்ண லெண்ணிரண் டாயிர மரிவைய ருவப்பக்
கண்ணு றுந்திறங் காண்குமென் றமிழ்தினிற் கனியும்
பண்ண மைந்ததீம் பாடல்யாழ்ப் பண்ணவன் படர்ந்தான் (க)

3860. வளர்க்குங் கற்பகப் படப்பைவாய் வழிநறா மாந்தி
களிக்கும் வண்டுபூங் கற்பகக் கொடியென மறுகத்
தளிர்க்கு நல்லெழி றயங்கிழை யாரொடெவ் வுலகும்
அளிக்குங் கார்முகி லமர்ந்துழி யடைந்தன னன்றே. (உ)

3861. முழுது ணர்ந்தமா முனிவரன் வருதலு மெழுந்து
கொழுதி வண்டறை கொழுந்தொடை யமரர்கோ டீரம்
உழுத பூங்கழற் காலினா னெண்டொடிக் கரத்தால்
தொழுது வந்தவா றென்கொலென் றின்னுரை சொற்றான்.(ங)

3862. மறைவ ழுத்துநின் மலரடி வந்தடைந் தல்லால்
பிறவி மாக்கட லெங்ஙனங் கடப்பது பிறவாச்

---

3859, தாமரைத்தலைவி - இலக்குமி. அகலத்து - மார்பையுடைய. அண்ணல் - கண்ணபிரான். எண்ணிரண்டாயிரம் அரிவையர் - பதினாறாயிரம் மகளிர். கண்ணுறும் - பார்க்கின்ற. காண்கும் - பார்ப்போம். அமிழ்தினிற் கனியும்பண் - அமுதினைக் காட்டிலும் இனிமை முற்றுகின்ற இராகம். பண்ணவன் - நாரத முனிவன்.

3860. படப்பைவாய் - சோலையிடத்து. நறா - தேனை. கற்பகக் கொடி - காமவல்லிக் கொடி. மறுக - சுழலும்படி. தளிர்க்கும் - தழைக்கின்ற. இழையார் - கோவியர். அளிக்கும் - காக்கின்ற. கார்முகில் - கண்ணபிரான்.

3861. முழுது - முற்றும். முனிவரன் - நாரதன். கொழுதி - கிண்டி. அறைதல் - ஒலித்தல். தொடை - மாலை. அமரர் கோடீரம் - தேவருடைய கிரீடங்கள். காலினான் - கண்ணபிரான். கரத்தால்தொழுது. என்கொல் - என்ன காரணம்.

3862. மறை - வேதம். பிறவியாகிய கடலை. பிறவாத சிறிய குழவியாய்; குழவி - குழந்தை. ஆலிலைச் சேக்கை இறை கொள் - ஆலிலை

சிறிய பச்சிளங் குழவியா யாலிலைச் சேக்கை
இறைகொண் முத்தொழி லிறைவவென் றேத்தின னகன்றான். (௪)

3863. மீட்டு மற்றொரு மெல்லியல் கடிமனை யிறுப்பச்
சூட்ட ராவணைத் துயின்றவ னறிந்திலான் போன்று
நாட்ட மின்னருள் பொழிதர நடந்ததெப் பொழுதிங்
கீட்டு மாதவ வெனவுரை யாடல்கேட் டிகந்தான். (௫)

3864. விரிந்த வெண்டிரை வேலிமண் பொதிந்ததாள் விமலன்
திருந்து மில்லறச் செய்வினை திறப்படக் காட்டி
அருந்த வத்தினோ னடைதொறு மடைதொறு மாங்காங்
கிருந்த வண்ணமற் றெங்ஙனம் வகுத்தியா மிசைக்கேம். (௬)

3865. கஞ்ச நாண்மலர்க் கடவுண்முன் கடவுணீ ராட்டச்
செஞ்சு டர்ப்பொலஞ் சேவடி சேயுபர் விசும்பின்
நெஞ்சு போழ்பட நீட்டிய நேமியங் தடக்கை
அஞ்ச னப்புய லொருத்திசே யிதழமு தருந்தும். (௭)

3866. கல்வி னுல்வகுத் தன்னதோ ளரக்கர்போர் கடந்து
வில்லி னுலொரு மெய்த்தவன் வேள்விகாத் தளித்தோன்

யாகிய படுக்கையில் தங்குதல் கொண்ட. இறைவ : கண்ணபிரானுக்கு விளி.

3863. மீட்டும் - மீண்டும். மற்றொரு மெல்லியலுடைய மனையில் இறுப்ப. மெல்லியல் - இடைச்சி. இறுப்ப - நாரதன் போய்த்தங்க. அராவணைத் துயின்றவன்-கண்ணபிரான். நாட்டம் - கண்கள். இப்பொழுது இங்கு நடந்தது. ஈட்டுகின்ற மாதவ! நாரதனுக்கு விளி. என உரையாடல் கேட்டு - என்று கண்ணபிரான் மொழிவதைக் கேட்டு. இகந்தான் - அம் மனையை விட்டு அகன்றான்.

3864. மண்பொதிந்த தாள் விமலன் - பூமியை அளந்ததனால் அடக்கிய பாதத்தையுடைய கண்ணபிரான். திருந்து - மாறுபாடில்லாத. திறப்பட - கூறுபட. அருந்தவத்தினோன் - நாரதன். ஆங்காங்கு - அவ்வவ்விடத்தே. எங்ஙனம் - எவ்வாறு? இசைக்கேம் - சொல்லுவேம்.

3865. கஞ்சம் - தாமரை. மலர்க்கடவுள் - பிரமன். முன் - வாமனாவதாரத்தில். கடவுள் நீர் - கங்கை நீரை. சேவடியை விசும்பின் நெஞ்சு போழ் படநீட்டிய அஞ்சனப்புயல்; நேமியந் தடக்கையையுடைய புயல்; கண்ணபிரான். போழ்பட - பிளவுபட. நேமி - சக்கரம். ஒருத்தி - ஆயர் மங்கை யொருத்தியின்.

3866. கல் - மலை. அரக்கர் - இராவணன் முதலியவர். கடந்து - வென்று. ஒருமெய்த்தவன் - விசுவாமித்திரனுடைய. வேள்வி - யாகம். அளித்தோன் - கண்ணபிரான். புரை - ஒத்த. ஒருத்தியின் இல்லில்;

சொல்லி ஞற்பசுங் கிளிபுரை சுடரிழை யொருத்தி
இல்லி ஞன்மறை யேத்திய முத்தழல் வளர்க்கும். (அ)

3867. தேன்வ ழுங்கிய செழுந்துணர் முல்லையந் தண்பூங்
கான்வ ழுங்கிய கணநிரை மேய்த்தகார் வண்ணன்
வான்வ ழுங்கிய மதிநுத லொருத்திதன் மனைவாய்
ஆன்வ ழுங்கும்வீழ்ந் தருமறை யந்தணர் முகப்ப. (கூ)

3868. தமா வெண்டிரைத் தடங்கடல் வரையினாற் கலக்கி
அமரர் கூட்டுண வமுதுணு வளித்தரு ளிறைவன்
குமரி வண்டுணக் குவிமுகி ழுடைந்துதண் டேறல்
உமிழ்ம லர்க்குழ லொருத்திதன் மனைவிருந் தூட்டும். (கo)

3869. ஆட்டு வெண்டிரைக் கருங்கட லவனிமா தணையச்
சூட்டு செம்மலர்த் தொடைபுனை மணிமுடி துறந்து
காட்டி னேகெனக் கருங்குயிற் கிளவியன் றுரைத்தல்
கேட்ட மாயவ னொருத்தியொ டிருந்தறங் கேட்கும். (கக)

3870. துணா கற்பகஞ் சுரிமுக முழக்கிவிண் டுளக்கிக்
கொணர்க ரும்புயல் குழன்றுநெய்த் திருண்டுவார்ந் தொழுகும்

---

இல் - மனை. நான்மறை - நால்வேதம். முத்தழல் - மூன்று தீ; அவை காருக பத்தியம், ஆகவநீயம், தக்ஷிணாக்கினி என்பன.

3867. துணர் - கொத்து. கான்வழங்கிய கண நிரை - காட்டில் இயங்குகின்ற பசுக்கூட்டங்களை. கார்வண்ணன் - கண்ணபிரான். வான் வழங்கிய: மதிக்கு அடை; மதிபோலும் நுதல். மனைவாய் - வீட்டிடத்து. அந்தணர் முகப்ப ஆன்வீழ்ந்து வழங்கும்; ஆன் - பசுக்களை. வீழ்ந்து - விரும்பி. வழங்கும் - கொடுக்கும்.

3868. தமரம் - ஒலி. கடலை வரையினாற் கலக்கி; வரை - மந்தாமலை. கூட்டுண - கொள்ளைகொண்டுண்ணும்படி. அமுதுணு - அமுதமாகிய உணவை. இறைவன் - கண்ணபிரான். குமரி வண்டு - இளைய வண்டு. முகிழ் - அரும்பு. தேறல் - தேனை. ஒருத்தி தன்மனை - ஒரு கோபியின் மனையில். விருந்து ஊட்டும் - விருந்தினரை உண்பிப்பான்.

3869. அவனிமாது அணைய - பூமியாகிய பெண்ணைச் சேர்தற்கு. சூட்டுகின்ற முடியைத்துறந்து. ஏகு என - போவாயாக என்று. குயிற்கிளவி: கைகேயி. உரைத்தலைக் கேட்ட மாயவன்; என்றது இராமாவதார நிகழ்ச்சியை. மாயவன் - கண்ணபிரான். அறம் - தரும நூல்.

3870. துணர்க்கற்பகம் - பூங்கொத்துக்களையுடைய கற்பகமாத்தை. சுரிமுகம் - சங்கத்தை. விண்துளக்கி - சுவர்க்கத்தை நடுங்கச்செய்து. கொணர்ந்த கரும்புயல்: கண்ணபிரான். குழன்று - சுருண்டு. வணர் -

வணரி ருங்குழல் வானுத லொருத்திதன் மனைவாய்
இணர்ம ணங்கம ழிளமாச் சோலைமற் றிழைக்கும். (கஉ)

3871. விண்ணம் போழ்பட விரைமலர்ச் சேவடி நீட்டிக்
கண்ண கன்புனல் கண்ணுதல் சடைக்கருள் கண்ணன்
வண்ண வார்குழ லொருத்திதன் வளமனைப் புறத்துத்
தண்ணந் தாமரை தளையவிழ் மணித்தடம் வகுக்கும். (கங)

3872. மாமன் விட்டதோர் மழைமதக் கருங்களி றட்ட
தாம மார்பினன் றளையவிழ் தாமமோ டகிற்பூந்
தூமஞ் சூடிய சுரிகுழ லொருத்திதன் மனைவாய்
நாம வெஞ்சினை நனைகவுட் புழைக்கைமா நடத்தும். (கச)

3873. பூத்த பொங்கர்பொங் கெரியுணப் பொருசிலை வாங்கும்
பார்த்தன் றேர்விடு பாகன்வெண் பனிநிலா முத்தம்
கோத்தெ னத்திகழ் கூரெயிற் றொருத்திமா நகரின்
றேத்து மின்பொழி செழுமணி குயின்றதே ரூரும். (கரு)

3874. பரிய ருப்புணர் படுகொலை யவுணனைப் படுத்த
கரிய வன்கருங் களிக்கய லிரண்டெதிர் கலந்து
பொருவ போன்றகட் பொற்றொடி யொருத்திதன் மனைவாய்
உருவ வானில வொழுகுவா லுளைப்பரி யுகைக்கும். (கசு)

---

வளர்ந்த. மனைவாய் - மனையிடத்து. இணர் - பூங்கொத்தின். இழைக்கும் - இயற்றுவான்.

3871. விண்ணம் - விண் ; அம் : சாரியை. போழ்பட - பிளவுபட. கண் அகல் - இடமகன்ற. புனல் - கங்கையை. கண்ணுதல் - சிவபெருமான். வண்ணம் - நிறம். தாமரைத் தடத்தை வகுக்கும் ; வகுக்கும் - செய்வான்.

3872. மாமன் - கஞ்சன். களிறு - குவலயாபீடத்தை. அட்ட - கொன்ற. தாமம் - ஒளி. மார்பினன் - கண்ணபிரான். தாமம் - மாலை. தூமம் - புகை. அகிற்புகையை வாசனைக்காகக் கூந்தலில் ஊட்டுவர். நாம - அச்சந்தரத்தக்க. மா - யானையை.

3873. பொங்கர் பொங்கு எரியுண - காண்டவ வனம் என்னும் சோலையை மிக்க தீ உண்ணும்படி. வாங்கும் - வளைக்கின்ற. பார்த்தன் - அருச்சுனன். பாகன் - கண்ணபிரான். நிலா முத்தம் - ஒளியையுடைய முத்துக்களை. நகரின் தேத்து - நகரின் ஓரிடத்து. ஒருத்தியுடன் தேரூரும்.

3874. பரியுருப்புணர் - குதிரையினுருவங்கொண்ட. அவுணனை - கேசி என்னும் அசுரனை. படுத்த - அழித்த. கரியவன் - கண்ணபிரான். கயல் இரண்டு கலந்து பொருவ போன்ற கண்ணையுடைய ஒருத்தியது. உருவம் - அழகு. நிலவு ஒழுகுவால் உளைப்பரி - நிலவினைப் போல் ஒளி ஒழுகுகின்ற வெண்மையான பிடரி மயிரையுடைய குதிரை ; 3856. - உகைக்கும் - செலுத்துவான்.

3875. கொடிய மூதெயில் குறுநகை நிலவினுன் முருக்கும்
கடவுள் வார்சிலே யிறுத்தவன் கருங்கயல் வெருட்டித்
தடநெ கிழ்ந்தசெந் தாமரை மலரின்மே னடந்த
வடிநெ டுங்கணோர் கொடிமனே வரிசிலே வடிக்கும். (கஎ)

3876. தெழித்து நாக்கடை கவ்வியுஞ் செந்தழல் சிதற
விழித்து நூக்கியு மூக்கியும் வெருவரு வெம்போர்
இழைத்த மல்லர்தம் மெறுழ்வலி கடந்தபோ ரேறோர்
மழைத்த டங்கணுள் வளமனே மற்றொழின் வகுக்கும். (கஅ)

3877. பொழிந்த செஞ்சுடர்ப் பொன்னக ருறைகுநர் நெஞ்சம்
விழைந்து நாடிய விழுப்பொரு ணல்கினோன் விதுப்பூங்
கொழுந்தி னல்லெழில் கவற்றிய குறுநுத லொருத்தி
செழும்பொ னில்லிடைத் திருத்தகச் செய்பொரு டிருத்தும். (கக)

3878. திரைசெய் தெண்கட லெழுமிளம் பருதியிற் றிகழும்
விரைசெய் தார்முடி விண்ணவர் பரவவீற் றிருப்போன்
வரைசெய் மாமுலே யொருத்திதன் வளமனே வளாகத்
தரைசர் வந்துவந் தடிதொழ வாசுவீற் றிருக்கும். (உ0)

---

3875. எயில் - மதிலே. நகை - சிரிப்பு. முருக்கும் - அழித்த. கடவுள் - சிவபெருமானுடைய. சிலே - திரியம்பகம் என்ற வில்லே. இறுத்தவன் - இராமாவதாரத்தில் ஒடித்த கண்ணபிரான். கயல் வெருட்டி - கயல் மீனே வெருளச்செய்து; என்றது கண்களின் தன்மையை. தடம் நெகிழ்ந்த - தடாகத்தில மலர்ந்த. தாமரைமலர் என்றது கோபியின் முகத்தை. நடந்த வென்றது கண்களின் செலவை. கொடி மனே - கொடிபோன்ற ஆயர் மங்கையின் மனேயிடத்து. சிலேவடிக்கும் - வில்வித்தையைப் பயில்வான்.

(பி - ம்.) 1. நெடிய மூதெயி னீள்பொலம் பொருப்பினுன் முருக்கு.

3876. தெழித்து - முழங்கி. சிதற - சிதறும்படி. நூக்கியும் - தள்ளியும். ஊக்கியும் - செலுத்தியும். வெருவரு - அச்சம் வருகின்ற. போரை இழைத்த மல்லர்தம் - சாணூரன் முஷ்டிகன் என்ற மல்லர்களுடைய. போரேறு - கண்ணபிரான். தடங்கணுள் - கோபியினுடைய. மற்றொழில் - மல்யுத்தம்.

3877. பொன்னகர் - சுவர்க்கத்தில். விழைந்து - விரும்பி. நல்கினோன் - கண்ணபிரான். விதுப்பூங் கொழுந்தின் - பிறைச் சந்திரனது. எழில் கவற்றிய - அழகை வருந்தச்செய்த. திருதக - அழகு சிறக்க. திருத்தும் - அழகுசெய்வான்.

3878. இளம் பருதியின் - பால சூரியனைப்போல; கிரீடத்திற்கு உவமை. பரவ - புகழ. வீற்றிருப்போன் - கண்ணபிரான். வரைசெய் - மலேயை ஒத்த. வளாகத்து - பரப்பில். அரைசர் - அரசர்; போலி.

3879. விரியும் போதுறை வேதனும் வேதமு மானும்
பரியு நெஞ்சொடு பாடியு நாடியுந் தெரிதற்
கரிய ணாகிய வண்ணலோ ரரிவைதன் மனைவாய்த்
தெரியுஞ் சொற்றிற னமைச்சொடு செய்வினை தேரும். (உக)

3880. காட்டி னண்ணுபு கண்கவர் காஞ்சன வுருக்கொள்
மோட்டு வெந்திறன் முழுவலி மானுயிர் முடியக்
கோட்டு வார்சிலைக் குரிசிலோர் கோற்றொடி மனையின்
வேட்ட மாடுவா னெழுமிகல் வேற்படை மிடைய. (உஉ)

3881. எழுபொ ருப்பென வெழுதரு மெழுவிடை தழுவித்
தழுமுற் றெய்திடத் தடமுலை யொருத்தியை மணந்த
முழுமு தற்பொருண் முருக்கித ழொருத்திதன் மனைவாய்
மழலை மென்மொழி மக்கடம் மணவினை மண்ணும். (உங)

3882. (1) விரிந்த தாமரைப் பொகுட்டுறை வேதியன் முதலாத்
தெரிந்த நான்மறை யந்தணர் தெள்ளிதின் வேட்டுச்
சொரிந்த நல்லவி துய்ப்பவன் சுருண்டிறை நெறித்துப்
புரிந்த வார்குழ லொருத்திதன் மனைமகம் புரியும். (உச-1)

---

3879. வேதன் - பிரமன். ஆனும் - சிவபெருமானும். பரியும் - இரங்குகின்ற. நாடியும் - ஆராய்ந்தும். அண்ணல் - கண்ணபிரான். தெரியுஞ் சொற்றிறன் அமைச்சொடு - ஆராய்கின்ற சொல்வகையையுடைய மந்திரிமாரோடு. செய்வினை தேரும் - செய்யுங் காரியங்களை ஆராய்வான்.

3880. காட்டில் நண்ணுபு - இராமாவதாரத்தே வனத்திடத்தை அடைந்து. காஞ்சனம் - பொன். மோடு - பெருமை. மான் - மாரீசனாகிய மானின். கோட்டு வார்சிலைக் குருசில் - வளைத்த நீண்ட வில்லையுடைய கண்ணபிரான். வேட்டம் - வேட்டை. வேற்படை மிடைய எழும்; மிடைய - நெருங்க. எழும் - எழுவான்.

3881. எழுபொருப்பென - ஏழுமலையைப் போல. விடை - இடபம். தழுமுற்று எய்திட - முற்றுந் தழுவப்பெற்றிட; "தழுமுற்றும் வாராத் திடாமங்கள்" (சீவக. 1970.) ஒருத்தியை - சத்தியை என்பவளை. முழுமுதற் பொருள் - கண்ணபிரான். முருக்கு இதழ் - முள்ளு முருங்கைப் பூவினைப் போன்ற இதழையுடைய. மக்கள்தம் - குழந்தைகளுடைய. மணவினை - கலியாண காரியம்.

3882. (1) வேதியன் - பிரமன். தெரிந்த - ஆராய்ந்த. தெள்ளிதின் - தெளிவாக. வேட்டு - விரும்பி. அவி - அவிர்ப்பாகத்தை. துய்ப்பவன் - உண்பவனான கண்ணபிரான். இறை நெறித்து - சிறிது நெளிந்து. புரிந்த - முறுக்குண்ட. மனையில் மகம்புரியும் ; மகம் - யாகம்.

3882. (2) வெறித்த வெண்ணிலா மணிசுழித் தெறிதிரை யமுனைத்
துறைத்த லைப்படு துத்திவா ளரவினின் முகிலு
நறைத்து ழாய்முகி னறுமலர்ச் சோலைய தடத்தோர்
நெறித்த பூங்குழன் மாதொடு நீர்விளை யாடும். (உச-2)

3883. காய்ந்த வெஞ்சினக் கறையணற் பிறையெயிற் றகல்வாய்
பாந்தள் வல்விடம் பாய்ந்தநீர்த் தடத்துவீழ்ந் தாடும்
ஏந்த லேந்திள வெழின்முலை யொருத்தியோ டினிது
சாந்த ளாவிய தண்புனற் றடம்படிந் தாடும். (உரு)

3884 சுரும்பு சூழ்பசுந் தோட்டிணர்க் கற்பகம் பிடுங்கும்
பெருங்கை வேழமோர் பிடிபுணர்ந் தாடுதல் கடுப்பக்
குரும்பை மென்முலைக் கோற்றொடி யொருத்தியோ டந்தண்
அரும்பு வாயவி ழிளமரக் காவகத் தாடும். (உசு)

3885 மழலை வண்டுண மடல்வயி றுடைந்துதேத் திவலைப்
பொழிக ருந்துழாய்ப் புயல்கதிர் மின்னொடு புணர்ந்தாங்
கொழுகு நுண்ணிடை மடவா லொருத்தியோ டுருத்த
குழவி வெண்பிறை யிடறுசெய் குன்றினிற் குலவும். (உஎ)

---

3882. (2) வெறித்த - மயங்கப்பண்ணிய; ஒழுங்குபட்ட எனலுமாம். நிலாமணி - முத்துக்களை. துத்தி - பொறி. அரவில் - காளியன் மீது. முகில் - கண்ணபிரான். சோலையை யுடைய தடத்து; தடம் - தடாகம். நெறித்த - நெளிந்த. இப்பாடல் ஓரேட்டுப் பிரதியிற் காணப் படுகின்றது.

3883. கறை யணல் - விஷத்தைக் கழுத்திலுடைய. பாந்தள் - காளியன். தடத்து - யமுனையிடத்து. ஏந்தல் - கண்ணபிரான். சாந்து - குங்குமச்சாந்து. அளாவிய - கலந்த. தடம் - தடாகத்தே.

3884. சுரும்பு - வண்டு. தோடு - இதழ். வேழம் - ஆண்யானை. பிடி - பெண்யானை. கடுப்ப - ஒப்ப. அம்தண் அரும்பு - அழகிய குளிர்ச்சி பொருந்திய அரும்பு. இளமரக்காவகத்து - சோலை யிடத்து. ஆடும் - விளையாடுவான்.

3885. மழலைச் சொல்லையுடைய வண்டு; இளைய வண்டு எனலுமாம். மடல் - இதழ். தேத்திவலை - தேன்துளியை. புயல் - கண்ணபிரான். கதிர் - ஒளியை யுடைய. மின்னொடு - மின்னலொடு. புணர்ந்தாங்கு - கலந்தாற்போல. மடவரல் - ஆயர்மங்கை. உருத்த - தோற்றிய. பிறை - பிறைச்சந்திரன். குலவும் - விளையாடுவான்.

3886. தாள தாமரைத் தாளலாற் கங்கையந் தரங்கம்
தோளி னுந்தவழ்ந் தெனநிலாத் தூற்றுவெண் கவரி
வாளி ரண்டென மதர்விழி யொருத்திநின் றிரட்டக்
காள மேகமன் னுன்மலர் மெல்லணை கவினும். (உஅ)

3887. கருப்பு வெஞ்சிலைக் காமவேள் கதிர்முடி வணக்கிப்
பொருப்புஞ் செய்யபொற் பொருப்பொடு பொருதமால் யானை
மருப்பு மஞ்சுற மாணெழிற் சூதொடு மலைந்த
அருப்பு வெம்முலை யொருத்தியோ டமர்ந்துசூ தாடும். (உகூ)

3888. மழலை கேட்குந ரின்றியே மாகதக் கொழுந்தின்
அழகெ றித்தபைங் குழவியா யாலிலைக் கிடந்தோன்
எழிலி ளங்கிளி போலுமோ ரேழையீன் றெடுத்த
குழவி யின்னமு துயிர்த்ததீங் குதலைகேட் டுவக்கும். (௩0)

3889. படுதி ரைக்கடற் படிந்தெழு பசும்புயற் கொழுந்து
வடவ ரைத்தலை மணத்தல்போன் மடவா லொருத்தி
நெடுநி லாப்பொழி நித்திலப் பூண்சுமந் தேந்திச்
சுடுபொன் பூத்தவஞ் சுணங்கவி ரிளமுலை தோயும். (௩க)

---

3886. தாள - தாளையுடைய. தாமரைத் தாளலால் - தாமரை போன்ற பாதத்திலல்லாமல். தரங்கம் - அலை. கவரி - தாமரை. வாள் இரண்டெனும்படி மதர்த்த விழியையுடைய ஒருத்தி. இரட்ட - வீச. கவரிக்குக் கங்கையினலை உவமை. காளமேக மன்னன் - கண்ணபிரான். அணை - படுக்கையில். கவினும் - விளங்குவான்.

3887. கருப்பு வெஞ்சிலை - கரும்பாகிய கொடிய வில். முடி - கிரீடத்தை. வணக்கி - வணங்கச் செய்து. பொருப்பு - மலை. மருப்பு - தந்தம். சூது - சூதாடு கருவி. அரும்பு போன்ற வெம்முலை; முடியை வணக்கிப் பொருப்பும் மருப்பும் அஞ்சுறும்படி சூதொடு மலைந்த முலை.

3888. மழலை - மழலைச் சொற்களை. கேட்குநர் இன்றியே - கேட்பாரில்லாமலே. எறித்த - வீசிய. கிடந்தோன் - கண்ணபிரான். ஏழை - கோபிப் பெண். குழவியின் குதலையை; குதலை - மழலைச் சொல்.

3889. புயற்கொழுந்து - கண்ணபிரான். வடவரைத்தலை - மேருமலையினுச்சியில். மணத்தல் - கலத்தல். ஒருத்தி - ஆயர்மங்கையின். நித்திலப்பூண் - முத்துமாலை. பொன் பூத்த - பொன்னைப்போற் றோன்றிய. சுணங்கு அவிர் - தேமல் விளங்குகின்ற. கண்ணபிரானுக்குப் புயற்கொழுந்தும் ஆயர் மங்கையின் நகிலுக்கு வடவரையும் உவமைகள்,

3890. விரிந்த பைத்தலை வெள்ளிவெம் பாப்பணைத் துயின்ற
கருந்து ழாய்முகில் கார்நிறக் கட்செவிச் சேக்கை
பொருந்தி யாங்கொரு புரிகுழல் புணர்முலைக் கோட்டின்
நரந்த மூழ்கிய நறுமலர்ப் பிணையன்மேற் றுயிலும். (௩உ)

3891. மாயு மக்களூன் மலிபொடி யென்பணி வனைந்து
தூய்மை நீங்குமெண் டோளவன் றாய்மையெய் திடுவான்
சேய தன்னடித் தெய்வநீர் சென்னிமீத் தருநம்
மாய னேர்மட வான்மனை மஞ்சன மாடும். (௩௩)

3892. நிரைத்த தண்சுடர் நித்தில நேரும்வாண் முறுவல்
ஒருத்தி பொன்னுரை யொத்தநுண் டிதலைவெம் முலைமேல்
வரித்த கப்புர மன்றலங் கலவையிற் றோய்ந்து
விரித்த திங்கதிர் வெண்மதிக் கடவுளின் விளங்கும். (௩௪)

3893. மொழியுஞ் சாயலு முழுக்களி விளைக்குமா ரமுதிற்
றழையு மற்றொரு தளிரிய றடமுலை முற்றத்
தெழுது குங்குமக் கொழுங்களி யளாயெரி பசும்பொன்
ஒழுகு குன்றுசேர் குழவியம் பரிதிபோன் றொளிரும் (௩௫)

---

3890. பைத்தலை - படத்தையுடைய தலை. வெள்ளிவெம் பாப்பணை - வெண்மையான நிறமுள்ள வெவ்விய ஆதிசேடனாகிய பாம்பணையின் மீது. முகில்: கண்ணபிரான். கட்செவிச் சேக்கை பொருந்தி யாங்கு - பாம்பணையின் மீது பொருந்தி யிருந்தாற்போல. புரி குழல் - ஆயர் மங்கையின். கோட்டில் - சிகரத்தில். பிணையல் - மாலை.

3891. மாயும் மக்கள் ஊன் - இறந்துபோகும் மனிதரது மாமிசத்தையும். பொடி - திருநீற்றையும். என்பணி - என்பாகிய ஆபரணத்தையும். வனைந்து - அணிந்து. எண்தோளவன் - சிவபெருமான். எய்திடுவான் - பெறும் பொருட்டு. தன் என்றது திருமாலை. தெய்வ நீர் - கங்கை நீரை. சென்னிமீ - சிவனுடைய தலையின் மீது. மாயன் - கண்ணபிரான்.

மடவால் மனை - ஆயர் மங்கையின் வீட்டில். மஞ்சனம் - நீர்.

3892. நிரைத்த - வரிசையான. நித்திலம் நேரும் - முத்துக்களை ஒத்த. முறுவலை யுடைய ஒருத்தி - ஆயர் மங்கையது. பொன்உரை ஒத்த - பொன் உரைத்ததைப் போன்ற. வரித்த - எழுதிய. கப்புர மன்றலங் கலவையில் - கற்பூர வாசனையை யுடைய கலவைச்சாந்தில். தீங்கதிர் - இனிய கிரணத்தை யுடைய. மதிக்கடவுளின் - சந்திரனைப்போல.

3893. மொழியும், சாயலும் அமுதினைப்போல் தழைக்கின்ற தளரிய லுடைய; சாயல் - மென்மை. முலையாகிய முற்றத்தில். களி - சேறு. அளாய் - கலந்து. பொன் ஒழுகுகுன்று - மேருமலை. குழவியம் பருதி - இளஞ் சூரியன்; கண்ணபிரானுக்கு உவமை.

3894. பாடல் சால்பசுங் கிளிபுரை யொருமடப் பாவை
மோடு கொண்டெழு முதிரெழின் முகிழ்முலைக் கோடு
சாட விண்டதா ருகுத்ததா தளைந்துவெஞ் சுண்ணம்
ஆடு மஞ்சனக் களிறுபோ லணிபெற விளங்கும். (௩௬)

3895. பணங்கொள் பாந்தளின் பஃறலைக் கிடந்தபார் வியப்பக்
கொணர்ந்த கற்பகக் கொழுந்தளிர்ப் பசுங்கொடி நோக்கி
இணைந்து விம்மிய விளமுலை யொருத்திமென் றோளின்
மணங்கொண் மான்மதச் சாந்தினால் வல்லிநின் றெழுதும்.(௩௭)

3896. பாட்டு வண்டிமிர் பனிமலர்ப் பசுந்தொடை பரிய
மோட்டு வெண்டிரை முத்துரிஞ் சிளமுலை முயங்கி
ஊட்டி யன்னவொண் டளிர்புரைந் தாலெனச் செங்கை
கூட்டி மற்றொரு கோற்றொடி கருங்குழன் முடிக்கும். (௩௮)

3897. எழில்செய் நல்லணி யேந்துபு நிற்பதை யல்லால்
தழையு மெய்யெனுந் தயங்கிழை புனைவது கடுப்ப
முழுநி லாப்பொழி முத்துக முயங்கிமற் றொருத்திக்
கழகு கண்படு மவிரிழை யங்கையா லணியும். (௩௯)

---

3894. புரை - ஒத்த. பாவை - ஆயர் மங்கை. மோடு - பெருமை. முதிர் எழில் - முற்றிய அழகுடைய. முகிழ் - அரும்பிய. சாட - மோத. தார் - மாலை. அளைந்து - கலந்து. அஞ்சனக் களிறு - மை பூசிய யானை.

3895. பணம் - படம். பாந்தளின் - பாம்பினது. பார் - பூமி. கற்பகத்தின் கொடியை நோக்கி. இணைந்து - தம்மிற் கூடி. விம்மிய - பருத்த. மான்மதம் - கஸ்தூரி. வல்லி - காமவல்லிக் கொடியினுரு வத்லைத. ஒருத்தியின் தோளில் வல்லியை எழுதுவான்.

3896. இமிர்தல் - ஒலித்தல். தொடை பரிய - மாலை அறும்படி, முத்து உரிஞ்சு - முத்துமாலை உராய்கின்ற. முயங்கி - கலந்து. ஊட்டி யன்ன - சிவப்பூட்டினாற் போன்ற. தளிர் புரைந்தாலென - தளிரை ஒத்தாற் போல; செங்கைக்கு உவமை. கையால் கோற்றொடியது குழலைக் கூட்டி முடிக்கும்; கூட்டி - ஒன்று சேர்த்து.

3897, ஏந்துபு - ஏந்தி. நிற்பதை யல்லால் - நிற்பதல்லாமல். தழையும் - ஒளிதழைக்கின்ற. மெய் - தன் உடம்பு. இழைபுனைவது கடுப்ப - ஆபரணத்தை அணிவதையொப்ப. முத்து உக - முத்துக்கள் சிந்தும்படி. ஒருத்திக்கு. அழகுகண்படும் அவிர் இழை - அழகு தங்குகின்ற விளங்கும் ஆபரணத்தை.

3898. இயலி னிற்கழை யேழிசை யமுதுக விசைத்த
மயிலெ ருத்துறழ் மாயனேர் மயிலியற் பேதை
கயிலெ ருத்திடங் கோட்டினள் கனியினிற் கனியப்
பயிலும் பண்ணமை பஃறொடை யாழிசை பருகும். (சO)

3899. இன்ன தன்மைய னெண்ணிரண் டாயிர முருக்கொண்
டன்ன மென்னடை யரிவையர் மனைதொறுந் தோன்ற
மன்னு நின்பெரு மாயையா ரறிகுவ ரென்னு
நன்னர் யாழ்முனி நன்றுவந் தேத்தின னடந்தான். (சக)

---

3898. இயலினில் - இலக்கணத்துடன். கழையால் ஏழிசையாகிய அமுது உகும்படி இசைத்த மாயன்; கழை - வேய்ங்குழல். மாயன் - கண்ணபிரான். மயிலியல் - மயிலைப்போன்ற சாயலையுடைய. கயில் - பூட்டுவாய். எருத்து இடம் கோட்டினள் - கழுத்தை இடப்பக்கத்தே சாய்த்தனளாய். கனியினிற்கனிய - பழத்தைக்காட்டிலும் கனியும்படி. பயிலும் - பழகுகின்ற. பண் - இராகம். தொடை - நரம்பு. பருகும் - கண்ணபிரான் பருகுவான். பேதை பயிலும் யாழிசையை.

3899. இன்ன - இப்படிப்பட்ட. உரு - உருவம். அன்னம்போன்ற மெல்லிய நடையையுடைய அரிவையர். தோன்ற - கண்ணபிரான் தோன்றியிருந்தானாக. மன்னும் - நிலைபெற்ற. என்னு - என்று கூறி. யாழ்முனி - நாரதன். நடந்தான் - சென்றான்.



# 41. சிசுபாலனைக் கொன்ற அத்தியாயம்.

---

கலிநிலைத்துறை.

3900. சேட்டி எம்பிறைக் கொழுந்தெனத் திகழ்தரு பால்வெண்
கோட்டு வாரணங் கூப்பிடத் துயிலெழு கொண்டல்
மோட்டு முட்புற முருக்கின்மொய் யிணரென விரிந்த
சூட்டு வாரணங் கூப்பிடத் துயிலெழுந் தனனால். (க)

3901 இனைத்தெ னத்துணிந் தெழுதிடாப் பழமறைக் குலங்கள்
அனைத்து மெட்டுதற் கரியதோ ரானந்த மயமாய்
நினைப்ப ரும்பா தத்துவ மாய்நிறைந் தோங்கு
தனிப்பெ ருஞ்சுடர் தன்னையே நினைந்தன னிருந்தான். (உ)

3902. கங்கை சேவடித் தாமரை யொன்றுமே கலந்த
தங்க திர்த்திரு நகைமுக முளரியு மாய்பொன்
செங்கை மாமலர் முளரியுந் தீண்டின மென்னுப்
பொங்கு வெண்டிரைப் பூம்புனன் முழுங்கமுழ் கினனால். (ந)

---

3900. சேடு - பெருமை. பிறைக் கொழுந்து, யானைத் தந்தத்திற்கு உவமை. கோடு - தந்தம். வாரணம் - கஜேந்திரன். துயிலெழு கொண்டல் - அறிதுயில் நீங்கிய கண்ணபிரான். மோடு - பெருமை. முட்புற முருக்கின் மொய்யிணர் என - முள்ளைப்புறத்தே யுடைய முருங்கைமரத்தின் நெருங்கிய பூங்கொத்துப்போல. சூட்டு - உச்சிக் கொண்டையை யுடைய, வாரணம் - கோழி. கோழியின் சூட்டுக்கு, முள் முருங்கையின் துணர் உவமை; "கவிரலர் பூத்த சென்னி வாரணம்" (கல்லாடம், கடவுள்.)

3901. இளைத்து என - இத் தன்மைத்து என்று. துணிந்து - அறுதி யிட்டு. குலம் - தொகுதி. நினைப்பரும் - நினைத்தற்கரிய. பாதத்துவம் - மேலான உண்மைப் பொருள். தனிப்பெருஞ் சுடர் - கண்ணபிரான்.

3902. கங்கை நீர், கண்ணபிரானுடைய சேவடியாகிய தாமரை ஒன்றையே கலந்தது; என்றது, வாமனாவதாரத்து நிகழ்ச்சியை. நகைமுக முளரி - ஒளியையுடைய முகமாகிய தாமரை. செங்கையாகிய முளரி. தீண்டினம் - யாம் தீண்டப்பெற்றோம். பொங்கு - மிகுகின்ற. புனல் - யமுனையின் நீர். முழங்க - ஒலிக்க.

3903. பொங்கு வெண்டிரை பூத்திடு கவுத்துவம் பொழிந்த
அங்கதிர்க்குலந் தவழ்ந்தென வருவரை மார்பில்
குங்கு மக்கொழுஞ் சாந்தணி திருத்தினன் குளிர்ந்த
திங்கள் வாண்முகந் திட்டினன் றிருமணித் திலகம். (௪)

3904. வேலை வெண்டிரை முகட்டினில் வெங்கதிர் பொடிப்ப
நீல வண்டுசூழ் தாமரை நெகிழ்ந்துதேன் பொழிதல்
போல வீர்ம்புனல் பூந்தொடித் தடக்கையாற் பொழிந்து
காலை யாற்றுறு கடனெலாந் திறப்படக் கழித்தான். (௫)

3905. கலித்த வெண்டிரைக் ககனநீர் வளர்த்தகற் பகத்தின்
ஒலித்த தண்சினை யொழுகுசெந் தளிர்நலங் கவற்று
மலர்க்க ரத்தினுன் மண்ணுநல் லாவுதி மண்ணி
நலத்த முத்தழல் வளர்த்தன னுன்மறை நெறியின். (௬)

3906. படுதி ரைக்கடல் படிந்தெழு பசும்புய லென்றே
நெடுநி லத்தவர் நினைந்திட நெகிழ்ந்தசெங் கமலப்
படலை சூடிய பழமறை யந்தணர்க் கெல்லாம்
சுடர்து ளும்புவெண் முத்தொடு பொன்மழை சொரிந்தான். ()

3907. விழைவெ றிந்தெழு வெகுளியை வேரொடும் பிடுங்கு
முழுது ணர்ந்தமா முனிவரைக் குரவரைப் பசுவைப்

---

3903. திரை - கடலில். கவுத்துவம் - கௌஸ்துப மணி. கதிர்க் குலம் - கிரணத் தொகுதிகள். திருத்தினன் - அழகு செய்தனன். முகத்தில் திலகத்தைத் திட்டினன்; திலகம் - பொட்டு.

3904. முகடு - உச்சி. கதிர் - சூரியன். பொடிப்ப - தோன்ற. நெகிழ்ந்து - தளையவிழ்ந்து. தாமரை தேனைப் பொழிதல்போலக் கையால் புனலைப்பொழிந்து. தொடி - கங்கணம்; நீலவண்டு இதற்கு உவமை. காலை - காலைப்பொழுதில். கடன் - கடமை. திறப்பட - வகைப்பட.

3905. கலித்த - முழங்கிய. ககன நீர் - ஆகாய கங்கையின் நீர். ஒலித்த - தழைத்த. சினை ஒழுகு - கிளையிடத்து நீண்ட. தளிரின் நலத்தைக் கவற்றுகின்ற கரத்தினால். நலம் - அழகு. கவற்றுதல் - வருத்துதல். ஆவுதி மண்ணி - யாகத்தைப் பண்ணி; "ஆவுதிமண்ணி" (மதுரைக். 494.) நலத்த - நன்மையையுடைய. முத்தழல் - மூன்று தீ; 3866. நெறியின் - முறைமைப்படி.

3906. புயல் - மேகம். நிலத்தவர் - பூமியிலுள்ளவர். நெகிழ்ந்த - மலர்ந்த. படலை - மாலை. சுடர் - ஒளி. தாமரைமாலை அந்தணர்க்கு உரியது; "வண்கமலத் தார்மிகுத்த வரைமார்பன் சம்பந்தன்" (தே. திருஞா)

3907. விழை வெறிந்து - ஆசையை வெட்டி. வெகுளி - கோபம். பிடுங்குகின்ற முனிவர், முழுதுணர்ந்த முனிவர். குரவர் - ஆசிரியர்; தாய்

பழுதில் காட்சிசால் பழமறைக் கிழவரைக் கையால்
தொழுதல் செய்தனன் மங்கலப் பொருள்பல தொட்டான். ()

3908. மற்று நேரிலா மரகத மணிவரை மருங்கில்
எற்று தெண்டிரை யெழுதரு மிளங்கதி ரெறிக்கும்
கற்றை வாள்வெயில் காண்டக வளைப்பது கடுப்பப்
பொற்ற பைங்கதிர் பொழிதரு பொற்றுகி லுடுத்தான். (கூ)

3909. வெறுத்த காரிருள் விழுங்கிடு வெண்ணிலாக் கதிர்விட்
டெறித்த தண்பிறை யிதயநின் றெழுவதே யேய்ப்ப
நெறித்த போதுறை நேரிழை வனமுலை யாரம்
பொறித்த மார்பினிற் பூண்டனன் பொழிகதி ராரம். (கO)

3910. கான முல்லையுங் கானுலாந் துளவமுங் கஞலித்
தேனுண் வண்டொடு தேனவாங் கற்பகஞ் செறிந்த
பூந றும்பிணை பூமகள் புணர்புயப் பொருப்பின்
வான வில்லென வானமு மருள்கொள வணிந்தான். (கக)

3911. அறல்பு றந்தரு கருங்குழ லாய்ச்சியர் மனைத்தூங்
குறிசெ றிந்தநெய் பார்த்தது கிடக்கமற் றுருகு

---

தந்தையர். பழுதில் - குற்றமில்லாத. மறைக் கிழவர் - அந்தணர்.

3908. நேரிலா - ஒப்பில்லாத. மருங்கில் - பக்கத்தில். எற்று - மோதுகின்ற. திரையில் எழுதருகின்ற இளங்கதிர்; சூரியன். எறிக்கும் - வீசுகின்ற. கற்றைவாள் வெயில் - தொகுதியாகிய ஒளிபொருந்திய கிரணம். காண்டக - அழகு பொருந்த. கடுப்ப - ஒப்ப. பொற்ற - பொலிவு பெற்ற. பொற்றுகில் - பொன்னுடை. வெறுத்த - செறிந்த.

3909. நிலாவாகிய கதிரைவிட்டு. பிறை - பிறைச்சந்திரன். இதயம் - மார்பு. சந்திரனைத் திருமாலின் இதயத்துத் தோன்றியதாகக் கூறுதல் ஈண்டு உணரற்பாலது; "கரியவன் மனத்தி னுதிதனை" (சிலப். 6: 36-7, அடியார். மேற்.) ஏய்ப்ப - ஒப்ப. நேரிழை - திருமகளின். ஆரம் - முத்து மாலையின் வடிவம். பொறித்த - தழும்புண்டாகப் பொறிக்கப்பட்ட. கதிராரம் - முத்துமாலை. முத்துமாலைக்குப் பிறை உவமை.

3910. கான - காட்டிலுள்ள. கான்உலாம் - வாசனை பரக்கின்ற. கஞலி - நெருங்கி. தேன் அவாம் - தேன் விரும்புகின்ற. பிணை - மாலையை. தேன் : ஒருவகை வண்டு; (சீவக. 892.) புயமாகிய பொருப்பில். வானவில் - இந்திரவில். மருள்கொள - மயக்கம் கொள்ளும்படி. பல நிறமுள்ள பூமாலைக்கு இந்திரவில் உவமை.

(பி - ம்.) 4. வான்மரு டோள்வளை வணைந்தான்.

3911. அறல் - கருமணல்; குழலுக்கு உவமை. மனை - வீட்டில். தூங்கு உறி - தொங்குகின்ற உறியில், செறிந்த - உறைந்த. கிடக்க - இருக்க.

நறுநெய் பார்த்தன னல்லொளி துவன்றுகண் ணாடி
மறுவில் வெண்ணிலா மதிமுக மலரநோக் கினனால். (கஉ)

3912. ஓட்ட மைந்தசெம் பொற்கல னெழுகொளி யாரம்
ஆட்டு வந்தவா ளரவுரி யன்னநல் லறுவை
வேட்ட வேட்டன விரையெடுத் தெறிகரு தண்பூந்
தோட்ட தாமரைத் துணையடி தொழுபவர்க் களித்தான். (கங)

3913. உவவு வெண்மதி வுருவவொண் குடைமிசை யோங்கக்
கவரி கால்செயக் கருங்கடல் வெள்வளை கலிப்பப்
பவள நல்லொளி பழுத்தவெண் குளம்புடைப் பசிய
இவுளி பூண்டதோ ரெரிமணித் தேர்மிசை யிவர்ந்தான். (கச)

3914. குரைசெய் வண்டொடு கொழுங்களிச் சுரும்பினங் கொழுதா
விரைசெய் கற்பக நறுமலர் விண்ணவர் பொழியத்
திரைசெய் வேலையிற் செழுமணித் திரளொளி திளைக்கும்
அரசி ருக்கைசென் றடைந்தன னரசெலாம் வணங்க. (கரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3915. அழியு மருவிக் கடாயானை
யழைப்ப வருங்கா ரருள்பெருகி
வழியு முளரித் திருநோக்க
மாநீர்க் கங்கைப் பெருக்காறு

---

உருகிய செய்யை. துவன்று - நிறைந்த. மதிபோலும் முகம் மலரும்படி கண்ணாடியில் நோக்கினன்.

3912. ஓட்டமைந்த - உருகி ஓடுதலுற்ற; பொன்னுக்கு அடை. கலன் - ஆபரணம். ஆரம் - முத்துமாலை. ஆட்டு உவந்த - ஆடுதலை மகிழ்ந்த; அரவுக்கு அடை. அரவுரியன்ன நல்லறுவை - பாம்பின் தோலைப்போன்ற நல்ல ஆடை. வேட்ட - விரும்பிய. வேட்டன - விரும்பியவற்றை. விரை- வாசனை. தோட்ட - இதழையுடைய.

3913. உவவு வெண்மதி - பூர்ண சந்திரன். உருவம் - அழகு. மதி போன்ற குடை; "உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை" (புறநா. 3: 1.) மிசை - மேலே. கவரிகால்செய - சாமரை காற்றை உண்டாக்க. வளை கலிப்ப - சங்கம் முழங்க. பழுத்த - முற்றிய. குளம்பை உடைய. இவுளி - குதிரை. இவர்ந்தான் - ஏறினான்.

3914. குரைசெய் - ஒலிக்கின்ற. சுரும்பினம் - வண்டின் கூட்டம். கொழுதா - கிண்டி. விரை - வாசனை. திரை - அலை. மணித்திரள் - மணிகளின் தொகுதி. திளைக்கும் - விடாமல் வீசும். அரசிருக்கை - அத்தாணி மண்டபம்.

3915. அழியும் - ஒழுகுகின்ற. யானை - கஜேந்திரன். கார் - கண்ண பிரான். கங்கை ஆறு தழையும் தாளாகிய முளரியை. தாழும் - வணங்கு

தழையு மெழிற்றுட் செம்முளரி
தாழு மாசர்க் கருளிவெயில்
பொழியும் பசும்பொன் வட்டவணை
பொலிய வரசு வீற்றிருந்தான். (கசு)

3916. வைத்த நெடுவேற் சராசந்தன்
வைக்குஞ் சிறையிற் கிடந்தவளிக்
கொத்து மூழும் பசுந்தெரியற்
கொற்றக் கவிகை முடிவேந்தர்
ஒத்த தூத னத்தலைவந்
துடைக்குந் திரைமந் தாகினியின்
தத்து தளிபோன் முத்தமணி
தயங்கு கழற்கா ளூழ்ந்தனனால். (கஎ)

3917. மடங்க லனைய போராற்றன்
மடங்கி மகதன் சிறைக்கிடந்த
விடங்கொப் புளிக்கு நெட்டிலைவேல்
வேந்தர்க் கருள வேண்டுமெனக்
குடந்தம் படுவா னவர்மகுட
கோடி யுழுத பழந்தழும்பு
கிடந்த பசுந்தாட் கமலமலர்
கிண்டயா விறைஞ்சிக் கிளத்தினனால். (கஅ)

---

கின்ற. கார், திருநோக்கத்தைத் தாழும் அரசர்க்கு அருளி அரசு வீற்றிருந்தான்.

3916. வைத்த - கூர்மையையுடைய. அளிக்கொத்து - வண்டுகளின் கூட்டம். தெரியல் - மாலை. சிறையிற் கிடக்கும் முடிவேந்தரது தூதன். அத்தலை - அவ்விடம். மந்தாகினியின் - கங்கையின். தளிபோல் - துளியைப்போல். கால் - கண்ணபிரானுடைய பாதத்தை. தாழ்ந்தனன் - வணங்கினன்.

3917. மடங்கல் - சிங்கம். மடங்கி - அழிந்து. மகதன் சிறை - சராசந்தனுடைய சிறையில். கிடந்த வேந்தர்க்கு. என - என்று. குடந்தம்படு - வழிபடுகின்ற; "குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி" (முருகு. 229.) கிண்டயா - கிடைக்கப்பெற்று,

3918. நடவுங் கலினப் பரித்தானை
நறுந்தா ரரசர் குறையிரந்து
விடவந் திறைஞ்சு தூத னுரை
விரியா நிற் தும் வேலையின்கண்
பிடவம் புனைந்த வாயர்தவப்
பேற்றி னனல் யாழ்நரம்பு
தடவந் திருந்தான் முருகொழுகு
தடந்தா மரையோன் றருதோன்றல். (கசு)

வேறு.

3919. பௌவவெண் டிரையிற் பட்ட பல்கதிர்ப் பரிதி போல
எவ்வெலாத்திசையு மொண்கே ழெறிப்பவந் தினிது தோன்றும்
தெய்வயாழ் முனியைச் செய்யாத் திருமொழி கடந்து நின்ற
அவ்வென்சொற் பொருளா வானின் றுங்கணன் கேத்திப் பின்னும். ()

3920. தழைத்தபே ருலகின் செய்கை தயங்கநீ யறிதி யன்றே
அழற்பொலிந் திலங்கு கூர்வே லைவரென் செய்கின் றார்கொல்
விழுத்தவ வென்று செந்தீ விழித்தவெஞ் சினத்த புள்வாய்
கிழித்தவ னுலக முண்ட கிளரொளிப் பவளம் விண்டான்.(உக)

3921. அரம்பொரு குடுமி வைவே லைவராங் கிராச சூயம்
புரிந்திட வேட்கின் றாராற் பொழியருண் முளரிச் செங்கட்

---

3918. நடவும் - நடத்துகின்ற. பரித்தானை - குதிரைப்படை. பரித்தானையை நடவும் அரசர். குறை - தமது குறையை. விட - கண்ணபிரானிடம் அனுப்ப. உரைவிரியா நிற்கும் வேலையின் கண் - உரைக்கும்போது. பிடவம் - பிடவமலர்; முல்லை நிலத்திற்கு உரியது. ஆயர் தவப்பேற்றினன் - இடையரது தவப்பேற்றால். யாழின் நரம்பைத் தடவந்து; தடவந்து - தடவிக்கொண்டு. இருந்தான் - கண்ணபிரானுடைய சபையிடத்து வந்து தங்கினன். முருகு - தேன். தாமரையோன் தரு தோன்றல் - நாரத முனிவன்.

3919. பௌவம் - கடல். பட்ட - தோன்றிய. எவ்வெலாத் திசையும் - எல்லாத் திசைகளிலும். கேழ் - ஒளியை. எறிப்ப - வீச. முனியை - நாரதனை. செய்யாத் திருமொழி - வேதத்தை. அவ்வென்சொற் பொருளான் - கண்ணபிரான்; அ - திருமால். ஆங்கண் - அவ்விடத்தே.

3920. தயங்க - விளங்க. ஐவர் - பாண்டவர். விழுத்தவ: விளி. புள்வாய் கிழித்தவன் - கண்ணபிரான். பவளம் - வாயிதழ்.

3921. அரத்தாற் பொரப்பட்ட குடுமியையுடைய வேல். ஐவர் - பாண்டவர். வேட்கின்றார் - விரும்புகின்றார். கடல்வண்ண: என்றது

கருங்கடல் வண்ண நீயே காத்திடல் வேண்டு மென்னு
நரம்புளர்ந் திசைக்கும் பாட னாரத னவின்று னன்றே. (உஉ)

3922. சோர்மதுத் தெரியல் வேந்தர் தூதனின் றிசைத்த கூற்றும்
நாரத னவின்ற பாட்டு நகைமுக மலர்ந்து கேளா
ஒருநல் லுணர்வின் மிக்க வுத்தவன் வதன நீலக்
கார்முகிற் கொழுந்து போலுங் காரணன் கடைக்கணித்தான். (உங)

3923. பொற்றசெங் கமல மாதின் புணர்முலை பொருத மார்வ
ஒற்றைவெண் கவிகை நீழ லுடைதிரை ஞாலங் காக்கும்
கொற்றவன் வேள்விக் கேகிற் கொற்றவர் குறிப்பு மாங்கே
முற்றுமென் றுரைத்தல் செய்தான் முழுதுணர் காட்சி யோனே.(உச)

3924. உவவுவெண் டிங்க ளன்ன வுத்தவ னுரைத்த தீஞ்சொல்
செவிமுதன் மடுத்து மாந்தித் திவவியாழ் முனிவன் றன்னோ
டவிர்கழ லரசர் தூதற் கருளினன் விடைவிற் பார்த்தன்
இவர்மணித் தடந்தேர்ப் பாக னெழுந்தனன் வேள்விக் கென்றே. ()

3925. நேமியஞ் சிலம்பு மற்றோர் நிழன்மணிச் சிலம்பிற் றோன்றத்
தாமரை மலர்த்தா ளொன்றிற் றடங்கட லுலகம் வைத்த
தேமருத் துளவத் தாரோன் றீம்புனல் யாறுங் குன்றும்
காமரு கழனி நாடுங் கடந்தனன் போயி னுறல். (உசு)

---

கண்ணபிரானே ; விளி. நரம்புளர்ந்து - நரம்பைத் தடவி.

3922. சோர்கின்ற மதுவையுடைய தெரியல்; சோர்தல் - சொரிதல். வேந்தர் தூதன் - சராசந்தனுற் சிறைப்பட்ட வேந்தரது தூதன். கூற்றையும் பாட்டையும் முகமலர்ந்து கேளா ; கேளா - கேட்டு. காரணன் உத்தவன் வதனத்தைக் கடைக்கணித்தான் ; காரணன் - கண்ணபிரான். கடைக்கணித்தான் - கடைக்கண்ணாற் பார்த்தான்.

3923. பொற்ற - பொலிவுபெற்ற. மாதின் - திருமகளுடைய. மார்வ என்றது கண்ணபிரானே ; விளி. கொற்றவன வேள்விக்கு - தருமபுத்திரனுடைய யாகத்திற்கு. ஏகின் - சென்றால. கொற்றவர் குறிப்பும் - சிறைப்பட்ட அரசருடைய எண்ணமும். முறறும் - நிறைவேறும். காட்சியான - உத்தவன்.

3924. உவவு - கலைநிறைவு. கலைநிறைதல்பற்றி உத்தவனுக்குத் திங்கள் உவமை. மடுத்து - உண்டு; ஈண்டுகேட்டு. திவவு - வார்க்கட்டு. முனிவன் றன்னொடு - நாரதனொடு. தூதற்கு - தூதனுக்கும். விடை அருளினன். பார்த்தன் இவர்கின்ற தேருக்குப் பாகன் ; கண்ணபிரான். வேள்விக்கு எழுந்தனன்.

3925. நேமியஞ் சிலம்பு - சக்கரவாளகிரி. சிலம்பின் - காலிலணிந்த சிலம்பைப்போல. வைத்த - மூடிய. தாரோன் - கண்ணபிரான். காமரு - அழகிய. கழனி - வயல். கழனிநாடு - மருதநிலத்தூர்கள்.

3926. ஆரத்தினப் பிறந்த பொன்போ லைதெழிற் றிதலை பூத்த
குரும்பைமென் கொங்கை யார்தங் குழாத்தொடு மெய்தி னுனல்
கருங்கட லமுதி னேடு காண்டகச் செல்லு மாபோல்
இரும்புவி யளந்த தாளா னிந்திரப் பிரத்த மன்னே. (உஎ)

3927. நீலமா கடல்போ லொற்றை நேமியா னெய்த லோடும்
வாலுளைப் புரவித் தானை மறிதிரைக் கடலிற் சூழப்
பால்வளை யலற வள்வார்ப் பல்லியந் துவைப்ப வல்லே
கால்வளை வரிவி லைவர் களித்தன ரெதிர்கொண் டுற்றார். (உஅ)

3928. தம்பிய ரிறைஞ்ச நின்ற தடஞ்சிலை விசயன் றன்னை
அம்பகட் டார மார்பிற் புல்லினை னவற்கு மூத்த
வம்புலாந் தெரிய லாரை வணங்கினன் மனவாக் கெட்டா
தும்பர்பொன் மகுட கோடி யுழுநின்ற கழலம் மானே. (உகூ)

3929. புண்டரி கங்கள் பூத்த புயற்பசுங் கொழுந்து போல
வண்டுழாய் முருகு தூற்ற வந்துமுன் னிற்பப் பெற்றும்
பண்டைநான் மறையுங் காணுப் பரமனைத் தரும னுங்குக்
கண்டில னுவகைக் கண்ணீர் கண்ணக நிறைந்து மன்னே. (கூo)

---

3926. அரம்தினப் பிறந்த பொன்போல் - அரம் அராவுதலால் தோன்றிய பொற்றுகளைப்போல. ஐது எழில் திதலை - மெல்லிய அழகிய தேமல். பூத்த - தோன்றிய. கொங்கையார் - மகளிர். கண்ணபிரானுக்குக் கருங்கடலும், மகளிருக்கு அமுதும் உவமைகள். காண்தக - அழகுசிறக்க. தாளான் - கண்ணபிரான். இந்திரப்பிரத்தத்தை எய்தினன்.

3927. ஒற்றை நேமியான் - கண்ணபிரான். வால் உளைப் புரவி - வெண்மையான பிடரி மயிரையுடைய குதிரை. கடலின் - கடலைப்போல. வளை அலற - சங்கங்கள் முழங்க. பல் இயம் துவைப்ப - பல வாத்தியங்கள் ஒலிக்க. கால்வளை வரிவில் - நுனியை வளைக்கின்ற கட்டப்பட்ட வில்லையுடைய. ஐவர் - பாண்டவர்.

3928. இறைஞ்ச - வணங்க. விசயன்றன்னை - அருச்சுனனை. மார்பினுற் புல்லினன். அவற்கு - அருச்சுனனுக்கு. வம்பு உலாம் - வாசனை பரக்கின்ற. தெரியலாரை - பீமனையும் தருமனையும். உம்பர் - தேவர். அம்மான் - கண்ணபிரான் ; எழுவாய்.

3929. பூத்த - தோன்றிய. புயலின் கொழுந்துபோல. துழாய் - துளவமாலை. முருகு - தேனை. நிற்பப் பெற்றும் - கண்ணபிரான் நிற்கப் பெற்றும். பரமனை - கண்ணபிரானை. தருமன் உவகைக் கண்ணீரால் கண்ணகம் நிறைந்து பரமனைக் கண்டிலன்.

3930. உண்மலி குற்ற மும்மை யொருவிநெஞ் சொருப்பட் டீறில்
எண்பிர பத்தி நிட்டை யேயமா முனைவர் காணும்
ஒண்மணி யாழிக் கைய னுருப்புறங் காண லுற்றார்
கண்மழை வார நிற்றல் கழறலாந் தகைமைத் தாமே. (௩௧)

3931. துளிப்புயல் கீண்ட மின்னிற் றோன்றெழின் மடவா ருண்கண்
களிக்கயல் கடலிற் பாயுங் காட்சிபோன் மேனி யெல்லாம்
திளைப்பவெண் டிரைப்பா லாழிச் சேர்ப்பனள் ளார்செஞ் சோரி
குளித்தநெட் டிலைவே லைவர் கோயில்சென் றெய்தி னானல். ()

3932. வெஞ்சரங் கடந்த நீல விழியிணை களிப்ப நோக்கி
நெஞ்சகத் துவகை வேலை நிறைந்தெழ நின்ற குந்தி
கஞ்சநாண் மலர்த்தாண் மற்றோர் கருங்கடல் படித லேய்ப்பக்
குஞ்சரக் கோடு கொண்ட கொற்றவன் வணங்கி நின்றான். ()

3933. பாற்றிரைக் கங்கை யல்லாற் படுபுனல் யமுனை வந்து
தோற்றுதல் கடுப்பக் கண்ணன் சூழ்கழற் காலிற் பைந்தேன்
ஊற்றிருந் தொழுகு கோதை யுடுத்தமெல் லோதி தாழ
வேற்றற லைவர் வேட்ட விளங்கிழை யிறைஞ்சி னாளால். (௩௪)

---

3930. உள்மலி குற்றம் மும்மை - உள்ளே நிறைந்த குற்றமாகிய காமம், வெகுளி, மயக்கமென்னும் மூன்றையும். ஒருவி - நீக்கி. ஈறில் - முடிவில்லாத. எண்ணுகின்ற பிரபத்தியையும் நிட்டையையும். ஏய - பொருந்திய. முனைவர் - முனிவர். ஆழிக் கையன - கண்ணபிரானுடைய. உருப்புறம் - வடிவின் புறத்தோற்றத்தைக் காணலுற்றார்க்குக் கண்மழை வாரநிற்றல்; வார்தல் - ஒழுகுதல். கழறல் - கூறுதல்.

3931. புயல் - மேகத்தை. கீண்ட - கிழித்த. மடவாரது கண்கள். கயல்மீன் கடலிற்பாயும் காட்சியைப்போல். மேனி - கண்ணபிரானுடைய உடலம். திளைப்ப - விளையாட. கண்ணபிரானுடைய திருமேனிக்குக் கடலும், மகளிரது கண்களுக்குக் கயல்மீன்களும் உவமைகள். பாலாழிச் சேர்ப்பன் - கண்ணபிரான். நள்ளார் - பகைவர். குளித்த - மூழ்கிய. ஐவர் கோயில் - பாண்டவரைவருடைய அரண்மனையை.

3932. சரம் - அம்பு. இணை - இரண்டு. வேலை - கடல். குந்தியின் மலர்த்தாளை. மற்று, அசை. கருங்கடல் கண்ணபிரானுக்கு உவமை. படிதல் - தாழ்தல். குஞ்சரத்தின் கோட்டைக்கொண்ட கொற்றவன் : கண்ணபிரான்.

3933. பால்போன்ற திரையையுடைய கங்கையல்லாமல். கடுப்ப - ஒப்ப. கண்ணனுடைய காலில். கோதை - மாலை. ஓதி - கூந்தல். ஐவர் வேட்ட விளங்கிழை - திரௌபதி.

3934. காதமோர் நான்கு தெய்வக் கடிகம ழுஞ்செஞ் சாந்து
மாதிர மெட்டு முட்ட மணங்கமழ் மலரு மேந்தி
கோதைவேற் றடக்கை யைவர் கோதிலா வழிபா டாற்றத்
தாதுலாங் கான முல்லைத் தாரவன் மகிழ்வு பூத்தான். (ஙரு)

3935. உயர்மாச் சோலை வெந்தி யூட்டுஞான் றோம்பு மாற்றால்
மயனுவக் திழைத்த செயபொ ன மண்டபத் தலங்க லாழிப்
புயல்கரும் புயலி னன்ன பூங்குழற் பவளச் செவ்வாய்க்
கயன்மலைப் பன்ன கண்ணார் களிகொள வைகி னானல். (ஙசு)

3936. மதிசில கழிந்த பின்னர் மதியுறழ் கவிகை மன்னன்
அதிர்கட லுலக முண்ட வஞ்சனப் புயலை யெய்தி
எதிரிலா விராச சூய மியற்றுவான் விழைகின் றேனல்
கதிர்மணி வண்ணத் தண்ணல் காத்திட வேண்டு மென்றான். (ஙஎ)

3937. குன்றுறழ் குவவுத் திண்டோட் கொற்றவன் மாற்றங் கேளா
மன்றலந் துளவ மாலோன் மாதிரத் தரசை யெல்லாம்
வென்றலா விராச சூய மேதகப் புரிய லாகா
தென்றுசெம் பவள வாய்விண் டினிதுரை யியம்பி னானல். (ஙஅ)

---

3934. கடி - வாசனை. நான்கு காதம் கமழ்கின்ற சாந்து. மாதிரம் - திசைகள். கோதை - மாலை; உறையெனலுமாம். ஐவர் - பாண்டவர். கோதிலா - குற்றமில்லாத. தாது - மகரந்தப்பொடி. தாரவன் - கண்ண பிரான்.

3935. சோலையைத் தீ யூட்டு ஞான்று; சோலை - காண்டவ வனம். ஞான்று - சமயத்தில். ஓம்பு மாறாலே - தன்னைக் காப்பாற்றியமையால். அருச்சுனன் காண்டவ வனத்தை எரியூட்டும்போது மயனைத் தீயினின்றும் காப்பாற்றினன் என்பது வரலாறு. அலங்கல் ஆழிப்புயல் - மாலையையும் சக்கரத்தையுமுடைய கண்ணபிரான். கரும்புயலினன்ன பூங்குழல் - கரிய மேகத்தைப் போன்ற கூந்தல். கயல்மலைப்பன்ன - கயல்மீன்கள் போர்செய்தலை யொத்த. கண்ணார் - மகளிர்.

3936. மதிசில - சிலமாதங்கள். கவிகை - குடை. மன்னன் - தரும புத்திரன். அஞ்சனப் புயலை - கரிய மேகம்போன்ற கண்ணபிரானை. எய்தி - அடைந்து. இராசசூயம்: ஓர் யாகம். இயற்றுவான் - செய்யும் பொருட்டு. அண்ணல் - கண்ணபிரான்; விளி.

3937. குவவு - திரட்சி. கொற்றவன் - தருமபுத்திரனுடைய. மாற்றம் - வார்த்தையை. கேளா - கேட்டு. மாயோன் - கண்ணபிரான். மாதிரத்தரசை யெல்லாம் - திசைகளிலுள்ள அரசர்களை யெல்லாம். மேதக - பெருமை சிறக்கும்படி.

3938. மலர்ப்பசுந் தெரியன் மாலை மார்வமெய் யுணரார் தம்மால்
வெலப்படா வென்னை வென்றாய் மெய்யுரைப் பதனுன் மற்றைச்
சிலைத்தொழி லிளைஞ ராலே திசையெலாம் வெல்க வென்றான்
கொலைத்தொழி லவுணர்க் கொன்ற கூரழற் றிகிரிப் பெம்மான். (௩௧)

3939. பசியபைந் துளவத் தண்பூம் படலையம் பரமன் றன்னைத்
தசைசுவைத் திலங்கு மொள்வேற் றருமனெஞ் சுவந்து போற்றித்
திசையெலாம் பொருது வெல்வான் றெம்முனை கடந்து வீங்கி
இசைசுமந் தெழுந்த திண்டோ ளிளைஞரை விடுத்தல் செய்தான், ()

கலிநிலைத்துறை.

3940. மின்னுங் கருங்கட் சுடர்கான்றெழு வெள்ளெ யிற்று
மன்னுந் தழல்வாய்க் கொடுங்கூற்று மலங்க மற்றத்
தென்னம் புலத்திற் படர்ந்தான்செரு வேட்டெ ழுந்து
பொன்னங் குவட்டிற் பொலிதோட்சக தேவன் மன்னோ. ()

3941. நெடுவா னரும்பு நிலவெண்பிறைக் கோடு சாய்த்த
தடவான் மருப்புத் திகழ்மால்கரித் தானை சூழக்
குடபா லெழுந்தான் குறுகாருயிர் கொன்று ருத்த
அடல்வா ணகுல னமர்வெந்திற லாளி யன்னான். (சஉ)

3942. சுடர்சூழ் பசும்பொ னெடுங்குன்று துளங்க வீங்கி
படுபோர் விழைந்த பசுந்தார்த்தடந் தோள்ப ணைப்ப

3938. தெரியல் - விளங்குதலை யுடைய. மார்வ : தருமபுத்திரனே ; விளி. மெய் - உண்மையை. வெலப்படா - வெல்லமுடியாத. மெய் உரைப்பதனல் - உண்மையைச் சொல்லுவதால். இளைஞர் - பீமன் முதலியவர். அவுணர் - அசுரரை. திகிரிப் பெம்மான் - கண்ணபிரான்.

3939. படலை - மாலை. பரமன்றன்னை - கண்ணபிரானை. தசை - ஊன். வெல்வான் - வெல்லும் பொருட்டு. தெம்முனை - பகைப்புலத்தை. இசை - புகழ். இளைஞரை - அருச்சுனன் முதலியவரை.

3940. சுடர் - ஒளி. கூற்றும் - யமனும். கருங்கண்ணையும் வெள்ளெயிற்றையும் தழல்வாயையு முடைய கூற்று. மலங்க - கலங்கும். தென்னம் புலம் - தென்திசை. செரு - போரை. பொன்னங் குவட்டின் - பொன் மலையைப்போல். சகதேவன் தென்புலம் படர்ந்தான்.

3941. வான் அரும்பு - ஆகாயத்தில் தோன்றுகின்ற. பிறைக்கோடு சாய்த்த - பிறைச் சந்திரனின் நுனிகளைக்கெடுத்த. தடவான் மருப்பு - வளைந்த வெண்மையான தந்தம். குடபால் - மேல்பால். குறுகார் - பகைவரது. உருத்த - கோபித்த. ஆளியன்றுணுகிய நகுலன் குடபால் எழுந்தான்.

3942. துளங்க - அசைந்து நடுங்கும்படி. வீங்கி - பெருத்து. போர் விழைந்த தோள் ; 3940. பணைப்ப - பெருக்க. மண்டு - மிக்கெழுந்த,

வடபா லெழுந்தா னுயர்வானுற மண்டு செந்தீக்
கடிகா வளைப்பக் கடுவெஞ்சிலை கால்வ ளைத்தோன். (சந)

3943. தாழ்நீர்ப் பரவைத் தலைப்பட்டவெண் டிங்க ணாணச்
சூழ்தா ரலங்கற் பனிவெண்குடை தோற்றம் வாய்ப்பக்
கீழ்பா லெழுந்தான் முகைபாய்ந்து கிழித்து வண்டு
வீழ்தா தருந்த விரைவிம்முபைந் தாம வீமன். (சச)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

3944 எழிலிளம் பரிதி மார்ப ரேந்தெழி லிளைஞர் மற்றுங்
கழுனுமிழ்ந் திலங்கு வைவே லரசெலா மமரி னெஞ்சி
மழுவவண் டுழலும் பைந்தார் மணிமுடி வணக்க வென்று
விழுநிதிக் குப்பை வாரி மீண்டனர் மீளி மொய்ம்பர். (சரு)

3945. செஞ்சிலை வடிப்ப வீங்கித் திரண்டுயர் பசும்பொற் குன்றம்
அஞ்சுறப் பணைத்த திண்டோ ளடற்சா சந்தன் றன்னை
வெஞ்சம ரழுவத் தேற்று வெல்கலாத் தன்மை கேட்டுத்
துஞ்சலின் மணிப்பூண் வேந்தன் சூழ்ச்சிமிக் கிருந்தா னம்மா. (சசு)

3946. முத்தவெண் கவிகை மன்னர் முத்துடைக் கோட்டு வேழ
மத்தகம் பிளந்த கூர்வாண் மன்னவன் சூழ்ச்சி நாடி
உத்தவ னுரைத்த தன்மை யுரைக்கலுற் றனனல் வெய்ய
துத்திவா ளரவி னுடுஞ் சூழ்கழற் காலெம் மானே. (சஎ)

---

கடிகாவைத் தீவளைக்கும்படி. கடிகா - காவலையுடைய காண்டவவனம்; கடி - வாசனை எனவுமாம். சிலைகால் - வில்லின் நுனியை. வளைத்தோன் - அருச்சுனன். வளைத்தோன் வடபாலெழுந்தான்.

3943. பரவைத் தலைப்பட்ட - கடலிற் றோன்றிய. திங்கள்நாண - சந்திரன் வெட்கப்படும்படி. அலங்கல் - மாலை. குடைக்குச் சந்திரன் உவமை. முகை - அரும்பு. வீழ்தல் - விரும்புதல். விரை - வாசனை. வீமன் கீழ்பாலெழுந்தான்.

3944. மார்பராகிய இளைஞர்: அருச்சுனன் முதலியோர். அமரில் அரசரையெல்லாம் முடிவணக்க வென்று; நிதிக்குப்பை வாரி - நிதித் தொகுதியை வாரிக்கொண்டு. மீளிமொய்ம்பர் மீண்டனர்.

3945. சிலை வடிப்ப - வில்லை ஆராய்ந்து பயிலுதலால். சமராழுவத்து - போர்ப்பரப்பில். எற்று - எதிர்த்து. வெல்கலா - வெல்ல முடியாத. துஞ்சலில் - கெடுதலில்லாத. வேந்தன் - தருமன். சூழ்ச்சி - ஆராய்ச்சி.

3946. மன்னர் - பகையரசரது. கோட்டு - தந்தத்தையுடைய. மத்தகம் - நெற்றியை. மன்னவன் - தருமனுடைய. துத்தி - பொறி. எம்மான் - கண்ணபிரான். எம்மான் உத்தவனுரைத்த தன்மையை உரைக்க லுற்றான்.

3947. அந்தணர் படிவந் தாங்கி யாடம ரிரந்து பெற்று
வெந்திறல் விளையும் வெம்போர் வீமனே விளைப்பி னல்லால்
மைந்துவீற் றிருந்த திண்டோண் மகதர்கோன் கடலந் தானை
சிந்திடப் பொருது வெல்லுந் திறத்தினர் யாவ ரென்றான். (சஅ)

3948. தண்டுறைக் கங்கை பூத்த தாமரைத் தாளி னானும்
திண்டிறற் காற்றின் சேயுஞ் செருமலி வரிவிற் செங்கை
அண்டர்கோன் மகனு மற்றுங் கந்தணர் படிவந் தாங்கி
மண்டுபோர் முற்ற லாகா மதிட்கிரி விரசம் புக்கார். (சகூ)

3949. பருந்தொடு கழுகின் வெந்தீப் பசிதணித் தொழுகு கூர்வேல்
அருந்திறன் மகத வேந்த னதிதியர் வரவு நோக்கி
இருந்துழி விரைவி னண்ணி யிரந்தனர் விரைதேர் வண்டும்
சுரும்புமொய்த் தரற்று தண்பூந் தொடையல்சூழ் குவவுத் தோளார். ()

3950. இறலுறு கின்ற பூத வுடம்பினை யிறத்தல் செய்யா
உறுபுக முடம்பு கோட லுணர்ந்தவ ருறுதி யன்றோ
புறவினுக் காக மற்றோர் பொன்னெடுந் திகிரி வேந்தன்
நிறைபுகு வண்மை யின்று நிலத்தின்மே னின்ற தன்றே. (ருக)

---

3947. படிவம் - வடிவம். அமர் இரந்து - போர்செய்தலை யாசித்து. வீமனே, போர்விளைப்பி னல்லால். மைந்து - வன்மை. மகதர்கோன் - சராசந்தனுடைய. திறத்தினர் - வகையினையுடையவர்.

3948. பூத்த - தோன்றிய. தாளினான் - கண்ணபிரான். திறல் - வன்மை. காற்றின்சேய் - வீமன். செரு - போரில். அண்டர்கோன் மகனும் - இந்திரன்மகனாகிய அருச்சுனனும். மண்டுபோர் - மிக்க போராலும். முற்றலாகா - வளைக்கமுடியாத. மதிளையுடைய கிரிவிரசநகருட்புக்கார். கிரிவிரசம் : மகதநாட்டின் தலைநகர்.

3949. பசியைத்தணித்து ஒழுகுகின்ற கூர்வேல். மகதவேந்தன் - சராசந்தன். அதிதியர் - இரவலர். இரந்தனர் - யாசித்தனர். விரைதேர் - வாசனையைத் தேர்கின்ற. சுரும்பு - வண்டின் சாதியுள் ஒன்று. தொடையல் - மாலை. குவவு - திரட்சி. தோளார் - கண்ணபிரான், வீமன், அருச்சுனன் என்னும் மூவர். தோளார், நண்ணி இரந்தனர்.

3950. இறலுறுகின்ற - அழிந்துபோகின்ற. இறத்தலைச் செய்யாத. புகழாகிய உடம்பைக் கோடல்; கோடல் - கொள்ளுதல். உறுதி - நிச்சயப் பொருள். புறவு - புறா. வேந்தன் - சிபிச்சக்கரவர்த்தி. நிறை - தராசிலே. வண்மை - வள்ளற்றன்மை.

3951. முன்பொரு கால மூரன் முகிழ்த்தவாண் முகத்த னாகி
என்புமற் றொருவற் கீந்தா னில்லைகொல் யாங்கள் கேட்ட
தன்பினி லருள வேண்டு மாடமர் கடந்து வெம்பி
மின்பொழி குடுமி யொள்வேல் வேந்தவென் றியம்பி னால். (

3952. சொல்லினுஞ் சொல்ல லாகாச் சுடர்விடு தோற்றத் தானும்
நல்லெழிற் றடக்கை வல்லி னாண்பொரு தழும்பி னானும்
மெல்லிணர் விரியன் மாலை வேந்தரொன் றறிந்தான் வீங்கு
மல்லனீர் மகதங் காக்கு மாலைவெண் குடையான் மன்னே. (௩)

3953. மூவடி மண்வங் தேற்றோன் முதல்வனென் றறிந்து மீந்த
மாவலி சீர்த்தி யின்ன மன்னுபு நிலவு மம்மா
யாவரே யானு மாக வீகுது மிரந்த தென்னாக்
கோவடு குருதி வைவேற் கொற்றவன் கருத்துக் கொண்டான். (௪)

3954. பாட்டளிப் படட மூசிப் பருமுகை யுழுது பைந்தேன்
கூட்டுணு முளரி யந்தண் கோதையீர் நீவி ரின்று
வேட்டது தருவ லென்றான் விரியிருட் பிழம்பு சீக்கும்
சேட்டிளம் பரிதி போலத் திகழ்கடி மார்வ னாங்கே. (௫)

---

3951. காலம் - காலத்தில். மூரல் முகிழ்த்த - புன்முறுவ லரும்பிய. என்பை ஒருவற்கு ஈந்தான் ; என்றது ததீசிமுனிவரை. கேட்டதை அன்பி னில் அருளவேண்டும். ஆடமர் - வெற்றி பொருந்திய போரை. வெம்பி மின்னைப்பொழிகின்ற குடுமியையுடைய வேல் ; குடுமி - நுனி. வேந்த : என்றது சராசந்தனை ; விளி.

3952. சொல்லினும் - வார்த்தையாலும். தோற்றம் - பொலிவு. கையிடத்து உள்ளவில் நாண்பொரு தழும்பினாலும். இணர் - பூங்கொத்து. வேந்தர் - அரசர். மகதம் - மகதநாடு. மாலை - பூமாலையையுடைய ; வரிசை எனலுமாம். குடையான் - சராசந்தன்.

3953. ஏற்றவன் முதல்வனென்று அறிந்தும் ; முதல்வன் - திருமால். ஈந்த - வாமனன் கேட்டவற்றைக் கொடுத்த. மாவலி சீர்த்தி - மஹாபலி யின் மிக்க புகழ். மன்னுபு=மன்னி - நிலைபெற்று. இரந்தது ஈகுதும் - யாசித்ததைக் கொடுப்போம். கோ அடு - அரசரைக் கொல்கின்ற. கொற்ற வன் - சராசந்தன்.

3954. பாட்டையுடைய அளிப்படலம் ; அளி - வண்டு. படலம் - கூட்டம். மூசி - மொய்த்து. கூட்டுணும் - கொள்ளை கொண்டுண்ணு கின்ற. கோதையீர் என்றது கண்ணபிரான் முதலிய மூவரை ; விளி. முளரி யர் தண்கோதையீ ரென்றது அந்தணரே என்று விளித்தவாறு; 3976. வேட் டது - விரும்பியதை. சீக்கும் - அழிக்கின்ற. சேடு - பெருமை. கடி - விளக்கம். மார்வன் - சராசந்தன்,

3955. விரிகடற் ருனை மன்ன வேட்டது தருதி யாயின்
ஒருவனே டொருவ னாகி யுடற்றுபோர் தருதி மற்றுச்
செருவினைந் திறுத்தோ மென்னுத் தெரிக்கலுற் றனனற் செம்பொன்
தருமுதல் பிடுங்கி வந்த தடக்கைமா களிறன் னனே. (ருகூ)

3956. மலர்ந்தபூங் கோதை மாதர் வாளரி யொழுகு கண்போல்
உலம்பொரு திணிதோண் மன்ன ருரங்கிழித் துதிர மூழ்கி
அலங்குநெட் டிலைவேல் வீம னவனிவன் பார்த்த னம்பொன்
இலங்குபூண் மார்வ கண்ணன் யானெனக் கூறி னனல். (ருஎ)

3957. கேட்டலு முறுவல் கோட்டிக் கிளர்ந்தெழு பெரும்போ ரஞ்சி
ஆட்டுவெண் டரங்க வேலை யகத்தடைந் தனைநீ யந்தண்
ஏட்டிண ரலங்கற் பார்த்த னிளையனு லெதிர்ந்து வெம்போர்
வாட்டிறல் வீம னற்ற வல்லனென் றியம்பி னனே. (ருஅ)

3958. எழுகபோர்க் கின்னே யென்னு வெரியுமிழ்ந் திலங்கு மொள்வாள்
உழவனேர் வயிரத் தண்ட முளர்வளி மகற்கு நல்கிக்
கழுகுசூழ் கதையொன் றேந்திக் கட்கடை கால வெந்தீப்
பொழிதர மல்லன் மூதூர்ப் புறத்தமர்க் கெழுந்து போனன். ()

---

3955. மன்ன : சராசந்தனே ; விளி. உடற்று போர் தருதி - மாறு படுகின்ற போரைத் தருவாயாக. மற்று : அசை. செரு - போர். இறுத்தோம் - இங்குவந்து தங்கினேம். தரு - கற்பகதரு. முதல் - அடி. களிறன்னன் - கண்ணபிரான். களிறன்னன் தெரிக்கலுற்றனன்.

3956. மாதரது அரியொழுகு கண்போல். வாளரி - ஒளிபொருந்திய செவ்வரி. கண்ணைப்போல் மன்னரது உரம் கிழித்து; உரம் - மார்வம். அலங்கு - அசைகின்ற. அவன் வீமன். இவன் பார்த்தன். மார்வ : விளி. யான் கண்ணனெனக் கூறினன்.

3957. கேட்டலும் - அவ்வார்த்தைகளைச் சராசந்தன் கேட்டவுடன். முறுவல் கோட்டி - புன்முறுவல் செய்து. பெரும் போருக்கு அஞ்சி. வேலையகத்து என்றது துவரைநகரிற் புக்கதைச் சுட்டியது. ஏடு - இதழ். அலங்கல் - மாலையை யணிந்த. பார்த்தன் இளையன் - அருச்சுனன் சிறுவன். எதிர்ந்து போர் ஆற்றுதற்கு வீமன் வல்லன் என்று ; வல்லன் - வல்லமையுடையவன்.

3958. போர்க்கு இன்னே எழுக என்னு ; இன்னே - இப்பொழுதே. என்னு - என்று கூறி. வாளுழவன் - சராசந்தன். உளர்தல் வளிக்கு அடை. வளிமகற்கு வயிரத்தண்டத்தை நல்கி ; வளிமகன் - வாயு புதல்வனை வீமன். கட்கடை - கண்ணின் கடை. காலவெந்தீ - ஊழிக் காலத்துக் கொடிய தீயை. மூதூர்ப்புறத்து - கிரிவிரச நகரத்தின் புறத்தே.

3959. வெளிற்றிளம் பனையி னன்ன விறல்கெழு தடக்கை வெங்கட்
களிற்றொடு களிறு சீறிக் கதிர்மணி மருப்பு நெற்றி
குளித்திடப் பொருதல் போலக் கொலைகெழு கதையிற் றாக்கி
அளிக்குல மாற்று தாரா ரருஞ்சம மாற்ற லுற்றார். (சுO)

3960. ஊழிவா யுருமே றென்ன வுடல்சினங் கதுவத் தாக்கும்
பாழிசால் வயிரத் தண்டம் பஃறுணி படுத லானே
ஆழியங் கதிர்சூழ் வந்த வாடகப் பசும்பொற் குன்றம்
தோழமை கொண்ட தோளார் தொடங்கினர் நெருங்கு மற்போர். (சுக)

3961. கண்ணழல் பொழிய வூழிக் காற்றெனக் கடைஞான் றியாவும்
உண்ணிய வெழுந்த பேழ்வா யுருகெழு கூற்ற மென்ன
மண்ணக மதிர நின்ற மால்வரை துளங்க மற்றை
விண்ணகம் பனிப்ப வார்த்து வெஞ்சமம் விளைத்திட் டாரே. ()

3962. எறுழ்வலி நிகர்த்த வாற்ற லகற்சரா சந்தன் றன்னை
விறல்கெழு தடக்கை வீமன் வென்றிலன் பார்த்தா னாக
பிறைபுரை கதிர்வெண் கோடு பிடுங்கிய கருங்கார் வண்ணன்
குறுமுறி விரிபைங் கோடு கொண்டனன் கிழித் திட்டானே. ()

---

3959. வெளிறு - வயிரமில்லாத, உள்ளே ஒன்று மில்லாத. விறல் - வெற்றி. தடக்கை - வளைந்த கையையுடைய. மணி மருப்பு - முத்துக்களை யுடைய தந்தம். மருப்பு நெற்றியிற் குளித்திட; குளித்திட - மூழ்க. கதையால் தாக்கி. அளிக்குலம் - வண்டின் கூட்டம். சமம் - போர்.

3960. உருமேறு - இடி. கதுவ - பற்றுதலால். பாழி - வன்மை. பஃறுணி - பல துண்டங்கள். கதிர் - சூரியன். சூழ்வந்த - சுற்றுகின்ற. ஆடகம்: ஒருவகைப் பொன். பொற்குன்றத்தோடு தோழமை கொண்ட தோளார்: வீமனும் சராசந்தனும். மற்போர் தொடங்கினர்.

3961. அழல் கண்ணினின்றும் பொழிய; அழல் - தீ. கடைஞான்று - ஊழிக காலத்தில். உண்ணிய - உண்ணுதற்கு. அதிர - முழங்க. துளங்க - அசைய. பனிப்ப - நடுங்க. ஆர்த்து - முழங்கி. வெஞ்சமம் - கொடிய போரை.

3962. எறுழ்வலி நிகர்த்த வாற்றல் - மிக்க வன்மையால் தாம் ஒருவருக்கொருவர் ஒத்துநின்ற தன்மையால். விறல் - வெற்றி. வென்றிலனாயப் பார்த்தானாக. வெண்கோடு - குவலயாபீடத்தின் தந்தத்தை. காரவண்ணன் - கண்ணபிரான். குறுமுறி விரி பைங்கோடு - சிறிய தளிரையுடைய விரிந்த பசுமையான மரக்கொம்பை.

(பி - ம்) 2. விழைந்து நோக்க. 4. கொண்டனன் கிண்டா னுங்கண்.

3963. விண்ணொன்று விலங்க லன்ன வீங்கெழிற் றோளாங் கொன்று
கண்ணொன்று புருவ மொன்று கருங்கழற் காலொன் றாக
மண்ணொன்று மணிப்பூண் மார்வ மகதனைப் பிளந்து மாய்த்தான்
பண்ணொன்று பாடல் வண்டு பயின்றதார்ப் பவனன் றோன்றல். (௬௪)

வேறு.

3964. மதமால் கரியின் மருப்பொசித்த
மாய னருளால் வலிதழைத்துக்
கதழ்வெஞ் சினவா ளரிகடுக்குங்
காற்றின் மதலை பணைக்காத்தால்
பதினா யிரவெங் களிற்றுவலி
படைத்தோ னுடலம் பகிர்ந்திடலும்
அதிராச் சிறப்பி னெடுவானோ
ரம்பொற் றுணர்தூஉய்ப் பாவினரால். (௬௫)

3965. வரையிற் பணைத்த திணிதடந்தோண்
மகத னிடுவெஞ் சிறைக்கிடைந்த
பரிதி வடிவா லரசிரு
பதினா யிரத்தெண் ணூற்றுவரை
அருளின் விடுத்தான் முருகொழுகு
மந்தண மலர்க்கோட் டைந்தருவும்
குருதி குமிழி யெழவேழக்
கோடும் பிடுங்கு நெடியோனே. (௬௬)

---

3963. விண் ஒன்று விலங்கலன்ன - ஆகாயத்தைப் பொருந்திய மலையைப்போன்ற. ஒன்று - ஒன்று தனியாக. மண் ஒன்று - பூமியிற் பொருந்திய. மார்வத்தையுடைய மகதனை : சராசந்தனை. பண் - இராகம். பவனன் தோன்றல் - வாயுபுதல்வனான வீமன். தோன்றல் மகதனை ஒன்று ஒன்று, ஒன்றாகப் பிளந்து மாய்த்தான்.

3964. கரியின் - யானையினுடைய. மருப்பு - தந்தம். மாயன் - கண்ணபிரான். கதழ்வெஞ்சின வாளரி - மிக்க கொடிய கோபத்தையுடைய சிங்கத்தை. கடுக்கும் - ஒக்கும். மதலை - வீமன். பணை - பெருமை. படைத்தோன் - சராசந்தனுடைய. பகிர்ந்து - பிளந்து. அதிரா - நடுங்காத. வானோர் - தேவர். துணர் - பூங்கொத்து. தூஉய் - தூவி.

3965. வரையிற் பணைத்த - மலையைப்போல் பெருத்த. மகதனிடு - சராசந்தனிட்ட. இருபதினாயிரத்து எண்ணூற்றுவர் அரசரை. அருளின் - அருளால். முருகு - தேன். மலர்க்கோட்டு ஐந்தருவும் - மலர்களையுடைய கிளைகளைக்கொண்ட பஞ்ச தருக்களையும். கோடு - தந்தம். நெடியோன் - கண்ணபிரான். நெடியோன் விடுத்தான்.

3966. வாடு மலங்கற் றேரைசர்
வந்து தொழுது தமதுமுடி
சூடு துளவக் கருங்கொண்மூ
துணைத்தாட் கமல மலர்பூத்த
ஆடு திரைமந் தாகினியி
னந்தீந் துவலை முகத்தெறிப்ப
நீடு பொலிவு தழைத்துவகை
நெஞ்சந் தளிர்ப்பப் பரவினரால். (௬௭)

3967. விடையுங் களிறும் பொருவுநடை
வெள்வே லரசர் மாசறுதூ
வுடையும் பசுந்தே னுமிழ்தொடையு
மொளிர்பொன் முடியு முருவமதிக்
குடையுங் கொடியும் முடையோராய்க்
கொற்ற வளையு மடலாழிப்
படையுந் திகழுங் காத்தானைப்
பரவித் தத்தம் பதியடைந்தார். (௬௮)

3968. ஆண்ட கடற்பா ராசாட்சி
யடையக் கடைக்க ணருள்பொழிந்து
மாண்ட பெரும்போர்ச் சராசந்தன்
மைந்தற் கலங்கன் முடிகவித்தான்
நீண்ட கனக வரைபொருத
நெடும்பொற் றடங்கோட் கனகனுரம்
கீண்டு பொருத கரும்புள்வாய்
கிழித்துத் தளிர்க்கை சிவந்தோனே. (௬௯)

---

3966. அலங்கல் - மாலையையுடைய. கருங்கொண்மூ - கண்ணபிரானுடைய. சூடுகின்ற தாட்கமல மலர். மந்தாகினி - கங்கை. துவலை - துளி. நீடு - நீண்டபொழுது. அரசர் தொழுது, பரவினர்.

3967. விடையையும் களிற்றையும் பொருவும் நடையையுடைய அரசர்; விடை - இடபம். தூஉடை - தூய்மையான ஆடை. தொடை - மாலை. உருவம் - அழகு. கொற்றவளை - வெற்றிக்குரிய சங்கம். அடலாழிப்படை - வன்மைபொருந்திய சக்கராயுதம். காத்தானை - கண்ணபிரானை. பரவி - புகழ்ந்து.

3968. பார் - பூமியின். கடைக்கண்ணால் அருளைப் பொழிந்து. மாண்ட - இறந்த; மாட்சிமைப்பட்ட எனலுமாம். மைந்தற்கு - புதல்வனுக்கு. அலங்கலையுடைய முடியை. கனகவரை - பொன்மலை. கனகன் - இரணியனுடைய. உரம் கீண்டு - மார்பைப்பிளந்து. புள்வாய் கிழித்து - பகாசுரனுடைய வாயைப்பிளந்து. சிவந்தோன் - கண்ணபிரான். சிவந்தோன் முடிகவித்தான்.

3969 உலருந் தருவுங் குழைப்பவமு
தகவே யிசைத்த வொருவனொடு
மலரும் பொழிறீ மடுத்தோனு
மற்பூத் துயர்தோண் மாருதியும்
கலினப் பரித்தேர் கடிதோட்டிக்
கலிக்குங் கடல்போல் வெற்றிவளை
அலற நகர்சார்ந் தறத்தின்மகற்
கறைந்தார் விளைந்த திறமன்னோ. (எ௦)

3970. பொடிக்குங் குழவி ஞாயிறெனப்
பொலிவுற் றுந்தித் தடத்துமுகை
வெடிக்குங் கமல மலர்ப்பொகுட்டு
விரிஞ்ச னொடுமண் படைத்தளித்து
முடிக்கு முதல்வன் முன்னின்றான்
முடியாப் பொருண்மற் றெவையென்று
வடிக்குங் குடுமிக் கூரிலைவேன்
மன்ன னமையா மகிழ்வுற்றான். (எக)

வேறு.

3971. இழைக்குவ னிராச சூய மெய்திட வேண்டு மென்று
அழைத்தனன் முனிவர் தம்மை யகனிலத் தரசர்க் கெல்லாம்
விழுப்பொறி முடங்க லாங்கு விடுத்தனன் வண்டு கோடி
உழக்கிழிந் தலரும் பைந்தா ரொருதனிக் கவிகை வேந்தன். ()

---

3969. உலரும் தருவும் குழைப்ப - பட்டுப்போன மரமும் தளிர்க்கும் படி. ஒருவனொடு - கண்ணபிரானோடு. பொழிலைத் தீயில் மடுத்தோன்; என்றது அருச்சுனனை; பொழில்: காண்டவவனம். மாருதி - வாயுகுமாரனை வீமன். கலினம் - கடிவாளத்தையுடைய. கலிக்கும் - முழங்குகின்ற. வளை அலற - சங்கம் முழங்க. அறத்தின் மகற்கு - தருமபுத்திரனுக்கு. விளைந்த திறத்தை அறைந்தார்.

3970. பொடிக்கும் - தோன்றுகின்ற. குழவி ஞாயிறு - இளஞ்சூரியன். உந்தியாகிய தடத்து; தடம் - தடாகம். முகை வெடிக்கும் - அரும்பு அலர்கின்ற. விரிஞ்சனொடு மண்ணையும் படைத்து. முடிக்கும் - அழிக்கின்ற. முதல்வன் - கண்ணபிரான். முன் - நமக்குமுன்பு. முடியா - முற்றுப்பெறாத. வடிக்கும் - திருந்திய. மன்னன் - தருமபுத்திரன். அமையா - ஓரளவில் அமையாத. "யாவர்க்கும், முன்னவனே முன்னின்றான் முடியாத பொருளுளதோ" (பெரிய, திருவாரூர்ச் சிறப்பு.)

3971. இராசசூயம் இழைக்குவன்; இழைக்குவன் - செய்வேன். எய்திட - வந்திட. முனிவரை அழைத்தனன். அரசர்க்கெல்லாம் முடங்கல் விடுத்தனன். பொறி முடங்கல் - எழுத்துக்கள் பொறித்த ஓலையை. வேந்தன் விடுத்தனன்; வேந்தன் - தருமபுத்திரன்.

3972. செங்கதிர்க் குழவி மானத் திருமணிக் குழைவில் வீசக்
கொங்குடைத் தொழுகு தண்ணங் கோதைதாழ் மகுட மின்னப்
பொங்குளைப் பரிமாப் பூண்ட பொன்னெடுஞ் கொடுஞ்சித் தேர்மேல்
அங்கண்மா ஞால வட்டத் தரசெலா மிறுத்த வன்றே. (எங)

3973. நுதியழல் வடிவேன் மைந்தர் நூற்றுவர் தம்மோ டொற்றைக்
கதிர்மதிக் கவிகை நீழற் கண்ணிலா வாசன் வந்தான்
விதூன்வந் திறுத்தான் வெற்றி வீடுமனடைந்தான் மற்றை
அதிர்கடல் வரைப்பின் மன்ன ரார்கொலாங் கடைந்தி லாதார். (எச

3974. மாலைவாய் விளங்கு திங்கண் மாலைவெண் குடையான் வேள்விச்
சாலைவாய் வந்து மொய்த்தார் சதுமறைக் கிழவ ரெல்லாம்
வேலைவா யமுத மாந்தி விரைகமழ் பாரி சாதச்
சோலைவா யுறையுந் தேவர் தொக்கனர் விசும்பின் மாதோ. (எரு)

3975. மலர்தலை யுலக மேழின் மாண்டகு பொருள்க ளெல்லாம்
கலினவாம் புரவித் திண்டேர்க் கடுந்திற னகுல னுய்த்தான்
அலைவிளை யமிழ்த மென்ன வஞ்சுவை யடிசிற் சாலைத்
தலைமையெய் தினனுற் காற்றுத் தருமழைத் தடக்கை யானே. (எசு)

---

3972. கதிர்க்குழவி மான - இளஞ்சூரியனை ஒப்ப. குழை - குண்டலம். வில் - ஒளி. கொங்கு - தேன். கோதை - மாலை. மகுடம் - கிரீடம். பொங்கு உளை - அசைகின்ற பிடரிமயிர். கொடிஞ்சி - தேருறுப்புள் ஒன்று. ஞாலவட்டத்து அரசெலாம் - பூமியாகிய வட்டத்திலுள்ள அரசரெல்லாம். இறுத்த - சென்று தங்கினர்.

3973. நுதி - நுனி. மைந்தர் நூற்றுவர் - துரியோதனன் முதலிய நூற்றுவர். கவிகையின் நிழலில். கண்ணிலாவரசன் - திருதராஷ்டிரன். இறுத்தான் - தங்கினன். வீடுமன் - பீஷ்மாசாரியர். வரைப்பு - நிலப்பரப்பு. ஆர்கொல் - யார்.

3974. மாலைவாய் - மாலைக்காலத்து. திங்கள்போன்ற குடை, மாலையையுடைய குடை. குடையான் - தருமபுத்திரனுடைய. வேள்விச் சாலைவாய் - யாகசாலையிடத்து. மறைக்கிழவர் மொய்த்தார். வேலை - கடல். விரை - வாசனை. தேவர் விசும்பில் தொக்கனர்; தொக்கனர் - கூடினர்.

3975. மாண்டகு - மாட்சிமைப்பட்ட. கலினம் - கடிவாளத்தையுடைய. நகுலன் பொருள்களை யெல்லாம் உய்த்தான். அலை - கடலில்; ஆகுபெயர். அடிசிற்சாலை - உணவு சமைக்குமிடத்தில். காற்றுத்தரும் தடக்கையான் தலைமை யெய்தினன். தடக்கையான் - வீமன்; இவன் அடிசிற் றொழிலில் வல்லவன்; "வீமபாகம்" என்பது வழக்கு; (சிறுபாண். 238-241.)

3976. விரிகதிர் முத்த மன்றி விளங்கொளி தழைத்த நீலம்
சொரிவது கடுப்ப வண்டு சூழ்தரு முளரிப் பைந்தார்
அருமறைக் கிழவர் தம்மை யருச்சனை புரிதல் செய்தான்
செருவிழை பருதி வைவேற் றிறற்சகா தேவன் மன்னே. (எஎ)

3977. விண்ணெடு முகடு கீண்ட விரைமலர்க் கமல பாதம்
அண்ணலங் கமல வீட்டி லந்தணன் விளக்க நின்ற
கண்ணன்மா மறைநூல் கற்ற காட்சிசா லந்த ணாளர்
தண்ணறு முளரி யன்ன தாண்மலர் விளக்கி னனல். (எஅ)

3978. அதிர்கடல் ஞால வட்டத் தரசெலாங் கொணர்ந்து கற்றைக்
கதிர்மணித் திரளும் பொன்னுங் காண்டகக் குவித்தல் செய்யும்
நிதியறைக்கிறைமை பூண்டா னிழல்மணிச் சுடிகை நெற்றிக்
கொதியழ னச்சு நாகக் கொடிவல னுயர்த்த கோவே. (எகூ)

3979. பழுக்கும்வெங் கொலைவேற் றெவ்வர் பகட்டெழின் மார்வம் போழ்ந்து
விழுக்கொடு நிணம்வாய்ப் பில்கி மின்னெனப் பிறழும் வெள்வேல்
முழுக்கரும் புயனேய் செங்கை முருகவிழ் பசுந்தார்க் கன்னன்
வழக்கமேற் கொண்டு நின்றான் வான்பொருண் முகந்து மன்னே. ()

3976. நீலம் - நீலமணிகளை. கடுப்ப - ஒப்ப. வண்டுகளுக்கு நீல மணி உவமை. முளரிப் பைந்தார் - தாமரை மாலையையுடைய. மறைக்கிழவர் - அந்தணர். சகாதேவன் மறைக்கிழவரை அருச்சனை புரிதல் செய்தான்.

3977. விண்ணெடு முகடு - ஆகாயத்தின் நீண்ட உச்சியை. கீண்ட - கிழித்த. பாதம் - வாமனனுடைய பாதத்தை. அண்ணல் - பெருமை பொருந்திய. அந்தணன் - பிரமன். தன் பாதத்தை அந்தணன் விளக்கும்படி நின்ற கண்ணன். காட்சிசால் - அறிவு மிக்க. கண்ணன், அந்தணரது தாளாகிய மலரை விளக்கினன்.

3978. ஞாலவட்டத் தரசெலாம்: 3972. கற்றை - தொகுதி. திரள் - தொகுதி. காண்டக - அழகு பொருந்தும்படி. நிதியறைக்கு இறைமை; இறைமை - தலைமை. நிழல் - ஒளி. நச்சு - விடம். நாகக்கொடியை வலத்தே உயர்த்திய கோ; துரியோதனன். கோ, நிதியறைக்கு இறைமை பூண்டான்.

3979. வேலையுடைய தெவ்வரது மார்வத்தைப் போழ்ந்து. தெவ்வர் - பகைவர். விழுக்கு - ஊன்விசேடம்; விழுக்கும் நிணமும்: "விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினன்" (புறநா. 371. 22.) பில்கி - சிந்தி. முழுக்கரும் புயல் - முழுவதும் கரிய மேகம்; சூல்கொண்ட மேகம் என்றபடி. கொடை மிகுதி பற்றி 'புயல்தோய் செங்கை' என்றார்; தோய் உவமவாசகம். வேலையும் கையையும் உடைய கன்னன். வழக்கம் - இரவலர்க்கு வழங்குதலை. கன்னன் பொருளைமுகந்து வழங்குதலை மேற்கொண்டு நின்றான்.

3980. காசிபன் பரத்து வாசன் கண்ணுவன் மயித்தி ரேயன்
கோசிகன் பரசு ராமன் கோதமன் வாம தேவன்
மாசறு வியாத ணுதி மாதவக் கிழவ ரோடு
பூசல்வண் டாற்று தாரான் புரிந்தன னிராச சூயம். (அக)

3981. நெருப்புறழ் தோற்றஞ் சான்ற நெடுந்தவக் கிழவர் தொன்னூற்
பரப்பெலாந் தெளியக் கற்ற பழமறை யந்த ணாளர்
திருத்தகு கொற்ற வேந்தர் திரண்டபே ரவையின் முன்னம்
அருச்சனை புரிதல் யார்க்கென் றரசனாந் தெண்ணி னானல். (அஉ)

3982. மற்பழுத் தேந்து நின்டோன் மன்னவன் குறிப்பு நாடி
முற்படப் பூசை யாற்றன் முருகுலாம் பசும்பொற் கோட்டுக்
கற்பகங் கொணர்ந்து வந்த கண்ணனுக் கன்றே யென்னச்
சொற்புகன் றுரைப்பான் முற்றுந் துணிசகா தேவ னங்கே. (அங)

3983. பூப்பவன் றானும் பூவாப் பொழிலெலாம் பூத்து நின்று
காப்பவன் றானு மூழிக் கடையினிற் கனலுந் தீயால்
தீப்பவன் றானு மாயர் தேமொழி மாதர் செங்கை
கூப்பிடத் தூசு வாரிக் குளிர்மரத் திவர்ந்த கோவே. (அச)

3984. உலகெலாங் கண்ண னன்றி யொன்றிலை யுணருங் காலைக்
கலவமா மயிலெ ருத்திற் கவின்கனிந் தொழுகு மேனி

---

3980. பூசல் வண்டு - ஆரவாரத்தையுடைய வண்டுகள். தாரான் - தருமபுத்திரன். தாரான் காசிபன் முதலியவரோடு இராசசூயம் புரிந்தனன்.

3981. நெருப்புறழ் - தீயை ஒத்த. சான்ற - மிக்க. தொன்னூற் பரப்பு - பழைய சாஸ்திரங்களின் விரிவு. திருத்தகு - செல்வத்தாற் சிறந்த. திரண்ட - கூடியிருந்த. முன்னம் அருச்சனை - முதற்பூசை; அக்கிரபூஜை என்பர். யார்க்குப் புரிதல் என்று. அரசு - தருமபுத்திரன்.

3982. மல் பழுத்து - மல்யுத்தத்தில் முற்றி. மன்னவன் - தரும புத்திரனுடைய. நாடி - ஆராய்ந்து. முருகு - வாசனை. கோட்டு - கிளைகளையுடைய. புகன்று - விரும்பி. முற்றும் துணி - முழுவதும் துணிந்த. சகாதேவன், கண்ணனுக்கன்றே முற்படப் பூசையாற்றல் என்னப் புகன்று சொல்லுரைப்பான்.

3983. பூப்பவன் - உண்டாக்குபவன். பூவாப் பொழில் - உலகங்கள்; 'பாயா வேங்கை', 'கொய்யாக் குறிஞ்சி' என்பனபோல வெளிப்படை. கடை - முடிவு. தீ - வடவாமுகாக்கி. தீப்பவன்றானும் - அழிப்பவனும். ஆயரது மாதர் செங்கையால் கூப்பிட. தூசு - ஆடையை. கோ - கண்ண பிரான். பூப்பவனும், காப்பவனும், தீப்பவனும் கோவே.

3984. ஒன்றிலை - வேறொன்றில்லை. கலவமா மயிலெருத்தின் - தோகையையுடைய கரிய மயிலின் கழுத்தைப்போன்று. கவின் கனிந்து -

மலர்துழா யலங்கன் மாலே மாயனுக் காற்று பூசை
அலர்தலே யுலகுக் கெல்லா மாற்றிய பூசை யாமால். (அடு)

3985. என்னலு முவகை மீதூர்ந் தின்னெழிற் பவளச் செங்கால்
அன்னமு மயினு மன்ன வாய்வளைத் துணைவி யோடு
மன்னவ னெழுந்து செய்யாள் வரிமுலே கிழித்த பைந்தார்க்
கன்னியந் துளவி ஞனைக் கைதொழூஉப் பழிச்சல் செய்தான். (அசு)

3986. எழுந்திறு மாந்து விம்மி யிணைமணிக் குடத்தின் வீங்கிச்
குழைந்தநுண் மருங்கு றேய்க்குங் குவிமுலைத் தலைவி நின்று
பொழிந்தபொற் கலச நீராற் பொழிமதுக் கமழுந் தெய்வச்
செழுந்துழாய்க் கொண்டல் செம்பொற் சேவடி கழீஇயி ஞனே. (அஎ)

3987. நாமவேற் றடக்கை வேந்த னல்வினைப் பயனென் சொல்கேன்
மாமறை முடிவி னின்ற வலம்புரித் தடக்கை மாயன்
காமரு கடவுட் கங்கை கடும்புனல் பூத்த பொற்றாட்
டாமரை விளக்கு பூநீர் சம்புவிற் றுங்கி ஞனல். (அஅ)

3988. கருங்கடல் சிவப்பத் தோன்றுங் கதிர்மணி கிடந்த மார்பின்
திருந்தொளி யாரம் பூட்டித் தேங்கமழ் கலவை பூசிச்

---

அழகு முதிர்ந்து. மேனியையுடைய மாயனுக்கு; மாயன் - கண்ணபிரான்.

3985. என்னலும் - என்று சகாதேவன் கூறியவுடன். மீதூர்ந்து - மிக்கு. துணைவி - திரௌபதி. நடையா லன்னத்தையும் சாயலால் மயிலேயும் ஒத்தவள். மன்னவன் - தருமபுத்திரன். செய்யாள் - இலக்குமியின். துளவினனே - கண்ணபிரானை. தொழூஉ - தொழுது. பழிச்சல் - துதித்தல்.

3986. இறுமாந்து - செம்மாந்து. இணை - இரண்டு. மணிக்குடத்தைப்போல் வீங்கி. வீங்கி - பெருத்து. குழைந்த - சாய்ந்த. மருங்குல் - இடையை. தலைவி - திரௌபதி. துழாய்க்கொண்டல் - கண்ணபிரானுடைய. கழீஇயினன் - கழுவினன். தருமபுத்திரன், தலைவி பொழிந்த கலச நீரால் கொண்டலின் சேவடியைக் கழீஇயினன்.

3987. நாமவேல் - அச்சத்தைச் செய்யும்வேல். வேந்தன் - தருமபுத்திரனுடைய. மறைமுடிவின் - வேதாந்தத்தில். வலம்புரி - சங்கம். மாயன் - கண்ணபிரான். மாயனுடைய தாளாகிய தாமரை; கங்கைப் புனலேப்பூத்த தாளாகிய தாமரை. பூநீர் - பூமியிலுண்டாகிய நீரை; பூவையுடைய நீரை எனலுமாம். சம்புவின் - சிவபெருமானைப்போல. சம்புவிற் றுங்கினு னென்றது தலையிற்றுங்கினு னென்பதைப் புலப்படுத்தியது. இச் செய்யுள் ஒரு பிரதியில் இல்லே.

3988. மணி - கௌஸ்துப மணி. ஆரம் - முத்துமாலேயை. கலவை - கலவைச்சந்தனம். சுரும்பு - வண்டு. தொடையல் - மாலே. சுடர்ந்த -

சுரும்புசூழ் தொடையல் சூட்டிச் சுடர்ந்தபொன் னுடை சாத்தி
அருந்தவம் பழுத்த வேந்த னண்ணலை வழிபட் டானே. (அ௬)

3989. நெறித்தபூங் குவளை மேனி நெடியவன் றனக்குப் பூசை
முறைப்படப் புரித னோக்கி முனிவரு முவகை பூத்தார்
அறத்துறை யொழுகு செங்கோ லரசரு மகிழ்ச்சி கூர்ந்தார்
திறற்சிசு பால னோனன் சிவந்தனன் பெரிதுஞ் செங்கண். (௯0)

3990. நெடுமறைக் கிழவர் வைக நீணில வலயங் காக்கும்
முடிகெழு வேந்தர் வைக முற்பட வழிபா டாற்றல்
படுநிரை புரப்பாற் கேகொல் பார்த்திவன் செயலன் றென்னு
விடுசுடு முறுவ னூற வெகுண்டன னெழுந்து நின்றான். (௯௧)

3991. இலைப்பசுந் தெரியன் மாலை யிளையவ னிசைத்த கூற்றால்
நலத்தகு முதுநூற் கேள்வி நல்லறக் கிழவ னெஞ்சம்
கலக்கமுற் றனன்கொ லம்ம காலமார் கடப்ப ரென்னுச்
சிலைத்தழும் பணிதிண் டோளான் றீயன கிளக்க லுற்றான். (௯௨)

3992. நாட்டவோர் குலனு மின்றி நண்ணிய குணமு மின்றி
வேட்டவா றொழுகு கின்றான் வெள்ளைமுள் ளெயிற்றுப் பேழ்வாய்ச்
சூட்டரா வரசு தாங்கு தொன்னிலத் துயர்ந்தா னென்று
கேட்டவா நன்று மெய்ந்நூற் கேள்வியிற் சிறந்த தன்றே. (௯௩)

---

ஒளிவீசுகின்ற. பழுத்த - முற்றிய. வேந்தன் - தருமபுத்திரன். அண்ணலை - கண்ணபிரானை. அண்ணலை, பூட்டி, பூசி, சூட்டிச் சாத்தி வழிபட்டான்.

3989. நெறித்த - புறவிதழ் ஒடிக்கப்பட்ட. நெடியவன் - கண்ணபிரான். புரிதல் - செய்தலை. அறத்துறை - தருமவழியில். கூர்ந்தார் - மிக்கார். நோனன் - பொருதவனாய். செங்கண் பெரிதும் சிவந்தனன்; கோபித்தா னென்றபடி; பெரிதும் - மிகவும்.

3990. மறைக்கிழவர் வைக - அந்தணர்கள் இருக்கவும். வேந்தர் வைக - அரசர்கள் இருக்கவும். நிரைபுரப்பாற்கு - பசுக்காக்கும் கண்ணபிரானுக்கு. நிரைபுரப்பாற்கே முற்பட வழிபாடாற்றல் கொல். பார்த்திவன் செயல் - தருமபுத்திரனுடைய செய்கை. என்னு - என்று கூறி. சுடுமுறுவல் நாற - கோபிக்கின்ற புன்முறுவல் தோன்றும்படி.

3991. இலைப்பசுந் தெரியல் மாலை இளையவன் - இலைகளை விரவித் தொடுத்த பசுமையான விளங்குகின்ற மாலையையணிந்த சகாதேவன். நலத்தகு - நன்மையால் தக்க. அறக்கிழவன் - தருமபுத்திரன். நெஞ்சம் கலக்கமுற்றனனோ. காலம் ஆர்கடப்பர் - காலத்தின் செய்கையை யார் வெல்வார். தோளான் - சிசுபாலன். தீயன - தீயவார்த்தைகளை.

3992. நாட்ட - நிலைத்திட. குணம் - நற்குணம். வேட்டவாறு - விரும்பியபடி. பேழ்வாய் - பெரிய வாயையுடைய. அராவரசு - ஆதிசேடன். கேட்டவா - கேட்டவிதம். கேட்ட தன்மை நூற்கேள்வியிற் சிறந்த தன்றே.

3993. நன்றுதீ தென்று நாடா னுனிலத் துறைவான் யாங்கும்
பொன்றலில் வேத மின்னும் புரிந்தொருங் குணா கில்லான்
குன்றுகா னுறைவார் வேட்குங் குணன்பசுப் புரப்போன் பித்தர்
மன்றநன் கன்ன மேற்போர் வழுத்திறை யிவன்வே றுண்டோ. (கச)

3994. நக்கவெண் முல்லை சூடி நாந்தமு மகிலு நாறு
மைக்குழ லாயர் மாதர் வரிமுலை தழுவு தூர்த்தன்
முக்குறும் பெறிந்த மூவா முழுத்தவ முனிவர் தம்மின்
மிக்கவ னாக வந்து விளைந்தது விழுமி தாமால். (கரு)

3995. வெய்யபோர் விளைக்க லாற்றுன் வியனக ராட்சி விட்டு
மொய்திரை யடைந்தான் றன்னை மொய்பெரு முழவுத் திண்டோள்
ஐயதா ரரசர் முன்ன ரருச்சனை புரிய நின்ற
மையறு காட்சி நாளும் வாழிய பெரிது மாதோ. (கசு)

கலிநிலைத்துறை.

3996. என்று பற்பல வெவ்வுரை யிகற்சிசு பாலன்
நின்று ரைத்தன னெடியவன் பேசல னிருந்தான்
நன்று ணர்ந்தவர் செவிமுதல் புதைத்தனர் நடந்தார்
வென்றி வெஞ்சிலை யெடுத்தனர் பாண்டவர் வெகுண்டார். (கஎ)

---

3993. நாடான் - ஆராயான். நானிலத்து யாண்டும் உறைவான். நானிலத்து - பூமியில். பொன்றலில் - அழிவில்லாத. வேதத்தை இன்னும் உணரகில்லான். உணரகில்லான் - அறிய முடியாதவன். குன்றிலும் கானிலும் உறைவார் வேட்கும் குணன். வேட்கும் - விரும்புகின்ற. குணன் - குணத்தையுடையவன். மன்ற - நிச்சயமாக. பித்தரும் அன்னமேற்போரும் வழுத்துகின்ற இறை. இவன் வேறு உண்டோ - இந்தக் கண்ணபிரானைப் போல் வேறு ஒருவன் உண்டோ.

3994. நக்க - அலர்ந்த. நாந்தம் - நாரத்தம் பூ; கஸ்தூரி எனலுமாம். ஆயர்மாதரது முலைதழுவுகின்ற தூர்த்தன். முக்குறும்பு - காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குற்றங்களை. மூவா - மூத்தலில்லாத. விளைந்தது - உண்டாகியது. விழுமிது - சிறந்தது.

3995. விளைக்கலாற்றுன் - செய்ய முடியாதவனய். நகராட்சி விட்டு - வடமதுரையின் ஆட்சியை நீங்கி. திரை - கடல்; என்றது துவரை நகரை. அடைந்தான் - கண்ணபிரான். மொய் - வன்மை. முழவு - மத்தளம். ஐய - வியக்கத்தக்க. மையறு - குற்றமற்ற. வாழிய என்றது இகழ்ந்து கூறியது.

3996. வெவ்வுரை - கொடிய வார்த்தைகளை. நெடியவன் - கண்ணபிரான். செவிமுதல் - காதின் அடியை. நடந்தார் - அப்புறம் சென்றார். பாண்டவர் சிலையெடுத்து வெகுண்டார்.

3997. விறல்ப ழுத்தவொள் வேல்வல னேந்தினர் வெதும்பி
நறைகொ ழித்ததார் யாதவ ரமர்க்கெதிர் நடந்தார்
திறல்ப ழுத்ததிண் டோட்சிசு பாலன்வெஞ் சினவாள்
உறைக ழித்தனன் கேடகந் தாங்கின னுடன்ருன். (௬௮)

3998. நன்மின் போன்றவிர் நாந்தக வுழவனைப் பற்றிக்
கொன்மி னாவினைக் குறைமினென் றுடலுநர் தம்மை
நின்மி னின்மினென் றெழுந்தன னீணெறிக் கிடந்த
கன்மி னாகமுன் கருங்கழல் வைத்தகார் வண்ணன். (௬௯)

3999. பாழி சால்கரும் பனைபுரை பாழியக் தடக்கைச்
சூழி யானையின் சுடர்மணி நெடுமருப் பொசித்தோன்
ஊழி யாழல் வாயுமிழ்ந் தொளிறுசெம் முகத்த
ஆழி யாற்சிசு பாலன்வன் றலையினை யறுத்தான். (க௦௦)

4000. சமரெ திர்ந்தவேற் றரியலர் கதிரெழச் சாய்ந்த
திமிர மாமெனத் திசைதிசை யிரிந்தன ராகக்
கமழ லந்துணர்க் கற்பக நறுமலர் தூவி
அமர ரார்த்தன ரந்தா துந்துபி யதிர்ந்த. (க௦க)

3997. விறல் - வெற்றி. அவண் - அந்தயாகசாலையிடத்தே. வெதும்பி- கோபித்து. நறை - தேன். யாதவர் - இடையர். அமர்க்கு - போருக்கு. திறல்பழுத்த - வன்மை முற்றிய. வாளை உறையினின்றுங் கழித்தான். கேடகம் - பரிசை. உடன்ருன் - போர் செய்தான்.

3998. மின்னைப்போன்று அவிர்கின்ற நாந்தகம்; நாந்தகம் - வாள். உழவனை: சிசுபாலனை. பற்றிக் கொன்மின் - பிடித்துக் கொல்லுங்கள். நா - நாக்கு. குறைமின் - துண்டியுங்கள். உடலுநர் - கோபிக்கின்றவர். நின்மின் - நில்லுங்கள். நீள்நெறி கிடந்த கல்மின் ஆகக் கருங்கழல் வைத்த - நீண்ட வழியிடத்துக் கிடந்த கல் ஒரு பெண்ணாகும்படி. தன் பாதத்தை வைத்த; என்றது இராமாவதாரத்தில் அகலிகையின் சாபத்தை நீக்கிய வரலாற்றைப் புலப்படுத்தியது. கார்வண்ணன் - கண்ணபிரான். வண்ணன் எழுந்தனன்.

3999. பாழிசால் - வன்மைமிக்க. பாழி - பெருமை. சூழி - முக படாம். மருப்பொசித்தோன் - கண்ணபிரான். ஊழி ஆழல் வாய் உமிழ்ந்து - ஊழிக்காலத்து அரிய தீயை வாயினின்றும் கக்கி. செம்முகத்த- சிவந்த முகத்தையுடைய. ஆழி - சக்கரம். சிசுபாலனுடைய தலையினை அறுத்தான்.

4000. சமர் - போரில். தரியலர் - பகைவர். கதிர் எழ - சூரியன் தோன்ற. சாய்ந்த திமிரமாமென - கெட்ட இருளைப்போல. இரிந்தனராக - கெட்டு ஓடினராக. கமழலந்துணர் - மணம்வீசும் பூங்கொத்தைக் கொண்ட; அல், அம்: சாரியை; "கம்பவங் கைத்தலத்தன்பர்" (திருச்சிற். 11.) அமரர் - தேவர். அதிர்ந்த - முழங்கின.

4001. உருள்பொ லங்கொடித் தேர்ச்சிசு பாலன துடனின்
றிருள்பி ளக்தெழு மெரிகதிர்ப் பருதிபோற் சோதித்
திரளெ ழுந்தது திரண்டபே ரவையெலாங் காண
அருள்பொ ருந்துல களிப்பவன் றாளடைந் ததுவே. (கOஉ)

4002. மறத்தி னாற்றிரு மறுப்பொலி மார்பினன் றன்னைப்
பிறப்பு மும்மையி னினைத்தலாற் பிறங்கழல் வாய்கான்
றெறித்த செஞ்சுட ராழியா லிறந்தவவ் வேந்தல்
நெறித்த பூந்தொடை நேமியஞ் செல்வனைச் சேர்ந்தான். (கOங)

4003. எத்தி றத்தினு மிலங்கொளி விரிமணிச் சூட்டுத்
துத்தி நாகணைத் துயில்பரா பரனையுண் ணினைப்போர்
முத்த ராகுவர் முத்துடை மூரிவெண் கோட்டு
மத்த மால்களிற் றாசவென் றருந்தவன் வழங்கும். (கOச)

4004. எழுபு லப்பகை யெறிந்தமா தவரும்வே தியரும்
மழைம தக்களிற் றாசரு மனமகிழ் சிறப்பச்
செழுநி லக்கணெண் டிசையெலாந் தெள்ளொளி நிலவு
பொழித னிக்குடைப் புரவலன் பூசனை புரிந்தான். (கOரு)

---

4001. உருள்கின்ற தேர், கொடியையுடைய தேர். சிசுபாலனுடைய உடலினின்று. பருதிபோல் - சூரியனைப்போல. சோதித்திரள் - ஒளியின் தொகுதி. பேரவை - பெருஞ்சபை. உலகளிப்பவன் தாள் - கண்ணபிரானுடைய பாதத்தை. அவையெலாம் காண எழுந்து அடைந்தது.

4002. மறத்தினால் - பகைமையினால். திருமறுப்பொலி மார்பினன் றன்னை - கண்ணபிரானை. பிறப்புமும்மையின் னினைத்தலால் - மூன்று பிறவியிலும் நினைத்தமையால். அழலை வாயினின்றும் கான்று. எறித்த - வீசிய. ஆழியால் - சக்கரத்தால். ஏந்தல் - சிசுபாலன். நெறித்த பூந்தொடை - புறவிதழ் ஒடித்த பூக்களாலாகிய மாலையை யணிந்த. நேமியஞ் செல்வனை - கண்ணபிரானை. ஏந்தல் நினைத்தலாற் சேர்ந்தான்.

(பி - ம்) 4. செல்வனை நேர்ந்தான்.

4003. எத்திறத்தினும் - எவ்வகையினாலும். சூட்டு - உச்சியையுடைய. துத்தி - பொறி. பராபரனை - கண்ணபிரானை. உள் - மனத்தே. முத்தராகுவர் - மோட்சமடைவர். மூரி - வன்மை: அரச: விளி; என்றது பரிக்ஷித்தை. தவன் - சுகமுனிவன். வழங்கும் - கூறுவான்.

4004. எழுபுலப்புகை எறிந்த - எழுகின்ற ஐம்புலன்களாகிய பகையை வென்ற. நிலக்கண் - நிலத்திடத்து. தெள்ளொளி நில்வு - தெளிந்த ஒளியாகிய நிலவை. புரவலன் - தருமபுத்திரன்.

4005. சூட்ட ராவணைத் துயில்பவ னுந்தியங் கமலம்
காட்டு மந்தணன் கடுக்குமவ் வேதிய ரோடு
வேட்ட தண்மதி வெண்குடைப் பெருவிறல் வேந்தன்
மோட்டு வெண்டிரை முழங்குமந் தாகினி படிந்தான். (கOசு)

4006. கள்ள விழ்ந்தபூங் கற்பகத் திருந்தகா வலனை
எள்ள வீற்றிருந் தெண்டிசை வளாகமு நிழற்றும்
வெள்ளி வெண்குடை வேந்தனல் விடையளித் தனனால்
வள்ளி தழ்ப்பொலந் தார்முடி மன்னவர்க் கன்றே. (கOஎ)

4007. உகந்த பாந்தளங் கொடியினு னல்லதை யொருங்கு
திகந்த முட்டிய செழும்புகழ் மன்னரெல் லோரும்
அகந்த ழைத்தெழு முவகைய ரதிர்திரைப் பரவை
முகந்த காரென முரசொலி கறங்கவே கினரால். (கOஅ)

4008. என்றி சைத்தனு மன்னனல் விருநில வேந்தர்
நன்று வப்பொடு நடந்திட நச்சரா வுயர்த்தோன்
ஒன்று நெஞ்சக முவக்கிலன் போயவா றென்னே
மன்ற கூறென மாதவ னுரைக்கலுற் றனனே. (கOசு)

4009. துளங்கு வெள்ளிடை துளும்புதண் புனலெனத் தோன்ற
விளங்கு தண்புனல் வெள்ளிடைப் பரப்பெனக் காட்டும்
வளங்கொண் மண்டப மயனினி திழைத்தது வயங்கு
பளிங்கிற் செய்தது பன்மணி குயின்றதொன் றுளதால். (ககO)

---

4005. துயில்பவன் : கண்ணபிரானது. கமலத்துக்காட்டிய அந்தணன் ; பிரமனை. கடுக்கும் - ஒக்கும். வேட்ட - விரும்பிய. விறல் - வெற்றியையுடைய. வேந்தன் - தருமபுத்திரன். மோடு - பெருமை. மந்தாகினி - கங்கையில். வேந்தன் அராவணைத் துயில்பவனேடும் வேதியரோடும் படிந்தான்.

4006. கள் - தேன். காவலனை - இந்திரனை. எள்ள - இகழும்படி. வளாகம் - பரப்பு. நிழற்றுகின்ற குடையையுடைய வேந்தன் - தருமபுத்திரன். வள் - பெருமை ; செறிவுமாம். மன்னவர்க்கு விடையளித்தனன்.

4007. உகந்த - உயர்த்திய. பாந்தளங் கொடியினன் - துரியோதனன். அல்லதை - அல்லது ; ஐ, சாரியை. திகந்தம் - திசைகளின் முடிவு. அகம் - உள்ளம். உவகையர் - மகிழ்ச்சி யுடையராய். பரவை - கடல் நீரை. கார் என - மேகத்தைப்போல. கறங்க - முழங்க.

4008. மன்னன் - பரீக்ஷித்து. நடந்திட - நடந்தனராக. நச்சரா வுயர்த்தோன் - துரியோதனன். ஒன்றும் - சிறிதும். உவக்கிலனுய்ப் போயவாறு. மன்ற - தெளிவாக. மாதவன் - சுகமுனிவன்.

4009. வெள்ளிடை - வெளியிடம். துளும்பு - அசைகின்ற. தோன்ற - தோன்றவும். எனக்காட்டும் - என்று காட்டும். வளம் - வுண்மை, மண்டபம் மயனால் இழைக்கப்பட்டது.

4010. விழுச்சி றப்புடை வியனிலாப் பரப்பென விளங்க
இழைத்த தன்புன லிடையெழு மாகதச் சுடரைத்
தழைத்த தோட்டறு காமெனத் தகைபெற வளர்க்கும்
உழைக்க ருஞ்சிறு கற்றின முழையுழை நோக்கும். (கக௧)

4011. தெள்ளு நீரெனத் திகழ்தரு திருநிலத் திலங்கு
வெள்ளி வெண்கதிர் நித்திலம் விரியல்வெண் டோட்டு
முள்ள ரைச்செழு முளரிநாண் முகிழெனு முற்றுக்
கள்ளுண் வேட்கையிற் களியிளஞ் சுரும்பினங் கஞலும். ()

4012. பட்ட காரிருள் பருகுசெம் பதுமரா கத்தின்
விட்டி லங்கிய செங்கதிர் மீமிசைத் தவழ்ந்த
கட்ட விழ்ந்தசெங் தோட்டபூங் கமலமற் றென்னுப்
பெட்ட நெஞ்சொடு பெயர்தரு மடவனப் பிள்ளை. (கக௩)

4013. பொழியு மொண்கதிர் நீலமென் போதிய னீலக்
கொழும லர்க்குல மாமெனக் கொய்வதற் கெய்து
மழலை யேழையர் குழுவெலா மதர்த்ததங் கருங்கண்
நிழலு மொண்ணறு நீலமென் றங்கா நீட்டும். (கக௪)

---

4010. வியன் - அகன்ற. நிலாப்பரப்பு - நிலாப்பரவிய இடம். விளங்கும்படி இழைத்த. மரகதச்சுடரை - பச்சை ஒளியை. தோடு அறுகாமென - இதழ்களையுடைய அறுகம்புல்லாமென்று. உழையினது சிறுகற்றினம்; உழை - மான். கற்றினம் - கன்றின் கூட்டம். உழையுழை - பக்கங்களில். உழையின் கற்றினம் மரகதச்சுடரை அறுகாமென நோக்கும்.

4011. தெள்ளு - தெளிந்த. நிலத்து - பூமியின்கண். இலங்குகின்ற நித்திலம்: முத்துக்கள். வெண்தோட்டு - வெண்மையான இதழ்களையுடைய. முள்ளரை - முட்களை அரையிலுடைய. முளரிநாண் முகிழென. வெண்டாமரையின் அரும்பென்று எண்ணி. முற்று - சூழ்ந்து. கஞலும் - நெருங்கும். சுரும்பினம் நித்திலத்தை வெண்முளரியின் முகிழெனக் கஞலும்.

4012. பட்ட - தோன்றிய. பதுமராகம் - மாணிக்கம். கதிர் - சிவந்த கிரணம். கட்டு - முறுக்கு. தோட்ட - இதழையுடைய. கமலம் - தாமரை. என்னு - என்று எண்ணி. பெட்ட - விரும்பிய. பெயர்தரும் - செல்லும். மட அனப்பிள்ளை - இளைய அன்னக்குஞ்சு. அன்னப்பிள்ளை, பதுமராகத்தின் கதிரைக் கமலமென்று பெயர்தரும்.

4013. ஒண்கதிரைப் பொழியும் நீலமணிகளை நீலமலர்களின் குலமாம் என. எய்துகின்ற ஏழையர்: மகளிர். குழு - கூட்டம். தம் கருங்கண்ணின் நிழலையும் நீலம் என்று; நீலம் - நீலோற்பலமலர். கரம் - கையை,

4014. இன்ன தன்மைய விலங்கொளி மண்டப நடுவண்
மன்னும் வாளரி சுமந்ததோர் மணியணை பொலிய
பின்னல் வெண்டிரைப் பெருநில வேந்தர்வந் திறைஞ்ச
மின்னு நக்கவேன் மன்னவன் வீற்றிருந் தனனால். (ககடு)

4015. அச்ச ணங்குவே லிளையரு மரும்பவிழ் துளவப்
பச்சை மேகமும் பாங்குற விருந்தபார்த் திவனை
நச்ச ராவல னுயரிய நனைகவுட் பரூஉத்தாட்
கச்சை மால்களிற் றரசனுங் காணிய வெழுந்தான். (ககசு)

4016. கருவி வானெனக் கவினுநங் கண்ணன்வை குதலான்
உருவ மாமணி யுலப்பில வொளித்தலா னுடைக்கும்
பரவை வெண்டிரைப் பாற்கட லாமென விளங்கு
திருவ மண்டபம் புக்கனன் சினக்களி றன்னான். (ககஎ)

4017. சூழ்ந்த பேரொளி துளும்பிய நிலனைநீ ரென்னுத்
தாழ்ந்த வந்துகி லிடவயிற் றழீஇயினன் பளிங்கு
போழ்ந்தி யற்றிய நிலனெனப் பூம்புன லிடைப்போய்
வீழ்ந்த னன்பெரு வேத்தவை முகிழ்நகை விளைப்ப. (ககஅ)

---

4014. மண்டபத்தின் நடுவண்; நடுவண் - நடு இடத்தே. அரி - சிங்கம். அணை - சிங்காதனம். பொலிய - பொலிவு பெறும்படி. பின்னல் - ஒன்றோடொன்று பின்னுதலையுடைய. மன்னவன் - தருமபுத்திரன்.

4015. அச்சணங்கு வேல் இளையரும் - வலியினையும் வருத்தத்தினைச் செய்யும் வேலையுமுடைய வீமன் முதலியவர்; "அச்சணங்கு வேலோய்" (சீவக. 2777.) பச்சைமேகமும் - கண்ணபிரானும். பார்த்திவனை - தருமபுத்திரனை. உயரிய - உயர்த்திய. கவுள் - கன்னம். பரூஉத்தாள் - பருத்த பாதம். கச்சை - கீழ்வயிற்றில் கட்டப்படும் கச்சு. மதத்தால் நனைந்த கவுளையும், தாளையுமுடைய களிற்றினையுடைய அரசன்: துரியோதனன். காணிய - பார்த்தற்கு.

4016. கருவிவான் - மின் முதலிய தொகுதியையுடைய மேகம். கவினும் - அழகுவிளங்கும். வைகுதலால் - தங்கியிருத்தலால். உலப்பில - அளவில்லாதன. திருவமண்டபம் - அழகுடைய மண்டபத்தில். களிறன்னான். - துரியோதனன்.

4017. துளும்பிய - அசைந்த. என்னு - என்று எண்ணி. தாழ்ந்த அம் துகில் இடவயிற்றழீஇயினன் - தொங்கிய அழகிய ஆடையை இடப்பக்கத்தே அணைத்துக் கொண்டவனாய்; "புடைவீ ழந்துகி லிடவயிற் றழீஇ" (முருகு. 181.) போழ்ந்து - பிளந்து. வேத்தவை - இராசசபை. முகிழ்நகை விளைப்ப - புன்சிரிப்புச்செய்ய. விளைப்ப வீழ்ந்தனன்.

4018. நகைமு கிழ்த்திட னகைமுகிழ்த் திடலென நகுமென்
முகைதொ டுத்ததார் மன்னவன் மொழிந்தன னுக
இகல்விளைத் திடு கரியவ னின்னருட் கண்ணால்
மிகந கைக்கென விடுநகை புரிந்தனன் வீமன். (கககூ)

4019. சுரும்பு சூழ்தொடைத் துருபதன் வாத்தினற் றேன்று
கரும்பி னன்னசொற் களிக்கய லன்னவாட் கருங்கட்
குரும்பை மென்முலைக் கோதையு மிகுளையர் குழாமும்
அரும்பு வாணில வணிநகை முகிழ்த்தன ரன்றே. (கஉ0)

4020. விளைந கைத்திறங் காண்டலும் விளைநறுப் பருகிக்
களிய ளிக்குல மாற்றுதார்க் காவலற் காணான்
நளிய முற்சின நச்சரா வுயர்த்தவ னுணு
புளைவ யப்பரித் தேர்கடி தோட்டின னொழிந்தான். (கஉக)

4021. இன்ன தான்முனிந் தேழுயர் குஞ்சர நகர்க்கு
மன்ன னேகிய காரண மாமருப் பொசித்தோன்
துன்னு சாலுவற் றொலைத்தமை கேட்டிமற் றென்னு
முன்னை நான்மறை முற்றிய முழுத்தவன் மொழிவான். (கஉஉ)

---

4018. நகைமுகிழ்த்திடல் - சிரிக்கவேண்டாம். என - என்று. நகும் - அலர்ந்த. முகை - அரும்பு. மன்னவன் - தருமபுத்திரன். இகல் - மாறுபாட்டை. கரியவன் - கண்ணபிரான். கண்ணால் - கண்ணின் குறிப்பால். மிக நகைக்க என - மிகச்சிரிக்க என்று குறிப்பித்திட. வீமன் விடு நகை புரிந்தனன். விடுநகை - வெளிப்படையான சிரிப்பை.

4019. சுரும்பு - வண்டு. துருபதன் : பாஞ்சாலதேசத் தரசன். கரும்பின் அன்ன - கரும்பின் இனிமையை ஒத்த. சொல்லையும் கண்ணையும் முலையையுமுடைய கோதை : திரௌபதி. இகுளையர் குழாம் - தோழியர் கூட்டம். அரும்ப - வெளியில் தோன்றும்படி. நகை முகிழ்த்தனர் - சிரித்தனர்.

4020. நகைத்திறம் - எல்லாரும் சிரிக்கும் தன்மையை. நறு - தேன். அளிக்குலம் - வண்டின் கூட்டம். காவலன் - தருமபுத்திரனை. காணான் - பார்க்காதவனாய். நளி - பெருமை. நச்சரா உயர்த்தவன் : துரியோதனன். நாணுபு - நாணி. உளை - தலையாட்டம். தேரைக்கடிது ஓட்டினனாய். ஒழிந்தான் - நீங்கினான்.

4021. குஞ்சரநகர்க்கு மன்னன் ஏகிய காரணம் இன்னதால்; குஞ்சர நகர் - அத்தினபுரம். ஏழுயர்குஞ்சரம் - ஏழு முழமுயர்ந்த யானை; இது குஞ்சரத்திற்கு அடை; "குடர்தொடர் குருதிக் கோட்டுக் குஞ்சர நகரத் தார் கோன்" (சீவக. 2182.) மன்னன் - துரியோதனன். மருப்பொசித்தோன் - கண்ணபிரான். சாலுவன் - சிசுபாலனுடைய நண்பன். முழுத்தவன் - சுக முனிவன்.



# 42. சாலுவனைக் கொன்ற அத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4022. ஊழிவெங் கனல்போ லுருகெழு சீற்றத்
தொளிறுவாட் படைச்சிசு பாலன்
தோழன்வெற் புறழ்தோட் சாலுவ னென்பான்
சுரும்புசூழ் தாமரை துறந்து
வாழிநல் வளத்த விதர்ப்பநா டுதித்த
மாழைமென் னோக்கியை யலங்கல்
ஆழியான் கவர்நா ளடுசம மாற்றி
யழிந்தனன் யாதவர்க் கன்றே. (க)

4023. அழிதரு திறத்தான் முனிவுமீ தூர்ந்த
வடுதிறற் சாலுவன் சுரும்பு
கொழுதிய பசுந்தார் யாதவர் மரபு
கோறுமென் றின்னிளந் தேறல்
வழிதரு கடுக்கைப் பசுந்தொடை புனைந்த
வார்சடை வள்ளலை நினைந்து
புழுதிவாய் மடுத்துப் பன்னிரு திங்கள்
புரிந்தன னருந்தவ மன்னோ. (உ)

---

4022. உருகெழு - அச்சம் பொருந்திய. சீற்றத்தையும் வாட்படையையும் உடைய சிசுபாலனுடைய. வெற்புறழ் - மலையை ஒத்த. தாமரை துறந்து விதர்ப்பநாட்டி லுதித்த நோக்கியை : உருக்குமிணியை. அலங்கலையணிந்த ஆழியான் : கண்ணபிரான். கவர்நாள் - கவர்ந்து செல்லும் நாளில். சமம் ஆற்றி - போரைச் செய்து. அழிந்தனன் - தோற்றனன். யாதவர்க்கு அழிந்தனன்.

4023. அழிதருதிறத்தால் - தோற்ற தன்மையால். முனிவு மீதூர்ந்த - கோபம் மிக்க. சுரும்பு - வண்டு. கொழுதிய - கிண்டிய. கோறும் - கொல்வேம். கடுக்கை - கொன்றை. வள்ளலை - சிவபெருமானை. புழுதிவாய் மடுத்து - மண்துகளை உண்டு. திங்கள் - மாதம்.

4024. எரியுமிழ் கணிச்சி யிமையவன் வெளிப்பட்
டென்னைநீ விழைந்ததென் றியம்ப
விரிதலை விசும்பும் பரவைமா நிலனும்
வெலப்படா வெருவரு செலவின்
ஒருபெரு விமானம் வேண்டுமென் றுரைப்ப
வுவந்தனன் மயனையவ் வாறு
புரிபுநல் கெனலு முருகெழு விமானம்
புரிந்தவ னளித்தன னன்றே. (௩)

4025. அரும்புவெண் டிங்க ளணிந்தவ னம்பி
னழற்படு புரத்தினை நகைப்ப
திரும்பினிற் புனைந்த தேழிரும் பொழிலு
மிமைப்பினிற் படர்குவ தாய
திருந்தெழில் விமான மிவர்ந்தனன் செருக்கிச்
செருவிழை தானையோ டெழுந்து
கருங்கடல் வேலித் துவரைசென் றிறுத்தான்
காலவேற் சாலுவன் கடுகி. (௪)

4026. பன்மலர்ப் படப்பை யெறிந்தும்வெண் கோட்டுப்
பச்சிள மதிமுது குரிஞ்சு
பொன்மதிற் குடுமி கொண்டுநாற் றிசையும்
பொழிந்தசெந் தூளியாற் காந்தும்

---

4024. கணிச்சியையுடைய இமையவன் - சிவபெருமான்; கணிச்சி - மழுவாயுதம். நீவிழைந்தது என்னை; என்னை - எது. விசும்பாலும் நிலத்தாலும் வெலப்படாத. வெலப்படா - வெற்றி கொள்ளப்படாத. வெருவரு செலவின் - அஞ்சத்தக்க விரைவையுடைய. உரைப்ப - சாலுவன் கூறினுக. சிவபெருமான் உவந்தனனாய். புரிபு நல்கெனலும் - செய்துகொடு என்று கூறலும். உருகெழு - அச்சம்பொருந்திய. விமானம்: சௌபம் என்பது அதன் பெயர்; ஆகாயத்தே விரைந்துபறக்கும் தன்மையது. அவன் - மயன்.

4025. அரும்பு - தோன்றுகின்ற. அணிந்தவன் - சிவபெருமான். அம்பின் - அம்பால். அழற்படு - தீயிற்பட்ட. புரம் - திரிபுரம். பொழில் - உலகம். படர்குவதாய - செல்வதாகிய. திருந்து எழில் - திருந்திய அழகுடைய. நகைப்பதும், புனைந்ததும், படர்குவதாயதுமான விமானத்தில். செருக்கி - களித்து. செரு விழை - போரை விரும்புகின்ற. துவரை - துவாரகை நகரில். சாலுவன் கடுகி இறுத்தான்; இறுத்தான் - தங்கினான்.

4026. மலர்ப்படப்பை - பூஞ்சோலையை. எறிந்தும் - அழித்தும். கோட்டு - நுனியையுடைய. மதியின் முதுகை உரிஞ்சுகின்ற மதிலின் குடுமியைக் கொண்டும்; "இகன்மதிற் குடுமிகொண்ட மண்ணுமங்கலம்"

மின்முகங் கிழித்து விளங்குகார் தவழும்
வியன்சினை மாம்பல தூரந்தும்
கன்மழை சொரிந்துங் கறங்கிடி வீழ்த்துங்
கலக்கினன் றுவரைமா நகரம். (ரு)

4027. மூவெயில் கலக்கக் கலங்கிய வுலகின்
முதுநகர் கலக்குறல் காணு
நாவலம் பசும்பொ னுடைசூழ் செற்றி
நனைகவுட் கரிமருப் பொசித்த
காவல னுயிர்த்த கடற்சுற வுயர்த்த
காளையே முதலிய குமரர்
பூவணி யிலங்கு குடுமிநீ டிலைவேற்
போர்பொரு தானையோ டெழுந்தார். (சு)

4028. அருப்புகா ளலங்க லமரோ டவுண
ராடிய வடுசமங் கடுப்பச்
செருக்கொடு மறலி யிருபெருஞ் சேனைத்
திரளுமா டமர்த்தொழில் விளைப்ப
வரைத்தலை பொடிக்குங் கதிரிருள் பிளந்து
மாற்றல்போன் மகரவெல் கொடியோன்
பொருப்புறழ் திணிதோட் சாலுவன் புணர்த்த
புணர்ப்பெலாம் பொருக்கெனத் தொலைத்தான். (எ)

---

(தொல். புறத். 13.); "கடிமதிலெறிந்து குடுமிகொள்ளும்" (பெரும்பாண். 451.) கரந்தும் - மறைத்தும். கார் - மேகம். துரந்தும் - வீசியும். துவரை நகரத்தைக் கலக்கினன்.

4027. மூவெயில் - திரிபுரம். உலகின் - உலகைப்போல. முதுநகர் - துவரை. காணு - கண்டு. நாவலம் பசும்பொன் - சாம்பூநதம். காவலன் - கண்ணபிரான். உயிர்த்த - பெற்ற. காளை - பிரத்தியும்நனன். பூவணி இலங்குகின்ற குடுமியையுடைய வேற்போர்; 'பூப்பொலிந் தடுபோர் வேட்டுப் புழுங்கிவாய் புகைந்து வெய்ய, தீப்பொலி குடுமிக் கூர்வேற் சினப்படை தெரிபு விட்டான்." (4046.)

4028. அரும்பு - அரும்புகளையுடைய. அலங்கல் - மாலை. அமரர் - தேவர். அடுசமம் - கொல்கின்ற போரை. கடுப்ப - ஒப்ப. மறலி - யமன். திரள் - கூட்டம். வரைத்தலை - மலையினுச்சியில். பொடிக்கும் - தோன்றுகிற. கதிர் - சூரியன். மகரம் - சுறு மீன். மகரக்கொடியோன் - பிரத்துமனன். புணர்த்த - சூழ்ந்துசெய்த. புணர்ப்பு - சூழ்ச்சி. பொருக்கென - விரைய.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4029. கொய்சுவற் புரவி மேலுங் கூந்தலம் பரித்தேர் மேலும்
மையிருங் குன்ற மன்ன மழைமதக் களிற்றின் மேலும்
பெய்கழ லிளையர் மேலும் பெய்தன னப்பு மாரி
ஐயபூந் தெரியன் மாலை யைங்கணைக் கிழவன் மன்னோ. (அ)

4030. பூங்கணை துறந்து வெய்ய பூத்தலைப் பகழி சிந்தும்
வீங்கெழி லலங்கற் றோளான் விற்றொழில் வியந்து நோக்கித்
தாங்கருங் கதழ்வெஞ் சீற்றச் சாலுவன் சிலைகைத் தாங்கி
ஓங்கெழில் வலவ னேவா வூர்திமேற் கடாயி னானால். (கூ)

4031. உலப்பில வலத்த வூர்தி யொன்றெனத் தோன்று மாங்கே
பலப்பல வாகும் விண்மேற் பறக்குமட் பரப்ப தாகும்
மலைத்தலை யிவரு மொல்லென் வாரியிற் பயிலுங் கண்ணிற்
கலப்புறுங் காக்கு மெங்குங் கறங்கெனச் சுழலு மம்மா. (க0)

4032. சூழ்சுடர் விமானம் வந்து தோன்றிய விடங்க ளெல்லாம்
ஊழிவா யுருமுத் தீயு முருகெழு கதிரு நச்சுப்
பாழிவா யாவு மன்ன பல்கணை பொழிந்து நின்றான்
ஏழுயர் களிநல் யானை யாதவர் பெயர்ந்தி லாரால். (கக)

---

4029. கொய்சுவல் புரவி - கத்தரித்த பிடரிமயிரையுடைய குதிரை. கூந்தலையுடைய பரி. கழல்பெய் இளையர் - வீரக்கழலை யணிந்த வீரர். அப்புமாரி பெய்தனர் ; அப்புமாரி - அம்புமழை. ஐய - அழகு பொருந்திய. ஐங்கணைக் கிழவன் - பிரத்துமனன் ; எழுவாய்.

4030. பூங்கணை - மலரம்புகளை. பூத்தலை - கூரிய தலையை யுடைய ; பகழி - அம்பு. தோளானுடைய விற்றொழிலை. தோளான் - பிரத்துமனன். தாங்கரும் - தாங்குதற்கரிய. கதழ் - மிக்க. சிலையைக் கையில் தாங்கி. வலவனேவா வூர்தி - பாகனாற் செலுத்தப்படாத விமானத்தை ; "வலவ னேவா வான வூர்தி" (புறநா. 27.) மேற்கடாயினான் - மேலே செலுத்தினான்.

4031. உலப்பிலா வலத்த வூர்தி - அளவில்லாத வெற்றியையுடைய விமானம். ஆங்கே, ஒன்றெனத் தோன்றும். மட்பரப்பதாகும் - பூமியிடத்துள்ளதாகும். மலைத்தலை - மலையுச்சியில். ஒல்லென்: ஒலிக்குறிப்பு. வாரி - கடல். காக்கும் - மறையும். கறங்கு - காற்றாடி.

4032. உருமு - இடியின். உருகெழு - அச்சம்பொருந்திய. நச்சு - விஷத்தையுடைய. பாழி - பெருமை. அன்ன - போன்ற. கணை - அம்புகளை. ஏழுயர் யானை : 4021. பெயர்ந்திலார் - திரும்பச் செல்லவில்லை,

4033. கருப்புவில் காந்து மற்றோர் கார்முகங் குழைத்த காளை
இருப்புவன் மானஞ் சிந்த வெய்தன னின்ற காலைத்
தருக்கினோர் தண்டந் தன்னாற் சாலுவன் சேனை காப்போன்
பொருப்பின்வீ ழிடியே றென்னப் புடைத்தலு முயங்கி னானே. (கஉ)

கலிவிருத்தம்.

4034. மோட்டுவெண் டிரைநில முழுதும் வென்றவத்
தோட்டபூங் கணையினான் சோர்வு நோக்குறு
மீட்டனன் வலவன்மால் வேழ வெண்ணிறக்
கோட்டினு லியற்றிய கொடிஞ்சித் தேரரோ. (கங)

4035. மொய்யெனப் பணைத்தெழு முழவுத் தோளினான்
ஒய்யென மூர்ச்சனை யொழிந்து தீர்தலும்
மையறு வலவனை நோக்கி மற்றுநின்
செய்வினை யினிதெனச் செப்பன் மேயினான். (கச)

4036. இடிமுர சதிர்சமத் தேற்ற ஞான்றெலாம்
அடிபிறக் கிட்டிலா ரடல்செ யாதவர்
விடுபரித் தேரினை விரைந்து மீட்டனை
கெடுநிலத் தென்புகழ் நிலவு நீடியே. (கரு)

---

4033. கருப்புவில் - கரும்பாகிய வில்லை. காந்து - மறைத்து. கார்முகம் - வில்லை. காளை - பிரத்துமனன். இருப்புவன் மானம் - இரும்பாற் செய்த வலிய விமானத்தை. தருக்கின் - கோபத்தால். தண்டம் - கதை. சேனைகாப்போன் - சேனாபதி; த்யுமான் என்பவன். பொருப்பின் - மலையில். புடைத்தலும் - அடித்தவுடன். உயங்கினன் - வருந்தினன்.

4034. மோடு - பெருமை. தோட்ட - இதழையுடைய. பூங்கணையினன் - பிரத்தியும்னனுடைய. நோக்குறு - நோக்கி. வலவன் - தேர்ப்பாகன். கோடு - தந்தம். தேரை மீட்டனன்.

4035. மொய் என - போரென்று சொல்ல. பணைத்து - பெருத்து. தோளினான் - பிரத்துமனன். ஒய்யென - விரைய. மூர்ச்சனை - மூர்ச்சை. ஒழிந்து தீர்தலும் - நீங்கியவுடன்; ஒரு பொருட்பன்மொழி. வலவனை - தேர்ப்பாகனை. நின்செய்வினை இனிது; செய்வினை - காரியம்.

4036. சமத்து - போரில். ஏற்ற ஞான்று - எதிர்த்தபொழுது. அடிபிறக்கிட்டிலார் - முதுகுகாட்டார். அடல் - வன்மை. யாதவர் - ஆயர். யாதவர் பிறக்கிட்டிலார். மீட்டனை - மீட்டாய். என்புகழ் நிலத்து நீடி நிலவும்; நீடி - நீண்டு.

4037. கொன்னவில் களிற்றுவெண் கோடுகொண் டெழும்
என்னைமுன் னின்றுநா னென்னை கூறுகேன்
மன்னிய பெருவிறன் மாம னல்கிய
நன்னுதற் பேதையர் நகைமு கிழ்ப்பரே. (கசு)

4038. எனச்சில கட்டுரை யிறைவ னின்றருள்
வனப்புவீற் றிருந்ததோண் மைந்தன் கூறலும்
கனைத்தவெண் டிரைக்கருங் கடனி லம்புகழ்
தனித்திறற் றருகன் றநயன் சாற்றுவான். (கஎ)

4039. தெம்மலை திறத்தினன் செம்பொற் றேரவன்
சும்மைசால் களத்தினிற் றுளக்க மெய் துமேல்
வெம்முனை முகத்ததேர் விசைத்து மீட்டன்மற்
றெம்முடை யறனென வியம்பி னனரோ. (கஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4040. தாருகன் காதன் மைந்தன் சாற்றிய மாற்றங் கேளா
ஆரம ராற்றல் செய்த வடுபடைத் தலைவன் றன்மேல்
தேர்செல விடுதி யென்றான் செஞ்சிலை வளைத்து மற்றோர்
காரெனத் திகழ்ந்து நின்ற கல்லெனக் கவினுந் தோளான். (கசு)

---

4037. கொல்நவில் - கொலைத்தொழிலைச் செய்கின்ற. கோடு - தந்தத்தை. என்னை - என்னுடைய தந்தை; என்றது கண்ணபிரானை. என்னை - எது. மன்னிய - நிலைபெற்ற. விறல் - வெற்றி. மாமன் - உருக்குமி. பேதையர் - மகளிர்; என்றது பிரத்தியும்நனனுடைய மனைவியரை.

4038. கட்டுரை - பொருள் பொதிந்த சொல். இறைவன் - கண்ணபிரான். வனப்பு - அழகு. மைந்தன் - பிரத்துமனன். கனைத்த - ஒலித்த. தனித்திறல் - ஒப்பற்ற வன்மையையுடைய. தாருகன்தநயன் - பிரத்துமனனுடைய தேர்ப்பாகன். கண்ணபிரானுக்குத் தாருகன் என்பவன் தேர்ப்பாகன்; அவன் மகன் பிரத்தியும்நனுக்குத் தேர்ப்பாகன்.

4039. தெம்மலை திறத்தினன் - பகைவரோடு போர்செய்கின்ற தன்மையானாகிய. தேரவன் - தேரிலுள்ளவன். சும்மை - ஒலி. துளக்கம் - சோர்வு. வெம்முனை முகத்த தேர் - வெவ்விய போரிடத்துள்ள தேரை. விசைத்து - விரைந்து. மீட்டல் - மீட்டுச் செல்லுதல். எம்முடை அறன் - எமது தருமம்; எம் என்றது தேர்ப்பாகரையெல்லாம் உளப்படுத்தியது.

4040. மைந்தன் - தேர்ப்பாகன். மாற்றம் கேளா - மறுமொழியைக் கேட்டு. அமர் - போரில். ஆற்றல்செய்த - தன் வன்மையைக் காட்டிய. படைத்தலைவன் - சேனபதி. சிலை - வில். கார் - மேகம். கல் - மலை. தோளான் - பிரத்துமனன்.

4041. நெடும்பனைத் தடக்கை யானை நிலவுமிழ் பிறைவெண் கோடு
பிடுங்கிவெஞ் சினத்த புள்வாய் பிளந்தவ னுகைத்த வேகத்
தடஞ்சிறைப் பறவை யன்ன தலைமைசா லியல வாய
கடுஞ்செல லிவுளித் திண்டேர் கதுமெனக் கடாயி னானே (௨௦)

4042. நாலிரு பகழி தூண்டி நலத்தகு பசும்பொற் றிண்டேர்ப்
பால்கெழு புரவி நான்கும் படுத்துவெம் பாகற் கொன்று
கோலுமிழ் வரிவிற் சிந்திக் கொடிமுத றுணித்து வெய்ய
சாலுவன் கடலந் தானைத் தலைவனைத் தலைகொய் தானால். (௨௧)

4043. சாம்பனுங் குருதி வைவேற் சாத்தகி யென்ன நின்ற
தேம்படு தாரினானுஞ் செஞ்சிலை குழைத்த லோடும்
தூம்புடைத் தடக்கை வேழந் துணிந்தன கவிழ்ந்த திண்டேர்
வாம்பரி வெள்ள மாய்ந்த வாட்படை மறிந்த வன்றே. (௨௨)

4044. இன்னண மிருபத் தேழ்நா ளிருஞ்சம நடந்த தாக
அந்நிலை யறத்தின் மைந்த னாற்றிய வேள்வி காத்து
மன்னிய பசுந்தார் மாயன் வால்வளை முழக்கம் விம்மத்
துன்னினன் முந்நீர் வேலித் துவரைமா நகர மன்னோ. (௨௩)

---

4041. யானை - குவலயாபீடமென்னும் யானையின். புள்வாய் - பகாசுரனின் வாயை, பிளந்தவன் - கண்ணபிரான். உகைத்த - செலுத்தின. தடஞ்சிறை - அகன்ற சிறகையுடைய. பறவையன்ன - கருடனைப்போன்ற. இயலவாய - விரையும் தன்மையை யுடைய. கடுஞ்செலல் - விரைந்துசெல்லுதலையுடைய; "புள்ளியற் கலிமா" (தோல். கற்பு. 53.) கதுமென - விரைய.

4042. நாலிரு பகழிதூண்டி - எட்டுப் பாணங்களைச் செலுத்தி. பால்கெழு புரவிநான்கும் - வெண்மை நிறம் பொருந்திய குதிரை நான்கையும்; "பால்புரை புரவி நால்குடன் பூட்டி" (பொருந. 165.) படுத்து - கொன்று. பாகனைக்கொன்று. கோல் - அம்பு. கொடிமுதல் - கொடியிடத்தை. சாலுவனுடைய தானைத்தலைவன் - தியுமானை.

4043. தேம் - இனிமை; தேன் எனலுமாம். தூம்பு - உட்டுளை. துணிந்தன - வெட்டப்பட்டன. தேர் கவிழ்ந்தன. வாம்பரிவெள்ளம் - தாவுகின்ற குதிரைக்கூட்டம்.

4044. இருஞ்சமம் - பெரிய போர். அறத்தின் மைந்தன் - தருமபுத்திரன். மாயன் - கண்ணபிரான். வளை - சங்கம். விம்ம - ஒலிக்க. முந்நீர் வேலி - கடலை எல்லையாகவுடைய துவரைநகரத்தைத் துன்னினன்.

4045. மாற்றலர் வளைந்த வாறு மாற்றருந் தறுகட் சீற்றத்
தேற்றரி மாவி னன்ன யாதவர் பொருத வாறும்
பாற்றிரை படிந்த பச்சைப் பசும்புயல் வண்ண னேக்கிக்
காற்றெனக் கலின மான்றேர் களத்திடை கடாவி னுனல். (உச)

4016. தாப்புலிப் போத்தி னின்ற சாலுவ னுலக மெல்லாங்
காப்பவன் பசும்பொற் றிண்டோ கடாயதா ருகன்மேற் காய்ந்து
பூப்பொலிந் தடுபோர் வேட்டுப் புழுங்கிவாய் புகைந்து வெய்ய
தீப்பொலி குடுமிக் கூர்வேற் சினப்படை தெரிய விட்டான், (உரு)

4047. மாறடு திகிரிப் பெம்மான் மண்டுவெஞ் சினத்த வொள்வேல்
நூறுநூ றாகி வீழ நூறின னுனிக்கூர்ங் கோட்டுத்
தாறுபாய் களிற்றின் சீற்றச் சாலுவன் மார்பின் மேலும்
வீறுயர் விமான மேலும் வெங்கணை வெய்து தூர்த்தான்.(உசா)

4048. இடித்ததி ரசனி யேய்ப்ப விருங்கணை பொழிந்து முந்நீர்
குடித்தெழூஉங் கமஞ்சூற் கொண்டற் கொழுந்தெனத் திகழ்ந்து நின்ற
வடித்தபூந் துளவ மாயன் வாங்கிய வரிவில் வீழத்
தொடிக்கரத் தெய்து வெய்ய சொற்பல கூற லுற்றான். (உஎ)

---

4045. மாற்றலர் - பகைவர். தறுகண் - அஞ்சாமை. தறுகண்மையும் சீற்றமும் உடைய ஏற்றரிமா. ஏற்றரிமாவினன்ன - ஆண்சிங்கத்தைப் போன்ற. பால்திரை - பாற்கடலில். புயல்வண்ணன் - கண்ணபிரான். தேரைக் களத்திடைக் கடாவினன். கடாவினன் - செலுத்தினன்.

4046. தாப்புலிப் போத்தின் - வலிய ஆண்புலியைப்போல; தாப்புலி - வலிய புலி; (பு. வே. 31; கூர்ம. கண்ணன்பூமி. 70.) காப்பவன் - கண்ணபிரானுடைய. தேரைக் கடாய; கடாய - செலுத்திய. தாருகன்: கண்ணபிரானுடைய தேர்ப்பாகன். காய்ந்து - கோபித்து. பூப்பொலிந்து - கூர்மை விளங்கி. வேற்படையை. தெரிபு - ஆராய்ந்து. அடி. 3-4: 4027.

4047. திகிரிப் பெம்மான் - கண்ணபிரான். மண்டு - மிக்க. வேலை நூறுநூறாகி வீழும்படி நூறினன்; நூறு - பொடி. நூறினன் - அழித்தான். கூர்ங்கோட்டு - கூர்மையான தந்தத்தையுடைய. தாறுபாய் களிற்றின் - குத்துக்கோலின்மீது பாய்கின்ற யானையினது. வீறு - பெருமை. கணை - அம்பு.

4048. அசனி - இடி. முந்நீர் - கடல். கமஞ்சூல் கொண்டல் - நிறைந்த கருப்பத்தையுடைய மேகம். மாயன் - கண்ணபிரான். வாங்கிய - வளைத்த. வீழ - விழும்படி.

(பி - ம்.) 4. சோறலுற்றான்.

4049. என்னுயிர்த் துணைவன் கொள்வா னிருந்தபொற் கொடியை வவ்வி
மின்னுயிர்த் தொளிரும் வெய்ய வேலவன் றனைத்து மித்தாய்
உன்னுயிர்க் கிறுதி செய்யா தொழிகுவ னல்லே னென்னுத்
தன்னுயிர்க் கிறுதி சூழ்ந்த சாலுவன் பிதற்றி னுனல். (உஅ)

4050. வெளிற்றுரை விடுதி யென்னு வெயிலுமி ழோடை நெற்றிக்
களிற்றுவெண் கோடு கொண்ட கதிர்மணி வண்ணன் புண்ணீர்
குளித்ததோர் கதைகைத் தாங்கிக் கொம்மென வடித்தல் செய்தான்
ஒளித்தன னேற்று வெம்போ ருடன்றவில் லுழவன் மன்னோ. (உகூ)

4051. தேவகி விடுத்தோ னுகச் சென்றுமற் றொருவ னண்ணி
ஏவுமிழ் வரிவிற் செங்கை யிகல்வசு தேவன் றன்னைத்
தாவுறு கலின மான்றேர்ச் சாலுவன் பிணித்து வெளவிப்
போவது புரிந்தான் கண்ண போற்றெனப் புகன்று நின்றுன். (நூo)

4052. புகலுமச் செவ்வி தன்னிற் புணர்ப்பினு லமைத்து வெய்தா
இகல்வசு தேவன் றிண்டோள் யாப்புறுத் தெய்தி யாங்கு
மகிழ்சுரும் பாற்று தாரோய் வல்லையேற் காத்தி யென்னுத்
தகைசிறந் தொளிறு வாளாற் சாலுவன் றடிதல் செய்தான். (நூக)

---

4049. துணைவன் - சிசுபாலன். கொள்வான் - மணம் செய்து கொள்ளும் பொருட்டு. பொற்கொடி - உருக்குமிணி. வேலவன்றனை - சிசுபாலனை. துமித்தாய் - கொன்றுய். இறுதி - முடிவு. ஒழிகுவன் - நீங்குவேன். தன் உயிர்க்கு இறுதியைச் சூழ்ந்துகொண்ட சாலுவன்.

4050. வெளிற்றுரை - பயனில்லாத சொற்களை. விடுதி - விடுவாயாக. என்னு - என்று கூறி. ஓடை - நெற்றிப்பட்டம். கதிர்மணி வண்ணன் - கண்ணபிரான். புண்ணீர் - இரத்தத்தில். கொம்மென - விரைய. வெம்போர் ஏற்று உடன்ற வில்லுழவன் ஒளித்தனன்; வில்லுழவன்: சாலுவன்.

4051. தேவகி விடுத்தோனுக - தேவகியால் அனுப்பப்பட்டவனுக. ஒருவன் - ஒரு வீரன். ஏ - அம்புகளை. வசுதேவனைச் சாலுவன் பிணித்து; பிணித்து - கட்டி. கண்ண: விளி. போற்று - காப்பாயாக; "கொண்டனர்நிரை போற்றெனக் கூறினன்." (சீவக. 430.)

4052. செவ்வி - சமயம். புணர்ப்பினுல் - சூழ்ச்சியால். வெய்தா - விரைய. யாப்புறுத்து - கட்டி. சுரும்பு - வண்டு. தாரோய்: கண்ணபிரானே; விளி. வல்லையேல் - வன்மையுடையை யானுல். தடிதல் - வெட்டுதல்.

4053. மணிப்பொருப் புறழுந் தோளான் மலங்குவான் போன்று காட்டிப்
புணர்ப்பென நெஞ்சி னாடிப் பொருசிலை குழைய வாங்கித்
தணிப்பருஞ் சினத்துப் பொல்லாச் சாலுவன் றடக்கை வல்வில்
துணித்தனன் றூணி யோடு தொலைத்தனன் சவச மன்னோ. (௩௨)

4054. மீயுயர் தனிவி மானம் வெங்கதை யொன்றி னாலே
ஆயிரந் துணியாய் வீழ வடித்தன னடித்த லோடும்
காய்சினந் திருகி மற்றோர் கடுங்கதை யெடுத்து ஞாலம்
தாயசே வடியான் முன்னஞ் சாலுவன் றனிப்போந் தானால்.()

4055. எறித்தெழு பிறைவா யம்பா லெடுத்தவெங் கதையுங் கையும்
தறித்தன னாழி தூண்டிச் சாலுவன் மணித்தாழ் சென்னி
அறுத்தன னால மூறு மயிற்றலை யெயிற்றுப் பேழ்வாய்ப்
பொறிப்பட வாவி னாடு பூங்கழற் காலம் மானே. (௩௪)

4056. மண்டுசெங் குருதி யானும் வளரொளி மணியிற் செய்த
குண்டலம் பிறழ்ந்து கான்ற குருஉச்சுடர்க் கற்றை யானும்
வெண்டலைப் புணரி சேப்ப வீழ்ந்தது துணிந்த சென்னி
அண்டநீண் முகட்டின் மாறு ததிர்ந்ததுந் துபிமற் றன்றே. ()

---

4053. பொருப்புறழும் - மலையை ஒத்த. தோளான் - கண்ணபிரான். மலங்குவான் போன்று - மயங்கிக் கலங்குவானைப் போல. புணர்ப்பு - மாயச் சூழ்ச்சி. நாடி - ஆராய்ந்து. தணிப்பரும் - தாழ்த்தற்கரிய. துணித்தனன் - வெட்டினன். தூணி - அம்பறாத் தூணி.

4054. மீயுயர் - மேலே உயர்ந்த. விமானம் - சௌபம் என்ற விமானத்தை. துணியாய் - துண்டாய். திருகி - மாறுபட்டு. தாய - தாவிய. சேவடியான் முன்னம் - கண்ணபிரானுக்கு முன்னே.

4055. எறித்து - ஒளி வீசி. பிறைவாயம்பு - அர்த்தசந்திர பாணம். எடுத்த - சாலுவன் எடுத்த. தறித்தனன் - வெட்டினன். அம்பால்தறித்து. ஆழி தூண்டி - சக்கரத்தைச் செலுத்தி. மணித்தாழ் சென்னி - மணிகள் தங்கிய தலையை. ஆலம் - விஷம். பொறிப்படம் - புள்ளியையுடைய படத்தைக் கொண்ட. அம்மான் - கண்ணபிரான்.

4056. மண்டு - மிக்க. பிறழ்ந்து - மாறுபட்டு. கான்ற - சிந்திய. குரு - நிறம். வெண்டலைப் புணரி - வெண்மையான தலையையுடைய அலைகள். சென்னி வீழ்ந்தது. அண்டத்தின் முகட்டில் துந்துபி மாறாது அதிர்ந்தது; மாறாது - இடைவிடாமல்.

# 43. தந்தவத்திரனைக் கொன்ற அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியச் சந்த விருத்தம்.

4057. நட்ட சாலுவ னிறந்து போயதுவு
நனிக டுங்குருதி யாறுபாய்
வட்ட வாயழல்செய் நேமி யம்படை
வலங்கொள் பச்சைமுகி னின்றதும்
கட்ட முற்கதுவ நோக்கி வெங்கொலைய
காள கூடவிட மொழுகிவார்
தட்ட வாயரவ மென்ன வெய்தி னெழு
தந்த வத்திர னுலம்பினன். (க)

4058. மற்று மாமன்மக னாகி நின்றுமெனை
மாய்ப்ப தற்குளம் வலித்தியால்
கொற்ற மேவுசிசு பால னீண்முடி
கொலைக்க ளத்திடை தமித்தியால்
உற்ற நின்னைவிடு கிற்ப னேயினி
யொறுத்தி டாதென வுரைத்திடா
வெற்றி மேயதொரு கால தண்டநெடு
விண்டு ளக்கமுற வீசினான். (உ)

---

4057. நட்ட - நட்புச்செய்த. குருதியாறு பாய்கின்றதும் அழல் செய்வதுமான நேமிப்படை; நேமிப்படை - சக்கராயுதம். பச்சை முகில் - கண்ணபிரான். கட்டழல் கதுவ - மிக்க தீப்பற்றும்படி. கொலைய - கொலைத் தன்மையையுடைய. தட்டம் - மேல் வாய்ப்பல்லையுடைய; (சீவக. 1286, ந.) வெய்தின் எழு - விரைவாக எழுகின்ற; வெய்தின் - வெம்மையுடனெனவு மாம். உலம்பினன் - முழங்கினன்.

4058. மாமன் - வசுதேவன். மகனாகி என்றது கண்ணபிரானை. வலித்தி - விரும்புகின்றாய். கொற்றம் - வெற்றி. உன்னை ஒறுத்திடாது இனி விடுகிற்பனே; ஒறுத்தல் - தண்டித்தல். விடுகிற்பனே - விடுவேனோ. உரைத்திடா - உரைத்து. காலதண்டத்தை வீசினான். விண்துளக்கமுற - தேவர் நடுங்கும்படி; விண் : ஆகுபெயர். தந்தவக்கிரன் : சூரனுடையபெண்க ளாகிய குந்தி முதலிய ஐவரில் சுருததேவை என்பவளிடத்துப் பிறந்தவன்; இவன் தந்தைபெயர் விருத்தசர்மா.

4059. கார்கி ழித்துலவு மின்னு நாணவொளி
காலு மோடைநுதல் வேழமும்
தேரும் வாம்பரியு மூர்த லின்றியொரு
செங்க ணேறென விரைந்தெழாப்
பார்ப னிப்பவெதிர் சென்ற கண்ணனுயர்
பார மார்பினிடை யெற்றினன்
கூர முற்பருதி சுற்று வெற்பினெடு
குன்றெ லாநிலை குலுங்கவே. (௩)

4060. பொடித்த தண்குழவி மதிவ டிம்பிடறு
பொன்னெ டுஞ்சிகர வெற்பின்மேல்
இடித்த காரசனி யேறு வீழ்ந்ததென
வெறுழ்ப டைத்ததொரு கதையினால்
தனித்தெ னச்சுடர்ப ரப்புபூ ணுலவு
தந்த வத்திர னுரத்தின்மேல்
அடித்த னன்புவி யளிக்கு மாழிமுகி
லங்கண் வானவர் களிப்பவே. (௪)

4061. வளங்கொள் பொற்றுணர கற்ப கத்தினை
வளைத்து வேரொடு கொணர்ந்தபோர்
இளங்க ளிச்சிறுகண் யானை யன்னவ
னெதிர்ந்து வெங்கதையி னெற்றலும்
விளைந்த போரிலெதிர் தந்த வத்திரன்
விரிந்த பூந்தொடையல் மார்வகம்
பிளந்து வீழ்ந்தன னெழுந்த செங்குருதி
பெருகு வெண்டிரை யலைப்பவே. (௫)

4059. கார் - மேகத்தை. காலும் - கக்குகின்ற. வேழம் - யானை. ஊர்தலின்றி - ஊராமல். செங்கண் ஏறு என - சிவந்த கண்ணையுடைய இடபத்தைப்போல. பனிப்ப - நடுங்க. கண்ணனுடைய மார்பிடை. எற்றினன் - குத்தினன். பருதி - சூரியன். வெற்பு - மேருமலை.

4060. பொடித்த - தோன்றிய. குழவி மதிவடிம்பு-பிறைச்சந்திரனது விளிம்பை. அசனியேறு - சிறந்த இடி. எறுழ்-வலி. தடித்தென - மின்னலைப் போல. உரம் - மார்பு. ஆழிமுகில் - கண்ணபிரான். ஆழிமுகில் அடித்தனன்.

4061. துணர - பூங்கொத்தையுடைய. போர்செய்யும் யானையன்னவன் : கண்ணபிரான். எற்றலும் - மோதியவுடன். தொடையல் - மாலை. தந்தவத்திரன் மார்வகம் பிளந்து வீழ்ந்தனன். வெண்திரை : அலை என்னும் அளவாய் நின்றது.

4062. அடுக ளத்தின்விழு தந்த வத்திரன
தாக்கை நின்றுமொரு சோதிவிண்
சுடர்த தக்கடிரொ ழுந்து செக்கரொளி
சொரிமணிச் சுடிகை வெய்யவாய்
மடைதி றந்தொழுகு நச்செ யிற்றாவின்
மகுட பந்திமிசை மேயநீர்
நெடுநி லப்பொறை தவிர்ப்ப வந்ததனி
நேமி மாயனடி சேர்ந்ததே. (சு)

4063. முன்ன வன்பொரு திறத்தல் கண்டுசின
மூள வெண்டிரை முகந்தகார்
மின்னு நக்கவடி வாள்வி திர்த்திகல்
விடூரதன் சமர்வி ளைத்தலும்
கன்னி யந்துளவு சூடு கண்ணனழல்
காலு கொற்றநெடு நேமியால்
அன்ன வன்றலை தடிந்தனன் கடவு
ளலர்பொ ழிந்தமரர் வாழ்த்தவே. (எ)

---

4062. தந்தவத்திரனுடைய ஆக்கையினின்றும்; ஆக்கை - உடம்பு. விண்சுடர்தா - ஆகாயத்தே ஒளிவிளங்க. செக்கர் - சிவப்பு. நச்சு - விடம். அரவின் - ஆதிசேடனின். அரவின் மகுடபந்திமிசை மேய நிலத்தின் பொறையை; பொறை - பாரம். தவிர்ப்ப - நீக்க. நேமியையுடைய மாயன்; மாயன் - கண்ணபிரானுடைய. சோதி, மாயனுடைய அடியைச் சேர்ந்தது.

(பி - ம்.) 4. நேர்ந்தது.

4063. முன்னவன் - தந்தவக்கிரன். கார் - மேகத்திடத்துள்ள. விதிர்த்து - அசைத்து. விடூரதன் - விதூரதன்; தந்தவத்திரனுக்குத் தம்பி. சமர் - போரை. அழல்காலும் - தீயைச் சிந்துகின்ற. அன்னவன் - விடூரதனுடைய. தடிந்தனன் - வெட்டினான். கடவுளலர் - தெய்வத் தன்மையுள்ள பாரிசாத மலரை. வாழ்த்தத் தடிந்தனன்.



# 44. நம்பி மூத்தபிரான் தீர்த்தயாத்திரை செய்த அத்தியாயம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

4064. வாய்ந்தசெம் முளரி வலஞ்சுழி யுந்தி
மடுவினின் மலர்ந்ததே யன்றிச்
சாந்தள றெடுத்துப் பாய்ந்தபூ ணாகத்
தடத்திலுங் கிளைக்குமா போல
தேந்துளி யுறைப்ப நெகிழ்ந்தபூங் கமலச்
செழுமலர்ப் பொகுட்டா சிறக்கும்
ஏந்திழை கொம்மை வரிமுலை முயங்கு
மேந்தல்வண் டுவரைசென் றிறுத்தான். (க)

4065. நளியிரு முந்நீ ருடுத்தமா நிலமு
நானிலம் பொறுத்தவா ளரவும்
நெளியமா கடலந் தானைவந் தீண்ட
நெய்முகங் கமழும்வே லைவர்க்
களையுறை யாவ முயர்த்தவ ளெடுபோ
ரடுத்திட நடுநிலை யமைந்த
வளைமருண் மேனி யொருகுழை யொருவன்
வண்புன லாட்டின்மே லெழுந்தான். (உ)

---

4064. வாய்ந்த - எல்லா அழகும்பொருந்திய. செம்முளரி - செந்தாமரை. வலமாகச்சுழித்த உந்தியாகிய மடுவினில். அன்றி - அல்லாமல். சாந்து அளறு - குங்குமச்சாந்தாகிய சேறு. ஆகத்தடத்திலும் - மார்பாகிய தடாகத்திலும். கிளைக்குமாபோல - தோன்றுமாறுபோல. நெகிழ்ந்த - அலர்ந்த. பொகுட்டு - உட்கொட்டையில். ஏந்திழை - திருமகளின். கொம்மை - வட்டம், பெருமை. ஏந்தல் - கண்ணபிரான்.

4065. நளி - பெருமை. உடுத்த - சூழ்ந்த. அரவும் - ஆதிசேடனும். நெளிய - முதுகு நெளியும்படி. தானை - சேனை. நெளியத்தானை ஈண்ட. (சீவக. 433.) ஈண்ட - நெருங்க. ஐவர்க்கு - பாண்டவருக்கு. அளையுறை அரவம் - வளையில் வாழும் பாம்பு. அரவமுயர்த்தவன் - துரியோதனன். அடுத்திட - உண்டாக. நடுநிலை அமைந்த - நடுநிலைமை பொருந்திய. வளை மருள் - சங்கை ஒத்த. ஒருகுழை ஒருவன் - பலராமன். புனலாட்டு - தீர்த்த யாத்திரை.

4066. படுகளிப் பலகாற் பறவைபாண் மிழற்றப்
பச்சிளந் தேறல்வா யுறைக்கும்
கடிமலர் கஞலிக் கருகிவார்ந் தொழுகக்
காழ்படு காரகி லேந்தி
விடுசுட ரிமைக்குந் திருமணி யலைத்து
வெள்ளிவெண் டிரைக்கட லுடுத்த
நெடுநில மடந்தை குழலெனக் கிடந்த
நீள்புனல் யமுனையா டினனால். (ங)

4067. அறுபத முரல நறைகமழ் பசுந்தோ
டாயிர மவிழ்ந்தசெங் கமலத்
திறைகொள்கா ரன்னத் தொழுதியும் புரிசங்
கீன்றவெண் மணிகொழித் தெதிர்ந்த
மறிதிரை யமுனை மாநதிப் பெருக்கும்
வயின்வயின் மயங்கிய தண்ணந்
துறைகெழு கங்கை மாநதி படிந்து
தொளைக்கைம்மாக் களிறென நடந்தான். (ச)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4068. கலைமதி யியைத லானுங் கருங்கலை யுடைமை யானு
நலமிகு தன்னை மானு நைமிசா ரணிய நண்ண
மலர்தலை யுலக மேத்து மாதவக் கிழவ ரெல்லாம்
இலைவிரி சாலை நின்று மெழுந்தன ரெதிர்கொண் டாரால். (ரு)

---

4066. படுகளிப்பலகாற் பறவை - ஒலிக்கின்ற, களிப்பையுடைய பல கால்களையுடைய வண்டு. பாண் - பாட்டை. தேறல் - தேன். உறைக்கும் - துளிக்கின்ற. கடி - வாசனை. கஞலி - நெருங்கி. காழ்படு - வயிரங் கொண்ட. அலைத்து - அலைவுறச்செய்து. நிலமடந்தையின் குழலென. கருமையான யமுனையாற்றுக்கு நிலமடந்தையின் குழல் உவமை.

4067. அறுபதம் முரல - வண்டுகள் ஒலிக்க. தோடு - இதழ். கமலத்து - தாமரையில். இறைகொள் - தங்குதல் கொண்ட. காரன்னம் - கருநிறமுடைய அன்னப்பறவையின் (சீவக. 930, ந.) தொழுதி - கூட்டம். புரிசங்கு - முறுக்கிய சங்கம். மணி - முத்து. வயின்வயின் - இடந்தோறும். மயங்கிய - கலந்த. களிறென - யானையைப்போல.

4068. கலைமதி - கலைகளையுடைய சந்திரன்போன்ற வெண்ணிறம்: (பலராமனுக்கு); நூற்கலைகள் நிறைந்த புத்தி: (நைமிசாரணியத்துக்கு); சந்திரன் என்றுமாம். கருங்கலை - நீல ஆடை: (பலராமனுக்கு); கரிய மான்கள்: (நைமிசாரணியத்துக்கு.) தன்னை என்றது பலராமனை. மானும் - ஒக்கின்ற. இலைவிரிசாலை - பர்ணசாலை.

4069. இன்னகை முகத்தா னன்றி யெழில்வள ருருவத் தானும்
நன்னகை மதியை வென்ரு னண்ணலு மெழுத லின்றி
மன்னுபூந் தவிசின் வைகு மாதவச் சூதன் சென்னி
புன்னுனை படையாக் கொண்டு போக்கின னென்ப மன்னே. ()

4070. சொல்வளங் கனியத் தொன்னூல் சொல்வதற் காக யாங்கள்
நல்கிய தவிசின் வைகு நற்றவக் கிழமை யோனைக்
கொல்வதோ ரறங்கொ லென்னுக் குங்குமக் குவட்டின் வீங்கி
மல்வளர் தோளி னூற்கு மாதவர் கூற லுற்ருர். (எ)

4071 கலையின தகல மெல்லாங் கடந்தமா முனிவற் காய்ந்து
கொலைபுரிந் ததற்கு வெள்ளிக் குன்றுறழ் குவவுத் தோளாய்
உலகொழுக் கிறவா வண்ண மோங்கிய புனித நன்னீர்ப்
பலதுறை யாடல் வேண்டும் பன்னிரு திங்கள் காறும். (அ)

4072. மலைக்கும்வெஞ் சீற்றப் பொல்லா வற்கல னென்னும் வெய்யோன்
அலைக்கும்வந் தெம்மை யெல்லா மறங்கடை யவனை யெய்தாக்

---

4069. இன்னகை முகத்தான் அன்றி - இனிய ஒளியையுடைய முகத்தா லல்லாமல்; நகை - ஒளி. உருவம் - நிறம். வென்ருன் - பலராமன். நண்ணலும் - நைமிசாரணியத்தை அடைந்தவுடன். தவிசு - ஆதனம் சூதன் - சூதமுனிவன்; இவருக்கு ரோமஹர்ஷணர் என்பது இயற்பெயர்; சாதியாற் சூதன் என்னப்பட்டார்; இவர் வியாசருடைய மாணுக்கர். இவரது புதல்வரே சூதபுராணிகர் என்பவர். பலராமர் ரோமஹர்ஷணரென்ற சூத ரையே கொன்ருர். புல்நுனை படையாக்கொண்டு - புல்லின் நுனியை ஆயுத மாகக்கொண்டு. சூதன் சென்னியைப் போக்கினன்.

4070. கனிய - முற்ற. தொன்னூல் - பாகவதம்; 474. நல்கிய - கொடுத்த. கிழமையோனை - சூதனை. அறங்கொல் - தருமமோ. மல் வளர் - மற்றொழிலால் வளர்கின்ற. தோளினூற்கு - பலராமனுக்கு. மாத வர் - நைமிசாரணிய முனிவர்.

4071. கலையினதகலம் - கல்வியின் பரப்பு. முனிவற்காய்ந்து - சூத னைக் கோபித்து. தோளாய்: விளி. உலகொழுக்கு இறவாவண்ணம் - உலகவழக்கத்தைக் கடக்காதவாறு. புனித நீரையுடைய பல துறையில். பன்னிருதிங்கள் - பன்னிரண்டு மாதங்கள்.

4072. மலைக்கும் - பொருகின்ற. சீற்றத்தையுடைய பொல்லாவற்கலன்; வற்கலன் - வல்கலன்; பல்வலனென்றும் கூறுவர்; இவன் இல்வலன் என்பவ னுடைய மகன்; நைமிசாரணிய முனிவரைத் துன்புறுத்தி வந்தவன். வெய் யோன் - கொடியவன். எம்மையெல்லாம் அலைக்கும்; அலைக்கும் - வருத்து

சொலேக்களப் படுத்தல் வேண்டுங் கொங்குலாய் முருகு விர்மிச்
சிலேக்கவின் பெற்ற பைந்தார்ச் செம்மலென் றியம்பி னூல்.()

4073. பொருவிலா ஞான வொள்வாள் பூமுக மழுங்க வெட்டி
இருவினைக் காடு சாய்த்த விருந்தவர் வதன நோக்கி
அருள்பொழி கமலக் கண்ணு னன்னது புரிவே மென்னுத்
திரைவிளை பவளச் செவ்வாய் திறந்தனன் கூறு மாங்கே. (கo)

4074. தந்தையே வந்து காதற் றனயாராய்த் தோன்று மென்று
முந்தையா ரணங்க ளெல்லா மொழிதரு திறத்தாற் சூதன்
மைந்தனே சூத னென்று மரபுளி நாட்டல் செய்தான்
அந்தமி னலத்த தொன்னூ லரிறபக் கிளக்கு மாறே. (கக)

கலிவிருத்தம்.

4075. இலங்கு வாட்படை யில்வலன் காதலன்
அலங்கன் மாலே யமரரை வென்றுபோர்
வலங்கெ ழீஇயவன் யுற்கல னென்பவன்
விலங்க லாமென வீங்கெழிற் றேளினன். (கஉ)

4076. செய்ய பங்கியன் றீப்பொழி கண்ணினன்
மையி னல்வகுத் தன்னவண் ணத்தினன்
கையி லங்கிய கட்டழ லெஃகினன்
ஒய்யெ னக்கனன் றுற்றன னுங்கரோ. (கங)

---

வான். அறங் கடையவனே - தருமத்தாற் கடைப்பட்டவனை; பாபியை. எய்தா - அடைந்து. கொங்கு - வாசனை. முருகு - தேன். சிலேக்கவின் - இந்திரவில்லின் அழகு. தார் - மாலே. மாலேக்கு இந்திரவில் உவமை (புறநா. 10:10.) செம்மல்: பலராமன்; விளி.

4073. ஞானமாகிய வாள். பூமுகம் - கூரிய முகம். அழுங்க - கெட. இருவினையாகிய காட்டை. தவர் - முனிவருடைய. கண்ணல் - கண்களினல். புரிவேம் - செய்வேம். செவ்வாய் திறந்து கூறும்.

4074. காதல் - அன்புடைய. முந்தை - பழமையான. ஆரணம் - வேதம். சூதன் மைந்தனே சூதன் என்று. மரபுளி - முறைமையால். அந்தமில் - முடிவில்லாத. தொன்னூல் - பாகவதத்தை; 4070. அரில்தபக் கிளக்குமாறு - குற்றம் நீங்கச்சொல்லும்படி. ரோமஹர்ஷணன் இறந்தபின் மீண்டும் அவனே சூதன் என்ற பெயருடன் புதல்வனுகப் பிறந்தான்; அது முதல் அவனுக்குச் சூதனென்றே பெயர் வழங்கப்பட்டது.

4075. காதலன் - மகன்; இவன் வற்கலன். அலங்கல் - அசைகின்ற. அமரர் - தேவர். வலம்கெழீஇ - வெற்றியைப் பொருந்தி. விலங்கல் - மலே.

4076. செய்ய பங்கியன் - சிவந்த குடுமியையுடையவன். மை - கருமை. வகுத்தன்ன - செய்தாற்போன்ற. கையில் இலங்கிய. எஃகு - வேல். ஒய்யென - விரைய.

4077. ஆளி மொய்ம்ப னசனியி னார்த்தெழு
தூளி மாரி சொரிந்தனன் றேன்றலும்
வாளி லங்கு வலம்புரி மேனியான்
கோளி லங்கு கொடும்படை யுன்னினான். (கச)

4078. காத்தி னுற்ற கலப்பையி னுல்வளைஇ
இருப்பு லக்கைகொண் டேந்த லடித்தலும்
பொருப்பின் வீழ்ந்தனன் பொன்றினன் மல்குசீர்
வரைப்பு வந்திட வற்கல னென்பவே. (கரு)

4079 மைந்துடைப் பகை மாட்டிய வற்றைஞான்
றிந்தி ரற்கிமை யோர்புன லாட்டல்போல்
பைந்து ழாய்புனை பாற்கடற் சேர்ப்பனை
அந்த ணீர்சொரிந் தாட்டின ரந்தணர். (கசு)

4080. மொய்சு டர்ப்பொன் முளரியி னூற்புனை
வைச யந்தி யெனுநறு மாலையும்
கைசெய் பூணுங் கலையு முதவினர்
நெய்சி றந்தொளிர் நேமியஞ் செல்வற்கே. (கஎ)

4081. நண்ணு மாதவர் நன்று வழிபட
உண்ணி றைந்த வுவகைய னாகிநீள்
வெண்ணி லாக்கதிர் வீசிய மேனிய
அண்ண னீங்கின னவ்வழி யென்பவே. (கஅ)

---

4077. ஆளிமொய்ம்பன் - சிங்கம்போன்ற வலியுடைய வற்கலன். அசனியின் ஆர்த்து - இடியைப்போல் முழங்கி. மாரி - மழையைப்போல். மேனியான் - பலராமன். கோள் - கொள்ளுதல். படை - கலப்பையை.

4078. வளைஇ - வளைத்து. ஏந்தல் - பலராமன். பொருப்பின் - மலையைப்போல். பொன்றினன் - இறந்தான். வரைப்பு உவந்திட - நைமி சாரணியம் மகிழ்ந்திட ; வரைப்பு - இடம். வற்கலன் வீழ்ந்து பொன்றினன்.

4079. மைந்து - வன்மை. மாட்டிய - அழித்த. அற்றை ஞான்று - அப்பொழுது. இமையோர் இந்திரற்குப் புனலாட்டல்போல். பாற்கடற் சேர்ப்பனை - பலராமனை ; ஆதிசேடனின் அமிசமாதலின் 'பாற்கடற் சேர்ப்பன்' என்றார். அம் தண் நீர் - அழகிய குளிர்ந்த நீரை. அந்தணர் ஆட்டினர்.

4080. மொய் - நெருங்கிய. பொன் முளரி - பொன்னாலாகிய தாமரை. கைசெய் - அலங்கரிக்கப்பெற்ற. பூண் - ஆபரணம். கலை - ஆடை. நேமி - கலப்பை. செல்வன் - பலராமன். செல்வற்கு வைஜயந்தி என்னும் பொற்றாமரைமாலையையும் பூணையும் கலையையும் அந்தணர் உதவினர்.

4081. வழிபட - வணங்க. கதிர் - ஒளி. மேனியையுடைய அண்ணல். அவ்வழி நீங்கினன்.

4082. முரிதி டந்திரை முத்தெறி தெண்கடற்
கரைமெ லிக்குங் கவுசிகி நீர்படிந்
தாச வன்ன மமர்தரு பூந்துறைச்
சரயு மாநதித் தண்புன லாடினான். (கசு)

வேறு.

4083. நிலவிரி வெண்மணற் குன்றி னெற்றிமேல்
குலவுசெங் காலனங் குமரி ஞாழலின்
மலர்தொறு மறைதர வான்றி நித்திலம்
அலையெறி பயாகைசென் றாடி னானரோ. (உ0)

4084. யாணர்நீர்க் கோமதி யெய்தி வானதி
வேணவாத் தீர்த்தருள் வீங்கு தண்புனற்
சோணையாற் றடைகரை துன்னித் தண்கயாக்
காணிய நடந்தனன் கமலக் கண்ணனே. (உக)

4085. ஆடிய வெண்டிரைக் கங்கை யாழியிற்
கூடிய தண்டுறை குடைந்து மேதகப்
பாடல்சால் சிறப்புடைப் பாசு ராமனற்
றாடொழு தேகினன் றாம மார்வனே. (உஉ)

---

4082. அண்ணல்: பலராமன். முரிதல் - மடங்குதல். கடற்கரையை மெலியச் செய்யும் கவுசிகி நீரில். கவுசிகி நீர் - கௌசிகியாறு. பூந்துறையை யுடைய சரயுமாநதி.

4083. நிலவிரி வெண்மணற்குன்றின் - நிலவைப் போல் விரிந்த வெண்மையான மணற்குன்றினது. நெற்றி - உச்சி. செங்காலனம் - சிவந்த காலையுடைய அன்னப்பறவை. குமரி ஞாழலின் - இளைய ஞாழல் மரத்தின்; ஞாழல்: நெய்தல் நிலத்திற்குரியது. மறைதர - மறையும்படி. நித்திலம் வான்றி - முத்துக்களை வாரி. அலைகள் எறிகின்ற பயாகை; பயாகை - பிர யாகை; பிராகிருதச் சிதைவு.

4084. யாணர் நீர் - புதுநீரையுடைய. கோமதி: ஓர்யாறு. வானதி - கங்கையின். வேணவாத் தீர்த்து - மிக்க ஆசையை நீக்கி. சோணையாற்றின் அடைகரையை; சோணை: ஒரு நதி; சோணிதயாறு என்பர். கயாக் காணிய - கயையைக் காணுதற்கு. கமலக் கண்ணன் - பலராமன்.

4085. கங்கை ஆழியிற் கூடிய தண்டுறை - கங்கைநதி கடலில் கூடு கின்ற சங்கமத்துறையிடத்து. குடைந்து - முழுகி. பாசுராமனுடைய தாளைத்தொழுது. மார்வன் - பலராமன். மார்வன் எனினன்.

4086 தொழுதகு கமழலந் துறையின் மூழ்கினன்
எழுவகைத் தோற்றமு மிரிய வேழ்வகை
ஒழுகுகோ தாவிரி யோங்கு பெண்ணையா
றழிபுனற் பம்பையென் பவற்றி னாடினான். (உங)

4087. நிழன்மதி தவழ்வரை நெஞ்சு போழ்ந்தெழும்
அழலவி ரள்ளிலை யலங்கல் வேற்படை
முழவெனப் பணைத்ததோண் முருகற் கண்டுகார்
தழுவமீக் கிளர்தரு சயில நண்ணினான். (உச)

4088. விண்டொடர் குன்றொடு விரியல் வெண்மடற்
கண்டல்சூழ் நதிபல கடந்து காவலன்
தெண்டிரை நிலக்கொரு திலகமாகிய
தண்டமிழ் நாட்டகஞ் சார்ந்திட் டானரோ. (உரு)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4089. பண்படு மழலைச் சுரும்புபாய்ந் துழலப்
பசுநறுப் பிலிற்றுவெண் டோட்டுத்
தண்கமழ் முல்லைத் தாரவன் பிடுங்கு
தவழ்மதக் கரிமருப் பேய்ப்பத்
தெண்கடல் பருகிக் கண்படு கமஞ்சூற்
செழுமுகின் முகங்கிழித் தெழுந்து
விண்படு குழவி மதிதவழ் சாரல்
வேங்கட மால்கழ றொழுதான். (உசு)

---

4086. தொழுதகு - தொழத்தக்க. கமழ்கின்ற துறையில். அல், அம்: சாரியை. எழுவகைத்தோற்றம் - எழ்வகைப் பிறவி. இரிய - கெட. எழ் வகையாக ஒழுகுகின்ற கோதாவிரி ; தக்க. 31, உரை. பெண்ணையாறு - பெண்ணை நதி. அழிபுனல் பம்பை - மிக்க நீரையுடைய பம்பாநதி.

4087. நிழல் - ஒளி. வரை - கிரவுஞ்சகிரி. நெஞ்சு - நடு இடம். போழ்ந்து - பிளந்து. அள் - கூர்மை ; செறிவு. முழவு - மத்தளம். வேற் படையையும் தோளையுமுடைய முருகனைக் கண்டு. கார்-மேகம். மீ - மேலே. சயிலம் - ஸ்ரீசயில மலை ; இது 'வித்திக்ஷேத்திர மெனப்படும். முருகனைக் கண்டது மகேந்திரமலையில் என்பர் முதனூலார்.

4088. விண்தொடர் - ஆகாயத்தைத் தொடர்ந்த. கண்டல் - தாழை. காவலன் - பலராமன். நிலக்கு - நிலத்துக்கு. திலகம் - மேலாதல்.

4089. பண் - இராகம். மழலைச்சுரும்பு - இளைய வண்டு. உழல - திரிதலால். நறுப்பிலிற்ற - தேனைத் துளிக்கின்ற. தோடு - இதழ். தாரவன் - கண்ணபிரான். மருப்பு - தந்தத்தை. ஏய்ப்ப - ஒப்ப. கண்படு - உறங்குகின்ற. முகில் - மேகம். குழவிமதி - பிறைச்சந்திரன், வேங்கடமால் - வேங்கட மலையிலுள்ள திருமாலை,

4090. வரிமிடற் றறுகால் வண்டினம் பாட
மடமயி லகவுபூஞ் சினைய
குரவமுங் குருந்துங் கொன்றையுங் குமிழுங்
கோங்கமு நாகமுங் கொழுந்தேன்
அருவிபெய் தடங்கா வமரர்பொன் னட்டா
வருங்குள கருந்தமே னிவந்த
ஒருதனி முதலவ் வும்பலோங் கலின்மீ
தோங்கெழிற் காஞ்சிசென் றுற்றான். (உஎ)

4091. தெள்ளொளி கிளைக்கு மணிதெளித் தன்ன
திங்களம் பொய்கையிற் றிகழும்
வெள்ளிவெண் ணிலவுத் திங்களிற் றோன்றி
விரையெடுத் தெறியும்வெண் டோட்டு
முள்ளரை முளரி கங்குலு மலர
முழுவெயில் பொழிமணி கிடந்த
கள்ளவிழ் துளவப் படலைதாழ் மார்பன்
கண்வளர் கோயினண் ணினனால். (உஅ)

4092. மாறிலாக் கடவுண் மணிகிடந் திமைக்கும்
வளங்கெழு வெண்மணற் புளினத்
தாறுகால் வரிவண் டாயிர மாற்ற
வரக்கித முயிரம் விரிந்து

---

4090. வரிபொருந்திய மிடற்றையும் ஆறு காலையுமுடைய வண்டினம். அகவு - ஆடுகின்ற. சினைய - கிளைகளையுடைய. குரவம் முதலியன மரங்கள். நாகம் - சுர புன்னைமரம். குளகு - விலங்கின் உணவு. உம்பலோங்கல் - அத்திகிரி.

(பி - ம்) 2 - 4. நாகமுந்தழைத்த, அருவியஞ் சாரற் பனிவரைப் பிறந்த வாம்பல்வாய்க் கருங்குயிற்பிள்ளை, யொருதனி மாவி னறுநிழ லுவந்த வோங்கெழிற் காஞ்சிசென் றுற்றான்.

4091. தென் ஒளி - தெளிந்த ஒளி. தெளித்தன்ன - கரைத்தாற் போன்ற. திங்களம் பொய்கை : சந்திர புஷ்கரிணி. திகழும் - விளங்குகிற. திங்களின் - சந்திரனைப்போல. விரை - வாசனை. வெண்தோட்டு - வெண்மையான இதழ்களையுடைய. முளரி - தாமரை. வெண்டாமரைக்குச் சந்திரன் உவமை. கங்குலும் மலர - இரவிலும் மலரும்படி. மணி - கௌஸ்துப மணி. படலை - மாலை. தாழ் - தாங்கிய. மணி கிடந்த மார்பன் : படலை தாழ்ந்த மார்பன் ; திருமால். கண்வளர் - உறங்குகின்ற. கோயில் - திருவரங்கத்தை.

(பி - ம்) 3. பொழிகதிர்கடந்த. 4. படலைநம்பெருமான்.

4092. மாறிலா - ஒப்பில்லாத. கடவுள் மணி - தெய்வத் தன்மையுள்ள மணிகள். மணற்புளினத்து - மணற்குன்றில். ஆயிரம் வண்டு. அாற்ற - ஒலிக்க. அரக்கு - சிவப்பு. திரு - திருமகள். வீறு - பெருமை. கட

தேறல்பாய் முளரிப் பொகுட்டுவீற் றிருக்குஞ்
செந்திரு மணக்குமா போல
வீறுசால் பவளக் கொடிபடர்ந் தேறி
வீங்குநீர்க் காவிரி படிந்தான். (உகூ)

4093. பிறைமுது குரிஞ்ச வழியுமின் னமுதப்
பெருக்கறுத் தண்ணறுஞ் சாரல்
உறையழற் றிகிரி மாலலங் கார
னுருவவொண் காந்திமேற் றவழச்
செறிசுடர் வயிரத் திரளும்வெண் முத்துந்
தெள்ளுநீர் யமுனையிற் றோன்றி
எறிதரு சிலம்பா றெழுகுபூஞ் சோலை
யிடவமால் வரையடைந் தனனால். (௩0)

4094. இளைத்தவெண் டிங்கண் முழுநிலாத் தவழு
மெரிமரு ளீர்ஞ்சடைக் கடவுள்
முளைத்தெழு முளரிப் பொகுட்டுறை முதல்வன்
முழுவலிற் பணிந்தன ரேத்த
கிளைத்தபூந் தெரியல் வேம்பணி வழுதி
கிளர்கமண் டலுவின்மால் சேலாம்
வளைத்தபொன் னிஞ்சி மாடமார் மதுரை
வளநக ரினிதுநண் ணினனால். (௩க)

---

வுளைத் திருமணக்குமாபோல மணற்புளினத்துப் பவளக்கொடி படர்ந்தேறி வீங்கிய நீரையுடைய காவேரி எனலுமாம்; கடவுள் - திருமால். திருமகளுக்குப் பவளக்கொடி உவமை. பலராமன் படிந்தான்.

4093. பிறை முதுகு உரிஞ்ச - பிறைச்சந்திரன் முதுகை உராய்தலால். அறு - நீங்காத. சாரலில் உறையும் மாலலங்காரன். மாலலங்காரன் - அழகர். காந்தி தம்மேற்றவழ்தலால். திரள் - தொகுதி. யமுனையிற் றோன்றி. யமுனைநதியைப்போல் நீலநிறமுடையதாய்த் தோன்றி. சிலம்பாறு: ஒரு நதி. இடவமால்வரை - இடபாசலம்; ரிஷபகிரி; திருமாலிருஞ் சோலைமலை.

4094. இளைத்த வெண்டிங்கள் - கலை குறைதலால் இளைத்த பிறைச் சந்திரன்; எரிமருள் ஈர்ஞ்சடைக்கடவுள் - தீயையொத்த நிறமுடைய குளிர்ந்த சடையையுடைய சிவபெருமான்; "எரிமரு ளவிர்சடை" (புறநா. 56: 1); "எரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை" (அகநா. கடவுள். 10.) முளைத்து - தோன்றி; தாமரைக்கு அடை. முதல்வன் - பிரமன். முழுவலின் - விடாது தொடர்ந்த அன்பினால்; "முழுவற்கடல் பெருத்தான்" (தணிகைப். நந்தியுப. 6.) இளைத்த - தோன்றிய. வேம்பு அணி - வேப்பமாலையை யணிந்த. வழுதி - பாண்டியனுடைய. மால்சேலாம் - திருமால் மீனாகிய; என்றது மச்சாவதாரத்தை. மால் சேலாகிய மதுரைநகரை; 2019 - 2038.

4095. கடற்சுற வுயர்த்த காமனிற் கவினுங்
கடுந்திறல் விசயன்கைத் தனுவால்
அடிப்பவஞ் ஞான்று மழவிடைப் பாக
னழலவிர் புரிசடைக் காட்டில்
பொடித்தவெண் டிங்கள் பொழியமு தளாவு
பூந்திரைக் கங்கையின் வார்ந்து
வடித்ததீந் தமிழ்தண் டுறைதொறு மணக்கும்
வையைமா நதிப்புனல் படிந்தான். (ருஉ)

4096. திண்டிற லரக்கன் பஃறலை சிதறச்
செஞ்சிலை வளைத்தொரு நீலக்
கொண்டலங் கொழுந்திற் றிகழ்பவன் பசும்பொற்
குரைகழற் றூட்டுகண் மணந்து
கண்டவர் பிறவிக் கருங்கடல் கடப்பக்
கதிர்மணித் திரளெடுத் தெறியும்
வெண்டலைப் புணரிக் கருங்கடல் விளங்கு
மேதகு சேதுவைக் கண்டான். (ருரு)

4097. கதிரொடு பனிவெண் மதிபுகா தோங்கு
கடிமதி ளிலங்கைகட் டழித்த
மதவலி மலர்த்தாள் வைப்பினிற் றோன்று
மல்லன்மந் தாகினி கடுப்ப

---

4095. காமனின் - மன்மதனைப்போல. சுறவு - சுறாமீனின் உருவத்தை. மழவிடைப்பாகன் - சிவபெருமான். பொடித்த - தோன்றிய. அளாவு - கலந்த. கங்கையின் வார்ந்து - கங்கையைப் போல ஒழுகி. தமிழ்துறை தோறும் மணக்கின்ற. விசயன் தனுவால் அடித்தலால் விடைப்பாகனுடைய சடைக்காட்டில் பொடித்த திங்கள் பொழிந்த அமுது அளாவிய கங்கையைப் போல வார்ந்து துறைதொறும் மணக்கின்ற வையை.

4096. அரக்கன் - இராவணனுடைய. பஃறலை - பல தலைகள். சிலை - வில். நீலக்கொண்டலங் கொழுந்தின் - நீலமேகத்தைப்போல. திகழ்பவன் - இராமபிரானுடைய. தாளின் துகளை மணந்து ; துகள் - தூசி. மணந்து - கலந்து. பிறவியாகிய கடலைக் கடக்கும்படி. புணரி - அலையையுடைய. கடலில் விளங்கும் சேதுவை.

(பி - ம்.) 4. சேதுவி னடைந்தான்.

4097. கதிர் - சூரியன். மதி - சந்திரன். புகாது - புகமுடியாமல். கடிமதிள் - காவல் பொருந்திய மதிலையுடைய. கதிரொடு.........இலங்கை. “ இருசுட ரியங்காப் பெருமூ திலங்கை ” (ஆசிரியமாலை.) மதவலி - இராம

முதிர்கொளம் பவளக் கிளைசுழித் தெறிந்து
முழுநிலா நித்திலம் வரன்றி
அதிர்கருங் கடல்வெண் டிரைதவழ்ந் தாடு
மணிதிகழ் சேதுவிற் படிந்தான். (௩௪)

4098. அமுதமூற் றிருந்த தடங்கடல் பருகி
யமுதுவே றமைப்பது கடுப்பத்
தமிழ்தரு கடவுட் குறுமுனி விழையுஞ்
சண்பக வனத்தினிற் றவழ்ந்து
கமழலந் தென்றற் கொழுந்தெதிர் கொள்ளக்
களிவிளைந் தொழுகுதெள் ளமுதக்
குமிழிபாய் திங்கட் பசுங்கொழுந் திடறு
கோடுயர் குலாசல மடைந்தான். (௩௫)

4099. இடுமண லெக்கர் மீமிசைச் செங்கா
லிளவனஞ் செறிவது கடுத்தும்
முடமுதிர் தடந்தாண் முள்ளிலைத் தாழை
முகந்தொறு முருகுவா யுறைக்கும்
மடல்கிளைத் தெழுதல் போன்றுமா மேனி
மலர்தா வானிலாத் தவழ
விடுசுடர் வெயிலா ரொருகுழை யொருவன்
விரிபுனற் பொருநையா டினனால். (௩௬)

---

னுடைய. வைப்பு - இடம். மல்லல் - வளப்பம். மந்தாகினி கடுப்ப - கங்கையை ஒப்ப. முதிர்கொள் - முதிர்ச்சிகொண்ட. நித்திலம் வரன்றி - முத்துக்களை வாரி.

4098. வேறு அமுதத்தை அமைப்பது கடுப்ப; கடுப்ப - ஒப்ப. தமிழைத்தந்த கடவுட் குறுமுனி: அகத்தியன். விழையும் - விரும்பிய. கமழ்கின்ற தென்றற் கொழுந்து எதிர்கொள்ள. அமுதக்குமிழி - அமுத ஊற்று. திங்கட் கொழுந்து - பிறைச்சந்திரன். கோடு - சிகரம். குலாசலம் - பொதியில் மலை.

4099. மணல் எக்கர் - மணல்திட்டு. செறிவது கடுத்தும் - நெருங்குவதை ஒத்தும். முடம் முதிர் - வளைவு முற்றிய. தடந்தாள் - வளர்ந்த தாளையுடைய. முருகு - தேன். கிளைத்து - தோன்றி. தாழையின் மடலிற்கு அன்னம் உவமை. பலராமன் மேனிக்குத் தாழைமடல் உவமை. மலர்தர - பொலிவு பெற. ஒருகுழை ஒருவன் - பலராமன். பொருநை - தாமிரபர்ணியாறு.

4100. பொன்னவிர் குன்றம் பொருதமால் யானைப்
புணர்நெடு மருப்பினின் றுக்க
நன்னிலாத் தாள மணிசிதர்ந் தென்ன
நளிமணற் குன்றினிற் பாய்ந்து
மன்னிய முடவெண் டாழைமெல் லரும்பின்
மருங்கெலா மன்றல்வீற் றிருந்த
கன்னியம் புன்னை மென்முகை கஞலுங்
கன்னியந் துறைபடிந் தனனால். (௩௭)

4101. ஒழுகொளி விரிக்குஞ் செம்மணிக் குப்பை
யோங்கிரும் பணுடவி தழைத்த
எழில்வளர் நாக போகமீ மிசைவந்
திலங்கொளி மாரகதங் கிளைத்துத்
தழையுமா போலப் பொதியவிழ் விரிசெந்
தாமரைக் கண்ணருள் பெருகிப்
பொழிதரு துளவப் புயல்வள ரனந்த
புரத்துவந் தடைந்தன னன்றே. (௩௮)

4102. யதுமுத லவற்குத் தற்பமா யுற்றோன்
யதுகுலத் தலப்படை யொருவன்
மதிகதிர் விரிக்கும் வெள்ளிமால் வரையும்
வயங்குபொற் கொடுமுடி வரையும்

---

4100. பொன்னவிர் குன்றம் - மேருமலையை. உக்க - சிந்திய. தாள மணி - முத்து. முத்தும் மணியும் எனலுமாம் - சிதர்ந்தென்ன - சிதறிக் கிடந்தாற்போல. மன்னிய - நிலைபெற்ற அரும்பு - தாழையின் அரும்பு. மருங்கு-பக்கம் புன்னை மென்முகை கஞலும் - புன்னையின் அரும்புகள் நெருங் கிக் கிடக்கின்ற. கன்னி - குமரியாறு. மணற் குன்றில் பாவிநின்ற தாழை யரும்பிற்கு மேருமலையிற் பொருதுநின்ற யானையின் தந்தமும், தாழையி னருகே கிடந்த புன்னையரும்புகளுக்கு யானைத்தந்தத்தினின்றும் சிந்திய தாளமணியும் உவமைகள்.

4101. குப்பை - தொகுதி. பணுடவி - படத்தின் தொகுதி. மணிக் குப்பை ஓங்கிய பணுடவி. நாகபோக மீமிசை - ஆதிசேடனாகிய பாம்பின் உடலின்மீது. மரகதம் - பச்சை இரத்தினம். தழையுமாபோல - ஒளி தழைப்பதைப்போல. துளவப்புயல் வளர் - கண்ணபிரான் அறிதுயில் செய் கின்ற. கண்ணபிரானுக்கு மரகதம் உவமை.

4102. முதலவற்கு - திருமாலுக்கு. தற்பம் - படுக்கை. உற்றோ னாகிய ஒருவன், அலப்படை யொருவன் : பலராமன்; இவன் ஆதிசேட னுடைய கூறாதலால் இவ்வாறு கூறினர். வெள்ளிமால் வரை - கைலயங்கிரி.

எதிருயர் வில்லா வின்பவீ டளிக்கு
மின்னிசை கேட்டுவந் திறைஞ்சும்
யதுகிரி பராவி யிறைவனு ரணனை
யிருங்கழல் பராவியே கினனல். (௩௯)

4103. வழுத்தரு மலைநா டிகந்துகோ கன்னம்
வலங்கொடு வலவயிற் செந்தீ
விழித்தபரம் புயர்த்த வெந்திறல் வேந்தும்
வீழ்மணிச் சுரும்பினம் பாய்ந்து
கிழித்தபூந் தொடையல் வீமனுங் கிடைத்துக்
கிளைத்தெழு மருப்பிளங் கரிபோல்
பழுத்தவெங் கொலைய கதைகொடு மலையும்
படுகளப் பரப்படைந் தனனல். (௪0)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

4104. கருகுழைத் தடங்கட் செவ்வாய்க்
காதலங் கொடிக்குப் பைம்பொன்
விரிகுழை நெடுமந் தாரம்
வேரொடு கொணர்ந்து நல்வேய்
வரைகுழைந் துருக வூத
மாலொடு நின்ற வைவர்
ஒருகுழை யொருவன் றன்னை
யூழ்முறை வணக்கஞ் செய்தார். (௪௧)

---

பொற்கொடு முடிவரை - மேருமலை. எதிர் - ஒப்பு. யதுகிரி - யாதவ மலை, திருநாராயணபுரம். பராவி - புகழ்ந்து. இறைவனுகிய நாரணனுடைய கழலை. இச்செய்யுள் ஏட்டுப் பிரதிகளிலில்லை.

(பி - ம்) 1. தளிமுத லவற்குத் தற்பமாய்த் தாங்கு தணப்பில்சீர்.

4103. வழுத்தரும் - புகழ்தற்கரிய. இகந்து - கடந்து. கோகன்னம் - திருக்கோகர்ணம். வலவயின் - வலப்பக்கத்தே. தீயைப்போல் விழித்த. வேந்து - துரியோதனன். கிடைத்து - எதிர்த்து. கரிபோல் - யானையைப்போல். பழுத்த - முற்றிய. களப்பரப்பு - யுத்தகளத்தே.

4104. கருகிய நிறமுடைய கண், உழையின் கண்போன்ற கண். காதலையுடைய கொடிக்கு: சத்தியபாமைக்கு. மந்தாரம் - கற்பகம். வரை குழைந்து உருகும்படி வேய் ஊதிய மால்: கண்ணபிரான். ஐவர் - பாண்டவர். ஒருகுழை யொருவன்றன்னை - பலராமனை. ஊழ்முறை - முறைப்படி.

4105. வெருவரு செலவின் வீரர்
வெஞ்சமம் விளைத்த னேக்கி
ஒருவனே செயலின் மிக்கா
னொருவனே வலியின் மிக்கான்
இருவிரு நிகரே யாற்று
மிருஞ்சம மொழிக வென்னக்
குருமணி யிமைக்கு மொற்றைக்
குழையின னுரைத்தல் செய்தான். (சஉ)

4106. கேட்டிலர் காற்றின் சேயுங்
கிளைத்தமுள் ளெயிற்றுப் பேழ்வாய்ச்
சூட்டரா வுயர்த்த வேந்துந்
துளக்கமி லமர்வி ளைத்தார்
மோட்டுவெண் டரங்க முந்நீர்
முற்றிய துவரை சேர்ந்தான்
வாட்டிறல் விளங்கு செங்கை
வால்வளை யேனி வள்ளல். (சங)

4107. முல்லையங் கோதை யோடு
முழுமதித் தோற்றஞ் சான்ற
நல்லெழி னம்பி மீட்டு
நைமிசா ரணிய நண்ணி

4105. வெருவரு செலவின் - அஞ்சத்தக்க செல்லுதலோடு. சமம் - போர். செயலின்மிக்கான் ஒருவனே. வலியின்மிக்கான் ஒருவனே. இருவிரும் நிகரே. ஆற்றும் இருஞ்சமம் ஒழிக - நீங்கள் இருவரும் செய்கின்ற பெரிய போரை விடுக. ஒற்றைக் குழையினன் - பலராமன்.

4106. காற்றின் சேய் - வீமன். கிளைத்த - தோன்றிய. அரா வுயர்த்த வேந்து - துரியோதனன். சேயும் வேந்தும் கேட்டிலராய்த் துளக்கமில் போர்விளைத்தார்; துளக்கம் - அசைவு; நடுக்கமுமாம். மோட்டு - பெருமையையுடைய. முற்றிய - சூழ்ந்த. வள்ளல் - பலராமன். வள்ளல் துவரை சேர்ந்தான்.

4107. முல்லையங் கோதை - பலராமனுடைய மனைவி. நம்பி - பலராமன். மீட்டும் - மீண்டும். மாதவத்தோர் - முனிவர். தொல்லைநூல்

எல்லையில் வேள்வி யாற்றி
யியற்றுமா தவத்தோர்க் கெல்லாம்
தொல்லைநூன் முடிவு தெள்ளித்
துகளறத் தொகுத்துச் சொற்றான். (சச)

4108. மாறின்மெய் யுணர்வு தோன்ற
மன்னுமைம் புலனும் வாட்டி
ஆறறி முனிவர்க் கெல்லா
மருமறை தெரித்த பின்னர்
வீறுயர் துவரை மேவி
வீற்றிருந் தனனாற் றெண்மட்
டூறுவெண் டோட்ட போந்தை
யுயரிய கொடியான் மாதோ. (சரு)

4109. என்னலு முவந்து மன்ன
னிந்திர திருவில் லேய்க்கும்
கன்னியந் துளவப் பைந்தார்
கருமுகில் விளையாட் டின்னம்
பன்னுவா யென்ன லோடும்
பகாருஞ் சிறப்பு வாய்ந்த
மெய்ந்நிலை விளங்க நாடும்
விழுத்தவன் விளம்ப லுற்றான். (சசு)

---

முடிவு - வேதாந்தத்தை. தெள்ளி - தெளிவாகக் கொழித்து. சொற்றான் - மொழிந்தான்.

4108. மெய்யுணர்வு - உண்மை யறிவு. வாட்டி - கெடுத்து. ஆறறி முனிவர் - ஆறு வேதாங்கங்களையும் அறிந்த தவத்தினர். தெரித்த - அறிவித்த. வீறு - பெருமை. தோட்ட - இதழை யுடைய. போந்தை - பனையை. கொடியான் : பலராமன்.

4109. மன்னன் - பரிக்ஷித்து. இந்திர திருவில் - இந்திரவில்; "இந்திர திருவிலி னெழிலின தொருபால்" (சீவக. 121.) ஏய்க்கும் - ஒக்கின்ற. கருமுகில் - கண்ணபிரானுடைய. பன்னுவாய் - கூறுவாய். மெய்ந்நிலை - உண்மை நிலையை. நாடும் - ஆராயும். தவன் - சுகமுனிவன்,



# 45. குசேலருக்கு அருள்புரி அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

4110. பாயும் வல்லிருள் பருகுமொண் கதிர்மணிச் செஞ்சூட்
டாயி ரந்தலை யலர்த்துபாம் பணைத்துயி லகற்றிக்
காயும் வெஞ்சினக் கட்செவித் தலையினின் றாடும்
மாய னன்பினன் குசேலனென் றுளனொரு மறையோன். (க)

4111. எனைத்தொன் றாயினு மெதிர்ந்தது மிசைந்துவண் டிரைக்கும்
புனத்து ழாய்முகில் பொன்னடி கருதுமம் மறையோன்
மனைக்கி ழத்திவெம் பசியினல் வாடிய முகத்தாள்
பனித்த கண்ணினள் பவளவாய் திறந்தனள் பகர்வாள். (உ)

4112. பொன்பி றங்கிய புணர்முலைத் திருமகள் கொழுநற்
கன்ப னாகியு மகன்றிலை வறுமைமற் றென்னோ
மின்பி றங்கிய விழுமணி மார்பினற் கண்டு
மன்பெ ரும்பொருள் வாரினை வருகென வகுத்தாள். (ங)

4113. வடித்த நான்மறை யந்தணன் மாயனைக் காணின்
கொடுப்ப தென்னெனக் குறுநுதல் வாங்குமஞ் செந்நெல்

---

4110. பாயும் - பரவுகின்ற. சூட்டு - உச்சியையுடைய. அலர்த்து - விரிக்கின்ற. துயில் - உறக்கத்தை. காயும் - கனல்கின்ற. கட்செவி - காளியனென்னும் பாம்பின். மாயனிடத்து அன்பினனாகிய குசேலன்; மாயன் - கண்ணபிரான்.

4111. எனைத்தொன்றாயினும் - எவ்வளவு சிறிய பொருளாயினும். எதிர்ந்தது மிசைந்து - கிடைத்ததை உண்டு. முகில் - கண்ணபிரானுடைய. மறையோன் - குசேலன். மிசைந்து கருதுகின்ற மறையோனுடைய. மனைக் கிழத்தி - மனைவி. பனித்த - நீர் துளித்த.

4112. பொன்பிறங்கிய - மாமைநிறம் விளங்கிய. கொழுநற்கு - கண்ணபிரானுக்கு. வறுமை அகன்றிலை. என்னோ - இவ்வாறிருப்பது என்ன காரணமோ. மார்பினன் - கண்ணபிரான். மன்பெரும்பொருள் - நிலைபெற்ற பெரிய செல்வத்தை. வாரினை வருக - வாரிவருக.

4113. வடித்த - பயிற்றிய. அந்தணன் - குசேலன். மாயனைக்காணின் கொடுப்பது என் என; மாயன் - கண்ணபிரான். என - என்று கேட்க. குறு நுதல் - குசேலனுடைய மனைவி. வாங்கும் அம்செந்நெல் இடித்த பாசவல்.

இடித்த பாசவல் வெண்ணிறத் துகில்பொதிந் தீந்து
நடத்தி யென்னலு நசையிலன் மென்மெல நடந்தான். (ச)

4114. தெரியு நான்மறை யின்னமுந் தெரிவுறக் காண்டற்
கரிய னாகிய வாக்கிதழ் முளரியஞ் செங்கட்
கரிய வன்றனைக் காணுறக் கடுகுபே ரன்பு
விரிய வேகினன் விழுப்பெருங் கோயின்மே யினனால். (ரு)

4115. மன்னர் மன்னவர் மணிமுடித் திரள்பொரு துக்க
பொன்னி வர்ந்தொளிர் பொற்கடை மூன்றிறந் தேகிச்
கன்னியந் துழாய்க் கருமுகி லொருகனித் துவர்வாய்
அன்ன மென்னடை யரிவையோ டிருந்துழி யடைந்தான். (சு)

4116 உருகு காதலன் பைப்பய வொல்கினன் வருதல்
முருகு விம்முசெம் முளரியஞ் செங்கணா னோக்கி
எரிபொன் சேக்கைநின் றெழுந்தெதிர் சென்றிவண் வருக
வருக வென்றுபொன் மார்புறத் தழீஇயினன் மகிழ்ந்தான். (எ)

4117. களித்த செங்கயற் கருங்கண்மா மாதுவெண் கவரி
வளைத்த ளிர்க்கையா லிரட்டமா மணியணை யிருத்தி

---

வளைந்த அழகிய செந்நெல்லை இடித்துச்செய்த பசிய அவலை; 4120, 4121; "பெருஞ்செந் நெல்லின் வாங்குகதிர் முறித்துப், பாசவ லிடித்த" (அகநா. 141.) இழிந்த - இழிவான. பொதிந்து - கட்டி. நடத்தி - செல்வாயாக. நசையிலன் - விருப்பமென்பதில்லாதவனாகிய குசேலன்.

(பி - ம்.) 2. அறவர்பாற் கொடுவந்து. 3. இரந்த வெண்டுகில்.

4114. தெரியும் - ஆராயப்பட்ட. காண்டற்கு - காணுதற்கு. அரிய னாகிய கரியவன்றனை; கண்ணபிரானை. காணுற - பார்த்தற்கு. கடுகு - விரைந்த. கோயில் - கண்ணபிரானுடைய அரண்மனையை.

4115. பொருதலால் உக்க; உக்க - சிந்திய. கடைமூன்று இறந்து - வாயில் மூன்றைக்கடந்து. கருமுகில் - கண்ணபிரான். ஓர் அரிவையோடு இருந்துழி; அரிவை - உருக்குமிணி. இருந்துழி - இருந்த இடத்தை.

4116. காதலன் - குசேலன். பைப்பய - மெல்ல. ஒல்கினன் - அசைந்தவனாய். செங்கணான் - கண்ணபிரான். வருதலைச் செங்கணான் நோக்கி. எரிபொன் சேக்கைநின்று - விளங்குகின்ற பொன்னாலாகிய படுக்கையினின்றும். இவண் - இவ்விடத்தே. வருக வருக: அடுக்கு, அன்பினால் கூறப்பட்டது. தழீஇயினன் - தழுவினான்.

4117. மாமாது - உருக்குமிணி. கவரி - சாமரையை. இரட்ட - வீச. மாது கவரியை இரட்ட. அணை - படுக்கையில். இருத்தி - குசே

இளைத்தி சாலவென் றிளநிலா வொழுகுநூன் மார்பின்
அளிக்கு லஞ்செறி செய்யதா ரணிந்துபா களித்தான். (அ)

4118. பயிற்று நான்மறைக் குரவனம் மனையவள் பணியால்
வெயிற்கு வெம்பிய கானிடை விராய்தாற் கேகிப்
புயற்க சைந்தொரு பொதும்பரி னிரவுநா மிருந்த
தயர்த்தி போலுமென் றளவளா யுசாவின னன்றே. (கூ)

4119. மூளைத்த வெண்ணிலா முறுவல்வாண் முகத்தின னாகி
அளிப்ப மற்றெனக் கென்கொடு வந்தனை யன்ப
ஒளிப்ப தென்னைநீ யுதவுகென் றுள்ளரக் கூட்டும்
தளிர்க்கை யாற்றுகில் வாங்கினன் றனிமறை முதலி. (கo)

4120. பொருள்வி ழைந்திவன் போற்றல னமையொரு பொழுதும்
திருவி ழைந்திவன் றிருமனைக் கிழத்திசெல் கென்ன
வரவு வந்தனன் மற்றிவற் களித்துமென் றள்ளி
விரைக மழ்ந்தபூந் துளவினுன் பாசவன் மிசைந்தான். (கக)

---

லனை இருக்கச்செய்து. சாலஇளைத்தி என்று - மிகவும் இளைத்துப்போனாய் என்று கூறி. மார்பில் தாரை அணிந்து. பாகு - வெற்றிலை.

4118. குரவன் - சாந்தீபமுனிவனுடைய. மனையவள் - மனைவியின். பணி - கட்டளை. கானிடை - காட்டில். விராய் - விறகு (நீதிநெறி. 64.) புயற்கு அசைந்து - மழைக்கு இளைத்து. பொதும்பர் - சோலை. அயர்த்தி போலும் - மறந்தாய்போலும்; அயர்த்தல் - மறத்தல்; "அயர்ப்பாயன்றே" (மணி. 19 : 9.) அளவளாய் - கலந்து பேசி. உசாவினன் - விசாரித்தான்.

4119. முளைத்த - தோன்றிய. அன்ப, எனக்கு அளிப்ப என்கொடு வந்தனை. அளிப்ப - கொடுப்பதற்கு. கொடு - கொண்டு. அன்ப: விளி. ஒளிப்பது என்னை - மறைப்பது என்ன. உதவுக - கொடுக்க. அரக்கூட்டும் - சிவப்பூட்டப்பெற்ற. மறைமுதலி துகிலை வாங்கினன்; முதலி - கண்ணபிரான். துகிலை - குசேலன் ஒளித்துவைத்திருந்த அவல் மூட்டையை.

4120. இவன் பொருள்விழைந்து நம்மை ஒருபொழுதும் போற்றலன்; இவன் - குசேலன். போற்றலன் - புகழான். இவன் மனைக்கிழத்தி திருவிழைந்து செல்க என்ன; மனைக்கிழத்தி - மனைவி. திரு - செல்வத்தை. என்ன - என்று கூறினானாக. வர உவந்தனன் - இங்கு வருவதற்கு மகிழ்ந்தான். இவற்கு அளித்தும் - குசேலனுக்கு நீண்ட செல்வத்தைக் கொடுப்போம். துளவினன் பாசவலை அள்ளி மிசைந்தான்; மிசைந்தான் - உண்டான்.

4121. வாட்டி நுண்ணிடை வடவரைக் குவடெனப் பணைத்த
மோட்டி ளங்கதிர் முலைசுமந் தொழுகிய தீம்பால்
ஊட்டு பேயினுள் ளுயிர்பிழிந் துண்டகார் வண்ணன்
மீட்டும் பாசவன் மிசைவதற் கெடுப்பவுள் விழைந்தான். (கஉ)

4122. ஊர்ந்த காதலி னொருமுறை யருந்திய திறத்தால்
ஏந்த லிந்திர னெனத்தகுஞ் செல்வமெய் தினனால்
மாந்தன் மற்றினி யென்றுசெம் மலர்க்கரம் பிடித்தாள்
பூந்து ழாய்வரை மார்பக மகன்றிலாப் பூவை. (கங)

4123. தடநெ கிழ்ந்தசெந் தாமரை யவள்குறிப் பறிந்து
விடுசு டர்ப்பனி வெண்ணகை முகிழ்த்தருள் சுரந்து
மடைதி றந்தசெங் கண்ணினன் மறையவன் றனக்கு
விடைபு ரிந்தனன் வீறுசால் வேதிய னெழுந்தான். (கச)

4124. அம்ம வுய்ந்தன முய்ந்தன மரும்பொரு ளெய்தின்
மம்மர் கூர்தர மறக்குவ னமையென மதித்தே
மும்மை சாலுல களித்தருண் முளரியஞ் செங்கட்
செம்ம னல்கலன் செல்வமென் றுவந்தனன் சென்றான். (கரு)

---

4121. வடவரைக் குவடென - மேருமலையின் சிகரத்தைப்போல. பணைத்த - பெருத்த. இடையை வாட்டப் பணைத்தமுலை. மோடு - பெருமை. பாலை ஊட்டிய பேயின் உயிரைப்பிழிந்து உண்ட கார்வண்ணன்: கண்ணபிரான். பேய் - பூதனை. மீட்டும் - மறுமுறையும். மிசைவதற்கு - உண்பதற்கு. எடுப்ப - ஒருபிடி எடுத்தற்கு. விழைந்தான் - மனம் விரும்பினான்.

4122. ஊர்ந்த காதலின் - வளர்ந்த ஆசையால். ஏந்தல் - குசேலன். இந்திரன் எனத்தகும் - இந்திரனென்று சொல்லும்படி. இனிமாந்தல் - இனிமேல் உண்ணாதே. காம் - கண்ணபிரானுடைய கை. துழாய்வரை மார்பகம் - கண்ணபிரானுடைய மார்பிடத்தை. பூவை - உருக்குமிணி. பூவை பிடித்தாள்.

4123. தடம் நெகிழ்ந்த - தடாகத்தில் அலர்ந்த. தாமரையவள் - உருக்குமிணியின். நகைமுகிழ்த்து - புன்சிரிப்புச்செய்து. கண்ணினன் - கண்ணபிரான். மறையவன்றனக்கு - குசேலனுக்கு. வீறு - பெருமை.

4124. அம்ம; அசை. உய்ந்தனம் - பிழைத்தோம். எய்தின் - பெற்றால். மம்மர் கூர்தர - மயக்கம் மிக. நமை மறக்குவன் என மதித்து; நமையென்றது கண்ணபிரானை. மதித்து - எண்ணி. செம்மல் - கண்ணபிரான். செல்வம் நல்கலன் என்று; நல்கலன் - கொடுக்கவில்லை.

(பி - ம்) 1. எய்தல்.

4125. களித்த வண்டினங் கஞலவாய் விரிந்துதண் டேறல்
துளித்த நாண்மலர்ச் சோலையுஞ் சுடர்மணித் தொழுதி
தெளித்தெ னத்திகழ் தீம்புனல் வாவியுஞ் செறிந்து
பளிக்கு மண்டபம் பல்குதன் மனையகம் படர்ந்தான். (கசு)

4126. தெளிநி லாக்கதிர் சிந்திய வெள்ளிவெண் மாடம்
முளையி ளம்பிறை தவழவிண் முகடுகீண் டோங்கி
அளகை காவல னருநிதி யறைதிறந் தென்ன
வளம லிந்தவம் மனையக நோக்கினன் மயர்ந்தான். (கஎ)

4127. விலகி வில்லுமிழ் மீன்குழாத் தொள்ளொளி விரிக்கும்
கலைநி றைந்தவெண் மதியெனக் கவின்வழிந் தொழுகு
திலக வாணுதற் சிற்றிடைத் தெரிவையர் செறிய
இலகு பூணணிந் தில்லவள் வருதல்கண் டயிர்த்தான். (கஅ)

4128. பதியை நோக்கினன் பதிதொறும் பதிதொறுங் கிடந்த
நிதியை நோக்கின னேரிலா மடப்பிணை மருட்டும்
புதிய நோக்கொடு போதரு மனையவள் வதன
மதியை நோக்கினன் மால்செய லிதுவென வலித்தான். (ககூ)

---

4125. கஞல - நெருங்க. தேறல் - தேன். மணித்தொழுதி - மணித் தொகுதிகளை. தெளித்தென - கரைத்தாற்போன்ற; புனலின் தெளிவுக்கு உவமை. வாவி - தடாகம். பல்கு - நிறைந்த. மனையகம் - வீட்டை. சோலையும் வாவியும் செறிந்து பளிக்குமண்டபம் பல்கிய தன் மனையகத்தை.

4126. கதிர் - கிரணத்தை. முளையிளம்பிறை - பிறைச்சந்திரன். முகடு - உச்சி. அளகை காவலன் - குபேரனுடைய. நிதியறை - பொக்கிஷ அறையை. வளம் - செல்வம். மயர்ந்தான் - மயங்கினன்.

4127. வில்லுமிழ் - ஒளி உமிழ்கின்ற. மீன்குழாத்து - நட்சத்திரக் கூட்டத்தில். மதி - சந்திரன். கவின் - அழகு. தெரிவையர் - தோழியர். செறிய - நெருங்கியிருக்க. பூண் - ஆபரணத்தை, இல்லவள் - தன்மனைவி. குசேலன் மனைவிக்கு மதியும், தோழியர்க்கு மீன்குழாமும் உவமைகள்.

4128. பதி - வீட்டை. நிதி - செல்வம். நேரிலா - ஒப்பில்லாத. மடப்பிணை மருட்டும் - இளையமானின் நோக்கை மயங்கச்செய்கின்ற. போதரும் - வருகின்ற. மனையவளுடைய வதனமாகிய மதியை; மனையவள் - மனைவி. இது மாலின்செயல் என. மால் - கண்ணபிரான். வலித்தான் - நிச்சயித்தான்.

(பி - ம்) 2. நேரிமை மடப்பிணை.

4129. பெறல ருந்திருப் பெற்றும்வெண் பிறைமருப் பொசித்த
இறைக ருங்கட லிருநிலம் பொதிந்ததாட் கமல
மறவி யொன்றிலன் மாட்சிசால் பெருநல மாந்தி
அறநி ரப்பிநின் றளவிலாத் தனிநெறி யடைந்தான். (௨0)



# 46. சமந்தபஞ்சகத்திற் சென்ற அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4130. பருதிவா ளரவு தீண்டப் படுவதோர் கால நண்ண
அரசர்செங் குருதி நீரா லடுதிறற் பரசு ராமன்
தரைபுகழ் தடம தாக்குஞ் சமந்தபஞ் சகத்திற் றண்டேன்
சொரிதொடை யரசர் வெள்ளந் தொக்குட னடைந்த தன்றே. (க)

4131. முளைத்தவெண் முறுவற் செவ்வாய் முகிழ்முலை மாத ரீட்டம்
கிளைத்தசெம் பவள வல்லிக் கிளையெனப் பார்த்து சூழ
வளைக்குல மலற நீல மாகட லெழுந்த தேபோல்
களிச்சுரும் பரற்று பைந்தார்க் கண்ண னும் போயி னனே. (௨)

---

4129. பெறலருந்திருப் பெற்றும் - பெறுதற்கரிய செல்வத்தைப் பெற்றபின்பும். இறை - கண்ணபிரானுடைய. நிலம் பொதிந்த - பூமியை அடக்கிய. இறையின் தாட்கமலத்தை. மறவி ஒன்றிலன் - மறத்தல் சிறிதுமில்லாதவன். நலம் - இன்பத்தை. அறம் நிரப்பி - தருமத்தை நிரம்பச்செய்து.

4130. பருதி அரவால் தீண்டப்படுவதோர் காலம் - சூரிய கிரகண காலம்; பருதி - சூரியன். அரவு - கேது என்னும் பாம்பு. நண்ண - அடைய. பரசுராமன், அரசருடைய குருதி நீரால் தடமதாக்கிய சமந்த பஞ்சகத்தில். சமந்த பஞ்சகம்: ஐந்து இரத்தமடுக்கள் உள்ள இடம்; இவை பரசுராமனால் செய்யப்பட்டன. தேனைச் சொரிகின்ற தொடை; தொடை - மாலை. வெள்ளம் - தொகுதி. தொக்கு - கூடி.

4131. முளைத்த - அரும்பிய. முகிழ் முலை - அரும்பிய முலை. ஈட்டம் - கூட்டம். கிளைத்த - தோன்றிய. வல்லி - கொடி. கிளை - கூட்டம். மாதரீட்டத்திற்குப் பவளவல்லிக்கிளை உவமை. வளை - சங்கு. அலற - முழங்க. ஆங்கண் போனான் - சமந்த பஞ்சகத்திற்குப் போனான்.

4132. ஆவியே யனைய ளாய வசோதையு மாவி பூத்த
காவியுங் கயலும் வென்று கடைக்குழை யெதிர்ந்த வுண்கட்
கோவியர் குழாமு மொண்கேழ்க் குங்குமக் கலவைச் சாந்தும்
நாவியுங் கமழ்ந்து செல்ல நடந்தன னந்த கோனும். (ங)

4133. அங்கதிர் மழுவ லாள னுக்கிய தடமுன் போலக்
குங்குமச் சாந்து தோய்ந்து குருதியின் றன்மை காட்டத்
திங்கள்வாண் முகத்துச் செவ்வாய்த் தேவியர் குழாத்தி னோடும்
கங்கைநீர் பூத்த தாளான் கடவுணீ ராடி னானல். (ச)

4134. கொடிபுனை கொடிஞ்சி மான்றேர்க் குருகுலத் தரசும் வெய்ய
இடிமுழங் கோடை யானை யெதுகுலத் தரசு மீண்டிப்
படிபுகழ் தெய்வ நன்னீர் படிந்தொரு பசும்பொற் கோட்டுக்
கடிமலர்ச் சோலை நீழல் கலந்துட னிறுத்த மாதோ. (ரு)

4135. புவிபுகழ் நந்த கோனைப் போர்வசு தேவன் கண்ணுற்
றுவகைமீக் கூர வந்நா ளோங்கெழின் மருகி னூடு
தவழ்பசுங் குழவி யோடி யாடவந் தாது சிந்தி
அவிழ்தொடை யணிந்த மார்வ மழுந்துறத் தழீஇக்கொண் டானே.)

4136. கோல்வளை யசோதை வந்து குறுகலு முலக முண்டோர்
ஆலிலைப் பள்ளித் துஞ்சு மஞ்சனக் குழவி யுண்ணப்

---

4132. ஆவி பூத்த காவியும் - வாவியிற்பூத்த நீலோற்பலத்தையும். குழை - குண்டலத்தை. கேழ் - ஒளி. நாவி - கஸ்தூரி. அசோதையும் கோவியர் குழாமும் செல்ல நந்தகோனும் நடந்தனன்.

4133. மழுவலாளன் - பரசுராமன். ஆக்கிய தடம் - உண்டாக்கிய இரத்த மடு. குருதியின் - இரத்தத்தின். தேவியர் - மனைவியர். கங்கை நீரைப் பூத்த தாளான்: கண்ணபிரான். கடவுள் நீர் - சமந்தபஞ்சகத்து நீரில்.

4134. கொடிஞ்சி - தாமரைமுகை வடிவமாகச் செய்ததேருறுப்பு; வெய்ய - கொடிய. இடியைப்போல் முழங்குகின்ற. யதுகுலம் - யாதவகுலம். படி - பூமி. கடி - வாசனை. சோலையின் நீழலில். கலந்து - ஒன்றுசேர்ந்து. இறுத்த - தங்கின.

4135. நந்தகோனை வசுதேவன் கண்ணுற்று. மீக்கூர - மிக. அந் நாள் - அக்காலத்து. குழவி - கண்ணபிரான். ஆட - விளையாடுதலால். தொடை - மாலை. நந்தகோபனை வசுதேவன் கண்ணுற்று, உவகை மீக்கூர மார்வம் அழுந்துறும்படி தழீஇக்கொண்டான்.

4136. கோல்வளை - திரண்ட வளையையுடைய. உலகத்தை உண்டு

பால்சுரந் தூட்டு செம்பொற் படாமுலைச் சாந்து தோய
சேலொடு பொருந்த வுண்கட் டேவகி புல்லி னாளால். (எ)

4137. சுரும்புசூழ் பனிமென் முல்லைத் தொடையணி நந்த கோனும்
அரும்புவெண் டாள மூரா லசோதையு முவப்ப நண்ணி
இரும்பனைக் கொடிய னனு மேடவிழ் கமலச் செங்கட்
கரும்புயல் வண்ணத் தானுங் கைதொழு திறைஞ்சி நின்றார். (அ)

4138. குன்றெதிர் நிற்ற லாகாக் குங்குமத் தோளி னாரை
அன்றெதிர் காணப் பெற்ற வசோதையு நந்த கோனும்
சென்றெதிர் முளரி வென்ற செய்யகண் களித்து முற்றாக்
கன்றெதிர் கறவை போலக் கசிந்துள முருகி னாரால். (கூ)

4139. வெயினுழை பறிய லாகா விரிமலர்க் காவி னீழல்
கயலெனக் களிக்கு முண்கண் பரப்பினர் கருங்கட் டோகை
மயிலென நின்ற வாயர் மாதர்தங் குழுவை யெல்லாம்
புயலென நின்ற செங்கட் பொருவிலி புல்லி னானே. (க0)

4140. கஞ்சனைக் கொன்ற பின்னுங் காய்ந்தெழு வேந்த ரோடு
வெஞ்சினந் திருகு வாட்போர் விளைத்தன மிருந்திட் டேமால்
வஞ்சிநுண் மருங்கு னல்லீர் மறந்தனிர் கொல்லோ வென்னச்
செஞ்சுடர் விரிக்குந் தெய்வத் திகிரியஞ் செல்வன் செப்பும்.()

---

ஓர் ஆலிலையின் பள்ளியில் துஞ்சும் குழவி; கண்ணபிரான். படாமுலை - சாயாத முலையையுடைய. அசோதையைத் தேவகி புல்லினாள்.

4137. சுரும்பு - வண்டுகள். தொடை - மாலை. அரும்பு - தோன்றிய. தாள மூரல் - முத்துப்போலும் பற்களையுடைய. உவப்ப - மகிழும்படி. பனைக்கொடியினன் - பலராமன். ஏடு - இதழ். வண்ணத்தான் - கண்ணபிரான்.

4138. குன்று எதிரில் நிற்றலாகாத தோளினை உடையாரை; என்றது கண்ணபிரானையும் பலராமனையும். அன்று - அன்றைக்கு. முளரி கண்ணுக்கு உவமை. முற்றா - முதிராத. கன்றெதிர் கறவைபோல; "கன்று காண் கறவையிற் சென்றவட் குறுகி" (பெருங். 2. 10: 41.)

4139. வெயில் நுழைபு அறியலாகா விரிமலர்க் காவினீழல் - சூரியன் புகுதலை அறியமுடியாத விரிந்த பூக்களையுடைய சோலையின் நிழலில். "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" (பெரும்பாண். 374, மணி 4: 5.) கண்பரப்பினர் - கண்ணாற் பார்த்தனர். தோகையையுடைய மயிலென. ஆயர் மாதர் - ஆய்ச்சியர். பொருவிலி - ஒப்பில்லாத கண்ணபிரான்.

4140. காய்ந்து எழு - சோபித்துப் போர்க்கெழுந்த. திருகு - மாறுபட்ட. விளைத்திருந்திட்டோம். வஞ்சிபோலும் மருங்குலையுடைய நல்லீர் [illegible] ளி. செல்வன் - கண்ணபிரான்.

4141. இருத்துநா மெங்கு முங்க ளிடத்தினு மிருக்கின் றேமால்
உரைப்பின்மற் றும்மை நீங்கி யுறைந்ததை யுண்டு கொல்லோ
அருப்பிள முலையீ ரென்னு வரும்பவிழ் பசும்பொற் கோட்டுத்
தருக்கொடு தந்த நம்பி தன்னிலை தெரித்தான் மாதோ. (கஉ)

4142. அளித்தழித் துலக மீள வமைத்தரு ளிறைவ னின்று
தெளித்தது நெஞ்சந் தேறித் தெருமா லுழத்த லீர்ந்து
களிக்கயல் பொருது வென்று கடைசிவந் தகன்ற கண்ணார்
தளிர்க்கரங் கூப்பிச் செவ்வாய்த் தத்தையிற் கிளக்க லுற்றார். ()

4143. வலஞ்சுழி யுந்தி யந்தா மரையினின் றுலகந் தந்த
அலங்கிதழ் முளரிச் செங்க ணமலநீ ராழி வேலி
நிலம்பொதி கமலப் பொற்றா ளினைவதே யருள்செய் கென்னு
விலங்கிவில் லுமிழும் பூணார் வேண்டினர் வழுத்தல் செய்தார். (கச)

4144. அத்தலை யைவர் வேட்ட வாரமு தன்ன சாயற்
றத்தரி நெடுங்கட் பேதை தாமரைக் கண்ணன் வேட்ட
மைத்தகா ரன்ன கூந்தன் மாதரோ டளவ ளாவி
எத்திற னும்மை வேட்டா னிறைவனென் றியம்பி னாளால். ()

---

4141. எங்கும் நாம் இருத்தும்; இருத்தும் - இருப்போம். உரைப்பின் - கூறினல். மற்று, அசை. உறைந்ததை உண்டுகொல்லோ - உறைந்தது உண்டோ; ஐ, ஓ: அசைகள். அருப்பிளமுலை - அரும்பைப்போன்ற இளமுலை; கோட்டு - கிளையையுடைய. தருகொடு தந்த - கற்பகமரத்தைக் கொண்டுதந்த. நம்பி - கண்ணபிரான். தெளித்தான் - விளக்கினான்.

4142. உலகத்தை அளித்து அழித்து அமைத்தருளுகின்ற இறைவன்: கண்ணபிரான். தெளித்தலும் - தன்னிலையைத் தெளிவித்தவுடன். தேறி - தெளிந்து. தெருமால் உழத்தல் தீர்ந்து - மயக்கத்தில் உழல்வதினின்றும் நீங்கி. கண்ணார் - கோவியர். கூப்பி - குவித்து. தத்தையின் - கிளியைப் போல. கண்ணார், தேறித்தீர்ந்து, கூப்பிக் கிளக்கலுற்றார்.

4143. வலம்சுழிக்கின்ற உந்தியாகிய தாமரையினின்று. அலங்கு - அசைகின்ற. அமல: கண்ணபிரானே; விளி. பொதிதல் - அடக்குதல். உன்தாளை நினைவதையே அருள்செய்க. என்னு - என்றுகூறி. விலங்கி வில்லுமிழும்பூணார் - குறுக்கிட்டு ஒளியை உமிழ்கின்ற ஆபரணத்தை யணிந்த மகளிர்; "விலங்கிவில் லுமிழும் பூணான்" (சீவக. 1167.)

4144. அத்தலை - அவ்விடத்து. ஐவர் - பாண்டவர். சாயலையும் கண்ணையுமுடைய பேதை: திரௌபதி. மைத்த - கருமையையுடைய. மாதரோடு - கோவியரோடு. எத்திறன் - எப்படி. இறைவன் - கண்ணபிரான்,

4145. தொடுத்தபூங் கோதை யொன்று சுரிகருங் குழலிற் சூட்ட
எடுப்பினு மம்ம வோவென் றிரும்புயல் கிழித்த மின்போல்
நடுக்குறு மருங்குற் செவ்வாய் நறுநுதன் மாதர் தம்மை
வடித்தபூந் துளவோன் வேட்ட வண்மையாங் குரைத்தல் செய்தார்.()

4146. குவிமுகிழ் விரிதார் மன்னர் குருதியான் மழுவ லாளன்
தவழ்திரை ஞாலம் போற்றைந் தடம்புரி யிடத்தி னூடு
கவளமாக் களிறு சாய்த்த கண்ணனைக் கண்ணுற் றைவர்
உவகையங் கண்ணீர் வார வொருதட மியற்றி யிட்டார். (கஎ)

4147. யாணர்வெண் டாங்கக் கங்கை யாறெடுத் தொழுகு தாளின்
சோணமா நதியும் வந்து தோற்றிய தோற்ற மொப்பச்
சேணொளி மௌலிச் செக்கர்ச் சிகாமணிக் கதிர்கள் பாய
வாணிலா மணிப்பூண் மன்னர் மாயனை வணக்கஞ் செய்தார். ()

4148. இமிழ்திரைப் பரவை யீன்ற வின்னகைக் குமுதச் செவ்வாய்
அமுதகு மழலைத் தீஞ்சொ லரிவைவீற் றிருந்த மார்வக்
கமழ்துழா யலங்கன் மாலைக் கண்ணனைக் கண்ணிற் காண
தமிழ்முனி தொடக்கமாய தபோதனர் சார்ந்துளாரால் (கக)

---

4145. கோதை - மாலை. சூட்ட - சூட்டுதற்கு. அம்மவோ என்று மின்போல் நடுக்குறும் மாதர்; கோவியர். அம்மவோ; 'அம்மேயோ' என்பர். (சீவக. 1271, ந.) தம்மை - தங்களை. அடி. 1 - 3: "அனிச்சப் பூங் கோதை சூட்டி னம்மனை யோவென் றஞ்சிப், பனிக்குறுன் னுசுப்பிற் பாவை" (சீவக. 745.) துளவோன் - கண்ணபிரான். வண்மை - வளப்பத்தை. மாதர் உரைத்தல் செய்தார்.

4146. குவிமுகிழ் - குவிந்த அரும்பு. மன்னரது குருதியால். மழுவ லாளன் - பரசுராமன். ஐந்தடம் புரியிடத்தினூடு - ஐந்து தடாகங்கள் செய்த இடத்தின் நடுவில். களிறு: குவலயாபீடம். ஐவர் - பாண்டவர். வார - ஒழுக. ஒரு தடம் - ஒரு தடாகத்தை. மழுவலாள னொருவன் ஐந்து தடாகம் செய்த இடத்தில் ஐவர் ஒருதடாகத்தை இயற்றினர் என்றது நயம்.

(பி - ம்) 2. போற்றத்தடம்புரி.

4147. யாணர் - புதுவருவாயையுடைய. தாளில் - கண்ணபிரானுடைய பாதத்தில். சோணமா நதி - சோணை யாறு. மௌலி - மகுடம். செக்கர் - சிவப்பு. சிகாமணி - சூடாமணி; தலையணி. மன்னர்களின் மகுடங்களின் சிவந்த ஒளிக்குச் சோணைநதி உவமை. மாயனை - கண்ணபிரானை.

4148. இமிழ்தல் - ஒலித்தல். பரவை - கடல். மழலை - இளஞ்சொல். அரிவை - திருமகள். மார்வத்தில் மாலையையுடைய கண்ணனை; மார்வத்தையும் மாலையையும் உடைய எனலுமாம். காண - பார்த்தற்கு. தமிழ்முனி தொடக்கமாய - அகத்தியன் முதலிய. தபோதனர் - முனிவர்.

4149. களிமதக் களிறு மாய்த்த கண்ணனைக் கண்ணி னோக்கி
அளவறு ஞான நந்த மருவமென் றறைவ தென்னே
இளநிலா நகைத்துச் செவ்வா யின்னருள் பொழியுஞ் செங்கட்
டொளிமணி யுருவிற் றென்னு வுணர்ந்துணர்ந் துருகா நின்றார். (உo)

4150. சதுமறை யிறுதி யின்னுஞ் சழக்கறத் தெரிக லொல்லா
முதிர்பெரு ஞான நந்த மூர்த்தநம் விடக்குக் கண்ணுக்
கெதிர்தர லென்னே யென்னே யென்றிறும் பூதெய் தாவாங்
கெதுதவ மிழைத்தே மென்னு வேங்கின ரவச முற்றார். (உக)

4151. அவிழ்ந்தபூந் துணர்தூய்த் தாழ்ந்த வமரர்பொன் மகுட கோடி
தவழ்ந்தசெங் கதிர்கள் பொங்குந் தனிமணி யுழுது மாடல்
உவந்தவா ளரவின் செஞ்சுட் டொளிர்மணி கிழித்துஞ் செக்கர்ச்
சிவந்ததாட் குழகன் பூசை செய்தனன் செய்த வர்க்கே. ()

4152. அழற்பொலிந் திலங்கு கூர்வே லடல்வசு தேவ னுற்ற
விழுத்தவர் தம்மைத் தாழ்ந்து வினையினல் வினையை யெல்லாம்
ஒழித்திடும் வண்ண நீவி ருரைமினோ வெனவி னுவ
முழுப்பெரு முனிவர் மூரன் முகிழ்த்தனர் மொழிய லுற்றார். (உ௩)

---

4149. களிறு - குவலயாபீடமென்னும் யானையை. கண்ணனைக் கண்ணினால் நோக்கிய பின். ஞானந்தம் - பரம்பொருள்; 4150. அருவம் - உருவமில்லாதது. செங்கட்டு - சிவந்த கண்களையுடையது. உருவிற்று - உருவத்தினை யுடையது. என்னு - என்று கூறி.

4150. சதுமறை யிறுதி - நான்கு வேதங்களின் முடிவு. சழக்கற - குற்றங்கெட. சதுமறை யிறுதியும் தெரிகலொல்லா ஞானனந்த மூர்த்தம் - கண்ணபிரான். மூர்த்தம் - திருவுருவம். விடக்குக் கண்ணுக்கு - ஊனக் கண்ணுக்கு. எதிர்தரல் - தோன்றுதல். இறும்பூது எய்தா - ஆச்சரிய முற்று. ஆங்கு - அவ்விடத்தே. தவம் எது இழைத்தேம் என்னு. அவ சம் - பரவசம்.

4151. துணர்தூய் - பூங்கொத்துக்களைத் தூவி. தாழ்ந்த - வணங் கிய. மகுடகோடியின் மணி உழுதும். ஆடல் உவந்த - ஆடுதற்கு மகிழ்ந்த. குழகன் - கண்ணபிரான்; குழகு - இளமை. உழுதும் கிழித்தும் சிவந்த தாளையுடைய குழகன். செய்தவர்க்குப் பூசைசெய்தனன்; செய்தவர் - முனிவர்.

4152. அழ பொலிந்து - தீயைப்போல் விளங்கி. வசுதேவன் தவர் தம்மை விழை. விழுத்தவர் - சிறந்த முனிவர். தாழ்ந்து - வணங்கி. வினையினல் - நல்வினையால். வினையை - இரு வினைகளையும். ஒழித்திடும்- நீக்குகின்ற. உரைமின் - கூறுமின்; ஓ, அசை: மூரல் முகிழ்த்தனர் - புன் சிரிப்புச் செய்தனர்.

4153. விரைகமழ் துளவி னானை மெய்ப்பொரு ளென்று நாடி
அருவினை யெறிதல் செய்யா தவனையோர் மகவென் றெண்ணி
இருவினை வினையி னன்மற் றெறிக்கிட நினைத்தல் கங்கைத்
திருநதி விடுத்தோ ராறு சென்றடைந் தாடல் போலும். (உச)

4154. வியனில மன்ன தக்க வினைப்பயன் விழையா தாற்றின்
மயலறு மற்ற போது மாண்டமெய் யுணர்வு தோன்றும்
உயர்வற வுயர்ந்த வுண்மை யுணர்வுவந் துற்ற காலை
இயலிரு வினையி னீட்ட மிரியுமென் றியம்பி னாரே. (உரு)

4155. (1) வாவியங் கமல மெல்லாம் வந்துபோர்க் குதவி னாலும்
காவிமுன் னிற்க லாற்றுக் கட்டழ குடைய வுண்கட்
டேவகி கொழுநன் றேவர் திரண்டவி முகந்து மாந்த
ஆவியின் முனிவர் தம்மோ டருமக மாற்றி னானால். (உசு-1)

4155. (2) பொங்கிள மாவின் செய்ய புதுத்தளிர் மேனி வெல்லக்
கொங்குடைந் தொழுகு சோலைக் குயிலெலா மொழியின் வென்ற
அங்கய னெடுங்க ணாரோ டணிமலர்த் தடங்க ளாடிக்
திங்கண்மூன் றிருந்தா னங்குத் திருமறு மார்பி னானே. (உசு-2)

---

4153. துளவினானை - கண்ணபிரானை. அருவினை - நீக்குதற்கரிய வினைகளை. எறிதல் செய்யாது - போக்காமல். அவனை - கண்ணபிரானை. மகவு - சிறுபிள்ளை. வினையினால் இருவினையை எறிந்திட நினைத்தல், கங்கை நதியை விடுத்து ஓர் ஆறுசென்று ஆடல்போலும்.

4154. மன்ன: விளி; என்றது வசுதேவனை. விழையாது - விரும்பாமல். மயல் - மயக்கம். மாண்ட - மாட்சிமைப்பட்ட. மெய்யுணர்வு - உண்மை யறிவு. உயர்வற உயர்ந்த உண்மை யுணர்வு. இருவினையினீட்டம் - இருவினைத் தொகுதி. இரியும் - கெடும்.

4155. (1) வாவி - தடாகம். கமலம் - தாமரை. போர்க்கு - காவியின் போர்க்கு. காவி - நீலோற்பலம். முன் - கண்களுக்கு முன். ஆற்று - முடியாத. காவியும் கமலமும் கண்களுக்குத் தோற்கும் என்றபடி. கண்ணை யுடைய தேவகி. கொழுநன் - வசுதேவன். அவி - ஹவிர்ப்பாகம். மாந்த - உண்ணும்படி. ஆவியின் முனிவர் - சமந்த பஞ்சகத் தடாகத்துள்ள முனிவர். மகம் - யாகம்.

4155. (2) மாவின் தளிரை மேனி வெல்ல. கொங்கு - தேன். குயிலெல்லாவற்றையும் மொழியால் வென்ற. அம்கயல் - அழகிய கயல்மீனைப் போன்ற. நெடுங்கணார் - மனைவியர்; கோவியர் எனலுமாம். ஆடி - மூழ்கி, விளையாடி. மூன்று திங்கள் - மூன்று மாதங்கள். மார்பினன் - கண்ணபிரான். இச்செய்யுள் ஓரேட்டுப்பிரதியிற் காணப்படுகிறது.

4156. கறையணற் பாம்பி னூடு கண்ணனைப் பராவி யொள்வேல்
விறல்கெழு விதுரன் சென்றான் வெவ்வரா வுயர்த்தோ னாதி
நொறில்வயப் புரவித் திண்டேர் நூற்றுவர் நடந்தார் மற்றை
அறன்மக னாதி யாய வைவரு மரிதிற் சென்றார். (உஎ)

4157. கறுத்தெதிர் நடந்த யானைக் கதிர்நிலாக் கழுமு வெண்கோ
டிறுத்தம ராடு மல்லர்க் கிடியென நடந்த வேந்தல்
நறைக்கொடித் தளவு சூடு நந்தகோ னொடுந டந்த
அறற்குழ லசோதைக் கன்பா லருஞ்சிறப் பாற்றி னானால். ()

4158. கண்ணிணை யிமைகாத் தென்னக் கண்ணனை காத்தல் செய்தீர்
எண்ணின்மற் றுமக்கி யாங்க ளிழைத்ததை யெவன்கொ லென்னாத்
தண்ணறுப் பில்கு மௌவற் றாரவன் வதன நோக்கி
எண்ணலார்க் கடந்த கூர்வா ளிகல்வசு தேவன் சொல்வான். (உக)

4159. கரைக்குமா மதத்த யானைக் கஞ்சனான் முன்ன ரின்னற்
பெருக்கின்வீழ்ந் துதவி செய்யப் பெற்றிலம் பின்னர்ச் செல்வச்
செருக்கினாற் செய்வ தொன்றுந் தெரிகல மம்ம வென்னா
உருக்கமைந் தொளிசெய் செம்பொ னுலப்பில வழங்கி னானால் (௩o)

4156. கறையணல் பாம்பின் - விஷத்தைக் கழுத்திலுடைய காளியன் என்னும் பாம்பின் மீது. பராவி - புகழ்ந்து. விறல் - வெற்றி. அராவுயர்த்தோன் - துரியோதனன். நொறில் - விரைவு. நூற்றுவர் - கௌரவர். அறன் மகன் - தருமபுத்திரன். ஐவர் - பாண்டவர்.

4157. கறுத்து - கோபித்து. கழுமு - பொருந்திய; மயங்கிய. கோடு - தந்தம். இறுத்து - முறித்து. மல்லர் - மல்வீரர். ஏந்தல் - கண்ணபிரான். நறைக்கொடியையும் தளவையும் சூடும் நந்தகோன்; தளவு - முல்லை.

4158. கண் இணையை இமை காத்தென்ன; காத்தென்ன - காத்தாற் போல. எண்ணின் - ஆராய்ந்தால். இழைத்ததை - இழைத்த உதவி. எவன்கொல் - என்ன. நறுப்பில்கு - தேன் சிந்திய. மௌவல் - முல்லையை யணிந்த. தாரவன் - நந்தகோபனுடைய. எண்ணலார்க்கடந்த - பகைவரை வென்ற.

4159. மதத்தைக் கரைக்கும் யானையையுடைய. கடம் கரைக்கும்: மதத்தைக் கரையவிடுகின்ற; கஞ்சனால் - கம்ஸனால். முன்னர் - முன்பு. இன்னற் பெருக்கு வீழ்ந்து - துன்பவெள்ளத்தில் கிடந்து; என்றது சிறைப்பட்டிருந்ததை. பின்னர் - பின்பு. தெரிகலம் - அறியவில்லை. அம்ம: விளி. என்னா - என்று வருந்திக் கூறி. உருக்குற்ற லமைந்த பொன்னை. உலப்பில - அளவில்லாதனவற்றை.

4160. உகுபசுங் குருதி யொள்வே லுக்கிர சேன னுங்கு
நகுதரு தளவப் பைந்தார் நந்தகோ னுவந்து கொள்ளப்
புகைமுகந் தன்ன தூசு புவிவிலை கொண்ட பொற்பூண்
அகலிரு விசும்பு விற்கு மாரமோ டுபகரித்தான். (௬௧)

4161. நேசமோ டளித்த நெய்யாப் பொற்றுகின் முதனி லாவு
தூசுநல் லணியும் பொன்னுஞ் சுடர்மணித் தொகையும் வாரிக்
காய்சின வரவின் றுத்திக் கணபண மகுடத் தாடு
மாசிலா மணியை நந்தன் மனத்திடைப் பொதிந்து நின்றான். (௬௨)

4162. காமரு வேனி னீங்கிக் கார்தலைப் படுத லோடு
மாமயில் குழீஇய போல மைநிலை பெற்ற வாட்கட்
டேமொழி மாத ரீண்டச் செழும்புய லெழுந்த தேபோல்
தாமரைக் கண்ணன் முந்நீர் தழுவுமா நகர்சென் றுற்றான். ()

4160. குருதி உகும் வேலையுடைய உக்கிரசேனன்; நகுதரு - ஒளியைத் தருகின்ற; நகைக்கின்ற எனலுமாம். தளவம் - முல்லை. கொள்ள - கொள்ளும்படி. தூசு - ஆடை. புவியையே விலையாகக் கொண்ட. பூண் - ஆபரணம். இருவிசும்பு - பெரிய ஆகாயம். விசும்பையே விற்கும் ஆரம்: முத்துமாலை. தூசையும் பூணையும் ஆரமோடு உபகரித்தான்: உபகரித்தான் - கொடுத்தான்.

4161. நேசம் - அன்பு. நெய்யாத பொன்துகில் முதல். தூசும் - உத்தரீயமும். தொகை - தொகுதி. வாரி - கைக்கொண்டு. அரவின் - காளியனது. கணபண மகுடத்து - கூட்டமாகிய படத்தின் உச்சியில். மாசிலாமணியை - கண்ணபிரானை. பொதிந்து - இருத்தி.

4162. காமரு - விருப்பம் மருவிய. கார் - கார்காலம். தலைப்படுதல் - தோன்றுதல். குழீஇய - கூடிய. மயில் குழீஇய போல மாதரீண்ட; ஈண்ட - நெருங்க. புயல் - மேகம். முந்நீரால் தழுவப்பட்ட நகர் - துவாரகை.



# 47. இறந்த குழவிகளைக் கொணர்ந்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4163. கைதொழ வடைந்த செங்கட் கண்ணனை யொருகா னோக்கி
மைதொழு நிறத்து வள்ளன் மறைக்கொழுந் தாகு மென்று
செய்தவக் கிழவ ரன்று செப்பிய வண்ண முன்னி
மெய்திக ழறிவு சாலும் விறல்வசு தேவன் சொல்வான். (க)

4164. விண்ணிடை யொலியுங் காற்றி னூறும்வெங் கனலி தன்பால்
ஒண்ணிற வொளியு நீரி னுழைநறுஞ் சுவையு மோங்கு
மண்ணிடை மணமு நீயே மற்றனை மகனென் றெண்ணு
தண்ணன்மெய்ப் பொருளென் றெண்ணு மறிவுதந் தருள வேண்டும்.

4165. அண்டமு மவற்று ணின்ற வாருயிர்த் தொகையு மற்றும்
எண்டகு மமார் யாரு மிறைவர்மூ வருமொ ருங்கு
பண்டரு மறையி னேடிப் பார்க்கினின் னுடைமை யாவர்
தொண்டரே மெமக்கு வாய்த்த தூயறி வுதவல் வேண்டும். (ங)

---

4163. கண்ணனை - கண்ணபிரானை. ஒருகால் - ஒருமுறை. மை - மேகம். வள்ளல் - கண்ணபிரான். மறைக்கொழுந்து - வேதத்தின் கொழுந்து போல்வான். தவக்கிழவர் - முனிவர். உன்னி - நினைத்து. மெய்திகழ் - உண்மை விளங்குகின்ற. சாலும் - மிக்க.

4164. ஒலி - சப்தம். ஊறு - ஸ்பரிசம். ஒளி - சோதி. நீரினுழை - நீரினிடத்து. சுவை - ரஸம். மணம் - கந்தம். மகன் - பிள்ளை. எண்ணுது - யாம் எண்ணுமல். அண்ணல் மெய்ப்பொருள் - தலைமை பொருந்திய உண்மைப் பொருள்.

4165. தொகை - தொகுதி. எண்தகு - எண்ணத்தக்க. இறைவர் மூவர் - திருமால், பிரமன், சிவபெருமான். மறையினால் நேடிப்பார்க்கின் இறைவர் மூவரும் உன் உடைமையாவர். தொண்டரேம் - அடியேமாகிய.

(பூ - ம்) 4. வாளாத் தூயறி வுதவல்.

4166. யாவுமாய் நின்ற நின்னை யிறைவனென் றறிந்தா லன்றி
வீவிலா வினைக ளெல்லாம் வீட்டுமா வேட்க லாமே
பூவைபோ னிறத்தா யென்று புகலுழிப் பூவை போலத்
தேவகி வந்து செவ்வாய் திறந்தனள் செப்ப லுற்றாள். (ச)

4167. துஞ்சிய புதல்வற் கொண்டு துணையறு குரவற் குய்த்தாய்
வெஞ்சின வுருமே றன்ன வெகுளியங் களிநல் யானைக்
கஞ்சன்முன் கோறல் செய்த கருங்கடற் பவளச் செவ்வாய்
மஞ்சரைத் தருக வென்று மனங்குழைந் துரைத்து நைந்தாள்.

4168. இளங்கிளி மழலை யன்னை யிசைத்தசொல் கேட்ட லோடும்
உளங்கசிந் தருக வின்னே யுய்த்துநீ காண்டி யென்னாக்
களங்கனி வண்ணன் மற்றைக் கலைமதி வண்ண னோடு
வளங்கெழு சுதல லோகம் வல்லையிற் சென்று சார்ந்தான். (சா)

4169. காவல னாகி மற்றுக் கண்ணக லுலகங் காக்கும்
மாவலி யெதிர்கொண் டேத்தி மலரடி யிரண்டி னானே
மூவகை யுலகங் கொண்ட முழுமுத லுற்ற வண்ணம்
யாவதோ வென்னப் பூவை வண்ணனுங் கினிதி யம்பும். (எ)

4170. ஆறறி மரீசி மைந்த ரறுவரு மலரோ னீன்ற
நாறிணர்க் கோதை கொங்கை நயந்தன ரென்று நக்கார்

---

4166. யாவுமாய் - எல்லாமாய். வீவிலா - அழிதலில்லாத. வீட்டுமா வேட்கலாமே - அழிக்குமாற்றை விரும்பவொண்ணுமோ. பூவை - காயாம் பூ. நிறத்தாய் என்றது கண்ணனை; விளி. பூவைபோல - நாகணவாய்ப் பறவையைப்போல. பூவைபோலச் செப்பலுற்றான்.

4167. துஞ்சிய புதல்வற்கொண்டு - இறந்த புதல்வனை மீட்டுக் கொண்டு. குரவற்கு - சாந்தீபமுனிவருக்கு. உருமேறு - இடி. கோறல் செய்த - கொல்லுதலைச் செய்த. மஞ்சரை - மக்களை.

4168. அன்னை - தேவகி. உளம் - உள்ளம். இன்னே-இப்பொழுதே. காண்டி - காண்பாயாக. களங்கனி வண்ணன் - கண்ணபிரான். கலைமதி வண்ணனோடு - பலராமனோடு. சுதலலோகத்தைச் சேர்ந்தான். வல்லையின் - விரைவாக.

4169. காவலனாகி - அரசனாகி. கண்ணகல் - இடமகன்ற. மாவலி - மஹாபலி சக்கரவர்த்தி. அடியிரண்டினால் மூவகை உலகத்தைக்கொண்ட முழுமுதல்: விளி. யாவதோ - யாதோ. பூவை வண்ணன் - கண்ணபிரான்.

4170. ஆறறி மரீசி - ஆறு அங்கங்களை உணர்ந்த மரீசி. மலரோன்- பிரமன். கோதை - சரசுவதியினுடைய. நயந்தனரென்று - விரும்பினா னென்று. நக்கார் - சிரித்தனர். மலரோன் தானீன்ற கோதையின் கொங்

வீறினல் விரிஞ்சன் சாவ விளேவின லவுண ராகி
ஈறிலா வுணர்வு குன்றி யிரணியற் குதித்தா ரன்றே. (அ)

4171. சிறந்தவெண் முறுவற் செவ்வாய்த் தேவகி யகட்டின் மீட்டும்
பிறந்தனர் பிறந்த ஞாங்கர்ப் பெரும்படைக் கஞ்சன் வீட்ட
இறந்தனர் வந்து நின்பா லிருந்தனர் தருக வென்றுங்
குறைந்தவர் தமைக்கொண் டெய்தி யுய்த்தன னன்னேக் கன்றே. (க)

4172. தீட்டருஞ் செவ்வி வாய்ந்த செதுமகப் பலவுங் கண்டு
வாட்டடங் கண்ணீர் வார வாரின ளணேத்து மோந்து
மோட்டிளங் குரும்பை வென்ற முலேசுரந் தொழுகு தீம்பால்
ஊட்டினன் முறுவன் மாந்தி யுவந்தனள் பெரிது முள்ளம்.(கo)

4.73. உடைதிரை வேலே ஞால முண்டவ னுண்ட பைம்பொன்
தடமுலே யுண்ணப் பெற்ற தவத்தின்வெஞ் சாப நீங்கி
கடவுள ராகி மன்றற் கற்பகத் தருவி னீழல்
அடைதலுற் றனரான் மற்றவ் வறுவரு முவகை கூர்ந்தே. ()

---

கையை நயந்தானென்று மரீசிமைந்தர் அறுவரும் நக்கார். விரிஞ்சன் சாவ விளேவினல் - பிரமன் மொழிந்த சாபப்பயனல். அவுணர் - அசுரர். ஈறிலா- முடிவில்லாத.

4171. முறுவல் - பற்கள். அகட்டில் - வயிற்றில். மரீசிமைந்த ரறுவரும் பிறந்தனர். பிறந்த ஞாங்கர் - பிறந்த அவ்விடத்தே. வீட்ட - கொல்ல. நின்பால் - உன்னிடத்து ; என்றது மாவலியை நோக்கி. என்று- என்று கூறி. ஆங்கு உறைந்தவர் தம்மைக்கொண்டு - அவ்விடத்தே தங்கிய அறுவரைக் கைக்கொண்டு. அன்னேக்கு உய்த்தனன் ; அன்னே - தேவகி.

(பி - ம்) 2. பிறந்து ஞாங்கர்.

4172. தீட்டருஞ்செவ்வி - சித்திரத்தில் எழுதுதற்கரிய அழகு. செது மக - இறந்த பிள்ளேகளே ; "செதுமகப் பலவும் பெற்று" (சீவக. 1124.) வார - ஒழுக. மோடு - பெருமை. தீம்பாலே ஊட்டினன். முறுவல் - மக்களின் புன்சிரிப்பை.

(பி - ம்) 4. ஊட்டினமுறுவல்.

4173. ஞாலமுண்டவன் - கண்ணபிரான். உண்ட முலேயை உண் ணப்பெற்ற தவத்தினல். கடவுளராகி - தேவராகி. அடைதலுற்றனர் - அடைந்தனர்.

# 48. சுபத்திரை மணமுரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4174. என்னலு மணிக்கழை யிசைத்தமுகி றங்கை
மின்னிகர் சுபத்திரையை வென்றிகெழு பார்த்தன்
நன்மண மிழைத்தது நவின்றருள்க வென்னு
மன்னவ னுரைப்பமறை மாதவன் வகுப்பான். (க)

4175. ஆயிர மணிச்சுடிகை யண்ணலர வேந்து
மாயிரு நிலத்தினில் வளங்கொள்புன லெல்லாம்
தோய்தர வெழுந்துதழ றும்முபடை யொன்னர்
சாயவில் வணக்கிய தனஞ்சய னடந்தான். (உ)

4176. கன்னியுயர் பொன்னியொடு கங்கைமுத லாகப்
பன்னிய நதித்துறை படிந்துகடல் வண்ணன்
மன்னிய செழுந்துவரை மாநகர் மருங்கோர்
பொன்னெழுகு சாரல்வரை போயினிது புக்கான். (ங)

---

4174. என்னலும் - என்று சுகமுனிவன் கூறியவுடன். கழை-வேய்ங் குழலை. முகில்தங்கை - கண்ணபிரான் தங்கை. தங்கையாகிய சுபத்தி ரையை. பார்த்தன் - அருச்சுனன். நவின்றருள்க - கூறி யருள்க. மன்ன வன் - பரீக்ஷித்து.

4175. சுடிகை - உச்சி. அண்ணலரவு - தலைமை பொருந்திய ஆதி சேடன். புனலெல்லாம் - தீர்த்தங்களிலெல்லாம். தோய்தர - மூழ்க. தழல் தும்மு படை ஒன்னர் - தீயைச்சிந்துகின்ற படையையுடைய பகைவர். சாய - கெட. வணக்கிய - வளைத்த. தனஞ்சயன் - அருச்சுனன். தோய்தர நடந்தான்.

4176. கன்னி - குமரியாறு. பொன்னி - காவிரி. பன்னிய - புண் ணிய நதியாகக் கூறப்பட்ட. கடல்வண்ணன் மன்னிய - கண்ணபிரான் பொருந்திய. மருங்கு - பக்கத்தில். வரைபோய் - மலையிடத்துச் சென்று ; வரை - ரைவதமலை.

4177. அத்தலை யமர்ந்துறை யருந்தவர்க ளெல்லாம்
முத்தெறி தடந்திரை முழங்குதுறை யாடா
மத்தமத யானையென வந்தடையும் வல்வில்
வித்தகனை நண்ணினர் விளைந்தது கிளப்பார். (ச)

4178 தோடணி செவிப்புனை சுபத்திரையை முன்னோன்
ஆடா வுயர்த்திடு மவற்குதவ நாடும்
நீடுபுகழ் வில்வல நினக்குதவ வெண்ணும்
கோடுயர் தருப்புவி கொணர்ந்த புயலென்றார். (ரு)

4179. அவ்வுரை செவிப்படலு மம்மென்முகை விள்ளும்
மவ்வல்கமழ் வார்சழுன் மழைக்கண்மட மானை
எவ்வகை மணப்பதென வெண்ணின னிருந்தான்
வெவ்வமர் கடந்தவரி வில்விசயன் மாதோ. (சா)

4180. வண்ணவளை மாதினை மணக்குநெறி யென்னென்
றெண்ணின னிருந்தவ னிரும்பெரிய முக்கோற்
பண்ணவ ருருக்கொடு படர்ந்தனன் மலர்த்தார்க்
கண்ணனுறை கின்றதொரு கன்னிகக ரத்தே. (எ)

4181. அறிந்தன னிருந்தமிக லாளரிய ஞானத்
துறந்தவ னடைந்தன னெனத்துளி மதுச்சோர்

---

4177. அத்தலை - அவ்விடத்து. திரை - அலை. துறை ஆடா - நதித் துறைகளில் புனலாடி. துறையில் ஆடி வந்தடையும் வித்தகனை: அருச்சுனனை. விளைந்தது - நிகழ்ந்ததை.

4178. தோடணியைச் செவியிற்புனைந்த சுபத்திரையை. முன்னோன்- பலராமன் அரவுயர்த்திடுமேவற்கு - துரியோதனனுக்கு. உதவநாடும் - மணம் புரிவிக்க எண்ணுவான். வில்வல - வில்லில் வல்ல. எண்ணும் - எண்ணு வான். கோடு - கிளை. தரு - கற்பகம். புயல் - கண்ணபிரான். புயல் நினக்கு உதவ எண்ணும்.

4179. அம்மென் முகை விள்ளும் - அழகிய மெல்லிய அரும்பு அலர் கின்ற. மவ்வல் - முல்லை. மடமானை - சுபத்திரையை. எண்ணினன் - ஆராய்ந்து; முற்றெச்சம். வெவ்வமர் - வெவ்விய போரை. விசயன் - அருச்சுனன்: எழுவாய்.

4180. வளையையுடைய மாதினை - சுபத்திரையை. நெறி - வழி. என்னென்று - எவ்வாறென்று. எண்ணியிருந்தவன்: அருச்சுனன். முக் கோல் பண்ணவர் உருக்கொடு - திரிதண்டம் தாங்கிய துறவியின் உருவத் தைக்கொண்டு. கன்னிநகர் - துவரை. நகரத்தே படர்ந்தனன்.

4181. அறிந்தனனிருந்தம் - கண்ணன், அருச்சுனனுடைய தவ வேடத்தை அறிந்தவனாயிருந்தும். ஆளரியனானை - அருச்சுனனை. துறந்

நறுந்துளவ மாலைபுனை நம்பிகிளை யோடும்
செறிந்தடி பணிந்துயர் சிறப்பின்வழி பட்டான். (அ)

4182. பிள்ளையளி யுண்ணநறை பில்கிய மலர்த்தார்
வள்ளலது கைதவ மனைத்தும்வறி தேனும்
உள்ளல னிலாச்சொரியு மோர்குழை யணிந்த
வெள்ளைவளை வண்ணனும் விரும்பிவழி பட்டான். (கூ)

4183. அண்ணல்வசு தேவன்மெய் யறந்தலை மணந்தோய்
நண்ணுமதி யித்தலையி னான்குமதி யென்னு
உண்ணெகிழ்பு பூசனை யுவப்பினுட னாற்ற
விண்ணரசு தந்தவன் விருப்புட னுறைந்தான். (க0)

4184. மின்னென விளங்குமணி மேகலை மிழற்ற
அன்னமென நூபுர மலம்பவிளை யாடும்
நன்னுதல் சுபத்திரையை நச்சிலைய வேற்கட்
கன்னியை மறைந்தொழுகு காளையெதிர் கண்டான். (கக)

4185. அண்டமுழு தாளிதரு மாடல்வரி விற்கைக்
கொண்டலனை யானவரை குலுங்கவளர் தோளும்
மண்டல நிறைந்தமதி வாண்முகமு நோக்கா
வெண்டாள வாணகையும் வேல்விழி களித்தாள். (கஉ)

---

தவன் - ஒரு முனிவன். என - என்று கூறி. நம்பி - கண்ணபிரான். கிளை - சுற்றம்.

4182. பிள்ளைஅளி - இளைய வண்டுகள். நறை - தேன். தாரை யணிந்த வள்ளலது கைதவமனைத்தையும்; வள்ளல் - கண்ணபிரான். கைதவம் - வஞ்சனை. வறிதேனும் - சிறிதாயினும். உள்ளலன் - நினைக்காதவனாய். வளைவண்ணன் - பலராமன். வளைவண்ணன், வள்ளலது கைதவத்தை, உள்ளலனாய் விரும்பி வழிபட்டான்.

4183. அண்ணல் - பெருமை பொருந்திய. மெய்யறம் தலைமணந்தோய் - உண்மைத் தருமத்தில் கலந்தவனே: அருச்சுனனே; விளி. இத்தலையில் நான்குமதி நண்ணுமதி என்னு; இத்தலை - இவ்விடம். மதி - மாதம். நண்ணுமதி - இருப்பாயாக; மதி: முன்னிலை யசைச்சொல். என்னு - என்று கூறி. வசுதேவன என்னு, ஆற்ற. விண்ணரசு தந்தவன் - அருச்சுனன். உறைந்தான் - வசித்தான்.

4184. மிழற்ற - ஒலிக்க. நூபுரம் அலம்ப - சிலம்பு ஒலிக்க. நச்சு - விடம். கன்னியை - சுபத்திரையை. காளை - அருச்சுனன்.

(பி - ம்) 3. நன்னய.

4185. அண்டமுழுது ஆளி - விண்ணுலகமுழுதும் ஆள்கின்ற இந்திரன். தரு - பெற்ற. ஆடல் - வெற்றியை யுடைய. கொண்டலனையான் - அருச்சுனனுடைய. நோக்கா - நோக்கி. வாணகை - சுபத்திரை.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4186. கிளைத்தசெக் தளிர்ப்பூஞ் சோலை கிளரெரி யெழுந்து பொங்கி
வளைத்துண நெடிய சாபம் வளைத்தவன் றன்னைக் கண்ட
களிக்கய லன்ன வுண்கட் கன்னிதன் செய்ய மேனி
தளிர்க்கவின் வாட வந்து தளிர்த்தது காம வெந்தீ. (கங)

4187. பொருதடஞ் சிலைக்குப் பார்த்தன் பொருவிலா னெனினுஞ் செய்ய
திருமலர் நெடுங்கட் பேதை திருமுகத் தெழுதி வைத்த
இருபெருஞ் சிலைக்கு மார னிருகடை குழைய வாங்கும்
ஒருபெருஞ் சிலைக்குஞ் சால வுரனழிந் துருகு மம்மா. (கச)

4188. அங்கலுழ் மேனி மற்றோ ரணங்கினை மணஞ்செய் கிற்பான்
வெங்கயல் பொருது வென்ற வில்வலான் மெல்லென் சாயற்
கொங்கவிழ் கோதை மாதர் குழைபொரு தலைக்கு முண்கட்
செங்கயல் பொருகற் காற்றான் றெருமா லெய்திச் சாம்பும். ()

4189. பிறையிளங் குழவி போலப் பிறங்குமுத் தாரம் பூணுன்
துறவினர் படிவங் கொண்டு தோன்றிய வரிவிற் றோன்றல்

4186. கிளைத்த - தோன்றிய. சோலை - காண்டவ வனத்தை. எரி-தீ. உண - உண்ணும்படி. சாபம் - வில்லை. வளைத்தவன் - அருச்சுனன். கன்னி - சுபத்திரை. தளிர்க்கவின் வாட - மாந்தளிர் போன்ற அழகு கெட. காமவெந்தீத் தளிர்த்தது.

(பி - ம்) 2. வளைத்தவன் மாணுருக்காண்.

4187. சிலைக்கு - விற்றொழிலுக்கு. பார்த்தன் - அருச்சுனன். பொருவிலானெனினும் - ஒப்பில்லாதவனாயினும். பேதை - சுபத்திரையின். எழுதி வைத்த இருபெருஞ் சிலைக்கும் - எழுதிவைத்தது போன்ற இரண்டு புருவங்களுக்கும். மாரன் - மன்மதன். சிலைக்கும் - கரும்பு வில்லுக்கும். சால - மிக. உரன் அழிந்து உருகும் - வலிதோற்று உருகுவான்.

4188. அம் கலுழ் மேனி - அழகு ஒழுகுகின்ற மேனியையுடைய. அணங்கினை - திரௌபதியை. செய்கிற்பான் - செய்துகொள்ளும் பொருட்டு. கயல் பொருது - மீன்பொறியை வீழ்த்தி. வில்வலான் - அருச்சுனன். கோதையையணிந்த மாதராது; மாதர் - சுபத்திரை. கண்ணாகிய கயல்பொருதற்கு ஆற்றானாய். தெருமரல் - மனம் சுழலுதல். சாம்பும் - மனம் வருந்துவான்.

4189. பிறையிளங் குழவி - இளம்பிறைச்சந்திரன். பிறங்கு - விளங்குகின்ற. முத்தாரத்தைப் பூணுதவனாய்த் துறவினர் படிவம்கொண்டு தோன்றிய தோன்றல்; அருச்சுனன். படிவம் - வடிவம். மறுவறு - குற்றமற்ற.

மறுவறு மதிய மன்ன மதிமருள் வனப்பு வாய்ந்த
நறுநுதன் முறுவன் முத்த நகையெழ நலிவான் மாதோ. (கசு)

4190. நறவுவா யுறைக்கு மந்த ணளினமு மதியுங் கூடி
உறவுகொண் டெதிர்ந்த போது மோசனை யுடையுஞ் செவ்வி
முறுவல்வாண் முகத்தி னாளை முகந்தனன் கொண்டு போகப்
பெறுவதோர் கால நோக்கிப் பெட்பொடு வைகி னானால். (கஎ)

4191. போந்தைமீ துயர்த்த வென்றிப் புரவல னாதி யாய
வேந்தெலாந் திரண்டோர் தெய்வ விழாவணி காண்டற் கேகக்
கூந்தலம் பரித்தேர்க் கண்ணன் குறிப்பறிந் திருந்த பார்த்தன்
மாந்தளிர் மேனி யாளை வௌவினன் போனான் மன்னோ. (கஅ)

4192. நில்லெனப் புகன்று பொங்கி நெருப்பெழ விழித்துச் சூழ்ந்த
தொல்லெயிற் கடைகாப் பாளர் தொலையவெஞ் சிலைகால் கோட்டிப்
பல்லுளைப் புரவித் திண்டேர் பாகின்மென் மழலை தூண்ட
மல்லலைத் தெழுந்த தோளான் மணிநகர் வல்லைச் சென்றான்.

கலிநிலைத்துறை.

4193. மழையொன்று மின்னுக் கொடியன்னவம் மாதை வஞ்சித்
துழையொன்று பார்த்த னுடன்கொண்டு நடந்த வண்ணம்

---

மதிமருள் வனப்பு - சந்திரனை ஒத்த வெண்ணிறத்தை யுடைய அழகு. நறுநுதல் - சுபத்திரை. நறுநுதலினுடைய மதியமன்ன முறுவலாகிய முத்த நகை. எழ - எழுதலால். நலிவான் - வருந்துவான்.

4190. நறவு - தேன். உறைக்கும் - துளிக்கின்ற. நளினமும் மதியும் - தாமரையும் சந்திரனும். எதிர்ந்தபோதும் - நேரில் கண்டபொழுதும். ஓசனை உடையும் செவ்வி - ஓசனைத் தூரத்தில் கெட்டுப்போகின்ற அழகை யுடைய. முகத்தினாளை - சுபத்திரையை. முகந்தனன் கொண்டுபோக - கவர்ந்து செல்ல. பெட்பொடு - விருப்புடன்.

4191. போந்தை - பனையை. புரவலன் - பலராமன். வேந்து - அரசர். விழாவணி காண்டற்கு - திருவிழாச் சிறப்பைக் காணுதற்கு. கண்ணனுடைய குறிப்பறிந்து இருந்த பார்த்தன், மேனியாளை வௌவினனாய்த் தேரில் போயினான். பார்த்தன் - அருச்சுனன். மேனியாள் - சுபத்திரை.

4192. பொங்கி - கோபம்மிக்கு. எயிற்கடை காப்பாளர் - மதிலின் வாயிலைக் காப்பவர். தொலைய - கெடும்படி. சிலைகால் கோட்டி - வில்லின் நுனியை வளைத்து. பாகின் மென்மழலை - சுபத்திரை; பாகு - வெல்லப் பாகு. மல் அலைத்து - மல்லரைத் தொலைத்து. தோளான் - அருச்சுனன். மழலைதேரைத் தூண்டத் தோளான் நகர்க்குச் சென்றான்.

4193. மழை ஒன்று - மேகத்திடத்துப் பொருந்திய. அம்மாதை - சுபத்திரையை. உழை ஒன்று பார்த்தன் - பக்கத்தே பதுங்கியிருந்த அருச்சு

குழையொன் றணிந்த குருதிப்படை வள்ளல் கேளா
அழலொன்று வெங்க ணரவென்ன வழற்சி மிக்கான். (உ0)

4194. விடப்பாழி வாய்வெவ் வரவக்கொடி வேந்த னுக்கே
கொடுப்பா னிருந்த குவளைத்தடங் கண்ணி னாளை
எடுப்பான்கொல் வஞ்சித் திகற்பார்த்தனென் றேங்கு நீலக்
கடற்பார் கலங்கச் செழுந்தாமரைக் கண்சி வந்தான். (உக)

4195. சீறற்க யாவுந் தெரிந்தோய்நறுந் தேங்கொ டாரான்
ஊறுற்ற கன்னி பிறர்க்கெங்குரி யாள்கொ லென்னு
மாறற்ற தெய்வ மணிவண்ணனவ் வள்ளல் சீற்றம்
ஆறற் கமைந்த வுரைகூறின னுற்றி னுனல். (உஉ)

4196. நிழலுற்ற வொற்றைக் குழையானொடு நீலமேகத்
தெழிலுற்ற மாயன் கொடைப்பாலன யாவு முப்பக்
குழையுற்ற பொன்னங் கொழுந்தன்னவக் கொம்ப னாளை
விழைவுற்ற பார்த்தன் விதியான்மண மாற்றி னானல். (உங)

---

னன். வள்ளல் கேளா - பலராமன்கேட்டு. அழல் ஒன்று - விடம பொருந்திய. அரவென்ன - பாம்பைப்போல. அழற்சி - கோபம்.

4194. பாழி - வன்மை, பெருமை. அரவக்கொடி வேந்தனுக்கே - துரியோதனனுக்கே. கொடுப்பான் - மணம்செய்து கொடுத்தற்கு. கண்ணினாளை - சுபத்திரையை. பார்த்தன் வஞ்சித்து எடுப்பான் கொல் என்று; பார்த்தன் - அருச்சுனன். கண்சிவந்தான்: கோபம்கொண்டானென்றபடி.

4195. யாவும் தெரிந்தோய், சீறற்க; தெரிந்தோய்: பலராமன்; விளி. சீறற்க - கோபியாதே. தாரான் ஊறு உற்ற கன்னி - அருச்சுனனுல் தீண்டப்பெற்ற சுபத்திரை. எங்கு=எங்ஙன் - எவ்வாறு. என்னு - என்று. மணிவண்ணன் - கண்ணபிரான். வள்ளல் சீற்றம் - பலராமனுடைய கோபம். ஆறற்கு அமைந்த உரை - ஆறுதற்குப் பொருந்திய வார்த்தையை.

(பி - ம்) 2. உறற்கெங் குரியாள். 3. வண்ணன் முன்மல்கு சீற்றம்.

4196. நிழல் - ஒளி. ஒற்றைக்குழையான் - பலராமன். மாயன் - கண்ணபிரான். கொடைப்பாலன யாவும் உய்ப்ப - வரிசையாகக் கொடுக்கற்பாலனவற்றை யெல்லாம் அருச்சுனனுக்குக் கொடுக்க. கொம்பனாளை - சுபத்திரையை. பார்த்தன் - அருச்சுனன். மணம் - கலியாணத்தை. ஆற்றினான் - செய்தான்.

# 49. மிதிலைக்குச் சென்ற அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4197. மதிதவழ் குடுமி மாட மறுகுசூழ் மிதிலை மூதூர்
எதிரிலாச் சுருதி தேவ னென்னுநான் மறைவல் லோனும்
ததைமல ரலங்கல் வெள்வேற் சனகனுங் கமலச் செங்கட்
கதிர்மணி வண்ணற் கன்பு கனிந்தனர் வைகி னாரே. (க)

4198. கசிந்துநெஞ் சுருகு வாரைக் கண்டருள் புரிய வேண்டி
அசும்புபொன் னுடை யம்மா னாக்கிதழ் முளரி பூத்த
பசும்புயற் கொழுந்து போலப் பழமறை முனிவ ரோடும்
விசும்புவீழ் திருவிற் றூய மிதிலைசென் றெய்தி னானே. (உ)

4199. பொருகடல் புலம்ப முல்லைப் புலத்தினில் வளர்ந்த நீலக்
கருமுகின் முருகு விம்மு கமலமொத் தலர்ந்த செங்கண்
அருண்மழை பொழிந்து தோன்ற வகங்கனிந் தருகு மன்பர்
இருவரு முவகை மீதூர்ந் தெழுந்தன ரெதிர்கொண் டாரால். ()

4200. என்மனை யடைதல் வேண்டு மென்மனை யடைதல் வேண்டும்
தொன்மறை முதல்வ முற்றத் துறந்தவர் துணைவ வென்னுப்
பொன்மதின் மிதிலை வேந்தும் புரையறு மறைவ லானும்
பன்மலர் தூவிப் பல்காற் பணிந்தனர் பாயி னாரே. (ச)

4201. முத்தொழி னடாத்தற் காக மூவுருக் கொண்டு நிற்கும்
பைத்தவா ளரவப் பள்ளிப் பாற்கடற் பாம னங்கே

---

4197. மறுகு - தெரு. மிதிலையாகிய மூதூரில். எதிரிலா - ஒப்பில்லாத. ததை - நெருங்கிய. மணிவண்ணற்கு - கண்ணபிரானிடத்தில். அன்புகனிந்தனர் - அன்புமுற்றியவராய்.

4198. உருகுவாரை - சுருதிதேவனையும் சனகனையும். அசும்பு - ஊற்றெழுகின்ற. அம்மான் - கண்ணபிரான். புயற் கொழுந்து - மேகக் கொழுந்து. வீழ் திருவிற்றூய - விரும்பும் செல்வத்தை யுடையதாகிய.

4199. புலம்ப - ஒலிக்க. நீலக் கருமுகில் - கண்ணபிரான். முருகு-வாசனை. கண்ணினால் அருள்மழையைப் பொழிந்து. அன்பர் இருவரும் - சுருதிதேவனும் சனகனும். மீதூர்ந்து - மிக்கு.

4200. மறைமுதல்வ, துணைவ: கண்ணபிரானை விளித்தவை. என்னு-என்று கூறி. மிதிலை வேந்தும் - சனகனும். மறைவலாளனும் - சுருதி தேவனும். பல்கால் - பலமுறை.

4201. நடாத்தற்காக - நடத்துதற்கு. மூவுரு - பிரமன், திருமால், சிவன் என்ற மூன்று வடிவம். பைத்த - படத்தை விரித்த. பரமன் - கண்ண

எத்தகை யவர்க்குந் தோன்ற திலங்குமீ ருருக்கொண் டாங்கண்
அத்தகை யிருவ ரில்லு மடைந்தன னருளின் மன்னே. (ரு)

4202. பரவியும் பணிந்து மின்னம் பழமறை காண்டற் கெட்டா
ஒருதனி முதல்வ னம்பா லுறுவதற் கம்ம யாமுன்
புரிதவ மென்கொ லென்னப் பொருவிலாச் செல்வ ராய
இருவரு முற்ற வோகை யாவரே யியம்பற் பாலார். (சு)

4203. உள்ளமு முரையுஞ் செல்லா தோங்கிய பரமா நந்த
வெள்ளமாய் நின்ற தோன்றல் விரிதிரைக் கங்கை வெள்ளம்
துள்ளிய கமலப் பொற்றாள் சுழித்துமட் டொழுகு மந்தண்
வள்ளிதழ்ப் போது தூவி வாழ்த்தினர் வணங்க லுற்றார். (எ)

4204. இருபிறப் பாள னேற்ற விலைமலர் கனிநீர் கொண்டு
புரிதலுற் றனனற் பூசை பூம்புகை யெடுத்துத் தெய்வ
விரைகமழ் மலருஞ் சாந்தும் விழுச்சுவை யமுதங் கொண்டு
வரையெனத் திரண்ட திண்டோண் மன்னவன் வழிபட் டானால். ()

4205. வழிபடு மறைவல் லோனும் வாங்குவிற் றடக்கை வேந்தும்
அழிவில்பே ரின்ப மெய்த வருள்புரிந் தாழி வேலிச்
செழுநக ரடைந்தான் றெய்வத் திருமறை வழுத்த நின்ற
முழுமணி வண்ண னென்ன முனிவரன் மொழிந்தான் மாதோ. (கு)

---

பிரான். இலங்கும் ஈருருக்கொண்டு - விளங்குகின்ற இரண்டு உருவங்கள் கொண்டு. இருவரில்லும் - சனகனுடைய மாளிகைக்கும் சுருதிதேவனுடைய மாளிகைக்கும்.

4202. பரவி - புகழ்ந்து. ஒரு தனிமுதல்வன் - கண்ணபிரான். நம்பால் - நம்மிடத்து. புரிதவம் - செய்ததவம். என்ன - என்று கூறி. இருவரும் - சனகனும் சுருதிதேவனும். ஓகை - உவகையை.

4203. உள்ளமும் உரையும் செல்லாது - மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாது. பரமானந்த வெள்ளமாய் - பேரின்பப் பெருக்காய். தோன்றல்- கண்ணபிரான். பொற்றாளைப் போது தூவி வாழ்த்தினன்.

4204. இலையும் மலரும் கனியும் நீரும்கொண்டு இரு பிறப்பாளன் பூசை புரிதலுற்றனன்; இலைமலர்கனி நீர்: பத்திரம், புஷ்பம், பலம், தோயம் என வடநூலார் கூறுவர். இரு பிறப்பாளன் - சுருதி தேவன். மன்னவன், பூம்புகையும் மலரும் சாந்தும் அமுதும் கொண்டு வழிபட்டான் ; மன்னவன் - சனகன்.

4205. மறைவல்லோன் - சுருதிதேவன். வேந்து - சனகன். பேரின்பம் - முத்தி. ஆழியை வேலியாக வுடைய நகர்: துவாரகை. முழுமணி வண்ணன் - கண்ணபிரான். வண்ணன் அடைந்தான் என்ன ; என்ன - என்று. முனிவரன் - சுகமுனிவன்.

# 50. சுருதிகீதையுரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4206. உரைக டந்த வொருதனிச் செல்வனை
தெரிய நான்மறை செப்புவ தெங்ஙனம்
விரிய மற்றிது விள் ளுதல் வேண்டுமென்
றாசு கேட்ப வருந்தவன் கூறுவான். (க)

4207. கண்ண கன்ற கடற்புவி காத்தருள்
அண் ணல் யானே யரசமற் றன்னது
நண்ணி முன்னா நாரணர் தங்கடேத்
தெண் ணு மீர்ந்தமிழ் யாழ்முனி கேட்டதால். (உ)

4208. சனக ஞதி தபோ தனர்க் கீறிலா
வினையெ றிந்து விளங்கு சனந்தன
முனியெ டுத்து மொழிந்திடப் பட்டதால்
இனிது கூறுது மிங்கென் றியம்பினன். (ந)

4209. உயர்ந லத்திற் றருமுல கேழுமுண்
டயிலெ யிற்ற வரவணை மீமிசைப்
புயலெ னத்துயில் பூமகள் கொண்கனைத்
துயிலெ ழுப்பின தொன்மறை வாழ்த்தின. (ச)

---

4206. உரைகடந்த - சொல்லினளவைக் கடந்த. செல்வனை - கண்ண பிரானை. தெரிய - அறிய. எங்ஙனம் - எவ்வாறு. விள்ளுதல் - கூறுதல். அரசு - பரிக்ஷித்து. அருந்தவன் - சுகமுனிவன்.

4207. கண்ணகன்ற - இடமகன்ற. அண்ணல் - பெருமை பொருந் திய. அரச : பரிக்ஷித்து ; விளி. அன்னது - வேதம் கூறுவது. அன்னது, யாழ்முனி, நாராணர் தங்கள் தேத்து முன் நண்ணிக் கேட்டது; யாழ்முனி- நாரதர். தேத்து - இடம். நண்ணி - அடைந்து.

4208. ஈறிலா - முடிவில்லாத. வினை - இருவினையை. சனகஞதி தபோதனற்குச் சனந்தனமுனி எடுத்து மொழிந்திடப்பட்டது. இங்கு இனிது கூறுதும். சனந்தனர் சனகஞதி முனிவர்க்குச் சுருதிகீதையை உரைத்தார்.

4209. தரும் உலகேழும் - தந்த உலகமேழையும். அயில் - கூர்மை. புயல் - மேகம். பூமகள் கொண்கனை - திருமாலே, தொன்மறை, துயி லெழுப்பி வாழ்த்தின.

4210. வியக்குஞ் செல்வ விரைமலர் மெல்லியல்
நயக்கு மார்ப நளின மலர்ந்துபார்
பயக்கு முந்திப் பரமவிம் மன்னுயிர்
மயக்கு மாயையின் மாற்றிட வேண்டுமால். (ரு)

4211. முடியு மாரமு மொய்கதிர்ப் பட்டமும்
தொடியுஞ் செஞ்சுடர் தூற்றுபொன் னுதல்போல்
படியு நீருங் கனலும் பவனமும்
நெடிய வானமு நின்னல தில்லையால். (சா)

4212. திருந்து நின்கதைத் தெள்ளமு தத்தினைப்
பரிந்து நாளும் பருகுவ தல்லது
வருந்தி யைம்பொறி வாடுற வீழ்சரு
கருந்து வார்கொ லறிஞர்க ளாழியாய். (எ)

4213. பகைத்து நாடுநர் பற்றுமா றற்றுனை
அகத்து நாடுந ராய விருவரும்
நிகர்த்துன் சேவடி நீழல்வந் துற்றனர்
மிகுத்த நின்னிலை விள்ளவல் லேங்கொலோ. (அ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4214. மடலவிழ் கமலம் பூத்த மழைமுகி லனையாய் மற்றுன்
தடமல ரனைய செம்பொற் றுணிழ லடைந்தா ரன்றே

---

4210. வியக்கும் - எல்லாராலும் வியக்கப்படுகின்ற. விரை - வாசனை. மெல்லியல் - இலக்குமி. நயக்கும் - விரும்புகின்ற. நளினம் - தாமரை. பார் - பூமியை. பயக்கும் - உண்டாக்குகின்ற. உந்தியையுடைய பரம. மாயையினின்றும் மாற்றிடவேண்டும்.

4211. முடி - கிரீடம். ஆரம் - மாலை. தொடி - தோள்வளை. படி- பூமி. பவனம் - காற்று. படி முதலியன ஐந்து பூதங்கள்.

4212. நின்கதையாகிய தெளிந்த அமுதத்தினை பரிந்து - வருந்தி. வாடுற - கெட. அறிஞர்கள் வீழ்கின்ற சருகை அருந்துவார்கொல்?

4213. உன்னைப்பகைத்து நாடுநரும் பற்றுமாறற்று அகத்தில் உன்னை நாடுநரும் ஆகிய இருவரும் நிகர்த்து உன் சேவடியின் நீழலில் உற்றனர்; பகைத்து நாடுநர்: இரணியன், இராவணன் முதலியோர். பற்று - பற்றக் கூடிய பொருள். மாறற்று - வேறு ஒன்று இல்லாமல். அகத்து நாடுநர்: துருவன், பிரகலாதன், விபீஷணன் முதலியோர். நிகர்த்து - ஒத்து. மிகுத்த- மிகுந்த. விள்ள - கூற.

4214. மடல் - இதழ். முகிலனையாய்: கண்ணபிரான்; விளி. தடமலர் - தடாகத்துத் தாமரைப் பூ; அகன்றபூ எனலுமாம். வெருவரு -

விடமுமிழ் கனற்கட் பேழ்வாய் வெருவரு முருவக் கூற்றின்
அடுதிறல் வெகுளி வேகத் தாழலன் மூழ்க லாரே. (கூ)

4215. விட்டலர் பசும்பொற் றோட்டு வேரியங் கமலத் தோனும்
எட்டிநின் னிலைமை யின்னு மிற்றெனத் தெரித றேற்றான்
வட்டவாய்த் திகிரிச் செங்கை வள்ளலவ் விரிஞ்ச னீனப்
பட்டவர் தெரிகிற் பார்கொல் பார்க்கினின் னிலைமை யம்மா. ()

4216. புனிதமற் றுன்னை யல்லாப் பொருள்பரப் பிரம மன்றால்
எனவெடுத் துரைப்ப தல்லா லீறொடு தோற்ற மின்றித்
தனிமுத லாகி நின்ற சச்சிதா னந்த மூர்த்தி
நினைவருஞ் சுடரே நின்னை நிகழ்த்துமா றறிகி லேமால். (கக)

4217. என்றன மறைக ளம்ம விம்முறை மறைக ளெல்லாம்
நன்றறி வியாத னல்யாழ் நாரத னவிலக் கேட்டு
மன்றமற் றெனக்குச் சொற்றான் மானவே லரச வென்னாத்
தன்றுணை யின்றி நின்ற தபோதனன் சாற்றி னானே. (கஉ)

---

அஞ்சத்தக்க. கனற் கண்ணையும் பேழ்வாயையும் உருவத்தையுமுடைய கூற்றின் வெகுளியாகிய அழலில் மூழ்கலார்; அழல் - தீ. அடைந்தாரன்றே மூழ்கலார்.

4215. விட்டு அலர் - விண்டு அலர்கின்ற. தோட்டு - இதழை யுடைய. வேரி - தேன். கமலத்தோன் - பிரமன். எட்டி - உன்னை அறிந்து. இற்றென - இத்தன்மைத்தென. தெரிதல் தேற்றான் - தெளியான். வள்ளல்; திருமால்; விளி. அவ்விரிஞ்சன் ஈனப்பட்டவர் - பிரமனால் உண்டாக்கப் பட்டவர்கள். நின்னிலைமையைத் தெரிகிற்பார்கொல்; பார்க்கின் - ஆராய்ந்து பார்க்குமிடத்து.

4216. புனித: திருமால்; விளி. உன்னை அல்லாத பொருள் பரப் பிரமமன்று என எடுத்துரைப்பதல்லால். ஈறு - முடிவு. தோற்றம் - பிறப்பு. சச்சிதானந்த மூர்த்தி, சுடர்: விளிகள். நிகழ்த்துமாறு - கூறும் வகை.

4217. என்றன மறைகள் - என்று மொழிந்தன வேதங்கள். இம்முறையை நாரதன் நவிலக்கேட்டு வியாதன் எனக்குச் சொற்றான்; மான வேலரச: பரிக்ஷித்து; விளி. தனக்குத் துணையின்றி நின்ற தபோதனன்: சுகமுனிவன்.

# 51. விருகாசுரனைக் கொலைபுரி அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4218. இரப்புறு மிறைவற் றாழ்வோ ரிருநிதி யெய்து மாறும்
திருப்புண ரிறைவற் றாழ்வோர் செம்பொரு ளிழக்கு மாறும்
விரித்திட வேண்டு மென்று விரிதிரைப் பரவை முந்நீர்
வரைப்பெலாம் புரப்போன் கூற மாதவன் வழங்க லுற்றான். (க)

4219. தருமனிவ் வண்ணங் கேட்பத் தழைத்தவீட் டின்பம் யாவர்க்
கருள்செய விழைந்து நின்றே மாங்கவ ரடையப் பட்ட
பொருளெலாங் கவர்வம் யாமே புரவல வென்று செங்கட்
கருமுகி லன்ன கண்ணன் கனியிதழ் விண்டு சொன்னான். (உ)

4220. ஆதலா னழிவொன் றின்றி யதிசய மாகி நின்ற
மேதகு பரமா நந்த மேவுமா விழைந்து நின்ற
தீதிலா வுணர்வி னார்பாற் செறியுமவ் வெறுக்கை யாவும்
தாதுலாந் துளவத் தாமத் தற்பா னகற்று வானே. (ங)

4221. புயலுறழ் கவிகை மன்ன பொருவிலாத் தனிவீட் டின்பம்
வெயில்பொழி மணியி னோடு வெண்டிரைக் கடலிற் றோன்றும்

---

4218. இரப்புறும் - யாசிக்கின்ற. இறைவன் தாழ்வோர் - சிவபெருமானை வணங்குவோர். திருப்புணர் இறைவன் - இலக்குமியை மணக்கும் திருமாலை. தாழ்வோர் - வணங்குவோர். பரவை முந்நீர் - பரத்தலையுடைய கடல். வரைப்பு - நிலம். புரப்போன் - பரீக்ஷித்து. மாதவன் - சுகமுனிவன். தருமன் இவ்வண்ணம் கேட்ப - தருமபுத்திரன் முன்பு இவ்வாறு கேட்ப.

(பி - ம்) 2. செம்பொருள் விழையா வாறும்.

4219. வீட்டின்பத்தை யாவர்க்கு அருள்செய விழைந்தேமோ ஆங்கவரடையப்பட்ட பொருளெலாம் யாமே கவர்வம். புரவல - தரும; விளி. விண்டு - திறந்து.

4220. அதிசயமாகி நின்ற பரமானந்தத்தை மேவுமாறு விழைந்து நின்ற தீதிலா உணர்வினர்பால். வெறுக்கை - செல்வம். தாமம் - மாலை. தற்பரன் - திருமால். வெறுக்கை யாவும் அகற்றுவான்.

4221. புயலுறழ் - மேகத்தை ஒத்த. கவிகை - கொடுக்கக் கவிந்த கையையுடைய. மன்ன: விளி. மணி - கௌஸ்துப மணி. குயில் - திரு

குயில்புணர் கொழுந னீவான் குன்றெனப் பணைத்த கொங்கை
மயிலியல் பாகத் தண்ணல் வளர்பொருள் வழங்கு மாதோ. (௪)

4222. அரவணைத் துயிலு மம்மா னளிக்கலான் விரைவின் யார்க்கும்
வரைவிலன் வேட்ட தெல்லாம் வண்டுண விரிந்த கொன்றை
விரைகமழ் வேணி வள்ளல் விரைவினி லளிக்கு மிவ்வா
றொருகதை யுரைக்கு துங்கே ளொற்றைவெண் கவிகை வேந்தே. (௫)

கலிவிருத்தம்.

4223. விரைந்துவிரு காசுரன் விளங்குதன தாகம்
அரிந்துபக லாறெரி யழற்றலை சொரிந்தான்
கருந்தலை யறுப்பவரு கண்ணுதல் விலக்கா
வரந்தருதும் வேட்டது வழங்கென மொழிந்தான். (௬)

4224. துப்பினெடு முத்தலை சுருட்டுகடல் சுற்றும்
இப்புவியின் வானினெவர் சென்னிமிசை யேனும்
முப்புர முருக்குதிறன் முக்கணிறை யென்கை
வைப்பினவர் சாவுற வரந்தருதி யென்றான். (௭)

---

மகள். கொழுநன் - திருமால். கொழுநன் வீட்டின்பம் ஈவான். மயிலியல் பாகத்தண்ணல் - உமாதேவியைப் பாகத்தேயுடைய சிவபெருமான். பொருள்-செல்வத்தை

4222. அம்மான் - திருமால். அம்மான் யார்க்கும் விரைவின் அளிக்கலான்; அளிக்கலான் - கொடுக்கமாட்டான். வரைவிலன் - கட்டுப்பாடில்லாமல். ஈசன் - சிவபெருமான். அளிக்கும் - கொடுப்பான். வேந்தே: விளி.

(பி - ம்) 2. வரைமயில் மருவு பாக னுகலான் வண்டுண் கொன்றை. 3. விழைந்தது விரைவி னல்கும்.

4223. விருகாசுரன்: சகுனி என்னும் அசுரனுடைய மகன்; (துரியோதனன் மாமனான சகுனியல்லன் இவன்.) தனது ஆகம் அரிந்து - தன் உடலைப் பலகூறாக வெட்டி. பகல் ஆறு எரியழற்றலை - ஆறுநாட்கள் எரிகின்ற நெருப்பின்மேல். கருந்தலை அறுப்ப - தன்னுடைய கரிய தலையையும் அறுத்தவுடன். கண்ணுதல் - சிவபெருமான். விலக்கா - விலக்கி. வேட்டது - விரும்பியதை. வழங்கு - கூறுவாயாக.

4224. துப்பினெடு முத்தையும் அலைசுருட்டுகின்ற கடல்; துப்பு - பவளம். சென்னிமிசை - தலைமேல். முருக்கு - அழித்த. முக்கணிறை: சிவபெருமானே; விளி. என்கையை வைப்பின் அவர் சாவுறும்படி வரம் தருதி என்றனன்.

(பி - ம்) 3. முருக்கு முகிழ் மூவிறை.

4225. அன்னது களிற்றுரிவை யண்ணலு மளித்தேம்
என்னவது தேர்தா விளம்பிறை புனைந்தோன்
சென்னிமிசை யேதனது செய்யகாம் வைப்பான்
உன்னியெழ முக்கணிறை யோடினன் விரைந்தே. (அ)

4226. அளித்திடும் வாத்தினை யழித்திட நறுந்தேன்
துளித்திடு கடுக்கையொடு தூநில வெறிக்கும்
இளைத்தமதி வேணியா னெவ்வுலகு மோடிக்
களிற்றாசு கூறவரு கண்ணனுல குற்றான். (௯)

4227. சிந்தவமு தத்துவலை திங்கண்முடி வைத்தோன்
வந்துபுகல் புக்கிடலும் வாளவுணன் முன்னம்
உந்துதிரை வேலியுல குண்டமணி வண்ணன்
அந்தண ரெழிற்குமா ளுகியெதி ருற்றான். (௧0)

4228. வாட்டிறல் விளங்கவுணர் மன்னனை வழங்கா
ஓட்டமெவ னென்னவவ னுற்றது கிளப்பத்
தீட்டரிய வெண்முறுவல் செய்துகை புடைத்துச்
சூட்டாவ மீமிசை துயின்றபுயல் சொல்லும். (௧௧)

---

4225. அன்னது - அவ்வாத்தை. களிற்றுரிவையை யணிந்த அண்ணல் : சிவபெருமான். அளித்தோம் என்ன ; என்ன - என்று கூற. அது தேர்தா - அவ்வாத்தைத் தெளிந்து கொள்ளுதற்கு. இளம்பிறை புனைந்தோன் சென்னி மிசையே - சிவபெருமானுடைய தலையின்மீதே. காம் - கையை. வைப்பான் உன்னி - வைத்தற்கு நினைத்து. எழ - விருகாசுரன் செல்ல. முக்கணிறை - சிவபெருமான். விரைந்து ஓடினன்.

(பி - ம்) 1. களிற்றுரிவை யந்தணன்.

4226. அழித்திட - அழித்துவிடும் பொருட்டு. கடுக்கை - கொன்றை. எறிக்கும் - வீசுகின்ற. இளைத்தமதி - பிறைச்சந்திரனை யணிந்த ; இளைத்த- தேய்ந்த. வேணி - சடை. அரன் - சிவபெருமான். களிற்றாசு கூற - கஜேந்திரன் ஆதிமூலமே என்று கூப்பிட. வரு கண்ணன் உலகு - காப்பதற்கு வந்த திருமாலின் உலகாகிய வைகுந்தத்தை.

(பி - ம்) 4. களித்தைவிர விக்கொடியின் காயிடைக் கரந்தான்.

4227. அமுதத்துவலை சிந்தும்படி திங்களை முடியில் வைத்தோன் : சிவபெருமான். புகல் புக்கிடலும் - திருமாலைச் சரணடைதலும். மணிவண்ணன் அந்தணர்குமாரனுகி அவுணன் முன்னம் உற்றான் ; மணிவண்ணன் - கண்ணபிரான். அவுணன் - விருகாசுரன்.

4228. அவுணர் மன்னனை - விருகாசுரனை. வழங்கா - கூப்பிட்டு. ஓட்டம் எவன் என்ன - ஓடுதற்குக் காரணம் என்ன என்று கேட்ப. அவன்- விருகாசுரன். கிளப்ப - சொல்ல. முறுவல் செய்து - சிரித்து. கைபுடைத்து - கையைக்கொட்டி. அரவ மீமிசை - ஆதிசேடன் மீது. புயல் - திருமால்.

4229. வாய்விரி யெருக்கமலர் மாலைதலை சூடாக்
காயழல் பரந்தசுடு காடெழி லரங்காப்
பேயொடு நடிக்குமொரு பித்தனுரை மெய்யோ
ஆயிர முடித்தலை யனந்தனை நிகர்ப்பாய். (கஉ)

4230. மின்னெழுகு கொற்றவடி வேலுழவ மற்றுன்
சென்னிகரம் வைத்தது தெளிந்திடுத லன்றே
நன்னிலைமை யித்திறமு னுடுதி யெனத்தன்
மன்னிய தடக்கைதலை வைத்தவுணன் மாண்டான். (கங)

4231. நன்றென மகிழ்ந்தமரர் நாண்மலர் பொழிந்தார்
வென்றிமழு வாளனும் வியந்தன னடந்தான்
மன்றல்கமழ் தண்டுளவ மாயனு மகன்றான்
என்றுமுனி புங்கவ னெடுத்தன னிசைத்தான். (கச)

---

4229. எருக்கமாலையைத் தலையில் சூடா ; சூடா - சூடி. அழல் - தீ. சுடுகாடே அரங்காகப் பேயினுடன் நடிக்கும் ஒரு பித்தனுடைய உரை மெய்யோ ; பித்தன் - சிவன். மெய்யோ - உண்மையோ.

(பி - ம்) 4. ஆய்மறைசொ றக்கனுரை யாசுறுத லுண்டோ.

4230. உழவ : விருகாசுரனே ; விளி. உன் சென்னியில் கரத்தை வைத்து அதைத் தெளித்திடுதலன்றே நன்னிலைமை. முன் இத்திறத்தை நாடுதி என. நாடுதி - ஆராய்வாயாக. என - என்று திருமால் கூற. தன் கையைத் தலையில்வைத்து அவுணன் மாண்டான்.

4231. அமரர் - தேவர். மழுவாளனும் - சிவபெருமானும். மன்றல்- வாசனை. மாயனும் - திருமாலும். முனிபுங்கவன் - சுகமுனிவன். எடுத்து இசைத்தான்.



# 52. பிருகுமுனி சென்ற அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி லாசிரிய விருத்தம்.

4232. முருகுலா மலரி னான்கோன் முளரியங் கண்ணி னான்கொல்
உருகெழு மழுவ லான்கோ லுயர்நல முடைய ரென்னா
வருமறை முனிவர் தேவ ரைந்தவித் துயர்ந்த வாற்றற்
பிருகுமா முனிவன் றன்னைப் பெட்பொடு வினாதல் செய்தார் .()

4233. மூவரின் முற்கு ணத்து முழுமுதல் யாவ னென்ன
ஓவற வினிதி னாய்வ லுடன்றுமற் றன்னோர் சாவம்
ஏவினன் னோரின் யாமு மெளியமோ வுரைமி னென்னாத்
தேவுமெய்த் தவக்குன் றன்னான் சென்றனன் விரைந்து மன்னோ. (௨)

4234. அந்தணன் மலர்மே லானை யடைந்தனன் வணங்கா நிற்பத்
தந்தையை வணங்கா நிற்ற றக்கதே யென்று செந்தீச்
சிந்துபு மலர்க்கண் சேப்பச் சிவந்தனன் சிவத்த லோடும்
கொந்தழன் மழுவ லாளன் குளிர்வரைச் சாரல் சார்ந்தான்.(௩)

---

4232. முருகு - வாசனை. மலரினான் - பிரமன். கண்ணினான் - திருமால். உரு கெழு - அச்சம் பொருந்திய. மழுவலான் - சிவபெருமான். பரம்பொருள் - மேலான பொருள். ஐந்தவித்து உயர்ந்த ஆற்றல் - ஐம்புலன்களையும் கெடுத்து உயர்வடைந்த தவவன்மையையுடைய. முனிவரும் தேவரும் பிருகுமாமுனிவன்றன்னை வினாதல் செய்தார்.

(பி - ம்.) விடுத்தல் செய்தார்.

4233. மூவரில் - திரிமூர்த்திகளில். முற்குணத்து - சத்துவ குணத்தையுடைய. முழு முதல் - பரம்பொருள். ஓவற - இடையீடில்லாமல். ஆய்வல் - ஆராய்வேன். உடன்று - கோபம்கொண்டு. ஏனோர் - மற்றையோர். சாவம் ஏவின் - சாபம் கொடுத்தால். அன்னோரின் - அவர்களைக் காட்டிலும். எளியமோ என்றது யாமும் சாபம் கொடுப்போம் என்பதைப் புலப்படுத்தியது. தேவு - தெய்வத் தன்மையையுடைய. தவக்குன்றன்னான் - பிருகுமாமுனி. இச்செய்யுள் சில பிரதிகளிலில்லை.

4234. அந்தணன் - பிருகுமுனி. மலர்மேலானை - பிரமனை. அடைந்து வணங்காமல் நிற்ப. நிற்ப - பிருகு நின்றானாக. தக்கதே - தகுதியோ. என்ன - என்று பிரமன் கூற. கட்டீச் சிந்துபு - கண்களினின்றும் தீயைச் சிந்தி. கோயில் தீர்க - கோயில் இல்லையாகுக. மழுவலாளன் - சிவபெருமானுடைய. வரை - கைலைமலை.

(பி - ம்.) 1. மலரோன்றன்னை. 2-3. யென்னக் கட்டீச், சிந்துபு நினக்குக் கோயி தீர்கெனச் சினந்து செப்பிக்,

4235. சார்ந்தன னன்ன காலைத் தழல்வண னுமையாள் கொங்கை
ஆர்ந்தன னின்பந் துய்க்கு மமைதியென் றறிந்தன் னோர்க்குப்
பேர்ந்திரு குறியும் வீழப் பெரிதுரைத் தகற லோடும்
ஓர்ந்துமுக் கணன ழைப்ப வொய்யெனப் பெயர்த்தும் வந்தான். (௬)

4236. (1) உற்றவிம் மறைவ லோனம் முடன்பிறப் பென்று வெவ்வாய்ப்
புற்றா வணிந்த நம்பன் புல்லுவா னுறலுந் தீண்டேல்
நிற்றியோ நெறியி னென்ன நெற்றியிற் கண்ணே போல
மற்றிரு கண்ணுஞ் சேர்த்து மண்டழற் சூலங் கொண்டான். (௬-1)

4236. (2) வடித்தமுத் தலைய சூல மறையவன் றன்மே லெங்கன்
எடுத்தனை யெயிலோர் மூன்று மிணரெரி பாய்ந்து மேயப்
பொடித்தமென் முறுவற் செவ்வாய்ப் புனிதவென் றிமய மீன்ற
சுடர்த்தொடி விலக்க வுய்ந்து துழாய்முகி லுலகஞ் சென்றான். (௬-2)

4237. மாதவ னடுக்கு றாது வளர்கழற் பெருவி ரற்கண்
வேதுறு செந்தீ யேவி விழித்தழல் செகுத்து மற்றும்
ஓதுநான் மறையோர் போற்று முயர்பிரா மணிய தெய்வம்
ஆதனீ யொழிக வென்னு வறைந்தனன் கடுகிச் சென்றான். ()

---

4235. அன்னகாலை - அப்போது. தழல்வணன் - சிவபெருமான். ஆர்ந்தனன் - பொருந்தினனாய். அமைதி - சமயம். அன்னோர்க்கு - சிவபெருமானுக்கும் பார்வதிக்கும். இரு குறியும் பேர்ந்து வீழ; பேர்ந்து - நீங்கி. வீழ - வீழும்படி. பெரிதுரைத்து - பெரிய சாபத்தைக் கொடுத்து. அகறலோடும் - பிருகு திரும்பிச் செல்லுதலும். முக்கணன் ஓர்ந்து அழைப்ப; ஓர்ந்து - அறிந்து. ஒய்யென - விரைய. பெயர்த்தும் - மீட்டும்.

இச்செய்யுள் பிரதிகளிற் காணப்படவில்லை; மூலத்திலும் இக்கருத்து இல்லை.

4236. (1) மறைவலோன் - பிருகுமுனி. நம்முடைய உடன்பிறப்பு என்று கூறி. புற்றரவணிந்தோன் - சிவபெருமான். புல்லுவான் - தழுவுதற்கு. தீண்டேல் - தொடாதே. நிற்றியோ - நிற்கின்றாயோ. என்னலும் - என்று பிருகு கூறலும். நெற்றியிற் கண்ணைப்போல.

4236. (2) வடித்த - கூர்மையான. எயில் - மதில். பொடித்த - தோன்றிய.

(பி - ம்) 2. புற்றா வணிந்தோ னீத்தோற் 3-4. நீதூய்மை நீத்தா யன்னலு நீடு செந்தீ, நெற்றியிற் கண்டி றந்து நீடழ ரேற்றி நின்றான்.

4237. மாதவன் - பிருகு. தன்கழலின் பெருவிரற்கண் உள்ள வேதுறு செந்தீயை ஏவி விழித்தழலைச் செகுத்து. கழல் - பாதம். வேதுறு - வெம்மையுற்ற. விழித்தழல் - சிவபெருமான் தோற்றுவித்த நெற்றிக்கண்ணின் தீயை. செகுத்து - அழித்து. பிராமணிய தெய்வமாதலை நீ ஒழிக; பிராமணிய தெய்வம் - பிராமணர்களால் பூசிக்கப்படும் தெய்வம். ஒழிக - நீங்குக.

இச்செய்யுளும் சில பிரதிகளிலில்லை.

4238. அறங்கரை நாவி னன்போ யலம்புபா லாழி வந்து
பிறந்தவின் னமுதின் சாயற் பிறைநுத லரிவை வாழைக்
குறங்கின்மேற் சென்னி வைத்துக் கொண்டலங் கொழுந்து போல
உறங்குமா மாயன் மார்பி னுதைத்தன னென்ப மன்னே. (எ)

4239. தடங்கட லுலக முண்ட தனிமுத லெழுந்து மின்னின்
சுடர்ந்தபொற் றொடிசூழ் செங்கைத் துணைமலர் கூப்பி நீவந்
தடைந்தமை யறிந்தி லேன்யா னருமறை யந்த ணாள
கிடந்தது பொறுத்தி யென்று கேண்மையி னியம்பி னானே.(அ)

4240. ஒருநிலை பெற்ற வுள்ளத் துயர்முனித் தலைவ மற்றுன்
மருநிலை பெற்ற பொற்றா மரையடி பட்ட வாற்றால்
திருநிலை பெற்ற தாலென் செய்யதார் மார்வ மென்றான்
தருநிலை பெற்ற வானந் தாழ்ந்தபொற் றாளி னானே. (௯)

4241. கண்டனன் முனிவன் றெய்வக் கங்கையங் கரைவாய் நண்ணி
விண்டன னிகழ்ந்த வெல்லாம் விழுத்தவக் கிழவர் கேளா
ஒண்டிற லாழி யானே வுயர்நல முடைய னென்னக்
கொண்டனர் கொண்டு நெஞ்சங் குழைந்தனர் பராவி னாரே. (க௦)

---

4238. அறங்கரை நாவினன் - பிருகுமுனி. அலம்பு பாலாழி - ஒலிக்கின்ற பாற்கடலுக்கு. அரிவையின் குறங்கின்மேல்; அரிவை - இலக்குமி. வாழைபோலும் குறங்கு; குறங்கு - துடை. கொண்டல் - மேகம். பரமன் - திருமாலின்.

4239. தனிமுதல் - திருமால். மின்னின் - மின்னலைப்போல். சுடர்ந்த - ஒளிவிட்ட. செங்கையாகிய மலரைக் கூப்பி; கூப்பி - குவித்து. அந்தணாள: விளி. கிடந்தது பொறுத்தி - யான் படுத்திருந்ததைப் பொறுப்பாயாக. கேண்மை - நட்பு.

4240. உள்ளத்தையுடைய முனித்தலைவ: பிருகுவை; விளி. மரு - வாசனை. பொற்றாமரை போலும் உன் அடி. பட்ட ஆற்றால் - என் மார்பிற் பொருந்திய தன்மையால். என் மார்வத்தில் திருநிலை பெற்றது என்றான்; திரு - திருமகள். தரு - கற்பகம். வானம் - சுவர்க்கத்தவர். தாழ்ந்த - வணங்கிய. அம்மான் - திருமால்; எழுவாய்.

4241. முனிவன் - பிருகு. நிகழ்ந்த வெல்லாம் விண்டனன். தவக்கிழவர் - முனிவர். கேளா - கேட்டு. ஆழியான் - திருமால். என்ன - என்று. பராவினர் - புகழ்ந்தார்.

# 53. * இறந்த மக்களைத் தந்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4242. விரைசெய்பூந் துளவத் தண்டார்
விண்ணவன் விளையாட் டின்னும்
உரைசெய்வ னொன்று கேட்டி
யொலிகட லுலகந் தாங்கும்
வரைசெய்தோண் மன்ன வென்று
வாண்முக மலர்ந்து வாரித்
திரைசெய்தெள் ளமுதுங் கைப்பத்
திருமுனி செப்ப லுற்றான். (க)

4243. மோதுவெண் டரங்க வேலை
முற்றிய துவரை மூதூர்
ஓதுசான் மறைவ லாள
னொருவன்வந் துதித்த போதே
காதலங் குழவி மாயக்
காவலன் கடைக்கொண் டேகி
ஆதகா தறனே யென்னா
வழுதழு தரற்றி னானால். (உ)

---

* (பி - ம்.) அந்தணனுக்குப் பிள்ளைகளைக் கொண்டுவந்து கொடுத்த அத்தியாயம்.

4242. விரை - வாசனை. தார் - மாலை. விண்ணவன் - கண்ணபிரானுடைய. உரைசெய்வன் - கூறுவேன். ஒன்று - ஒரு கதையை. கேட்டி - கேட்பாயாக. வரை செய் - மலையை யொத்த ; செய் : உவம வுருபு. அமுதும் கைப்ப - அமுதமும் கசக்கும்படி. திருமுனி - சுகமுனிவன்.

(பி - ம்) 4. தெள்ளமுத மூறத். கிளக்கலுற்றான்.

4243. தரங்கம் - அலை. முற்றிய - சூழ்ந்த. துவரையாகிய மூதூரில், மறைவலாளனுடைய குழவி உதித்தபோதே மாய ; மாய - இறந்துபோக. காவலன் கடைக்கொண்டேகி - இறந்த குழந்தையை அரசன் மாளிகையின் வாயிலில் கொண்டுசென்று. ஆ, தகாது, அறனே ; அறனே - என்குழவி இறத்தல் தருமமோ.

4244. இளம்பசுங் குழவி யோரெட்
டிறந்துபா டெய்த விவ்வா
றுளங்கசிந் துருகி மீட்டு
மொன்பதாங் குழவி துஞ்ச
வளங்கெழு வேந்தன் கொற்ற
வாய்தலிற் கொண்டு சென்று
துளங்கிய மறைவ லாளன்
சோர்ந்தனன் புலம்பு வானால். (௩)

4245. அல்லலுற் றழுங்கு கின்ற
வந்தணன் வதன நோக்கி
மல்லலங் குழவி யிங்ஙன்
மாய்ந்திடா வண்ணங் காப்ப
வில்வலா ரில்லை கொல்லிவ்
வியனகர்ப் பரப்பி னென்னாப்
பல்லுளைப் புரவித் திண்டேர்ப்
பார்த்தனுங் கியம்பி னானே. (௪)

4246. அருமறை யந்த ணாள
னவ்வுரை கேட்ட லோடும்
ஒருகுழை யொருவன் றன்னி
னேங்கலான் மாரி காத்த
விரைமலர்த் தாரி னானின்
வில்வலாய் கொல்லோ செங்கட்
குரிசினீ யென்று நெஞ்சங்
குழைந்தனன் கூறி னானே. (௫)

---

4244. எட்டுக் குழவி இறந்துபாடெய்த. துஞ்ச - இறக்க. வேந்தனுடைய கொற்றவாய்தலின்; கொற்ற வாய்தல் - அரண்மனை வாசல்; "கோப்புக வமைத்த கொற்ற வாயிலும்" (பெருங். 4.3 : 32.) வாய்தல் - வாயில்.

4245. அல்லல் - துன்பம். அழுங்குதல் - வருந்துதல். குழவியை இங்ஙன் மாய்ந்திடா வண்ணம் காப்பதற்கு இவ்வியனகர்ப் பரப்பில் வில்வலாரில்லை கொல் எனா; இங்ஙன் - இவ்வாறு. எனா - என்று. பார்த்தன் - அருச்சுனன்.

4246. ஒருகுழை ஒருவன் றன்னின் - பலராமனைக் காட்டிலும். ஏங்கலால் மாரிகாத்த - கோவர்த்தனகிரியால் மழையைக் காத்த. தாரினானின் - கண்ணனைக் காட்டிலும். குரிசிலாகிய நீ வில்வலாய் கொல்லோ என்று; நீ என்றது அருச்சுனனை.

4247. அலப்படை யவனு மல்லே
னதிர்புயன் மாரி காப்ப
மலைக்குடை யெடுத்து நின்ற
மணிநிற மாலு மல்லேன்
நலத்தகு மறைவ லாள
நானிகல் விசயன் மற்றென்
சிலைத்தொழில் காண்டி யென்னாத்
தேர்ந்துரை யாட லுற்றான். (சு)

4248. எழில்வளர் குழவி தோன்றி
னினியுயிர் காப்பல் காவா
தொழிவனே லழலின் மூழ்கி
யுள்ளுயிர் துறப்ப லென்னா
மழலைவண் டுழலுந் தாரோன்
வஞ்சின முரைப்பக் கேட்டாங்
கழுகுர லந்த ணாள
னகன்மனை குறுகி னானால். (எ)

4249. அங்கமோ ராறுந் தேர்ந்த
வந்தண னன்பின் வேட்ட
கொங்குடைந் தொழுகு மன்றற்
குழல்கருக் கொண்டு பத்தாம்
திங்கள்வந் துற்ற தாகச்
செம்மலீ காத்தி யென்று
வெங்கொலை பழுத்த போர்வில்
விசயனுக் கியம்பி மீண்டான். (அ)

---

4247. அலப்படையவன் - பலராமன். புயல் மாரி - நீரையுடைய மழை காப்ப - காத்தற்கு. மணி நிறமாலும் - கண்ணபிரானும். மறைவலாள : விளி. நான் விசயன்; விசயன் - அருச்சுனன். மற்று - அசை. என் சிலைத்தொழிலைக் காண்டி; காண்டி - காண்பாயாக. தேர்ந்து - ஆராய்ந்து.

4248. இனி தோன்றின் - இனிப் பிறக்குமானால். உயிர் காப்பல் - அதனுயிரை யான் காப்பேன். அழலில் - தீயில். என்னா - என்று. தாரோன் - அருச்சுனன். அந்தணாளன் அதைக்கேட்டு மனைகுறுகினான்.

4249. ஆறு அங்கமும் தேர்ந்த அந்தணன்; அங்கம் - வேதாங்கங்கள். வேட்ட - மணம் செய்துகொண்ட. குழல் : மனைவி. கரு - கருப்பம். திங்கள் - மாதம். செம்மல் : அருச்சுனன்; விளி. விசயனுக்கு - அருச்சுனனுக்கு.

(பி - ம்) 4. கியம்பி னானே.

4250. ஏர்கனிந் தொழுகு மாதி
னீற்றறை மருங்கு முற்றும்
ஆரமர் கடந்து வெம்பு
மடற்சரக் கூட மாக்கிக்
கூருறு பகுவாய் வெய்ய
கூற்றமுங் குலுங்கி யஞ்சக்
கார்முகங் குழைத்து நின்று
காத்தனன் பார்த்தன் மாதோ. (கூ)

4251. வேணவாத் தழைந்து மொய்த்த
வெண்ணகைக் குமுதச் செவ்வாய்ப்
பூண்முலை மாத ரெல்லாம்
பொம்மெனப் பொருமி யேங்க
மாணெழில் கனிந்த பேதை
மாதராவ் வயிறு வாய்த்த
காண்வரு குழவி தானுங்
காண்கலாக் கரந்த தன்றே. (க௦)

4252. கூற்றுயிர் வாரும் வண்ணங்
கொடுஞ்சிலை குழைய வாங்கிக்
காற்றுறழ் கலின மான்றேர்க்
காளைநீ காத்த வாற்றால்
தோற்றிய குழவி மெய்யுந்
தோன்றல தொளித்த தேயென்
றாற்றல னாகி மற்றவ்
வந்தண னரற்றி னானே. (கக)

---

4250. ஏர் கனிந்து - அழகு முற்றி. மாதின் - அந்தணன் மனைவியின். ஈற்றறை - ஈனுதலையுடைய அறை. வெம்பி - கோபித்து. அடு - கொல்கின்ற. சரக் கூடம் - அம்புக் கூடம். கூற்றம் - யமன். கார்முகம் - வில்லை. பார்த்தன் - அருச்சுனன்.

(பி - ம்) 2. வெம்பி யடுசரக். 3. கூாழற் பகுவாய்.

4251. மொய்த்த - நெருங்கிய. மாதர் - மகளிர். பொம்மென : ஒலிக்குறிப்பு. ஏங்க - வருந்த. மாண் எழில் கனிந்த - மாட்சிமைப் பட்ட அழகு முற்றிய. பேதை வயிறுவாய்த்த குழவி. காண்வரு - அழகுபொருந்திய. காண்கலாது கரந்தது ; கரந்தது - மறைந்தது.

(பி - ம்) 2. பொம்மென வலறிக்.

4252. கூற்று உயிர் வாரும் வண்ணம் - யமனுயிரைக் கொள்ளும் வண்ணம். வாங்கி - வளைத்து. காளை : அருச்சுனன் ; விளி. மெய்யும் - உடம்பும். தோன்றிலதாய் ஒளித்தது. ஆற்றலனாகி - பொறானாய்.

4253. விற்றிற னன்று காப்ப
வில்வலா ரிலைகொ லென்னும்
சொற்றிற னன்று காத்த
தொழிலுநன் றம்ம வென்னப்
பற்றலர் பரவு நோன்றாட்
பார்த்தனைப் பலகா னோக்கிக்
கற்றுணர் மறைவ லாளன்
கரைந்தனன் கலுழ்ந்தா னன்றே. (௧௨)

4254. அலைகுலாந் துயரிற் றாழ்ந்த
வந்தணன் குழவி யீரேழ்
உலகமுந் தேடிக் காணு
தொள்ளழற் புகுவ லென்னு
மலைகொலா மென்ன வீங்கி
வனப்புவீற் றிருந்த வார்பொற்
சிலைகுலாந் திண்டோட் பார்த்தன்
செந்தழல் வளர்த்தா னங்கே. (௧௩)

4255 பாட்டிளஞ் சுரும்பு மூசு
பனிமலர்க் கானஞ் செந்தீ
ஊட்டிய குரிசின் மற்றாங்
கொள்ளழற் புகுவா னிற்பக்
காட்டுவன் குழவி தன்னைக்
காண்டிநீ யென்று கண்ணன்
கோட்டினிற் செய்த தேர்மேற்
கொண்டனன் போயி னானல் (௧௪)

---

4253. விற்றிறல் நன்று - உன் வில்லின் திறமைநன்று. காப்ப - காத்தற்கு. என்னும் சொற்றிறன் நன்று - சொல்வன்மையும் நன்று. அம்ம : வியப்பிடைச் சொல். என்னு - என்று கூறி. பற்றலர் - பகைவர். நோன் றாள் - வலிய முயற்சியையுடைய. பார்த்தனை - அருச்சுனனை. பலகால் - பலமுறை.

4254. அலைகுலாம் - அலைதல் விளங்கும். துயரில் தாழ்ந்த - துயரத் தில் தங்கிய. குழவியை ஈரேழ் உலகினும் தேடிக்காணுது, அழற்புகுவ லென்னு - தீயிற்புகுவேனென்று கூறி. பார்த்தன்-அருச்சுனன். தழல்-தீயை.

4255. பாட்டினை யுடைய சுரும்பு. மூசு - மொய்க்கின்ற. கானத் தைத் தீக்கு ஊட்டிய குருசில் : அருச்சுனன். மற்று, அசை. ஆங்கு - அவ் விடத்தே. புகுவான் - புகுதற்கு. கண்ணன், குழவிதன்னைக் காட்டுவம் நீ காண்டி என்று தேரிற்கொண்டு போயினன். கோட்டினில் - யானைத் தந் தத்தால்,

4256. ஆழிமால் வரையி னப்பா
லடரிருட் பிழம்பிற் செல்லா
ஆழியந் தடந்தேர் பூண்ட
வலங்குளைப் புரவி நிற்ப
ஆழியை விடுத்தான் செஞ்சுட்
டாயிரந் தலைய நாகத்
தாழிவாய்த் துயிற்சி நீத்த
வாயிரஞ் செங்க ணம்மான். (கரு)

4257. ஒள்ளழற் பருதி கோடி
யுட்கும்வா ளொளிய நேமி
அள்ளிருட் பிழம்பு நக்கி
யலர்கதிர்க் கற்றை தூற்றப்
புள்ளியற் கலின மான்றேர்
பொருக்கெனப் பறந்து பொங்கு
வெள்ளிவெண் டாங்க மாடு
விரிகட லிறுத்த தன்றே. (கசு)

கலிநிலைத்துறை.

4258. பின்னல் வெண்டிரைப் பெரும்புறக் கடன்முகட் டிடையே
மன்னு செங்கதிர் மணிமுடி யாயிரங் கவித்த
பன்ன கத்தின்மேற் பணைப்புய மெட்டொடுங் கிடந்த
கன்னியந் துழாய்க் கருங்கடல் கண்டனர் தொழுதார். (கஎ)

---

4256. ஆழிமால்வரையின் - சக்கரவாளகிரியின். அடர் இருட்பிழம்பில் - நெருங்கிய இருட்டுப் பிழம்பில். செல்லாவாய்ப் புரவிநிற்ப. ஆழியையுடைய தேர்; ஆழி - உருளை. ஆழியை - சக்காத்தை. நாகத்து - ஆதிசேடன்மீது. ஆழியில் - பாற்கடலில். துயிற்சி - தூங்குதலை. அம்மான் - கண்ணபிரான்; எழுவாய்.

(பி - ம்) 1. லள்ளிருட் பிழம்பிற்.

4257. அழல் பருதி - தீயையுடைய சூரியன். உட்கும் - அஞ்சுகின்ற. ஒளியையுடைய நேமி: சக்கரம். அள் இருட்பிழம்பு நக்கி - செறிந்த இருட் கூட்டத்தைக் கெடுத்து. கதிர்க்கற்றை தூற்ற - ஒளித் தொகுதியைச் சொரிய. புள்ளியல் - பறவைபோல் நிலந்தீண்டாத கதியையுடைய. மான் - குதிரை. பொருக்கென - விரைய. வெள்ளி வெண் தரங்கம் - மிக வெண்மையான அலை. கடலில் இறுத்தது; இறுத்தது - சென்று தங்கியது.

4258. பின்னல் - ஒன்றோடொன்று இணை தலையுடைய. முகடு - உச்சி. ஆயிரம் முடியைக் கவித்த பன்னகத்தின்மேல்; பன்னகம் - ஆதிசேடன். பணைப் புயம் - பெருத்த தோள். கருங்கடல் - திருமாலை,

4259. துளும்பு செஞ்சுடர் மகுடமுந் தொடியும்வார் குழையும்
வளங்கொண் மால்வரை மார்புசேர் கவுத்துவ மணியும்
கிளர்ந்த பேரொளி மின்செயக் கிடந்தவப் பெருங்கார்
தெளிந்த நல்லமு துகுத்தென வின்னுரை செப்பும். (கஅ)

4260. மலைகு லாவிய மாணெழிற் றோளினிர் மற்றெம்
கலைக ளாகிய நும்மையாங் காண்பது கருதி
அலைகு லாவிய வகனில வரைப்பினுங் குதித்த
குலவு கூரெழிற் குழவிக ளிவ்வழிக் கொணர்ந்தேம். (கசு)

4261. நறையு யிர்த்தபூந் தாரினிர் நளிகடன் ஞாலப்
பொறைத விர்த்துநீர் வம்மினென் றின்னுரை புகலா
மறைவ டித்தவன் மாணெழிற் குழவிகள் பத்தும்
எறிதி ரைக்கடற் றுயின்றரு ளிறையவ னீந்தான். (உ0)

4262. முழுமு தற்பொருண் முளரியஞ் சேவடி வணங்கி
மழைம தக்கரி மணிமருப் பொசித்த மாதவனும்
எழுவெ னப்பணைத் தேந்துதோள் விசயனு மீளாக்
குழவி பத்துமக் குலமறை யவற்கவட் கொடுத்தார். (உக)

---

4259. துளும்பு - அசைகின்ற. தொடி - தோள்வளை. வரை போன்ற மார்பு. கிளர்ந்த - விளங்கிய. கார் - திருமால். அமுது உகுத்தென - அமுதத்தைச் சொரிந்தாற்போல. செப்பும் - கூறுவான்.

4260. மலைகுலாவிய - மலைபோல் விளங்கிய. தோளினிர் : கண்ணனும் அருச்சுனனும் ; விளி. மற்று, அசை. எம்கலைகளாகிய நும்மை ; கலைகள் - அமிசம். குலாவிய - விளங்கிய. நும்மைக் காண்பது கருதி ஆங்கு உதித்த குழவிகளை இவ்வழிக் கொணர்ந்தேம்.

4261. நறை - தேன். தாரினிர் : விளி. நளி - பெருமை. பொறை - பாரம். தவிர்த்து - நீக்கி. வம்மின் - வாருங்கள். புகலா - புகன்று. மறை வடித்தவனுடைய குழவிகள் பத்தையும் இறையவன் ஈந்தான். மறை வடித்தவன் - வேதத்தைப் பயின்ற அந்தணன்.

4262. முழு முதற் பொருள் - திருமாலினுடைய. கரி - குவலயாபீடத்தின். மாதவனும் - கண்ணபிரானும். எழு - கணையமரம். பணைத்து - பெருத்து. ஏந்து - உயர்ந்த. விசயன் - அருச்சுனன். மீளா - மீண்டு, அவண் - துவரை நகரில்.

4263. உன்னு கின்றவக் குழவிக ளெய்தலு முயிர்த்தோர்
துன்னு கின்றபேர் மகிழ்ச்சியைச் சொலவெவர் வல்லார்
மன்னு கின்றனன் மாயவன் மகம்பல வியற்றி
மின்னு கின்றநன் னிதித்திரள் வேதியர்க் களித்தே. (உஉ)

4264. வேலை மாநில மெல்லிய லரும்பொறை தீர
ஆல மன்னவா ளரசொடு போர்விளை யாடு
நீல மேனிய னீர்விளை யாட்டுவங் தனனல்
கோல வார்குழற் கோதையர் குழாத்தொடு மணந்தே. (உங)



# 54. புனல் விளையாட்டு அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4265. போர்விளை யாடு கூர்வேற் புரவல கேட்டி யென்னுச்
சீர்விளை யாடு பொற்பூந் திருப்புணர் மார்வத் தண்ணல்
கார்விளை யாடு தண்ணங் காடுசூழ் மதுரை மூதூர்
நீர்விளை யாடு வண்ண நிகழ்த்துவன் முனிவன் மாதோ. (க)

---

4263. குழவிகள் - இறந்த குழந்தைகள். எய்தலும் - வந்தவுடன். உயிர்த்தோர் - பெற்றோர். துன்னுகின்ற - அடைகின்ற. மாயவன் - கண்ணபிரான். மகம் - யாகம்.

4264. நிலமெல்லியலின் பொறை தீர ; நில மெல்லியல் - பூமிதேவி ; பொறை - பாரம். தீர - நீங்க. ஆலம் - விஷம். அரசு - அரசர். நீலமேனியன் - கண்ணபிரான் கோலம் - அழகு. கோதையர் - மனைவியர். மணந்து - கலந்து.

4265. புரவல : பரிக்ஷித்து ; விளி. என்னு - என்று கூறி. சீர் - புகழ். அண்ணல் - கண்ணபிரான். கார் - மேகம். முனிவன் - சுகன். முனிவன், அண்ணல் மதுரைமூதூரில் நீர்விளையாடும் வண்ணத்தை நிகழ்த்துவன் ; நிகழ்த்துவன் - கூறுவான்,

கலிவிருத்தம்.

4266. எவ்வ மற்றுறை யெண்ணிரண் டாயிரம்
கொவ்வை வாய்ச்செழுங் கோதைய ரின்புற
ஒவ்வொ ருத்தருக் கொவ்வொரு காந்தனுச்
செவ்வி வாய்ப்பத் திகழ்ந்தனன் செங்கணன். (உ)

4267. காந்தண் மெல்விரற் காரிகை யாரொடும்
பாந்தண் மேற்றுயில் பண்ணவன் பல்பிடிக்
கூந்தன் மாவொடு குஞ்சர மெய்தல்போல்
சார்ந்த ளாவு தடத்தடைந் தானரோ. (௩)

4268. ஞால மீது நடந்துபன் மின்னெடு
நீல மேக நெடுங்கட லாடல்போல்
சேலு லாவுகட் டேவியர் தம்மொடுங்
கோல வாவி குடைந்தனன் மாயவன். (௪)

4269. வாங்கு கோல மருங்கினர் வந்துற
ஓங்கு நூபுரத் தாலின மாமெனப்
பாங்கர் மேவிப் படர்நடை காண்டலும்
ஆங்கு நாணி யகன்றன வன்னமே. (௫)

---

4266. எவ்வம் அற்று - துன்ப மில்லாமல். எண்ணிரண் டாயிரம் கோதையர் - பதினாறாயிரம் மகளிர். காந்தனுக - கணவனாக. செவ்வி - அழகு. செங்கணன் திகழ்ந்தனன். செங்கணன் - கண்ணபிரான்.

(பி - ம்) 3. ஒவ்வொருவருக்

4267. காந்தள் மெல்விரல் - காந்தளரும்புபோலும் மெல்லிய விரலையுடைய. பாந்தள் - பாம்பு. பண்ணவன் - கண்ணபிரான். பிடிக் கூந்தல் மாவொடு - கூந்தலையுடைய பெண்யானையோடு. குஞ்சரம் - ஆண் யானை. தடத்து - தடாகத்திடம்.

4268. ஞாலம் - பூமி. பல மின்னுடன் நீலமேகம் கடலில் ஆடல் போல். கண்ணபிரானுக்கு நீலமேகமும் மகளிர்க்கு மின்னும் உவமைகள். தேவியர் - மனைவியர். கோலி - சூழ்ந்து. வாவியிற் குடைந்தனன். குடைதல் - நீர்மூழ்கி விளையாடல்.

4269. வாங்கு - வளைந்த. மருங்கினர் : மனைவியர். நூபுரத்தால் - சிலம்பொலியால். இனமாமென - தம்முடைய இனமென்றெண்ணி. பாங்கர் - பக்கத்தே. மேவி - அடைந்து. நடை - மகளிரின் நடையை. நாணி - வெட்கி.

4270. பூவின் மென்காத் தான்முனம் புள்ளடும்
காவி வண்ணன் வருவது கண்டுகொல்
தாவி நன்மலர் சார்ந்துறை புட்குலம்
வாவி விட்டு மறைந்தன வல்லையே. (சு)

ஷை வேறு.

4271. அல்லியந் தாமரை யாவி சுற்றினர்
பல்லியம் பற்பலர் பாடல் யாழ்பலர்
முல்லையங் குழல்பலர் முழக்கி னார்புகழ்
மல்லடு புயத்தனை வழுத்தி னாரோ. (எ)

4272. மந்தர நிகர்தரு மலையி னான்முனம்
அந்தர மழைதடுத் தாண்ட வாண்டகை
எந்திர நீரெடுத் திலகு தோகையர்
சுந்தரத் தனவரைத் தூவி னானரோ. (அ)

4273. விரைதரு சிவிறிநீர் மின்ன னார்தன
வரைதரு மாற்றின்மா மாயன் றாரைநீர்
நிரைதரு மழைக்கெழி னிறத்தி னன்றியும்
உரைதரு தொழிலினு முவமை யாயினன். (கூ)

---

4270. பூவின் - தாமரைப் பூவைப்போன்ற. காத்தால் - கையால். முனம் - முன்பு. புள்ளடும் - பகாசுரனைக் கொன்ற. காவிவண்ணன் - கண்ணபிரான். மலரில் சார்ந்து உறையும் புட்குலம் வாவியை விட்டுத் தாவி மறைந்தன.

4271. அல்லி - அகவிதழை யுடைய. தாமரை விளங்கும் ஆவி; ஆவி- தடாகத்தை. பலர் பல்லியத்தையும் பலர் யாழையும் பலர் குழலையும் முழக்கினர். புயத்தனை - கண்ணபிரானை.

4272. நிகர்தரு - ஒத்த. மலையினால் - கோவர்த்தன கிரியால். முனம் - முன்பு. அந்தர மழை - ஆகாயத்திற் பொழிந்த மழையை. ஆண்டகை - கண்ணபிரான். எந்திரத்தில் நீரை எடுத்துத் தோகையரது தனமாகிய வரையில் தூவினன். எந்திரம்: நீர்வீசுகருவி.

4273. சிவிறி : நீர் வீசுகின்ற துருத்தி. மாயன் சிவிறிநீரை மின்னனாரது தனமாகிய வரையில் தருமாற்றின். மாயன் - கண்ணன். தருமாற்றின் - தருகின்ற தன்மையால். தாரை நீர் நிரைதரு மழைக்கு - நீர்த் தாரையை வரிசையாகச் சொரிகின்ற மேகத்துக்கு. நிறத்தி னன்றி - நிறத்தால்மட்டும் அல்லாமல், தொழிலினும் - நீரைத்தரும் செய்கையாலும். மாயன் மின்னனார்தனவரையில் நீரைத் தருமாற்றால், நிறத்தாலன்றித் தொழிலாலும் மேகத்திற்கு உவமையாயினன்.

4274. மங்கையர் துகிலுற மாய னங்கையால்
குங்குமச் சிவிறிநீர் கொண்டங் கெற்றலுங்
அங்கா வல்குலி னழகு தோற்றலால்
நங்கையர் வாவியி னாணி மூழ்கினர். (௧0)

4275. நீரிடைக் குளித்தெழு நேய மங்கையர்
வேரியங் குழலினிற் றாரை மேவலால்
ஓரெழு தினம்பொழிந் துருத்த வென்றெழு
காரின்மேற் பொருவதோர் காட்சி போன்மரோ. (௧௧)

4276. தொண்டைவா யினர்முகந் தோற்றல் பூந்தடம்
அண்டர்கோ னடைதலு மதிச யம்பெறக்
கண்டுசே தாம்பனீள் காவி பூத்தெழு
புண்டரி கங்களும் பூத்த போலுமே. (௧௨)

4277. மாக்கருங் கண்ணியர் வளைந்த வண்குழற்
றேக்கமழ் மலர்நனி சிதற வாடலால்
காக்களின் மாங்களுங் கமழும் வல்லியிற்
பூக்களும் பூஞ்சுனை பூத்த போலுமே. (௧௩)

4278. மாக்கரும் புயல்புய மகிழ்ந்து நோக்குமவ்
வேற்கண்மங் கையர்முகம் விளங்கன் மீன்மார்

---

4274. துகிலுற - ஆடையில் புகும்படி. மாயன் - கண்ணபிரான். சிவிறியால் குங்கும நீரைக் கொண்டு எற்றலும்; எற்றலும் - வீசுதலும். நாணி - வெட்கி. வாவியில் மூழ்கினர்.

4275. நேயம் - அன்பு. வேரி - வாசனை. குழல் - கூந்தல். தாரை - நீர்த்தாரை. எழுதினம் பொழிந்து உருத்தது கண்ணபிரான் கோவர்த்தனம் எடுத்தபோது. உருத்தல் - கோபித்தல். கார் - மேகம்.

4276. தொண்டைக் கனிபோன்ற வாயையுடைய மகளிரது. பூந்தடத்தில் வாயினரது முகம் தோற்றுதல். அண்டர்கோன் - கண்ணபிரான்; அண்டர் - தேவர். சேதாம்பலும் காவியும் பூத்தெழுகின்ற புண்டரிகங்களும் பூத்தபோலும். மகளிரது வாய்க்குச் சேதாம்பலும், கண்களுக்குக் காவியும், முகத்துக்குத் தாமரையும் உவமைகள். சேதாம்பல் - செவ்வாம்பல்.

4277. மா - பெரிய. வளைந்த - சூடிய. கண்ணியர் - கோவியர். கண்ணியர் குழலில் வளைந்த மலர் சிதறும்படி ஆடலால்; ஆடலால் - நீரில் மூழ்கலால். காக்களின் - சோலையின். வல்லியின் - கொடிகளின். சுனை - சுனைநீர்.

4278. மாக்கரும் புயல் - மிகக்கரிய மேகம்போன்ற கண்ணபிரானுடைய. புயம் - தோளை. மங்கையரது முகம். விளங்கல் - தோன்றுதல்.

பாற்கட னம்பியைப் பார்க்கு மாசையால்
சேற்கணங் களுமலர் சேர்தல் போலுமே. (கச)

4279. விரைதரு தாரினன் விளங்கு தோளிணை
குரைதரு புனலவர் குடைந்து நோக்கலால்
திரைமிசை மாதரிற் சிதைந்து ளேமென
வரைமிசைக் குவளைபோய் மலர்தல் போலுமே. (கரு)

4280. பங்கய வாவிநீர் படிந்த பாவையர்
குங்கும மான்மதங் குளிர்வெண் சாந்தளாய்ப்
பொங்குநீர் செந்நிறம் பொருந்து சோணையும்
கங்கையும் யமுனையுங் கலத்தல் போலுமே. (கசா)

4281. கழையணி தோளினர் காமுற் றவ்வழிக்
குழகனை வளைத்தனர் குழுமி யங்கையால்
எழிலியைப் புணர்ந்துநின் றியங்கு மின்னெனத்
தழுவினர் வாசநீர் தாமுந் தூவினர். (கஎ)

4282. குருதிவேற் கண்ணினர் குங்கு மத்தநீர்
பொருதிறன் மாயவன் புயத்திற் றாவுதல்
வருகதிர் நீலமால் வரையின் மீதிளம்
பருதியின் கதிர்க்குழாம் பாய்தல் போலுமே. (கஅ)

---

மீனம் ஆர் - மீன்கள் பொருந்திய. நம்பியை - கண்ணபிரானை. சேற்கணங்கள் - சேல் மீனின் கூட்டங்கள். மங்கையர் முகத்துக்கு மலரும், கண்களுக்குக் கயலும் உவமைகள்.

4279. விரை - வாசனை. தாரினன் - கண்ணபிரான். குரைதரு - ஒலிக்கின்ற. புனலில் அவர்குடைந்து நோக்கலால்; அவர் - கோவியர். திரை - கடல். மாதரின் - மாதரால். சிதைந்துளம் - கெட்டுள்ளேம் என்று. வரை - மலை. மாதர் கண்ணுக்குக் குவளையும் கண்ணன் தோளினுக்கு வரையும் உவமைகள்.

4280. பங்கயவாவி - தாமரைத் தடாகம். மான்மதம் - கஸ்தூரி. அளாய் - கலந்து. சோணை - சோணை யாறு.

4281. கழையணி தோளினர் - மூங்கில ஒத்த தோளையுடைய கோவியர்; அணி, உவம வுருபு; கரும்பின் வடிவம் எழுதிய தோளினர் எனலுமாம். காமுற்று - விரும்பி. குழகனை - கண்ணபிரானை. குழுமி - திரண்டு. எழிலி - மேகம். மின் - மின்னல். தாமும் வாசநீரைத் தூவினர்.

4282. கண்ணினர் - கோவியர். குங்குமத்தை யுடைய நீரை மாயவனது புயத்தில் தூவுதல். கதிர் - ஒளி. நீலமால் வரையின்மீது - நீல மலையின் மேல். இளம் பருதியின் - பால சூரியனது. குங்கும நீருக்கு இளம் பருதியின் கதிர்க்குழாமும் கண்ணன் புயத்திற்கு நீலமலையும் உவமைகள்.

4283. கன்னியந் துளவணி கண்ணன் மேனிமேல்
பொன்னவி ரணியினர் பொழிதல் வாசநீர்
மின்னினங் களுகனி மிடைந்து மேகமேல்
துன்னுவெண் டாரைநீர் சொரித ரேற்றுமே. (கசு)

4284. நீளொளிப் புயத்தினீர் நிறைந்த கங்கையாள்
தாளினிற் றவழ்ந்துதற் றகைபெற் றாளென
வாளினிற் பொலிவிழி வாணிப் பேர்நதி
தோளினிற் காண்வரத் தோற்றல் போலுமே. (உ0)

4285. களிதரு கன்னியர் கரையின் மீதுறத்
தெளிதரு புனற்றுளி சிதறல் பூங்குழல்
தளிதரு முகிற்கணஞ் சார்ந்து தண்ணிலா
ஒளிதரு முத்தின முகுத்தல் போலுமே. (உக)

4286. இன்னணம் புனல்விளை யாடி யின்னகைக்
கன்னன்மென் றனையசொல் லியருங் கண்ணனும்
வன்னநுண் டுகின்மலர் மாலை சாந்தெழிற்
பொன்னணி மணியணி புனைந்து வைகினர். (உஉ)

---

4283. கன்னி - இளமை. பொன் அவிர் அணியினர் - பொன் விளங்கிய ஆபரணத்தை யணிந்த கோவியர். அணியினர் வாசநீரைக் கண்ணன் மேனிமேல் பொழிதல். மிடைந்து - செறிந்து. துன்னு - நெருங்கிய. கண்ணன் மேனிக்கு மேகமும், மகளிர் நீரைச் சொரிதற்கு மின்னல் நீரைச் சொரியும் தன்மையும் உவமைகள்.

4284. புயத்திலுள்ள நீர்; புயம் - கண்ணபிரானுடைய தோள். தாளினில் தவழ்ந்து கங்கையாள் தகைபெற்றாள் என; தாளினில் - கண்ணபிரானுடைய பாதத்தில் (இது வாமனாவதார நிகழ்ச்சி.) தகை - சிறப்பு. என - என்று கருதி. வாளினிற் பொலி விழி வாணி - வாளைப்போல் பொலிகின்ற கண்ணையுடைய சரசுவதி. வாணிப் பேர்நதி - சரசுவதி யாறு. தோளினில் காண்வர - கண்ணபிரானுடைய தோளில் அழகு விளங்க.

4285. கன்னியர் - கோவியர். தெளிதரு - தெளிந்த. தளிதரு - துளியைத் தருகின்ற. முகில் - மேகம். உகுத்தல் - சொரிதலை. கன்னியாது பூங்குழல் புனற்றுளியைச் சிதறுதல், முகிற்கணம் முத்தினத்லத உகுத்தல் போலும்.

4286. இன்னணம் - இவ்வாறு. இன்னகைக் கன்னல் மென்றனைய சொல்லியர் - இனிய பற்களையும், கரும்பை மென்றாற் போன்ற இனிய சொல்லையுமுடைய மகளிர். வன்ன நுண் துகில் - நிறத்தையுடைய நுண்ணிய ஆடை. பொன்னணி - பொன்னாபரணம்.

4287. வெண்ணகை மடந்தையர் விளங்கு நல்லெழிற்
கண்ணனை யருள்பொழி கமலக் கண்ணனை
அண்ணலை யேநினைக் தழிவி லாநெறி
நண்ணின ரத்திற னவிலு வாமரோ. (உ௩)

தரவு கோச்சகக் கலிப்பா.

4288. பள்ளத்தி னிற்பாந்து பாய்புனல்போன் முன்னமளை
கள்ளத்தி லுண்டகன்ற கண்ணனுழை போய்த்திரும்பா
உள்ளத்த ராகியொப்பி லுருவமடவார்விரக
வெள்ளத்தி னுள்ளழுந்தி மெலிந்துசில விளம்புவால். (உ௪)

4289. மன்றலெறி நறுந்துளவ மதுமாலை வேட்டுருகித்
தென்றலுழு வைப்போத்தாற் றெருமாலுற் றேமெனவே
தன்றுகொடு கனியுதிர்த்த கண்ணனெழில் காதலித்தோ
அன்றிலெழிற் குலமெல்லா மயர்ந்துறங்கா தார்ப்பதுவே. (உ௫)

4290. பண்ணீர்மை கொண்டசெய்ய பவளவிதழ் வாய்மலராள்
எண்ணீர்மை கொண்ட விருகடைக்க ணுலெளியேம்
உண்ணீர்மை கொண்ட வொருமுகிலை யுண்ணினைந்தோ
கண்ணீர்மை சிந்தக் கரைவாய் கழறுயே. (உ௬)

---

4287. மடந்தையர் - கோவியர். அண்ணலையே - பெருமை பொருந்தியவனையே. அழிவிலா நெறி - முத்தி வழியை.

4288. பள்ளத்தினிற் பாய்கின்ற புனல்போல். அளையைக் கள்ளத்தினல் உண்டு அகன்ற கண்ணன்; அளை - வெண்ணெய். கள்ளம் - திருட்டு. புனல்போல் கண்ணனுழைபோய்த் திரும்பாத உள்ளத்தாகி. ஒப்பில் உருவ - ஒப்பில்லாத வடிவத்தையுடைய. விரக வெள்ளம் - வேட்கையாகிய வெள்ளத்தில்.

(பி - ம்) 2. தங்கள் கண்ணன்.

4289. மன்றல் - வாசனை. மது - தேன். தென்றலுழுவைப் போத்தால் - தென்றற் காற்றாகிய ஆண்புலியால்; "தென்றலம் புலிவாய்" (2915); "தென்றற்புலியே" (கம்ப. க. 21: 7.) தெருமரல் - மனஞ் சுழலுதல். காதலித்தோ - காதல் கொண்டோ. அன்றி லெழிற்குலம் - அன்றிற் பறவையின் அழகிய கூட்டம். அயர்ந்து - சோர்வுற்று.

4290. பண்ணீர்மை - இராகதன்மை; என்றது மொழியை. மலராள் எண்ணீர்மைகொண்டு - திருமகள் நினைக்கத்தக்க தன்மைகொண்டு. கடைக்கண்ணால் உள் நீர்மைகொண்ட; உள் நீர்மை - உள்ளத்தின் தன்மையை. முகிலை - கண்ணபிரானை. கரைவாய் - முழங்குகின்றாய்; கடலை நோக்கிக் கூறியது இது.

4291. ஆரமணி யீங்கெறிவா யணிவளைகை போகநிற்பாய்
நீரினவி யாத நெடுந்தழலே யுள்ளமைப்பாய்
ஈரமுறு வெண்மதிய மெழுமிரவி லார்த்துறங்காய்
வாரிதியே யெங்களைப்போன் மாயனையேன் வேட்டனையே. ()

4292. கூருய்கொன் மலைநீயுங் கோகனகை சேர்புயலின்
வீறாரும் புயக்குவட்டின் மேவமனம் வைத்தனையோ
மாறாது சாந்தெறிந்து மாமழைக்க ணீரருவி
ஆறாகி யொழுகுபரி சசையாமே நிற்குதியே. (உஅ)

4293. கண்ணனெனுங் கருணையலைக் கார்க்கடலைக் காணாமல்
எண்ணமிக யாக்கைநனி யிளைத்தயரு மெங்களைப்போல்
தண்ணென்னு நீர்க்கடலாந் தலைமகனைக் காணாமே
வண்ணநதி காணீரும் வற்றிமெலி வுற்றீரோ. (உகூ)

4294. தாதலருந் தேமாவின் றளிருருந்து கோகிலமே
ஓதுநசை யுற்றோர்க ளுனைவெறுப்ப ரானாலும்
கோதறுதீங் குழையிசைத்த கொண்டலொத்துக் கூவுதலால்
காதல்பெற நினக்கென்னை கைம்மாறு செய்குவமே. (௩0)

4291. ஆரத்தையும் மணியையும் ஈங்கு எறிவாய். வளை கைபோக - சங்கம் உன்னைவிட்டு நீங்க. நீரின் அவியாத நெடுந்தழலை - நீரால் அவியாத பெரிய வடவாமுகாக்கினியை. ஈரம் - குளிர்ச்சி. மதியம் எழுகின்ற இரவினில் ஆர்த்து உறங்காய். வாரிதியே - கடலே. மாயனை - கண்ணபிரானை. விரகதாபம் கொண்ட மகளிர், மாலைகளையும் வளையலையும் நீக்கிச் சந்திரனை வெறுத்து உறங்காமல் விழித்திருப்பர்.

4292. மலை : விளி. கோகனகை சேர்புயலின் - இலக்குமி சேர்கின்ற திருமாலின். வீறு ஆரும் புயக்குவட்டின் - பெருமை பொருந்திய தோளாகிய மலை உச்சியில். மாறாது - இடையறாமல். கண்ணீராகிய அருவி ஆறாகி ஒழுகுகின்ற பரிசு ; பரிசு - தன்மை.

4293. கருணையாகிய அலையையுடைய கடலை. எண்ணம் மிக - கவலை மிக்கிட ; கவலையாவது காணவேண்டுமென்ற நினைவு. யாக்கை - உடல். அயரும் - சோர்கின்ற. தண் - குளிர்ச்சி. கடலாகிய தலைமகனை. நதிகாள் : விளி. நீரும் - நீங்களும் ; நீரும் : (சிலேடை.) வற்றி - வற்றுதலுற்று.

4294. தாது அலரும் - தாதுக்கள் விரிந்த. தேமா - ஒருவகை மாமரம். கோகிலம் - குயில். நசை - விருப்பம். குழை - வேய்ங்குழல். கொண்டல் - கண்ணபிரான். காதல் - அன்பு. கைம்மாறு என்னை செய்குவம் - பிரதி உபகாரம் என்ன செய்வோம்.

4295. நந்தாது வளியருந்து நாகணையின் மீதுதுயில்
கொந்தார் நறுந்துளவக் குரிசிலுடன் கூடினையோ
சந்தா டவிமேற் றவழ்ந்துவருந் தண்ணெனுஞ்சீர்
மந்தாநில மெனுங்கால் வருத்துதனின் னீர்மைத்தோ. (௩க)

4296. மூரனில வாலந்தண் முகமதியான் மோகவிருள்
சேரும்வகை யேயெமக்குச் செய்தகன்ற மாயவனை
ஈரமதி யேநீயு மெய்தமதி யுண்ணினைந்தோ
காரி நள்கால் சிக்கவரு கலையிழந்து வாடுவதே. (௩உ)

4297. போதிருக்கும் புரிகுழலாள் புகழ்ந்துபுணர் மான்மருவும்
தூதுரைக்க வந்தனையோ தோயானீங் கும்மையெனும்
தீதுரைக்க வந்தனையோ செங்கால மடவனமே
எதுரைக்க வந்தாய்நீ யியம்புதியென் றேதினரால். (௩௩)

கலிவிருத்தம்.

4298. கொத்த லர்ந்த கொழுந்தொடைப் பூங்குழற்
றத்தை மென்மொழி யார்தவ மென்சொல்கேன்
மத்த வெங்கரி மாய்த்தவம் மாயனை
இத்தி றன்புகன் றெய்தினர் முத்தியே. (௩ச)

---

4295. நந்தாது - கெடாமல். வளி அருந்தும் - காற்றை உண்ணும். நாகணையின் மீது - ஆதிசேடனாகிய படுக்கையின் மீது. கொந்து - கொத்து. குரிசில் - கண்ணபிரான். சந்தாடவி - சந்தனச் சோலை. தண்ணெனும் - குளிர்ந்த. மந்தாநிலம் எனும் கால் - தென்றற்காற்று; விளி. தவழ்ந்து வருகின்ற மந்தாநிலம். கண்ணபிரானுடன் கூடினமையால் நீயும் வருத்துகின்றாயோ என்றவாறு. நீர்மை - தன்மை.

4296. மூரல் நிலவால் - பற்களாகிய நிலவினால். முகமாகிய மதியால். மோகமாகிய இருளை. யாம் சேரும்வகை. மாயவனை - கண்ணபிரானை. மதியே - சந்திரனே; விளி. எய்த மதியுள் நினைந்தோ - கண்ணனை அடையப் புத்தியுள் எண்ணியோ. இருள்கால் சிக்கவருகலை - இருளை அழிக்க வருகின்ற கிரணக் கலையை; கலை - சந்திர கலை; ஆடை யென்பது மற்றொரு பொருள்.

4297. போது - தாமரையில். குழலாள் - திருமகளை. புணர்கின்ற மால் - கண்ணபிரானை. மருவும் - யாங்கள் சேர்தற்குக் காரணமான. இங்கு உம்மைத் தோயான் எனும் தீதுரைக்க வந்தனையோ; தோயான் - சேரான். செங்காலையுடைய அன்னமே; விளி. எது - எதை.

4298. தொடை - மாலையையுடைய. தத்தை - கிளியைப்போன்ற. மொழியார் - கோவியரது. என் சொல்கேன் - என்னவென்று கூறுவேன். கரி - குவலயாபீடம். மாயனை - கண்ணபிரானை. முத்தி எய்தினர்.

4299. நண்ணு முத்திமா லுைமந் தனைச்சொலின்
வண்ண முற்ற மணிநிற வண்ணனைக்
கண்ணிற் கண்டுவ் கலந்துங் கழறியும்
உண்ணி னைத்தும்வீ டுற்ற தரிதுகொல். (௩௫)

4300. நல்ல றத்துரு வாகிய நாயகன்
மல்ல லுற்ற வறம்பொருள் வாழ்வுடன்
இல்ல றத்தினர்க் கின்பமு முண்டெனச்
சொல்ல லுற்றனன் போன் றுதுலங்கினான். (௩௬)

4301. பாரின் மேற்பகை பாற்று பசுந்துழாய்
வேரி யந்தொடை விண்ணவன் வேட்டவர்
ஈரெண் ணுயிர ரென்றுசொ லெண்ணெடும்
சேரு நூற்றிரு நால்வர் தெரிக்கினே. (௩௭)

4302. மன்னு மொவ்வொரு மங்கைய ரைந்தொடைந்
தென்னு நல்லெழி லேய்ந்த புதல்வரைப்
பொன்ன கர்ப்புல வோர்புகுந் தானெனப்
பன்னு தெண்டிரைப் பாரி லளித்தனர். (௩௮)

4303. அரச கூறு மரிவையர் தங்களில்
பெருமை சேர்ந்து பிறங்கு முதன்மையோர்

---

4299. மாலின் நாமந்தனைச் சொல்லின் முத்தி நண்ணும்; மால் - கண்ணபிரான். நண்ணும் - கிடைக்கும். வண்ணம் - நிறம். மணிநிற வண்ணனை - கண்ணபிரானை. கண்டும் - பார்த்தும். கலந்தும் - கூடியும். கழறியும் - பேசியும். வீடு உற்றது அரிதுகொல் - முத்தியடைந்தது அரியதோ.

(பி - ம்) 4. வீடோங்கல்.

4300. அறத்துருவாகிய நாயகன்: கண்ணபிரான். மல்லல் - வளம். வாழ்வு - இல்வாழ்க்கையி னின்பம். இன்பம் - முத்தி யின்பம். இல்லறத்தினர்க்கு அறம், பொருள், வாழ்வுடன் இன்பமும் உண்டெனச் சொல்லலுற்றனன்போல்.

4301. பகைபாற்று - பகைவரை அழிக்கின்ற. விண்ணவன் - கண்ணபிரானை. வேட்டவர் - மணந்தவர். வேட்டவர் ஈரெண்ணாயிரத்து நூற்றெட்டு மங்கையர்.

4302. மன்னும் - பொருந்திய. ஐந்தொடைந்து என்னும் - பத்து என்கின்ற. புலவோர் - தேவர். பாரில் - பூமியில். ஒவ்வொரு மங்கையரும் பத்துப் புதல்வரை அளித்தனர்.

4303. அரச: பரிக்ஷித்து; விளி. அரிவையர் - கண்ணபிரானுடைய மனைவியர். பிறங்கும் முதன்மையோர் - விளங்கிய பட்டத்தேவியர்.

உருவ மார்ந்த வுருக்கு மிணிப்பெயர்த்
திருவ ளுண்முதற் செப்புமவ் வெண்மரே. (நகூ)

4304. கண்ண னல்கிய காதலர் தம்மினற்
பண்ண மைந்த பரிதிகழ் மாரதர்
அண்ண லம்மல ரைங்கணை வேண்முதல்
எண்ணி ரெண்டொ டிரண்டின ரென்பவே. (சo)

கலிநிலைத்துறை.

4305. அன்ன மைந்தருக் கரும்பெயர் கூறினைங் கணைவேள்
பன்ன ரும்புகழ் சேரநி ருத்தனற் பானு
மன்னு மித்திரன் காந்திமான் சாம்பன்வேல் விரூபன்
பொன்னங் குன்றன புயப்பிரக பானுபுட் கரனே. (சக)

4306. அருண னற்கவி வேதபா குப்பெய ராசன்
விருகன் சித்திர பானுவேன் மித்திர விந்தன்
மரும லர்த்தொடை மதிச்சுனந் தனன்சுர தேவன்
இருநி லத்தவர் புகழ்நியக் குரோதனென் றிசைப்பார். (சஉ)

4307. தோடு வாய்விரி பூங்கணை வேளெனுந் தோன்றல்
மாட நீணகர் மாதுலன் மகண்முலை மணந்து

---

உருவம் - அழகு. திருவனாள் - இலக்குமி போன்றவள். எண்மர் - எட்டுப் பேர்.

4304. நல்கிய - பெற்ற. காதலர் தம்மில் - பிள்ளைகளில். பண்ண மைந்த - ஆயத்தம் பண்ணப்பட்ட. பரி - குதிரை. மாரதர் - மகாரதர். அண்ணல் - பெருமை பொருந்திய. மலராகிய ஐங்கணையையுடைய வேள்: பிரத்துமனன். எண்ணிரண் டொடிரண்டு - பதினெட்டு. பதினெண்ம ராவார்: 1. பிரத்துமனன், 2. அநிருத்தன், 3. தீப்திமான், 4. பானு, 5. ஸாம்பன், 6. மது, 7. பிருஹத்பானு, 8. சித்திரபானு, 9. விருகன், 10. அருணன், 11. புஷ்கரன், 12. வேதபாஹு, 13. சுருததேவன், 14. ஸுநந்தனன், 15. சித்திரபாஹு, 16. விரூபன், 17. கவி, 18. நியக்ரோதன். இது முதனூலிற் கண்டது.

4305. கூறின் - கூறுமிடத்து. ஐங்கணை வேள் - பிரத்துமனன். காந்திமான் - தீப்திமான். புயத்தையுடைய பிரகபானு. பிரகபானு - பிருகத்பானு.

(பி - ம்) 3. மன்னு நல்லெழிற் காந்திமான்.

4306. தொடை - மாலை. மதியையுடைய சுநந்தனன். சுரதேவன்- சுருததேவன்.

4307. தோடு - இதழ். தோன்றல் - பிரத்துமனன். மாதுலன் மகள்- உருக்குமியின் பெண்ணை. பீடு - பெருமை. கரி - யானையின். ஆடல்

பீடு சேர்பதி னுயிரங் கரிவலி பெறுஞ்சீர்
ஆடல் சாலநி ருத்தனை யளித்தன னன்றே. (சஉ)

4308. ஐய தாரணி யநிருத்த னளித்தரு ளரசன்
வைய மேபுகழ் வச்சிரன் வச்சிர னெனும்பேர்ச்
செய்ய தாமரைக் கண்ணினு னொருவனுந் தெரித்த
வெய்ய சாவத்திக் குய்ந்தனன் விளிவுறு தன்றே. (சச)

4309. வாரி சூழ்புவி முழுவதுங் காத்தழி மதுப்பாய்
தாரி னுனெழில் வச்சிர னளித்தரு டநயன்
காரி னேர்கொடைத் தடக்கையான் கயல்விழிமடவார்
ஏரி னுன்மத னெனுமிறை பிரதிவா கென்ப. (ச௫)

4310. பிரதி வாகுவென் றுரைதரு பெயரினன் பெறுஞ்சேய்
இரதி நாதனு மேக்கறு மெழிறிக ழிறையோன்
கரதி சாமுகக் களிறனன் கலியிருள் காயும்
வரதி வாகரன் மானவேற் சுவாகுமன் னவனே. (சசு)

4311. தேங்கொ டாரினன் சுவாகுதற் றவத்தருள் சிறுவன்
ஓங்கு மந்தரத் தடம்புய னுக்கிர சேனன்
வாங்கு விற்கையம் மன்னவன் மதலைவா ளரவம்
தாங்கு மிங்கிலம் புரந்தருள் புரிசத சேனன். (சஎ)

---

சால் - வெற்றி மிக்க. அநிருத்தன் : கண்ணபிரானுடைய மகன்வேறு, இவன் வேறு.

4308. ஐய தார் - அழகுபொருந்திய மாலையை. வச்சிரனெனும் பேரை யுடைய ஒருவன். தெரித்த - தெரியச்செய்த. வெய்ய - கொடிய. சாவத் தீக்கு - சாபமாகிய தீக்கு. விளிவுறாது உய்ந்தனன்; விளிவுறாது - இறவாமல்.

4309. வாரி - கடல். காத்த தாரினனாகிய வச்சிரன். அழிமது - ஒழுகுகின்ற தேன். தநயன் - பிள்ளை. கார் - மேகம். ஏர் - அழகு. மதன் - மன்மதன். மடவார்க்கு ஏரினால் மதன். எனும் - என்று கூறுகின்ற.

4310. பெறும் சேய் - பெற்ற பிள்ளை. இரதி நாதன் - மன்மதன். ஏக்கறும் எழில்திகழ் - ஆசையால் தாழ்வதற்குக் காரணமான அழகு விளங்குகின்ற. கரத்தையுடைய திசாமுகக் களிற்றைப் போன்றவன். திசாமுகக் களிறு - திசையானைகள். காயும் - கெடுக்கின்ற. வரத்தையுடைய திவாகரன் ; திவாகரன் - சூரியன். பிரதிவாகுவின் மகன் சுவாகு.

4311. தேம்கொள் - தேனைக் கொண்ட. தாரினனாகிய சுவாகு அருளிய சிறுவன் உக்கிரசேனன். மந்தரமலைபோன்ற தடம்புயத்தை யுடைய உக்கிரசேனன். அம்மன்னவன் - உக்கிரசேனனுடைய. மதலை - மகன். புரந்தருள் புரி - காத்து அருள்கின்ற. உக்கிரசேனனுடைய மகன் சதசேனன்.

4312. இன்ன வாறுநல் லறத்தின ராயிசை யினாய்க்
கன்னியந் துழாய்க் கருமுகின் மரபினிற் பிறந்தார்
மன்னர் மன்னவ யாதவர் யாவரு மதிக்கின்
பொன்னி னுட்டகத் துறைதரும் புலவர்தங் குழுவே. (சஅ)

4313. வேறு வேறெடுத் தெதுகுல வேந்தர்பேர் விளம்ப
ஆறு கோடியாண் டாயினு மறைவதற் கரிதால்
மாறு நீங்கிய மன்னவ வொன்றுமேன் மருவு
நூறு கோத்திர மாயதவ் வெதுகுல நுவலின். (சகூ)

4314. ஆன்ற சீர்திகழ் யாதவ ரளப்பில ரவருக்
கூன்ற நல்லறி வோதுவித் துயர்தருங் குரவோர்
மூன்று கோடியும் பதினொரு நூறுமுன் மருவ
என்ற வெண்பது மெட்டுமென் றிசைக்குமெண் ணினால். ()

4315. நோற்றி ருந்தய னான்றுதி நுலவு மெட்டா
தூற்றி ருந்தியோ கியருளத் துவட்டெழு மமுதன்
போற்றி ருந்தவர் புங்கவர் புவியினர் காண
வீற்றி ருந்தனன் றுவரையி னெங்கணும் விளங்க. (ருக)

---

4312. அறத்தினாய் - தருமத்தை யுடையராய். இசையினராய் - புகழுடையவராய். கருமுகில் - கண்ணபிரானுடைய. மன்னர்மன்ன : பரிக்ஷித்து ; விளி. யாதவர் - ஆயர். மதிக்கின் - ஆராய்ந்து பார்த்தால். புலவர் - தேவர். தேவர்களே ஆயராய்ப் பிறந்தன ரென்பது கருத்து.

4313. எதுகுல வேந்தாது பேரை வேறு வேறு எடுத்து விளம்ப ஆறுகோடி ஆண்டாயினும் அறைவதற்கு அரிது. மன்னவ : பரிக்ஷித்து ; விளி. எதுகுலத்தை நுவலின் நூற்றொரு கோத்திரமாயது. ஒன்றுமேல் மருவு நூறு - நூற்றொன்று.

4314. ஆன்ற சீர் - நிறைந்த புகழ். அளப்பிலர் - அளவில்லாதவர். யாதவருக்கு அறிவு ஓதுவித்த குரவோர் மூன்று கோடியே ஆயிரத்து நூற்றெண் பத்தெட்டுப்பேர்கள். மூன்று கோடியே எண்ணுயிரத்து எண்ணூறு என்று முதனூல் கூறும். குரவோர் - ஆசிரியர்.

4315. அயனும் அரனும் நோற்றிருந்து நுவலவும் எட்டாது, யோகியர் உளத்தே ஊற்றிருந்து உவட்டெழுகின்ற அமுதன். அயன் - பிரமன். அரன் - சிவபெருமான். நுவலவும் - கூறவும், உவட்டெழும் அமுதன் - பெருக்கெடுத்தெழுகின்ற அமுதம்போன்ற கண்ணபிரான். போற்றுகின்ற பெரிய தவர் ; தவர் - தவசிகள். புங்கவர் - தேவர். துவரையில் விளங்க வீற்றிருந்தனன்.

4316. கொன்பொ ருந்தயிற் கொற்றவ குரைகடற் புவிமேல்
தன்பெ ருங்கதைத் தெள்ளமு தத்தினைத் தவத்தால்
அன்பி னஞ்செவி யகமடுத் தருந்தின ரழியா
இன்ப மெய்துவா னெதுகுலத் துதித்தன னிறையோன். ()

4317. இன்ன மாக்கதை கேட்குந ரிசைக்குந ரெவரும்
மன்ன வேட்டன வேட்டன யாவையு மருவி
மின்னு லாமணி வேலைசூழ் புலம்விற் றிருந்து
பின்னு மால்பாந் தாமமே பெறுகுவர் மாதோ. (ரு௬)

4316. கொன் - அச்சம். கொற்றவ: பரிக்ஷித்து; விளி. தன் கதையாகிய அமுதத்தினைச் செவியகம் மடுத்து அருந்தினவர். அழியா இன்பம் - முத்தியை. எய்துவான் - பெறும்பொருட்டு. இறையோன் எதுகுலத்து உதித்தனன்; இறையோன் - திருமால்.

4317. மன்ன - நிலைபெற. வேட்டன - விரும்பியன. மருவி - பெற்று. விபுலம் - பூமியில். மால் - திருமாலின். பாந்தாமம் - வைகுந்த பதவி.



பதினோராம் கந்தம்

# 1. இருப்புலக்கை பெற்ற அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

4318. எண்ட ரப்பெரி தாகிய யாதவர் குலனும்
மண்டு வெஞ்சமம் விளைத்துயிர் மடிதரப் புணர்த்துப்
பண்டை நீணெறிப் படர்தாக் குறித்தனன் பாவை
வெண்டி ரைக்கட னிலப்பொறை தவிர்த்தருள் விமலன். (க)

4319. தாத லர்ந்தசெந் தாமரை நறுமலர் மணந்த
கோதை சேர்தட மார்பினன் குறிப்பறிந் தாங்குக்
காதி காதலன் முதலிய முனிவரர் களிவண்
டூத மென்முரு குறைத்தபூங் காவின்வந் துற்றார். (உ)

4320. கன்லான் காதலர் கழைசுளி கடாக்களி றனைய
தண்ணந் தாமரைச் சாம்பனைச் சூற்கொள்பெண் ணுருவா
மண்ணி மாதவர் மருங்குபோய் மற்றிவள் பெறுவ
தெண்ணி யோதுமின் யாவையுந் தெரிந்தநீ ரென்றார். (ங)

4321. விரித்த கட்டுரை கேட்டலும் விழுத்தவ முனிவர்
சிரித்து மின்னுமிழ் செம்மணிச் சூட்டுவா ளரவம்

---

4318. யாதவர் குலனும் : உம்மை சிறப்பு. சமம் - போரை. விளைத்து - உண்டுபண்ணி. மடிதரப் புணர்த்து - இறக்கச் செய்து. பண்டை நீள் நெறி - பழைய பெரிய இடம் ; வைகுண்டம். படர்தர - செல்ல. பாவை - பரந்த. பொறை - பாரத்தை. விமலன் குறித்தனன்; விமலன் - கண்ணபிரான்.

4319. தாது - மகரந்தம். மணந்த - கலந்த. கோதை - திருமகள். மார்பினன் - கண்ணனது. காதிகாதலன் - விசுவாமித்திரன். முருகு உறைத்த - தேன் துளித்த.

4320. காதலர் - புதல்வர். கழைசுளி - மூங்கிலாற் செய்யப்பட்ட குத்துக்கோலைக் கோபிக்கின்ற. கடாக்களிறு - மதத்தையுடைய யானை. சூல் - கரு. மண்ணி - அலங்கரித்து. மாதவர் - விசுவாமித்திரர் முதலியோர். இவள் என்றது பெண்ணுருக்கொண்ட சாம்பனை. காதலர், ' நீர் இவள் பெறுவது எண்ணி ஓதுமின் ' என்றார்.

4321. கட்டுரை - வார்த்தையை. விழுத்தவ முனிவர் - சிறந்த தவத்தை யுடைய முனிவர். மின் - ஒளியை. சூட்டு - உச்சி. அரவம் -

பரித்த பாரினில் யாதவ ருயிரெலாம் பருகும்
இருப்பு லக்கையோன் றுயிர்க்குமென் றெடுத்திசைத் தனரால். (௪)

4322. உரைப்ப ருந்திறற் சாபம்வந் தெய்தலு முயிர்த்த
இருப்பு லக்கைகண் டென்செய்து மெனமனங் கலங்கி
விரைப்ப சுந்துணர் வேந்தனுக் குணர்த்திமற் றதனை
அராத்தி ஞற்பொரு தகிர்திரைக் கடலினிட் டனரால். (௫)

4323. வட்ட வெண்டிரை வாரிவீழ் நுண்பொடி யனைத்தும்
விட்ட லர்ந்தவாட் கோரையாய் விளைந்தன வெய்ய
கட்ட முற்பொறி கதுவுவா ளரம்பொரா வரிதா
இட்ட கூர்நுதி யிரும்பைமீன் விழுங்கிய தன்றே. (௬)

4324. விற்ற டக்கையோர் வேட்டுவன் வலையகப் பட்ட
மற்றம் மீனினைக் குறைத்தலு மாங்கதன் வயிற்றின்
உற்ற கூர்நுதி யிரும்புகண் டொள்ளிதென் றுவந்து
புற்ற ராவெனப் புழுங்குவெங் கணைமுகத் தமைத்தான். (௭)

---

ஆதிசேடன். பரித்த - தாங்கிய. பருகும் - அருந்துகின்ற. உயிர்க்கும் - பெறுவாள்.

4322. உரைப்ப அருந்திறல் - சொல்லுதற்கு அரிய திறமை. எய்தலும் - அடைதலும். உயிர்த்த - சாம்பன் பெற்ற. என் செய்தும் - என்ன செய்வோம். விரை - வாசனை. துணர் - பூங்கொத்து. வேந்தனுக்கு - கண்ணனுக்கு. உணர்த்தி - அறிவித்து. அதனை - அவ்வுலக்கையை. பொருது - அராவி. இட்டவர் கண்ணன் காதலர்.

4323. வாரியில் வீழ்ந்த நுண்ணிய பொடி; வாரி - கடல். பொடி - உலக்கையை அராவிய பொடி. வாட்கோரை - ஒருவகைக் கோரை. அரம் பொரா - அரத்தால் அராவ. அரிதா - இயலாததாக. நுதி - நுனி.

4324. வேட்டுவனது வலையில். அம்மீன் - அவ்விரும்பை விழுங்கிய மீன். குறைத்தலும் - அறுத்தலும். அதன் - அம் மீனுடைய. ஒள்ளிது - சிறந்தது. அராவென - பாம்பு என்னும்படி; கணைக்குப் பாம்பு: "பாவகாரியருயிர்ப் பதமலா திரைபெறு பகழி நாகம்" (கம்ப. 6. மந்திரப். 88.) கணைமுகத்து - அம்பின் நுனியில்.



# 2. வசுதேவற்கு நாரதர் தத்துவம் உரைத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

4325. அன்ன நாளினி லழல்சுடப் பசும்பொன்வார்ந் தன்ன
இன்ன ரம்புளர் யாழ்முனி வருதல்கண் டெதிர்போய்
மன்னர் மன்னவன் மானவேற் றிறல்வசு தேவன்
பொன்னந் தாதுதாழ் போதுதூஉய்ப் பணிந்தனன் புகல்வான். (க)

4326. அரிது மானிட யாக்கைபெற் றிடல்பெறும் யாக்கை
எரியு மின்னென விறந்திடு மிறந்திடா முன்னம்
மாக தப்பசும் பாசடைத் துளவநாண் மாலைக்
கரிய வன்றனக் கன்பரைக் காண்டலோ வரிதே. (உ)

4327. விரிதி ரைத்துயின் மெய்ப்பொருள் வெளிப்படு ஞான்று
வருதி நீயொரு மதலையா யென்றதை யல்லால்
தருதி யாலுயர் தருநெறி யென்றுகேட் டிலனால்
அருள வேண்டும்வீ டுறுதிற னெனமுனி யறைவான். (ங)

4328. மனுகு லத்தொரு மதியெனத் தோன்றிய விடபன்
தனயர் நூற்றுவர் தங்களிற் கவிமுத லாக

4325. வார்தல் - ஒழுகுதல்; பொன் வார்ந்தன்ன நரம்பு: (பெரும் பாண். 15). உளர்தல் - தடவுதல். யாழ்முனி - நாரதன். மானவேல் - பெருமை மிக்கவேல். போது - மலர்களை. பணிந்தனன் - பணிந்து.

4326. மானிட யாக்கை பெற்றிடல் அரிது. எரியும் - ஒளி விடுகின்ற. மின் என - மின்னலைப்போல; "மின்னி னிலையில, மன்னுயிராக் கைகள்" (திருவாய்மொழி). நாண்மாலை - அன்று அலர்ந்த மாலை. கரியவன் - திருமால்.

4327. மெய்ப்பொருள் - திருமால். வெளிப்படு ஞான்று - என்முன் தோன்றியபோது. நீ மதலையாய் வருதி என்றது அல்லால்; நீ என்றது திருமாலை. வருதி - வருவாயாக. உயர்தரு நெறிதருதி என்று கேட்டிலன்; தருதி - தருவாயாக. கேட்டிலன் - கேட்கவில்லை. வீடுறுதிறனை அருளவேண்டும். என - என்று வசுதேவன் கூற. முனி - நாரதன்.

4328. மதி - சந்திரன். இடபன் - ரிஷபன். கவி - சுக்கிரன்,

வினையி னீங்கிய விழுத்தவ முனிவரொன் பதின்மர்
சினவு வேற்றிற னிமிமக மியற்றுழிச் சேர்ந்தார். (௪)

கலிவிருத்தம்.

4329. புவிமீ துவணங் கிமகம் புரிவோன்
பவவேர் தெறுபா கவதர்க் குரிய
தவமா நெறிதான் மொழிவீ ரெனலும்
நவயோ கியரோ தினர்நல் லறனே. (௫)

4330. மதமா கரிமுன் சொலவந் தருள்கார்
கதையார் நறையுண் டுகருத் தொடுபல்
விதமா கும்வினைப் பயன்விட் டெழில்சேர்
பதநா ளும்வணங் குநர்பா கவதர். (௬)

4331. அறைகின் றசரா சரம்யா வுமெழில்
நிறைகின் றவுருத் திருநே யமுறும்
இறையென் றறிகின் றவிலங் குமுளத்
துறைகின் றவருத் தமபா கவதர். (௭)

4332. நிகரின் றிவளர்ந் தநெடுந் திருமால்
பகருந் தனிபத் திமைபா கவதர்
புகரொன் றியபுந் தியர்பே தையருள்
நகலொன் றியகட் பிகல்வான் கருணே. (௮)

---

முனிவர் ஒன்பதின்மர் - ஒன்பது முனிவர்; பிராசேத சாக்கியர் எனப்படுவர். நிமி என்பவன் மகம் இயற்றுழி; மகம் - யாகம். ஒன்பதின்மர் சேர்ந்தார்.

4329. மகம்புரிவோன் - நிமி. பவவேர் தெறு பாகவதர்க்கு - பிறப்பின் வேரை அழிக்கும் பக்தர்களுக்கு. தவமா நெறி - தவமாகிய பெரிய வழியை. மொழிவீர் - சொல்லுங்கள். நவயோகியர் - கவி முதலிய ஒன்பது முனிவர். நல்லறனே ஓதினர்.

4330. கரி - கசேந்திரன். சொல - பெயரைச் சொல்ல. கார் - மேகம் போன்ற திருமாலது. கதையாகிய நறையை யுண்டு; நறை - தேன். வினையினது பயனை விட்டு. எழில் - அழகு. பதம் - திருமாவின் பாதங்களை. உண்டு, விட்டு, வணங்குநர் பாகவதர்; பாகவதர் - பகவானிடம் அன்பு செலுத்துபவர்.

4331. அறைகின்ற - சொல்லப்படுகின்ற. உரு - உருவத்தை யுடைய. நேயம் - அன்பு. இறை - திருமால். 'சராசரம் யாவும் இறை' என்று அறிகின்ற இலங்கும் உளத்துடன் உறைகின்றவர் உத்தம பாகவதர்; இலங்கும் - விளங்குகிற.

4332. நிகர் - ஒப்பு. புகர் - குற்றம்.

4333. என்னும் முறையின் னனவன் னவர்பால்
நண்ணும் படிசெய் யுலத் தினர்தாம்
தண்ணந் துணர்துன் னிபதா மமணி
திண்ணம் புயசெப் புறுமத் திமரே. (கூ)

4334. துதிபெற் றமலர்த் துளவோன் வடிவாய்
வதிவுற் றவுருக் களின்மாத் திரமே
இதமுற் றுறைகின் றனனென் றுதொழும்
விதமுற் றவர்மே வுபிரா கிருதர். (க0)

4335. அறமார் மனையா ரொடுமன் புசெயும்
திறமா ரெழின்மே வுசிறார் களொடும்
இறையோ யிவண்யா னெனதென் பதற
உறைவோர் களுமுத் தமபா கவதர். (கக)

4336. தருமா லைமலர் துளவத் தணியார்
உருமாலை நிகர்த் திடுமொள் ளொளிசேர்
திருமா லைவழுத் துநர்செய் யின்வினை
அருமா லைபொழித் தவரார் வதுகேள். (கஉ)

4333. தண்ணந்துணர் - குளிர்ந்த பூங்கொத்து. தாமம் - மாலை. அம்புய - அழகிய தோள்களையுடையவனே.

4334. துளவோன் - திருமால். வதிவுற்ற - இயற்றப் பட்டுள்ள. உருக்களில் - பிம்பங்களில். இதம் - நன்மை. விதம் - இயல்பு. துளவோன் வதிவுற்ற உருக்களின் மாத்திரம் உறைகின்றனன் என்று தொழுபவர் பிராகிருதர்.

4335. அறமார் மனையார் - தருமம் நிறைந்த மனைவியர். சிறார் - புதல்வர். இறையோய் - நிமியை நோக்கி: விளி. இவண் - இவ்வுலகில். யான் எனது என்பது - அகங்காரம், மமகாரம். அற - நீங்க. இறையோய்! இவண் மனையாரொடும், சிறுரொடும், யான் எனது என்பதற உறைவோர்களும் உத்தம பாகவதர்.

(பி - ம்) 3. இறையோன் பொருள்.

4336. அணியார் - அலங்காரத்தை யுடையவர். உருமாலை - நிறம் பொருந்திய மேகத்தை ; மால் - மேகம் ; (நந்தைசவா. 164.) ஒள்ளொளி - சிறந்த ஒளி. மாலை ஒழித்தவர் அணியாராகிய திருமாலை வழுத்துநராய் வினை செய்யின் ஆர்வது கேள் ; மாலை - மயக்கத்தை, ஆர்வது - அடைவதை.

4337. கருமத் தையியற் றுகருத் தருளத்
தருண்முற் றவழுக் கறுமற் றவுடன்
உரமுற் றறிவுற் றிடுமுற் றிடினோர்
பிரமத் தொடுமொன் றுவர்பின் னமுறார். (கங)

4338. பிழைபுற் றமணத் தொடுபே தைமையால்
விழைவுற் றுவிகன் மம்விளைத் தவர்கள்
தழைவுற் றசமன் படர்தள் ளவுளம்
குழைவுற் றுவருந் துவர்கும் பிதொறும். (கச)

வேறு.

4339. மங்கை பாகனை வாணி கணவனைப்
பொங்கு நோன்பு புரிகுந ராயினும்
அங்க வர்க்குள மாரிறை மாயனென்
றங்க ணேத்துந ராய்பயன் கொள்வரே. (கரு)

4340. போற்று கின்ற புனித் மறைமுறை
ஏற்று நின்றங் கியற்றல் கருமமாம்
சாற்று கின்ற மறைமுறை சார்ந்திடா
தாற்று கின்ற தறையின்வி கன்மமே. (கசு)

---

4337. கருமத்தை - வினையை. உளத்து - மனத்தில். அருள் - நல்வினை. முற்ற - நிறைய. அழுக்கு - குற்றம். அறும் - கெடும். உரம் - வலிமை. உற்றிடும் - வந்தடையும். ஒன்றுவர் - பொருந்துவர். பின்னம் - பிரமத்துடன் வேறுபாட்டை. உறார் - அடையமாட்டார்.

(பி - ம்) 4. மின்னமுறார்.

4338. பிழை - குற்றம். பேதைமை - அறியாமை. விகன்மம் விழைவுற்று விளைத்தவர். விகன்மம் - தீச்செயல்கள். விழைவுற்று - விரும்பி. சமன்படர் - யமபடர்கள். கும்பி - நரகம். விளைத்தவர் படர் தள்ளக் கும்பி தொறும் வருந்துவர்.

4339. மங்கைபாகன் - உருத்திரன். வாணிகணவன் - பிரமன். நோன்பு - விரதம். அவர்க்கு - ருத்திரனுக்கும் பிரமனுக்கும்; உள்ளத்தில் ஆர்ந்த இறை மாயன்; இறை - கடவுள். மாயன் - திருமால். ஏத்துநர்களாய் - துதிப்பவராய். பயன் - மோட்சத்தை. இப்பாடல் ஓர் ஏட்டில் காணப்படவில்லை.

4340. மறை - வேதம். இயற்றல் - செய்தல். கருமம் ஆம். மறைமுறை சார்ந்திடாது - வேத முறையை அடையாமல். ஆற்றுகின்றது - செய்யப்படும் காரியம்.

4341. ஒருக ருமமு முள்ளுவ தாற்றிடா
தரிதின் வைகல கன்மமென் ருகுமால்
கரும மாற்றுழிக் கார்நிற வண்ணன்மேல்
புரியு மன்பில தேற்புக செய்தமே. (கஎ)

4342. உழுது வண்டுறை தாரு வோய்புவி
முழுது முண்ட முதல்வனே யேயன்பின்
தொழுது தூய தொழில்புரி வோரொரு
பழுது மின்றிப் பயன்பெறு வாரரோ. (கஅ)

4343. என்றி யோகியர் கூற விறையவன்
மன்ற மாணிசை யான்மக்க ளுய்யுமா
றென்று பேரவ தார முளங்கொள
நன்று கூறு மெனவு நவின்றனர். (ககூ)

4344 அலகி லாவறி வாயவ ரும்பொருள்
உலகெ லாமுட லாகவு வந்துறைந்
திலகு பேர்விராட் டென்னவு முத்தொழில்
குலவு மும்மை யுருவமுங் கொண்டதே. (உ0)

4345. பூவி னாள்புணர் புங்கவன் றன்கலை
மேவு பூசுரர் மிக்க மறைபயில்

---

4341. உள்ளுவது ஆற்றிடாது - நினைத்தலைச் செய்யாமல்; நினையாமல் என்றபடி. வைகல் - இருத்தல். அகன்மம் ஆகும் - காரியம் செய்யாமலிருத்தல் ஆகும். கருமம் - காரியத்தை. கார்நிகர் வண்ணன் - திருமால். இலதேல் - இல்லையானால். புகர் - குற்றம்.

4342. உரவோய் என்றது நிமியை; விளி. முதல்வன் - திருமால். தூய - தூய்மையான. பழுது - குறைவு.

4343. யோகியர் - கவி முதலியோர். இறையவன் - நிமி. மன்ற - நிச்சயமாக.மாண் - பெருமை. இசையான் - திருமால்; இசை - புகழ். இறையவன் 'இசையோன் அவதாரம் கூறும்' எனவும் நவின்றனர்; நவின்றவர் சுக்கிரன் முதலியோர்.

4344. அலகிலா - அளவில்லாத. பொருள் - திருமால். உறைந்து - தங்கி. முத்தொழில் குலவும் - படைத்தல், காத்தல், அழித்தல் தொழில்களைச் செய்கின்ற. மும்மை யுருவமும் - பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய உருவங்களும். பொருள் விராட்டென்னவும், மும்மை யுருவமும் கொண்டது.

4345. பூவினாள் - திருமகளை. புங்கவன்தன் - திருமாலினுடைய. கலை - அம்சம். பூசுரர் - அந்தணர். மறை - வேதம். தாவிலாத - கேடில்

நாவி னூர்நர நாரண ரென்பவர்
தாவி லாத தவம்புரிந் தார்முனம். (உக)

4346. தவமி யற்றுதல் கண்டு சதமகன்
அவமி யற்ற வரம்பையர் தம்மொடு
நவம மலர்ப்பொழி னண்ணின னண்ணலும்
உவமை யற்ற முனிவ ருணர்ந்தரோ. (உஉ)

4347 உருவ மார்ந்த வுருப்பசி யாதியாம்
அரிவை மாரைப் படைப்பவ ரம்பையர்
பொருவி லாவவர் பொற்பினைக் காண்டலும்
பெருகு காதலிற் பேதுற்றுப் போயினர். (உ௩)

4348. பூணி னோடு பொருந்து மரம்பையர்
நாணி னோடு நடந்தபி னல்லெழில்
ஏணி னோடு மிருந்த புரந்தரன்
பாணி னோடு தொழுதுபரா யினன். (உச)

4349 எவர்க ளேனுந் தவநின் றியற்றுழி
அவர்க ளேயுமைத் தம்மனத் தெண்ணினோர்
பவமு ளூர்பகை நீக்குவ ரென்னின்யார்
அவனி மேனுமக் கும்மனூர் செய்வரே. (உரு)

---

லாத. பூசுரரும் நாவினருமாகிய நரநாரணர் முனம் தவம் புரிந்தார்; முனம் - முன்.

4346. சதமகன் - இந்திரன். அவம் இயற்ற - கேடு உண்டுபண்ண. நவமலர் - புதிய மலர். நண்ணலும் - இந்திரன் அடைதலும். முனிவர் - நர நாராயணர்.

4347. உருவம் - அழகு. ஆர்ந்த - நிறைந்த. அரிவைமாரை - பெண்களை. பொருவிலா - ஒப்பற்ற. அவர் பொற்பினை - உருப்பசி முதலியவரது அழகை. காதலின் - காதலால். பேதுற்று - மயங்கி. முனிவர் உணர்ந்து (4346), உருப்பசியாதி அரிவைமாரைப் படைப்ப அரம்பையர் அவர் பொற்பினைக் கண்டு பேதுற்றுப் போயினர்.

4348. பூண் - ஆபரணம். ஏண் - கர்வப்பேச்சு; (கந்த. அவைபுகு. 153.) புரந்தரன் - இந்திரன். பாண் - இராகம். பராயினன் - துதித்தான்.

4349. இயற்றுழி - செய்யும்போது. உமை என்றது நாநாரணரை. எண்ணினோர் - நினைக்கும் முனிவர். பவம் - பிறவியை. பகை - ஐம்புலப் பகைகளை. அவனிமேல் - பூமியில். அனூர் - துன்பத்தை.

கலிநிலைத்துறை.

4350. என்று கூறிய முனிவா ரேவலி னிசைப்போர்
ஒன்று மூருவிற் றேன்றலா லுருப்பசி யெனும்பேர்
நின்ற நேரிழை முதன்மட வாரொடு நெடிய
குன்றின் வார்சிறை கொய்தவன் குறுகின னகரம். (உசு)

4351. நாவி யன்னதோர் நறைகமழ் நறைக்கருங் கூந்தற்
காவி யன்னகட் கதிர்முலைத் திருமகள் காந்தன்
ஆவி யன்னமீ துயரிய வந்தணன் றனக்குத்
தூவி யன்னமா யுரைத்தனன் றொன்மறை தோன்ற. (உஎ)

4352. மீன மாகியு மேதினி யெடுத்தவெண் பிறைக்கோட்
டேன மாதியா யிச்சையிற் பலவுரு வியைந்தும்
மான வேலவ மாலுல களித்திடும் வகைநூ
றூன கோடியாண் டறையினு மடங்குவ தரிதே. (உஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4353. கேழ்கிளர் வெண்மை செம்மை கிளரொளிர் பசுமை மற்றும்
சூழ்சுடர்க் கருமை யென்று சொல்லிய வண்ண நான்கும்
ஊழிதோ றடைவி னெய்தி யுலகெலாங் காணத் தோன்றும்
வாழிநான் மறைக்கு மெட்டா வலம்புரித் தடக்கை யானே. (உகு)

---

4350. கூறி - இந்திரன் சொல்லி. அம்முனிவர் - அந்த நாராயண ரது. ஊருவில் - தொடையில். குன்றின் வார்சிறை - குன்றுகளின் நீண்ட சிறகுகளை. கொய்தவன் : இந்திரன். கொய்தவன் முனிவர் ஏவலின் ஊர்வசி முதல் மடவாரொடு நகரம் குறுகினன்.

4351. நாவி - கஸ்தூரி. நறைகமழ் - வாசனை வீசுகின்ற. நறை - தேன். காவி - நீலோற்பலம். கூந்தலையும், கண்ணையும் முலையையு முடைய திருமகள் காந்தன் : திருமால். ஆவி அன்னம் - பாலாவிபோன்ற நிறத்தை யுடைய அன்னத்தை ; ஆவி - குளமுமாம். மீது உயரிய - கொடியில்வைத்து உயர்த்திய. அந்தணன் தனக்கு - பிரமனுக்கு. தூவி - சிறகு. திருமகள் காந்தன் அந்தணன் தனக்கு அன்னமாய் மறையை உணர்த்தினன் ; மறை - வேதத்தை.

4352. மேதினி - பூமியை. ஏனம் ஆதியாய் - வராகம் முதலியவை யாகி. மான வேலவ: கிமினை நோக்கி விளி. அளித்திடும் வகை - காப்பாற் றும் விதத்தை. வேலவ, மீனமாகியும், ஏனமாதியுரு இயைந்தும் மால்உலகை அளித்திடும் வகையைக் கோடியாண்டு அறையினும் அடங்குவது அரிது.

4353. கேழ்கிளர் - நிறம்பொருந்திய. வண்ணம் - நிறம். ஊழி - யுகங்கள். அடைவின் - முடிவில். வலம்புரி - சங்கம். தடக்கையான் ஊழி தோறும் அடைவின் வண்ணம் நான்கும் எய்தி உலகு காணத் தோன்றும் ; (2981.) தடக்கையான் - மால். உலகு - மக்கள்.

4354. ஓதிய வண்ணத் தாதி யூழியிற் பிரம சாரிக்
கோதறு முருவ மெய்திக் குலவுவன் மாய னென்னப்
பேதவெவ் வினையொன் ருது பெட்பொடு கருதும் யோகர்
ஏதவெம் பிறவி சோா ரின்பொடு நீடு வாழ்வார். (௩௰)

4355. ஏழிரு புவன முண்டோ னிரண்டென வியம்பு கின்ற
ஊழியின் வேள்வி செய்வா ருருவமுற் றுறைவ னந்நாள்
ஆழிசூழ் புவியின் மாந்த ரருமக முறையி யற்றிச்
சூழிமால் வேழங் காத்த தோன்றலை வழுத்து வாரே. (௩௧)

4356. பொன்னவி ராடை மாயன் புகாறு மூன்று மூழி
மன்னிய காலஞ் செங்கோன் மணிமுடி வழங்கு வேந்தர்
சின்னமோ டுறைவ னந்நாட் டிருமறு மார்பி னுனைத்
துன்னுநாண் மலர்க டூவித் தொழுதனர் வழுத்து வாரே. (௩௨)

4357. கருதருங் கலியி னம்ம கார்முகிற் கொழுந்து போலும்
திருமகள் கொழுந னும கீர்த்தனஞ் செய்யும் யோகர்
மருவுவ ரொருவீ டென்னின் வழங்கிய கலியி னன்றுய்
ஒருதிரு வுகமு மில்லை யுரைக்கினிங் காச மன்னே. (௩௩)

---

4354. ஓதிய வண்ணத்து - வெண்மை நிறத்தில். ஆதி ஊழியில் - கிருத யுகத்தில். கோது - குற்றம். மாயன் ஆதியூழியில் வண்ணத்துப் பிரம சாரி உருவம் எய்திக் குலவுவன். பேதம் - வேறுபாடு. ஒன்றுது - பொருந் தாது. பெட்பு - அன்பு. யோகர் - யோகியர். ஏதம் - துன்பம். சோார் - சேரமாட்டார்.

4355. ஏழிரு புவனம் - பதினன்கு உலகம். உண்டோன் - மால். இரண்டென இயம்புகின்ற ஊழியின் - திரேதாயுகத்தில். அருமகம் - அரிய யாகங்களை. சூழி - முகபடாம். மால் - பெரிய. வேழம் - கசேந்திரனை. தோன்றலை - திருமாலை. மாந்தர் இயற்றி வழுத்துவார்.

4356. அவிர் - விளங்கும். புகர் - குற்றம். மூன்றும் ஊழி - துவாபர யுகம். வேந்தற்குரிய சின்னமோடு; சின்னம் - அடையாளம். திரு - திரு மகள், மார்பினை - திருமாலை. நாண்மலர் -, புதிய மலரை. தொழுத னர் - தொழுது.

4357. கலியின் - கலியுகத்தில். அம்ம : அசைநிலை. கார்முகில் - கருமையான மேகம். திருமகள் கொழுநன் - திருமால். நாம கீர்த்தனம் - பெயர்களைச் சொல்லுதல். யோகர் ஒரு வீடு மருவுவர்; ஒரு வீடு - ஒப்பில் லாத மோட்சத்தை. அரச என்றது நிமியை நோக்கிய விளி.

4358. எனவிவை நிமியென் ளேதுமிலங்குவே லரசு கேட்ப
வினையறு தவத்தின் மிக்கோர் விளம்பினர் விசும்பிற் போனர்
புனைமதிக் கவிகைச் செங்கோற் புரவல வென்று கூறி
நனைமலர்த் தொடைய னல்யாழ் நாரதன் மீட்டுஞ் சொல்வான். (௩௪)

4359. பொழிமழை பருவ நூறு பொய்ப்பவெவ் வழலின் வெம்பி
எழுபரித் தேரோன் காலு மெரிமணிக் குப்பை பாய்ந்து
நிழலறக் கிடந்து காய்ந்த நெடுநிலம் பிளக்கு மெங்கும்
முழுமணிச் சுடிகைச் சேடன் முகத்தழல் கனற்று மன்றே. (௩௫)

4360. நிலவிய வண்டம் யாவு நீறெழப் பாந்தள் வெந்தீ
உலவைவந் தெறியச் சிந்து மூறிமற் றொருநூ றாண்டு
மலையொடு பொருத யானை மல்லலந் தடக்கை மானக்
கலிகெழு கருவி வானங் கல்லெனப் பொழியு மம்மா. (௩௬)

4361. எற்றுநீர் பரந்து கோப்ப விறந்திடும் பூத மைந்தும்
மற்றிற வாது நின்ற மாயையின் றலைவன் றன்னைப்
பெற்றனை மதலை யாகப் பெறுவதென் பேறு சொல்லாய்
முற்றுநீ ருலகங் காக்கு முத்தவெண் கவிகை வேந்தே. (௩௭)

---

4358. தவத்தின் மிக்கோர் - சுக்கிரன் முதலிய முனிவர் ; பிராசேத சாக்கியர். விளம்பினர் - விளம்பி. கவிகை - குடை. புரவல என்றது வசுதேவனை நோக்கிய விளி. தொடையல் - மாலையையுடைய.

4359. நூறு பருவம் மழை பொய்ப்ப; பருவம் - வருஷம். பொய்ப்ப- பெய்யாமல் பொய்த்துவிட. அழலின் - தீயினல். தேரோன் - சூரியன். எரி - நெருப்பு. நிலம் பொய்ப்ப, குப்பை பாய்ந்து பிளக்கும். சுடிகை - உச்சி. சேடன் - ஆதிசேடன். அழலைக் கனற்றும்.

4360. அண்டம் - உலகம். நீறு - சாம்பல். பாந்தள் - ஆதிசேடனது. உலவை - காற்று. எறிய - வீச. ஊறி - முழங்கி. மற்றொரு நூறாண்டு தீயுலவை எறிய நிலம் சிந்தும். மல்லல் - வளம். கருவி - மின்முதலிய தொகுதி. வானம் யானைத்தடக்கை மானக் கல்லெனப் பொழியும் ; 2971 ; அகநா. 334 : 5.

4361. பூதம் ஐந்தும் நீர் பரந்து கோப்ப இறந்திடும் ; பூதம் ஐந்து - பிருதிவி முதலியன. கோப்ப - ஒன்றுசேர. தலைவன்தன்னை மதலை யாகப் பெற்றனை ; தலைவன் - திருமால். மதலை - குழந்தை. இனி என் பேறு பெறுவது ; பேறு - பாக்கியம். வேந்தே என்றது வசுதேவனை.

4362. பொறிமட மயிலிற் றேன்றும் பூதனை யுயிருந் திங்கட்
குறுநுதற் பவளச் செவ்வாய்க் கோவியர் முல்லை மெல்லென்
முறுவலு மாந்து செங்கண் முகிலைநின் மகனென் றுள்ளல்
இறுதியு முதலு மில்லா விறையெனத் தெளிதி மேலோய். (௩அ)

4363. தாறுமாய் களிநல் யானைத் தடமருப் பொசித்தான் றன்னை
மாறுகொண் டெழுந்து பொங்கி மண்டமர் கடந்து வெல்வான்
சீறினர் நினைத்து வைவேற் றிறற்சிசு பால னாதி
ஈறிலா நெறிசென் றுற்று ரெனையரென் றுரைப்பல் யானே. (௩௯)

4364. அல்லியங் கமலம் பூத்த வஞ்சனப் புயலிற் றேன்று
மல்லலைத் தெழுந்த திண்டோண் மாயனைக் கண்ணிற் கண்டு
புல்லியு மோந்து மன்பு பூத்துளங் களிப்பப் பெற்றாய்
சொல்லரு நெறிநீ சேர்தல் சொல்வதென் சுடர்செய் வேலோய். (௪௦)

தாவு கோச்சகக் கலிப்பா.

4365. என்றுமுது மறைதெளிந்த யாழ்முனிவ னேகுதலும்
வென்றிவயி ரப்படையோன் விதுவணிநீள் செஞ்சடையோன்
மன்றறுணி மரைமலரோன் மலர்தலைவான் வந்துற்றுக்
கன்றுகொடு விளவெறிந்த கார்வண்ணற் போற்றினால். (௪௧)

---

4362. பொறி - புள்ளிகள். மயிலின் - மயிலைப்போல. பூதனை உயிரும், கோவியர் முறுவலும் மாந்தும் முகிலை மகன் என்று உள்ளல்; முகிலை - கண்ணபிரானை. உள்ளல் - நினையாதே. இறுதி - முடிவு. இறை - திருமால். தெளிதி - தெளிவாயாக.

4363. தாறு - குத்துக் கோல். யானை - குவலயாபீடத்தினது. ஒசித்தான் தன்னை - கண்ணனை. மாறு - பகை. வெல்வான் - வெல்ல. சீறினன் - சீறி. ஈறிலா நெறி - மோட்சத்தை. யான் எனையர் என்று உரைப்பல்; யான் என்றது நாரதன். எனையர் - எவ்வளவுபேர்.

4364. அல்லி - அகவிதழ். புயலின் - மேகத்தைப் போல. மல் - மல்லரை. அலைத்து - வருத்தி. புயலிற் றேன்றும் மாயன்; திண்தோள் மாயன். மாயனைக் களிப்பப் பெற்றாய். சொல்லரு நெறி - சொல்வதற் கரிய மோட்சத்தை. சொல்வதென் - என்ன சொல்வது. வேலோய் என்றது வசுதேவனை. பகைவனுன சிசுபாலனாதியரும் உயர்நெறி உற்றனர்; மாயனைப் பெற்ற நீ நெறி சேர்தலைச் சொல்வதென் என்றபடி.

4365. யாழ்முனிவன் - நாரதன். வயிரப் படையோன் - இந்திரன்; வயிரப்படை - வச்சிராயுதம். விது - சந்திரன். சடையோன் - உருத்திரன். மன்றல் - வாசனை. மரைமலரோன் - பிரமன்; மரை - தாமரை; முதற் குறை. வானில் வந்துற்றுக் கார்வண்ணனைப் போற்றினர்; கார்வண்ணன் - கண்ணன்.

4366. உந்துதிரை சூழ்முந்நீ ருலகின்வன் பொறைதவிர்த்தாய்
ஐந்துதலை யிட்டவொரு நூற்றிருபா னுண்டகன்ற
எந்தைநின திருவுளமே லெய்துனது தாமமென
முந்தைகெழு நான்மறையின் முதல்வனருள் பெற்றகன்றார். (௪௨)



# 3. உத்தவர் தத்துவம் வினு அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

4367. களங்கனி வண்ணனைக் கண்டு காதல்கூர்
வளங்கொளும் வானவர் வணங்கிப் போயபின்
விளைந்தது மவ்வழி விண்டு ராதனுக்
குளங்கொள முனிவா னோதி னனரோ. (க)

4368. மருவிரி துளவணி மாய னேவலால்
கருதரு நிலமுறு கம்ப மாதியாப்
பொருவலி யாதவர் பொன்ற வெவ்வினை
தருபல நிமித்தமுஞ் சார்ந்த வாங்கணே. (உ)

---

4366. உலகின் - உலகத்தின். பொறை - பாரத்தை. ஐந்து தலையிட்ட ஒரு நூற்றிருபான் ஆண்டு - நூற்றிருபத்தைந்து வருடம். அகன்ற - போயின. எந்தை என்றது கண்ணனை; விளி. உனது தாமம் எய்து; தாமம் - இடமான வைகுண்டத்தை. என - என்று கூறி. முதல்வன் - கண்ணனது. அகன்றவர் இந்திரனும், உருத்திரனும், பிரமனும்.

4367. களங்கனி வண்ணனை - கண்ணனை. காதல் - அன்பு விண்டுராதனுக்கு - பரிட்சித்துக்கு. முனிவரன் - சுகன்.

4368. மரு - வாசனை. மாயன் - கண்ணனது. நிலமுறு கம்பமாதியா - பூகம்பம் முதலான. பொருவலி - போர் செய்யத்தக்க வலிமை. பொன்ற - அழிய. வெவ்வினை - தீமை. யாதவர் பொன்ற ஆங்கண் கம்பமாதியாப் பல நிமித்தம் சார்ந்த; ஆங்கண் - துவாரகையில்.

4369. கண்ணுறு தீயன நிமித்தங் கண்டன
அண்ணலங் கடற்றுறை யாடு வோமெனத்
தண்ணறுந் துளவணி தலைவன் சாற்றினன்
எண்ணிலா யாதவ ரெழுதன் மேயினர். (௩)

4370. அவ்வழி மால்கருத் தறிந்த வுத்தவன்
செவ்வழிப் படர்தாச் சிந்தை யுற்றனை
இவ்வழி நிற்பிரிந் திறையு முய்கலேன்
உய்வழி யென்னையு முடன்கொண் டேகுவாய். (௪)

4371. பைத்தவெவ் வராமிசைப் பதம்வைத் தாடிய
வித்தக வென்றுமுன் வீழ்ந்து போற்றுறும்
உத்தவ னுளங்கொள வுரைத்தன் மேயினன்
தத்துவ நெறிமுறை தலைவ னுங்கரோ. (௫)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4372. ஊற்றினிற் களிறு துஞ்சு மொளியினிற் பதங்க மாயும்
நாற்றத்தின் வண்டு வீயுஞ் சுவையின்மீ னுசை மெய்தும்
ஏற்றதோ ரிசையி னாலே யிறக்குமா லசுணங் கல்வி
ஆற்றலிற் புலன்க ளைந்து மடக்கிடல் வேண்டு மன்றே. (௬)

---

4369. தீயனவாகிய நிமித்தங்கள். கடற்றுறையில் ஆடுவோம்; ஆடுவோம் - நீராடுவோம். என - என்று. தலைவன் - கண்ணன். எழுதல் மேயினர் - நீராடப் புறப்பட்டனர்.

4370. மால் கருத்து - கண்ணனது எண்ணத்தை. செவ்வழி என்றது வைகுண்டத்தை. படர்தா - அடைய. சிந்தை யுற்றனை - நினைத்தாய். இவ்வழி - இங்கு. நின்னைப் பிரிந்து. இறையும் - சிறிது நேரமும். உய்கலேன் - பிழைத்திருக்க மாட்டேன்.

4371. பைத்த - படத்தையுடைய. அராமிசை - காளியன்மேல். வித்தக என்றது கண்ணனை. தலைவன் உத்தவன் உளங்கொளத் தத்துவ நெறி உரைத்தல் மேயினன்; தலைவன் - கண்ணன்.

4372. ஊற்றினில் - பரிசத்தினால். களிறு ஊற்றினில் துஞ்சும்; துஞ்சும் - இறக்கும். பதங்கம் - விட்டிற் பூச்சி. நாற்றத்தின் - நறுமணத்தினால். மீன் சுவையின் நாசம் எய்தும். அசுணம் இசையினால் இறக்கும்; அசுணம் - இசையறிவதொரு விலங்கு. ஐந்து இந்திரியங்களாலும் அழியும் பிராணிகள் கூறப்பட்டன; (புறத். 292. திருவேங்கடத். 28.) ஆற்றலின் - வன்மையினால். புலன்கள் ஐந்தும் - ஐந்து இந்திரியங்களையும்.

4373. ஐயமி லறிவி ஞலே யழிவின்றி யகண்ட மாகி
மெய்யெனும் பொருளா மெம்மை மேவுவான் கான னீர்போல்
வையக மாதி யாய வழங்கிய வுலக மெல்லாம்
பொய்யறு பகுதி நின்று போந்தவென் றெண்ணல் வேண்டும். (எ)

4374. கண்ணுறு பவற்றி ஞலுங் கருதநு மானத் தாலும்
எண்ணியுட் டெளிவு பெற்றிங் கேதமா மிவைக ளென்றும்
நண்ணுநற் குணங்க ளென்று நாடுத லொழிந்தி யாவும்
தண்ணறை துளித்த தாரோய் சமமெனக் காணல் வேண்டும். (அ)

4375. இனிவரு மேழா நாளின் யாதவர் பொருது மாய்வர்
பனிவரு கடலு மிந்தப் பதியினை மறைக்கும் வெய்ய
துனிவரு கலியும் பூமான் றுயருறப் பொருது மென்னத்
தனிவரு மாசு மாழ்கச் சாற்றினன் மாயன் ருனே. (கூ)

4376. என்றலும் பிரிவிற் கஞ்சி யேங்கினன் குருவை நீங்கித்
துன்றிய காட்சி யானுஞ் சொல்லநு மானத் தானும்
நன்றுளந் தெளித லெங்க னவின்றரு ளெனமுன் போற்றி
ஒன்றுமுத் தவற்கு நம்மா னொருகதை யுரைக்க லுற்ருன். (க0)

---

4373. ஐயம் - சந்தேகம். அகண்டம் - பிரிவற்ற ஒன்று. மெய் - உண்மை. எம்மை என்றது கண்ணனை. வையகம் - பூவுலகம். பகுதி நின்று - மூலப் பிரகிருதியினின்று. போந்த - வந்தன. எம்மை மேவுவான், 'உலக மெல்லாம் கானல் நீர்போல் பகுதி நின்று போந்த' என்று எண்ணல் வேண்டும்.

4374. கண்ணுறுபவற்றினும் - காட்சியாலும்; பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலும். எண்ணி - ஆராய்ந்து. உள் - மனத்தில். இங்கு - இவ்வுலகில். ஏதம் - துன்பங்கள். நறை - தேன். தாரோய் என்றது உத்தவனை. யாவும் சமம் எனக் காணல் வேண்டும்.

4375. பொருது - போர் செய்து. பனி - குளிர்ச்சி. பதியினை - துவாரகையை. பூமான் - பூம்தேவி. பொருதும் - போரிடும். அரசு - உத்தவன். மாழ்க - மயங்க. மாயன் சாற்றினன்; மாயன் - கண்ணன்.

4376. பிரிவிற்கு - கண்ணனை விட்டுப் பிரிவதற்கு. காட்சி - பிரத்தியக்ஷப் பிரமாணம். எங்ஙன் - எவ்விதம். நம்மான் - கண்ணன்.

# 4. ஆசிரியரை உரைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4377. தீதிலன் மகிழுந் தத்தாத் திரேயனென் றுலக மெல்லாம்
ஓதவ தூத வேடத் தொருவனை யதுமுன் கண்டு
நீதிசெய் யறம்பொன் காம நினைந்திலை சிறிது மின்பம்
ஏதினி லடைகின் றாய்நீ யெனமுனி யிசைக்க லுற்றான். (க)

4378. தரைபுனல் கனல்கால் வானந் தபனன்வெண் டிங்கள் வாரி
வரையுறை யரவு மான்கான் வருகரி பதங்க மீனம்
மூரலளி கணைசெய் கின்றோன் மொய்குழற் குமரி தேனீ
உரைதரு புறவு வேசி யூன்கவ ரன்றி னாகம். (உ)

4379. உறைந்தநூற் சிலம்பி மைந்த னூதுவண் டெடுத்த கீடம்
சிறந்தன விவைநான் காறுஞ் சிந்தையிற் குருவென் றாக்கி
மறந்தரு மிஃது தீதா மற்றிது நன்று மென்றிங்
கறிந்தில னின்ப முற்றே னவ்வகை யரச கேண்மோ. (ங)

---

4377. அவதூத வேடம் - நிர்வாண வேஷம். யது - யயாதியின் புதல்வன். அறம், பொன், காமம் சிறிதும் நினைந்திலை ; பொன் - பொருள். நினைந்திலை - நினைக்கவில்லை. நீ எதினில் இன்பம் அடைகின்றாய் ; எதினில் - எவ்விஷயத்தால். என - என்று யது வினவ. முனி - தத்தாத்திரேயன்.

4378. தரை - பூமி. கனல் - நெருப்பு. கால் - காற்று. தபனன் - சூரியன். திங்கள் - சந்திரன். வாரி - கடல். வரைஉறை அரவு - மலைப்பாம்பு. கான் - காட்டில். கரி - யானை. பதங்கம் - விட்டிற் பூச்சி. மீனம்-மீன். மூரல் அளி - ஒலிக்கின்ற வண்டு. கணை செய்கின்றோன் - அம்பு செய்கின்றவன். குமரி - கன்னிகை. புறவு - புறா. நாகம் - பாம்பு.

4379. நூலையுடைய சிலம்பி ; சிலம்பி - சிலந்தி. ஊதுவண்டு எடுத்த கீடம் - குளவியால் எடுக்கப்பட்ட புழு. நான்காறும் - இருபத்து நான்கும். சிந்தையில் - மனத்தில். குருவென்று ஆக்கி - ஆசிரியர் என்று கொண்டு. அரச என்றது யதுவை நோக்கிய விளி.

கலிநிலைத்துறை.

4380. டரிவின் வெட்டினுங் கல்லினும் பயன்பொறுத் தளித்தும்
புரியு நல்வகை மாறெதிர் பொருதிடா தசலத்
தருவி நீரட விக்கனி முதலிய வளித்தும்
இருதி றத்தையு மெனக்கறி வித்ததித் தரையே. (ச)

4381. களிகொ ளும்முரு நினைக்கினுங் காண்கினு நலஞ்சேர்ந்
தொளிகொ ளும்பெயர் வழுத்தினு மன்னவ ருளத்தை
அளிகொ ளும்புனி தம்பெற வாக்கலு மருந்தண்
டெளிவு மப்புவி னிடத்தினின் றறிந்தனன் றெரிக்கின். (ரு)

4382. இருந்தி ராகமொ டியம்பரும் வெறுப்பற வெறிந்து
பொருந்து கின்றன யாவையும் பொசிப்பது மெவரும்
விரைந்து வந்தணு காவகை வீற்றிருப் பதுவும்
திருந்து கின்றநற் காந்தியும் பெற்றனன் றீயின். (சு)

4383. வளர்ந்த காதல்வெவ் வெறுப்படைந் தாரென வரினும்
தெளிந்த யோகிய ருயிர்க்கவை யில்லெனத் தெரிந்தேன்
விளைந்த வாசமும் விளம்புநற் கந்தமு மேவி
அளைந்து வந்துமக் குணம்பெரு தநிலமென் றறிந்தேன். (எ)

---

4380. கல்லினும் - தோண்டினுலும். பொறுத்துப் பயனளித்தும். மாறு - மாறுக. அசலத்து - மலையில். அடவி - காடு. இருதிறம் - பொறுத்தல், அளித்தல். தரை இரு திறத்தையும் எனக்கு அறிவித்தது; தரை - பூமி.

4381. காண்கினும் - பார்த்தாலும். வழுத்தினும் - துதித்தாலும். அன்னவர் - அவ்விதம் செய்தவரது. அளி - அருள் செய்தல். புனிதம் - பரிசுத்தம். அப்புவினிடத்தினின்று - நீரினின்று. புனிதம்பெற ஆக்கலும், தெளிவும் அறிந்து கொண்டேன்.

4382. இராகம் - ஆசை. பொருந்துகின்றன - தன்னை அடைகின்றவை. பொசிப்பதும் - உண்பதும். அணுகா வகை - நெருங்காதபடி. காந்தி - ஒளி. தீயின் பெற்றனன்.

4383. காதல் - அன்பு. அடைந்தார் என - அடைந்தவரென. அவை - காதலும் வெறுப்பும். இல் என - இல்லை யென்று. தெரிந்தேன் - அறிந்தேன். வாசம் - இங்குத் துர்நாற்றம். நற்கந்தம் - நல்ல வாசனை. அளைந்து வந்தும் - கலந்து வீசியும். அக்குணம் - அவ்வாசனையை. அநிலம் அக்குணம் பெருது; அநிலம் - காற்று.

4384. கண்ண கன்றிடு மிடத்துள வான்கடத் துளவான்
எண்ண நின்றன போகவொன் றாயியைந் ததனால்
பண்ணு கின்றதன் மாயையிற் பற்பல படைப்பாய்
நண்ணு கின்றவும் பிரமமொன் றுருவென வறிந்தேன். (அ)

4385. உறைவு றாவிட னின்றென வுறையும்வா னென்றால்
குறைவு றாவகை கண்டதிற் கூறுமொன் றாலும்
மறைவு றாதொரு குறையுமன் னாதுமற் றெங்கும்
நிறைவு றாதுவை காதென நினைந்தனன் பிரமம். (கூ)

4386. அருவ மாமறி வானவ னாக்கைகள் பலவும்
ஒருவ னாகியே யுறைகுவ னென்பதை யுணர்ந்தேன்
பருதி வானவ னொருவனே யாய்ப்பல கடத்தின்
மருவு நீர்தொறு நிழல்பல வாயுறன் மதித்தேன். (க0)

4387. திங்க ளுடொறும் வளர்தலுந் தேய்தலுந் தெரிக்கின்
அங்கண் மாநிலம் விளக்குவெண் கதிர்க்குண மதனால்
தங்கு மோராறு வகைவிகா ரங்களுந் தமியேன்
இங்கு நாடின னுடற்கலா லுயிர்க்கிலை யெனவே. (கக)

---

4384. கண் அகன்றிடும் - விசாலமான. வான் - ஆகாயம். கடத்து - குடத்துள். எண்ண - நினைக்க. போக - நீங்க. ஒன்றாய் - ஓர் ஆகாய மாகவே. இயைந்ததனால் - பொருந்தியதால். மாயையின் - மாயையினால். ஒன்று உரு - ஓருருவம்.

4385. உறைவுறா இடன் - ஆகாயம் தங்காத இடம். இன்றென - இல்லை என்னும்படி; எங்கும் வியாபித்துள்ளது என்றபடி. வானென்றால் - ஆகாய மொன்றினால். அதில் - அவ்விடத்தில். பிரமம் மறைவுறாது, குறை மன்னாது, நிறைவுறாது வைகாது என நினைந்தனன்; மன்னாது - பொருந்தாது. நிறைவுறாது வைகாது: நிறைவுற்று வைகும் என்றபடி.

4386. அருவமாம் - உருவமில்லாத. அறிவானவன் - பிரமம். ஆக்கைகள் - சரீரங்கள். உறைகுவன் - தங்குவன். பருதி வானவன் - சூரியன். பலகடத்தின் மருவு நீர்தொறும் - பல குடங்களிலுள்ள நீரிலெல்லாம்.

4387. திங்கள் - சந்திரன். தெரிக்கின் - ஆராய்ந்தால். அங்கண் - அழகிய இடம். கதிர்க்குணம் - கிரணங்களது இயல்பு; சந்திரனுக்கு வளர்ச்சியும் தேய்வும் இல்லை; அதன் கிரணங்களுக்கே என்றபடி. அறுவகை விகாரம் - உண்டாதல், இருத்தல், மாறுதலடைதல், குறைதல், வளர்தல், அழிதல் என்பன; இவை பாவவிகாரம் எனப்படும். விகாரம் உடற்கலால் உயிர்க்கு இலை என நாடினேன்; இலை - இல்லை,

4388. விளங்கு மெய்ப்பொரு ளாக்கைமே வினுமதன் குணங்கள்
உளங்கொ டெண்ணினப் பொருட்கிலை யென்பது மோர்ந்தேன்
களங்க மென்பது மதிக்கிலை கருதுமக் களங்கம்
வளங்கொள் பூமியின் சாயையென் பாரதை மதித்தேன். (கஉ)

4389. நிறைவி ஞெடொறுங் குறைவற வமைந்தய னீர்வந்
தறையு நீடிரை கூடினு மதன்குண மடையா
துறையும் வாரிகம் பீரமுற் றென்பதை யுணர்ந்திங்
கிறைவ யானுமக் குணங்களை யுவந்தியைந் தனனல். (கங)

4390. உற்ற வுற்றவை முயற்சியி னுயங்கிடா துண்ணும்
குற்ற மற்றுநீண் மலையரா வென்பதைக் குறித்திங்
கற்ற மற்றநல் லறிஞருக் கிதுவழக் கென்னப்
பெற்ற பெற்றன முயற்சியற் றருந்தினன் பெரியோய். (கச)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

4391. மடந்தையர் மொழியுங் கானமுன் கேட்டு
மன்னவன் மகண்மலை மணந்தான்
கடந்திரி கலையின் கோடுபெற் றயர்ந்த
கருகருந் தவனெனல் கேட்டும்

---

4388. மெய்ப்பொருள் - பரம்பொருள். ஆக்கை - உடலில். அதன் - அந்த உடலின். உளம்கொடு - உள்ளத்தில் கொண்டு. எண்ணின் - ஆராய்ந்தால். அப்பொருட்கு - பரம்பொருட்கு. மதிக்கு - சந்திரனுக்கு. சாயை - நிழல்.

4389. நிறைவின் - நிறைவினல். குறைவற - குறைவில்லாதபடி. அயல் நீர் - வேற்று நீர். திரையில் கூடினும். அதன் - அந்த வேற்று நீரின். குணத்தை வாரி அடையாது; வாரி - கடல். கம்பீரம் - ஆழம். இறைவ என்றது யதுவை; விளி. யான் என்றது தத்தாத்திரேயன்.

4390. மலையரா முயற்சியின் உயங்கிடாது உற்றதை உண்ணும்; மலையரா - மலைப்பாம்பு. உயங்கிடாது - வருந்தாமல். உற்றதை - தன் பக்கத்தில் அடைந்ததை. அற்றம் - முடிவு. என்ன - என்று கருதி. முயற்சி யற்றுப் பெற்றன அருந்தினன்; பெற்றன - அடைந்த உணவுப்பொருளை. பெரியோய்: யதுவை நோக்கிய விளி.

4391. கடம் - காடு. கலையின் கோடு - கலைமானின் கொம்பு. அருந்தவன்முன் மடந்தையர் கானத்தைக் கேட்டு மன்னவன் மகளை மணந்தான்; அருந்தவன் - கலைக்கோட்டு முனிவன். இளமறிகள் - இளமையான மான்

படர்ந்திள மறிகள் வேட்டுவன் பாடும்
பண்செவி மடுத்தவன் வலைமேல்
கிடந்தன கண்டும் வெவ்விசை கேளேன்
கேட்டன்மா லுமகீர்த் தனமே. (கரு)

4392. துதிதரு வயவர் படுகுழிப் படுத்துந்
துகளறு பிடியையுள் ளுவந்து
மதகரி தழுவி வயவர்கை வசமாய்
வயங்குதல் கண்டுமட் டொழுகும்
ததைமலர்க் குழலார் தனகிரி தழுவித்
தணப்பரி தாய்மதன் வசமாய்
விதலையின் மனமாய் மயக்குறு மென்ன
விடுத்தனன் புணர்ச்சிமற் றன்றே. (கசு)

4393. ஒளிகொளும் விளக்கின் றீப்பிழம் புணரா
துணவுகொ லெனவெதிர் சூழா
விளிவுறும் பசிய சலபமுன் கண்டு
வெய்யதித் தொழிலெனக் கருதித்
தெளிவுகொண் முனிவ ராயினுங் காணிற்
சிந்தைதம் வயங்கொளீஇக் கவற்றிக்
களிகொளுங் கருங்கண் மடந்தைய ருருவங்
கருத்தொடு காண்கில னம்மா. (கஎ)

---

குட்டிகள். பண் - இராகத்தை. செவி மடுத்து - கேட்டு. அவன் - அவ் வேடனது. வெவ்விசை - வெவ்விய இராகத்தை. மால் நாம கீர்த்தனமே கேட்டல்; மால் - திருமாலது. கேட்டல் - கேட்கப்படுவது.

(பி - ம்) 3. இளமறி மான்.

4392. வயவர் - வேடர். குழிப்படுத்தும் - குழியில் விழுத்தும். பிடியை - பெண் யானையை. கரி - யானை. மட்டு - தேன். தனங்களாகிய கிரியை; கிரி - மலை. தணப்பு - நீக்கம். மதன் - மன்மதன். விதலை - நடுக்கம். புணர்ச்சி விடுத்தனன்.

4393. தீப்பிழம்பு - தீத்திரள். உணவுகொல் என - உணவுப் பொருளோ என்று கருதி. எதிர் சூழா - அத்தீயின் முன் சுற்றி. விளிவுறும் - இறக்கும். சலபம் - விட்டிற் பூச்சியை. வெய்யது - கொடியது. சிந்தை - அம்முனிவரது மனத்தை. தம்வயம் கொளீஇ - தம்வசங்கொண்டு. கவற்றி - வருத்தி. மடந்தையரது உருவத்தைக் காண்கிலன்.

4394. வஞ்சநெஞ் சினராய்த் தூண்டிலின் வனைந்த
வண்சுவை யூண்பெற வடைந்து
துஞ்சுத லடைந்த மீன்குழக் கண்டு
துன்னுமை வகையெனும் வாயுப்
பஞ்சர மென்றுற் றுடலுறை வதற்காப்
பசிக்கன றணிப்பதற் கன்றி
அஞ்சுவை யிவையென் றவாவினு ளலம்வந்
தருந்துத லொரீஇயின னடிசில். (கஅ)

4395. வண்டினஞ் சிறிது சிறிதென வலரு
மலர்தொறும் வருமுரு குவப்பால்
உண்டன திரிதல் கண்டனன் யானு
முரைக்கினித் தொழிலழ கிதென
எண்டரு நகரின் மனைதொறுங் குறுகி
யொருகர மிசை யையம்
கொண்டனன் சிறிது சிறிதென வுவந்து
கொள்கலத் தேற்றிடா தன்றே. (கக)

4396. ஒருமரை மலரே யுவந்துமென் முருகுண்
டுறைதரு மொருசுரும் பிரவின்
விரியிதழ் குவிய மலரகப் பட்டு
விளிந்தது கண்டொரு நாளும்

4394. வனைந்த - கட்டிய. ஊண் - உணவை. துஞ்சுதல் - இறத்தலை. வாயு - காற்று. பஞ்சரம் - கூடு. பசிக்கனல் - பசியாகிய தீயை. அஞ்சுவை - அழகிய சுவை. அவாவின் - ஆசையால். உள் - மனம். அலம் வந்து - சுழன்று. வாயு உடலில் உறைவதற்காகவும் பசி தணிப்பதற்கும் அருந்துவதன்றி அஞ்சுவை என்று அருந்துதலை ஒரீஇயினன்; ஒரீஇயினன் - நீக்கினேன்.

4395. அலரும் - மலர்கின்ற. முருகு - தேனை. உவப்பால் - மகிழ்ச்சியொடு. உண்டன - உண்டனவாகி. கண்டனன் - பார்த்தேன். மனைதொறும் - வீடுதோறும். ஒருகர மிசை - ஒரு கையில். ஐயம் - பிச்சை. மனைதொறும் குறுகிக் கலத்து ஏற்றிடாது உவந்து கரமிசை ஐயம் கொண்டனன். கலத்து - பாத்திரத்தில். ஏற்றிடாது - ஏற்றுக் கொள்ளாமல்.

(பி - ம்) 4. சிறிதென நுகர்ந்தேன்.

4396. ஒரு மரைமலரே - ஒரு தாமரைப் பூவிலேயே. முருகு - தேனை. உண்டு - அருந்தி. சுரும்பு - வண்டு. குவிய - மூட. அம்மலருள் அகப்பட்டு. விளிந்தது - இறந்ததை. ஒரு மனையில் உறைந்து; உறைந்து -

கருதிய நகரி னொருமனை யுறைந்து
கடிசுவை யுணவுவந் தருந்தேன்
மருவலர் மகுட கோடிக ளிடறு
மலர்புரை தருபத யுகத்தோய். (உ0)

கலிநிலைத்துறை.

4397. முந்த வேயொலி யாதியி னொருகுண முன்னிப்
பந்த மோடிட ருற்றிறந் தனபல வென்னின்
ஐந்து சேர்குணங் களுமொருங் காசையி னடைந்தோர்
உய்ந்து போநெறி யுண்டுகொ லோமதித் துரைக்கின். (உக)

4398. பம்பி ரும்பொறி வழிமனம் பாந்துறா தடக்கி
அம்பு செய்ததன் கோணறத் திருத்துவா னவன்போல்
வெம்பு மைம்புலன் வழிமனம் வேட்குதல் வெறுத்துக்
கம்ப மில்லறி வாம்பொரு ளறிந்தனன் கருத்தால். (உஉ)

4399. தாயுந் தந்தையும் வேற்றொரு நகர்வயிற் சார்நாள்
நேய மாயதன் மணத்திற நேர்தா நிகழ்த்த
மேய சீருற வோர்க்குண வருத்துதல் வேண்டித்
தூய தாமெழிற் குமரிநெற் குத்துத றுணிந்தாள். (உங)

---

தங்கி. கடி - வாசனை. அருந்தேன் - உண்ணமாட்டேன். மருவலர் - பகைவாது. மலர் புரைதரு - மலரை யொத்த. பதயுகத்தோய் என்றது யதுவை நோக்கிய விளி.

4397. ஒலி ஆதியின் - சப்தம் முதலியவற்றில்: உன்னி - நினைந்து. பந்தம் - கட்டு. பல இடருற்று இறந்தன; பல - பல உயிர்கள். ஐந்து சேர்குணங்களும் - சப்தம் முதலிய ஐந்து குணங்களையும். ஒருங்கு - சேர்ந்து. உய்ந்துபோம் நெறி - பிழைக்கும் வழி. உண்டு கொலோ - உண்டோ; இல்லை என்றபடி.

4398. பம்புதல் - பரவுதல். பொறிவழி - இந்திரியங்களின் வழியில். உறாது - அடையாதபடி. அதன் - அம்பினுடைய. கோண் - கோணல். அற - நீங்க. திருத்துவானாகிய அவனைப்போல. வெம்பும் - வருந்தும். வேட்குதல் - விரும்புதலை. கம்பமில் - அசைவில்லாத. அறிவு - ஞானம். கருத்தால் அறிந்தனன்.

4399. சார்நாள் - சார்ந்தநாளில். நேயம் - விருப்பம். தன் மணத்திறம் நிகழ்த்தத் தாயும் தந்தையும் வேற்று நகர்வயின் சார்ந்த நாளில். உறவோர்க்கு - சுற்றத்தாருக்கு. குமரி - கன்னிகை. நெல்லைக் குத்தத் துணிந்தாள்.

4400. பெரிய கைவளை யார்ப்பவர் கேட்கினிப் பேதை
உரைசெய் நல்குர வுற்றவ ளென்பரென் றுணர்ந்தாங்
கரிய கைவளை கழற்றின ணெற்றுவைத் ததனுல்
கருதும் வெவ்வுரை வருங்கொலென் றுறுங்குழுக் கடிந்தேன். (உச)

4401. துன்றி வைத்ததண் டேனுணு கிழந்தருசூழ்ந் தெடுப்ப
ஒன்று மற்றவ ராணுயி ருலந்தமை யுணர்ந்து
நன்ற,றிந்துபற் றெறிந்தவர்க் கொன்றையு நாளைக்
கென்று வைப்பது மிகையெனத் தெளிந்தன னிறையோய். ()

4402. நீனி றக்கொடு வேட்டுவன் படுத்தநீள் வலைவாய்த்
தூநி றப்பெடை பார்ப்பினந் துயர்தல்கண் டணுகித்
தானு முற்றதி ஞெருபுற விறந்தது தன்னல்
ஊன முற்றிடு மெனத்தமர் கேண்மையீங் கொழிந்தேன் (உசு)

கலிவிருத்தம்.

4403. சோதி மாடந் துவன்று மிதிலைவாழ்
பேதை யாமொரு பிங்களை யென்பவள்
ஓது வேட்கை யொருவுத னன்றெனக்
கோதி லாக்குரு வானமை கூறுவாம். (உஎ)

---

4400. வளையார்ப்பு - வளையின் ஒலியை. அவர் - உறவினர். கேட்பின் - கேட்டால். நல்குரவுற்றவள் - வறுமை யுற்றவள். நெல்லைத் துவைத்ததனுல்; துவைத்தல் - குத்துதல். வெவ்வுரை - கொடிய பழிச்சொற்கள். வருங்கொல் - வருமோ. குழு - கூட்டத்தை ; என்றது யோகியர் சங்கத்தை. கடிந்தேன் - நீக்கினேன்.

4401. துன்றிவைத்த - சேர்த்துவைத்த. தேனை உணுது. ஒன்று மற்று - ஒரு செயலுமில்லாதபடி. அவரான் - தேனை எடுப்போர்களால். உயிர் உலந்தமை - இறந்ததை. பற்று எறிந்தவர்க்கு - ஆசையை நீக்கியவர்க்கு. மிகை - குற்றம்.

4402. நீலமான நிறத்தையுடைய கொடிய வேட்டுவன். படுத்த - வைத்த. பெடை - பெண்புறு. பார்ப்பினம் - குஞ்சுகளின் கூட்டம். துயர்தல் - வருந்துவதை. உற்று - வலையை அடைந்து. தமர் கேண்மை ஊன முற்றிடும் ; கேண்மை - நட்பு. ஊனம் - தீங்கை.

4403. சோதி - ஒளி. துவன்று - நெருங்கிய. பிங்களை - ஒருதாசியின் பெயர். வேட்கை - ஆசை. ஒருவுதல் - நீங்குதல். என - என்று கருதி. கோது - குற்றம். கூறுவாம் என்றவர் தத்தாத்திரேயன்.

4404. பேசு கின்றவப் பிங்கலை யென்பவள்
வேசி தோய்நலன் விற்கும் விரகினள்
ஆசை யாம்பொரு ளல்குநல் லாடவர்
பூசு சாந்தப் புயம்புணர் வாளரோ. (உஅ)

4405. இன்ன வண்ண மிரும்பொரு ளீட்டுநாள்
சொன்ன வண்ணம் பொருடந்து தோய்பவர்
மன்னும் வண்ணமோர் மாடம்வ ராமையால்
அன்ன வண்ண நடைய ளயர்ந்தனள். (உகூ)

4406. மறுகி னூடு வருபவர் யாரையும்
பெறுக நீபொரு ளென்றுறு பெட்பொடு
குறுகி யீந்துடன் கூடுவ ரோவெனச்
சிறுகு நுண்ணிடை பார்த்துளந் தேம்புமே. (௩0)

4407. நேச மாய்நெடு மாட நிலைபுகும்
ஆசை யாம்வளி யாங்குநின் றுந்தலால்
வாச வார்குழன் மீள் மறுகுறும்
ஊச லாடு பவரையு மொக்குமே. (௩க)

4408. வாய்த னின்று மயங்கு நடுவிரா
ஆய தென்றயர் வெய்தி யகம்புகும்
நேய நன்பொரு ளெஞ்சினி னைந்தழும்
பாயன் மீதுப டுக்கும்ப தைக்குமே. (௩உ)

---

4404. தோய் நலன் - புணர்ச்சி இன்பம். விரகினள் - வஞ்சனை யுள்ளவள். ஆசையாம் பொருளை - மனத்தில் விரும்புமளவான பொருளை .சாந்தப்புயம் - சந்தனத்தை யுடைய தோளை. பிங்கலை யென்பவள் வேசி, விரகினள், புணர்வாள். (பி - ம்) 4. புணர்வாழ்க்கையாள்.

4405. இரும் பொருள் .- மிக்க பொருளை. ஈட்டும் - சேகரிக்கும். சொன்ன வண்ணம் - சொன்னபடி. மாடம் - அரைவராகன் எடையுள்ள பொன்னும். அன்னவண்ண நடையள் - அன்னத்தைப்போன்ற அழகிய நடையை யுடையவள் : பிங்கலை. அயர்ந்தனள் - வருந்தினள்.

4406. மறுகின் ஊடு - வீதியின் நடுவில். என்று - என்று கூறி. உறுபெட்பொடு - மிக்க விருப்பொடு. ஈந்து - பொருளைக் கொடுத்து. நுண்ணிடை - பிங்கலை.

4407. மாடநிலையுள் புகும். வளி - காற்று. உந்தலால் - செலுத்தலால். குழல் - பிங்கலை. மறுகு - வீதியை. அதனால் ஊசலாடுபவரை யொக்கும்.

4408. வாய்தல் - வாசலில். அகம் - உள்ளே. மயங்கல் முதலியன பிங்கலையின் தொழில்கள்,

4409. இன்ன தன்மையங் கெய்திய வேந்திழை
பொன்னி னுற்றவிவ் வேட்கைபொல் லாததென்
றுன்னி யுன்னி யொழிவுசெய் நெஞ்சொடு
மன்னர் மன்ன மகிழ்ந்திவை சொல்லுமால். (௩௩)

4410. துயா மோதொலே யாதுசெய் யாசையாம்
செயிரி னேங்குறுஞ் சேணடங் காவனம்
வயிர மாகிய வாள்கொடு வெட்டிடா
துயரி னோர்க்கெங் குவகையுண் டாகுமே. (௩௪)

4411. உன்னிற் போத வுருவத் தலைவனுள்
மன்னிப் போகம் வழங்கி வதியவும்
மின்னைப் போல விழுநரை வீதிதேர்ந்
தென்னைப் போலயர் வாரெவ ருண்டரோ. (௩௫)

4412. சலத்தை யுந்தசை யென்பொடு சாற்றுமும்
மலத்தை யும்மயிர்த் தோலின்ம றைத்ததை
நலத்த தென்றுந யந்துந லிந்தவென்
புலத்தை யென்கொல் புகலப்பெ றுவதே. (௩௬)

4413. என்று கூறியவ் வேந்திழை யீறிலா
தொன்று மாசை யொருவியு வப்புற்றுள்
அன்றி யானவ் வகைதெருண் டாசையை
வென்றி வீர விடுத்தனன் வேரொடும். (௩௭)

---

4409. ஏந்திழை - பிங்களை. வேட்கை - ஆசை. உன்னி - நினைந்து. ஒழிவு - வெறுத்தல். மன்ன என்றது யதுவை; விளி.

4410. தொலையாது - நாச மில்லாதது. செயிரின் - குற்றத்தால். சேண் - ஆகாயத்தில். ஓங்குறும் வனம்: அடங்காவனம். வயிரம் - வைராக்கியம். உயரினோர் - உயர்ந்தவர்களுக்கு. உவகை உண்டாகாது என்றபடி.

4411. உன்னின் - ஆராய்ந்தால். போதவுருவத் தலைவன் - அறிவாகிய உருவத்தை யுடைய கடவுள். உள் - மனத்தில். மன்னி - நிலைபெற்று. வதியவும் - தங்கி யிருக்கவும். விழுநரை - என் ஆசையில் வீழ்பவரை. வீதியில் தேர்ந்து. அயர்வார் - வருந்துபவர். தலைவன் உள்வதியவும் அயர்வார் எவர் உண்டு? (பி - ம்) 3. போல்விழி நாதனை.

4412. தசை - மாமிசம். என்பு - எலும்பு. மயிரையுடைய தோலின். அதை - அவ்வுடலை. நலத்தது - அழகை யுடையது. நலிந்த - வருந்திய. புலத்தை - அறிவை.

4413. ஏந்திழை - பிங்களை. ஈறிலாது - முடிவில்லாமல். ஒன்றும் - பொருந்தும். ஒருவி - நீக்கி. அன்று யான் அவ்வகை தெருண்டு ஆசையை வேரொடும் விடுத்தனன்; தெருண்டு - தெளிந்து. வீர: யது; விளி.

4414. அன்றி லூன்கவர்ந் தந்தரத் தேகுழித்
துன்று மோர்புட் டுரந்து பறித்தலும்
ஒன்றவ் வூனை யொழிந்துவப் புற்றதால்
என்று மோர்பொரு ளுற்றிட ருற்றிலேன். (௩அ)

4415. சுற்றின் மேவத் தொகுசித லைபுரி
புற்றின் மேவும் புயங்கமென் றோர்ந்தபின்
உற்றி யானுமுற் றேனென் றமர்தொறும்
மற்று ளோர்செய் மதிக்குகை வைகுவேன். (௩௯)

4416. நுண்ணி தார்ச்சில் சிலம்பி யிழைக்குநூல்
நண்ணி யேயுறைந் துண்பதை நாடியான்
எண்ணி லாவுயிர் தந்தவை யேய்ந்துமற்
றுண்ணு மோர்பொரு ளேயென் றுணர்ந்தனன். (௪0)

4417. மான மோடவ மானம டைந்திடா
தூன நீங்கி யுவந்த சிறுவனைத்
தேனு லாந்தொடை யோய்முனந் தேர்ந்ததால்
யானு மோகையுற் றேனவை யுற்றரோ. (௪௧)

4418. அன்பி னுயினு மாசையி னுயினும்
வன்ப யத்தின் வயிரத்தி னுயினும்
நன்பெ ருந்திரு நாதனை யேநினைந்
தின்ப மவ்வுயி ரெய்துவ தென்பதை. (௪௨)

---

4414. ஊன் - மாமிசத்தை. அந்தரத்து - ஆகாயத்தில். ஓர் புள் - வேறு ஒரு பறவை. துரந்து - துரத்தி. பறித்தலும் - அபகரித்தலும். ஒன்று - பொருந்திய. உவப்புற்றது - மகிழ்ந்தது. ஓர் பொருளை உற்று அதனுல் இடரை உற்றிலேன். (பி - ம்) 4. பொருளெய் திடருற்றிலேன்.

4415. சிதலை - கறையான். சிதலை புரி புற்றில் புயங்கம் மேவும்; புயங்கம் - பாம்பு. ஒன்று உஞற்றேன்; ஒன்று - ஓர் இடத்தை. மதிக்குகை - புத்தியாகிய குகையில். (பி - ம்) 4. மலைக்குகை வைகுவேன்.

4416. நுண்ணிதா - மிகவும் சிறியதாக. சிலம்பி - சிலந்திப் பூச்சி. இழைக்கும் நூல் - தான் உண்டுபண்ணிய நூலை. பொருள் - பிரமப் பொருள். ஓர் பொருளே எண்ணிலா உயிர்தந்து அவை ஏய்ந்து உண்ணும்; 615.

4417. ஊனம் - குறைவு. தொடையோய்: விளி. தேர்ந்ததால் - நான் அறிந்து கொண்டமையால். ஓகை - மகிழ்ச்சி. அவை - சிறுவன் தன் மைகளை.

4418. பயத்தின் - பயத்தினுயினும். வயிரம் - தீராப்பகை. நாதனை - கடவுளை. இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்,

4419. ஈங்க றிந்தனன் யானுற்றெ டுத்தொரு
பாங்கர் வைத்துப் பரிவிற் பறந்தயல்
நீங்கும் வண்டை நினைந்த பசும்புழு
ஆங்கு வண்டுரு வாயது கண்டரோ. (சஙு)

4420. வாக்கி னைக்கடந் தோங்கிமற் றெங்கணும்
நீக்க மின்றீ நிறைந்தவவ் விண்டுவை
ஊக்க முற்றுணர் தற்கிட னாகலின்
ஆக்கை யுங்குரு வாய தாசனே. (சச)

4421. மடல்வி ரித்த மரைமலர் வைகுவோன்
சடம னைத்தையுந் தந்துமு வந்திலன்
இடா றுக்குமென் றெண்ணினன் மானுட
உடல்ப டைத்தபி னேகையுற் றான்முனம். (சரு)

4422. மாந்தர் யாக்கையிம் மாநிலத் தெய்துதல்
வேந்தர் வேந்த மிகவரி தாயினும்
காய்ந்த கண்ணமன் கைப்பட் டிருக்குமென்
றோய்ந்து சிலத் தமர்தனன் றாகுமே. (சசு)

4423. உறக்க மும்விழிப் பும்முறு தன்மைபோல்
பிறக்கும் யாக்கையி றத்தன்மெய் பெட்பொடும்
இறக்கும் யாக்கையு மேய்ந்தபி றத்தலின்
துறக்க வேண்டுமெய் யாசையைச் சூழ்ச்சியோய். (சஎ)

---

4419. ஒரு பாங்கர் - ஒரு பக்கத்தில். வண்டை நினைந்த புழு வண்டுருவாயது கண்டு, அன்பினுயினும், ஆசையினுயினும் பயத்தினுயினும், வைரத்தினுயினும் ஈதனையே நினைந்து உயிர் இன்பம் எய்துவது என்பதை (4418) அறிந்தனன்.

4420. வாக்கினை - வார்த்தையை. விண்டுவை - திருமாலை. உணர்தற்கு - அறிவதற்கு. ஆக்கையும் - உடலும்.

4421. மடல் - இதழ். மரை - தாமரை. வைகுவோன் - பிரமன். சடம் - உடம்பு. மானிட வுடலின் பெருமை கூறப்பட்டது.

4422. யாக்கை - உடலை. வேந்த : விளி. காய்ந்த - கோபித்த. நமன் - யமனது. சிலத்து - ஒழுக்கத்தில்.

4423. இறத்தல் மெய்யாகும் ; மெய் - உண்மை. பிறத்தலின் - மீண்டும் பிறத்தலால். மெய்யாசையைத் துறக்க வேண்டும் ; மெய்யாசை - உடலிலுள்ள விருப்பை. துறக்க - நீக்க. சூழ்ச்சியோய் : விளி.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4424. இத்திற மெதுவென் பானம் மெழிற்குலத் திறைவன் கேட்ப
அத்திரி புதல்வ னென்ன வறைதரு தவத்தின் மிக்கோன்
சித்துரு வாய தத்தாத் திரேயன்முன் செப்பி னுனென்
றுத்தவற் காழி மாய னுவந்துரை யாடி ஞனல். (சஅ)



# 5. ஞானகன்மம் உரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4425. அவ்வியம் விட்டறி வுற்றவு ளத்தோய்
இவ்வகை யங்ஙனி சைத்த கருங்கார்ச்
செவ்வி றத்திரு மாலவ னுக்கு
வெவ்வினை கட்டற மீள விரிக்கும். (க)

4426. நித்திய மென்ன நிகழ்த்திய கன்மம்
உத்தவ வன்பினு ஞற்றுத னன்றும்
சத்துட லென்று தரும்பல னுள்ளிச்
சித்தமொ டும்வினை செய்வது தீதே. (உ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4427. அறிவினி லாக்கை மூன்று மசத்திய மென்று நீத்து
நிறைவுறு மறிவு தானே நித்திய மென்று தேர்வோர்

---

4424. எது - யது வென்பவன். நம் என்றது கண்ணனை. அத்திரி முனிவருடைய. சித் - ஞானம்.

4425. அவ்வியம் - பொறாமை. உளத்தோய் என்றது பரிட்சித்தை; விளி. செவ்வி - அழகு. திருமால் - கண்ணன். அவனுக்கு - உத்தவனுக்கு. வினைக் கட்டு - கர்ம பந்தம். அற - நீங்க.

4426. நித்திய கன்மத்தை; கன்மம் - வினை. உத்தவ: விளி. அன்பின் உஞற்றுதல் - அன்பினால் செய்தல். சத் உடல் - நிலையான உடலை பலன் - பயனை. உள்ளி - நினைந்து.

4427. அறிவினில் - அறிவினால். ஆக்கை மூன்றும் - ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமாகிய சரீர மூன்றும். அசத்தியம் - பொய்யானவை. ஒன்றூர் -

பிறவிவெங் கடலே யொன்றூர் பிறங்குவர் பிறங்கும் வண்ணம்
நறைதுளித் தொழுகு தாரோய் நவிற்றுவ னினிது கேட்டி. (௩)

4428 தருக்களி னுருவ மெங்குந் தழனிறைந் தென்று நீங்கா
திருக்கினுங் கடையின் வேறு யெரிக்குமவ் வனத்தை யேபோல்
திருக்கிளர் கால மூன்றுஞ் சேர்ந்துறை யறிவு தேரின்
உருக்கள்வே றுக வேறு யுடலுறும் பிறவி நீங்கும். (௪)

4429. வளர்தருந் தருக்க ளாகி வயங்குமோர் தழலே போல
ஒளிகொளு முருக்க ளாகி யுறையுநல் லறிவு மொன்றே
அளிதரு மியம மாதி யருங்குணத் தமர்மா ணுக்கன்
தெளிவுறு குரவன் சொல்லாற் றேறுதல் வேண்டு மாதோ. (௫)

4430. போற்றுகீ ழரணி போல்வான் புகாறு குரவ னுங்குற்
றேற்றுமே லரணி போல்வா னியைந்தநற் குணமா ணுக்கன்
மாற்றருஞ் சந்தி போலும் வழங்கிய வுபதே சச்சொல்
தோற்றிய வங்கி போலுந் தோன்றுநல் லறிவு மாதோ. (௬)

4431. அரும்பல னெஞ்சி னுள்ளா னணிவினை விளைத்தல் வேண்டும்
தரும்பய னடைய வேண்டிச் சாற்றிப மகங்க ளாதி
வரும்பல வினையுஞ் செய்வோன் வான்மிசைப் போகந் துய்த்துப்
பெரும்பலன் றொலைந்த காலைப் பிறந்திறந் தயர்த லிண்ணம். ()

---

பொருந்தார். பிறங்குவர் - விளங்குவர். தாரோய் என்றது உத்தவனை; விளி. கேட்டி - கேட்பாயாக.

4428. தரு - மரம். தழல் - நெருப்பு. கடையின் - கடைந்தால். கடையின் வேறாய் அவ்வனத்தையே எரிக்கும். அறிவு தேரின் - ஆத்ம ஞானத்தை உணர்ந்தால். உருக்கள் - உருவங்கள். தருக்கள் உருக்களுக்கும், தழல் அறிவுக்கும் உவமைகள்.

4429. தருக்கள் பலவாயினும் அவற்றிலுள்ள தழல் ஒன்றே ஆதல் போல் உருக்கள் பலவாயினும் அவற்றிலுள்ள அறிவு ஒன்றே. இயமம் ஆதி - யமம், நியமம் முதலிய எட்டுக் குணங்கள். குரவன் - குரு.

4430. புகர் - குற்றம். குரவன் கீழரணி போல்வான்; அரணி - அரணிக் கட்டை. மாணுக்கன் மேலரணி போல்வான். மாற்றரும் - மாற்றுதற்கரிய. உபதேசச் சொல் சந்தி போலும்; போலும் - போலாகும். நல்லறிவு அங்கி போலும்; அங்கி - நெருப்பு.

4431. பலனை உள்ளானாய் வினை விளைத்தல் வேண்டும்; உள்ளான் - நினையான். விளைத்தல் - செய்தல். பயன் - பலனை. வேண்டி - விரும்பி. மகங்களாதி - யாகம் முதலியன. வான்மிசை - சுவர்க்கத்தில். துய்த்து - அநுபவித்து. தொலைந்த காலை - நீங்கிய போது. அயர்தல் - வருந்துதல். பயனடைய வேண்டி வினை செய்வோன் அயர்தல் திண்ணம்.

4432. அழிவுறும் போகம் வேண்டி யருவினை யிழைத்து வான்போய்க்
குழைமுக வரம்பை மாதர் குவிமுலைப் போக மாந்தல்
எழிறிக ழாச னல்வா ளேற்றவே யேகு கள்வோர்
உழையுறு நகரி லோர்பா லூணிரந் தருந்தல் போலும். (அ)

4433. பொன்னகர்ப் போகம் வேண்டிப் பொருந்துநல் வினைசெய் மாந்தர்
துன்னுபற் பலவா மான்மாச் சொல்லுமா நீச னில்லை
உன்னினென் றுரைப்ப ரோரா ரும்பர்கோ னுதி யானோர்
என்னெறி லேவ லஞ்சி யியற்றின ரியங்கு வாரே. (சு)

4434. என்றலு மொன்று தானே யாவுமென் றுரைத்துப் பின்னர்
ஒன்றுமென் னேவ லஞ்சி யுஞற்றுவ ரும்ப ரென்றாய்
நன்றுளந் தெளிய வீது நவின்றரு ளென்ன வேந்து
மன்றலந் துளவத் தெம்மான் வழங்கினன் விளங்க மன்னோ. ()

4435. மாயையா முபாதி யாலே வழங்கின பலவல்லாமல்
தூயவா மணியிற் பொன்போற் றுலங்குமெவ் வுலகு மாகி
மேயதோர் பொருளே யாகும் வினையினாற் பேத மாகிக்
காயமே தாமென் பார்கள் கலங்குவர் வெருக்கொண் டம்மா. ()

---

4432. அருவினை - செய்தற்கரிய காரியங்களை. இழைத்து - செய்து. குழை - காதணி. மாந்தல் - அநுபவித்தல். வாளில் ஏற்ற. ஏகு கள்வோர்- போகின்ற கள்வர். உழை - பக்கத்தில். ஊண் - உணவை. இரந்து - யாசித்து. போலும் - போலாகும்.

4433. பொன்னகர்ப் போகம் - சுவர்க்க போகத்தை. உன்னின் ஆன்மா பற்பலவாம்; ஈசன் இல்லை. பற்பலவாம் - பலவகையாம். ஈசன் - கடவுள். மாந்தர் பற்பலவாம், இல்லை என்றுரைப்பர். ஓரார் - அறியார். உம்பர்கோன் - இந்திரன். என் என்றது கண்ணன். இயற்றினர் - வினை செய்பவராய்.

4434. - என்றலும் - என்று கண்ணன் கூறலும். யாவும் ஒன்றே; யாவும் - எல்லா ஆன்மாக்களும். ஒன்றும் - பொருந்திய. ஈது - இவ்விஷயத்தை. நவின்றருள் - சொல்வாயாக. என்ன - என்று வினவ. வேந்து "என்றாய், தெளிய நவின்றருள்" என்ன எம்மான் வழங்கினன்; வேந்து - உத்தவன்.

4435. உபாதி - தோற்றம். தூயவாம் - பரிசுத்தமான. அணியில் - ஆபரணங்களில். துலங்கும் - விளங்குகின்ற. மேயது - பொருந்தியது. ஓர் பொருளே - ஒரு பரம் பொருளே. பேதம் - வித்தியாசம். காயமே - உடலே. காயமே தாம் என்பார்கள் வெருக்கொண்டு கலங்குவர்; என்பார் - அகங்காரம் கொண்டவர்கள். வெரு - அச்சம்.

4436. நித்திய முத்த னென்று நித்திய பெத்த னென்றும்
தத்துவந் தெளிந்தோர் சொல்லுந் தன்மையா தென்று கேட்கின்
உத்தவ வுரைக்கு துங்கே ளொப்பின்றி யுயர்ந்த வீசன்
முத்தனுஞ் சீவ னென்பான் மொழிந்தவப் பெத்த னுமே.(கஉ)

4437. சீவனு மீசன் றானுஞ் செப்பிய வாக்கை தோறும்
மேவுவ ருபாதி யாலே விழைந்தநல் லின்ப துன்பம்
தாவிலாச் சீவ னுண்ணுஞ் சார்ந்துண்ணுந் தன்மை வெய்யோன்
பூவுல வாவி நீருட் பொருந்தினின் றசைதல் போலும். (கங)

4438. கலந்தன னுகருஞ் சீவன் கனவுகண் டிருக்கின் றோனும்
மெலிந்தொன்று நகரா வீசன் விழித்தினி திருக்கின் றோனும்
நலந்தரும் வித்தை யென்று நலிவுறு மவித்தை யென்றும்
வலந்தரு மெமது மாயை மருவுட லிரண்டுண் டாமால். (கச)

4439. அவித்தையா முடல முற்றோ ரளவறு பிறவி சேர்வார்
பவித்திர வித்தை யென்னப் பகர்தரு முடல முற்றோர்
புவித்தலத் தாசர் வீட்டிற் பொருந்துவர் புகன்றோர் தன்மை
நவிற்றின்மா வித்தை யென்னு நலந்திக ழுடல முற்றோர்.(கரு)

---

4436. முத்தன் = முக்தன் - முக்திபெற்றவன். பெத்தன் - மாயையாற் கட்டப்பட்டவன். ஈசன் முத்தன் ஆம். சீவன் பெத்தன் ஆம்.

4437. ஆக்கை தோறும் - ஒவ்வோர் உடலிலும். மேவுவர் - பொருந்துவர். உபாதி - தோற்றம். தா - கேடு. சீவன் உபாதியாலே உண்ணும்; உண்ணும் - அனுபவிக்கும். சார்ந்து - உடலைச் சார்ந்து. வெய்யோன் - சூரியன். பூ உலவு ஆவி நீருள்; ஆவி - தடாகம். உண்ணும் தன்மை, வெய்யோன் ஆவி நீருள் அசைதல் போலும்; அசைதல் சூரியனுக்கு இல்லாததுபோல் ஈசனுக்கு இல்லை என்றபடி.

4438. நுகரும் - இன்ப துன்பங்களை அநுபவிக்கின்ற. சீவன் இருக்கின்றோன் ஆம். நுகரா - அனுபவியாத. நலம் - நன்மை. வித்தை - ஞானம். நலிவு - துன்பம். அவித்தை - அஞ்ஞானம். வலந்தரு - வெற்றியைத் தருகின்ற. மாயை மருவிய உடல் வித்தை அவித்தை என்று இரண்டு வகை உண்டு.

4439. அவித்தையாம் உடல் - அஞ்ஞானம் பொருந்திய உடலை. அளவறு - அளவில்லாத. பவித்திரம் - பரிசுத்தம். அரச - உத்தவனே : விளி. வித்தை உடலுற்றோர் வீட்டில் பொருந்துவர்; வித்தை - ஞானம். புகன்றோர் தன்மை - வித்தை, அவித்தை உடலுற்றோரது தன்மையை. இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

4440. கூறிரு வினையி னொன்றார் கொடுங்கதை கொண்டு மோதி
சீறினர் வைது ளோர்க்குஞ் சிறப்புநன் கியற்றி னோர்க்கும்
மாறறு சமனே யாகி மவுனமுற் றிருப்பர் மற்றோர்
ஆறறி யாச தம்மை யறிந்திடார் வருந்து வாரே. (கசு)

4441. என்னிடத் தன்பு செய்யா தியற்றிய வினையி னோரும்
உன்னுபல் வினைகள் யாமே யுஞற்றுவ மெனச்செய் வோரும்
நன்னயக் காம மில்லா நாரியர்ப் புணர்ந்து ளோரின்
துன்னுமைப் பசுக்காத் தோரிற் றுயருவர் பயன்பெ றாரே. ()

4442. மன்னுமைம் புலனு மாய்த்து மருவிய மனத்தை யென்றும்
என்னிடத் திருத்தல் வேண்டு மிருத்தலிங் கரிதா மென்னின்
சொன்னநல் வினைசெய் தாலுந் துகளுறு பவைசெய் தாலும்
பன்னுறு மன்பி னந்தப் பயனெமக் களித்த னன்றே. (கஅ)

4443. அளிசெயு மனத்த ராகி யைம்புல னடக்கி யென்றும்
ஒளியொடு புனித மேன்மை யுவப்பருஞ் சமனுற் றுள்ளம்
தெளிவுறு பெரியோர் தம்மைச் சேரினல் லன்பு கூரும்
களிதரு மன்பு கூரிற் கலக்குநல் லறிவு தானே. (கசு)

4444. இயம்புமெம் மிடத்தி னன்பிங் கியற்றுத லெங்ங னென்னின்
நயஞ்செயெஞ் சரிதங் கேட்ட னவிற்றுத லும் போற்றல்

4440. கூறப்பட்ட இரு வினையின்; இருவினை - நல்வினை தீவினை. ஒன்றார் - பொருந்ாதவர். கதை - கதாயுதத்தை. சீறினராய் வைதவர்க்கும். மற்றோர் - அவித்தை யுடலுற்றோர். ஆறறி அரச என்றது உத்தவனை; ஆறு - அரசர்க்கு உரிய ஆறு அங்கங்கள்; அவை, படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்பன. மற்றோர் அறிந்திடாராய் வருந்துவர்.

4441. என்னிடம் என்றது கண்ணன். யாமே உஞற்றுவம் - நாமே செய்வோம். காமம் - விருப்பம். நாரியர் - பெண்களை. புணர்ந்துளோரின்: இன் - உவம வுருபு. மைப்பசுக் காத்தோரின் - கறவையற்ற பசுவைக் காத்த வரைப் போலவும். வினையினோரும், செய்வோரும் துயருவர்; பயன் - பலனை.

4442. ஐம்புலனும் - ஐந்து இந்திரியங்களையும். மாய்த்து - அடக்கி. என்றும் - எப்பொழுதும். இருத்தல் - இருக்கும்படி செய்தல் துகளுறு பவை - குற்றமுறுபவை. அன்பின் - அன்போடு. எமக்கு: என்றது கண்ணன்.

4443. அளி - அன்பு. புனிதம், மேன்மை, சமன் உற்று; சமன் - நடு நிலைமை. கூரும் - மிகும். கூரின் - மிகுந்தால். நல்லறிவு கலக்கும்.

4444. எம்மிடத்தில் என்றது கண்ணனிடத்தில். எங்ஙன் - எவ்வி

பயன்றரு மெமது கோயிற் பணிவிடை முதல செய்தல்
வயந்தரும் பொறுமை யுண்மை மரீஇயெமை வழுத்த லாமே.

4445. பருதிசெந் தழல்வான் பூமி பசுவரு மதிதி யன்பர்
விரிபுனல் வளிதன் னுக்கை விளம்புபல் லுயிர்க ளென்ன
உரைதரு பதினொன் றின்பா லுவப்பொடெம் பூசை யாற்றின்
இருவினைச் சிமிழ்ப்பு நீங்கு மின்பவீ டெய்து மன்றே. (உக)

4446. தினகா னிடத்துப் பூசை செய்வது மறையிற் போற்றல்
அனலிடை யாற்று பூசை யாகுதி முறையிற் பெய்தல்
நினைவரு வானிற் பூசை நெஞ்சினுட் டியானஞ் செய்தல்
இனிதுறு தரையிற் பூசை யெந்திர மெழுதி யேத்தல். (உஉ)

4447. துதிதரும் பசுவிற் பூசை தொழுதுபுல் லுதவ றுன்னும்
அதிதிதன் னிடத்துப் பூசை யகமகிழ்ந் தடிசி னல்கல்
மதிதரு மன்பர் பூசை மருவுதந் தமர்போற் காணல்
ததைமலர்ப் புனலிற் பூசை தருப்பணம் புரித லாமே. (உங)

4448. பேசிய வளியிற் பூசை பிராணனைக் காத்த லாகும்
காசிறம் முடலிற் பூசை கலன்றுகில் புனைத லாகும்
மாசில்பல் லுயிரிற் பூசை வழங்குதம் முயிரே போல
ஆசறு முயிரின் கூட்ட மனைத்தையும் புரத்த லாமே. (உச)

---

தம். எம் சரிதத்தைக் கேட்டல். நவிற்றுதல் - சொல்லுதல். முதல - முதலியவற்றை. வயம் - வெற்றி. மரீஇ - பொருந்தி. எமை - எம்மை.

4445. பருதி - சூரியன். தழல் - நெருப்பு. அதிதி - விருந்தினர். அன்பர் - பக்தர். புனல் - நீர். வளி - காற்று. தன் ஆக்கை - தன்னுடல். என்ன - என்று. எம்பூசை - எமது பூசையை. ஆற்றின் - செய்தால். இருவினை - நல்வினை தீவினை. சிமிழ்ப்பு - கட்டு.

4446. இதுமுதல் பருதி முதலிய பதினொன்றையும் பூசைசெய்யு முறையைக் கூறுகிறார். தினகரன் - சூரியன். மறையின் போற்றல் - மந்திரத்தால் துதித்தல். அனலிடை - நெருப்பில். வானில் - ஆகாயத்தில். தரையில் - பூமியில். எந்திரம் எழுதி ஏத்தல் - உருவத்தை வரைந்து துதித்தல்.

4447. புல்லை உதவுதல். அகமகிழ்ந்த - மனமகிழ்ந்து. அடிசில் நல்கல் - உணவு கொடுத்தல். தமர்போல் காணல் - சுற்றத்தாரைப் போலக் கருதுதல். ததைதல் - நெருங்குதல்.

4448. வளியிற் பூசை - வாயு பூசை. பிராணனை - உயிரை. காசு இல் - குற்றமில்லாத. கலனையும் துகிலையும் புனைதல். உயிரிற் பூசை - உயிர்ப் பூசை. ஆசு - குற்றம். புரத்தல் - காத்தல்.

4449. சங்கொடு திகிரி வில்வா டரித்தவெம் வடிவு பெற்ற
பொங்கெழி லுருக்கண் ணுடிப் பூசைசெய் வதுவு நன்றும்
கொங்கலர் சோலை வாவி குளங்களுண் டாக்க லுனும்
மங்குலி னுதவு வேந்தே மருவுமெம் பூசை யாமே. (உ௫)

4450. நண்ணிய வன்பி னாலே நயந்தெமை யடைதல் போல
எண்ணுசாங் கியத்தி னானு மெண்வகை யோகத் தானும்
பண்ணுறு தவத்தி னானும் பகர்வரு விரதத் தானும்
மண்ணகத் துறைவோ ரெம்மை மருவுதற் கெளிதன் றம்மா.

4451. சொல்லுகற் றவரைச் சேரிற் றுகளில்பே ரன்பு வந்து
புல்லுமென் றுரைத்த தல்லாற் பொருந்துதம் புந்தி யாலே
வல்லையி னன்பு செய்து வந்தெமை யடைந்து ளோர்கள்
அல்லலிங் கொழிந்து நின்றோ ரளப்பிலா ரறைதுங் கேண்மோ.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4452. மாவலி முதலா வழங்குதா னவரும்
வண்புகழ் வீடணன் முதலாத்
தாவிலா வலிசே ராக்கரு மகஞ்செய்
தவத்தினர் மருவெழின் மடவார்
கோவியர் முதலா மடந்தையர் குழுவும்
குஞ்சாஞ் சாம்பவா னநுமான்
காவில்வாழ் கவியின் றலைவனே முதலாக்
கருதரும் பற்பல விலங்கும். (உ௮)

4449. திகிரி - சக்கரம். உருக்களை நாடி. கொங்கு - வாசனை. வாவி - தடாகம். மங்குலின் - மேகத்தைப்போல. வேந்தே - உத்தவ்: விளி. உண்டாக்கலும் எம்பூசையாம்.

4450. எண்வகை யோகம் - யமநியமாதிகள். மருவுதற்கு - அடைதற்கு. அம்மா: அசை நிலை.

4451. தவரைச் சேர்ந்தால் அன்புவந்து புல்லும்; 4443. புந்தியாலே-புத்தியாலே. வல்லையின் - விரைவில். அல்லல் - துன்பம். அளப்பிலார் - அளவில்லாதவர். அறைதும் - அவரைக் கூறுகிறேன்.

4452. தானவரும் - அசுரரும். தாவிலா - கேடில்லாத. மகம் - யாகத்தை. மடவார் - சபரி முதலியோர். குஞ்சரம் - கஜேந்திரன். காவில்-சோலையில். கவியின் தலைவன் - சுக்ரீவன்; கவி - குரங்கு. விலங்கும் - மிருகங்களும்.

4453. அருச்சுனன் முதலா நந்தமர் குழுவு
மமாரும் யமுனையின் கரைசேர்
உருச்சுனை யடைகா ளிங்கனே முதலா
முரகரும் பறவையு முரைக்கும்
திருக்கிளர் வணிகர் பின்னவர் வேடர்
செப்பரும் பூரியர் முதலாத்
தரைத்தலத் தமர்ந்த மாக்களு மாவார்
சாற்றினிங் கின்னமும் பலரே. (உகூ)

4454. பொற்புறு மதுரைப் பதியினின் முன்யாம்
போயபின் கோவியர் யாரும்
பற்பல யுகமே யொருகண மாகப்
பரிவொடு மெம்மையே நினைந்து
சொற்பல நதியுங் கடலினை யடைந்து
சொல்லிய நாமரூ பத்தை
முற்பக லொழித்த போற்றமை மறந்து
முன்னுமெந் தமையடைந் தனரால். (௩0)

4455. உரைப்பது முரைப்பக் கேட்பது மினிவே
றொன்றிலை யெனவுளத் துணர்ந்து
திரைப்பனிக் கடல்சூழ் புவிமுத லுலகாச்
சேர்ந்துநூல் படத்துரு வாகி
இருப்பது போல வெங்கணு மிருக்கு
மெய்ம்மையே நினைந்தனை யாகி
விரைப்பசுந் துணர்த்தா ருத்தவ நீயும்
வெவ்வினை யொழிதிமற் றின்றே. (௩க)

---

4453. நந்தமர் - நம்மைச் சேர்ந்தவர். அமாரும் - தேவரும். உரு- அழகு. உரகரும் - பாம்பினமும். பறவையும் - சடாயுவும். பின்னவர் - சூத்திரர். வேடர் - குகன் முதலியோர். பூரியர் - சண்டாளர். மாக்கள் - மனிதர்.

4454. பொற்பு - அழகு. மதுரைப் பதியினின் - மதுரை நகரி விருந்து. ஒரு கணம் பற்பல யுகமாக. பரிவு - அன்பு. நாமரூபத்தை - பெயரையும் உருவத்தையும். கோவியர் நினைந்து தமை மறந்து எந்தமை அடைந்தனர்.

4455. உளத்து - மனத்தில். உணர்ந்து - அறிந்து. படத்து - ஆடையினது. விரை - வாசனை. துணர் - கொத்து. உத்தவ 'இனி வேறொன்றிலை, எம்மை நினைந்து வினையொழிதி'; ஒழிதி - நீங்குவாயாக.

4456. மாயையென் றுரைக்கும் வித்தினிற் பிறந்து
மருவுமுக் குணப்பா ரையின்மேல்
மேயவிந் தியமாம் பதின்சினை விடுத்து
வேட்கையாம் வேர்பல வுடைத்தாச்
சேயுயர்ந் திரண்டு வினைப்பயன் பழுத்துச்
சீவனோ டீசனென் றுரைக்கும்
தூயபொற் பறவை யிரண்டுட னிருப்பத்
துலங்குமா லாக்கையாந் தருவே. (௬௨)

4457. சொல்லிரு வினையின் பயனெனும் பழத்தைத்
தோற்றுறு சீவனும் பறவை
புல்லிநின் றருந்த மீசனும் பறவை
பொசித்திடா துணர்ந்துகொண் டிருக்கும்
நல்லெழிற் குருவான் ஞானவா ளட்டி
நவிற்றுடற் றருவறத் தடிந்தால்
மல்லுயர் புயத்தோய் யிரண்டற வொன்றும்
வரம்பிலா வின்பமும் வருமே. (௬௩)

---

4456. வித்தினில் - விதையில். முக்குணங்களாகிய பாரரையின் மேல்; முக்குணம் - சத்வம், ரஜஸ், தமஸ். பாரரை - மரத்தின் பருத்த அரைப்பக்கம். இந்தியங்களாகிய ஓர்பதின்சினை விடுத்து; இந்தியம் - ஞானேந்திரியம் ஐந்தும், கருமேந்திரியம் ஐந்தும். பதின்சினை - பத்துக்கிளைகளை. வேட்கை - ஆசை. உடைத்தா - உடையதாக. சேயுயர்ந்து - வானில் உயர்ந்து. இரண்டு வினைப்பயன் - நல்வினை தீவினைப் பயன். ஆக்கையாம் தரு துலங்கும்; தரு - மரம். ஆக்கை தருவாக உருவகிக்கப்பட்டது.

4457. சீவனாகிய பறவை அருந்தும். பொசித்திடாது - உண்ணாது. குருவான் - குருவினால். ஞானமாகிய வாளைத் தீட்டி உடலாகிய தருவைத் தடிந்தால்; தடிந்தால் - வெட்டினால். புயத்தோய் - உத்தவ; விளி. ஒன்றும் இன்பம் வரும்.

# ௬. குணவிகாரமுயிர்க்கில்லை என்ற அத்தியாயம்.

---

தாவு கோச்சகக் கலிப்பா.

4458. வளர்ந்துவரு குணமூன்று மனத்தைநனி தொடர்ந்திருக்கும்
தளர்ந்துமன முந்தொடர்ந்து சாற்றுகுணத் தொடுமிருக்கும்
உளர்ந்துநறை யளிநுகர்தா ருத்தவனே யொண்புலத்தால்
விளைந்தகுணத் தொடுமனத்தை வெவ்வேறு பிறித்தறியின். (க)

4459. உத்தமமென் றுரைக்கும்வினை யுண்டாஞ்சத் துவத்தெனவும்
மத்திமமென் றுரைக்கும்வினை வயங்குமிரா சதத்தெனவும்
வித்தகனே யதமவினை விளைகுறுந்தா மதத்தெனவும்
இத்தகைய குணமூன்றி னியலும்வினை யொருமூன்றும். (உ)

4460. அறைந்தவினை யொருமூன்று மரியகுண மிரண்டுமதி
நிறைந்தபுகழ் சத்துவத்தா னீங்கியபி னீங்குறுமால்
சிறந்துசெறி யருஞ்சுரத்திற் சேர்ந்துவளர் கிளையிடத்துப்
பிறந்தவெரி யவையெரித்த பினையாங்குக் காப்பதுபோல். (ங)

---

4458. குணமூன்று - சத்வம், ராஜஸம், தாமதம் என்பன. நனி - மிகவும். குணம - முக்குணம். உளர்ந்து - குடைந்து. அளி - வண்டுகள். புலத்தால் - அறிவால். அறியின் - அறிந்தால்.

4459. சத்துவத்து உத்தமவினை உண்டாம்; சத்துவத்து - சத்துவ குணத்தால். வினை - காரியம். உண்டாம் - உண்டாகும். இராசதத்து மத்திமவினை வயங்கும். வித்தகனே: விளி. தாமதத்து அதம வினை விளை குறும். குணமூன்றின் மூன்று வினை இயலும்.

4460. வினை மூன்று - உத்தம, மத்திம, அதம வினைகள். குண மிரண்டு - ராஜஸ தாமசம். மதி - ஞானம். சத்துவம் - சத்துவ குணம். வினை மூன்றும் குணமிரண்டும் நீங்குறும். செறிதல் - நெருங்குதல். கிளையிடத்து - மாக்கிளையில். எரி - நெருப்பு. அவை - அம்மாக்கிளைகளை. எரித்தபினை - எரித்தபிறகு; ஐ - சாரியை. காப்பது - மறைவது. வினைக்கும் குணங்களுக்கும் எரியும், சத்துவத்துக்குக் கிளையும் உவமைகள்.

4461. என்றலுமுக் குணத்தினொடு மியங்குமனத் தொடுநீங்கா
தொன்றியுறை யுயிர்பிரித்திங் குடலொழிப்ப தெவ்வாறே
நன்றுணரும் படிவகுத்து நவிற்றெனவுத் தவன்வினவத்
தொன்றுதொடு மறைப்பொருளாந் தூயவனுங் கிதுசொல்லும். (௪)

4462. வன்னமல ரோன்மருங்கு வந்துசன காதியர்நீ
சொன்னபடி யேயிது சொல்லுதியா லெனவினவ
என்னையய னுள்ளிருணீக் கெனநினைந்தா னினைத்தலுமே
அன்னவுரு வுற்றவண்யா மடைகுற்றே மடைதலுமே. (௫)

4463. மாமலரோ னாயிடைக்கண் மருவினர்க ளெல்லோரும்
ஏமவெகி னத்துருவ மெய்தியநீ யார்கொலென
நாமவறி வுருவாகி நண்ணுபொரு ளொன்றேயாம்
காமருட லைக்கருதிற் றிவணெனனக் கழறலுமே. (௬)

4464. தோற்றுருவ மிவ்வெல்லாந் துலங்குமைந்து பூதமல்லால்
வேற்றுருவ மொன்றேனும் விளம்பினிலை யாகலினான்
ஏற்றவெகி னத்துருவ மெய்தியநீ யார்கொலெனச்
சாற்றுற்ற வம்மொழிக்குத் தருபயனொன் றுற்றிலதே. (௭)

4465. என்றுமுனங் கூறியவ னெழிலாரு மலரயனோ
டொன்றுமுரு வத்தோர்க ளுவப்பினொடு கடாயிறைஞ்ச

---

4461. என்றலும் - என்று கண்ணன் கூறலும். ஒன்றி - பொருந்தி. உயிரைப் பிரித்து உடலை ஒழிப்பது எவ்வாறோ? நவிற்று - சொல்வாயாக. தொன்று தொடு - தொன்று தொட்டு. தூயவன் - கண்ணன்.

(பி - ம்) 4. துன்றுமலர்த் தண்டுளவத் தொடையல்புனை முகில் சொல்லும்.

4462. வன்னம் - வர்ணம். மலரோன் - பிரமன். என்னை என்றது கண்ணனை. அயன் - பிரமன். உள்ளிருள் - மனத்திலுள்ள அஞ்ஞானத்தை. நீக்கு - போக்குவாயாக. மலரோனைச் சனகாதியர் வினவ அயன் என்னை நினைந்தான். அன்னத்தின் உருவை உற்று.

4463. மலரோன் - பிரமன். ஆயிடைக்கண் - அவ்விடத்தில். மருவினர்கள் - சனகாதியர். ஏம எகினத்து - பொன் அன்னத்தின். யார்கொல் - யாரோ. என - என்று கேட்க. அறிவுருவாகி - ஞான உருவமாகி. காமர் - அழகிய.

4464. இவ்வெல்லாம் - இவை யெல்லாம். இலையாகலினால் - இல்லையாதலால். எகினத்து - அன்னத்தினுடைய. சாற்றுற்ற - சொல்லிய.

4465. மலரயனோடு - பிரமனோடு. உருவத்தோர்கள் - சனகாதியர்; உருவம் - அழகு. கடாய் - வினவி. புனலிலிருந்து பாலைப்பிரிக்கும்.

அன்றுபுனல் பால்பிரிக்கு மன்னவுரு வாகியயாம்
வென்றிதிகழ் வெள்வேலோய் மீட்டுமிவை செப்பினமால்.(அ)

4466. வழுத்துபெருங் குருவானு மருவறுபோ கத்தானும்
தழைத்துவரும் பேதைமையைத் தள்ளியொன்றாய்ப் பாராமே
பழித்தவிருஞ் செயல்பொருந்திப் பற்பலவாக் கண்டிருப்போர்
விழித்திருந்தும் கனவுநனி மேவினரைப் போலுவரே. (கூ)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4467. சித்தமுஞ் சித்தத் துதித்தமுக் குணனுஞ்
சீவனுக் காகையாற் றெரிக்கின்
சத்துவ குணத்திற் சாக்கிர முண்டாஞ்
சாற்றிய கனவிரா சதத்தான்
மற்றவை யவத்தை யிரண்டலான் மூன்று
மவத்தையுந் தாமதத் தாகும்
இத்தகை யவத்தை மூன்றையு மடையா
திடைவிடா துயிரதிங் கிருக்கும். (க0)

4468. சாற்றிய குணமு மாக்கையு மனமுந்
தானல வென்பதை யறிந்தால்
போற்றிய வாக்கை யுடனிருப் பதுவும்
போவது மறிந்திடா ராகி

---

வேலோய் என்றது உத்தவனை. இவை - இவ்விஷயங்களை. செப்பினம் - சொன்னோம்.

4466. குருவானும் அறுபோகத்தானும் பேதைமையைத் தள்ளி. ஒன்றாய் - ஒரு பொருளாக. பாராமே - பார்க்காமல். பழித்த செயலைப் பொருந்தி. கனவு - சொப்பனத்தை. பேதைமை நீங்கியும் பழிச்செயல் புரிவோரை விழித்திருந்தும் கனவுகாண்பவர் என்றார்.

4467. சித்தம் - மனம். முக்குணம் - சத்துவம், ராசதம், தாமதம். ஆகையால் - ஆவதால். சாக்கிரம் - சாக்கிராவஸ்தை. உண்டாம் - உண்டாகும். இராசதத்தான் கனவு; கனவு - சொப்பனவஸ்தை. உண்டாம் என்று வருவிக்க. அவை - அந்த சத்துவ ராசத குணங்களுடைய. தாமதத்து மூன்றும் அவத்தையும் ஆகும்; மூன்றும் அவத்தை - சுஷுப்தி. உயிர் இவ்வவத்தை மூன்றையும் அடையாதிருக்கும்.

4468. ஆக்கை - உடல். தானல - தான் இல்லை; தான் என்றது

ஏற்றதம் புயமேற் றுகில்கழி வ்துவு
மிருப்பதும் வெண்ணறை பருகி
மாற்றரு மதத்தி னறிந்திடா தொழுகு
மாக்களைப் போலுவர் மாதோ. (கக)

4469. யானென தென்னுஞ் செருக்கற வெறிந்தோன்
யாக்கையோ டுறையினும் யாக்கை
தானென தெனமுன் னிழைத்த வெவ்வினைதான்
றருபயன் றொலைதருங் காறும்
போனக மருந்திப் பொன்றிய பின்னர்ப்
புகலுட லொன்றையும் பொருந்தான்
ஊனுட லடைந்த வுறக்கமற் றுறைவோ
ருறுவரோ வொருகன வுரைக்கின். (கஉ)

கலிவிருத்தம்.

4470. சொல்லு புந்தியிற் றோன்றிய சீவனுக்
கல்லல் செய்குண மில்லை யறியினென்
றெல்லை யற்ற விருந்தவர் தம்முளம்
வல்லை யுற்று வருட்டின முன்னமே. (கங)

4471. துங்க மாதவர் சொல்லிய வெண்வகை
அங்க மாகிய யோகநன் காற்றினர்
எங்கு மாகி யிருந்தவெம் பாலுறல்
சிங்க வேறனை யாயினிச் செப்புதும். (கச)

---

ஆன்மாவை. ஆக்கையுடன் - உடலுடன். புயமேல் - தோளில். துகில் - ஆடை. வெண்ணறை - கள். அறிந்திடாராகி மாக்களைப் போல்வர்.

4469. யான் எனது என்னும் செருக்கு - அகங்கார, மமகாரம். அற - முற்ற. யாக்கையோ டுறையினும் - உடலுட னிருந்தாலும். முன் - அகங்கார மமகாரத்தை நீக்குமுன். இழைத்த - செய்த. வெவ்வினை - தீவினை. தொலைதருங்காறும் - தீரும்வரை. போனகம் - உணவு. பொன்றிய - அழிந்த. பொருந்தான் - பொருந்தமாட்டான். ஊனுலான உடலை; ஊன் - மாமிசம். உறக்கமற்று - துயிலின்றி. கனவு உறுவரோ ? உறார் என்றபடி.

4470. புந்தியில் - புத்தியில். அல்லல் - துன்பத்தை. அறியின் - இல்லை. தவர் - சனகாதியரது. உளம் - மனத்தை. வருட்டினம் - தெளிவித்தோம். (பி - ம்) 1. சொல்லி னந்தியில்.

4471. துங்கம் - சிறப்பு. தவர் - முனிவர். எண்வகை - எட்டு வகையான. ஆற்றினர் - செய்தவர். எங்கு மாகி - எல்லா விடத்திலுமாகி. உறல் - வந்தடைதலை. சிங்கவேறனையாய் : விளி. செப்புதும் - சொல்வோம்.

# 7. யோகசித்தி உரைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4472. ஏர்பெறு நியமத் தோடு மியமமா சனங்க ளென்றும்
பேர்பெறும் பிராணு யாமம் பிரத்தியா கார மென்றும்
தார்பெறும் புயத்து வேந்தே தாரணை தியான மென்றும்
சீர்பெறுஞ் சமாதி யென்றுஞ் சிறக்குமட் டாங்க யோகம். (க)

4473. திருந்திய யோக நூலிற் செப்புமா சனத்துச் செவ்வே
இருந்தலை வற்று மூக்கி னெழினுனி கண்ணி னோக்கி
விரிந்தவைம் புலனு மாய்த்து விளம்பூ ரகமுன் னாகப்
பொருந்திய பிராணு யாமம் புகாறப் புரிதல் வேண்டும். (உ)

4474. பூரகங் கும்ப கஞ்சேர் பொருந்திரே சகங்க ளாயும்
சீருறு ரேச காதி திகழ்விப ரீத மாயும்
பேருறு பிராணு யாமம் பிரணவத் தொடுமோர் திங்கள்
ஏருற வியற்றின் வாயு வினிதவன் வயம தாமே. (ஙு)

4475. வசம்வரி னிடாவி னோடு வயங்குபிங் கலையை மூட்டி
அசைவற நடுவி னுற்றுங் கவிர்சுழு முனைமேற் போகின்

---

4472. ஏர் - அழகு. வேந்தே, நியமம், இயமம், ஆசனம், பிராணு யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்றும் அட்டாங்க யோகம் சிறக்கும்.

4473. ஆசனத்து - ஆசனத்தில். செவ்வே - செவ்வையாக. அலை வற்று - அசைவில்லாமல். மூக்கின் நுனியைக் கண்ணின் நோக்கி. ஐம் புலனையும் மாய்த்து. பூரகம - வாயுவை உள்ளே-இழுத்தல். முன் ஆக - முதலில் நிகழ. புகர் - குற்றம். இருந்து, நோக்கி, மாய்த்து, பிராணுயாமம் புரிதல் வேண்டும்.

4474. பூரகம் - வாயுவை உள்ளிழுத்தல். கும்பகம் - வாயுவை உள் ளடக்குதல். இரேசகம் - வாயுவை வெளியே விடுதல். ரேசகாதி திகழ் விப ரீதமாயும் - ரேசகம், கும்பகம், பூரகம் என்று விபரீதமாகவும். ஓர் திங்கள் - ஒரு மாதம். ஏர் - எழுச்சி. அவன் - அவ்விதம் பிராணுயாமம் செய்தவனது. வயமதாம் - வசமாகும்.

4475. வசம்வரின் - வாயுவசமானல். இடா - இடை என்னும் நாடி. பிங்கலை - வலப்பக்கத்து நாடி. மூட்டி - சேர்த்து. சுழுமுனைமேல் - சுஷும்னை என்னும் நாடியின்மேல். போகின் - வாயு சென்றால். கதலிப்

பசியநற் கதலிப் பூப்போற் பண்புறு மிதய மாகி
இசைதரு கமல மேவா வெழில்பெற வளர்த்து மக்கால். (ச)

4476. அலர்ந்தவம் மலர்மே லன்பர்க் கருள்சுரந் தொழுகு கண்ணும்
நலந்தரு முகமும் வாயு நான்கெனும் புயமும் பொன்சேர்ந்
திலங்குசெம் மணிதாழ் மார்பு மெழிற்றொடி புனைசெங் கையும்
துலங்குபொற் றேளு மாகத் தோன்றுமெம் முருவ நாடி. (ரு)

4477. நண்ணும்யா மென்றும் வேறு நாடிய தாங்கொ லென்றும்
எண்ணிடா தொன்று பட்டாங் கிருப்பரேற் றூப மூன்றின்
கண்ணுறு ரின்ப மென்னுங் கரையிலாக் கடலே யாழ்வர்
அண்ணலே யோக சித்தி யறுமூன்று மவையுங் கேண்மோ. ()

4478. அறைதரு மணிமா வென்று பரும்பெறன் மகிமா வென்றும்
விறலுறு லகிமா வென்றும் வீறுயர் பிராத்தி யென்றும்
நிறைபிரா காமி யஞ்சீர் நிலவுமீ சத்து வஞ்சொல்
மறுவறு சிறப்பின் மிக்க வசித்துவங் கரிமா வென்றும். (எ)

4479. நலங்கிளர் சித்தி யெட்டு நவிலுறு முதன்மை யாகும்
இலங்கிய யோக சித்தி யின்னுமீ ரைந்துண் டோதின்
துலங்கிய் வேற்றுத் தீவிற் றேன்றுமெம் முருவ நாடி
இலங்கறு வகைவி கார மேவிடா வாக்கை சேர்தல். (அ)

---

பூப்போல் - வாழைப் பூப்போல். இதயம் - ஹிருதயம். கமலம் - ஹிருதய கமலத்தை. மேவா - மேவி. அலர்த்தும் - மலர்விக்கும். அக்கால், மூட்டி, போகின், மேவா அலர்த்தும்; கால் - வாயு.

4476. அலர்ந்த - மலர்ந்த. மலர்மேல் - ஹிருதய கமலத்தில். பொன் - திருமகள். தொடி - வளை. மலர்மேல் எம்முருவம் நாடித் தோன்றும்.

4477. வேறு - வேறுபொருள். எண்ணிடாது - நினையாமல். இருப்பரேல் - இருப்பாரேயானால். தாபமூன்றின் கண் - ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற தாபங்களில். உறுூர் - பொருந்தார். அண்ணலே : உத்தவனை நோக்கிய விளி. அறு மூன்று - பதினெட்டு. கேண்மோ - கேட்பாயாக.

4478. அறைதரு - சொல்லப்பட்ட. வீறு - பெருமை. மறு - குற்றம். அணிமா, மகிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், கரிமா ; பிராத்தி - பிராப்தி. இவை எட்டுச் சித்திகள். இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

4479. ஈரைந்து உண்டு ; ஈரைந்து - பத்து. அறுவகை விகாரம் மேவிடா - காமக்குரோதாதிகளைப் பொருந்தாத. ஆக்கை - உடலை,

4480. புவிபுக ழறிவின் மிக்கோய் புரையறும் யோகத் தானே
செவியினை வானிற் சேர்த்திச் சேய்த்துள மொழிக டேர்ந்தும்
சவிதிகழ் சவிதா வின்கட் டன்னிரு கண்ணை வைத்து
நவையறத் தூரத் தெய்து நண்ணுரு யாவுங் காணல். (கூ)

4481. அற்றமின் மனத்தின் வேக மடைந்திருந் திசையிற் சேறல்
உற்றநல் லிலிங்க மென்ன வுரைதனு வோடும் புக்குக்
குற்றமில் லாகா யத்திற் குலவுத றமக்கு வேண்டின்
இற்றிட லம்பை மாரோ டினிதுவந் தாட லன்றே. (க0)

4482. சிந்தையிற் றிகழ்முக் காலச் செய்கையுந் தெளித லின்பம்
வெந்துய ரடையா தூற்றல் வேறுளோர் சித்த மோர்தல்
அந்தழற் றம்ப னாதி யரியதம் பனங்க ணாட்டல்
புந்தியின் வருமிப் பத்தும் போகநற் சித்தி யாமே. (கக)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4483. இணையறு மணிமா வாவது முனஞ்சொ
லெண்வகை யோகநன் கிழைத்தோர்
அணிபெறு பரமா வணுவென வெம்மை
யகத்திடை நினைத்தணு வாதல்
தணிவறு மகிமா வாவது மகத்தாய்ச்
சாற்றுமிங் கெமைநினை வுற்றோர்
மணியெழு வணைய மல்லுயர் புயத்தோய்
மகத்தென மருவுதன் மாதோ. (கஉ)

---

4480. அறிவின் மிக்கோய் என்றது உத்தவனை. புரை - குற்றம். செவியினை - காதை. வானில் - ஆகாயத்தில். சேய்த்துள - தூரத்திலுள்ள. மொழிகள் - வார்த்தைகளை. சவி - ஒளி. சவிதாவின் கண் - சூரியனிடத்தில். நவை - குற்றம். தூரத்து நண்ணிய உருவங்களைக் காணலும்.

4481. அற்றம் - சோர்வு. சேறல் - செல்லுதலும். இலிங்க மென்னும்தனு - சூக்கும சரீரம். புக்கு - புகுந்து. அரம்பை மாரொடு - தேவ கன்னியரொடு.

4482. சிந்தையின் - மனத்தினால். முக்காலம் - இறப்பு, நிகழ்வு எதிர்காலங்கள். தெளிதல் - அறிதல். துயரடையாது இன்பமுற்றல். வேறுளோர் - மற்றவரது. சித்தம் - மனத்தை. தழற்றம்பனம் - அக்கினியில் நிற்றல். அரிய தம்பனங்கள் - செய்தற்கரிய ஸ்தம்பனங்கள். நாட்டல் - நிறுத்தல்.

4483. இழைத்தோர் - யோகிகள். பரமாவணு - மிகச் சிறிய அணு. எம்மை என்றது கண்ணனை. அணிமாவாவது எம்மை அணுவென நினைத்து அணுவாதல். மகத்தாய் - மிகப் பெரியதாக. புயத்தோய் என்றது உத்தவனை. மகிமாவாவது எமை மகத்து என மருவுதல்.

4484. மருவிய லகிமா வாவது லகுவாய்
மனத்தெமை நினைத்தது வாதல்
உரைதரு பிராத்தி யாவதிந் தியங்க
ளூறும்பல னெனவெமை நினைத்தோர்
விரவுதல் பிராகா மியமகத் தோடு
வீறுயர் சூக்கிர மாகிப்
புரைதப வெங்கு மிருப்பனென் றெம்மைப்
புந்தியி னினைத்தவர் விளங்கல். (க௩)

4485. எழுவகைப் பிறப்பி னுயிர்க்குழு வியக்கு
மியம்பருங் காலத்தி னுருவாய்
விழுமிய வுளத்தி லெமைநினை வுற்றோர்
விளம்புமீ சத்துவம் பெறுவார்
மொழிதரு மவத்தை மூன்றையும் பொருந்தா
முழுமுத லாயநிந் திருக்கும்
அழிவறு துரிய னெனவெமை நினைந்தோ
ரடைகுவர் வசித்துவ மன்றே. (க௪)

4486. கருதருங் காம மென்றுமுன் னுனக்குக்
கழறுநற் சித்தியா தென்னின்
அருவமா யறிவா யாநந்த மயமா
யாகுவ னெனவெமை நினைந்து
விரைகமழ் நறுந்தா ருத்தவ யோகம்
விதித்தவா றினிதுற விழைந்தோர்
பொருவிலவ் வாறே யாநந்த மயமாய்ப்
பொருந்திவீற் றிருப்பர்தா மன்றே. (க௫)

---

4484. அது வாதல் - லகிமா வாதல். இந்தியங்கள் - இந்திரியங்கள். புலன் - அறிவு. பிராத்தியாவது எமைப்புலன் என விரவுதல். மகத்தோடு - மகத்தத்துவத்தோடு.

4485. எழுவகைப் பிறப்பு - தேவர், மக்கள் முதலியன. இயம்பரும் - சொல்லற்கரிய. ஈசத்துவம் - ஈசத்துவம் என்ற சித்தியை. அவத்தை மூன்றையும் - சாக்கிர, சுவப்பனம், சுஷுப்தி என்னும் அவத்தைகளை. துரியன் - துரிய நிலையிலுள்ளவன்; மூன்று அவத்தையும் இல்லாதவன் துரியன் எனப் படுவான். வசித்துவம் - வசித்துவ சித்தியை.

4486. உனக்கு என்றது உத்தவனை. காமமாகிய சித்தி. அருவமாய் - உருவ மற்றதாய். உத்தவ: விளி. நினைந்து விழைந்தோர் பொருவில் ஆநந்தமயமாய் வீற்றிருப்பர்; பொருவில் - ஒப்பில்லாத.

4487. எவ்வகை யெவையே யியைந்தெமை மனத்தி
லிடைவிடா தன்பொடு நினைந்தோர்
அவ்வகை யவையே யடைந்துவப் படைவா
ரகம்புற நடுவும்யா மென்ன
மௌவலந் தொடையா னுத்தவன் றனக்கு
வழங்கின னெனச்சொலி மீட்டும்
தெவ்வலர் புகழும் விண்டுரா தனுக்குத்
தெரிக்கலுற் றனன்சுக முனிவன். (கசு)



# 8. விபூதி உரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4488. வெளியு முள்ளும் விமலனீ யாயினும்
தெளிவி லாரொரு யோகமுஞ் செய்கலார்
எளியர் தாமுனை யெங்ஙனஞ் சேர்வதென்
றொளிகொள் வேற்படை யுத்தவ னோதினன். (க)

4489. அனக னன்னது கேட்டறை கின்றனன்
நினைவ ருஞ்சம நேர்ந்தில னாகிநீ
வினவும் வண்ணம் விசயனுங் கேட்பயாம்
சினவு வேலவ செப்பின முன்னமே. (உ)

4487. இயைந்து - பொருந்தி. உவப்பை அடைவார். தொடையான்-கண்ணன். தெவ்வலர் - பகைவர். விண்டுராதனுக்கு - பரிட்சித்துக்கு.

4488. தெளிகலார் - தெளிதல் இல்லாதவராய். செய்கலார் - செய்யாதவர். உனை - உன்னை. உத்தவன், "எளியர் உனை எங்ஙன் சேர்வது" என்று ஓதினன்.

4489. அனகன் - கண்ணன். சமம் நேர்ந்திலனாகி - போருக்கு உடம்படாதவனாகி. விசயன் - அருச்சுனன். 'வேலவ, விசயன் வினவ யாம் முன்னமே செப்பினம்'. வேலவ என்றது உத்தவனை.

4490. தீதின் முத்தொழி லும்மவை செய்வதும்
பூதத் துள்ளுயி ரும்பல பூதமும்
ஏத மற்றயா மாதலி னெம்முரு
ஓதின் முற்று முரைக்கடங் காதவே. (௩)

4491. பொறிய டங்க வடக்கிய பூட்சியில்
அறையு முள்ளத் தவர்களு மெம்முரு
அறியும் வண்ணம்யா மான விபூதிகள்
குறைவி லோய்சில கூறுதுங் கேட்டியால். (௪)

4492. வண்மை யாமகத் துக்கும் வயங்குமோர்
திண்மை யாமகத் தாகவுஞ் சேர்ந்தியாம்
நுண்மை யாய பொருளி னுவலரு
முண்மை யாமுயி ராகவு முற்றனம். (௫)

4493 அந்த முற்ற வெழுத்தி லகரம்யாம்
மந்தி ரத்தின் மறைசொல் பிரணவம்
சந்த முற்றுத் தயங்குசங் தச்சினில்
நந்த லற்றகா யத்திரி நாமரோ. (௬)

4494. சீல மேவிய தேவரிற் றேறல்பாய்
மாலை நீண்முடி வாசவன் வான்றழற்
பால லோசனப் பண்ணவர் தங்களின்
நீல லோகித னென்னவு நின்றனம். (௭)

---

4490. தீதுஇல் - தீமையில்லாத. முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல். ஏதம் - கேடு. உரு - உருவங்களை. எம்முரு. உரைக்கு அடங்காத; அடங்காத - அடங்காதன.

4491. பொறி - ஐந்து இந்திரியங்கள். பூட்சி - அறிவு; உடம்புமாம். விபூதி - செல்வம். கூறுதும் - கூறுவேன். கேட்டி - கேட்பாயாக.

4492. மகத்துக்கும் - மகத் தத்வத்துக்கும். மகத்தாகவும் - பெரியதாகவும். நுண்மை - நுட்பம். உண்மையாம் - உள்ளதாகிய. யாம் மகத்துக்கு மகத்தாகவும் நுண்மைப் பொருளின் உயிராகவும் உற்றனம்.

4493. அந்தம் - அழகு; வேதாந்தமுமாம். அகரம் - 'அ' என்ற எழுத்து. பிரணவம் - ஓங்காரம். சந்தம் - ஓசை. சந்தச்சினில் - சந்தஸில். நந்தலற்ற - கேடில்லாத. நாம் சந்தஸில் காயத்திரி.

4494. சீலம் - ஒழுக்கம். தேறல் - தேன். வாசவன் - இந்திரன். பாலலோசனப் பண்ணவர் - பதினோர் உருத்திரர்கள்; பாலலோசனர் - நெற்றியில் கண்ணை யுடையோர். நீலலோகிதர் - பதினோர் உருத்திரருள் ஒருவர்.

4495. வளம்பொ ருந்தும் வசுக்களி லக்கினி
விளங்கு கின்றவா தித்தரின் விட்டுணுத்
துளங்கி ரும்புனற் றேன்றிறை யாகிநல்
உளந்தி ருந்தறி வுற்றவ ருணனும். (அ)

4496. போற்று கின்ற புரோகிதர் தங்களின்
மாற்ற ருஞ்சொல் வசிட்டனிவ் வையகம்
சாற்று ஞானச் சதுமறை யோர்களின்
ஏற்ற சீர்க்குரு யாமென் றறிதியால். (கூ)

4497. வண்ண வேந்த முனிவரின் மாமனு
நண்ணு தேவ முனிவரி னாரதன்
எண்ணி லாத பிரமமு னிவரின்
அண்ண லோ நாரணன் யாமரோ. (க0)

4498. சித்த ரிற்கபி லப்பெயர் சேர்ந்தவன்
பத்தெ னப்பக ரும்படைப் போர்களில்
வித்த கத்துறை தக்கன்வில் லாளரின்
முத்தி றப்புரந் தீத்தமுக் கண்ணன்யாம். (கக)

4499. விரியு நால்வரு ணத்தினில் வேதியர்
வருண நாமவ் வருணத்தி னன்கென
உரைசெ யாச்சிர மத்தினொ டுக்கமாம்
புரையி லாச்சிர மம்புகல் வீரயாம். (கஉ)

---

4495. வசுக்கள் - எட்டு வசுக்கள். ஆதித்தர் - பன்னிரண்டு ஆதித்தர். விட்டுணு - விஷ்ணு. புனல் தோன்று இறை - நீரில் தோன்றிய உயிர்களுக்குத் தலைவன்.

4496. புரோகிதர் - முனிவர். சதுமறையோர் - அந்தணர். குரு - பிருகஸ்பதி. அறிதி - அறிவாயாக.

4497. வேந்த முனிவரில் - ராஜரிஷிகளில். பிரம முனிவர் - பிரம்மரிஷிகள். யாம் நரநாரணர். பிரம்மரிஷிகளுள் பிருகு என்று கூறும் முதனூல்.

4498. படைப்போர் - படைக்கும் பிரமர்கள். வித்தகம் - திறமை. வில்லாளர் - வில் வீரர். முத்திறப் புரம் - முப்புரம். தீத்த - எரித்த. முக்கணன் - உருத்திரன்.

4499. வருணம் - சாதி. நால் வருணத்தினில் நாம் வேதியர் வருணம். அவ்வருணத்தில் - அவ்வேதியர் வருணத்தில். நான்கென உரைசெய் ஆச்சிரமம் - பிரம்மசரியம், கிருஹஸ்தம், வானப் பிரஸ்தம், சந்நியாசம் என்பன. ஒடுக்கம் - சந்நியாசம். புரையிலா - குற்றமில்லாத. நான்கு ஆச்சிரமத்தில் யாம் ஒடுக்கமாம் ஆச்சிரமம்.

4500. அரிய நான்மறை யந்தணர் தங்களின்
பிருகு நாம்பல பேசுறு மாந்தரின்
மருவு பார்புகழ் மன்னவன் விண்ணவர்
கருது சேனைத் தலைவரிற் காங்கெயன். (கங)

4501. தருண மங்கைய ரிற்சத ரூபையாம்
புருட ரிற்சுவா யம்பு வெனப்புகல்
உருவ நன்மனு வேந்த னுடுக்களின்
இருவி சும்பி லிலங்கிய திங்களே. (கச)

4502. கண்ண கன்ற நதிகளிற் கங்கையாம்
தண்ணி ருந்த சலநில யங்களின்
மண்ண கழ்ந்து வளைப்புறு வாரிதி
விண்ணு யர்ந்த சிகரியின் மேருவே. (கரு)

4503. வினைக டந்துயர் வேதியர் தம்முழை
மனையொ டன்புசெய் வோர்களின் மாவலி
புனித நல்லொளி புல்லின ரிற்பெரும்
பனிக டந்த பரிதியஞ் செல்வன்யாம். (கசு)

4504. மாசி லாக்கவி ஞோரின்வண் சுக்கிரன்
தேசு சேர்பக வானெனுந் தேவரில்
வாசு தேவன் வழுத்துநல் லன்பரின்
ஆசி லாதநீ யாமென் றறிதியால். (கஎ)

4500. அந்தணருள் பிருகு என்பது முதனூலுள் இல்லை. பலபேசுறு மாந்தரின் - பலதிறப்பட்ட மக்களுள். விண்ணவர் - தேவர்களின். காங்கெயன் - காங்கேயன்; கங்கையிற் பிறந்தவன்; முருகன்.

4501. மங்கையரில் - பெண்களுள். சதரூபை - சுவாயம்பு மனுவின் மனைவி. புருடரில் - ஆண்களுள். உருவம் - அழகு. உடுக்களின் - நட்சத்திரங்களுள். இரு விசும்பின் - பெரிய வானில். திங்கள் - சந்திரன்.

4502. கண் - இடம். சலநிலயம் - நீர்நிலை. மண் - பூமியை. வாரிதி - கடல். சிகரி - மலை.

4503. வேதியர் தம்முழை - அந்தணர்களிடத்தில். மனையொடு - மனைவியொடு. ஒளி புல்லினரில் - பிரகாசம் பொருந்தியவருள். பரிதியஞ் செல்வன் - சூரியன்.

4504. மாசிலா - குற்றமில்லாத. தேசு - ஒளி. அன்பரின் - பக்தருள். ஆசு - குற்றம். நீ என்றது உத்தவனை. பக்தருள் உத்தவன் சிறந்தவன் என்றுபொருள்.

4505. அடக்க ரும்மவை தம்மி லரும்பொறி
நடக்க லுற்ற மனநவை நீங்கிய
படைக்க லத்திற் பகர்பெருங் கார்முகம்
கடக்க ருங்கபட் டிற்கலி யாமரோ. (கஅ)

4506. மல்ல லுற்ற வவியின்மன் னுவினெய்
புல்ல லுற்ற தருப்பையிற் பூங்குசை
சொல்ல லுற்றயா கத்திற் றுணிவுடன்
அல்ல லற்று மனத்தை யடக்கல்யாம். (ககூ)

4507. விரத மானவை தம்மில் விளங்கிய
விரத மோருயிர்க் கிறிழை யாமையாம்
வரத யாம்மறை வானவை தம்மினில்
சரத மாகத் தரித்த மவுனமே. (உ0)

4508. சாற்று கின்ற தவத்தி னியமம்யாம்
போற்று கின்றதா துக்களிற் பொன்னனி
ஆற்று கின்றயா கங்களி னன்பொடும்
ஏற்று கின்ற பிரமவி யாகமே. (உக)

தாவு கோச்சகக் கலிப்பா.

4509. தயித்தியரி னல்லறிவு சால்பிரக லாதனியாம்
இயக்கர்களின் மந்திரியா மெழிற்பிரம சாரியரின்
நயக்குமுளத் துத்தவகே ணுஞ்சனற்கு மாரனென்றும்
மயக்கறுநற் பிதிர்கடமின் மருவரிய மாயாமே. (உஉ)

---

4505. அடக்கரு மவைதம்மில் - அடக்குதற்கு அரிய பொருள்களுள். பொறி நடக்கலுற்ற மனம் - இந்திரியங்களின் வழியே செல்கிற மனம். நவை - குற்றம். படைக்கலத்தில் - ஆயுதங்களுள். கார்முகம் - வில். கபடு-வஞ்சனை. கலி - சனிபகவான்.

4506. மல்லல் - வளம். அவியின் - ஹவிசுகளுள். ஆவின் நெய் - பசுவினது நெய். குசை - குசை என்ற தருப்பை. அல்லல் அற்று - துன்பம் நீங்கி.

4507. விரதமானவை தம்மில் - விரதங்களுள். உயிர்க்கு ஈறு இழையாமை - உயிரைக் கொல்லாமை ; ஈறு - முடிவு. வரத : விளி. சரதமாக-உண்மையாக.

4508. தவத்தில் யாம் நியமம். தாதுக்களின் - உலோகங்களில். பொன் - தங்கம். யாகங்களிற் பிரமயாகம்.

4509. தயித்தியரில் - அசுரர்களில். இயக்கர்களில் - யக்ஷர்களில். மந்திரி - குபேரன். உத்தவ, கேள். பிரமசாரியரில் சனற்குமாரன். பிதிர்கள் தம்மில் யாம் அரியமா ; அரியமா - பிதிருதேவருள் ஒருவன்.

4510. பறவைகளின் யாங்கருடன் பன்மாவின் யாமடங்கல்
கறவையெனு நிரைகளின்யாங் கடவுளரா பரிகளின்யாம்
சுறவமெறி திரைக்கடலிற் றோன்றுபரி கரிகடமின்
மறவைநுனி நாற்கோட்டு மதவயிரா வதம்யாமே. (உங)

4511. அரவுகளின் வாசுகியா மரவாச ராயவரின்
பரவுபல மணித்தலையிற் பார்பரித்த சேடன்யாம்
விரவுபல தருக்குழுவின் விளங்குசினை யாசுருயாம்
புரவுபுரி யாசமுதற் புகல்பவரி லயன்யாமே. (உச)

4512. அழிவுசெயுந் துடிமுதலா மாகாலத் தாண்டுருயாம்
விழையுமிரு துவினிலிள வேனிலெனு மிருதுவும்யாம்
தழைவுபெறு மதிகளின்யாந் தனுமதிரன் னாட்களினில்
மழைநிகருங் கொடைக்காத்தாய் வழங்கபிசித் தெனுநாளே.()

4513. அரசயுக நான்கினிலு மாதியுக மாவதியாம்
பாவரிய வியாதனியாம் பாராசரமா முனிபுதல்வன்
பொருதிறல்சேர் வீரர்களிற் புகன்றவெழி லருச்சுனன்யாம்
பெருகுசுகி களிற்சுகியாம் பெலவானிற் பெலவான்யாம். (உசு)

---

4510. மாவில் - மிருகங்களுள். மடங்கல் - சிங்கம். கறவை யெனும் நிரை - பசுக் கூட்டம். கடவுளர் ஆ - காமதேனு. பரிகளின் - குதிரை களில். சுறவம் - சுறு மீன்களை. கடலிற் றோன்று பரி - உச்சைச் சிரவம் என்னும் குதிரை. கரிகள் தமில் - யானைகளில். மறவை நுனி - வீரம் பொருந்திய கூர்மையான நுனி. நாற்கோடு - நான்கு கொம்புகள். கரிகள் தமில் யாம் அயிராவதம்.

4511. அரவுகளின் - பாம்புகளில். அரவரசாயவர்களின் - நாகராசாக் களில். மணிகளை யுடைய தலையில் பாரைப்பரித்த சேடன்; ஆதி சேடன்; பரித்தல் - சுமத்தல். தருக்குழுவின் - மரக்கூட்டத்தில். சினை - கிளை. அரசு - அரசமரம். யாம் அரசினது உரு. அரச: உத்தவனை நோக்கிய விளி. முதற்புகல்பவரின் - முதன்மையாகச் சொல்லப்படுபவருள். அயன் - பிரமன்.

4512. துடி - துருடி; எட்டு விநாடிகொண்ட நேரம். மாகாலத்து - பெரிய காலங்களில். ஆண்டு - வருடம். இருதுவினில் - பருவங்களில். இளவேனில் - வசந்தகாலம். மதிகளில் - மாதங்களில். தனு - மார்கழி மாதம். நாட்களினில் - நட்சத்திரங்களில். மழை - மேகம். காத்தாய் என்றது உத்தவனை; விளி. நாட்களில் அபிசித் எனும் நாள்; அபிசித் - ஒரு நட்சத்திரம்.

4513. ஆதியுகம் - கிருதயுகம். வியாதன் - வியாசன். பொரு திறல்- போரிடும் வீரம்.

4514. நவையறுகந் திருவர்களி னலஞ்செய்விச் சுவாவசுநாம்
புவனமுழு தும்புறமும் பொருந்தியவா னத்தொலியும்
பவனனினற் பரிசமுஞ்சேர் பாவகனி னெழிலுருவும்
அவனியினி லருமணமு மப்புவினி லிரதமும்யாம். (உஎ)

எழுசீர்க்கழிநெடிலடி லாசிரிய விருத்தம்.

4515. சுடர்நவ மணியிற் பதுமரா கமும்போய்த்
துன்னுதற் கரிதெனுஞ் சுரத்தின்
கெடலரும் வலிசே ரிமயமால் வரையுங்
கிம்புரு டரிலிய மானும்
உடைதிரைப் புனல்வா ழுயிரினின் மகா
வுருவமு மூதியம் பெறுவோர்
விடலரும் விவசா யங்களின் மலர்மேல்
விளங்கிய விமலையும் யாமே. (உஅ)

4516. மருவிய மாயை மகத்தகங் கா
மதிபொறி புலன்குணஞ் சீலம்
தரைபுனல் கனல்கால் வான்முத லெவையுஞ்
சாற்றுநா மாயினுந் தருமம்
திருவரு ளெழில்சீர் திகழ்வலம் பொறுமை
தெளிவுமெய் கொடைச்சிறப் பார்ந்த
அரசவெங் குறையு மவனெலா நீமற்
றறிதியெங் கலைப்பிரி வெனவே. (உகூ)

---

4514. கந்திருவர்களில் யாம் விசுவாவசு. புறமும் - வெளியிலும். வானத்து - ஆகாயத்தில். ஒலி - சப்தம். பவனனில் - வாயுவில். பரிசமும் - ஸ்பரிசமும். பாவகனில் - அக்கியில். உருவும் - உருவமும். அவனியினில் - பிருதிவியில். மணமும் - கந்தமும். அப்புவினில் - நீரில். இரதம் - சுவையும்.

4515. நவமணி - ஒன்பது இரத்தினங்கள். துன்னுதற்கு அரிதெனும் சுரத்தின் - செல்லுதற்கரிய வழிகளில். இமயமால் வரை - இமயமலை. கிம்புருடரில் அநுமான் என்னும் ; முதனூல். புனல்வாழுயிரினில் - நீரில்வாழும் உயிர்களுள். மகரம் - மகா மீன். விவசாயம் - முயற்சி. விமலை - திருமகள்.

4516. மகத்து - மகத்தத்வம். அகங்காரம் - அகங்கார தத்வம். மதி - புத்தி. பொறி - இந்திரியம். புலன் - அறிவு. கால் - வாயு. வலம் - வெற்றி. மெய் - சத்தியம். அரச - விளி. அரச, தருமம் முதலில் மெய் ஈறுக உள்ளன எங்குறையும் அவனெலாம் எம் கலைப்பிரிவு என அறிதி ; கலை - அம்சம்.

4517. சுருக்கின மிவ்வா றுரைத்தலை யன்றிச்
சொல்லுமெம் பூதியை முழுதும்
விரித்துமற் றுரைப்ப வேண்டுமே லெமக்கும்
விளம்புத லரிதிவை யெல்லாம்
உரைத்திடு மெமது வடிவென மாய
னுத்தவற் குரைத்தன னென்னாத்
திருத்தகு முனிவ னரசுளந் தெளியத்
தெரித்துமீ ளவுஞ்சில தெரிக்கும். (௩0)



# 9. வருணாச்சிரமம் உரைத்த அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

4518. என்னலு முத்தவ னிறைஞ்சி யெம்முழை
மன்னிய வன்பொடு வருண நான்கினோர்
உன்னிய தம்வினை யுஞற்ற னன்றென
முன்னவ வுரைத்தனை தொகுத்து முன்னமே. (க)

4519. அவ்வகை வருணவாச் சிரம மன்பொடும்
இவ்வகை வருவர்வந் தியற்று தம்வினை
செய்வகை யிவையெனத் தெரித்தி யென்றலும்
மௌவலந் தொடைபுனை மாயன் கூறுமால். (உ)

---

4517. சுருக்கினம் - சுருக்கிக் கூறினோம். பூதி - ஐசுவரியம். எல்லாம் எமது வடிவு. மாயன் - கண்ணன். என்னா - என்று. முனிவன் - சுகன். அரசு - பரிட்சித்து.

4518. இறைஞ்சி - தொழுது. வருணம் நான்கினோர் - பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர். தம வினை - தமக்குரிய செயல்களை. உஞற்றல் - செய்தல். முன்னவ : கண்ணனை நோக்கி விளி. முன்னம் நன்றென உரைத்தனை.

4519. வருணத்தையும் ஆசிரமத்தையும்; வருணம் - நால்வகைச் சாதி. ஆசிரமம் - பிரம்மசரியம் முதலிய நாலு ஆசிரமம். இவ்வகை - இவ்விதம். செய்வகை - செய்யும் திறம். தெரித்தி - சொல்வாயாக. என்றலும் - என்று உத்தவன் கேட்டலும். மாயன் - கண்ணன்.

4520. எண்ணிய முதலெனு முகத்தின் யாவரும்
நண்ணிய ஞானநன் னலத்தி னேங்குவர்
தண்ணறுந் தொடையலாய் தரும மானயாம்
வெண்ணிற விடையுரு வெடுத்து மேவுவேம். (௩)

4521. உரைத்தன நான்மறை முழுது மொன்றெனத்
தெரித்திடும் பிரணவ மாகிச் சேர்துமால்
அருத்திசெ யிரண்டென வறைந்த வூழிவாய்
விரித்திடும் பெயர்விராட் டென்னு மெம்முழை. (௪)

4522. உலவிய வுயிர்ப்பினி லுதித்த மாமறை
குலவிய முகம்புயங் குறங்கு தாளினில்
நிலவிய முறைமுறை நிகழ்த்து தந்தொழில்
நலனொடு வருணமோர் நான்குந் தோற்றின. (௫)

4523. உத்தவ விரண்டெனு முகத்தி னாதியின்
இத்திற முதித்தவெம் முருவ மாகிய
சித்திர விராட்டெழில் சேர்மு கத்திடை
தத்துவ ஞானமுந் தயங்கித் தோன்றிற்றால். (௬)

4524. அல்லலி லிருபிறப் பாவ தும்மதற்
கொல்லுநற் றருமமு மிதயத் துற்றெழ

4520. முதலெனும் உகத்தின் - கிருதயுகத்தில். தொடையலாய் - விளி. வெண்ணிற விடையுரு - வெண்மை நிறமான காளையின் உருவத்தை. யாம் தருமமான விடையுருவெடுத்து மேவுவேம்.

4521. நான்மறை - நான்கு வேதம். பிரணவமாகி - பிரணவப் பொருளாகி. சேர்தும் - சேர்வோம். அருத்தி - அன்பு. இரண்டென அறைந்த வூழிவாய் - திரேதாயுகத்தில். இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

4522. உயிர்ப்பினில் மறை உதித்த ; உயிர்ப்பு - மூச்சுக் காற்று ; மறை - வேதங்கள். புயம் - தோள். குறங்கு - தொடை. தாள் - பாதம். முகத்திலிருந்து அந்தணரும், தோள்களிலிருந்து க்ஷத்திரியரும், தொடையிலிருந்து வைசியரும், பாதத்திலிருந்து சூத்திரரும் தோன்றினர் என்று முறையே கொள்க.

4523. இரண்டெனும் உகத்தினாதியின் - திரேதாயுகத்தின் ஆரம்பத்தில். எம் உருவமாகிய விராட்டினது முகத்திடைத் தத்துவ ஞானமும் தோன்றிற்று.

4524. அல்லலில் - துன்பமில்லாத. இரு பிறப்பாவதும் - பிரம்மசாரியாவதும் ; உபநயனத்துக்கு முன் ஒரு பிறப்பும், பின் ஒரு பிறப்பு மாதலின் இரு பிறப்பு என்பர். அதற்கு - இரு பிறப்பாளனாவதற்கு. ஒல்லும்-

இல்லின ராவது மியைந்த தன்மமும்
வல்லையிற் சகனமேல் வந்து தோற்றின. (எ)

4525. வனத்திடைச் சேறலும் வனத்திற் செல்லுநர்
நினைத்தன செயத்தகு மெனநி கழ்த்திய
வினைத்தரு மங்களும் விளங்கு மார்பிடைச்
சனித்தன துறவறந் தலையிற் றோற்றின. (அ)

4526. உரைதரு சமதம முவப்பி ருந்தவம்
கருதரு வஞ்சனை களைத லெம்முழைப்
புரிதரு மன்புமெய் பொறுமை நல்குதல்
அருண்முத லறங்களந் தணருக் காகுமால். (௯)

4527. குறைவறு நிதிவலி கொடைபொ ருந்துதல்
மறையவ ருழைமரு வன்பின் வைகுதல்
மூறையுயிர் புரத்தலிம் முதல நல்லறம்
இறையவர் தருமமென் றியம்பு நூல்களே. (௧0)

4528. அணிபெறு நிதிக்குவை யடையி னும்மவாத்
தணிவற வளர்ப்பதுஞ் சாற்று மந்தணர்ப்
பணிவது முதலிய பளகி லாவறம்
வணிகருக் கியல்பென வழங்கற் பாலவே. (௧௧)

---

பொருந்துகின்ற. தருமமும் - பிரம்மசரியமும். இல்லினர் - இல்வாழ்க்கையர். தன்மமும் - கிருகஸ்தாச்சிரமமும். சகனமேல் - கடிதடத்தில். இதயத்தில் பிரும்மசாரியமும், சதனத்தில் கிருகஸ்த தருமமும் தோன்றின.

4525. வனத்திடைச் சேறலும் - மனைவியுடன் தவம்செய்யக் காட்டிற்குச் செல்லுதலும். செல்லுநர் - செல்பவர். செயத்தகும் என - செய்யத்தக்கவை என்று. தருமங்களும் - வானப்ரஸ்தாச்சிரமத்துக்குரிய தர்மங்களும். மார்பிடை - மார்பினில். சனித்தன - தோன்றின. துறவறம் - சந்யாசாச்சிரமம்.

4526. சமம் - அகக்கருவிகளை அடக்குதல். தமம் - புறக்கருவிகளை அடக்குதல். உவப்பு - மகிழ்ச்சி. வஞ்சனையைக் களைதல்; களைதல - நீக்குதல். எம்முழை என்றது கண்ணனிடத்தில். மெய் - சத்யம், நல்குதல் - கொடை. அருள் - இரக்கம். இதில் அந்தணருக்குரிய அறங்கள் கூறப்பட்டன.

4527. பொருந்துதல் - பெற்றிருத்தல். மறையவருழை - அந்தணரிடத்தில். புரத்தல் - காத்தல். பொருந்துதல், வைகுதல், புரத்தல் முதலிய அறம் இறையவர் தருமம் என்று நூல்கள் இயம்பும்.

4528. அணி - அழகு. நிதிக்குவை - நிதிக்குவியல். அவாத்தணிவற - ஆசையின் குறைவு இல்லாதபடி; மிக்க ஆசையுடன் என்றபடி. அந்தணரைப் பணிவதும். பளகிலா - குற்றமில்லாத.

4529. இன்னமுத் திறத்தினர்க் கேவல் செய்வதும்
உன்னிய பொருளுறல் கொண்டு வப்பதும்
மன்னிய தேவரை வணங்கி வாழ்த்தலும்
பின்னவர்க் கறனெனப் பேசல் வேண்டுமால். (கஉ)

4530. அழிவறு வருணநான் கடைந்து ளோரலால்
இழிகுல மாயவர்க் கியற்கை யென்பன
பழியுறு மசுசிகா ராமாதி பட்டிமை
கழறுபொய் பயனிலாக் கலக மாதியாம். (கங)

4531. நவையுறு கரவொடு நசைபொய்ந் நீக்குதல்
குவையுறு முயிரிலொன் றனையுங் கொல்விடா
தவைமகிழ் கூர்தா வன்பின் வைகுதல்
இவைமுத லியவற னெவர்க்கு நல்லவே. (கச)

4532. தூயநன் மறையவர் துய்ப்ப நற்பொருள்
ஏயதந் தொழிலினி னியைவ தில்லெனின்
மாய்வில வணிகர்தந் தொழிலு மன்னர்தம்
ஆயுதத் தொழிலுமுற் றருந்தி வைகுவார். (கரு)

4533. மன்னவ ருணவற வறிஞ ராய்விடின்
பொன்னுறு வணிகர்தந் தொழிலும் பூசுரர்க்

---

4529. முத்திறத்தினர்க்கு - அந்தணர், க்ஷத்திரியர், வைசியருக்கு. ஏவல் - பணிவிடை. பொருளுறல் கொண்டு உவப்பதும் - கிடைத்த பொருளைக் கொண்டு மகிழ்வதும். தேவரை - தேவர்களை. பின்னவர்க்கு - சூத்திரர்க்கு.

4530. இழிகுல மாயவர்க்கு - நான்கு வருணத்தினும் தாழ்ந்த குலத்தவர்க்கு. அசுசி - சுத்தமில்லாம லிருத்தல். காமாதி - காமம் முதலியன. பட்டிமை - களவுத்தன்மை. இழிகுல மாயவர்க்குக் கலகமாதி இயற்கை; இயற்கை - இயற்கைத் தருமங்கள்.

4531. நவையுறு கரவு - குற்றம் பொருந்திய வஞ்சனை. நசையையும் பொய்யையும் நீக்குதல்; நசை - அவா. குவை - கூட்டம். கொல்விடாது - கொல்லாமல். அவை - உயிர்கள். மகிழ் கூர்தா - மகிழ்ச்சி மிக. எவர்க்கும் - எத்தகைய மனிதர்க்கும். நல்ல - நல்லவை.

4532. மறையவர் - அந்தணர். துய்ப்ப - அனுபவிக்க. ஏய - பொருந்திய. இயைவது இல் எனின் - பொருந்த வில்லையானால். மாய்வில - அழிவில்லாத. உற்று - பொருந்தி. மறையவர் உற்றுவைகுவர்.

4533. வறிஞராய் விடின் - ஏழையானால். பூசுரர்க்கு - அந்தணர்க்கு. முன்னவர் உற்று உண்பர். ஊட்டியர் - வணிகர். பின்னவர் தொழிலும் -

குன்னிய தொழிலுமுற் றுண்ப ரெட்டியர்
பின்னவர் தொழிலுமேர்ப் படையிற் பேணுவார். (கசு)

4534. வறுமைபின் னவர்நனி மருவி னூணற
அறுவைநெய் வதுமுத லாய செய்குவார்
உறுதம தொழிலினி லுணவுண் டாமெனின்
பிறர்தொழி லியற்றுதல் பிழைமிக் காமரோ. (கஎ)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4535. விதிமுறை பிரம சாரிய ராய
மேதகு மாச்சிர மத்தோர்
முதுமறை பயிலு முபகுரு வாணர்
மொழிதரு நயிட்டிக ரென்ன
மதிபெறு மரச விருவகை யினராம்
வழங்கிய நயிட்டிக ராவோர்
துதிபெறு குரவற் றொழுதரு மறையின்
றுணிபொருண் முழுவதுந் தெரிந்தே. (கஅ)

4536. இளமுலை மடவார் தமைமண மியற்று
வேனையாச் சிரமரா யிருப்பார்
வளமறை முழுது முபகுரு வாணர்
வழுவல தெளிந்துசொற் குருவுக்

---

சூத்திராது தொழிலும். ஏர்ப்படை - உழுதற்குரிய கலப்பை. பேணுவர் - உடலைக் காப்பர்.

4534. பின்னவர் ஊணற வறுமை நனிமருவின்; பின்னவர் - சூத்திரர். மருவின் - பொருந்தினல். அறுவை - ஆடை. முதலாய - முதலிய தொழில்களை. உறுதம தொழிலினில் - தமக்கு உரிய தொழில்களில். பிறர் தொழில் - மற்ற வருணத்தாருக்குரிய தொழிலை.

4535. மேதகு - மேன்மையான. மறைபயிலும் - வேத மோதுகின்ற. அரச: விளி. பிரமசரிய ஆசிரமத்தோர் உபகுருவாணர், நயிட்டிகர் என இரு வகையினராம்; நயிட்டிகர் - நைஷ்டிகர். குரவனைத் தொழுது; குரவன் - ஆசிரியன். மறையின் துணிபொருள் - வேதத்தால் துணியப்பட்ட பொருள். இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

4536. மடவார் தமை - பெண்களை. மணம் இயற்று - மணம் புரியாமல். ஏனை யாச்சிரமராய் - மற்ற ஆசிரமங்களுக்குரிய தொழில்களையுடையராய். உபகுருவாணர் மறை முழுதும் தெளிந்து; மறை - வேதம். விதி -

குளமகிழ் கூர நிதிபல கொடுத்தாங்
குரைவிர தாதிய வுஞற்றி
அளியுளர் தாரோய் விதித்தகன் னியலை
யருமணம் புரிகுவ ரன்றே. (கக)

4537. மறையவர் நான்கு வருணம்வந் துதித்த
மடக்கிளி மொழியினர் தமையும்
இறையவர் மறையோர் குலமலா லேனை
யியம்புமுக் குலத்தினிற் பிறந்த
பிறைநுதன் மடவார் தம்மையும் வணிகர்
பேசிரு குலத்துமா தரையும்
முறைமுறை மணத்தற் குரியர்பின் னவர்தம்
மொழிகுலத் தினரையே மணப்பார். (உ0)

4538. ஞானநான் மறைதேர் நயிட்டிகர் துறந்தோர்
நவையற மனையக மறந்து
கானில்வாழ் கின்றோர் காதலின் மடவார்க்
காண்டலுந் தீதெனக் கரைவார்
மானவே லரச விடுத்தவாச் சிரம
மகிழ்ந்துமீண் டிறங்குத லாகா
தேனவாந் தொடைய லரசாந் தணரோர்ச்
சிறப்புடை வணிகர்மற் றிவர்க்கே. (உக)

---

செல்வம். ஆங்கு - பிரம்மசரியத்தில். விரதாதிய - விரதங்கள் முதலிய வற்றை. உஞற்றி - செய்து. அளியுளர் தாரோய்: விளி. அளி - வண்டு. உபகுருவாணர் தெளிந்து, கொடுத்து உஞற்றிக் கன்னியரை மணம்புரி குவர்.

4537. மறையவர் - அந்தணர். நான்கு வருணத்திலும்; வருணம் - சாதி. கிளிமொழியினர் தமையும் - பெண்களையும். இறையவர் - க்ஷத்திரியர். மறையோர் குலமலால் - அந்தணர் குலத்திலல்லாமல். முக்குலத்தில் - க்ஷத்திரிய, வைசிய, சூத்திர குலங்களில். மடவார் தம்மையும் - பெண்களையும். இருகுலத்து மாதரையும் - வைசிய, சூத்திர குலப்பெண்களையும். மணத்தற்கு - மணஞ்செய்து கொள்ளற்கு. பின்னவர் - சூத்திரர். தம்குலத்தின ரையே மணப்பர்.

4538. மறை - வேதம். நயிட்டிகர் - நைஷ்டிகப் பிரமசாரிகள். துறந்தோர் - சந்யாச ஆசிரமத்தோர். மனையகம் - வீட்டை. கானில் வாழ் கின்றோர் - வானப் பிரஸ்தாசிரமத்தோர். காதலின் - காதலால். மடவார்- பெண்களை. கரைவார் - சொல்லுவர். அரச: விளி. விடுத்த ஆசிரமத்தில் மீண்டு இறங்குதல் ஆகா. தேன் - வண்டு. ஏர் - அழகு. இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர்.

4539. குரவரை வணங்கி நான்மறை யோதல்
கூறிய மகமுவத் தாற்றல்
இருநிதி வழங்க லென்னுமுத் தொழிலு
மினையயுகல் வேள்விசெய் வித்தல்
பொருவரு மறைநூ லோதுவித் துறைதல்
புகல்பொரு ளேற்றன்முத் தொழிலும்
உரைதரு மறையோர்க் குரியமற் றேனோ
ருஞற்றுவ ரேற்பழு துறுவார். (உஉ)

4540. தேவர்நன் முனிவ ரதிதியர் பூதந்
தென்புலத் தவரெனத் தெரிந்தோர்
தாவரும் பூசை நிச்சலும் புரியுந்
தவறிலா வில்லறத் தினரும்
காவல நலஞ்சேர் கதிபெறு குவாற்
காமம்விட் டில்லுறைந் தாங்கு
மேவிய வதிதி போலுறை குவரேன்
மீள்கலா வீட்டினு முறைவார். (உ௩)

4541. ஆயுளின் மூன்றாங் கூற்றினில் வனம்போ
யடைகுத லறமடை குற்றார்
காயும்வெவ் வேனிற் காலம்வந் தணுகிற்
கருதுபஞ் சாக்கினி நடுவும்

---

4539. குரவரை - ஆசிரியரை. மறை ஓதல் - வேதம் பயிலல். மகம் - யாகத்தை. ஆற்றல் - செய்தல். வழங்கல் - இரப்பவர்க்குக் கொடுத்தல். அரசருக்கும் அந்தணர்க்கும் வணிகர்க்கும் (4538), ஓதல், மகம் ஆற்றல், வழங்கலாகிய முத்தொழிலும் இயையும். ஓதுவித்து உறைதல் - கற்பித்துக் கொண்டிருத்தல். பொருளேற்றல் - பொருளை வாங்கிக்கொள்ளுதல். மறையோர்க்கு - அந்தணர்க்கு. உஞற்றுவரேல் - செய்வாரேயானால். பழுது - குற்றத்தை.

4540. தென்புலத்தவர் - பிதிருக்கள். தெரிந்தோரது பூசையை நிச்சலும் புரியும் இல்லறத்தினரும் நற்கதி பெறுகுவர்; நிச்சலும் - தினந்தோறும். காவல : விளி. காமத்தை விட்டு. இல் உறைந்து - வீட்டிலேயே இருந்து. அதிதிபோல் - விருந்தினரைப் போல.

4541. மூன்றாம் கூற்றினில் - மூன்றாம் பகுதியில். வனம்போய் அடைதல் அறம் அடைகுதலுற்றார் - வானப் பிரஸ்தர். வெவ்வேனிற் காலம் - கோடைக் காலம். பஞ்சாக்கினி நடுவும் - நாற்புறம் தீயும் மேல் சூரியனுமாகிய

மேயகார் பனிசேர் காலம்வக் தடையின்
விரிபுன லிடத்துமுற் றுறைந்து
தூயதாங் தவமன் காற்றிமெய்ப் பொருடேர்
சூழ்ச்சியின் வைகுத றுணிவே. (உச)

4542. மனத்தினி லோமத் தழன்முறை யடுக்கி
வரும்வழி தத்துவம் போக்கிக்
குனித்திடுஞ் சிலையோ யாயுளி லுலாங்
கூற்றினிற் றுறந்தெதி யாவார்
நினைப்பரும் வயிராக் கியமுடன் ஞான
நிலைபெற முன்னமே வரினும்
வினைத்திற மொழியத் துறவறம் பூண்டு
மெய்ப்பத மடைந்துவீற் றிருப்பார். (உரு)

4543. விளம்புநற் பதம்பெற் றுயர்குவ ரென்ன
விண்ணவர் பொறாமையால் விரைந்தாங்
குளங்கனிந் துருகு மனையவ ளாதி
யுருவின ராகிமுன் றடுப்பார்
வளம்பெறு மாச வவ்வகை யறிந்து
வருமிடர் கடிந்தெதி யாகிக்
களங்கமின் மனத்திற் றுறவற மியற்றல்
கடனென வுரைப்பர்கற் றுணர்ந்தோர். (உசு)

---

ஐந்து அக்கினியின் நடுவிலும். கார் - மழை. புனலிடத்தும் - நீரிலும். உறைந்து - தங்கி. தவத்தை நன்கு ஆற்றி. சூழ்ச்சியில் - உபாயத்தில்; சிவரகசி. தேவிநாட். 22.

4542. தத்துவம் - உண்மைப் பொருளை. போக்கி - அடைத்து; கட்டி எனலுமாம். சிலையோய்: விளி. கூற்றினில் - பகுதியில். எதியாவார் - சந்நியாசியாவோர். வயிராக்கியத்துடன் - வெறுப்புடன். எவரினும் - மற்ற ஆசிரமிகளைக் காட்டினும். மெய்ப்பதம் - உண்மையான வீட்டை.

4543. நற்பதம் - நல்ல பதவியை. என்ன - என்று கருதி. விண்ணவர் - தேவர். மனையவளாதி - மனைவி முதலான. உருவினர் ஆகி - உருவத்தை யுடையவராகி. தடுப்பார் - தவத்தைத் தடுப்பார். அரச: விளி, கடிந்து - கெடுத்து. எதி - துறவி.

தரவு கோச்சகக் கலிப்பா

4544. அதிவருணாச் சிரமியென வடைந்தமுனி திறங்கூறின்
விதிசவுசா சமனமுதல் வேண்டுதல்வேண் டாமையிலான்
பதிதருறு மிடத்தணுகான் பாலனைப்போன் மகிழ்ந்துறைவான்
எதிர்மருவி யெவரேனு மெவையளிப்பா ரவைபெறுவான். ()

4545. உற்றவின வறத்தினனென் றுரைப்பவொரு சின்னமிலான்
எற்றிடினு மெறிந்திடினு மீனனென வைதிடினும்
மற்றவரை வெகுண்டுரையான் வழங்குமுண வேற்பதற்குச்
செற்றமறும் படிமுயற்சி செய்தாலுஞ் செய்குவனல். (உஅ)

4546. பயம்புரியான் பயமடையான் பழியான்மற் றொருவரையும்
நயம்புரிந்த தருமமிவை நவையிவையென் றுளத்தோரான்
இயம்புபெயர் தேகியென விருந்தாலுந் தனுவிறப்பின்
வயம்புரியு மாசவவன் வழங்கியவெந் தமாவான். (உகூ)

4547. துறந்தவருக் குரியனவாஞ் சொல்லுமுயிர்க் கிதஞ்செயலும்
மறந்தவிட யங்களினு மனஞ்செலுத்தா துறைகுவதும்
நிறைந்தபுக ழுத்தவனே நெடுங்கான மடைந்தோர்க்குப்
பிறங்குதவம் புரிவதுவும் பிரமவிசா ரமுமுரித்தே. (௩0)

---

4544. அதிவருணாச்சிரமி - வருணாசிரமங்களைக் கடந்தவன்; அலிங்கி என்பர். சவுசம் - பரிசுததம். வேண்டுதல் வேண்டாமையிலான் - விருப்பும் வெறுப்பும் இல்லாதவன்; குறள். 4. பதிதர் - பாவிகள். உறுமிடத்து - இருக்குமிடத்தில். அணுகான் - நெருங்கானாய். பாலனைப்போல் - குழந்தையைப்போல. எதிர் மருவி - எதிரே அடைந்து. எவை யளிப்பார் - எவற்றை யளிப்பார்களோ. அவை - அவ்வுணவுப் பொருளை.

4545. இன அறத்தினன் - இன்ன ஆசிரமத்தினன். உரைப்ப - சொல்ல. சின்னமிலான் - அடையாள மில்லாதவன். எற்றிடினும் - உதைத்திடினும். எறிந்திடினும் - வெட்டினாலும். அவரை - அவ்விதம் செய்தவரை. வெகுண்டுரையான் - கோபித்துச் சொல்லான்; முற்று. செற்றம் - கோபம்.

4546. புரியான் - பிறருக்குச் செய்யான். ஒருவரையும் பழியான். நவை - குற்றம். ஓரான் - ஆராயமாட்டான். தேகி - தேகத்தை யுடையவன். தனு - உடல். வயம் - வெற்றி. அரச: விளி. எம் தமர் - என்னைச் சேர்ந்தவன்; எம் என்றது கண்ணன்.

4547. இதம் - நன்மை. விடயம் - விஷயம். இதம் செயலும் உறைகுதலும் துறந்தவருக்கு உரியனவாம். விசாரம் - ஆராய்ச்சி.

4548. இல்லறத்தி லிருந்தவருக் கெவ்வுயிர்க ளிடத்தினிலும்
நல்லவழி புரிகுவது நாயகர்பூ சையுமுரிய
சொல்லுகுரு சேவையொடு தொல்பிரம சரியமுநூல்
ஒல்லுமுப நயனவினை யுற்றவருக் குரித்தாமே. (௯.௧)

4549. அருமுனிவர் தாம்பிரம மானாலும் வெய்யவினை
மருவவரு மோகாதி வந்தணுகா வெவ்வுலகும்
விரவுபுக ழரசவவர் விளம்புமுடல் விழுமளவும்
பிரமவிசா ரத்திருப்பர் பின்னமற வெனவுரைத்தான். (௯.௨)

## 10. இயமநியமாதி உரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4550. இத்தி றத்தன கேட்டலு மின்னமும்
பத்தி யும்பகர் தற்கரு ஞானமும்
புத்தி யிற்பொருந் தப்புக லென்னுமவ்
வுத்த வற்கருண் மாதவ னேதினன். (௧)

4551. அருமை யாமறி வாகிய வெம்முழை
ஒருமை யாயநல் லன்பொ டுஞற்றிய
கருமம் யாதெனி னும்மது காண்கினற்
றரும மாமெனச் சாற்றுவர் மேலவர். (௨)

---

4548. நாயகர் பூசையும் - ஆசாரிய பூசையும். உரிய - உரியன. நூல் ஒல்லும் - நூல் பொருந்தும். உபநயன வினையுற்றவருக்கு - பிரமசாரிகளுக்கு. உற்றவருக்குக் குருசேவையும் பிரமசரியமும் உரிய ஆகும்.

4549. வெய்ய வினை - கொடிய வினைகள். மோகாதி - காமக்குரோத முதலியவைகள். உடல் விழுமளவும் - இறக்கும் வரை. பின்னம் - வேறுபாடு. எவ்வுலகும் புகழ் அரச, முனிவர் மோகாதியணுகாமல் உடல் விழுமளவும் பிரம விசாரத்து இருப்பர்.

4550. பத்தி - பக்தி. ஞானம் - அறிவு. புகல் - சொல்வாயாக. என்னும் - என்று கூறுகின்ற. மாதவன் - கண்ணன்.

4551. அறிவாகிய எம்முழை - ஞான உருவமாகிய என்னிடத்தில். எம் என்றது கண்ணன். உஞற்றிய - செய்த. கருமம் - வினை. எம் முழை அன்பொடு உஞற்றிய கருமம் நற்றருமம்.

4552. சுகத்தின் மேம்படச் சொல்லிய ஞானமாம்
மகத்தி னனன் மகபதி யாயயாம்
அகத்து மேவுவ மாகவா ராதிக்கின்
கிகழ்த்து நித்திய னுகுதி நீயரோ. (ரு)

4553. மொழியுங் காலமோர் மூன்றி னுந் தான்றனி
வழியுந் தேமலர் மாலையொன் றுய்நடு
ஒழியு முள்ள மயக்கி னுரகமாய்த்
தழையும் வெம்பய முந்தால் போலுமே. (சு)

4554. அன்ன வாறரு மாயையி னனடு
இன்ன லாம்படைப் பாயதல் லாதினி
துன்னு வோர்க்குப் பிரமமு மொன்றென
மன்னு காலமோர் மூன்றும் வயங்குமே. (ரு)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4555. தருமன்முன் னியம நியமநற் றபசு
சமதமம் வேள்விதக் கிணைமெய்
யுரைதனந் தியாகஞ் சவுரியம் வித்தை
யூதியம் பண்டிதன் மூர்க்கன்
தெரியுநல் வழிதீ வழியருந் தனவான்
தெரித்திர னீசு னநீசன்
மருவுறுங் குணம குணம்புக லென்று
வணங்கலுங் காங்கெயன் வகுத்தான். (அ)

---

4552. ஞானமாம் மகத்தினன் - ஞான யாகத்தால். மகபதி யாய - யக்ஞபதியாகிய. அகத்து - மனத்தில். யாம் அகத்து மேவுவமாக நீ நித்ய னுகுதி; நீ என்றது உத்தவனை. நித்தியன்-அழிவில்லாதவன். ஆகுதி - ஆவாய்.

4553. காலமோர் மூன்றினும் - முக்காலத்திலும். மலர் மாலை - பூமாலை. உள்ளம் மயக்கின் - மனத்தின் மயக்கத்தால். உரகமாய் - பாம்பாக. தழையும் - தோன்றும். பயமும் - பயத்தையும்.

4554. அன்னவாறு - மாலையைக் கண்டு பாம்பாக மயங்குதல்போல. அடு இன்னல் - வருத்தும் துன்பம். உன்னுவோர்க்கு - ஆராய்பவருக்கு. கால மூன்றிலும் பிரமம் ஒன்றென மயங்கும்.

4555. இயமம், நியமம், சமம் தமம். தக்கிணை - தக்ஷிணை. மெய் - உண்மை. தியாகம் - விடுத்தல். சவுரியம் - சூரத் தன்மை. நல்வழியும் தீவழியும். ஈசுரன், அநீசன்; அநீசன் - கடவுட்டன்மை யில்லாதவன். அகுணம் - தீக்குணம். தருமன் முன் இயமம் முதலியவற்றைப் புகல் என்று வணங்கலும் காங்கெயன் வகுத்தான்; தருமன் - தருமபுத்திரன். புகல் - சொல்வாயாக. காங்கெயன் = காங்கேயன் - பீஷ்மன்.

4556. அன்னவ னிசைத்த வாறுனக் கிசைப்ப
மாசகீ கேட்டிமுன் னருஞ்சீர்
மன்னிய வியம நியமமென் பனதாம்
வருமுயிர்க் கிதஞ்செயன் மவுனம்
பன்னுநம் பூசை சபதபம் புனிதம்
பகருமெய் பொறைமுத லியவாம்
உன்னிய சமமுண் மனத்தினை யடக்க
லுறுந்தம மிந்திய மடக்கல். (எ)

கலிவிருத்தம்.

4557. தகைசெய் கின்ற தவமெனச் சொல்வது
புகர்செய் காமம் விடுப்பது புந்தியின்
மகமெ னப்படு கின்றது மற்றெமக்
ககம கிழ்ந்து பயனளித் தாற்றலே. (அ)

4558. தாவி லாதநற் றக்கிணை யாவது
பூவி னோர்க்கருள் பொற்கொடை யன்றுசொல்
ஆவி வேறென் றயர்வுறு மாந்தருக்
கோவி லாப்புகழ் ஞான முதவலாம். (கூ)

4559. பெருமை யாய தனமெனப் பேசுதல்
தரும மாகுந் தரையிற் றவறிலா
உருமை யாய தியாகமென் றோதுதல்
கரும மோடுவெங் காமம் விடுப்பதே. (கய)

---

4556. அன்னவன் - பீஷ்மன். அாச : விளி. இயம நியமம் என்பன உயிர்க்கிதம் செயல் முதலியவாம். உன் மனத்தினை அடக்கல் சமம். இந்தியம் அடக்கல் தமம்.

4557. தகை - பெருமை. புகர் - குற்றம். புந்தியின் காமம் விடுப்பது தவம்; புந்தியின் - அறிவிலிருந்து. எமக்கு அகமகிழ்ந்து பயன் அளித்து ஆற்றல் மகம் எனப்படுகிறது. பயன் - தான் செய்யும் வினைகளின் பயனை. ஆற்றல் - வினை புரிதல். மகம் - யாகம்.

4558. தாவிலாத - கேடில்லாத. தக்கிணை - தக்ஷிணை. பூவினோர்க்கு- பூமியி லுள்ளவர்க்கு. பொற்கொடை யன்று - பொன்னைக் கொடுத்தல் அன்று. ஆவி - உயிர். அயர்வுறும் - மயங்குகின்ற. தக்கிணையாவது மாந்தருக்கு ஞானம் உதவலே.

4559. தருமம் தனமாகும். உருமை - உரிமை; எதுகை நோக்கித் திரிந்தது. கருமமொடு காமத்தை விடுப்பதே தியாகம்; கருமம் - வினை.

4560. சாற்று கின்ற சவுரிய மாவதிங்
காற்ற லுற்ற மனத்தை யடக்குதல்
எற்ற மூற்றந்ற் சத்திய மென்பது
சீற்ற மற்றுவே தாந்தந் தெளிவதே. (கக)

4561. வித்தை யாவது பேதம் விடுத்தொரு
புத்தி யாகப் பொருந்துதல் பொற்புறும்
உத்த வாமிகு மூதிய மாவதெம்
பத்தி யாமென வேதம் பகருமே. (கஉ)

தரவுகோச்சக் கலிப்பா.

4562. பந்தமொடு நல்வீடு பகுத்தறிவோன் பண்டிதனும்
அந்தமிலான் மாவாக்கை யானென்பா னேமூர்க்கன்
நந்தலிலெந் நூலறித னல்லநெறி தீநெறிதான்
புந்தியொடு நிவர்த்தியிலாப் பொய்ந்நூல்பார்த் தறிவதுவே. ()

4563. நல்லகுணஞ் சேர்தருவோ னவையிறன வானுகும்
சொல்லுமகிழ் வில்லானே துகளாருந் தரித்திரனும்
மல்லலுறு மீசனென்பான் வழங்குபுலத் தாசையிலான்
அல்லலுறு மாசைதனை யடைகுறுவோனநீ சுரனே. (கங)

---

4560. ஆற்றலுற்ற மனத்தை யடக்குதல் சவுரியம்; ஆற்றல் - திறமை. சீற்றம் - கோபம். வேதாந்தம் தெளிவதே சத்தியம்; வேதாந்தம் - வேதத்தின் முடிவுப் பொருளே.

4561. பேதம் விடுத்து ஒரு புத்தியாகப் பொருந்துதல் வித்தை; பேதம் - வேற்றுமை. பொற்பு - அழகு. உத்தவா: விளி. எம்பத்தி ஊதியமாம்; எம் பத்தி - எம்மிடத்தில் பக்திவைத்தல். எம் என்றது கண்ணன்.

4562. பந்தமொடு - பிறவிக் கட்டினின்றும்; உருபுமயக்கம். வீடு- மோட்சத்தை. பகுத்து - பிரித்து. ஆக்கையான் என்பான் மூர்க்கன்; ஆக்கையான் - சரீரத்தையுடைய மனிதன். அந்தம் - அழிவு. நந்தல் இல்- அழிவில்லாத. எந்நூல் என்றது கீதையை. எம்நூலறிதல் நல்ல நெறி. நிவர்த்தியிலா - பிறவியினின்றும் விடுதல் இல்லாத. பொய்ந்நூல் பார்த்தறிவது தீ நெறி.

4563. சேர்தருவோன் - பொருந்துகிறவன். நவையில் - குற்றமில்லாத. மகிழ்வு இல்லான் - கிடைத்ததில் மகிழ்ச்சி யில்லாதவன். துகள் ஆரும் - குற்றம் நிறைந்த. மல்லல் - வளம். புலத்து ஆசையிலான் ஈசன்; புலத்து - இந்திரிய விஷயங்களில். அல்லல் - துன்பம். ஆசை - புலத்தில் ஆசையை, உறுவோன் அநீசுரான்,

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4564. குணமிஃ தகுண மென்னக் குறிப்பதே யகுண மாகும்
கணமுறு குணமீ தென்றுங் கருதின குணமீ தென்றும்
மணமிகு தாம மார்ப மனத்திடை மதித்தி டாமை
இணையறு குணம தாகு மென்னலும் வேந்து சொல்லும். ()



# 11. மனத்தொருமைப்பாடு உரைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4565. ஒளிதரு குணங்க ளென்று முறும்பழி யகுண மென்றும்
தெளிதரு நினது வாக்காஞ் சுருதியுந் தெரிக்கு மென்றால்
நளிதரு குணகு ணங்தா ஞடிடா திருப்ப தெங்ஙன்
அளிதரு கமலக் கண்ணு வையுறு மடியே னுள்ளம். (க)

4566. உற்றவை யுறவு நீக்கி யுனதுரை யமுத தன்னால்
பற்றுறு மிழுதை யாய பணியின்வெவ் விடத்தின் மூழ்கப்
பெற்றிடு மெனது நெஞ்சம் பிழையற நினைத்தி யென்று
கொற்றவன் கூற நம்மான் கூறினன் றெரிய மாதோ. (உ)

---

4564. குணம் இஃது, அகுணம் இஃது எனக் குறிப்பதே அகுணம்; மார்ப: விளி. குணம் ஈது அகுணம் ஈது என்று மனத்திடை மதித்திடாமை குணமாகும். என்னலும் - என்று கண்ணன் கூறலும். வேந்து - உத்தவன்.

4565. பழியையுடைய அகுணம். நினது வாக்காம் - உனது வார்த்தையாகிய. சுருதி - வேதம். தெரிக்கும் - எடுத்துக் கூறும். நளி - செறிவு. குணங்களையும் அகுணங்களையும். நாடிடாது - விரும்பாமல். அளி - அருள். கண்ணு, அடியேன் உள்ளம் ஐயுறும்.

4566. உற்ற ஐயுறவு - உண்டான சந்தேகத்தை. உனது - உன்னுடைய. பற்று - ஆசை. இழுதை - அறிவின்மை. பணியின் - பாம்பினுடைய. இழுதையாய பணியின் விடத்தில் மூழ்கப்பெற்ற என் நெஞ்சம் உனது உரையமுதால் பிழையற நினைத்தி; பிழையற - குற்றம் கெட. நினைத்தி - நினைப்பாயாக. கொற்றவன் - உத்தவன். நம்மான் - கண்ணன்.

4567. நலந்தரு ஞான யோக நவையிலாப் பத்தி யோகம்
பலந்தரு கரும யோகம் பகருமிம் மூன்று முன்னே
வலந்தரு மாந்த ருய்ய வகுத்தன மிவையே யன்றிக்
கலந்தரு மார்ப நன்மை காட்டவொன் றில்லை மாதோ. (௩)

4568. ஒழிந்தவர் தமக்கு ஞான யோகமு முரைக்கு மாசை
தழைந்திடா ராகி யாவுந் தவிர்ந்திடா தெமது காதை
மொழிந்திடல் கேட்டன் முன்ன முயன்றநற் றவத்தி னோர்க்கு
விழைந்திடும் பத்தி யென்ன விளம்பியோ கமுநன் றுமால். (௪)

4569. காமமோ டுறைந்த மாந்தர் கருமயோ கத்தின் வாழ்வார்
தீமையு நலனு மின்னோர் சேர்வர்மற் றவருக் கில்லை
மாமக முதல கன்மம் வரும்பயன் விழையா தாற்றின்
நாமநற் குணத்தோ டைந்தாய் நண்ணிடார் ஞானஞ்சேர்வார்.

4570. பேதமற் றிருந்த ஞானம் பிறந்திடு மளவு மெஞ்சீர்
நீதியுற் றிருந்த மாந்தர் நிகழ்த்துதல் கேட்குங் காறும்
ஓதுநை மித்தி கத்தோ டுற்றநித் தியகன் மங்கள்
ஏதமற் றியற்றல் வேண்டு மிறையவ வியல்பின் மாதோ. (௬)

4571. தேவரு மாந்த ராகிச் சேரவே ணவாக்கூர் வாரால்
காவல வெனினு மாந்தர் கருதுதம் பிறவி மீட்டும்

4567. நவை - குற்றம். வலம் தரு - வலம்வந்து வணங்குகிற. கலம் - ஆபரணம். மார்ப : விளி.

4568. ஒழிந்தவர் தமக்கு - முனிவருக்கு. தவிர்ந்திடாது - நீங்காமல். எமது காதை மொழிந்திடல் - எம்முடைய கதைகளைக் கூறல். முன்னம் - முற்பிறப்பில். ஒழிந்தவருக்கு ஞானயோகமும், தவத்தினோர்க்குப் பத்தி யோகமும் நன்றும்.

4569. நலனும் - நன்மையையும். இன்னோர் - கரும யோகத்தின் வாழ்பவர். மாமகம் முதல - மஹாயக்ஞம் முதலியன. பயன் விழையாது - பலனை விரும்பாமல். ஆற்றின் - செய்தால். ஆற்றின் அவருக்கு இல்லை; இல்லை - தீமையும் நலனும் இல்லை. ஐந்தை நண்ணிடாராய், நற்குணத்தோடு ஞானத்தைச் சேர்வர்; ஐந்தை - ஐம்புலப் பேராசையை. சேர்வர் - அடைவர்.

4570. பேதமற்றிருந்த ஞானம் - அபேத ஞானம்; பேதம் - வேறுபாடு. பிறந்திடு மளவும் - உண்டாகும் வரை. எம் சீர் - எம்முடைய புகழை. நிகழ்த்துதல் - சொல்வதை. நைமித்திகத்தோடு - நிமித்தம்பற்றிச் செய்வனவற்றோடு. நித்திய கன்மம் - நாள்தோறும் செய்யவேண்டிய காரியங்களை. ஏதம் - தீங்கு. இறையவ - விளி.

4571. மாந்தராகிச் சேர - மனிதராகிப் பூமியிற் பிறக்க. வேணவா - மிக்க விருப்பத்தை. காவல: விளி. பிறவியை மீட்டும் மேவ; மேவ -

மேவவேண் டுவரோ வென்னின் வினைவரு மென்றே வேண்டார்
தாவில்வீ டொன்ற நிற்பார் சமன்விரைந் துறுமு னன்றே. ()

4572. எறிந்திடு மாத்தின் வாழு மிருஞ்சிறைப் பறவை யப்பால்
பறந்திட நினையா தாகிற் பயக்குமோர் நன்மை யுண்டே
குறைந்துநா ளென்னுங் கூர்வா ளரிதாக் குன்று மாக்கை
உறைந்துயர் நெறியி னெட்டா வுயிர்க்குநன் குறுங்கொ லம்மா. (அ)

4573. மானிட வாக்கை யென்னு மருவரும் பஃறி பெற்றும்
ஊனமில் குரவன் சொல்லா மோடமுய்ப் பவனே டெஞ்சீர்
ஆனதோ ரனுகூ லக்கா லணுகவும் பிறவி வேலை
தானொழி தாவொண் ணுதான் றன்னையே கொல்வ னன்றே. ()

4574. பொன்னுல கடைவான் காதல் புரிகலீர் பொருவில் வீடு
துன்னுதிர் தருது மென்று சொல்லினு யேட்டை கூரார்
மன்னுமே காந்தம் பற்றி மருவின வர்க்கு வேறு
கொன்னுறு தீமை யென்கொல் குணனென்கொல் குறிக்கி னம்மா. ()

---

பொருந்த. வினை - கருமங்கள். வேண்டார் - விரும்பார். தாவில் - கேடில்லாத. வீடொன்ற - மோட்சத்தைப் பொருந்த. சமன் - யமன். சமன் உறுமுன்.

4572. எறிந்திடும் - வெட்டப்படுகின்ற. அப்பால் பறந்திட - அம்மாத்தை நீங்கி வேறிடம் பறந்துசெல்ல. நன்மை யுண்டே; இல்லை என்றபடி. அரிதா - அறுக்க. குன்றும் ஆக்கை - குறைகின்ற சரீரத்தில். உறைந்து - தங்கி. உயர் நெறியின் - சிறந்த மோட்ச மார்க்கத்தில். நன்கு உறும் கொல் - நன்மை வருமோ? வாராது என்றபடி. ஆக்கைக்கு மரமும், உயிருக்குப் பறவையும் உவமைகள்.

4573. மருவரும் பஃறி - கிடைத்தற்கரிய படகை. குரவன் - ஆசிரியனது. சொல்லாகிய ஓடமுய்ப்பவன்; உய்ப்பவன் - செலுத்துவோன். எம்சீராகிய அனுகூலக்கால்; அனுகூலக்கால் - அனுகூலமான காற்று. பிறவியாகிய வேலையை; வேலை - கடல். ஒழிதா - நீங்க. ஒண்ணுதான் - இயலாதவன். கொல்வன் - நாசம்செய்து கொள்வான்.

4574. பொன்னுலகு அடைவான் - தேவருலகை யடைய. காதல் புரிகலீர் - விருப்பம் கொள்ளாதீர். வீடு - மோட்சத்தை. துன்னுதிர் - அடையுங்கள். தருதும் - தருகிறேன். சொல்லினும் - சொன்னபோதிலும். ஏட்டை கூரார் - விருப்பங்கொள்ள மாட்டார்; ஏட்டை - விருப்பம்; (தணிகை. நைமிச. 6). ஏகாந்தம் - ஓர் முடிவையே. கொன்னுறு தீமை - அஞ்சுதலுற்ற தீமை.

(பி - ம்) 2. தருதுமென்று சொற்றலு மேட்டை கூறுர்.



# 12. தேசகாலம் உரைத்த அத்தியாயம்.

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4575. தருமநற் பொருள்சொல் காமஞ் சார்தரு பாக்குச் செய்யா
விரிதரு வேத நூலால் விதித்ததங் கரும மன்பால்
வருணமாச் சிரமர் செய்யின் மருவுவர் குணத்தின் வண்மை
புரையுறு வினைசெய் வாரேற் பொருந்துவ ரகுண மன்றே. (க)

4576. வருணமாச் சிரமர் தத்தம் வருவினை புரியுங் காலைத்
தெரிவுறு தேச காலஞ் செழும்பொருள் கருத்த ராயோர்
கருமமந் திரங்க ளென்னக் கழறுமிவ் வாறின் பாலும்
அரசநற் புனிதம் பொல்லா வசுத்தமுண் டறியற் பால. (உ)

4577. அந்தணர்க் கன்பு செய்யா வரசினி துறையு நாடு
வந்துறு பகையை நீக்கி மாநிலங் காவல் செய்யா
வெந்திறல் வேந்து சேரு மேதினி யெமது தொண்டை
நிந்தைசெய் பதகர் வாழு நெடுநகர் மூன்றுந் தீய. (ங)

---

4575. தருமத்தையும் பொருளையும் காமத்தையும் சார்தருபாக்கு; சார்தரு பாக்கு - அடைய வேண்டி. செய்யாவேதநூலால்; செய்யா - ஒருவராலும் செய்யப்படாத; அபௌருஷேய மென்றபடி. தம்கருமம் - தமக்குரிய கருமங்களை. வருணம் ஆச்சிரமர் - நால்வருணத்தோரும் நான்கு ஆசிரமத்தோரும். குணத்தின் வண்மையை மருவுவர். புரையுறு வினை - குற்றம் பொருந்திய வினையை. அகுணத்தைப் பொருந்துவர்.

4576. புரியும் காலை - செய்யும்போது. தேசம், காலம், பொருள், கருத்தர், கருமம், மந்திரங்கள் என்ற ஆறின் பாலும்; கருத்தர் - எஜமானர். ஆறின்பாலும் - ஆறிடத்திலும். புனிதமும், அசுத்தமும் உண்டு என அறியற்பால; புனிதம் - பரிசுத்தம். அறியற்பால - அறியத் தக்கன.

4577. அரசு - அரசன். செய்யா - செய்யாத. வேந்து - அரசன். மேதினி - நாடு. தொண்டை - ஊழியத்தை. பதகர் - கொடியவர். தீய. அசுத்தமானவை; முற்று. தேசத்தின் அசுத்தம் கூறப்பட்டது.

4578. கருங்கலை காட்டின் வைகாக் கண்ணக னாடுங் கையான்
நெருங்கலைப் புனறா வாத நிலனும்வெவ் வுவரி னார்ந்தே
இருங்கலை மதிபோல் வெண்மை யெய்திய நாடுந் தீய
அருங்கலை முழு துந் தேரெம் மடியர்சே ரிடனன் றாமே. (ச)

4579 இவ்வினைக் கின்ன கால மியல்பென விதித்த தல்லால்
வெவ்விய காலந் தானும் விதித்திடுஞ் சூத காதி
கவ்விய காலந் தானுங் கலகமாங் காலந் தானும்
செவ்விய நெறிசேர் வேந்தே செப்புறு புனித மன்றே. (ரு)

4580. செப்பிய பொருள்க ளெல்லாந் தேசகா லத்தி னானும்
தப்பருஞ் சுசியி னோடே சாற்றிய வசுசி சேரும்
அப்பொருட் கரிய சுத்தி யந்தணர் வசனந் தெண்ணீர்
ஒப்பருந் தபன னாதி யுரைத்திடும் விதியி னுண்டால். (சு)

4581. சீதநீர் படித லானுஞ் செழும்பொரு ளுதவ லானும்
மேதகு தவத்தி னானும் விளம்புநற் கருமத் தானும்
ஓதுமெம் மிடத்தி னன்புற் றுறைதலி னானு நீங்காக்
காதல்கூ ராச சொல்லுங் கருத்தர்நற் புனிதஞ் சேர்வார். (எ)

---

4578. கருங்கலை - கரிய நிறமுடைய மான்; கிருஷ்ண ஸாரம் என்பர். காட்டின்வைகா - காட்டில் பொருந்தாத. கண்ணகல் - இடமகன்ற. கையான் - இரண்டு பக்கங்களிலும். அலைப்புனல் - அலையையுடைய நதி முதலியவற்றால். தூவாத - தெளிக்கப்படாத. உவரின் - உவர் மண்ணால். ஆர்ந்து - நிறைந்து. மதிபோல் - சந்திரனைப் போல. தீய - தீயன. அருங்கலை - அரிய நூற்கலைகள். அடியர் - பக்தர்கள்.

4579. இவ்வினைக்கு - இக்காரியத்துக்கு. இயல்பு என விதிக்கப் படாத வெவ்விய காலம்; என - என்று. சூதகாதி - தீட்டு முதலியவை. கவ்விய - பொருந்திய. கலகம் ஆகின்ற காலமும். புனிதமன்று - பரிசுத்த மானவை யல்ல.

4580. தேசத்தினாலும் காலத்தினாலும் பொருள்களெல்லாம் சுசியொடு அசுசி சேரும்; சுசி - சுத்தம். அசுசி - அசுத்தம். சேரும் - பொருந்தும். அப்பொருட்கு - அசுத்தம் பொருந்திய பொருளுக்கு. அந்தணரது வசனம்; வசனம் - வார்த்தை. தபனனாதி - சூரியன் முதலியவற்றால். தபனனாதி யால் அப்பொருட்கு விதியின் சுத்தி உண்டு.

4581. சீத நீர் - குளிர்ந்த நீரில். படிதலானும் - குளித்தலானும். உதவலானும் - தானமாகக் கொடுத்தலாலும். நற்கருமத்தானும் - நற்காரி யங்களைச் செய்வதாலும். எம்மிடத்தில் என்றது கண்ணனிடத்தில். அரச : விளி. கருத்தர் - கருத்தாக்கள்; வினை செய்பவர். புனிதம் சோவர் - பரிசுத்த மடைவர்.

4582. நிந்தையில் வினையின் றாய்மை நிகழ்த்திடிற் பயன்வெஃ காது
தந்திர மறைசொல் லாறே தரைமிசை முறையி னுற்றல்
மந்திர சுத்தி யென்ன வழங்கிய வாறிங் கோதின்
அந்தமந் திரத்தி னல்ல வரும்பொரு ளறித லாமே. (அ)

4583. தெரிவுறு வருண நான்குஞ் செப்புமாச் சிரமநான்கும்
மருவிய குணத்தி னேடே மறுத்திடு மகுணஞ் சொல்லின்
ஒருவழிக் குணமென் ருேத லொருவழி யகுண மாகும்
புரைதரு மகுணந் தானும் புகலொரு வழியி னன்ரும். (கூ)

4584. தேசுறு மறையோர்க் கேற்றல் செப்புகற் குணமென் ருலும்
ஆசறு நிதியம் பெற்ருேர்க் கத்தொழி லகுண மேயாம்
பூசுபர் தமக்கு வேள்வி புரிவித்தல் குணமென் ருலும்
மாசறு மாச ராயோர்க் கச்செய லகுண மாமே. (க0)

4585. சொல்லிய துறவு பூண்டோர் சுரிகுழ லாரைச் சேரின்
அல்லல்செ யகுண மாகு மாயினும் மனைவி மாரை
இல்லற மியற்று கிற்போ ரியம்பிய நாளிற் ருேய்தல்
நல்லநற் குணமே யாகு நான்மறை தெரித்த வாற்ருல். (கக)

4586. பற்றறு குணத்தி னேடு பழுதுறு குணனுஞ் சொல்லின்
குற்றமி னிவிர்த்தி யல்லாக் கொடுநெறி யடைந்தார்க் கல்லால்

---

4582. பயன் வெஃகாது - பலனை விரும்பாமல். மறை சொல்லாறே- வேதம் கூறிய வழிப்படியே. தரைமிசை - பூமியில். ஆற்றல் - செய்தலாகும். மந்திர சுத்தி - மந்திரத்தினுல் அரும்பொருளை அறிதலாம்.

4583. மறுத்திடும் - மறுக்கப்பட்ட. அகுணங்களைப்பற்றிச் சொன்னுல். ஓதல் - சொல்லப்படுதல். ஒரு வழி - ஒரு சமயத்தில். புரைதரு - குற்றத்தைக் கொடுக்கிற. ஒரு வழியில் நன்று ஆம்.

(பி - ம்,) 1, தெரிவுறு வருண நான்கும் செப்புறு நிலைக ணுன்கும்.

4584. தேசு - ஒளி. மறையோர்க்கு - அந்தணர்க்கு. ஏற்றல் - தானம் வாங்குதல். குணம் என்ருலும் - குணம் என்று கூறப்பட்டாலும். ஆசு - குற்றம். நிதியம் பெற்ருேர்க்கு - செல்வம்பெற்ற அந்தணர்க்கு. அத்தொழில் - ஏற்றல். பூசுரர் தமக்கு - அந்தணர்க்கு. அரசராயோர்க்கு - அரசர்களுக்கு. அச்செயல் - வேள்வி புரிவித்தல்.

4585. சுரிகுழலாரை - பெண்களை. அல்லல் - துன்பத்தை. இயம்பிய நாளில் - விதிக்கப்பட்ட நாட்களில். தோய்தல் - மருவுதல். மறை - வேதம். தெரித்த வாற்ருல் - கூறிய திறத்தால்.

4586. பழுதுறு குணன் - அகுணம். நிவிர்த்தி யல்லாக்கொடுநெறி - பிரவிருத்தி மார்க்கம்; நிவிர்த்தி - பற்றறுதல். தூநெறி - பரிசுத்த மார்க்

சொற்றிடு நிவர்த்தி யென்னுந் தூநெறி யடைந்து ளோர்க்கு
மற்றவை வருவ தில்லை மன்னவ வுரைக்கின் மாதோ. (கஉ)

4587. அமரர்த முலகு வேள்விக் கரும்பய னென்ற வேதம்
இமையவர் புகழவ் வேள்வி யியற்றலெனுஞ் சியைய வேண்டிக்
குமரவிம் மருந்த ருந்திற் கொழுங்கனி தருது மென்னும்
தமரினர் போலல் லாது தரும்பயன் சழக்கில் வீடே. (கங)

4588. மன்னுநல் வேள்வி செய்யின் மறுமையி னடையும் பேறு
பொன்னுல கென்று சொல்வார் பூவையே பலமென் றுன்னும்
கொன்னுறு குணத்தார் போல்வார் கூறிய பயன்வெஃ காமல்
அன்னநல் வேள்வி செய்யி னரும்பய னழிவில் வீடே. (கச)

4589. இருள்படு காட்டி னூடே யிருந்துழல் சிதட ராயோர்
தெருள்படு நகரந் தாமே சேரத ரறிக லார்போல்
மருள்படு காம முன்னி வருவினை முயலா நிற்போர்
பொருள்படு நலஞ்செய் வீட்டிற் புகுமத ரறிக லாரே. (கரு)

4590. தூமத்தான் மூடுங் கண்ணர் சூழ்ந்தண்மை யிருந்துஞ் சாலைச்
சேமத்தான் மூடு மோமத் தீயினைத் தெரிக லார்போல்

---

கத்தை. மன்னவ, குணனும் அகுணனும் கொடுநெறி யடைந்தோர்க் கல்லால் தூநெறி யடைந்தோர்க்கு வருவனவில்லை.

4587. வேள்விக்கு அரும்பயன் அமரர்தம் உலகு. என்ற - என்று கூறிய. வேள்வியை இயற்றலை. குமர - புதல்வனே; விளி. அருந்தின் - குடித்தால். கனிதருதும் - பழம் கொடுப்பேன். என்னும் - என்று கூறு கின்ற. தமரினர் - ஈண்டுப் பெற்றோர். வேதம், வேள்வி இயற்றல் இயைய வேண்டித் தமரினர் போலல்லாது தரும்பயன் சழக்கில் வீடே ஆம்; சழக் கில் - பொய்மை யில்லாத.

4588. பேறு - பாக்கியம். பொன்னுலகு - சுவர்க்கம். பூவையே - பூமியையே. பலம் - பலன். கொன்னுறு குணத்தார் போல்வார் - அச்சத் தைத் தரும் குணத்தை யுடைய அரசரைப் போன்றவர். பயன்வெஃகாமல் - பலனை விரும்பாமல்.

4589. சிதடராயோர் - குருடர். தெருள் - தெளிவு. சேர் அதர் - சேர்கின்ற வழியை. அறிகலார் - அறிய மாட்டார். மருள்படு காமம் - மயக் கம் பொருந்திய காமத்தை. வீட்டில் - மோட்சத்தில். அதர் - வழியை.

4590. தூமத்தான் மூடும் கண்ணர் - புகையால் மூடப்பட்ட கண்ணை யுடையவர். அண்மை யிருந்தும் - ஓமத் தீயின் அருகிலிருந்தும். சாலை - சாலை யின் கண். சேமத்தான் - பாதுகாக்கும் சமித்து முதலிய பொருள்களால்,

காமத்தான் மூடு நெஞ்சக் கருமத்தோ ருலக மாயை
நாமத்தான் மூடி முள்ளத் தம்மைநன் கறிக லாரே. (கசு)

4591. பழுதிலுள் வளியிற் றேன்றும் பரமமா மணுவின் கூட்டத்
தெழுமொலி வீற்று வீற்ற வெழுத்தென மனமுண் டாக்கும்
விழுமிய வெழுத்து நானு வேதமே முதல வாகும்
தொழுதகு மவையு மொன்றே சொற்றிடுந் துணிந்து பார்க்கின். (கஎ)

4592. மருவிய ஞான காண்ட மந்திர காண்ட மென்று
கருமநற் காண்ட மென்று கருதுமவ் வேத மூன்று
உரைதரு பவனும் யாமே யுஞற்றிடும் பவையும் யாமே
அரசநன் ஞானத் தானே யறிந்திடு பவனும் யாமே. (கஅ)



# 13. தத்துவம் உரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4593. இத்திற முன்ன மிசைத்தருள் கண்ணன்
பத்து முதற்சில பற்பல செய்யும்
த்த்துவ மெத்தனை சாற்றுதி நீயென்
றுத்தவ னேதை வுணர்த்தின னன்றே. (க)

---

மாயை நாமத்தான் - மாயை என்ற பெயரினுல். உள்ளத்து - மனத்தில். அம்மை - அவ்வுலகை ; வீட்டை.

4591. உள்வளி - உள்ளே யுள்ள காற்று. வீற்று வீற்று - வேறு வேறாக. எழுந்தென - எழுதலால்.

4592. மூன்று - மூன்று பிரிவாக. உஞற்றிடுபவையும் - செய்யப் படுவனவும்.

4593. உத்தவன் " தத்துவம் எத்தனை சாற்றுதி " என்று ஓதக்கண் ணன் உணர்த்தினன்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4594. உவைத்தநா லாறு தத்துவத் துடனே
யுயிரொடு மீசனைக் கூட்டிப்
பெருக்குமை யைந்தோ டொன்றெனச் சில்லோர்
பேசுவர் சிலர்களை யைந்தாய்
விரித்திடு முயிரோ டீசனென் றுக
விளம்புவர் சிலர்சிலர் சுருக்கிச்
சுருக்கிய மொழிவ தத்துவ மெல்லாஞ்
சொன்முறை யடங்கியாங் கிருக்கும். (உ)

4595. வழங்குதத் துவத்தின் கூட்டமா மாக்கை
மாய்தலும் பிறத்தலு மதிக்கின்
விழைந்திடு கனவிற் பற்பல வாக்கை
விழைவது மறைவதும் போன்மால்
தழைந்தமெய்ந் நெஞ்ச மறத்தலே மரணஞ்
சடமுற நினைத்தலே சனனம்
ஒழிந்திடு மாச புருடனுக் கென்று
முளைத்தலு மிறத்தலு மிலையால். (௩)

4596. இருவினைக் கீடா வேறுடல் படைத்தீங்
கியங்குறு முடலையு மறந்து
மருவிய துயரிற் சாக்கிரத் தறிவு
மறைதல்போன் முன்னுறு மறிவும்
தெரிதா லின்றி யாதனை யுடலஞ்
சேர்ந்துமற் றெனதெனத் தெளிந்து
பெருகிடர்க் கிடனுப் பிறங்கிடு மனமிப்
பெற்றியாற் பிறந்திறந் துழலும். (௪)

---

4594. நாலாறு தத்துவம் - இருபத்து நான்கு தத்துவங்கள். ஐயைந் தொடு ஒன்று என - இருபத்தாறு என்று.

4595. கூட்டம் ஆம் ஆக்கை - சேர்க்கை ஆகிய உடம்பு. முளைத் தல் - பிறத்தல்.

4596. சாக்கிரத்து - விழித்த நிலையில், யாதனை உடலம் - யாதனு சரீரம்.

4597. இன்னண மிலிங்க சரீரமே யுடலத்
தெய்தலு நீங்கலு மல்லால்
மன்னிய புருடன் றனக்கவை யின்றான்
மற்றவன் சுயம்பிர காசன்
துன்னிடுஞ் சடனச் சடத்தரு வாகிச்
சொற்பல வாம்பிர கிருதி
பன்னுபற் பலவாந் தன்மைமற் றுரைக்கிற்
படைத்ததத் துவங்களா வனவே. (ரு)

4598. போற்றுநீ ணதிபோற் பொங்குவெந் தழல்போற்
பொருந்திய பற்பல பலம்போல்
சாற்றுமோர் கணத்துக் கொருகண மாக்கை
தரைமிசை நாசமுற் றிருக்கும்
தோற்றுமோர் புருடன் சொல்லிய வுடல்சேர்
தொகுவினை பொருந்தலெவ் வாறேல்
ஆற்றுநீ ரலையந் நீருறு மாத்தி
னருநிழ லடைந்தவா றுமால். (சு)

4599. பொருந்திய யாக்கை புணர்ந்தவவ் வினையப்
புருடனுக் கில்லைமற் றென்னின்
வருந்தியிங் கிவ்வா றறிவதென் றென்னின்
மதியுற வறிந்தவர்க் கன்றித்
தருந்துயர் போகத் துற்றிடு விருப்புத்
தவிர்ந்தொழி யாதிக லரச
திருந்தறி வில்லோர் யாக்கைதா மென்றே
தினந்தினம் பிறந்திறந் துழல்வார். (எ)

---

4597. இலிங்க சரீரம் - சூக்கும சரீரம். சடன் - ஜடப்பொருள்.

4598. பலம் - பழம். ஆற்று நீரின் அலை. அடைந்த ஆறு ஆம் - அடைந்த விதத்தைப் போலும்.

4599. மதியுற - புத்தி பொருந்த. யாக்கைதாம் என்றே - சரீரமே தாங்கள் என்று.



# 14. நிந்தைபொறுத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4600. வெய்யவர் செருக்கினும் வெகுண்டுபல நிந்தை
செய்யினு மதிக்கினிவை சேர்கனவு போன்மால்
பொய்யென மனத்தொடு புகன்றிடர் பொறுக்கின்
மையலறு மென்னவிறை மன்னவன் வழங்கும். (க)

4601. ஒறுக்கும்வகை யொன்னல ருடற்றுபடை மெய்புக்
கறுக்கும்வகை யாற்றினுநி னன்பரறி ஞர்க்கு
வெறுக்கும்வகை செய்யவரும் வெய்யபல நிந்தை
பொறுக்கும்வகை யெவ்வகை புகன்றருள்செ யென்றான். (உ)

4602 அவந்திபுரி யுற்றுறைய மந்தணன்முன் முனியா
துவந்திடர் பொறுத்தகதை யொன்றுள துனக்குத்
துவந்தவினை போகவது சொல்லுது மெனக்கண்
சிவந்தெழு பணித்தலை நடித்தபுயல் செப்பும். (ங)

4603. அந்நகரில் வாழுமறை யோனளகை யாளும்
மன்னவ னெனப்பொருள் வருந்திநனி யீட்டித்
தன்னையடை வுற்றவறி யோர்தமரி னோருக்
கின்னலற வொன்றுமுத வானினி தியம்பான். (ச)

---

4600. செருக்கினும் - கொன்றாலும். இவை - நிந்தை முதலியன. கனவுபோலாகும் - கனவைப்போலாகும். புகன்று - கூறி. இடர்-துன்பத்தை. மையல் - ஆசை. இறை- கண்ணபிரான். மன்னவன் - உத்தவன்.

4601. ஒறுத்தல் - தண்டித்தல். ஒன்னலர் - பகைவர். படை - ஆயுதம். ஒறுக்கும் வகை, அறுக்கும் வகை ஆற்றினும் நின் அன்பர் நிந்தை பொறுக்கும் வகை எவ்வகை ; ஆற்றினும் - பொறுத்தாலும்.

4602. முனியாது - கோபியாது. உவந்து - மகிழ்ந்து. துவந்த வினை - இருவினைகள் ; தொடர்புடைய வினை எனலுமாம். பணித்தலை - காளிங்கன் என்ற பாம்பின்மேல். புயல் - கண்ணபிரான்.

4603. அந்நகரில் - அவந்தி புரியில். மறையோன் - அந்தணன். அளகை - அளகாபுரியை. மன்னவன் என - குபேரன் என்னும்படி. ஈட்டி- சேர்த்து. வறியோர்க்கும் தமரினோர்க்கும் ; தமரினர் - உறவினர். இன்ன லற - துன்பம் நீங்க. இயம்பான் - பேசமாட்டான்.

4604. உற்றமனை யாளொடு முவந்தன தெவிட்டப்
பெற்றபுதல் வர்க்குநனி பெட்பினுட னீயான்
செற்றமொடும் வெவ்விய சினத்தொடு முழன்று
குற்றமொடு மிக்கநிதி கொண்டுறையு நாளின். (ரு)

4605. கள்ளர்களி ஞனுமுறை காவலவ ஞனும்
கொள்ளுமுறை யென்றெழு குடித்தமரி ஞனும்
நள்ளிருளி னில்லினனி நண்ணழலி ஞனும்
உள்ளபொருள் யாவுமொழி வுற்றிட வயர்ந்தான். (சு)

4606. அயர்ந்தவ னரும்பொரு ளடைந்திடு மிடத்தும்
வியந்துநனி காத்தவை விருப்பினுறை போதும்
நயந்தபொருள் போம்வழியு நண்ணுமிட ரென்ற
உயர்ந்தவுர வோர்களி னுளந்தெளிவு கொண்டான். (எ)

4607. அறைந்தநிதி யாதிய வசத்தெனவவ் வாசை
மறந்துமெய் யறிந்துமகிழ் கொண்டமறை வல்லோன்
துறந்தமுனி வேடமொடு தொன்னகர் திரிந்தான்
நிறைந்தபதி யோர்கண்முன நிந்தைசெய மாதோ. (அ)

4608. கண்டுசிலர் கன்னலொடு கந்தைகள் பறிப்பார்
தண்டுசிலர் கைக்கொடு தருக்கொடு முறிப்பார்
உண்டுசில வஞ்சமிவ னுள்ளமிசை யென்று
மண்டுசின மொன்றுசிலர் வைதன ரடிப்பார். (கூ)

---

4604. மனையாளுக்கும் புதல்வர்க்கும் பெட்பினுடன் ஈயான்; பெட்பு - விருப்பம். செற்றம் - தீராக் கோபம். உழன்று - திரிந்து. நிதி - செல்வத்தை.

4605. காவலவன் - அரசன். குடித்தமர் - உறவினர். இல்லின் - வீட்டின் கண். அழலினுனும் - நெருப்பானும். ஒழிவுற்றிட - அழிந்திட. அயர்ந்தான் - மயங்கினன்.

4606. அயர்ந்தவன் 'பொருள் அடைந்திடு மிடத்தும், அவை காத்து உறைபோதும், பொருள் போம் வழியும் இடர் நண்ணும்' என்று உரவோர்களால் தெளிவு கொண்டான்; அயர்ந்தவன் : அந்தணன். உறைதல் - தங்குதல். உரவோர் - ஞானிகள்.

4607. நிதியாதிய - பொருள் முதலியன. அசத்து - நிலையற்றன. மெய் - உண்மையை. மறைவல்லோன் - அந்தணன். முனி - முனிவனது. பதியோர் நிந்தைசெய நகரில் திரிந்தான்; பதியோர் - அந்நகரத்தோர்.

4608. கன்னல் - கமண்டலு. தருக்கு - வலிமை. உள்ளமிசை வஞ்சம் உண்டு என்னுச் சிலர் வைதனர்.

4609. மோனமென வுற்றதெவ னீமொழிதி யென்பார்
ஈனனிவ னென்றுசில ரெச்சில்க ளிறைப்பார்
போனபொரு ளென்றுமெய் புழுங்கி யிவன்வேடத்
தானது காக்கநிதி யையமிலை யென்பார். (க0)

4610. கவ்வைநெடு வேலைவளை காசினியில் வெய்யோர்
இவ்வகை யறிந்தவ னியற்கையறி யாமே
அவ்விய மனத்தினொ டடைந்தஞ ரியற்றத்
திவ்விய முனிக்கரசு சிந்தையொடு செப்பும். (கக)

வேறு.

4611. நிந்தை யேமுத லாய நிகழ்த்திடாச்
சிந்தை யேய்மனங் கற்பனை செய்யுமே
மைந்தை யேய மனமடங் காவழி
ஐந்தை யேயும் புலனெங் கடங்குமே. (கஉ)

4612. நல்ல சத்துவ ஞான முதலிய
ஒல்லு கிற்கு முபாயத் தொடுங்கினர்
சொல்லு கிற்கு மனத்தைத் துணிபொடும்
வெல்லு கிற்பது வேவென்றி யாகுமே. (கங)

---

4609. மோனம் - மௌனம். எவன் - யாது காரணம். ஈனன் - தாழ்ந்தவன். எச்சில்கள் இறைப்பார் - எச்சில்களை வீசுவார். பொருள் போன என்று; போன - போயின. இவன் நிதி காக்க வேடத்து ஆனது, காக்க - மறைக்க. வேடத்தானது - இவ்வேடங் கொண்டது.

4610. கௌவை - ஒலி. காசினில் - உலகியில். வெய்யோர் - கொடியோர். அவன் இயற்கை - அவ்வந்தணனது இயற்கையை. அவ்வியம் - பொறாமை. அஞர் - துன்பத்தை. முனிக்கரசு - முனிவனுகிய அந்தணன்.

4611. சிந்தை - எண்ணங்களை. கற்பனை - புனைந்துரை; சங்கற்பமுமாம். செய்யுமே: ஏகாரம் வினா. மைந்தை-வலிமையை. ஐந்து ஏயும் புலன் - ஐந்தாகப் பொருந்தும் இந்திரியங்கள். அடங்குமே - அடங்கா என்றபடி.

4612. சத்துவ ஞானம் - நிலையான ஞானத்தை. ஒல்லுகிற்கும் - பொருந்துதலை யுடைய. வெல்லுகிற்பதுவே - வெல்வதே. வென்றியாகும் - வெற்றியாகும்.

4613. வளங்கொண் ஞான வழக்குந் தவமுநல்
உளங்கொ டான முதலரு ளாதியாம்
களங்க மற்ற கருமநல் வெண்மையாய்
விளங்கு சத்துவத் தின்வினை யென்பரே. (கச)

4614. உவந்து போக முஞற்றிய நல்வினை
சிவந்த ராசதத் தின்செய லென்பரால்
அவந்த ரும்வினை யாவுங் கருமையாய்
நிவந்த தாமதத் தின்னிகழ் கன்மமே. (கரு)

4615. இன்ன ணங்குணத் தின்வினை யாவையும்
பன்னு கின்ற மனது படைத்திடும்
சொன்ன வவ்வினை சூழ்ந்தது போன்மலால்
உன்னு கின்ற வுயிர்க்கவை யில்லையே. (கசு)

4616. எங்கு மோடி யிடருறு மாமனம்
தங்கு மோநிலை யுற்றெனச் சாற்றிடின்
கங்கை யாள்பெறுங் காவலன் முன்மனம்
அங்கண் ஞாலம் வியப்ப வடக்கினன். (கள)

4617. பகைவர் மற்றிவர் பற்றுடை யாரிவர்
மிகவ ருத்தினர் வெய்யவர் வேண்டினோர்
அகல வற்புறு மன்புசெய் தாரெனப்
புகல்வர் சற்றும் பொருந்தறி வின்மையோர். (கஅ)

---

4613. வெண்மையாய் - பரிசுத்தமாக. ஞானவழக்கு, தவம், தானம், அருள், நற்கருமம் முதலியன சத்துவத்தின் வினை என்பர் ; சத்துவம் - சத்வ குணம்.

4614. போகத்தை உஞற்றிய நல்வினை ராசதத்தின் செயல் என்பர் ; ராசதம் - ரஜோகுணம். அவம்தரும் வினை - வீணான வினைகள். நிவந்த - மிக்க. தாமதத்தின் - தாமஸ குணத்தினல்.

4615. குணத்தின் - முக்குணங்களின். போன்ம் - போலாகும். அவை - அவ்வினைகள்.

4616. மனம் நிலையுற்றுத் தங்குமோ எனச் சாற்றிடின். காவலன் : பீஷ்மன்.

4617. மற்று : அசைநிலை. பற்று - அன்பு. அற்பு=அன்பு - பிரியம். அறிவின்மையோர் பகைவர், பற்றுடையோர் எனப் புகல்வர்.

4618. உயிரெ னச்சில வுற்றிடு முண்மையும்
அயர்வொ ழித்தவொன் ருகுமெய் வாக்கையும்
வெயிற ழைத்தநீ ரென்னவெம் பூதத்தாய்ச்
செயிர்த ழைத்தலிற் செப்புமொன் ருகுமே. (கக)

4619. உண்மை யாய வுயிருக் குவகைசெய்
வண்மை யாந்துதி நிந்தனை மற்றிலை
திண்மை யாய வுடற்கவை சேரினும்
எண்மை யாவு மியம்பினென் ருகையால். (உ0)

4620. எண்ணு நிந்தைசெய் வோரையென் செய்குவம்
கண்ணிற் கைப்படிற் கையையென் செய்வது
தண்ணு றுஞ்செழுந் தாலுற் றெயிறுறின்
பண்ணை மைந்தவப் பல்லையென் செய்வதே. (உக)

4621. இன்ன தன்மை யிசைத்தங் குளத்தொடும்
பன்னு நிந்தை பலவும் பொறுத்தவன்
தன்னை யெண்ணிச் சகத்தொன் றிலையென
உன்னி யுண்மையி னென்றுபட் டானரோ. (உஉ)

4622. என்று கண்ண னிசைத்தலு முத்தவன்
ஒன்று நிந்தை யுவந்து பொறுக்குவன்
நன்று நன்றினி யென்று நலந்திகழ்
மன்றல் செய்த மலர்ப்பதம் போற்றினன். (உங)

---

4618. அயர்வு - சோர்வு. ஆக்கை - உடம்பு. வெயில் தழைத்த நீர் - கானல் நீர். செயிர் - குற்றம்.

4619. உண்மையாய - அழிவில்லாத. உயிருக்குத் துதியும் நிந்தனையும் இலை. அவை - துதிநிந்தைகள். எண்மை - எளிமை. ஒன்ருகையால் இலை என முடிக்க.

4620. என் செய்குவம் - என்ன செய்வோம். தால் - நாக்கு. எயிறுறின் - கடிக்கப்பட்டால்.

4621. இசைத்து - கூறி. அவன் - அந்த அவந்திபுரி அந்தணன். உன்னி - நினைந்து.

4622. ஒன்றும் - பொருந்துகிற. பொறுக்குவன் - பொறுத்துக் கொள்வேன். மன்றல் - வாசனை.

4623. செம்மை நங்கதைத் தேற லருந்தினர்
தம்மை யன்றிச் சாரசர மின்றெனு
வெம்மை நிந்தை பொறுத்து விருப்புடன்
மும்மை யற்று முயங்குவர் முத்தியே. (உச)

# 15. குணங்கலத்தல் உரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்

4624. பவந்த ருமுக் குணத்தின் பயனையோர்ந்
தவந்த ருமற் றவையென் றறிந்தலால்
துவந்த வல்வினைத் தோற்றம் விடாதென்ச்
சிவந்த பூமகட் சேர்ந்தவன் செப்புமால். (க)

4625. ஞான மேமுத லாகிய நல்வினை
ஆன போதருஞ் சத்துவ மென்பரால்
மான மார்தரு மாசையின் வைகுவோன்
ஈன மோங்கு மிராசத னென்பவே. (உ)

4623. கதையாகிய தேறலே; தேறல் - தேன். வெம்மையான நிந்தையை. மும்மை - உம்மை, இம்மை, மறுமை என்பவை. முத்தியை முயங்குவர்.

4624. பவம் - பிறப்பை. முக்குணம் - சத்வம், ரஜஸ், தாமஸம் என்பன. அவை அவம் தரும் என்று அறிந்தலால்; அவை - அம்முக்குணம். அவம் - துன்பத்தை. அறிந்தலால் - அறிந்ததனுல் அல்லாமல். துவந்தம் - தொடர்பு. பூமகட் சேர்ந்தவன் - கண்ணன்.

4625. மானம் ஆர் தரும் - பெருமை நிறைந்த. இராசதன் - ராஜஸ குணமுள்ளவன்.

4626. துஞ்சல் வெஞ்சினஞ் சோம்பு கொலைமுதல்
வஞ்ச வல்வினை வந்துடன் வைகுழி
எஞ்ச லில்லை யெனச்சொற் றமகுணம்
நெஞ்சி னின்று நிகழ்ந்தன னென்பவே. (ந)

4627. சத்து வத்தொடு சாற்று மிராசதம்
ஒத்தி ருக்கி னுளத்தி லறம்பொருள்
சித்த மன்புறு மின்பந் தெளிவினல்
முத்தி யென்ன மொழிந்தவை முன்னுவார். (ச)

4628. தாம தத்தொடு சத்துவஞ் சார்ந்தவர்
தீமை செய்திடுஞ் சோலர்ச் செற்றிடின்
பூம லர்த்திருப் புங்கவ னல்லறம்
ஏம முற்றிங் கியற்றுது மென்பரால். (ரு)

4629, ஓங்கி ராசத தாமதத் துற்றவர்
தீங்கி னும்பொருள் சேர்ந்து பலன்பெற
வாங்கு நீர்த்திரை வையக மேலறம்
நீங்க லாத நெடுவினை செய்வரே. (சு)

4630. இறக்குங் காலத் திராசத முற்றவர்
பிறக்குங் கான்மனு டப்பிறப் பாகுவர்
அறத்தின் மேலருஞ் சத்துவ ராகின்மேல்
சிறக்குந் தேவ ரெனத்திகழ் வார்களே. (எ)

---

4626. துஞ்சல் - தூங்குதல். சோம்பு - சோம்பல். எஞ்சல் - குறைவு. தமகுணம் - தமோகுணம்.

4627. சத்துவ குணத்தொடு இராசத குணம் ஒத்திருக்கின் உளத்தில் அறம், பொருள், இன்பம், முத்தி என மொழிந்தவை முன்னுவார்; முத்தி - வீடு. மொழிந்தவை - சொல்லப்பட்ட புருடார்த்தங்களை. முன்னுவார் - நினைப்பர்.

4628. தாமதத்தொடு - தாமஸ குணத்தொடு. சோலர் - பகைவரை. செற்றிடின் - அழித்தால். புங்கவன் - திருமாலது. ஏமம் - பாதுகாப்பு. நல்லறங்களை இயற்றுதும் என்பர்.

4629. ராசத குணத்தொடு தாமத குணமுற்றவர். தீங்கின் - தீச் செயலால். வையக மேல் - உலகத்தில். அறம் நீங்கலாத - தருமம் நீங்காத. வினை - காரியங்களை.

4630. இறக்கும் காலத்தில் - சாகும் தருணத்தில். இராசதம் - ராஜஸ குணத்தை. இறக்குங்கால் சத்துவராகின்; சத்துவராகின் - சத்வகுணத்தின ரானல்.

4631. சாகுங் காலத் தமோகுணஞ் சார்ந்திடின்
சேகு சேர்நா கத்திடைச் சேர்வால்
மோக மூன்று குணமுமுன் னுறெனின்
ஏக மாகுவ ரென்னொடும் வந்தரோ. (அ)

4632. கூறு மூன்று குணமுமொன் றாயெழில்
மாறு செய்பவர் மாய்ந்து வளர்திகழ்
ஈறில் செல்வ மியையி னெழிற்பொனுல்
வேறோர் கோயில் விளக்குவ மென்பரால். (கூ)

4633. தாம மார்பநற் றத்துவ முற்றவர்
காம மற்றுக் கரும மியற்றுவார்
நாம நல்வினை நற்பலன் முன்னியே
சேம மாரு மிராசதர் செய்வரே. (கo)

4634. வெய்ய தாமத மாங்குண மேவினர்
செய்ய நல்லறந் தீமையென் றோர்தரும்
துய்ய சிந்தைய ரன்றித் துகளற
ஐய மற்றங் கனுதின மாற்றுவார். (கக)

4635. பிணங்கி நின்றவிப் பெற்றிய முக்குணம்
இணங்கி நின்றெம தேவலி யற்றுமால்
மணங்க டந்த மதுமலர்த் தாரினய்
குணங்க டந்தவ ரேமுத்தி கூடுவார்.

---

4631. சேகு - பகைமை; (கூர்ம. பிரம. 7.) முன்னுர் எனின் - பொருந்தா ரென்றால். உவந்து என்னொடு ஏக மாகுவர்; ஏகம் - ஒரு பொருள்.

(பி - ம்.) 4. ஏக மாகுவ ரெம்மிற் பிரிந்தரோ.

4632. மூன்று குணம் - சத்துவம் முதல் மூன்று. ஈறுஇல் - அழிவு இல்லாத. விளக்குவம் - செய்வோம்.

4633. மார்ப : விளி. தத்துவங்களை யுற்றவர். காமம் அற்று - பலனில் விருப்பமின்றி. இராசதர் பலன் முன்னி நல்வினை செய்வர்.

4634. தாமத குணத்தை மேவினர். ஓர்தரும் - ஆராய்கின்ற. சிந்தையர் அன்றி - மனத்தினரா யில்லாமல். துகள் - குற்றம்.

4635. பிணங்கி - மாறுபட்டு. இப்பெற்றிய - இத்தன்மைத்தான. எமது ஏவலை இயற்றும். தாரினய் : விளி. குணம் - முக்குணங்களை. கடந்தவரே - நீங்கினவரே.

# 16. பூசனை உரைத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

4636. இன்ன வாறறி யாதவ ராயினு மெவரும்
மன்ன வாறலை நீர்மல ராதிகண் மருவித்
துன்ன வாவொடு பூசனை செய்தெமைத் தொழினே
அன்ன வாசைக டுய்த்தபின் னும்மெமை யடைவார். (க)

4637. என்று கூறலும் வருணவாச் சிரமர்க ளிணர்த்தார்
மன்ற லோதியர் பின்னவர் வழுத்துமவ் வகைமுன்
கொன்றை வேணிய னாதன் முதலினர் குறித்தார்
நன்று கூறெனு மரசனுக் கரிந்தம னவிலும். (உ)

4638. இலங்கு வைதிகந் தாந்திரி கமிச்சிர மென்னப்
பலங்கொள் பூசனை மூவகை யாமெனப் பகர்வார்
துலங்கு பூசனைக் கேற்றவா செய்திடத் துணிவார்
வலங்கொள் வேதமந் திரங்களிற் செய்தல்வை திகமே. (ங)

4639. குற்ற மற்றதாந் திரிகபூ சனைச்செயல் குறிக்கின்
உற்ற தந்திரத் தான்முறை பூசனை யுஞற்றல்

---

4636. ஆறலை நீர் - ஆற்று நீர். மலராதிகள் - பூ முதலியவற்றை. துன் அவாவொடும் - மிக்க விருப்பத்தொடும். பூசனை - பூஜை. தொழின் - தொழுதால். ஆசைகள் - விரும்பிய இன்பங்களை. துய்த்தபின் - அனுப வித்த பிறகு.

4637. வருணத்தோரும் நான்கு ஆசிரமத்தோர்களும், ஓதியரும், பின்னவரும் வழுத்தும் வகையை; ஓதியர் - மகளிர்; ஓதி - கூந்தல். பின்ன வர் - நால்வருணத்தினும் தாழ்ந்தவர். வழுத்தும் - துதிக்கின்ற. வேணி யன் - சிவபிரான். அரசனுக்கு - உத்தவனுக்கு. அரிந்தமன் - கண்ணன். நவிலும் - சொல்லுவான்.

4638. பூசனை வைதிகம், தாந்திரிகம், மிச்சிரம் என்ன மூவகையாம். பூசனைக்கு - பூஜை செய்வதற்கு. வலம் கொள் - உறுதி கொண்ட. வேத மந்திரங்களால் பூஜை செய்தல் வைதிகம் ஆகும்.

4639. தாந்திரிக :பூசனை தந்திர முறைப்படி உஞற்றல் ஆம்;

முற்று ணர்ந்தவர் முழுமறை யாகம முயறல்
சொற்ற மிச்சிர பூசனை யெனத்துலங் கிடுமே. (௪)

4640. மணம்பொ ருந்திய சந்தனம் வாலுகம் வனப்பார்
பணம்பொ ருந்திய மணிமுதன் மணிபல தாருக்
கணம்பொ ருந்திய லோகநல் லோவியங் கவின்கல்
குணம்பொ ருந்திய மனமெனக் கூறுமெட் டிடத்தும். (௫)

4641. பூசை செய்வரப் பூசனை யிருவகைத் தர்மால்
பேசி னவ்வகை சாந்திர மெனப்பெயர் பெறுமால்
தேசு தந்திடு முறையினு வாகனஞ் செய்து
மாசி லுத்தியா பனஞ்செயல் சாமென வகுப்பார். (௬)

4642. உரைத்த சீர்செயா வாகன முத்தியா பனத்தால்
விரித்த பூசனை யன்றிநிச் சலும்விழை விருப்பால்
தெரித்த மந்திரத் தான்முறை முறைசெயும் பூசை
தரைத்த லத்தினிற் றிரமெனுந் தனிப்பெயர் சாரும். (௭)

4643. புனித ராகியுள் ளன்பொடு பூசனைக் கேற்ற
இனிய பல்பொரு ளியைந்திரண் டெட்டுப சாரத்
தனக பூசனை காமமற் றூற்றுவ ராயின்
வினையி னொன்றிடார் வீடவர்க் களிக்குதும் விழைவால். (௮)

---

உஞற்றல் - செய்தல். மறை, ஆகமம் இரண்டின்படி பூசைசெய்ய முயறல் மிச்சிரபூசனை ; முயறல் - முயலுதல்.

4640. கடவுள் பொருந்துமிடங்கள் கூறப்படுகின்றன. வாலுகம் - மணல். பணம் - பாம்பின் படத்தில். மணி - நாகரத்தினம். முதல் - முதலிய. தாரு - மரம். லோகம் - உலோகம். ஓவியம் - சித்திரம். எட்டிடத்தும் பூசை செய்வர் (4641) என முடிக்க.

4641. திரம் - ஸ்திரம் ; நிலையானது. தேசு - ஒளி. மறையின் - வேத மந்திரத்தால். ஆவாகனம் - தெய்வத்தைப் பிம்பத்தில் கொணர்தல். உத்தியாபனம் செயல் - பூசை முடிந்தபிறகு வரித்த கடவுளை மந்திரங்களால் நீக்குதல்.

4642. நிச்சலும் - தினந்தோறும். விழை விருப்பால் - உண்டான ஆசையால். திரம் என - ஸ்திரம் என்று.

4643. புனிதர் - பரிசுத்தர். இரண்டெட்டு உபசாரத்து - பதினாறு வித உபசாரங்களால். அனக பூசனை - பாவமற்ற பூஜை. காமமற்று - பலனில் விருப்பின்றி. ஒன்றிடார் - பொருந்தார். வீடு - மோட்சத்தை. அளிக்குதும் - கொடுப்போம்.

4644. ஆசை யுற்றவர் பூசனே யாற்றினு மவர்தாம்
நேச முற்றன வழங்குவ நினைத்தன பொசித்தோர்
பேசு முத்தியும் பெறுகுவர் பிறங்கிவை யல்லால்
பாசி லேக்கொடு பழிச்சினும் பலனினி தளித்தும். (௯)

4645- ஆரி யந்தமி ழாதிமற் றவாவ வெழுத்தாம்
சீரி யங்கிய பதத்தொடை யாற்றிரு மகள்சேர்
வேரி யந்துழாய் விமலவென் றெந்தமை விளம்பின்
மாரி யஞ்சுகைம் மன்னவ வளிக்குது மகிழ்ந்தே. (க0)

4646. நிகரின் மன்னவ நேசமுற் றெமக்கிவ ணிலவ
நகரி னிற்றவாத் திருவிழா நடத்திடு நலத்தோர்
மகா வாரிசூழ் மாநிலத் தினுமறு மையினும்
புகரி லும்பரும் புகழ்தாப் போகமுற் றுறைவார். (கக)



# 17. நைமிசம் அடைந்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4647. ஆக்கையும் புலனு மன்று லசைவுறு மனனு மன்றால்
வீக்குறும் வினேசேர் மன்றவெவ்வகங் கார மன்றால்
போக்குறும் புந்தி யன்றுற் பொருளென விவ்வா றெல்லாம்
நீக்கிமற் றறிவு தானே நித்தியப் பொருளென் பாரால். (க)

4644. ஆசையுற்றவர் - பலனில் விருப்பமுள்ளவராய். நேசமுற்றன - விரும்பும் பொருள்களே. வழங்குவம் - அளிப்போம். பொசித்தோர் - அங்ஙனம் அநுபவித்தவரும். பாசிலேக்கொடு - பச்சிலேகளேக் கொண்டு. பழிச்சினும் - பூசித்தானும்.

4645. ஆரியம் - சம்ஸ்கிருதம். பதத்தொடையால் - பாடல்களால். மாரி - மேகம். மன்னவ : விளி. அளிக்குதும் - அருள் செய்வோம்.

4646. இவண் - இப்பூவுலகில். நிலவ - நிலேபெற. தவா - கெடாத. உம்பரும் - தேவரும்.

4647. ஆக்கை - உடல். புலன் - ஐம்புலன். அன்று - இல்லே. ஆல் : அசை. மனன் - மனம். வீக்குறும் - கட்டப்படுகிற. புந்தி - புத்தி.

4648. இப்பியே யிரச தம்போ லிலங்குறு தன்மைத் தென்ன
ஒப்பிலாப் பிரமந் தானே யுலகுபோற் றேற்றிற் றென்று
செப்புமுள் ளுணர்வி னலே தேர்ந்துகொண் டிருப்போர் தம்மைத்
தப்பிலா ஞான யோகத் தலைவரென் றியம்பு வாரே. (உ)

கலிநிலைத்துறை

4649. எங்கு மாய்நிறைந் திலங்கிய ஞானவா ரிதியின்
பொங்கு தெண்டிரை நுரைவரும் புற்பத மெனவே
அங்கண் மாநிலத் தொடக்கத்த வுலகங்க ளனைத்தும்
தங்கி நின்றெழும் வேறுவே றறிவிலர் சாற்ற. (ரு)

4650. மறிந்து தோன்றிய திரைநுரை குமிழிமற் றனைத்தும்
சிறந்து தோன்றுமந் நீரலாற் றெரிக்கின்வே றிலைபோல்
குறைந்து தோன்றிய வுலகங்க ளனைத்தையுங் குறிக்கின்
நிறைந்து தோன்றுமப் பரமலா னிகழ்த்தவொன் றிலையால். ()

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

4651. ஆதியு நடுவு மற்ற வந்தமுந் தானென் றுயும்
ஓதிய நடுவிற் பல்பூ ணுருவொடும் பெயர்வே றுற்றுத்
தீதற விளங்கும் பொன்னிற் செகத்துரு நடுவி லுற்றுப்
பேதமி னடுவு முன்னும் பின்னுமாய்ப் பிரமம் வைகும். (ரு)

4652. மனமெனு மரச னலே மருவு கற்பனைக ளாகி
புனைவுறு பெயரு லோகம் பொருந்துதல் குறித்த லாது
நினைவுறு பரமா நந்த நித்தியப் பொருளுக் காதி
வினைநடு வந்த மென்ன விளம்பலோர் தன்மைத் தன்றால். (சு)

---

4648. இப்பி - சிப்பி. இரசதம் போல் - வெள்ளியைப் போல. தன்மைத் தென்ன - தன்மையை யுடையதுபோல. உணர்வினலே - அறிவினலே.

4649. ஞானவாரிதியின் - ஞானக் கடலாகிய பிரமத்தினிடமிருந்து. புற்பதமென - நீர்க்குமிழிபோல; நிலத்தொடக்கத்த - பூமி முதலான. வேறு வேருக அறிவிலர் சாற்ற ஞானவாரிதியின் உலகங்களனைத்தும் எழும்.

4650. திரை - அலை. அந்நீரலால் - அக்கடல் நீரன்றி. பரமலால் - பரம் பொருளை யன்றி.

4651. ஆதி - முதன்மை. அந்தம் - முடிவு. பல்பூண் உருவொடும் - பல ஆபரணங்களின் உருவங்களொடும். பொன்னின் - தங்கத்தைப் போல. நடுவில் செகத்துருவை யுற்று; செகத்து - உலகங்களின். பேதம் இல் - மாறுபாடு இல்லாத. பேதமில் பிரமம் முன்னும் நடுவும் பின்னுமா வைகும்.

4652. கற்பனைகளாகி - கற்பனை செய்யப்பட்டவையாகி. பொருளுக்கு - பிரமத்துக்கு.

4653. உன்னின்யா மன்றி மற்றொன் றில்லையா லுரவோ யென்னத்
தன்னிலை யறியு மாறு தாமரைக் கண்ணன் கூற
மன்னுமெய்ம் மயிர்சி லிர்ப்ப மாமலர்க் கண்ணீர் வார
இன்னதென் றியம்ப லாகா வின்பமாங் கடலு ளாழ்ந்தான்.()

4654. வழுத்தருந் தகைய வின்ப வாரியி னழுந்தி மூழ்கும்
பழுத்தவன் புடையோன் செய்யாப் பழமறைப் பொருளான் கங்கை
சுழித்தலை யெறியும் பொற்றாட் டுணைமலர்க் கமலப் போதில்
விழிப்புனல் பாந்து பாய வீழ்ந்தன னிறைஞ்சி னானால். (அ)

கலிவிருத்தம்

4655. சேயதாட் டாமரை சென்னி சூடிய
தூயனை யருந்தவர் சூழல் சேர்கென
மாயவன் பணித்தனன் மறுக்க வல்லனே
போயின னிருகணீர் பொழியு மன்பினான். (கூ)

4656. நீக்கரு மன்பின னேமி யானைப்பின்
நோக்கின னோக்கின னாகி நோன்மையான்
ஆக்கினன் சிந்தையு ளமா வையனை
வாக்கினிற் றுதித்தனன் மறுகி யேகினான். (க0)

4657. அணிதிகழ் நைமிசா ரணியத் தன்பினில்
தணிவிலவ் வுத்தவன் சார்ந்த தன்மைசெம்
மணிபுனை மன்னமுன் வழங்கி னாமெனாத்
துணிவுறு சுகமுனி சொல்லி னனரோ. (கக

---

4653. உரவோய் என்றது உத்தவனை; விளி. மலர்க் கண்ணிலிருந்து நீர்வார. இன்னது - இந்த விதமானது. ஆழ்ந்தவன் - உத்தவன்.

4654. வழுத்தருந்தகைய - புகழ்தற்கரிய பெருமை பொருந்திய. அன்புடையோன் - உத்தவன். செய்யா - ஒருவராலும் இயற்றப்படாத. மறைப் பொருளான் - கண்ணனது. தாளாகிய கமலப் போதில் வீழ்ந்தனனாகி இறைஞ்சினான்.

4655. சேய - சிவந்த. தூயனை - உத்தவனை. சூழல் - சோலை; இங்கே நைமிசவனம். சேர்க - சேர்வாயாக. மாயவன் - கண்ணன். அன்பினான் போயினன்; அன்பினான் - உத்தவன்.

4656. நீக்கரும் - நீக்குதற்கரிய. அன்பினன் - உத்தவன். நேமியானை - கண்ணனை; நேமி - சக்கராயுதம், நோன்மையான் ஐயனைச் சிந்தையுள் அமா ஆக்கினன்; நோன்மையான் - உத்தவன். ஐயனை - கண்ணனை. வாக்கினில் - வார்த்தைகளால்.

4657. நைமிசாரணியத்து - நைமிச வனத்தில். சார்ந்த தன்மை - அடைந்த தன்மையை. மன்ன என்றது பரிட்சித்தை நோக்கி விளி.

# 18. தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளிய அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4658. என்றனு மன்னவ னிசைத்த சாபத்தீ
ஒன்றிய யாதவ ருற்ற தன்மைநீ
மன்றமா தவவினி வழங்கு வாயெனப்
பொன்றிய வாறவட் புகறன் மேயினான். (க)

4659. மண்ணினும் வானினு மருவுற் பாதமற்
றெண்ணில கண்டன மீங்கு வைகிடல்
நண்ணொரு கன்னலு நயக்கொ ணாதெனக்
கண்ணனுத் தவனொடு கழறி னானரோ. (உ)

4660. கோதைய ரின்னிளங் குமார் மூப்பினர்
ஓதுமிந் நகரிடத் தொருங்கு வைகுற
வேதியர்க் கரும்பொருள் வெறுப்ப நல்கிமற்
றேதமில் லவரொடு மேகி வல்லையே. (௩)

4661. பாமகட் காரியம் பகரும் பேர்பெறு
காமர்வண் ணதிகடல் கலக்கு மோர்துறை
நாமநன் னீரிடை நயந்து தோய்தரின்
தீமையற் றிடுமெனச் செல்வன் செப்பினான். (௪)

---

4658. மன்னவன் - பரிட்சித்து. இசைத்த - சுக்கிரன் முதலியோர் சபித்த. ஒன்றிய - பொருந்திய. மாதவ, சாபத்தீ ஒன்றிய யாதவர் தன்மையை வழங்குவாய். மாதவ என்றது சுகனை நோக்கி விளி. பொன்றிய வாறு - யாதவர் அழிந்த வரலாற்றை.

4659. வானினும் - ஆகாயத்திலும். உற்பாதம் - துர்ச்சகுனங்கள். ஈங்கு - இத்துவாரகையில். வைகிடல் - தங்கியிருத்தல். ஒரு கன்னலும் ஈங்கு வைகிடல் நயக்கொணாது என ; கன்னல் - நாழிகை.

4660. கோதையர் - மகளிர். மூப்பினர் - வயது முதிர்ந்தவர். இந்நகரிடத்து - இத்துவாரகையில். வெறுப்ப - வெறுக்கும்படி. வல்லை ஏகி ; வல்லை - விரைவில்.

4661. பாமகட்கு ஆரியம் பகரும் பேர் பெறு நதி - கலைமகட்கு வடமொழியில் சொல்லப்படும் பேர் பெற்ற நதி ; அஃதாவது சரஸ்வதி நதி. காமர் - அழகிய. சரஸ்வதி நதி கடலிடைக் கலக்கும் துறையில் தோய்தரின் தீமை யற்றிடும் ; தோய்தரின் - நீராடினால். செல்வன் - கண்ணன்.

4662. திங்கணற் றவமுனஞ் செய்து தீங்கறப்
பொங்கொளி சேர்பிர பாதம் போம்பொருட்
டங்குறை யந்தணர்க் காக்க நீணிதி
மங்குலின் வழங்கினர் வழிபட் டாரரோ. (ரு)

4663. தேரினிற் சிலர்சிலர் சினக்க டாமழைக்
காரினிற் சிலர்சிலர் கவன வாம்பரித்
தாரினிற் சிலர்சிலர் தயங்க வேகினர்
சீரினிற் சிறந்தவர் சிவிகை யேறினர். (சு)

4664. குடவளை யலறவெண் கூந்தன் மாத்திரள்
உடைதிரை யெனவெழுந் துழைதொ றீண்டமா
கடலொடு கடல்பொரக் கலக்குங் காட்சிபோல்
மிடல்கெழு தார்ப்படை வெள்ளஞ் சென்றதால். (எ)

4665. விரைசெலு மிவுளிமேல் வேந்தர் சூழ்வாக்
குருதிவே லரசிளங் குமா ரீட்டமோ
டொருதனி யாழியா னுலகம் போற்றிய
திருமறு மார்பனுஞ் செலவ யர்ந்தனன். (அ)

4666. வரையினிற் பொலிதரு மத்த யானையும்
திரையினிற் பொலிதரு பரியுந் தேர்களும்
விரைவினி லுடன்வா வீர ரோடநல்
நிரையினி லேறியந் நீத்த நீங்கினர். (கூ)

---

4662. திங்கள்-சந்திரன். தீங்கு அறத் திங்கள் முனம் தவம் செய்து ; தீங்கு - குற்றம் ; அதாவது வெண்குட்ட நோய். அற - நீங்க. பிரபாதம் : சாஸ்வதி நதி கடலில் கலக்குமிடத்துக்குப் பெயர். நிதி - செல்வத்தை. மங்குலின் - மேகத்தைப் போல.

4663. கடாமழைக்கார் - மதமாகிய மழையைப் பொழியும் மேகம் போன்ற யானை. கவனம் - வேகம். பரித்தார் - குதிரை வரிசை.

4664. குடவளை - குடம் போன்ற சங்கு. வெண் கூந்தல் மா - குதிரைகள்; கூந்தல் - பிடரி மயிர். திரையென - அலைகளைப் போல. உழை தொறு - இடந்தோறும். அலற, ஈண்டப் படைவெள்ளம் சென்றது.

4665. இவுளி - குதிரை. குருதிவேல் - இரத்தம் தோய்ந்த வேல். ஆழியான் - திருமாலாகிய. மார்பன் - கண்ணன். செலவயர்ந்தனன் - சென்றனன்.

4666. வரையினில் - மலைகளைப் போல. திரையினில் - அலைகளைப் போல. பரியும் - குதிரைகளும். ஓட நிரையினில் - தெப்பத்தில். நீத்தம் - வெள்ளத்தை.

4667. ஏர்பெறு பேர்பிர பாத மென்றுசொல்
சீர்பெறு தலத்திடைச் சென்று வாணியின்
பேர்பெறு நதிகடல் பெயரு மோர்துறை
தார்பெறு புயத்தவர் தலைப்பட் டாடினர். (கo)

4668. போந்துநீர் படிந்தவப் புகழி னூரெலாந்
ஏய்ந்தநல் விரதமுற் றிருந்த காலையின்
பாந்தளி னடித்தவப் பரமன் மாயையால்
மாந்தினர் மதுப்பல மயங்கி னருளம். (கக)

4669. கூடினர் மதுக்களி கொற்ற மேம்படச்
சூடினர் சுரும்புணத் தொடுத்த பைந்தொடை
ஆடின ரார்த்தன ராயு தங்களால்
வீடின ரெனவெருண் டமர்விளைத்தனர். (கஉ)

4670. கண்ணன்மு னல்கிய காமன் றன்னெடும்
தண்ணறுந் தொடைபுனை சாம்ப னேற்றனன்
அண்ணலங் களிற்றினு னக்கு ரூரான்முன்
நண்ணினன் சமர்செய நலஞ்செய் போசனே. (கஙு)

4671. தீத்திரள் பொழிதரு செய்ய தாமரை
நேத்திரத் தானநி ருத்த னீணிலம்
காத்தினி தளிப்பவன் கருத்தை யோர்கிலம்
சாத்தகி தன்னொடு சமருக் கேற்றனன். (கச)

---

4667. வாணியின் பேர் பெறு நதி - சாசுவதி நதி. கடலிற் பெயரும் துறையில். புயத்தவர் - யாதவ வீரர். ஆடினர் - நீராடினர்.

4668. புகழினூர் - யாதவர் பாந்தளின் - பாம்பின்மேல். பரமன் - கண்ணனது. பல மதுக்களை மாந்தினர், உளம் மயங்கினர். மது - கள்.

4669. மதுக்களி - கள்ளுண்டதால் எற்பட்டது. கொற்றம் - வெற்றி. தொடை சூடினர். வீடினர் என ஆயுதங்களால் அமர் விளைத்தனர்; வீடினர் என - அழிந்தனர் என்னும்படி.

4670. காமன் - பிரத்தியும்நன். ஏற்றனன் - எதிர்த்தனன். அக்குரூரான் முன் போசன் சமர்செய நண்ணினன்.

4671. நேத்திரம் - கண். உலகளிப்பவன் - கண்ணனது. ஓர்கிலன் - அறியாதவனாகி. அநிருத்தன் சாத்தகியொடு ஏற்றனன்.

4672. இத்திற முன்னவ ரிளையர் மைத்துனர்
ஒத்துறை மருமக ருவந்த மாதுலர்
புத்திரர் தாதையர் புழுங்கித் தங்களின்
மத்தவெங் களிறென மலைந்திட் டாரரோ. (கரு)

4673. உள்ளுறுஞ் சினத்தம ரொழிமி னீரென
விள்ளருந் தனிமுதல் விலக்க வவ்வழி
எள்ளினர் புணர்ப்பறி யாத யாதவர்
தள்ளினர் தழலுறு பதங்கத் தன்மையார். (கசு)

4674. முன்னவ ரிவரிவர் முதிய மாதுலர்
பின்னவ ரிவரிவர் பெரியர் தாதையர்
என்னவங் கெண்ணிலர் யாரு மீறுசெய்
ஒன்னல ரெனநினைந் துருத்து டன்றனர். (கஎ)

4675. பல்லுளைப் புரவியும் பரும யானையும்
வில்லுடைத் தேர்களும் வேறு வேறுசேர்
சொல்லுடை வெற்பெனத் துணிபட் டோங்கின
எல்லுடைப் படைகளு மிற்ற வென்பவே. (கஅ)

4676. காரகங் கிழிக்குமின் கடுக்கும் வாளினால்
போரகத் திறந்திடாப் பொருநர் யாவரும்
பாரகஞ் சூழ்கடற் பரப்பி னுங்கெழும்
ஏரகத் தாற்பொரு திறந்திட் டாரரோ. (ககூ)

---

4672. முன்னவர் - வயதில் மூத்தவர். தங்களின் - தங்களுக்குள்.

4673. அமர் ஒழிமின் - போரை நிறுத்துங்கள். தனி முதல் - கண்ணன். அவ்வழி - அப்போது. எள்ளினர் - கண்ணனை இகழ்ந்தனர். புணர்ப்பு - மாயம். தழலுறு பதங்கத் தன்மையார் - நெருப்பையுற்ற விட்டிற் பூச்சியைப் போன்றவராகி. தன்மையார் தள்ளினர்; தள்ளினர் - கண்ணனைத் தள்ளினர்.

4674. இவர் முன்னவர். எண்ணிலர் - நினையாதவராகி. ஒன்னலர் - பகைவர். உருத்து - கோபித்து. உடன்றனர் - போரிட்டனர்.

4675. உளைப்புரவி - தலையாட்டத்தையுடைய குதிரை. பருமம் - யானையின் முதுகில் இடப்படும் தவிசு. வில் - ஒளி. துணிபட்டு - வெட்டுப்பட்டு. ஓங்கின - குவிந்தன. எல் - ஒளி. படைகள் - ஆயுதங்கள். இற்ற - ஒடிந்தன.

4676. காரகம் - மேகத்தினிடத்தை. மின் கடுக்கும் - மின்னலையொத்த. போரகத்து - யுத்தத்தில். பொருநர் - வீரர். ஏரகத்தால் - கோரைகளால். பொருது - போரிட்டு.

4677. துன்றிருங் கிளையினஞ் சுழல்வெங் காலுற
ஒன்றொடொன் றுரிஞ்சியாங் குருத்த தீச்சுட
நின்றவவ் வனத்தினீ றாகி நீங்கல்போல்
பொன்றினர் யாதவர் புனிதன் மாயையால். (உ0)

4678. முருகுறழ் காளையர் முனையின் மாய்தல்கண்
டொருகுழை யொருவன்மூ துலகஞ் சேர்தர
விரிசினை யாலிலைத் துயின்ற மேலவன்
அரசினன் னிழலிடை யடைந்து வைகினான். (உக)

கலிநிலைத்துறை.

4679. பாட்டா யிரம்வண் டுறைபங்கயப் போதின் மீது
வேட்டா யிரஞ்செங் கதிர்வெய்யவன் சூழ்ந்த லேபோல்
சூட்டா டரவந் தொழுதேத்த வடித்த தூய
தாட்டா மரைமேற் றனிநூபுரந் தாழ்ந்தி லங்க. (உஉ)

---

4677. கிளையினம் - மூங்கிற் கூட்டம்;

"தோன்றிய தோன்ற றன்னைச் சுட்டினள் காட்டிச் சொன்னாள்
வான்றொடர் மூங்கி றந்த வயங்குவெந் தீயீ தென்னத்
தான்றொடர் குலத்தை யெல்லாந் தொலைக்குமா சமைந்து நின்றாள்
என்றுவந் தெதிர்த்த வீர னிவனிக லிராம னென்ன"

(கம்ப. கரன்வதைப். 66.)

"யாரும், வெம்மைப் படலா லிகல்கொண்டனர் வேறு வேறு
தம்மிற் பொருது முடிந்தார்கிளை தம்மி லுற்ற
செம்மைக் கனலான் முடிவுற்றிடுஞ் செய்கை யேபோல்"

(கந்த. மகாசாத்தாப். 17.) சுழல் காலுற - சுழல்காற்று வீச. உரிஞ்சி - உராய்ந்து. நீறாகி - சாம்பலாகி. நீங்கல் - அழிதல். பொன்றினர் - அழிந்தனர். புனிதன் - கண்ணனது.

4678. முருகுறழ் - முருகனை யொத்த. முனையின் - போரில். ஒரு குழை யொருவன் - பலராமன். மூதுலகம் - வைகுண்டத்தை. சேர்தர - அடைய. மேலவன் - கண்ணன். அரசின் - அரச மரத்தின்.

4679. பாட்டையுடைய ஆயிரம் வண்டுகள். பங்கயப்போது - தாமரை மலர். வேட்டு - விரும்பி. வெய்யவன் - சூரியன். அரவம் - காளிங்கன், தாளுக்குத் தாமரையும் நூபுரத்துக்குச் சூரியனும் உவமை.

(பி - ம்.) 4. மறைநூபுரம்.

4680. நன்காட்டு கின்ற களபந்துறு நான்கு தோளும்
பொன்காட்டு கின்ற மணிமார்வமும் பொற்பு வாய்ந்த
தென்காட்டு கின்ற வடவெற்பெழில் சேர்ந்து காட்ட
மின்காட்டு கின்ற கருமாமுகின் மேனி காட்ட. (உங)

4681. பஞ்சா யுதமும் பகர்தேவுருக் கொண்டு மேவ
அஞ்சா னீல வரைசூழ்ந்தவி ராழி வெய்யோன்
எஞ்சாத காந்தி யெனவேமணிச் செம்பொ னுடை
மஞ்சா யொளிருந் திருமேனி வயங்க மாதோ. (உச)

4682. கோலப் பிறையுங் கொழுஞ்செஞ்சுடர் கொண்ட தேவும்
நீலக் கடலி னிலவிற்றிகழ் கின்ற தென்னப்
பாலுற்ற வேலைப் படுசெம்மணிப் பைம்பொ னாரம்
மாலைத் துளவத் தொடுமால்வரை மார்பின் மின்ன. (உரு)

4683. இணையுற்று வந்த கதிரோரை யிரண்டு பாலும்
அணியுற்ற செந்தா மரையாமென நாளு மேவித்
துணியுற் றுடல்வெம் மறுவாய்மதி தோற்ப வென்ற
மணியுற்ற கோலக் குழைவாண்முகம் வாய்ந்த மாதோ. (உசு)

---

4680. ஆட்டுகின்ற - பூசப்படுகின்ற. களபம் - கலவைச் சந்தனம். பொன் - திருமகளை. பொற்பு - அழகு. தோளும் மார்வமும் வடவெற்பெழிலைக் காட்ட; வட வெற்பு - மேரு மலை. முகிலை மேனி காட்ட.

4681. பஞ்சாயுதம் - சக்கரம் முதலான ஐந்து ஆயுதங்கள். தேவுரு - தெய்வத்தின் உருவத்தை. வெய்யோன் - சூரியன். காந்தி - ஒளி. செம்பொனுடை - பீதாம்பரம். மஞ்சு - அழகு. பீதாம்பரத்துக்குச் சூரியனது ஒளி உபமானம்.

4682. கோலப்பிறை - அழகிய பிறைச்சந்திரன். சுடர் கொண்ட தேவு - சூரியன். நிலவின் - ஒளியால். பாலுற்ற வேலை - பாற்கடலில். செம்மணி - கௌஸ்துப மணியும். பொனாரம் - பொன்னாலான மாலை. மால் - பெரிய. கௌத்துவத்துக்குச் சூரியனும், பொன்னாரத்துக்குப் பிறைச் சந்திரனும் மார்புக்குக் கடலும் உவமைகள்.

4683. இணையுற்று வந்த கதிரோரை - சேர்ந்து வந்த சூரிய சந்திரர்களை. இரண்டு பாலும் கதிரோரை அணியுற்ற செந்தாமரையாம் என; இரண்டு பாலும் - இரண்டு பக்கங்களிலும். மறு வாய்ந்த மதி. மணி - ஒளி. குழை - காதணிகள். குழைகளுக்குச் சூரிய சந்திரரும் முகத்துக்குத் தாமரையும் உவமை.

4684. பொன்னுடை யுற்ற குறங்கொன்றினிற் பொற்பு வாய்ந்த
மின்னு ரணிசே ரொருதாண்மலர் மேவ வைத்தாங்
கந்நாண் மலர்த்தா ளமரேச ரடைந்து வாழ்த்தத்
தன்னு ருருவைத் தனிநோக்கித் தயங்கி னனே. (உஎ)

4685. தேனென்று தண்ணந் துளவோன்றவர் செப்பு சாபம்
தானென்றி நிற்பத் தகைசெய்து மயக்க லாலே
கானென்று வேடன் சரனென்பவன் காட்டின் மேய
மானென்று தாளி னொருவாளி வழங்கி னனல். (உஅ)

4686. மொழிகின்ற வாளி விடுத்தொல்லைமுன் சென்று கண்டாங்
கழிகின்ற நெஞ்சத் தினனாகி யயர்ந்து தாரை
பொழிகின்ற கொண்ட லெனநின்று புலம்பி நீத்தம்
வழிகின்ற கண்ணு னடிவீழ்ந்து வழுத்தி னனே. (உகூ)

4687. கண்ணு கருணைக் கடலேகவி னேங்கு நீல
வண்ணு வனச மலர்மேலவன் மங்கை பாகன்
விண்ணோ ரறியா நினையெங்ஙனம் வேட னாகி
எண்ணு தியற்றும் பழியேன்றெளிந் தேத்து மாறே. (௩0)

4688. என்னுஞ் சரனை யெதிர்நோக்கி யிரங்க லென்னின்
மன்னும் முலகி னுயிரெங்கும் வதிந்து ளேன்மற்
றுன்னின் னுறைந்து வினைசெய்ய வுஞற்றி னேன்யான்
பொன்னின் றிலங்கு முலகெய்துதி போதி யென்றான். (௩க)

---

4684. பொன்னுடை - பீதாம்பரம். குறங்கொன்றினில் - ஒரு துடையில். தாண் மலரை - பாதத்தை. அமரேசர் - இங்கே நித்திய ஸூரிகள். தன் ஆருருவை - தனது நிறைந்த உருவத்தை.

4685. துளவோன் - கண்ணனை. தவர் - முனிவர். தகை செய்து - தடை செய்து. தாளின் - கண்ணனது பாதத்தில். வாளி வழங்கினன் - அம்பை எய்தான்.

4686. விடுத்து - எய்து. ஒல்லை - விரைவில். அழிகின்ற - வருந்துகின்ற. தாரை - மழையை. கொண்டலென - மேகத்தைப் போல. நீத்தம் - நீர். கண்ணன் - சரனென்ற வேடன்.

4687. வனச மலர் மேலவன் - பிரமன் ; வனசம் - தாமரை. மங்கை பாகன் - உருத்திரன். விண்ணோர் - தேவர். நினை - நின்னை. எத்துமாறு எங்ஙனம்.

4688. இரங்கல் - வருந்தாதே. என்னின் - என்னிடத்தில். யான், வினை செய உஞற்றினேன் - செய்யும்படி செய்தேன். பொன்றுதல் இன்றி; பொன்றுதல் - அழிவு. உலகு - மோட்சத்தை. போதி - போவாயாக.

4689. அவ்வா றிசைத்த வநந்தன்கழல் சூழ்ந்து போற்றி
வெவ்வாளி விட்டோன் மிடல்யாக்கையி னோடு மேவி
எவ்வா னவரு மிறும்பூதடைந் தேத்த நாளும்
செவ்வாந் தவஞ்செய் பவர்சேர்நெறி சென்று சேர்ந்தான். ()

கலிவிருத்தம்.

4690. மண்ணிய தேரொடு மருவு தாருகன்
கண்ணனை யவ்வழிக் காண்கு றுனெவண்
நண்ணினனெனத் துழாய் நாற்றந் தேர்ந்துதேர்ந்
தண்ணலச் சுதனைவந் தடிவ ணங்கினன். (நந)

4691. நேடின னெங்கணு நின்னைக் காண்கலேன்
வாடினன் றிசைத்தனன் வழியுந் தேர்கலேன்
கூடின னிணுதடி குளிர்ந்த துள்ளமும்
மூடிய துயரிருண் முற்றும் போயதால். (நச)

4692. திசைகளுந் தெரிந்தன வென்று செப்புழி
இசைதரும் புட்கொடி யியைந்து நோலர்
தசையுறு படைக்கலஞ் சாரத் தேரும்வான்
மிசையெழத் தாருகன் வியந்து நோக்கினன். (நரு)

4693. காமரு தோவன் கைவி திர்ப்பவான்
மாமணி வண்ணனை வலங்கொண் டேகலும்
தாமரைக் கண்ணரு டழைய வைகிய
தேமறைச் சிலம்படிச் செல்வன் செப்புமால். (நசு)

---

4689. அநந்தன் - கண்ணன். வாளிவிட்டோன் - வேடன். யாக்கையினோடும் - உடலொடும். இறும்பூது - வியப்பு. நெறி - வீட்டு நெறியை.

4690. தாரகன் - கண்ணனுடைய தேர்ப்பாகன். எவண் - எவ்விடத்தே. துழாய் நாற்றம் - துளவின் வாசனையால். அச்சுதனை - கண்ணனை.

4691. நேடினன் - தேடினேன். திசைத்தனன் - திகைத்தேன். நிணுது அடியைக் கூடினன். துயராகிய இருள்.

4692. செப்புழி - தாரகன் சொல்லிய போது. புட்கொடி - கருடக்கொடி. நோலர் - பகைவாது. படைக்கலம் - சக்கரம் முதலிய ஆயுதம். தேரும் - இரதமும். வான்மிசை - ஆகாயத்தில்.

4693. தோவன் - தேர்ப்பாகனுன தாருகன். விதிர்ப்ப - நடுங்க. மாமணி வண்ணனை - கண்ணனை. ஏகலும் - தாருகன் செல்லலும். செல்வன் - கண்ணன். செப்பும் - தாருகனை நோக்கிச் சொன்னான்.

4694. தேவகி கொழுநனைச் சென்று சேர்ந்திவண்
கோவடு குருதிவேற் கொற்ற யாதவர்
சாவினை யடைந்ததுந் தயங்கு தாமநாம்
போவது புரிந்ததும் புகன்று பின்னரும். (௩எ)

4695. ஏருறு துவரையை யேழு நாளினில்
வாரிதி கொள்ளுமவ் வாரி கொள்ளுமுன்
சேருந ரிந்திரப் பிரத்தஞ் சேர்க் கெனத்
தாருக தனஞ்செயன் றனக்குச் சாற்றென்றான் (௩அ)

4696. எம்முடை யானஃ திசைப்பக் கேட்டலும்
விம்மின னேங்கினன் வெய்து யிர்த்தனன்
பெய்ம்முகி லெனக்கணீர் பெருக்கி ஞன்விழுந்
தம்மவென் செய்வலென் றரற்றி மாழ்கினான். (௩௯)

4697. மன்னுநம் மாளுடை வள்ள றேற்றிநீ
என்னைவந் தடைகுதி யென்று சொற்றனன்
தன்னுளந் தேற்றலுந் தடுக்க வல்லனோ
பின்னுறும் பார்வையான் பெயர்ந்து போயினான். (௪0)

4698. சுந்தா னேகுத ரெழுது காண்குற
உந்தியம் போதிடை யுதித்த நான்முகன்
இந்திர னைம்முக னிலேகர் தம்மொடும்
அந்தாத் தடைந்தன னன்புற் றேத்துவான். (௪௧)

---

4694. தேவகி கொழுநனை - வசுதேவனை. சாவினை - மரணத்தை. தாமம் - பரந்தாமத்தை.

4695. துவரையை - துவாரகையை. வாரிதி - கடல். வாரி - கடல். சேருநர் - துவரையிலுள்ளவரை. இந்திரப் பிரத்தம் - இந்திரப் பிரஸ்தத்தில். சேர்க்க - அடைவிக்க. தாருக : விளி. தனஞ்சயன் தனக்கு - அருச்சுனனுக்கு. சாற்று - சொல்வாயாக.

4696. எம்முடையான் - கண்ணன். கணீர் - கண்ணீர். விம்முதல் முதலியன தாருகன் செயல்கள்.

4697. வள்ளல் - கண்ணன். நீ என்றது தாருகனை. அடைகுதி - அடைவாயாக. சொற்றனன் - சொல்லி. பின்னே உற்ற பார்வையை உடையவனாகி.

4698. சுந்தரன் - கண்ணன். உந்தியம் போதிடை - நாபீ கமலத்தில். நான்முகன் - பிரமன். ஐம்முகன் - உத்திரன். இலேகர் - தேவர், அந்தரத்து - ஆகாயத்தில். (பி - ம்.) 4. எத்தினன்.

4699. முக்கணன் முதலிய மொய்யு யிர்க்குழாம்
ஒக்கநன் கிழைக்குமா றுதவி னுயெனே
மக்களி லொருவனு வந்து தோன்றினே
சிக்கற நின்செய றெரியற் பாலதோ. (சஉ)

4700. அச்சுத னநந்தனென் றரும றைக்குலம்
நிச்சலுங் கழறுமா னின்னை நீயெனே
கொச்சைமக் களிற்பல கோலங் கோடிநின்
மெய்ச்செய லிற்றென விளம்ப வல்லனே. (சங)

4701. நிலையுற வறநெறி நீடு தீவினை
குலையுறச் செய்குநர்க் குறிக்கி னின்னின்யார்
மலரவ னாடுெனு வழுத்தி யின்னணம்
தலையஃ திறைஞ்சினன் சாணிற் ருழ்ந்தனன். (சச)

4702. மனமகிழ்ந் தருள்பெறீஇ வணங்கி வான்மிசைப்
புனைமுடி விண்ணவர் புதிய தேறல்பாய்
பனிமலர் சொரிந்துபல் லியந்து வைப்புறத்
தனிமுத லுயர்பாந் தாம மெய்தினுன். (சரு)

4703. குண்டலம் வெயிலெனக் குலவு வாண்முக
மண்டல மதியென மாய னேகுதல்
விண்டல நிறைந்தெழு விரிஞ்ச னுதியர்
கண்டனர் சிலர்சிலர் கண்ணிற் கண்டிலர். (சகு)

---

4699. உயிர்க்குழாம் - சீவராசிகள். உதவினுய் - உதவினவனே; விளி. எனே: வியப்பின்கண் வந்தது. சிக்கற - மயக்கமின்றி. இது முதலுள்ள மூன்று பாடல்கள் ஒரு பிரதியில் காணப்படவில்லை.

4700. அச்சுதன் - அழிவற்றவன். அநந்தன் - முடிவற்றவன். மறைக்குலம் - வேதங்கள். நின்னைக் கழறும். பல கோலம் - பல உருவங்களை. கோடி - கொள்கின்ருய். இற்று என - இத்தன்மையது என்று.

4701. அறநெறி நிலையுற. குலையுற - கெட. நின்னின் - உன்னைக் காட்டிலும். மலரவன் - பிரமன். சாணில் - பாதங்களில்.

4702. பெறீஇ - பெற்று. விண்ணவர் - தேவர். இயம் - வாத்தியம். தனி முதல் - கண்ணன்.

4703. வெயில் - சூரியன். மதி - சந்திரன். விரிஞ்சனுதியோர் - பிரமன் முதலியோர். மாயன் ஏகுதலைச் சிலர் கண்டனர், சிலர் கண்டிலர்,

4704. தற்பாஞ் சுடர்மிகத் தயங்கு காந்திய
நற்பதக் கேகுத னயந்து போற்றினர்
அற்புத மடைந்தடைந் கமரர் யாவரும்
பொற்புறுந் தத்தம பதியிற் போயினர். (சஎ)

4705. தாங்கருந் துயர்மொழி சாற்றக் கேட்டலும்
தேங்கமழ் தார்வசு தேவன் றேவகி
ஆங்குறை யுக்கிர சேன ளுதியர்
ஏங்கின ரவணடைந் தெரியின் மூழ்கினர். (சஅ)

4706. காவியுங் கமலமுங் கயலு மன்னகட்
டேவிய ரனைவருந் தீயின் மூழ்கினர்
தூவியம் பெடையனஞ் சுடர்பொற் ளுமரைப்
பூவிருந் தனகயம் புக்க போலவே. (சகூ)

4707. மேதகு புகழுடை விதர்ப்பன் பாவையே
ஆதிநன் மடந்தைய ரழலின் மூழ்கமற்
றேதமின் மடந்தையர் யாரு மீறிலா
நாதன்மெய் யொடுதழ னண்ணி னாரோ. (ருo)

4708. வந்துமுன் றுருகன் வருந்திக் கூறலும்
பைந்தொடை மார்பினிற் பார்த்தன் செங்கணீர்
சிந்தின னமர்க்களஞ் சென்று கண்டனன்
புந்தியுங் கலங்கினன் புலம்புற் றேங்கினுன். (ருக)

4704. பரஞ்சுடர் - கண்ணன். காந்திய - ஒளி பொருந்திய. நற்பதக்கு - நல்ல பதவிக்கு; பரந்தாமத்துக்கு. அமரர் யாவரும் போற்றினராகித் தம பதியிற் போயினர்; தம - தம்முடைய.

4705. சாற்ற - தாருகன் கூற. அவண் - கண்ணனிருந்த அரசமரத்திடத்தில். எரியின் - தீயில்.

4706. காவி - நீலோற்பலம். தேவியர் - கண்ணன் மனைவியர். தேவியர் அனம் கயம் புக்கபோலத் தீயின் மூழ்கினர்; அனம்-அன்னப் பறவை; கயம் - குளத்தில்.

4707. விதர்ப்பன் பாவை - உருக்குமிணி. மற்ற மடந்தையர் - கோவியர். தழல் - நெருப்பை.

4708. பார்த்தன் - அருச்சுனன். களம் - கண்ணன் இருந்த இடத்தை, புந்தி - அறிவு.

4709. அறந்தரு மாயன்முன் னறைந்த கீதையால்
மறந்தரு வேலினன் மனந்தெ ருண்டனன்
இறந்தவ ரெவர்க்குமங் கீம நல்வினை
சிறந்ததொன் னூல்வழிச் செய்வித் தேகினன். (௫௨)

4710. வருபக லேழினில் வளைத்த தெண்டிரைக்
குரைகடல் கோப்பது கூறு பார்த்தனல்
திருவநீ ணகருறை மாக்கள் சென்றனர்
பெருமைசா லிந்திரப் பிரத்த மென்பவே. (௫௩)

4711. அந்தமில் லவரொடு மறைந்து பார்த்தனுங்
கிந்திரப் பிரத்தமென் பதனில் வச்சிறற்
குந்துதெண் டிரைப்புவி யோம்பிக் காக்கெனச்
சுந்தர மணிமுடி சூட்டி னனரோ. (௫௪)

4712. இன்னண நடந்ததை யிரங்கு பார்த்தன்வந்
துன்னெழிற் பிதாமகற் குரைப்ப மற்றவர்
மன்னவ நினக்கிவண் மௌலி சூட்டினர்
துன்னினர் கண்ணனைத் தொழுது தொல்பதம். (௫௫)

4713. சொல்லுநல் வளந்திகழ் துவரை சூழ்ந்தநீர்
ஒல்லென வொலித்துவந் துறம றைந்ததால்
செல்லுறழ் மாதவன் சிறந்த கோயிலை
மல்லலந் திரைக்கடன் மறைத்த தில்லையே. (௫௬)

---

4709. மாயன் - கண்ணன். முன் - பாரதப் போரில். கீதையால் - பகவத்கீதையால். தெருண்டனன் - தெளிவுற்றான். ஈம நல்வினை - உத்தரக் கிரியைகளை.

4710. பகலேழினில் - ஏழு நாட்களில். கடல் கோப்பது - துவாரகையைக் கடல் கொள்வதை. பார்த்தனல் - அருச்சுனனல். நீணகர் - துவரையில். மாக்கள் பார்த்தனல் இந்திரப் பிரத்தம் சென்றனர்.

4711. அவரொடும் - எஞ்சிய யாதவரொடும். வச்சிரன் - கண்ணன் புதல்வருள் ஒருவன். ஓம்பி - பாதுகாத்து.

4712. உன் பிதாமகற்கு - தரும புத்திரனுக்கு; உன் என்றது பரிட்சித்தைக் குறித்து. மன்னவ: பரிட்சித்தை நோக்கி விளி. தொல் பதம் துன்னினர்; துன்னினவர் தருமன் முதலியோர்.

4713. நீர் ஒலித்து வந்துறத் துவரை மறைந்தது; நீர் - கடல். செல் உறழ் - மேகத்தைப் போன்ற. மாதவன் - கண்ணனது.

4714. அண்டரும் புகழுமக் கோயி லின்னமும்
தெண்டிரைக் கடலிடைச் சிறந்து தோன்றுமால்
மண்டமர் கடந்தவேன் மன்ன வன்னது
கண்டவர் பிறவியைக் காண்கு றாரோ. (ருஎ)

4715. கருமுகி லனையவக் கண்ணன் பின்றொடர்ந்
திருவிசும் பேகிய விசையு மெய்ம்மையும்
தருமமும் பொறுமையுந் தவமுந் தானமும்
மருவின தவனியின் மறஞ்செய் வெங்கலி. (ருஅ)

4716. காலமும் பிறிவொடு கலப்பு மற்றுயர்
சீலமு மானவன் செய்கை யிந்திர
சாலமு மவைக்களஞ் சான்ற கூத்தினர்
கோலமு மல்லதென் கூறல் வேண்டுமால். (ருகூ)

4717. இகலுறு மாசவிக் காதை யாமமு
தகமொளி தாவுவந் தருந்து மன்பினர்
புகலரு மொருபதம் பொருந்து வாரெனச்
சுகனெனு முனிவரன் சொல்லி னனரோ. (சுo)

---

4714. மன்ன : விளி. அன்னது - அக்கோயிலை. காண்குறார் - காணமாட்டார்.

4715. கண்ணனைப் பின் தொடர்ந்து. இசை, மெய்ம்மை முதலியன ஏகிய ; ஏகிய - சென்றன. மறம் - அதர்மத்தை. கலி அவனியில் மருவினது.

4716. சீலமுமானவன் - திருமாலது. இந்திரசாலம் - இந்திர ஜால வித்தை. அவைக்களம் - நாடக மேடையை. கூத்தினர் கோலமும் - நடிகர்களது வேடமும்.

4717. ஒரு பதம் - சிறந்த வீட்டை.

(பி - ம்.) 2. உவந்தருந் தருந்தவர்.



பன்னிரண்டாவது கந்தம்.

# 1. கலிதன்மம் உரைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4718. மருவலர் புகழும் வேலாய் மகதநா டாளு மன்னன்
திருமதிக் குலத்து வேந்தன் றிறற்சரா சந்தன் மைந்தன்
தரையிலைந் தருவே போலத் தருஞ்சக தேவ னென்னும்
புரவலன் மரபின் வந்து புரஞ்சய னுதிக்கு மன்றே. (க)

4719. அன்னவன் கலியின் காலத் தவனிகாத் துறையு நாளம்
மன்னவன் றனக்கன் பாய மந்திரி சுனக னென்பான்
பொன்னவிர் மகுடச் செங்கோற் புரவல னவனை வீட்டித்
தன்னெழி மதலை யாளத் தாரணி கொடுக்கு மன்றே. (உ)

4720. சொல்லுமவ் வமைச்ச னல்குந் தோன்றலைத் துவக்கி யைவர்
எல்லைமற் றொருநூற் றோடு மிரண்டிலா நாற்ப தாண்டு
நல்லுல காள்வ ரப்பா னந்திமா நந்தி யென்னும்
வில்லின ரிறுதி யாக மேதினி புரப்பர் சில்லோர். (ந)

4721. வேந்தர்தம் வேந்த னாகி விறல்செய்மா நந்தி புல்ல
வாய்ந்தநல் லெழில்சேர் வேளாண் மரபின ளொருத்தி பெற்ற

---

4718. மருவலர் - பகைவர். மன்னனும் வேந்தனுமாகிய சராசந்த னுடைய மைந்தன். மதிக்குலத்து - சந்திரகுலத்தில். தரையில் - பூமியில். ஐந்தரு - பஞ்ச கற்பகம். புரவலன் - அரசன்.

4719. அன்னவன் - புரஞ்சயன். அவனி - பூமியை. அம்மன்னவன் றனக்கு - புரஞ்சயனுக்கு. புரவலனவனை - புரஞ்சயனை. வீட்டி - கொன்று. தன் மதலை தாரணியை ஆளும்படி கொடுக்கும். தன் மதலை யென்றது சுனகனுடைய மகனான பிரத்தியோதன் என்பவனை.

4720. அமைச்சன் நல்குந் தோன்றலைத் துவக்கி - சுனகன் ஈன்ற பிரத்தியோதனை முதலாக. ஒரு நூற்றோடு மிரண்டிலா நாற்பதாண்டு - நூற்று முப்பத்தெட்டு வருஷம். ஐவர்: பிரத்தியோதன், பாலகன், விசாக யூகன், ஜனகன், நந்திவர்த்தன் என்பவர்; இவர்கள் பிரத்தியோதனர் என்றும் கூறப்படுவர். மாநந்தி - மஹாநந்தி.

4721. விறல் - வெற்றி. மாநந்தி புல்லுதற்கு வாய்ந்த வேளாண் மரபினள் ஒருத்தி. நாந்தக உழவன் - வாளையுடைய உழவன்; நந்தன்

நாந்தக வுழவன் யாரு நவில்பற்ப பதியென் றோதும்
ஏந்தன்மன் னவரைச் செற்றுங் கிருநிலம் புரக்கு மன்னே. (ச)

4722. இவனுமோர் பாசு ராம னென்றுல கேத்தும் வண்ணம்
கவனவாம் பரியின் றானைக் காவலர் குழுவை யெல்லாம்
அவனிமீ தமரிற் கொல்லு மன்னவன் றொடங்கி வேந்தாய்ப்
புவனிமேற் புரவு பூண்போர் பின்னவர் போலு வாரே. (ரு)

4723. பின்னர்தம் வேந்த ராதி பிறங்குதெண் டிரையின் மேவு
கொன்னவி லெயிற்றுப் பேழ்வாய்க் கூற்றுண வினிதி னூட்டித்
துன்னிய சேனை காப்போர் துலங்குபொன் னடைப்பை தாங்கி
மன்னிய தொழும்பு செய்வோர் மாநிலங் காப்பர் மாதோ. (சு)

4724. வெல்லரும் யவனர் கள்ளர் வேசரி யீட்டத் தாலே
சொல்லரு நிதிக ளீட்டுந் தொழிலினர் மறவர் பின்னோர்
அல்லுறழ் கோதை மாத ராதிய ராங்காங் கெய்தி
மல்லலம் புவிமா னின்று மயர்வுற வாழு வாரே. (எ)

4725. அரும்பழி யுறாத தெய்வத் தரசுபோ லங்குற் றோரும்
பெரும்பழி யியற்றக் கூசார் பிணியினுற் சோரார் தம்மால்
வருந்துவர் வறுமை யெய்தி மன்னரான் மயங்கி நிற்பார்
பொருந்தலில் புன்மைக் காகப் புழுங்கினர் நலங்கு வாரால். ()

என்று பெயர். பற்பபதி - பத்மபதி; பத்மம் என்ற பெரிய அளவையுடை சேனைக்குத் தலைவனை, பத்மபதி என்று கூறுவர். ஏந்தல் - நந்தன். மன்னவரை - பகையரசரை. செற்று - அழித்து. புரக்கும் - காப்பான்.

4722. இவனும் - நந்தனும். கவனம் - விரைவு. காவலர் குழுவை - அரசர் கூட்டத்தை. அமரில் கொல்லும் - போரில் கொல்லுவான். அன்னவன் - நந்தன். புரவு - காவல். பின்னவர் - வேளாளர்.

4723. பிறங்கு - விளங்குகின்ற. வேந்தாதியைக் கூற்றுணும்படி. ஊட்டி - உண்பித்து. துன்னிய - சேர்ந்த. அடைப்பை - வெற்றிலைப் பெட்டி. தாங்கி - தாங்க. தொழும்பு செய்வோர் - வேளாளர். நிலம் - பூமியை.

4724. வெல்லரும் யவனர்-வெல்லுதற்கரிய யவனர்கள். வேசரி யீட்டத்தால் - கோவேறு கழுதையின் கூட்டத்தால். சொல்லரு - சொல்லுதற்கரிய. மறவர் - வீரர்; வேட்டுவர் எனலுமாம். மாதர் - மகளிர். புவிமானின்று - பூமியிலிருந்து. மயர்வுற - மயக்கம் பொருந்த.

4725. கூசார் - நடுங்கார். பிணியினால் - நோயால். சோரார் - திருடர். மன்னராய் வறுமை யெய்தி மயங்கி நிற்பர். புன்மை - அற்பம்.

(பி - ம்.) 1. அரும்பழியுறாத.

4726. கடக்கரும் வலிமை சான்ற கலியெனுங் காலத் தாசை
அடக்கரி தாகி யுண்மை யருள்பொறை புனித மாயுள்
உடற்குறு திண்மை புந்தி யுற்றிடு நினைவு பார்மேல்
நடக்குறு தரும மெல்லா நாட்குநாட் குறையு மம்மா. (கூ)

கலிவிருத்தம்.

4727. விரியுநூன் முறைதம வீர மாற்றிடார்
உரியதோர் குருகுல வாச முற்றொரு
புரையிலா நியமத்தாற் புகன்றி டார்மறை
பிரமசா ரியாறம் பிழைத்து வாழ்வரே. (க0)

4728. உள்ளுவ தில்லற முற்று ளோர்மகம்
எள்ளலி லன்பொடு மியற்றி டாரவை
வள்ளிதழ் மலர்த்தொடை மன்ன ராற்றினும்
கள்ளொழுக் காய்நிதி கருதிச் செய்வரால். (கக)

4729. வந்தவெங் கலியினின் மறைவ லோர்மறை
சிந்தைசெய் யார்தம செயலுஞ் செய்கலார்
சுந்தர முப்புரி துலங்கு நூலினால்
அந்தண ரிவரென வறிய வாழ்வரே. (கஉ)

4730. சொல்லிய கலியெனுங் காலந் தோற்றினிங்
கில்லறந் துறந்தன ரேய்ந்த காட்டுழைச்
செல்லினு மவர்வனஞ் சேர்ந்த வூணலால்
நல்லன நாட்டுண வெனந யப்பரே. (கங)

---

4726. கடக்கரு - கடத்தற்கரிய. ஆசையை அடக்குதற்கு அரிதாகி. புனிதம் - பரிசுத்தம். பொறை - பொறுத்தல். உடற்கு உற்ற திண்மை. புந்தி - புத்தி.

4727. நூன்முறை - நூலில் கூறிய முறைப்படி. தம - தம்முடைய. ஆற்றிடார் - செய்யார். புரையிலா - குற்றமில்லாத. மறை புகன்றிடார்; மறை - வேதத்தை. அறம் பிழைத்து - தருமத்தைத் தப்பி.

4728. இல்லறமுற்றுளோர் - இல்லறத்தோர். மகம் - யாகத்தை. எள்ளல் இல் - இகழ்தலில்லாத. அவை - அந்த யாகத்தை. ஆற்றினும் - செய்தாலும். கள்ளொழுக்காய் - வஞ்சனை ஒழுக்கமுடன்.

4729. கலியினில் - கலி காலத்தில். மறைவலோர் - அந்தணர். தம செயலும் - தம்முடைய கருமங்களையும். பூணூலைக் கொண்டே அந்தணரை அறிய முடியும் என்றவாறு.

4730. இல்லறந் துறந்தனராய்க் காட்டுழைச் செல்லினும். அவர் - இல்லறந் துறந்தவர். வனம் சேர்ந்த வூணலால்-காட்டைச் சேர்ந்த உணவை உண்ணாமல். நாட்டுணவையே நல்லனவென நயப்பர்; நயப்பர் - விரும்புவர்.

4731. துறந்தவர் துறவறந் துணிந்து ஞற்றிடார்
சிறந்துசெந் துகிலினுஞ் சேர்ந்த தண்டினும்
நிறங்கிளர் கன்னலி னாலு நீத்திவண்
உறைந்தவ ரிவரென வுலவு வாரரோ. (கச)

4732. முதற்பெருந் தேவெனு முகுந்தன் பூசனை
அதர்ப்பட வாற்றிடா ரரிய மாமறை
விதத்தொடு முரணிய விரியு மாகம
மதத்தொடு மருவுவர் மாக்க ளென்னவே. (கரு)

4733. இந்நிலத் துயர்குல மியைந்து ளோர்களும்
மன்னுபின் னவரற மருவி வைகுவார்
பின்னவர் தமதறம் பிழைத்து நான்மறை
பன்னுநம் மிறைவனைப் பழிச்சி வாழ்வரால். (கசு)

4734. ஒழிவறு புகழுடை யுயர்கு லத்தரும்
இழிகுலத் தவருழை யேவல் செய்குவார்
பழியுறு தொழில்பரிந் திழைத்தும் பாருளோர்
அழிபொரு ளடைவதற் காசை கூருவார். (கள)

---

4731. துறந்தவர் - சந்யாசிகள். உஞற்றிடார் - செய்யார். செந்துகில் - காவியாடை. தண்டு - திரிதண்டம். கன்னல் - கமண்டலம். நீத்து இவண் உறைந்தவர் இவர் என - துறந்து இவ்விடத்தே வாழ்ந்தவர் இவர் என்று. செந்துகிலினாலும் தண்டினாலும், கன்னலினாலுமே துறந்தவர் இவர் என அறிய முடியும் என்றவாறு.

4732. தேவு - தெய்வம். முகுந்தன் பூசனை - திருமாலைப் பூசித்தலை. அதர்ப்பட - வழிப்பட. ஆற்றிடார் - செய்யார். மறைவிதத்தொடு - வேத வழியோடு. முரணிய - மாறுபட்ட. மாக்கள் என்ன - விலங்குகள் என்று கூறும்படி.

4733. உயர்குலம் இயைந்துளோர்கள், பின்னவரது அறத்தை மருவி வைகுவார்; பின்னவர் - வேளாளர்; உயர்குலமல்லாதவர் எனலுமாம். பின்னவர் தமது அறத்தினின்றும் பிழைத்து மறை பன்னும் இறைவனைப் பழிச்சி வாழ்வர்; பிழைத்து - தப்பி. பன்னும் - கூறுகின்ற. இறைவன் - திருமால்.

4734. இழிந்தகுலத்தவருழை உயர்ந்த குலத்தவர் ஏவல் செய்குவார். பழியுறுகின்ற தொழிலை. பரிந்து இழைத்தும் - வருந்திச் செய்தாயினும். அழிகின்ற பொருளை அடைவதற்கு. ஆசை கூருவார் - ஆசை மிகக் கொள்வார்.

4735. நெறியுடை யறிவில ரெனினு நீணிதிச்
செறிவுடை யாளரைச் சேர்ந்து சேர்ந்தநல்
அறிவுடை யாரென வறைவ ரன்னவர்
குறியுடை மொழியையுங் குணமிக் கென்பால். (கஅ)

4736. நாயக னிருக்கவு நங்கை மார்பிறர்
ஏயநல் வழகுகண் டேக்கற் றன்னவர்த்
தோய்தா நினைகுவர் துணிந்து மாந்தரும்
சேயிழை யார்பிறர்ச் சேர வெண்ணுவார். (கசு)

4737. மைந்தர்தம் மாமியர் மாம னார்சொலச்
சிந்தையுண் மகிழ்ந்துதீங் கெனினுஞ் செய்குவார்
தந்தையர் தாயர்சொற் சார்ந்து கேட்கலர்
நிந்தனை புரிகுவர் நிலத்தி னென்பவே. (உ0)

4738. நிறைபொரு ளுடையரெந் நிந்தை சொல்லினும்
முறையுறு வழக்கென மொழிந்து போற்றுவார்
வறுமைமிக் குடையர்வாய் வழங்கு நன்மொழி
அறமொழி யெனக்கொளா ரதனை யெள்ளுவார். (உக)

4739. உயர்பய னுவதிங் குதாத் தூண்பெறல்
மயிர்நனி வளர்ப்பதே வனப்பென் றுன்னுவார்

---

4735. நெறியுடை - தீயநெறியையுடைய. நிதிச் செறிவுடையாளரை - பொருள் மிக்குடையவரை. அறைவர் - கூறுவர். அன்னவர் குறியுடைய மொழியையும் அவரது காரணத்தையுடைய சொல்லையும். குணம் மிக்கு - குணமிகுதியை யுடையது.

4736. நாயகன் - கணவன். எய - பொருந்திய. பிறாது அழகைக் கண்டு எக்கற்று; எக்கற்று - ஆசையாற்றாழ்ந்து. அன்னவர்த் தோய்தா - பிற ஆடவரைத் தழுவ. மாந்தரும் பிற சேயிழையாரைச் சேர எண்ணுவர். சேயிழையார் - மகளிர்.

4737. மைந்தர், தமது மாமியாரும் மாமனாரும் சொல்லின், அது தீங்கெனினும் சிந்தை மகிழ்ந்து செய்குவர். தந்தையரும் தாயரும் சொல்லுகின்ற சொல்லைச் சார்ந்து கேட்கலராய் நிந்தனை புரிகுவர்; நிந்தனை - வைதல்.

4738. நிறை பொருளுடையர் - நிறைந்த செல்வத்தை உடையவர். போற்றுவார் - புகழ்வார். நன்மொழியை அறமொழி எனக் கொள்ளார். எள்ளுவார் - இகழ்வார்.

4739. உதரத்திற்கு ஊண் பெறலே உயர் பயனாவது, மயிரை நனி வளர்ப்பதே வனப்பு என்று உன்னுவார்; உதரம் - வயிறு. ஊண் - உணவு.

புயல்வளங் காத்தலிற் பொலிவ ழிந்ததம்
பயிர்வளங் கரிந்திடப் பசியின் வைகுவார். (உஉ)

4740. வெங்கலி முதிர்வுற விரியின் மாந்தர்கள்
இங்கியல் யாண்டிரு பத்தின் மேலிரார்
மங்கைய ரேழெனும் பருவம் வந்துறின்
பொங்கெழிற் புதல்வரைப் புவியி னல்குவார். (உங)

4741. விதைபயிர் முதலிய விளையுள் குன்றுமால்
மதிவலி குறைவுறு மாக்கள் யாவரும்
முதிர்வுறு பலன்பெறு முன்ன மேயகாய்
புதிதுறு கொழுந்திலை பூக்கொய் துண்பரோ. (உச)

4742. கடும்பசி யடைகுவர் காந்து கங்குலின்
படும்பொரு ளெங்கெனப் படர்வர் பற்றற
விடும்புக ழெதிகளும் வீடொன் றூரிவண்
குடும்பமுற் றுறைவதே குணமென் றுன்னுவார். (உடு)

4743. தள்ளருஞ் சிறப்புடைத் தலைவ ரேனுமற்
றுள்ளுறை மனைவிய ருவந்தி யற்றலர்

---

நனி - மிக. வனப்பு - அழகு. உன்னுவார் - நினைப்பார். புயல் - மேகம். காத்தலின் - மறத்தலால். பயிரின் வளம் கரிந்திட.

4740. கலி - கலியுகம். முதிர்வுற விரியின் - முற்றுப்பெற விரிந்தால். மாந்தர், யாண்டு இருபத்தின்மேல் இரார். யாண்டு - வருடம். பருவம் - வருடம். மங்கையர் ஏழாம் பருவத்தில் புதல்வரை நல்குவார்.

4741. விளையுள் - விளைச்சல். குன்றும் - குறையும். மதி வலி - புத்தி வன்மை. மாக்கள் : அறியாமை யுடைமைபற்றி இவ்வாறுரைத்தார். முதிர்வுறு - முற்றிய. பலன் - பயன். காயையும், கொழுந்தையும் இலையையும் பூவையும் கொய்து உண்பர்.

4742. காந்து - மறைந்து. கங்குலில் - இரவில். படும் பொருள் - கிடைக்கும் பொருள். படர்வர் - செல்லுவர். பற்று அற - ஆசைகெட. எதிகள் - சந்நியாசிகள். வீடொன்றூர் - முத்தியைப் பொருந்தாதவராய். குணம் - நன்மை.

(பி - ம்.) 2. படர்ந்து.

4743. தள்ளரும் - தள்ளுதற்கரிய. தலைவர் - கணவர். உள்ளுறை - வீட்டினுள் உறைகின்ற. இயற்றலர் - கணவருக்கு வேண்டியவற்றைச் செய்

எள்ளுநர் வெரீஇச்சிறி தியைந்தி யற்றுவார்
விள்ளரு வெறுமைய ரெனின்வெ றுப்பரே. (உசு)

4744. கிட்டிய புனிதநீர் கெழுமி வைகுதல்
விட்டதி னன்பில ராகி வேறுசெய்
பட்டநன் னதிகளே பழுதில் லாகுமென்
றுட்டெளிந் தவரவ ருறுதி கூறுவார். (உஎ)

4745. காக்களுங் குறுகுநற் கனிக ளாதிய
நாக்குறுஞ் சுவைப்பொரு ணலனுங் குன்றுமால்
மாக்களுங் குறுகுவர் வயங்கு தம்முருக்
கோக்களும் யாடெனக் குறுகு மென்பவே. (உஅ)



# 2. கற்கியவதாரம் உரைத்த அத்தியாயம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

4746. உன்னுநான் மறையும் வருணமு நான்கா
யுரைத்தவாச் சிரமமு மொழிய
இன்னவா றெவரு மறந்தபத் திங்கிங்
கிழைத்திடுங் கலியுகத் தீற்றின்

---

யார். எள்ளுநர் - இகழ்பவரை. வெரீஇ - அஞ்சி. இயைந்து - பொருந்தி. விள்ளரும் - கூறுதற்கரிய. வெறுமையர் எனின் - அறிவில்லாதவரென்றால்.

4744. கெழுமி - பொருந்தி. புனிதநீரில் வைகுதலை விட்டு. அதின் - அப்புனித நீரிடத்து; வேறு செய்த பட்டம், நன்னதிகளே யாகும்; பழுதில்லாகும் என்று; பட்டம் - ஓடை. பழுதில்லாகும் - குற்றமில்லாததாகும். உள்தெளிந்து - மனம் தெளிவு பெற்று. உறுதி - தமக்குத் தோன்றிய உண்மை வார்த்தைகளை.

4745. கா - சோலை. குறுகுதற்குரிய கனிகளாகிய சுவைப் பொருளின் நலனும்; நலன் - இன்பம். காக்களும் சுவைப் பொருளின் நலனும் குன்றும்; குன்றும் - குறைவு பெறும். மாக்களும்; தம்முரு குறுகுவர்.

மன்னுநான் முகனை யரனையிங் குதவி
மாநிலங் காத்தளித் தழிக்கும்
அன்னமா மாயன் பரியுரு வாகி
யறத்தினை நிறுத்துவ னன்றே. (௧)

4747. தண்டலை யுடுத்து நீள்வளஞ் செறியுஞ்
சம்பளக் கிராமத்தின் றேத்தவ்
வண்டரும் புகழு மருந்தவப் பேரு
மந்தணர் குலத்தினு ரியத்தால்
விண்டுவின் பெயரோ டிசைக்குறும் பெயர்சேர்
வேதியன் வதிவனுங் கவன்பால்
பண்டைநான் மறையுங் காணரும் பாமன்
பரியவ தாரமுற் றிடுமே. (௨)

4748. அவ்வுரு வெடுத்த வாழியான் வேதத்
தடைதரு நற்பரி யிவர்ந்து
தெவ்வடு குருதி வாள்காத் தேந்தித்
தீங்குசெய் காவட ரெனவே
கவ்வையங் கடல்சூழ் காசினி பனிப்பக்
காவல்செய் தாசரா யுறையும்
அவ்விய மனத்தோர் யாரையு மறுத்தாங்
கறனிலை நிறுத்துவ னன்றே. (௩)

---

மாந்தரும் குறுகிய வடிவமடைவர். கோக்கள் - பசுக்கள். யாடு - ஆடு. குறுகும் - குறுகிய உருவத்தைப் பெறும்.

4746. உன்னு - கருதுகின்ற. ஒழிய - நீங்க. அறம் தப - தருமம் கெடும்படி. ஈங்குத் தீங்கை இழைத்திடுகின்ற கலியுகத்தின் ஈற்றில். நான் முகனை - பிரமனை. அரனை - சிவபெருமானை. அளித்து - உண்டுபண்ணி. அன்ன - அத்தன்மை வாய்ந்த. பரி - குதிரை. அறம் - தருமம்.

4747. தண்டலை உடுத்து - சோலைகள் சூழ்ந்து. சம்பளக் கிராமம்: கற்கியவதாரம் செய்த இடம். தேத்து - இடத்தில். அண்டர் - தேவர். ஆரியத்தால் விண்டுவின் பெயரோடு இசைக்குறு பெயர்: விஷ்ணுயசஸ் என்பது. வதிவன் - வாழ்வான். பரமன் - திருமால். பரியவதாரம் - கற்கியவதாரம்.

4748. அவ்வுரு - குதிரையின் உருவத்தை. ஆழியான் - திருமால். வேதமாகிய பரியில் இவர்ந்து; இவர்ந்து - ஊர்ந்து. தெவ்வடு - பகைவரைக் கோபிக்கின்ற. காவடர் - கபடமுள்ளவர். கவ்வை - ஒலி. காசினி பனிப்ப - பூமி நடுங்கும்படி. அவ்வியமனத்தோர் - பொறாமையையுடைய மனத்தினர். அறுத்து - கொன்று.

4749. ஆங்கற நிறுத்து மாயவன் றடமார்
பணிவன மாலையின் காற்றுத்
தீங்கரு மேனி தைவரப் பெற்றோர்
தெளிவுறு சிந்தைய ராவார்
வாங்குவிற் றடக்கை மன்னவ வந்நாண்
மாநில மேற்பிற வார்தாம்
ஓங்குறு மாதி யுகத்தினுக் கேற்ற
வொளிபெறு குணத்தா யுதிப்பார். (௪)

4750. ஆதியா முகம்வந் தணையுறுங் காலத்
தருக்கனு மதியுமந் தணனும்
ஓதுமோர் பூச நாளிலுற் றுறைவா
ருரைப்பருந் தவம்புரிந் திருக்கும்
தீதிலாத் திங்கண் மாபுளா னெனுஞ்சீர்
சிறக்குந்தே வாபியு மருவா
மீதுலாம் பரிதி மாபின்மன் னவனும்
விளங்குதம் மாபினை விளைப்பார். (௫)

4751. அந்தணர் முதலா மூழியி னீங்கா
தருந்தவ மியற்றியன் பாவார்
வந்துறு மிரண்டா மூழியின் மகிழ்வான்
மன்னரு மாதவம் புரிவார்

---

4749. அறம் - தருமத்தை, மாயவன் - கற்கியவதாரக் கடவுள். மார்பில் அணிந்த வனமாலையின் காற்று; வனமாலை - துளவமாலை. மேனியில் தைவரப் பெற்றோர்; தைவர - தடவ. மன்னவ; பரிக்ஷித்துவை: விளி. ஆதியுகத்தினுக்கு - கிருதயுகத்துக்கு.

4750. அருக்கன் - சூரியன். மதி - சந்திரன். அந்தணன் - குரு. பூச நாள் - புஷ்ய நக்ஷத்திர தினத்தில். திங்கள் மாபுளான் எனும் தேவாபி; தேவாபி என்பவன் சந்திர குலத்தில் பிறந்தவன். சந்தனுவின் சகோதரன். மருவாகிய பருதி மாபின் மன்னவன்; மரு: இக்ஷ்வாகுவின் வழியிற் பிறந்தவன். விளைப்பார் - விருத்தி செய்வார். கடக ராசியில் புஷ்ய நக்ஷத்திரத்தில் சூரியன், சந்திரன், குரு என்ற மூவரும் ஒன்று சேருங் காலத்துக் கிருத யுகம் ஆரம்பமாகும்.

4751. முதலாம் ஊழியில் - கிருத யுகத்தில். இரண்டாம் ஊழியில் - திரேதா யுகத்தில். நந்தவில் - கெடுதலில்லாத. மூன்றும் ஊழியில் -

நந்தலின் மூன்று மூழியி னலஞ்சேர்
நாய்கரு நற்றவம் புரிவார்
நொந்துறு கலியிற் பின்னவர் தாமு
நொடிப்பருந் தவமியற் றுவாரால். (௬)

4752. தேன்றரு தொடையாய் முதலெனு மூழி
சேர்தரி னறமெனும் வெள்ளே
றூன்றிடு நான்கு பாதமு மிரண்டா
மூழியி னொருபதம் வாங்கி
மூன்றென மொழிவார் மொழிந்திடு மூழி
மூன்றினி லிரண்டுதா ளூன்றும்
என்றிருங் கலியி லொருபத மூன்று
மிலங்குமித் தரைமிசை யன்றே. (எ)

4753. அறமெனும் வெள்ளே றொருபத மூன்றி
னவனியி னொருபத மகற்றும்
நிறைதரு தரும மொருபத நீங்கி
நிலமிசை யொருபத நிறுத்தும்
தெறுகொலை வைரம் பொய்கடுஞ் சோகஞ்
செப்புமிந் நால்வகை யனவாம்
மறமிகு நான்கு தாளுடைத் தாகி
மருவிய தீங்குற மாதோ. (அ)

---

துவாபர யுகத்தில். நாய்கர் - வணிகர். பின்னவர் - வேளாளர். நொடிப்பரும் - கூறுதற்கரிய.

4752. தொடையாய்; பரிக்ஷித்து: விளி. முதலெனு மூழி - கிருத யுகம். அறமெனும் வெள்ளேறு - தருமம் என்ற வெண்மையான இடபம், நான்கு பாதமும் ஊன்றிடும்; இரண்டாம் ஊழியில் ஒரு பதம் வாங்கி மூன்று பாதங்களை ஊன்றும் என மொழிவார் மூன்றும் ஊழியில் இரண்டு தாளூன்றும். கலியுகத்தில் ஒரு பதத்தையே ஊன்றும். எல்லாவற்றிற்கும் தரைமிசை என்பதைக் கூட்டிக் கொள்க.

4753. ஏறு - இடபம். அவனி - பூமியின். அகற்றும் - நீக்கும். தெறுதல் - அழித்தல். வைரம் - கோபம். சோகம் - துன்பம். மறம் - பாபம். கொலை, வயிரம், பொய், சோகம் என்ற நால்வகையினவாகிய மறம் நான்கு தாளுடைத்தாகித் தீங்குற மருவிய.

4754. நாடொறுங் கொடுமை நனிதவ நடாத்து
நாமவெங் கொடுங்கலி யீற்றின்
கேடுறு கொலைசேர் தருமநான் காகக்
கிளத்திய தாண்முழு தூன்றப்
பீடுறு கருணை யுண்மைநற் புனிதம்
பெருந்தவ மென்னுநான் கடியும்
நீடுறு புகழ்சேர் தருமமிந் நிலமே
னிறுத்திடா தொளித்திடு மன்றே. (கூ)

கலிவிருத்தம்.

4755. பன்னு மன்னர் பலர்நமன் கூற்றராய்
என்ன தென்னதென் றென்னிடத் தாசையால்
துன்னு வெஞ்சம ரிற்றொலை வாரென
நன்னி லப்பெ ணகைத்துரை யாடுமே. (க0)

4756. வாச மாய்நமன் வாழ்வது பார்த்திடார்
ஓசை நீர்க்கட லுற்றழி மொக்குள்போல்
பேச மாயுடற் பிண்டமெய் யாமென
ஆசை மாகடன் மூழ்கி யழுங்குவார். (கக)

4757. இளனும் வண்மை யெழிலிக்கு வாகுவும்
நளனும் யாதியென் றோதுநன் னூலுணர்
உளனும் வீமனு முற்றநன் னீதியும்
வளனு மேவு மனுவெனு மன்னனும். (கஉ)

---

4754. நனிதவ - மிக அதிகமாக. நாள்தொறும் கொடுமையை நடாத்துகின்ற கலியின் ஈற்றில். கொலை சேரும் அந்நான்காகக் கிளத்திய தாள் முழுதும்; கொலை, வைரம், பொய், சோகம் என்பன. தருமம், தனது கருணை, உண்மை, புனிதம், தவம் என்ற நான்கடியையும் நிலமேல் நிறுத்திடாது ஒளித்திடும்.

4755. நமன் கூற்றராய் - யமனுடைய பகுதியினராய். என்னது என்னது - என்னுடையது என்னுடையது. துன்னு - பொருந்திய. சமர் - போர். நிலப்பெண் - பூமிதேவி. நிலப்பெண், 'மன்னர் பலர் என்னிடத்து ஆசையால் என்னது என்னது என்று சமரில் தொலைவார்' என்று நகையாடும்.

4756. வாசமாய் - இருப்பிடமாய். மொக்குள் - கொப்புளம். பேச மாய் உடல் - பேசின் மாய்கின்ற உடல். உடலாகிய பிண்டம் மெய்யாம் என. ஆசையாகிய கடலில்.

4757. இக்குவாகு - இக்ஷ்வாகு. யாதி என்பவனும். நீதியும் வளனும் மேவிய மனு.

4758. மகுடம் வேய்ந்தெழு மாநிலங் காத்தருள்
நகுட னுங்கய னுந்நவி லண்டநீள்
முகட ளப்ப முளைத்த பெரும்புகழ்ச்
சகா னுந்திறல் சார்ந்தசை யாதியும். (கங)

4759. கனக னுங்கன கப்பெருங் கண்ணனும்
அநக வெள்ளிவெற் பேந்து மாக்கனும்
இனைய ராதிமற் றேனைய ராக்கையும்
வினையின் வீந்தன வென்று விளம்பினன். (கச)

4760. அசைவில் சிந்தை யரசவிங் கோதினர்
இசையி னுலிங் கிருந்தன ரன்றியூன்
தசையு டம்பொடு தங்கின ரில்லையால்
விசைய வுள்ளம் விளங்கிடக் கேட்டியால். (கரு)

4761. எண்ணி லாவை ராகம தெய்துமென்
றண்ணல் வாட்கை யரசரை யோதினன்
விண்ணி னோரும் விரும்பு மமுதமாம்
கண்ணன் மாக்கதை யேகளி செய்யுமே. (கசு)

4762. தீய வெங்கலி சேருமிவ் வூழியின்
தூய னெங்குந் துலங்குவன் சொல்லுநர்
நேய னற்புத னுய நெடியவன்
மாயன் கீர்த்தனத் தால்வரு முத்தியே. (கள)

---

4758. அண்டத்தின் முகட்டை அளக்கும்படி முளைத்த பெரும்புகழை யுடைய சகரனும். சையாதி - ஸர்யாதி.

4759. கனகன் - இரணியன். கனகக் கண்ணன் - இரணியாக்ஷன். அனக - குற்றமற்ற; பரிக்ஷித்துவை நோக்கிய விளியுமாம். அரக்கன் - இராவணன். இனையர் - இத்தன்மையுடையவர். ஆக்கை - உடல். வீந்தன - அழிந்தன.

4760. அரச : பரிக்ஷித்து ; விளி. இசையினுல் - புகழால். அன்றி - அல்லாமல். ஊன் தசை உடம்பொடு - ஊனுகிய தசையையுடைய உடம்போடு. விசைய : விளி. உள்ளம் விசைய எனலுமாம்.

4761. வைராகம் - வைராக்கியம் ; விராகம் என்பது சிதைவுற்றது. அண்ணல் - பெருமை பொருந்திய. வைராகம் எய்துமென்று அரசரை ஓதினேன். அமுதமாகிய கண்ணனுடைய கதையே.

4762. கலி சேரும் இவ்வூழி - கலியுகம். தூயனும், எங்கும் துலங்குபவனும், சொல்லுநாது நேயனும், அற்புதனுயவனும், நெடியவனுமான மாயனுடைய கீர்த்தனத்தால் முத்தி வரும்.

4763. கோவி னாலுங் குணங்களி னாலுமிப்
பூவி னாலும் பொருபல வானுஞ்சேர்
தாவி லாப்பழி சாற்றிடிற் றீர்ந்துபோம்
நாவி னாலுரை யார்நர கெய்துவார். (கஅ)

4764. தானத் தானுந் தவங்களி னானுநன்
மோனத் தானு முனமக லாப்பழி
ஞானத் தார்தொழு தேத்து நவையிலா
வானத் தான்பெயர் வாழ்த்திடத் தீருமே. (கசூ)



## 3. பிரளயம் உரைத்த அத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4765. முடிபுனை யாச பிரளய முரைக்கின்
மொழிதரு நித்திய மெனவும்
நெடுநில முதல மூவுல கிறப்பு
நிலவுநை மித்திக மெனவும்
படிமுத லுலகம் படைத்தவ னெழியப்
படர்வுறு பாகத மெனவும்
அடலுறு மாத்தி யந்திக மெனவும்
மறைதரு நால்வகைத் தாமே. (க)

4763. கோ - அரசன். பூ - பூமி. பொருபலவானும் - அவற்றை ஒத்த வேறு பலவற்றாலும். சேர்ந்த பழி. சாற்றிடின் - திருமால் பெயரைச் சொன்னால்.

4764. மோனம் - மௌனம். அகலாத பழியை. நவை - குற்றம். வானத்தான் பெயர் - திருமால் நாமத்தை. பழி தீரும்.

4765. அரச: பரிக்ஷித்து; விளி. நித்தியம், நைமித்திகம், பாகதம், ஆத்தியந்திகம் என்று பிரளயம் நான்கு வகைப்படும். பாகதம் - பிராகிருதம்,

4766. நேரலர் பாவு நெடுமுடி யரச
நித்தியப் பிரளய மென்றல்
பாருறை மாந்தர் முதற்சரா சரங்கள்
பார்த்தறி யாவகைப் பெருக்காம்
நீருறும் தீயிற் கணங்கணங் கழிய
நின்றிறந் திறந்துவே றுதல்
சீருறு மயன்மற் றுறங்குழி முதலாச்
சேர்பிர ளயங்களைத் தெரிப்பாம். (உ)

4767. ஆயிர முறைநான் கூழிவந் தடையி
னருமறை யந்தணன் றனக்கு
மேயவோர் பகலப் பகலுளே ழிரண்டாய்
விளம்புறு மனுக்களுங் கழிவார்
ஏயவப் பகலி னீற்றினி லரச
விப்புவி முதலமூன் றுலகும்
தூயநீர்ப் பெருக்குற் றிறந்திடு மந்நாள்
சொன்மக லோகமுற் றுறைவார். (௩)

4768. அவ்வுல ககன்று புகழ்ச்சன லோகத்
தடைகுவர் பிரளயப் பேரே
வெவ்விய நைமித் திகமென விதிப்பார்
விளம்புமப் பகலள விரவாய்த்

---

4766. நேரலர் - பகைவர். அரச: விளி. என்றல் - என்று கூறுதல். பெருக்காம் நீருறு தீயில் - வடவாமுகாக்கியால். கணம் - க்ஷணம். கழிய - நீங்க. நித்தியப் பிரளயம் என்றல் வேறுதலாகும். அயன் - பிரமன். முதலா - முதலாக. தெளிப்பாம் - தெளியக் கூறுவேம்.

4767. நான்கு ஊழி - நான்கு யுகங்கள். அந்தணன்றனக்கு - பிரமனுக்கு. ஆயிரம் முறை நான்கு யுகங்கள் வந்தால் பிரமனுக்கு ஓர் பகலாகும். பகலுள் - அந்தப் பகற் காலத்திற்குள். ஏழிரண்டாய் விளம்புறு மனுக்களுங் கழிவார் - பதினான்கு மனுக்களும இறப்பார்கள். ஏய - பொருந்திய. அரச: விளி. மகலோகம் - மகத்லோகம்.

4768. சனலோகம் - ஜனலோகம். அப்பிரளயத்தின் பேர் நைமித்திகம் என விதிப்பார். இரவாய் - இரவு உண்டாகி. நூறு ஆண்டு இறக்கில்

திவ்விய தினத்தா லாண்டுநூ றிறக்கிற்
நிகழயன் போம்பிர ளயப்பேர்
பவ்வவெண் டிரைப்பார் பரித்தவே லரச
பகர்தரு பாகத மரமே (ச)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4769. கார்மழை பருவ நூறு காந்திடக் கதிர்வெய் யோனாற்
பார்புனல் சிறிது மின்றிப் பசையறப் பிளக்குஞ் சேடன்
சீர்தரு முகத்தின் றீயாற் சேர்பொருள் யாவுந் தீய
ஓர்தரு மண்டந் தானு முலந்துநீ றுகு மன்றே. (ரு)

4770. விடந்திகழ் தியி னண்டம் வேமியல் விளம்பின் வெய்ய
கொடுந்தழல் பட்டு நீறுங் கோமய பிண்டம் போலாம்
அடைந்திடும் பருவ நூறுங் கதிர்நெடுங் காற்றக் காற்றால்
உடைந்துமுன் னீறு கண்ட முற்றிடு மணுக்க ளாயே. (சா)

4771. மன்னுமக் காலி னூறு வண்ணமா மங்கு லீண்டித்
துன்னுதே ரச்சிற் றாரை சொரிதர வெங்கு நீராய்
முன்னுறு மணமுன் போக முதுநிலம் புனலுண் மாயும்
அன்னநீர்ச் சுவைமுன் போக வழல்புகுந் தடங்கு மன்றே. ()

---

அயன்போம்; அயன்போம் - பிரமன் இறப்பான். பவ்வம் - கடல். பரித்த - தாங்கிய. அரச: விளி. அப்பிரளயத்தின் பேர் பாகதம் என்பது.

4769. கார் காலத்து மழை. பருவம் - வருடம். மழை நூறு பருவம் காந்திட. வெய்யோனால் பாரில் புனல் சிறிதுமின்றிப் பசையற. அற - அற்றுப் போக. பிளக்கும் - பூமி பிளவு பெறும். சேடனுடைய முகத்தின் தீயால் பொருள் யாவும் தீய; சேடன் - ஆதிசேடன், அண்டம் - உலகம். உலந்து - கெட்டு. நீறுகும் - சாம்பலாகிவிடும்.

4770. விடமாகிய தீயால் அண்டம் வேகின்ற இயலை விளம்பின். தழல்-தீ. நீறும்-சாம்பலாகும். கோமய பிண்டம் போலாம் - சாணி மூட்டம் போலாகும். காற்று அடைந்திடும். நீறாகிய அண்டம் காற்றால் உடைந்து அணுக்களாய் உற்றிடும்; அண்டம் - உலகம்.

4771. காலின் - காற்றினால். நானா வண்ணமாம் மங்குல் - பல வர்ணங்களையுடைய மேகம். அச்சின் - அச்சைப்போல். தாரை - மழையை. மணம் - வாசனை. மாயும் - மறையும். நீரின் சுவை போக. அன்ன - அத்தன்மை வாய்ந்த. அழல் - தீ.

4772. ஆரழ லுருமுன் போக வநிலனி லடங்கு மக்கால்
சேருறு மூறு போகச் சேணுறுஞ் சிறந்த சேணும்
பேருறு மொலிமுன் போகப் பிறங்ககங் காரத் தொன்றும்
ஏருறு குணங்கண் மூன்றுற் றியையகங் கார மூன்றும். (அ)

4773. மருவுறு மகானி னென்றும் வழங்கிய மகானும் வந்தாங்
குறைதரு பகுதி யுட்புக் கொளியுமாற் பகுதி தானும்
புரையுறு புருட னோடு போதமா யநாதி யாகிப்
பெருகொளி யாகி வைகும் பிரமத்தி னடங்கு மன்றே. (கூ)

4774. இன்னணந் தோற்று மாறே யியைந்தன யாவும் போகத்
துன்னிய பிரள யப்பேர் சொல்பிரா கிருத மாகும்
மன்னவ பிரம மொன்றே வயங்குநித் தியமாங் காண்கின்
பின்னமி லாத ஞானப் பிரளயங் கூறு வாமால். (க0)

4775. சேலமாய்ச் சேலத் துற்ற சித்திரம் பலவா நூல்போல்
ஞாலமே முதல வாகி நவையறு முயிர்க ளாகிக்
காலமாய்க் கருவி யாகிக் காரண மாகி யொன்றாய்
மூலமா யழிவொன் றின்றி முதன்மையாம் பிரம மன்றே. (கக)

4776. விண்ணெழும் பருதி தன்னால் விளைந்தன மழைவெய் யோனை
மண்ணிடை நின்று பார்க்கும் வயங்குவெஞ் சுடர்க்கூ றாய

---

4772. அழலுரு - தீயினுருவம். அநிலனில் - காற்றில். கால் சேர்த லுற்ற ஊறுபோக ; கால் - காற்று. ஊறு - ஸ்பரிசம். சேண் - ஆகாயம். ஒலி - சப்தம். ஒன்றும் - பொருந்தும். குணங்கள் மூன்றுற்று இயைகின்ற அகங்காரம் மூன்றும் : சத்துவகுண அகங்காரம், ராஜஸகுண அகங்காரம், தாமஸகுண அகங்காரம் என மூன்று.

4773. மருவுறு - பொருந்திய. "மூன்றும்" (4772) என்பதை மகானின் ஒன்றும் என இப்பாட்டோடு முடிக்க. மான் - மகத் தத்துவம். பகுதி - பிரகிருதி ; மாயை. ஒளியும் - மறையும். புரையறு - குற்றமற்ற. புருடன் - ஆன்மா. போதம் - அறிவு.

4774. போக - கழிந்து செல்ல. பிரளயத்தின் பேர் பிராகிருத மாகும். மன்னவ : விளி. பிரமம் ஒன்றே நித்தியப் பிரளயமாகும். பின்னம் - வேறுபாடு.

4775. சேலம் - ஆடை. பலவாம் - பலவாகும். ஞாலம் - பூமி. நவை - குற்றம். மூலமாய் - ஆதியாய். நூல்போல் பிரமம் முதன்மையாகும். அன்று, ஏ : அசைகள்.

4776. பருதி தன்னால் விளைந்தனவாகிய மழை வெய்யோனை மறைத்தல் போல ; பரிதி - சூரியன். மழை - மேகம். கண்ணின் ஒளி சூரிய

கண்ணுறன் மறைத்தல் போலக் கருதரும் பொருளி ஞனே
நண்ணகங் காரந் தேரு நற்பொருண் மறைக்கு மாதோ. (கஉ)

4777. கரும்புய னீங்கின் வெய்யோன் கண்ணிடைத் தனுது கூருய்
அரும்பொளி பொருந்த வொன்ரு யவிருமவ் வாறு போலப்
பெரும்பொரு ளகந்தை நீங்கிற் பேசுதன் கூருய்த் தன்பால்
திரும்புயிர் பிரிந்தோன் ருகத் திகழ்ந்திடுந் தேரின் மாதோ. ()

4778. அறிந்திடு ஞான வாளா லகந்தையாம் வனத்தை வீட்டி
நிறைந்திடு பிரம மாகி நித்திய மாவர் வேருய்ப்
பிறந்திடு முயிருங் காணூர் பின்னமாய்ப் பிரிந்து நீங்கி
இறந்திடு பொருளுங் காணு ரேகமா யிருப்ப ரன்றே. (கச)

4779. நடையுறு தொடைய லொன்றே நாகமாய் விளைந்த வாபோல்
தடையுறு மாயை நீங்கித் தற்பா மாவா ராய்ந்தோர்
விடலரு ஞான யோக வித்தக விவேகத் திவ்வா
றடைதரு பிரள யப்பே ராத்தியக் திகமென் ருமே. (கரு)

4780. இன்னதொன் னூலே மாய னிலங்கவ தார மாகி
மன்னுநா ராய ணப்பேர் மருவிய முனிவன் கூற
நன்னரம் புளர்ந்து பாடு நாரத முனிவன் றேர்ந்து
முன்னமெந் தாதை கேட்ப முழுவதுந் தெளித்தான் மன்னே. ()

---

னுடைய கூறு. கண்ணுறல் - கண்ணில் உறுதலே. அகங்காரம் கருதரும் பொருளினுல் நற்பொருளே மறைக்கும்.

4777. புயல் - மேகம். வெய்யோன் - சூரியன். தனுது - தன்னுடைய. அரும்பு ஒளி - தோன்றிய ஒளியை. அவிரும் - விளங்குகின்ற. அகந்தை - அகங்காரம். கூறு - பகுதி. உயிர் - ஆன்மா. தேரின் - ஆராய்ந்தால்.

4778. ஞானமாகிய வாளால் அகந்தையாகிய வனத்தை; அகந்தை - அகங்காரம். வனம் - காடு. பின்னம் - வேறுபாடு. ஏகம் - ஒன்று.

4779. நடையுறு - வழியிலுற்ற. தொடையல் - மாலே. நாகம் - பாம்பு. ஆய்ந்தோர் தற்பாமாவர். வித்தக: விளி. விவேகத்து - ஞானத்தால்.

4780. இன்னதொன்னூலே - இத்தன்மையையுடையதாகிய பாகவதத்தை. மாயன் - திருமாலினுடைய. நாராயணப் பேர் முனிவன்: நாராணர் என்ற முனிவரிருவரில் ஒருவன். உளர்ந்து - தடவி. தேர்ந்து - அறிந்து. தாதை - வியாச முனிவன். தெளித்தான் - அறியச் செய்தான்.

4781. தாதையென் றுரைக்கும் வேதத் தலைவனுள் ளுவப்ப மேவி
ஓதின னெமக்கவ் வண்ண முரைத்தன நினக்கென் றோது
காதையைச் சவுன காதி கருதருந் தவத்தோர் கேட்பச்
சூதனு நைமிசப் பேர் சொல்வனத் திருந்து கூறும். (கஎ)



# 4. பரிட்சித்து வீடுபெற்ற அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4782. பிறத்தலு மிறத்தலும் பேசி னாக்கைகள்
உறத்தகு முண்மையா யுற்ற நல்லுயிர்க்
கறத்துறை யரசவக் குணங்க ளின்மையால்
இறத்தன்மற் றுனக்கில்லை யென்று வைகுவாய். (க)

4783. அல்லது மைந்தர்க ளாயும் வைகினை
சொல்லுமிவ் வுலகினிற் றுலங்கு தாதையர்
நல்லெழிற் புதல்வராய் நயந்து திப்பரென்
றெல்லையில் சுருதிக ளியம்பு கின்றவால். (உ)

4784. தாதையர் மைந்தர்க ளாகிச் சார்வதிங்
கோதுபீ சாங்குர முற்ற தன்மையாம்
பேதமா மாந்தொறும் பிறங்கு தீயெனப்
பூதமா முடறொறும் பொருந்துஞ் சீவனே. (ங)

---

4781. வேதத் தலைவன் - வியாச முனிவன். மேவி - என்னை அடைந்து. எமக்கு ஓதினன். அவ்வண்ணம் உனக்கு உரைத்தனம் என்று. காதையை - பாகவதத்தை. தவத்தோர் - முனிவர். நைமிசம் என்று பேர் சொல்லும் வனத்தில்.

4782. பேசின் - கூறினால். ஆக்கைகள், பிறத்தலும் இறத்தலும் உறத்தகும். நல்லுயிர்க்கு உண்மையாய் அக்குணங்கள் இல்லை. அறத்துறை அரச: விளி. இறத்தல் உனக்கு இல்லை. வைகுவாய் - தங்கி வாழ்வாய்.

4783. வைகினை - தங்கினாய், தாதையர் - தந்தையர். உதிப்பர் - பிறப்பர். சுருதிகள் - வேதங்கள்.

4784. சார்வது - பிறத்தல். பீசாங்குரம் உற்ற தன்மை: பீசாங்குர நியாயம் என வழங்கப் பெறும். பேதமா - வேறு வேறாக. பிறங்கு - விளங்குகிற. பூதவுடல் தோறும் சீவன் பொருந்தும்.

4785. உறங்குழிக் கனவிடை யொருவன் றன்றலை
கறங்கெனச் சுழல்பவர் கையிற் கொய்தெழ
மறங்கிளர் வேலவ மரணங் காண்கையால்
இறந்திடு மாக்கைநீ யென்று மல்லையே. (ச)

4786. கடத்துறை வானுமக் கடமு டைக்கின்வான்
இடத்தொடு மொன்றுபட் டிருக்கு மாறுபோல்
சடத்துறை யுயிருமச் சடந்த ணக்கினீங்
கடக்கரும் பரத்தினொன் றாகு வைதுமே. (ரு)

4787. மாயையான் மனமெழு மனத்தி னாலுடல்
ஙேயமோ டடைதரு நிகழ்ந்த வாக்கையால்
மேயசீ வனுக்குமோர் வினைக்கட் டுண்டெனத்
தூயநூ லுணர்பவர் சொல்லு வாரரோ. (சா)

4788. சொற்றரு தயிலநூ றொலையு மட்டுமே
விற்றரு தீபமென் பெயர்வி ளங்குமால்
பெற்றிடு முக்குணம் பிறங்கு மவ்வள
வுற்றிடு மாக்கையென் றுரைவ ழக்கமே. (எ)

4789. வினைத்திறம் பொருந்திய மெய்யை மெய்யென
நினைத்திட லன்றிநீ நீங்க லாதிவண்

---

4785. உறங்குழி - தூங்குமிடத்து. கனவு - சுவப்நம். கறங்கு - காற்றாடி. தன் தலையைச் சுழல்பவர் கையினால் கொய்து எழ மரணம் காண்கையால்; வேலவ: விளி. நீ இறந்திடும் ஆக்கையல்ல.

4786. கடத்தில் உறைகின்ற வானும்; கடம் - குடம். வான் - ஆகாயம். உடைக்கின் - உடைத்தால். வானின் இடத்தொடும் ஒன்று பட்டிருக்குமாறுபோல். சடம் - உடம்பு. தணக்கின் - நீங்கினால். அடக்கரும் - அடக்குதற்கரிய. பரத்தின் - பரம்பொருளோடு.

4787. மாயையால் மனம் எழும்; எழும் - உண்டாகும். மனத்தினால் உடல் அடைதரும். ஆக்கையால் சீவனுக்கும் ஓர் வினைக்கட்டு உண்டு. என - என்று.

4788. தயிலமும் நூலும் தொலையும் மட்டிலும் தீபம் என்னும் பெயர் விளங்கும்; தயிலம் - எண்ணெய். நூல் - திரி. வில்தரு - ஒளியைத் தருகின்ற. முக்குணம் பிறங்குமளவும் ஆக்கை என்று பேர் உற்றிடும். உரை வழக்கம் - சொல்லும் வழக்கம்.

4789. வினைத்திறம் - வினையின் கூறுபாடு. மெய்யை - உடம்பை. மெய்யென நினைத்திடல் - உண்மையென்று நினையாதே. அன்றி - அல்லா

நுனித்துண ரறிவிடை நுவலு மொன்றென
மனத்தைவைத் துறைகுதி மன்னர் மன்னனே. (அ)

4790. யாவரு மிறக்கில ரெடுத்த வாக்கையே
சாவது நினையளி தண்ணந் தாமரைப்
பூவிரி கருமுகில் போலு மாதவன்
சேவடி படர்தியாற் றெளிந்த கேள்வியோய். (௯)

4791. தீக்கனற் கட்செவி திருகுஞ் சீற்றமோ
டாக்கையிற் கதுவுமற் றதுநி னைத்திடேல்
போக்கறு தனிமுதல் பூவை வண்ணனை
நீக்கமொன் றின்றிநீ நினைத்தல் செய்தியால். (௧0)

4792. அரவுவாய் பொழிந்தநஞ் சாக்கை சேரினென்
ஒருதனி முதல்வனை யுளத்தி னுள்ளுணர்ந்
திருவிசும் பேக்கறு மீறி லின்பமாம்
பெரியதோ ரோதநீ பெறுதி யென்றனன். (௧௧)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4793. மண்ணிய மணியிற் றோன்று மாதவன் குணங்க ளெல்லாம்
புண்ணியம் போலத் தோன்றும் புங்கவ னுரைப்பக் கேட்டுக்
கண்ணுறும் பிறவி வேலை கடந்தன னுய்யப் பெற்ற
அண்ணல்பே ரின்ப வேலை யலையிடைக் குளித்தான் மன்னே. ()

மல். நுனித்து உணர் - கூர்ந்து உணர்கின்ற. மனத்தை ஒன்றென வைத்து. உறைகுதி - வாழ்வாய்.

4790. எடுத்த ஆக்கையே சாவது. நினை அளித்த மாதவனுடைய சேவடியைப் படர்தியால்; மாதவன் - திருமால். படர்தி - அடைவாய்.

4791. கனல் போன்ற கண். கட்செவி - பாம்பு; தக்ஷகன் என்னும் பாம்பு. திருகும் - மாறுபட்ட. ஆக்கையில் கதுவும் - உன் உடம்பில் பற்றும். அது - அவ்விதம் கடித்தலை. தனி முதலாகிய பூவை வண்ணன் - திருமால். நீக்கம் - பிரிவு.

4792. அரவு - தக்ஷகன். நஞ்சு - விஷம். ஆக்கை - உடலில். என் - அதனால் என்ன. முதல்வனை - திருமாலை. இருவிசும்பு ஏக்கறும் - விண்ணுலகத்துள்ளவரும் ஆசையாற்றாழ்கின்ற. இன்பமாகிய ஓதத்தை; ஓதம் - கடல்.

4793. மண்ணிய மணியின் - கழுவிய மணியைப் போல. மாதவன் - கண்ணபிரானுடைய. புங்கவன் - சுக முனிவன். பிறவியாகிய வேலையை. அண்ணல் - பெருமை பொருந்திய; திருமாலுடைய எனலுமாம். பேரின்பம் - மோட்சப்பேறு.

4794. விழிபொழி கருணை தன்னால் வெவ்விய பிறவி மாசு
கழுவினை நின்னை யீங்குங் காட்டிய தவமற் றென்னோ
முழுதுணர் முனிவ வென்று முருகவிழ் கமலப் பொற்றாள்
தொழுதனன் சென்னி சூடச் சுகனகன் றேகி னானால். (கங)

4795. என்றுநல் லுணர்வு வாய்ந்த விருந்தவ முனிவர் போற்று
மன்றலந் துளவு சூடு மாகதக் குன்று போல
நின்றவன் கமல பாத நினைந்துளங் குளிர்ந்த சூதன்
நன்றெடுத் துரைத்து மீட்டு நடந்தன நவிற்றி னானே. (கச)

4796. துறந்தநன் முனிவன் சூழச் சுகமுனி போய பின்னர்ச்
சிறந்தநன் மனத்தை யொன்றுத் திகழமால் கழலிற் சேர்த்தி
அறந்தரு வேந்தர் வேந்த னரியதோர் காட்ட மேபோல்
நிறைந்தலை யெறிநீர்க் கங்கை நீள்கரை யிருந்திட் டானால்.(கரு)

4797. கலிநிறை தன்மை யானுங் கலந்ததண் ணளியி னானும்
அலர்கதிர் மதியிற் றோன்று மாசினைத் தீண்ட நாடி
மலர்தலை யுலகங் காண வழங்குதக் ககனென் றோதும்
கொலைமலி நச்சு நாகங் கொதித்தழன் றெய்திற் றன்றே. (கசு)

4798. கூற்றுறழ் தக்க கன்வேற் கொற்றவன் றன்னைத் தீண்டின்
மாற்றுவ னின்னே யென்றோர் மறையவ னெழுந்து செல்ல

---

4794. விழியினின் றும் பொழிகின்ற. மாசு கழுவினை - குற்றத்தை நீக்கினாய். தவம் என்னோ; மற்று, அசை. முனிவ: விளி. முருகு - வாசனை. தாளைத் தொழுது சென்னியிற் சூட. சூட - பரீக்ஷித்து சூடிக் கொண்டானாக. சுகன் - சுக முனிவன்.

4795. மன்றல் - வாசனை. நின்றவன் - கண்ணபிரானுடைய. என்று சூதன் உரைத்து மீட்டும் நடந்தவற்றை நவிற்றினான்.

4796. மனத்தை மாலின் கழலில் சேர்த்தி; ஒன்றுத் திகழ - ஒன்றாக விளங்கும்படி. மால் - திருமால். வேந்தன் - பரிக்ஷித்து. காட்டம் கட்டை. கரையில் இருந்திட்டான்.

4797. கலி - கலி காலம். தண்ணளி - அருள். மதியின் - சந்திரனைப் போல். அரசினை - பரிக்ஷித்தை. தீண்ட - கடித்தற்கு. தக்ககன் என்று ஓதும் நாகம். கொதித்து அழன்று - மிகக் கோபித்து.

4798. கூற்றுறழ் - யமனைப் போன்ற. கொற்றவனைத் தக்ககன் தீண்டினால் இன்னே மாற்றுவேன் என்று ஓர் மறையவன் சொல்ல. கொற்றவன் -

ஆற்றிடை யவனைக் கண்ட வரவும்யாங் கடைதி யென்னச்
சாற்றரு மறைவ லோனுந் தன்னிலை கிளத்தல் செய்தான். ()

4799. கேட்டலும் வெகுளி நாகங் கிளந்தவவ் வாறு நஞ்சம்
மீட்டிட வல்லை யேலிவ் விடத்தினை மீட்டி யென்ன
மோட்டுநீண் மரமொன் றாங்கு முதலொடுங் கரிந்து சாயச்
சூட்டழ னஞ்சு பேழ்வாய் சொரிந்திடத் தீண்டிற் றன்றே. ()

4800. வெண்டிரை வேலி ஞாலம் வியப்புற விண்ணிற் றோன்றும்
துண்டநாண் மதியமென்னச் சுடரும்வா ளெயிற்றுப் பாந்தள்
மண்டழல் விடத்திற் றீந்த மல்லலந் தருமற் றாங்கு
பண்டுபோற் றளிர்த்து நிற்பப் பார்த்தனன் பருதி யன்னான். ()

4801. வல்லையெவ் விடமு மாற்ற வல்லையான் மறையோ யாங்குச்
செல்வதென் னென்று மின்றோய் செழுமணிச் சுடிகை நாகம்
எல்லைநீர் முகட்டிற் றோன்று மிளங்கதிர்ப் பருதி நாண
வில்லுமிழ் மணிக ணல்கி மீள்கென விடுத்த தன்றே. (உ0)

4802 புயங்கநன் மணிபெற் றேங்கும் புனிதனுங் காசி பப்பேர்
வயங்கினன் மீண்டு போக வல்லையின் மறைநூல் வல்லோர்

---

பரிக்ஷித்து. மறையவன் - பிராமணன். ஆற்றிடை - வழியின் நடுவில். அவனை - மறையவனை. அரவு - தக்ககன். அடைதி - செல்கிறாய். கிளத்தல் செய்தான் - மொழிந்தான்.

4799. நாகம் - தக்ககன். கிளந்தவாறு - நீ கூறியபடி. நஞ்சம் - விடத்தை. மீட்டி யென்ன - மீட்பாயாக வென்று. மோடு - பெருமை. முதல் - அடி. சாய - சாயும்படி. நஞ்சு வாயினின்றும் சொரிந்திட.

4800. ஞாலம் - பூமி. துண்ட நாண் மதியம் - இளம்பிறை; பாம்பின் பல்லுக்கு உவமை. பாந்தள் - தக்ககன். பாந்தளின் விடத்தினால் தீந்த தரு; தரு - மரம். மற்று: அசை. ஆங்கு - அவ்விடத்தே. பண்டு போல் - முன்புபோல். நிற்கும்படி பருதியன்னான் பார்த்தனன்; பருதி யன்னான் - மறையவன்.

4801. வல்லை - விரைவில். விடம் - விஷம். மாற்ற வல்லையால் - மாற்றுதற்கு வலியுடையாய்; ஆல், அசை. மறையோய்: விளி. ஆங்குச் செல்வதென் - பரிக்ஷித்தினிடம் போவது என்? என்று - என்று கூறி. நாகம் - தக்ககன். முகடு - உச்சி. பருதி - சூரியன். வில் - ஒளி. மீள்க - திரும்புவாயாக.

4802. புயங்க நன்மணி பெற்று-பாம்பினது மாணிக்கத்தைப் பெற்று. காசிபப் பேர் வயங்கினன் - காசிபன் என்னும் பெயரால் விளங்கினவன்.

தயங்கெழி லுருவங் கொண்ட தக்கக னென்னு நாகம்
நயங்கெழு மாசன் வைகு நதிக்கரை யேகிற் றன்றே. (உக)

4803. நஞ்சினை மீட்ப வந்த நான்மறை யோனை மீட்டு
வெஞ்சினத் தடைந்த நாகம் வெவ்வரா வுயர்த்தோ னஞ்சச்
செஞ்சிலை குழைத்த பார்த்தன் றிருமகன் றன்னை ஞாலம்
அஞ்சிமற் றுவா வென்றுங் கதிர்தாக் கதுவிற் றன்றே. (உஉ)

4804. தீத்தவ ழுயிர்ப்பு நாகஞ் சீற்றமோ டடைந்த வாறும்
நாத்தலை புரட்டு வெய்ய நஞ்சுகக் கடித்த வாறும்
பார்த்திலன் சுடிகை நெற்றிப் பஃறலை யாவி னுடும்
கூத்தனை நினைந்து நெஞ்சங் குழைந்திழைந் திருக்கின் றுனே.()

4805. விரிதலை யாவு கான்ற வெவ்விட வழலி னுக்கை
எரிதா முதுநூற் கேள்வி யின்னமு தெய்தி நின்றோன்
மருவிரி தருவி னீழல் வாழ்பவர் வியந்து போற்ற
அரவணை துயிலு மம்மா னடிநிழ லெய்தி னுனல். (உச)

4806. தேமழை பொழியுந் தண்ணென் செழுந்தரு நீழல் வானோர்
பூமழை பொழிய வீடு பொருந்தினுன் புதல்வ னென்னும்
மாமழை பொழியு மும்மை மதக்களி றனையான் பைம்பொன்
ஆமழை பொழியுஞ் செங்கை யாசுசெய் திறஞ்சொல் வாமால்.

---

வல்லையில் - விரைவில். மறைநூல் வல்லோர் தயங்கெழிலுருவம் கொண்ட தக்ககன் - பிராமணரது விளங்குகின்ற அழகிய வடிவத்தைக் கொண்ட தக்ககனுகிய பாம்பு. அரசன் - பரிக்ஷித்து.

4803. நஞ்சினை மீட்ப - விஷத்தை மாற்றுதற்கு. மீட்டு அடைந்த நாகம்: தக்ககன். அராவுயர்த்தோன் - துரியோதனன். அராவுயர்த்தோன் அஞ்சும்படி சிலை குழைத்த பார்த்தன். பார்த்தன் திருமகன்றன்னை - பரிக்ஷித்தை. ஞாலம் அஞ்சி அதிர்தர. கதுவிற்று - பற்றியது.

4804. தீத்தவழ்கின்ற உயிர்ப்பையுடைய நாகம் ; தக்ககன். நாத்தலை புரட்டு - நாவிடத்தைப் புரட்டுகின்ற. நஞ்சு - விடம். பார்த்திலன் - பார்க்காதவனுய். அரவினுடும் கூத்தனை - கண்ணபிரானை.

4805. விடமாகிய அழலினுல் ஆக்கை எரிதர ; ஆக்கை - மேனி. கேள்வி - பாகவதம். கேள்வியாகிய இனிய அமுதை. நின்றோன் - பரிக்ஷித்து. வாழ்பவர் - தேவர்கள். அம்மான் - திருமாலுடைய. அடியின் நிழலை,

4806. தே மழை - தேனுகிய மழையை, தண்ணென் - குளிர்ந்த. வானோர் - தேவர். வீடு பொருந்தினுன் புதல்வன் : முத்தியடைந்தவனுகிய பரிக்ஷித்துவின் புதல்வனுகிய சனமேசயன். என்னும் - என்று கூறப்படுகின்ற. மும்மை மதம் - மூன்று வகை மதங்களையுடைய. பொன்னுகிய மழையைப் பொழிகின்ற கையையுடைய அரசு : சனமேசயன்.

# 5. சர்ப்பவேள்வி உரைத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

4807. விடமீட்ப வந்த மறையோன்றனை மீட்டு வெம்பும்
அடுசீற்ற நாக மரசன்றனைத் தீண்டு மாறு
வடிவாட் டடக்கைச் சனமேசயன் கேட்டு வையம்
கடைநாட் கனற்றுங் கனலாமெனக் காய்ந்த ழுன்ருன். (க)

4808. மண்ணுந் திசையுந் தொழுதேத்திய மாலை சேர்ந்து
விண்ணந் திகழுஞ் சுடர்மாமதி போல்வி ளங்கும்
தண்ணங் கவிகைச் சனமேசயன் பார்தன் வெந்தீ
உண்ணும் படிமற் ஞெருவேள்வி யுஞற்றி ஞனே. (உ)

4809. மைவ்வேலை ஞாலத் துயரந்தணர் வந்து சூழத்
தெவ்வோட வென்ற திறன்மன்னவ ஞற்று கின்ற
அவ்வேள்வி வெய்ய தழலின்றலை யால மூறும்
வெவ்வா யரவம் பலவந்தன வீழ்ந்தெ ரிந்த. (௩)

4810. எரிகின்ற காலத் தெரிவீழ்ந்திட வின்னு மென்னே
வருகின்ற தில்லை வடிநாண்மது வாய்நெ கிழ்ந்து

4807. மறையோன்றனை - காசிபனை. மீட்டு - மீளச் செய்து. நாகம் - தக்ககன். அரசன்றனை - பரிக்ஷித்தை. வையத்தைக் கடை நாளில் கனற்றுகின்ற கனலாம் என; கடை நாள் - ஊழிக் காலம். கனல் - வடவாமுகாக்நி. காய்ந்து - கோபித்து.

4808. மாலை - மாலைக் காலத்தே. விண்ணம் - ஆகாயத்தில்; அம், அசை. மதி - சந்திரன். தண்ணம் கவிகை - குளிர்ச்சி பொருந்திய குடையையுடைய; அம், அசை. பார்தனைத் தீ உண்ணும்படி ஒரு வேள்வி உஞற்றிஞன்; வேள்வி - சத்திர யாகம். உஞற்றிஞன் - செய்தான்.

4809. மைவேலை - கரியகடல் சூழ்ந்த. தெவ்ஓட - பகைவர் புறங்காட்டி ஓடும்படி. மன்னவன் - சனமேசயன். அவ்வேள்வி - சத்திர யாகம். தழலின்றலை - ஓமம் பண்ணும் தீயினிடத்து. ஆலம் - விஷம். அரவம் - பாம்புகள்.

4810. எரிகின்ற காலத்து - எல்லாப் பாம்புகளும் வீழ்ந்து இறக்கின்றபோது. தொடை - மாலை. மிடைந்த - நெருங்கிய. அரசன்றனை -

சொரிகின்ற மன்றற் றொடைமாலை மிடைந்த திண்டோள்
அரசன் றனைத்தீண் டடுசீற்ற வரவ மென்றான். (ச)

4811. புயலுற்ற செங்கைப் புகழோனுரை கேட்ட லோடும்
செயலுற்ற வேள்வி மறையந்தணர் தேர்ந்து நோக்கி
வெயிலுற்ற கூர்வேல் விறல்வேந்தனைத் தீண்டு நாகம்
வயிரப் படையோற் புகல்புக்கது மன்ன வென்றார். (ரு)

4812. யாழ்கொன்ற தீஞ்சொ லரமங்கைய ராட வின்றேன்
சூழ்கின்ற பொன்னந் துணரீன்றமந் தார நீழல்
வாழ்கின்ற கொற்றத் திறையோனொடும் வந்து நாகம்
வீழ்கின்ற தில்லை யெவனோவென வேந்து ரைத்தான். (சு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4813. வைம்முக மணிந்த வொள்வாள் வச்சிரப் படையி னானும்
பைம்முக மணிந்த துத்தி பஃறலைப் பாந்தள் வேந்தும்
மெய்ம்முகங் கரிந்து தீயில் வீழ்கமற் றின்னே யென்னு
நெய்ம்முகந் தந்த ணாளர் நீளெரி முகத்திற் பெய்தார். (எ)

4814. தண்ணறுந் தருவி னீழற் றனியா சிருக்கும் வானத்
தண்ணலு மண்ண றன்பா லடைந்தவா ளரவின் வேந்தும்
கண்ணகல் விசும்பி னின்றுங் கவிழ்தா வுற்ற காலை
விண்ணவர் குரவன் வல்லை மேயினன் விலக்கி னானல். (அ)

---

பரிக்ஷித்தை. அரவம் - தக்ககன். அரசன்றனைத் தீண்டிய அரவம் இன்னும் என்னோ வருகின்றதில்லை என்றான்.

4811. புயலுற்ற - மேகத்தை யொத்த. புகழோன் - சனமேசயன். வேள்வி செயலுற்ற அந்தணர். தேர்ந்து நோக்கி - ஆராய்ந்து பார்த்து. வேந்தனைத் தீண்டு நாகம் - பரிக்ஷித்தைக் கடித்த தக்ககன். வயிரப் படையோற் புகல் புக்கது - இந்திரனை அடைக்கலமாகச் சேர்ந்தது.

4812. அர மங்கையர் - தேவ மகளிர். பொன்னந்துணர் - பொற்றுணர் ; அம் : அசை. மந்தாரம் - கற்பகம். கொற்றத்து - அரசுரிமையை யுடைய. இறையோன் - இந்திரன். நாகம் - தக்ககன். எவன் - என்ன காரணம். வேந்து - சனமேசயன்.

4813. வை - கூர்மை. வச்சிரப் படையினான் - இந்திரன். பை - படம். துத்தி - பொறி. பாந்தள் வேந்து - தக்ககன். மெய்ம்முகம் கரிந்து - மேனியினிடம் கருகி. இன்னே தீயில் வீழ்க என்னு. என்னு - என்று கூறி. நெய்யை முகந்து.

4814. தருவின் நீழல் - கற்பகத்தின் நிழலில். வானத்து அண்ணல் - இந்திரன். அரவின் வேந்து - தக்ககன். கண்ணகல் - இடமகன்ற. விண்ணவர் குரவன் - பிருகஸ்பதி. வல்லை - விரைவில்.

4815. முன்னமு துண்ட தாலம் மொழிதரும் பகுவாய் நாகம்
அன்னது தன்னை யெங்ங னழல் வீழ்த்தி மாய்த்தல்
மன்னவர் மன்ன முன்செய் வல்வினை வந்து நல்கும்
இன்னலு மூவப்பு நோயு மிறப்பதற் கேது வாமே. (கூ)

4816. அவரவர் வினைக ளேமற் றவரவர்க் கழிவு செய்யும்
கவர்படு நாவி னாகக் கணங்களைக் கனலின் மாய்த்தல்
உவர்படு வேலை ஞாலத் துற்றதோ ரறன்கொ லம்ம
எவரிவை துணிந்து செய்வா ரிறைவவென் றியம்பி னானே. (க0)

4817. ஆனதன் வேள்வி நீக்கி யடையலர் பாவும் வைவேற்
பூநறுந் தெரியன் மன்னன் பூசனை புரிந்து போற்ற
வானவர் மகுட கோடி மணித்தழும் பிருந்த பொற்றாள்
ஞானநன் மறைவ லாள னன்றுவந் தேகி னானால். (கக)

4818. அழலும்வா ளரசர்க் கெல்லா மழற்கதிர்ப் பரிதி போன்றும்
பொழிகதிர் மணியிற் செய்த பூங்கழ லிலங்கு நோன்றாள்
நிழலுறு மன்னர்க் கெல்லா நிழன்மதி போன்றும் வையம்
முழுவதும் புரத்தல் செய்தான் முத்தவெண் கவிகை வேந்தே.

4819. ஆழியா னன்பர் நாளும் யாமெம தென்று பாரார்
ஏழொடே ழுலக மாதி யெவைகளு மொன்றாய் நோக்கி
வாழிமால் பாதஞ் சேர்வா ரென்றலு மகிழ்ச்சி கூர்ந்து
சூழுமா தவரெல் லோருஞ் சூதனைப் புகழ்ந்து சொல்வார் (கங)

4815. அந்நாகம் முன்பு அமுது உண்டது அன்னது தன்னை அழலில் வீழ்த்தி மாய்த்தல் எங்ஙன்; மாய்த்தல் - கொல்லுதல். எங்ஙன் - எவ்வாறு முடியும். மன்னவர் மன்ன; விளி. வல்வினை - வலிய தீவினை. இன்னல் - துன்பம். ஏது - காரணம்.

4816. வினைகளே - செய்த கருமங்களே. கவர்படுநாவின் - பிளவு பட்ட நாவினையுடைய. நாகக் கணங்களை - பாம்புக் கூட்டங்களை. அறன் கொல் - தருமமோ? இறைவ: ஜனமேசயனே; விளி.

4817. தன் வேள்வி - சத்திர யாகத்தை. அடையலர் - பகைவர். மன்னன் - சனமேசயன். பூசனை - பூஜை. போற்ற - புகழ. மகுடகோடி களிலுள்ள மணியினது தழும்பு. மறைவலாளன் - பிருகஸ்பதி. நன்று உவந்து - பெரிதும் மகிழ்ந்து.

4818. அழலும் - கோபிக்கின்ற. பருதி - சூரியன். நோன்றாள் - வலிய பாதத்தின். நிழலில் உற்ற மன்னர்க்கெல்லாம்; என்றது தனக்கு அடங்கிய அரசரை. நிழல் மதி - ஒளியையுடைய சந்திரன். புரத்தல் - காத்தல். வேந்து - சனமேசயன். (பு. புற நா. 59 : 6-7.)

4819. ஆழியான் அன்பர் - திருமாலின் அடியார். யாம் என்றும் எமது என்றும் பாரார். வாழி: அசை. மாலின் பாதத்தைச் சேர்வார் என் றலும்; என்றலும் - என்று சூதன் கூறலும்.

4820. வேதமோர் நான்க தாக மெய்த்தவ வியாதன் முன்னர்
ஓதினன் முனிவர்க் கென்ன வுரைத்தனே சுருக்கி யாங்குக்
கோதிலாச் சுருதி நாலுங் குலவிய புராண நாலுங்
சூதமா முனிப ரக்கச் சொல்கெனச் சொல்ல லுற்றான். (கச)

## 6. வேதநான்காக வகுத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4821. தண்ணறுங் கமலத் துற்ற சதுமுக னிதய மென்னும்
விண்ணிடை யெழுந்த நாதம் விளங்கிய பிராண வப்பேர்
நண்ணிமுன் றுறந்து ளோரு நாடினர் மொழியி னன்னோர்
எண்ணுறும் பாமா நந்த மெய்துதற் கேது வாமால். (க)

4822. மந்திர மறைக ளாதி மறுத்தபு நூல்கட் கெல்லாம்
முந்துறு தன்மைத் தாகி முதன்மையாய்க் குணனோர் மூன்றும்
தந்துறு மகா நற்சீர் சார்ந்துறை யுகாத் தோடு
நந்தலின் மகா மென்ன நவிற்றுமூன் றெழுத்தின் வைகும். ()

4823. மூன்றெனு மெழுத்தி னுற்ற மொழிபிர ணவத்தி னின்றும்
தோன்றின வுயிர்மெய் யென்னச் சொல்லிய வெழுத்தின் கூட்டம்
ஆன்றவவ் வெழுத்தி னலே யயன்முக நான்கி னின்றும்
ஏன்றிடு மறைக ணான்கா யெய்திடப் பயந்தான் மன்னே. (ந)

---

4820. வியாதன் வேதத்தை நான்காக முனிவர்க்கு ஓதினன் என்னச் சுருக்கி உரைத்தனே. சுருதி நூல் - வேதம். குலவிய - விளங்கிய. சூதமா முனி: விளி. பரக்க - விரிய.

(பி - ம்) 4. சோறலுற்றான்.

4821. சதுமுகன் - பிரமனுடைய. இதயமென்னும் விண்ணிடை - ஹ்ருதயாகாசத்தில்; இதயம் - ஹ்ருதயம். நாதம் - ஒலி. துறந்துளோர் - முனிவர். மொழியின் - கூறுமிடத்து. ஏது - காரணம்.

4822. மறு தபு - குற்றம் இல்லாத. முந்துறு - முற்பட்ட. மூன்று குணத்தையும் தந்து. அகரம், உகரம், மகரம் என்ன நவிற்றுகின்ற மூன்று எழுத்தில். வைகும் - தங்கும்.

4823. மூன்று எழுத்தினுலுற்ற மொழியாகிய பிரணவத்தினின்றும். உயிர் மெய் எனச் சொல்லிய எழுத்தின் கூட்டம் தோன்றின. ஆன்ற - நிறைந்த. அயன் - பிரமனுடைய. மறைகள் நான்காய் எய்திட.

4824. ஆங்குவந் துதித்த வேத மனைத்தையு மலரின் மேலான்
தீங்கறு புதல்வ ரோதச் செப்பின னவருந் தத்தம்
ஒங்கெழிற் புதல்வர் தங்கட் குரைத்தன ரின்ன வாறே
வாங்குதெண் டிரைசூழ் பார்மேல் வயங்கின பெரிது மாதோ. (ச)

4825. கலிவருங் காலத் தாயுள் கருதிடிற் குறையு மென்னு
நிலைபெற வேண்டி மூன்று நிலவிய வுகங்க டோறும்
அலருறை யயன்முன் கூறு மாரண மலைக டம்மை
மலைவறச் சுருக்கி மேலோர் வகைபெற வழங்கி னூல். (ரு)

4826. மழகளி றன்ன விந்த மனுவுறை கால மென்னச்
சுழல்வுறு மிருபத் தேழாந் துவாபர யுகத்தின் மேவும்
முழுமறை வகுத்தல் செய்தான் முற்றுணர் வசிட்டன் சேயாம்
பழுதறு சத்தி பெற்ற பராசர முனிவன் மாதோ. (சு)

4827. வயங்கெழு புகழ்சேர் வைவச் சுதனெனு மனுவேந் துற்று
நயங்கெழு மூழி நான்கா நடந்தன நாலே ழீங்கு
முயங்கிய கலிநான் கேழா முறையவெங் கலியின் காலம்
துயங்குமிக் கலிக்கு முன்போந் துவாபரந் தன்னின் மாதோ. ()

4828. பராசர முனிவ னல்கும் பண்ணவன் வியாதன் றேரின்
அராவணைத் துயிலு மம்மா னருங்கலை யாகு மன்னோன்
புராதன நான்கு வேதப் பொருப்பிலொவ் வொருகைம் மொண்டு
தராதலந் தன்னி னூன்காச் சாற்றினன் வகுத்து மாதோ. (அ)

---

4824. மலரின் மேலான் - பிரமன்; புதல்வர் ஓத - தம் புதல்வர் ஓதும்படி. அவரும்-பிரமன் புதல்வரும். இன்னவாறே பார்மேல் வயங்கின.

4825. கலி - கலியுகம். ஆயுள் - வாழ் நாள். நிலைபெற வேண்டி - வேதம் நிலைத்திருக்கும் பொருட்டு. மூன்று யுகங்கள் தோறும். அயன் - பிரமன். ஆரண மலைகள் தம்மை - வேதமாகிய மலைகளை; "வேதப் பொருப்பில் (48 8) என்பர் பின்". மலைவு அற - மாறுபாடு நீங்கும்படி. மேலோர் - பெரியோர்.

4826. மழ களிறு - இளைய யானை. மனு - சுவாயம்புவ மனு. என்ன - என்று. முழு மறையை வகுத்தல் செய்தான். சேயாம் - பிள்ளை யாகிய. பராசர முனிவன் வகுத்தல் செய்தான்.

4827. வயம் - வன்மை. நாலேழு நான்காம் ஊழி நடந்தன; நாலேழு நான்காமூழி - இருபத்தெட்டுச் சதுர்யுகம்.

4828. பண்ணவன் - தேவன். தேரின் - ஆராய்ந்தால். வியாதன் அம்மானின் கலையாகும்; அம்மான் - திருமால். கலை - அமிசம். அன்னோன் - வியாதன். புராதனம் - பழமையான. வேதமாகிய பொருப்பில்; பொருப்பு - மலை. மொண்டு - எடுத்து. தராதலம் - பூமியில்,

4829. இருந்தவ முனிவர் காளீங் கினிவரு மூன்று மூழி
பொருந்தினன் வேத நன்னூல் புகாறப் பிரிப்பான் பூமேல்
திருந்திய புகழ்த்து ரோணன் சேயென வுதித்து நாளும்
அருந்தவம் புரிந்து மேவு மச்சுவத் தாம னன்றே. (கூ)

4830. திருத்தகு வேத நான்காச் செப்பிய வியாதன் முன்னும்
இருக்கெனு மறையை யன்பா லிசைத்தனன் பயிலற் கன்னோன்
தரித்தனன் பழுதின் றாகிச் சார்ந்தவர்க் குரைப்ப வந்நூல்
பரித்தமா ணாக்க ராலே பரம்பரை விளங்கிற் றன்றே. (கo)

4831. மன்னிய விரண்டாம் வேதம் வகுத்தவம் முனிவி யாதன்
உன்னருந் தவஞ்செய் வைசம் பாயனற் குரைப்பக் கற்றாங்
கன்னவன் றானு மன்பால் யாஞ்ஞவற் கியனே யாதிப்
பன்னுமா ணாக்க ரோதப் பயிற்றுவித் துறையு நாளில். (கக)

4832. விடலரு வினையின் கட்டால் வெவ்விய பிரம கத்தி
அடைதலின் மறைநூல் கற்ற யாஞ்ஞவற் கியனே யாதிப்
புடையுறும் வழிபா டாற்றிப் பொருந்துமா ணாக்கர் தம்மைத்
தொடருமிப் பாவ நீவிர் தொலைத்திடுந் தவத்தி னென்றான். ()

4833. குரவனங் கிசைத்தல் கேட்ட கோதின்மா ணாக்கர் தம்முள்
அரியநற் றவத்தின் மிக்க யாஞ்ஞவற் கியனென் பேர்சேர்ந்
துரைசெய்மா ணாக்கன் செய்தா ரன்றியே யேனை யோரால்
புரியுமிப் பாவம் போகா தென்றலுங் குரவன் சொல்வான். ()

---

4829. முனிவர்காள்: விளி. அச்சுவத்தாமன் இனி வரும் மூன்றும் ஊழியில் பொருந்தி வேத நூலைப் புகாறப் பிரிப்பான்.

4830. திருத்தகு - அழகு சிறந்த. முன்னும் இருக்கென்னும் மறையை-முதன்மையாகிய 'ருக்' என்ற வேதத்தை. பயிலற்கு இசைத்தனன்; பயிலன்: ஒரு முனிவன். அன்னோன் - பயிலன். தரித்தனன் - அவ்வேதத்தை மனத்தில் தாங்கியவனாய். உரைப்ப - உரைத்தலால். அந்நூல் - ருக்வேதம். பரித்த - தாங்கிய.

4831. இரண்டாம் வேதம் - யஜுர் வேதம். வியாதன் இரண்டாம் வேதத்தை வைசம்பாயனனுக்கு உரைப்ப. அவன் கற்று. அன்னவன் - வைசம்பாயனன். பயிற்றுவித்து - ஓதுவித்து.

4832. வினையின் கட்டு - கர்ம பந்தம். அடைதலின் - வைசம்பாயனரைச் சேர்தலால். புடையுறும் - பக்கத்திற் பொருந்திய. யாஞ்ஞவற்கியன் முதலிய மாணாக்கர் தம்மை, 'இப்பாவத்தைத் தவத்தால் நீவிர் தொலைத்திடும்' என்றான்.

4833. குரவன் - வைசம்பாயனன். யாஞ்ஞவற்கியன் என்னும் பேர் சேர்ந்து உரை செய்யப்பட்ட மாணாக்கன். இப்பாவம் செய்தவரால் அல்லாமல் யோரால் போகாது என்றலும்; என்றலும் - என்று கூறலும். குரவன் - வைசம்பாயனர்,

4834. சிந்தையுண் மகிழ்ந்தி யானே தீர்க்குவ னேனை யோரால்
வந்தவிப் பாவம் போக்கும் வல்லமை யில்லை யென்று
நிந்தனை செய்கின் றாயா னிகழ்த்திட வுணர்ந்த வேதம்
தந்திவ ணொழிதி யென்றான் றடாதினி துமிழ்தல் செய்தான். (கச)

4835. அன்னவ னுமிழ்ந்த வேத மாங்குநின் றிலங்க நோக்கிப்
பன்னுதித் திரியென் றோதும் பறவையி னுருவ மெய்தி
மன்னிய முனிவர் சில்லோர் மருவின ரருந்து மாற்றால்
பின்னரு மறைநூல் பெற்ற பேர்தயித் திரிய மாமே. (கரு)

4836. அருமறை யுமிழ்ந்து போய வருந்தவ முனிவன் வான்போய்
விரிகதி ரெல்லோன் றன்னை விருப்பொடு வணங்கி வாழ்த்தி
ஒருமறை யடியே னோத வுரைத்தியென் றியம்ப லோடும்
துரகத வுருவாய் வெய்யோன் சொற்றனன் மறைமற் றன்றே. (கசு)

கலிநிலைத்துறை.

4837. காசி லம்மறை கண்ணுவன் முதலியோர் கற்றோர்
வாசி நல்லுரு வாய்முனம் வெய்யவன் வகுத்துப்
பேச நின்றதா லம்மறை யுரித்தெனப் பெற்றோர்
தேசு றும்பெயர் வாசித னேயராத் திகழ்ந்தார். (கஎ)

4838. சீர்த ழைந்தமூன் றாமறை திகழ்சய முனிக்கும்
ஏர்த ழைந்தநான் காமறை சுமந்துவென் பவற்கும்

---

4834. தீக்குவன் - நீக்குவேன். இப்பாவம் ஏனையோரால் போக்கும் வல்லமை யில்லையென்று நிந்தனை செய்கின்றாய்; யான் நிகழ்த்திட - யான் கூறிட, வேதத்தை இவண் தந்து ஒழிதி என்றான்; ஒழிதி - நீங்குவாய். தடாது - தடுத்துக் கூறாமல்.

4835. அன்னவன் - யாஞ்ஞவற்கியன். இலங்க - விளங்க. தித்திரி = ஒரு பறவை. முனிவர் சிலரால் அருந்து மாற்றால். தயித்திரியம் = தித்திரி சம்பந்தமானது.

4836. முனிவன் - யாஞ்ஞவற்கியன். வான் - விண்ணுலகு. எல்லோன் - சூரியனை. மறை - வேதம். ஓத - ஓதும்படி. வெய்யோன் துரகத உருவாய்ச் சொற்றனன்; துரகதம் - குதிரை.

4837. காசில் - குற்றமில்லாத. அம்மறை - சூரியனால் கூறப்பட்ட வேதத்தை. வாசி - குதிரையின். வெய்யவன் - சூரியன். தேசு - ஒளி. வாசிதன் நேயரா - குதிரைகளின் அன்பராய்.

4838. மூன்றாம் மறை - சாமவேதம். நான்காமறை - அதர்வண வேதம். சுமந்து: ஒரு முனிவன். புராணத்தை என் தந்தைக்கும்; என்றது

பேர்த ழைந்திடும் புராணமென் ருதைக்கும் பெட்பால்
பார்த ழைந்துறப் பரம்பரை யம்முனி பகர்ந்தான். (கஅ)

4839. நிகரி னன்மறை தெரித்தவவ் வியாதன்முன் னிலமேல்
புகலு மொன்பதிற் றிரட்டியாப் பொருந்திய புராணம்
அகலுந் தத்துவப் படைப்புரைத் திடன்முத லாகப்
பகரு மையிரு வகையுடைத் தஃதிவட் பகர்வாம். (கசு)

4840. பூத மிந்திய முதலிய படைப்பினைப் புகறல்
கோதி லாதவித் தின்வழி வித்துறுங் குணம்போல்
பேத மாகிய சராசரம் பிறப்பன பேசல்
ஓது சீவன்மற் றவற்றுக்கிவ் வில்லென வுரைத்தல். (உ௦)

4841. ஞால மீதுமா லவதரித் தருள்வகை நவிற்றல்
கோல மேவிய மனுமுதற் றேவரைக் கூறல்
கால மூன்றுறு மாசரை யிவரெனக் கழறல்
சீல மேவுமம் மன்னவர் சரித்திரந் தெரித்தல். (உக)

4842. ஏய நால்வகைப் பிரளய மியம்புத லெழில்சேர்
மாயை யால்வரு முயிர்த்திற னொருவகை வழங்கல்
மேய மற்றவற் றிருப்பிட னுய்விளங் கறிவாய்த்
தூய காரண மாம்பொரு டெரிதரச் சொல்லல். (உஉ)

---

பலராமால் கொல்லப்பட்ட ரோமஹர்ஷணரென்ற சூதரை. பெட்பால் - விருப்பத்தால். அம்முனி : வியாசர்.

4839. நான்மறை - நான்கு வேதங்களையும். தெரித்த - விளக்கிய. ஒன்பதிற்றிரட்டியா - பதினெட்டாக. ஐயிருவகை யுடைத்து - பத்து வகை யுடையது.

4840. இந்தியம் - இந்திரியங்கள். புகறல் - சொல்லுதல். கோது - குற்றம். வித்து - விதை. சராசரம் - அசையும் பொருள்களும் அசையாப் பொருள்களும். இவ் இல் - இவை இல்லை.

4841. மால் - திருமால். கோலம் - அழகு. கால மூன்றுறும் அரசரை - இறந்த அரசர், இருக்கின்ற அரசர், வரும் அரசர். இவர் - இன்னர்.

4842. நால்வகைப் பிரளயம் - நித்தியப் பிரளயம், நைமித்திகப் பிரளயம், பிராகிருதப் பிரளயம், ஆத்தியந்திகப் பிரளயம். மாயை - மூலப் பிரகிருதி. மேய - அவற்றில் மேவிய. இருப்பிடனும், அறிவாய், காரணமாகிய பொருளை. தெரிதர - விளங்க,

4843. சொன்ன வையிரு வகையிலக் கணத்தொடு தொக்கு
முன்னு கின்றமா புராணமற் றப்புரா ணங்கள்
பன்னு மிவ்வகை யிலக்கணத் தாற்பதி னெட்டாய்
மன்னு கின்றன மாபுரா ணப்பெயர் வகுப்பாம். (உ௩)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4844. பிரமமாம் புராணம் பற்பம் பீடுசால் வைண வஞ்சீர்
மருவுபேர் சைவ மென்றே வழங்குறு லிலிங்க நீர்சூழ்
தரைசொல்கா ருடநல் வண்மை தயங்கிய நார தீயம்
பாமபா கவத மண்ணோர் பகர்தரு மாக்கி நேயம். (உ௪)

4845. காசறு காந்த மின்பங் கலந்துறு பவுடி கம்பார்
பேசிய புகழ்சேர் கின்ற பிரமகை வத்த நன்னூல்
மாசறு மார்க்கண் டேயம் வாமனம் வராக மச்சம்
தேசுறு கூர்மஞ் சீலந் திகழ்பிர மாண்ட மாமால். (உ௫)

4846. இத்தகைப் புராண மூவா றியலும்பா கவதம் பற்பம்
பொய்த்தலில் வராகம் வைண வத்தொடு புகல்கா ருடம்
மெய்த்நா ரதிய மென்ப விளம்புசாத் திகறு லாமால்
பித்தறு மார்க்கண் டேயங் கருதுபௌ டிகம்பி ராமம். (உ௬)

4847. பிரமகை வத்த மிக்க பிரமாண்டம் வாம னஞ்சீர்
பெரியா சதநூல் காந்தம் பேசுமாக் கினேயஞ் சைவம்

---

4843. ஐயிரு வகை - பத்து வகையான. தொக்கு - கூடி. அப்புராணங்கள் இவ்வகை யிலக்கணத்தால் பன்னும்; பன்னும் - கூறும். பதினெட்டாய் மன்னுகின்றனவாகிய மாபுராணத்தின் பெயரை.

4844. பற்பம் - பத்மபுராணம். வைணவம் - விஷ்ணு புராணம். சைவம் - சிவமகா புராணம். இலிங்கபுராணம். காருடம் - கருட புராணம் நாரதீயம் - பிருகந்நாரதீய புராணம். ஆக்கினேயம் - அக்கினி புராணம்.

4845. காந்தம் - ஸ்காந்த புராணம். பவுடிகம் - பவுஷ்ய புராணம். பிரமகைவர்த்த புராணம். மார்க்கண்டேய புராணம். வராக புராணம். மச்ச புராணம். கூர்ம புராணம். பிரமாண்ட புராணம்.

4846. மூவாறு - பதினெட்டுள். பொய்த்தல்இல் - பொய்யாகாத, மெய்த்த - உண்மை வாய்ந்த. இவை சாத்வீக நூல்களாகும். சாத்திகம் - சாத்வீகம்; பாகதச் சிதைவு. பித்தறும் - மயக்கங் கெடுகின்ற. பிராமம் - பிரம புராணம்.

4847. மார்க்கண்டேயம், பௌடிகம், பிராமம், பிரமகைவர்த்தம், பிரமாண்டம், வாமனம் என்ற இவைகள் இராசத நூல்களாகும். மச்சியம் -

விரியுமச் சியமி லிங்கம் வீறுறு கமட மென்னத்
தெரிதரு தாம தப்பேர் சிறந்தநூ லென்பர் மேலோர். (உஎ)

4848. என்றுணர் சூதன் கூற வியற்றருந் தவத்தோ ரெல்லாம்
நன்றுவந் துரைத்த வாறு நன்றெென வியந்து காலம்
வென்றுயர் மார்க்கண் டேயன் விழுத்தவம் புரிந்த வண்ணம்
மன்றநீ தெரித்தி யென்ன வகுத்தன னுரைசெய் வானுல். ()

## 7. மார்க்கண்டேயர் தவம் உரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4849. மாற்றரும் பெருந்தவ மார்க்கண் டேயன்முன்
ஆற்றின னயுதமொ டயுத மாண்டிருஞ்
சீற்றமோ டடைந்ததிச் சிதறுஞ் செங்கண்வெங்
கூற்றையுங் கடந்தனன் கூறு மாயனுல். (க)

4850. அன்னவன் சீலநல் லழகு கண்டெழிற்
பொன்னவிர் மதிச்சடைப் புனிதன் போதினுன்
துன்னுதென் புலத்தினர் சுரா ருந்தவர்
மன்னுமற் றேனையர் மனம்வி யந்தனர். (உ)

---

மச்ச புராணம்; மத்ஸ்யம் என்பது மச்சியம் என்ருயிற்று. கமடம் - கூர்ம புராணம். காந்தம், ஆக்கினேயம், சைவம், மச்சியம், இலிங்கம், கமடம் என்ற இவைகள் தாமஸ நூல்களாகும்.

4848. தவத்தோர் - சனகாதியர். மார்க்கண்டேயன் : ஒரு முனிவன். மன்ற - தெளிவாக. தெரித்தி - விளங்க உரைப்பாயாக.

4849. மாற்றரும் - மாற்றுதற்கரிய. அயுதமொடு அயுதம் ஆண்டு - இருபதினுயிரம் வருஷம். கூற்று - யமன். மாயனுல் கடந்தனன். மாயன் - திருமால்.

4850. அன்னவன் - மார்க்கண்டேயனுடைய. பொன்னவிர் - பொன்னைப் போல் விளங்குகின்ற; சடைக்கு விசேடம். புனிதன் - சிவபெருமான். போதினுன் - பிரமன். தென்புலத்தினர் - பிதிருக்கள். சுரர் - தேவர்.

4851. ஆதிமா மனுமுத லறுவர் காலம்போய்
நீதியே ழாமனுக் கால நேரிலான்
ஓதுபூம் பத்திரை யென்னு மொண்பெயர்ச்
சீதநீர் நதிக்கரை சேர்ந்து வைகினன். (௩)

4852. ஊதுவண் டுடுத்தபோ துறையுஞ் சேயிழை
காதலன் சேவடி கருதி நாண்மலர்த்
தாதெறிந் தொழுகுறு தண்ணெ னாற்றிடை
மாதவம் புரிந்தனன் மார்க்கண் டேயனே. (௪)

4853 அன்னவ னருந்தவ மகற்று வாயெனப்
பொன்னகர் மன்னவன் புகலப் போயினன்
மன்னெழி லாம்பையர் மருங்கு சூழ்வா
இன்னிள வேனிலஞ் செல்வ னென்பவே. (௫)

4854. எத்திசை யும்புக ழிமய மால்வரை
உத்தர பக்கநின் றொழுகன் மேயபூம்
பத்திரை நதியில்வேள் படர்ந்து நோக்கினன்
மெய்த்தவம் புரிந்துறை விமலன் றன்னையே (௬)

4855. கூனல்யா ழின்னிசைக் குயில்கு டைந்துகும்
கானுலாந் தண்மலர் கஞலுங் காவெலாந்
தேனுலாம் வண்டொடு செறிந்து பாண்செய
வேனிலான் வருதலின் வேனி லுற்றதால். (௭)

---

4851. ஏழாம் மனுவின் காலத்து. நேரிலான் - ஒப்பில்லாதவனாகிய மார்க்கண்டேயன். பத்திரையென்னும் நதிக்கரையைச் சேர்ந்து. பூம்பத்திரை - புஷ்ப பத்திரை.

4852. உடுத்த - சூழ்ந்த. போதுறையும் சேயிழை காதலன் - திருமாலுடைய. மார்க்கண்டேயன் தவம்புரிந்தான்.

4853. அன்னவனுடைய தவத்தை அகற்றுவாய் என மன்னவன் புகல; அன்னவன் - மார்க்கண்டேயன். மன்னவன் - இந்திரன். வேனிலஞ் செல்வன் அரம்பையர் சூழ்வரப் போயினன். வேனிலஞ் செல்வன் - மன்மதன்.

4854. இமய மால்வரையின் உத்தர பக்கத்தில் நின்று. ஒழுகல் மேய - ஒழுகுதல் பொருந்திய. வேள் - மன்மதன். விமலன்றன்னை நோக்கினன்; விமலன் - மார்க்கண்டேயன்.

4855. கூனல் யாழ் - வளைவையுடைய யாழ். யாழின் இனிய இசையைப் போன்ற ஒலியையுடைய குயில், குடைந்து - குடைதலால். கான் - வாசனை. கஞலும் - நெருங்குகின்ற, கா - சோலை. தேனும் வண்டும் : வண்டின் வகைகள். பாண்செய - பாடுதலைச் செய்ய. வேனிலான் - மன்மதன். வேனில் - வேனிற் காலம்.

4856. கொங்கைமென் முகிழினர் குழைந்த சாயலர்
அங்கலுழ் மேனிய ராம டைந்தையர்
பொங்கெழில் வேனிலிற் பூத்த கொம்பென
மங்குலேய் தண்டலை மருங்கு மேயினர். (அ)

4857. கொந்தவிழ் கோதையுங் குழலுஞ் சோர்தர
இந்திர வில்லென வெறிக்குங் காஞ்சிசூழ்
அந்துகில் சோர்தர வந்த ணாளன்முன்
மந்தமா ருதத்தொடு வந்து தோன்றினர். (கூ)

4858. அயிலெனப் பிறழ்ந்துசேந் தரிப ரந்தகண்
வெயின்மணிக் குழைபொரு தலைப்ப மெல்லென
மயிலென மருங்குலாய் மலர்க்கொம் பாமெனக்
குயிலொடு மாறுகூய்க் குலவி னார்சிலர். (க0)

4859. சில்லரிச் சிலம்பொடு செம்பொற் கிண்கிணி
மெல்லென மிழற்றிட மிளிர்பொன் மேகலை
ஒல்லென வொலிசெய வொல்கி மென்மலர்
அல்லியங் கோதைய ராடி னார்சிலர். (கக)

4860. ஓடரிக் கண்ணிய ரொளிபொன் னூபுரம்
சூடிய மலையொடு சிலம்பத் தோகையின்

---

4856. கொங்கையாகிய மெல்லிய முகிழினர்; முகிழ் - தாமரை மொட்டு. சாயல் - மென்மை. அம் கலுழ் - அழகு ஒழுகுகின்ற. வேனிலில் - வேனிற் காலத்தில். மங்குல் - மேகம். தண்டலை - சோலை.

4857. கொந்து - கொத்து. கோதை - மாலை. குழல் - கூந்தல். எறிக்கும் - ஒளி வீசுகின்ற. காஞ்சி - மேகலை. மேகலைக்கு இந்திர வில் உவமை. சோர்தர - சோர. அந்தணாளன் முன் - மார்க்கண்டேயன் முன். மந்த மாருதம் - தென்றற் காற்று.

4858. அயில் - வேல். பிறழ்ந்து - மாறுபட்டு. சேந்து - சிவந்து. வெயில் - ஒளியையுடைய. கண் குழையைப் பொருது அலைப்ப. மருங்கு உலாய் - பக்கத்தே உலாவி. மாறு கூய் - எதிர் கூவி.

4859. சில் அரி - சிலவாகிய பரல்களையுடைய. சிலம்பும் கிண்கிணியும் மெல்லென மிழற்றிட. ஒல்லென : ஒலிக் குறிப்பு. ஒல்கி - அசைந்து. கோதையர் - மகளிர்.

4860. ஓடரி - நீண்ட செவ்வரிகளையுடைய. கண்ணியரது நூபுரமும் கலையும் சிலம்ப ; நூபுரம் - சிலம்பு. கலை - மேகலை. தாகை - மயில்.

ஆடலு நயந்தில னமுத வின்னிசைப்
பாடலு நயந்திலன் றவஞ்செய் பண்ணவன். (கஉ)

4861. தொடுத்தமென் மழலையஞ் சுருப்பு நாண்கமழ்
கடித்தொடை யேந்துமே தோள் கழிய வாங்கினன்
அடக்கரு மைப்பொறி யவித்த தூயன்மேல்
விடுத்தனன் பூங்கணை வேனில் வேந்தனே. (கங)

4862. தொலைவுறப் பாழிவாய்த் தூணிப் பல்கணை
மலையும்வெஞ் சரம்பொரு மாரன் மாட்டினன்
பலமலர் பூத்ததோர் பழும ரத்தையொத்
தலர்பொறி யவித்தநல் லறிவன் றேன்றினன். (கச)

4863. மாயனை வழிபடூஉ மாத வத்தர்பால்
தீயநம் மாணைதாய்ச் சேர்க லாதெனத்
தூயசெஞ் சடையவற் றொலைத்த பூங்கணை
ஏயதன் வடுநனி யெண்ணி மாழ்கினன். (கரு)

4864. துளக்கில னிவன்றவ மென்று சூழிளங்
களிச்சுரும் பாற்றுதார்க் காம னேகினன்
விளைத்தவை தெரித்தனன் விரிந்த வானுல
களிப்பவன் கதிர்முடி யசைத்திட் டானரோ. (கசு)

---

அமுதம் போன்ற இன்னிசையையுடைய பாடலையும். பண்ணவன் - மார்க்கண்டேயன்.

4861. மழலையையுடைய சுருப்பு; சுருப்பு=சுரும்பு - வண்டு. சுரும்பாகிய நாணில், தொடுத்த நாணில். கடித்தொடை - வாசனை பொருந்திய மலராகிய அம்பை. கழிய - நீங்க. வாங்கினன் - வில்லை வளைத்தனன். அவித்த - கெடுத்த. தூயன்மேல் - மார்க்கண்டேயன்மீது. பூங்கணையை விடுத்தனன். வேனில் வேந்தன் - மன்மதன்.

4862. பாழிவாய்த் தூணி - பெரிய வாயையுடைய அம்பறாத்தூணி. தூணியிலுள்ள கணை தொலைவுறும்படி. மாரன் - மன்மதன். பழு மரம் - பழுத்த மரம்; ஆலமரம் எனலுமாம். அறிவன் - மார்க்கண்டேயன்.

4863. மாயனை - திருமாலை. தாய் - தாவி. சடையவன் தொலைத்த - சிவபெருமானுடைய தவத்தைக் கெடுத்த. ஏய - பொருந்திய. வடு - குற்றம். மாழ்கினன் - மயங்கினன். இச்செய்யுள் ஒரேட்டுப் பிரதியிலில்லை.

4864. இவன் தவத்தினின்று துளக்கிலன் என்று; துளக்கிலன் - அசைவில்லாதவனானன். சுரும்பு - வண்டு. காமன் - மன்மதன். விளைத்தவை - தான் செய்தவற்றை; விளைந்தவை என்பதன் விகாரம் எனலுமாம். வானுலகளிப்பவன் - இந்திரன். வியப்பினால் முடியை அசைத்தான்.

வேறு.

4865. அரிதா நற்றவ மாற்றி ஞனென
உரைசா லன்னவன் முன்ன மூறுதேன்
விரைசேர் தாமரை வென்ற செங்கணூர்
நரநா ராயணர் நண்ணி ஞரோ. (கஎ)

4866. உற்ரு ரென்னைவி ழைந்த தோதெனச்
சொற்ரூர் மற்றவர் சொற்ற சொற்கொளாப்
பெற்றே னும்மருள் பேறென் வேறெனப்
பொற்ருள் சென்னி புனைந்தி றைஞ்சினன். (கஅ)

வேறு.

4867. கடையுறு பிரளயங் காண வேண்டுமால்
மடைதிறந் திளநறு வொழுகு மன்றலந்
தொடையலி ரென்றலர் தூற்றிப் பூங்கழல்
அடிதொழ வாங்கவ ருள்செய் தேகினர். (கசு)

4868. வேலையம் புவிமகள் விரைசெய் கற்பகச்
சோலையங் கிளியெனத் தோன்றிப் பைந்துழாய்
மாலையம் புயத்தனை வணங்கி வைகிய
காலைவந் தெறிபெருங் காற்றெ ழுந்ததால். (உ0)

---

4865. அரிதாகிய தவத்தை ஆற்றுவான் என்று. உரைசால் - புகழ் மிக்க. அன்னவன் முன்னம் - மார்க்கண்டேயன் முன்பு. செங்கணூராகிய நரநாராயணர்.

4866. உற்ரூர் - உற்ற நர நாராயணர். விழைந்தது 'என்னை ஓது எனச் சொற்ரூர் - நீ விரும்பியது என்ன, கூறுவாயாக என்று சொல்லினர். மற்று : அசை. அவர் - நர நாராயணர். சொற்ற - சொல்லிய. நும் அருளைப் பெற்றேன் வேறு பேறு என் என ; பேறு - பாக்கியம். என் - என்ன இருக்கிறது. நர நாராயணரது தாளை இறைஞ்சினன்.

4867. கடையுறு - ஊழியின் முடிவில் உண்டாகின்ற. நறு - தேன். நறு மடை திறந்து ஒழுகுகின்ற. தொடையலிர் : நர நாராயணரை ; விளி. தொடையல் - மாலை. அவர் - நர நாராயணர்.

4868. புவிமகள் - பூமிதேவி. விரை - வாசனை. கற்பகச் சோலையிடத்துக் கிளியைப் போலத் தோன்றி. புயத்தனை - திருமாலை, வைகிய காலை - தங்கிய போது.

4869. வெடிப்பவான் முகடுமண் சுமந்த வீங்கெழிற்
படத்தவா ளரவமும் பதைப தைப்பமீத்
தடித்தொளி திசைதிசை தவழச் சூழ்ந்தெழுந்
திடித்ததிர் கருமுகி லேழும் பெய்தவால். (உக)

4870. செறிகதிர் மதிவலந் திரிய மாநிலம்
மறிதர வானக மடங்க வெற்புவேர்
பறிதர வுயிரெலா மிறந்து பாழ்பட
எறிதிரைக் கருங்கட லேழுங் கோத்தவே. (உஉ)

4871. மருவரு நற்றவ மார்க்கண் டேயன்மற்
றொருவனுங் குறுபொரு ளொன்றுங் கண்டிலன்
வெருவர வெளிமுக டுடைய வீங்கிய
முரிதிரைக் கருங்கடல் வயிற்றுண் மூழ்குமால். (உங)

4872. எழுமெறி திரையொடு மெழுமெ ழுந்திடை
விழுமுரி திரையொடும் வீழும் வீழ்ந்துதன்
முழுவலி கெடவலை மொத்துண் டுள்ளழிந்
தழுமவன் மறுக்கம்யா ரறைய கிற்பரே. (உச)

4873. மழலையஞ் சுரும்பொடு வரிமி டற்றதேன்
உழுநறுந் துழாய்புனை யொருவ னவ்வழிப்
பழுமரப் பாசிலைப் பள்ளி மேற்பசுங்
குழவியாய்க் கண்வளர் கோல நோக்குமால். (உரு)

---

4869. வான்முகடு வெடிப்ப. படத்தையுடைய அரவம். மண்ணைச் சுமந்த அரவம். மீ - மேலே. தடித்து - மின்னல். முகிலேழும் - ஸப்த மேகமும்.

4870. கதிரும் மதியும் வலம் திரிய; கதிர் - சூரியன். மதி - சந்திரன். மறிதர - சுழல. வெற்பு - மலையின். வேர் பறிதா. கோத்த - கூடின.

4871. மார்க்கண்டேயனாகிய ஒருவன். வெருவர - அஞ்சும்படி. மூழ்கும் - மூழ்குவான்.

4872. திரையொடும் எழும் - அலையுடன் எழுவான். விழும் - விழுவான். அலையால் மொத்துண்டு. உள்ளழிந்து - மனம் வருந்தி. அழும் - அழுவான். மறுக்கம் - மனச்சுழற்சி.

4873. சுரும்பும் தேனும் உழுகின்ற துழாய். ஒருவன் - திருமால். பழுமரப் பாசிலைப் பள்ளிமேல் - ஆலமரத்தின் பசுமையான இலையாகிய படுக்கையின்மீது. குழவி - குழந்தை. கோலம் - அழகு. நோக்கும் - பார்ப்பான்,

4874. கரையழிந் தொழுகுமோர் கங்கை பூத்தமென்
முருகவிழ் சேயிதழ் முளரித் தாண்மலர்
இருகையி லெடுத்தணைத் திதழ்வைத் தங்ஙனம்
பெருவிர லமுதுணும் பெற்றி பார்க்குமால். (உசு)

4875. அகலும்வக் தணுகுநல் லங்கை பற்றிடும்
நகுதரு சேயிதழ் நளினம் பூத்ததோர்
முகிலிளங் கன்றெனக் கிடந்த முன்னவன்
புகலரு வயிற்றிடைப் புகுமற் றென்பவே. (உஎ)

4876. மல்லலந் துழாயவன் வயிற்றி லோர்புடை
பல்லுயிர்ப் பகுதியும் பாவை ஞாலமும்
செல்லொடு மதிதவழ் செம்பொற் குன்றமும்
கல்லென வதிர்கருங் கடலுங் காணுமால். (உஅ)

4877. இந்திரன் முதலிய ரிருந்த வத்தினர்
சந்திர மௌலிசெஞ் சலச மேலவன்
கொந்தவிழ் துளவணி கொற்ற வாழியான்
முந்தகட் டொருபுடை மொய்ப்பக் காணுமால். (உகூ)

4878. நண்ணிமுன் னிருந்துயர் நற்ற வம்புரி
அண்ணலுங் கடவுளாற் றடைக ரைப்புறம்
கண்ணனைக் குளிர்ப்புறக் காணுங் கண்டுவந்
தெண்ணருங் கற்பமாங் கினிதி ருக்குமால். (ங0)

---

4874. கங்கையைப் பூத்த தாளாகிய மலரை. இதழ் வைத்து உதட்டில் வைத்து. விரலிடத்து அமுதை உண்ணும். பெற்றி - தன்மையை.

4875. நகுதரு - ஒளி விடுகின்ற. நளினம் - தாமரையை. முகிலிளங்கன்று திருமாலுக்கு உவமை. முன்னவன் - திருமாலின்.

4876. துழாயவன் - திருமாலினுடைய. புடை - பக்கம். ஞாலம் - பூமி. செல் - மேகம். கல்லென : ஒலிக் குறிப்பு.

4877. தவத்தினர் - முனிவர், சந்திரமௌலி - சிவபெருமான். செஞ்சலச மேலவன் - செந்தாமரையிலுள்ள பிரமன். ஆழியான் - திருமால். அகட்டு - வயிற்றில். மொய்ப்ப - செறிந்திருக்க.

4878. அண்ணல் - மார்க்கண்டேயன். கடவுளாறு - பூம்பத்திரை. முன் இருந்து தவம்புரிந்த ஆற்றின் கரைப்புறத்தில். காணும் - பார்ப்பான்.

4879. இந்நிலை நிகழ்வுழி யெரிபொன் னாழியான்
மன்னிய மாயையை வல்லை மாற்றலும்
அந்நிலை காண்கில னம்ம வோவென
மெய்ந்நிலை வேதியன் வியப்புற் றானரோ. (௩௧)

4880. உடைத்தவெண் டிரையிடை யொளிர்பொற் கொம்புபோல்
பொடித்தவ ளிளமுலை பொரவு டைந்தலர்
மடற்பசுந் தண்டுழாய் மாயன் மாயையார்
கடக்குந ரென்றுளங் கனிய வேத்தினான். (௩௨)

4881. புரியுமாங் கவன்றவ நோக்கிப் பொன்பிறழ்
வரைமகள் வழுத்தலும் வாம ளித்திட
விரிதலை விசும்பிடை விடையி வர்ந்துலாம்
எரிமரு ளீர்ஞ்சடை யிறைவ னெய்தினான். (௩௩)

4882. பிறைபொழி யிளநிலாப் பெருகு செஞ்சடை
இறைவன்வந் திறுத்தலும் யாதுந் தேர்ந்திலான்
நிறைதவ னிருந்துழி நிலவு வான்பொருப்
புறைபவன் மற்றவ னுளத்தொ டுற்றனன். (௩௪)

4883. மன்னிய வலம்புரித் தடக்கை மாயனை
உன்னின னிருந்தநல் லுணர்வி னானிஃ
தென்னென விழித்தலு மிமய மால்வரைக்
கன்னியோர் பாகனைக் கண்டி றைஞ்சினான். (௩௫)

---

4879. ஆழியான் - திருமால். வல்லை - விரைவில். அம்ம, ஓ : ஆச்சரியக் குறிப்பு. வேதியன் - மார்க்கண்டேயன்.

4880. திரையிடை - கடலின் அலையிடத்து. பொடித்தவள் - தோன்றியவளாகிய இலக்குமியின். மாயன் - திருமாலுடைய. மாயையை யார் கடக்குநர்.

4881. அவன் - மார்க்கண்டேயனுடைய. பொன் பிறழ் வரையின் மகள் - பார்வதி. வாமளித்திடும்படி வழுத்தலும். விடை இவர்ந்து - காளையின் மீதேறி. எரிமருளீர்ஞ்சடை இறைவன் - தீயை ஒத்த, குளிர்ந்த சடையையுடைய சிவபெருமான்.

4882. இறைவன் - சிவபெருமான். இறுத்தலும் - தங்கியவுடன். தேர்ந்திலான் - அறியானாய். தவன் - மார்க்கண்டேயன். பொருப்பு உறைபவன் - சிவபெருமான். அவன் உளத்தொடு-மார்க்கண்டேயன் உள்ளத்தில்.

4883. மாயனை - திருமாலை. உன்னினன் இருந்த நல் உணர்வினான் - நினைத்திருந்த மார்க்கண்டேயன். என் என - என்ன காரணமென்று, கன்னி - பார்வதி. பாகனை - சிவபெருமானை.

4884. வேறலே மாயனு நாமும் வேட்டதென்
ஆறறி யந்தண வென்ன நின்னருட்
பேறலான் மற்றுநான் பெறுவ தென்னெனத்
தேறுநீர் தவழ்சடைச் செல்வன் கூறுவான். (௩௬)

4885. இறப்பொடு நிகழ்வெதி ரென்னு மும்மையாம்
சிறப்புறு காலநல் லறிவுஞ் சேர்குதி
அறப்பெருந் துணையெனு மன்ப நின்புகழ்
மறப்பற நிச்சலு முலகின் வைகுமால். (௩௭)

4886. சொன்னலம் பெறுமொரு புராணஞ் சொல்லுதி
என்னனு மடிமல ரிறைஞ்சி யேத்திட
மின்னவிர் சடைமுடி விமல னேகினன்
மன்னினன் றவத்தொடு மார்க்கண் டேயனே. (௩௮)

---

4884. மாயமும் நானும் வேறலேம்; வேட்டது - விரும்பியது. ஆறறியந்தண: விளி. ஆறு - ஆறு வேதாங்கங்கள். என்ன - என்று சிவபெருமான் கூற. நினது அருட்பேறலால் நான் பெறுவது என். என - என்று கூற. செல்வன் - சிவபெருமான்.

4885. மும்மையாம் - மூன்றாகிய. அறிவு - மூன்று காலத்தையும் அறியும் அறிவு. சேர்குதி - அடைவாய். அறப்பெருந் துணையெனும் அன்ப - தருமத்திற்குப் பெரிய துணையென்று கூறத்தக்க அன்பனே; விளி. மறப்பற - மறத்தல் இல்லாமல். நிச்சலும் - தினந்தோறும்.

4886. சொல்லுதி - சொல்வாயாக. என்னலும் - என்று சிவபெருமான் கூறுதலும். மார்க்கண்டேயன் ஏத்திட. விமலன் - சிவபெருமான். மார்க்கண்டேயன் தவத்தில் மன்னினன்.



# 8. சூரியன்கதி உரைத்த அத்தியாயம்.

கலிவிருத்தம்.

4887. மையறு தவத்தர்முதன் மற்றெழு வகைத்தாய்ச்
செய்யகதி ரோன்வருதல் செப்பினை சுருக்கி
வெய்யவன் விபூதிகள் விரித்துரைசெய் யென்னும்
துய்யமுனி வர்க்குரிய சூதமுனி சொல்வான். (க)

4888. ஏழ்வகையர் யாவரொனி னெவ்வமறு மான்மாத்
தாழ்விலுரு வாய்வட தடஞ்சிலையை நாளும்
சூழ்வரு பதங்கனரு டுன்னுமுனி வோர்கள்
கேழ்விரவு பூணொளி கிளைத்தவர மாதர். (உ)

4889. காமரிசை யாழுடையர் கந்திருவர் நாகர்
நாமமுறி ராக்கதர் நவின்றிடு மியக்கர்
ஏமமுறு மிவ்வகைய ரெய்துமதி தோறும்
வாமமொடு மேவுவர் வகைக்கொரு வராயே. (ந)

4890 எல்லவர்கள் பன்னிருவ ரென்றொருவர் யாரும்
சொல்லும்வகை யெவ்வகை யெனிற்சுடர்செய் வெய்யோன்
ஒல்லும்வகை தானொருவ னாகிமதி தோறும்
நல்லபெயர் வேறுற நயந்துலவு மாதோ. (ச)

---

4887. தவத்தவர் - முனிவர். கதிரோன் - சூரியன். சுருக்கிச் செப்பினை. விபூதிகள் - விளையாடல்கள். உரைசெய் - கூறுவாயாக. என்னும் முனிவர்க்கு.

4888. எவ்வம் அறும் - குற்றம் நீங்கிய. ஆன்மா - ஆத்மா. வட தடஞ்சிலையை - மேரு மலையை. பதங்கன் - சூரியன். அருள் துன்னு - அருள் பொருந்திய. கேழ் - ஒளி. கிளைத்த - தோன்றிய. அர மாதர் - தெய்வ மங்கையர்.

4889. காமரிசை - விருப்பம் மருவிய இசையையுடைய. யாழுடைய ராகிய கந்திருவர். நாகர் - பவணலோகத்தவர். நாமம் - அச்சம்; அம், சாரியை. இயக்கர் - யக்ஷர். ஏமம் - பாதுகாப்பு. மதி - மாதம். வாமம் - அழகு.

4890. எல்லவர் - சூரியர். ஒருவரையே பன்னிருவரென்று யாரும் சொல்லும் வகை எவ்வகை எனின். வெய்யோன் - சூரியன். ஒல்லும் வகை - முடியும் வகையில். மதி - மாதம்.

4891. மீதார் செழும்பருதி மேட மதி மேவித்
தாதா வெனும்பெயர் தழைத்துலவு மந்நாள்
போதா ரயன்றரு புலத்தியனு மானேர்
மாதா மெனச்சொல்கிரு தத்தலையு மாதோ. (ரு)

4892. சுந்தரம் விளங்கவரு தும்புரு வெனச்சொல்
கந்திருவ னும்மெழில் கலந்தபில மீது
வந்தபணி நாதனெனும் வாசுகியும் வீற்றால்
எந்தநில மும்புகழு மேதியென வேசொல். (சு)

கலிநிலைத்துறை.

4893. கேடி லாதசி ராக்கனு மாகிருத் தென்னும்
ஆடன் மேவிய வியக்கனுந் தந்தொழி லாற்றி
நீடு தேரொடும் பொருந்துவர் நிகழ்த்திவை காசி
பீடு சேர்பெயர்த் திங்களில் வருதல்பே சுதுமால். (எ)

4894. அரிய மாவெனும் பெயர்கதி ரோனடைந் தியங்கும்
தெரியு நான்மறைப் புலகனுஞ் சிறுநுதற் கருங்கட்
புரையி லாதநல் லெழிற்புகழ்ப் புஞ்சிகத் தலையும்
உரிய யாழ்பயி னாத னெனுமுரா வோனும். (அ)

---

4891. மீதார் - மேலே பொருந்திய. பருதி - சூரியன். மேடமதி - சித்திரை மாதத்தில். தாதா : சூரியன் பெயர்களுள் ஒன்று. போது ஆர் அயன் தரு - தாமரையில் பொருந்திய பிரமன் பெற்ற. மானேர் மாதாம் எனச் சொல் - மானை ஒத்த சாயலையுடைய பெண் என்று சொல்லுகின்ற. கிருதத்தலை - கிருதஸ்தலை.

4892. சுந்தரம் - அழகு. பிலம் - குகை. பணி நாதன் எனும் வாசுகி - பாம்புகளுக்குத் தலைவனான வாசுகி. வீற்றால் - பெருமையால். எதி - ஹேதி; ஓர் அரக்கன்.

4893. மாகிருத்து - மஹாகிரது; ரதகிருத் என்னும் மூதனூல். ஆடல் - வெற்றி. பீடு - பெருமை. திங்கள் - மாதம்.

4894. அரியமா : சூரியன் பெயர்களுள் ஒன்று. இயங்கும் - இயங்குவான். புலகன் : ஓர் முனிவன். புரை - குற்றம். புஞ்சிகத்தலை - புஞ்சிஸ்தலை. உரவோன் - அறிவுடையவன்-

4895. அச்ச மாரயில் சேர்பிர கேதியென் றறையும்
செச்சை யார்புயத் தாக்கனு மூரகரிற் சிறந்த
கச்ச நீரனு மோகனு மியக்கனுங் கலந்து
பச்சை மாப்பரித் தேரின னெடும்படர் குவரால். (கூ)

4896. ஆனித் திங்களின் மித்திர னெனும்பெய ரணிசேர்
பானுப் பெற்றிடு மத்திரி யெனப்பகர் தவனும்
வானத் துற்றுறை மேனகை யெனும்பெயர் மாதும்
தேனுற் றின்னிசை முரன்றதார்ச் சிறந்தக வாவும். (க0)

4897. தயங்கு நன்மணி யுரகரிற் றக்கக னும்வான்
இயங்க ரக்கரிற் பவுருடே யன்னெனு மிறையும்
வயஞ்செய் தோங்கிர தச்சுவ னப்பெயர் வாய்ந்த
வியந்த சீருடை யியக்கனு மேவுவ ரன்றே. (கக)

4898. ஆடித் திங்களின் வருணனென் பெயர்கதி ரடையும்
நாடித் தொன்மறை நவிற்றுறு வசிட்டனு நதிபோல்
ஓடித் தண்மதுப் பாய்குழ லம்பையு முவப்பால்
பாடிப் பண்பயி லூகுவென் பெயர்படைத் தவனும். (கஉ)

4899. நாகர் தங்களிற் சுக்கிர னெனநவில் பவனும்
சேகில் சித்திரச் சுவனனுச் செப்பிராக் கதனும்
வேக வெங்களி றெனுஞ்சகச் சன்னிய வேந்தாம்
மாக மன்னிய வியக்கனு மருவுவர் மகிழ்ந்தே. (கங)

---

4895 அச்சமார் - பயம் பொருந்திய. செச்சை - சந்தனப் பூச்சு. உரகரில் - நாகர்களில். கச்சநீரன் : நாகன் பெயர். மோகன் : அதௌஜஸ் என்பது முதனூல். தேரினன் - சூரியன்.

4896. பானு - சூரியன். தவன் - முனிவன். கவா - ஹஹா ; கந்திரு வன் பெயர்.

4897. உரகரில் - நாகர்களில். தக்ககன் - தக்ஷகன். வானில் இயங்குகின்ற அரக்கரில். பவுருடேயன் - பௌருஷேயன். வயம் - வெற்றி. இரதச்சுவன் : இயக்கன்.

4898. வருணன் : சூரியன் பெயர் மறையை நாடி நவிற்றுறும் வசிட்டன். மது - தேன். பண்பயில் - இராகத்தைப் பயில்கின்ற. ஊகு - ஹூ ஹூ ; கந்தருவன்.

4899. சித்திரச்சுவனென்று செப்புகின்ற இராக்கதன். சேகில் - குற்றமில்லாத. களிறெனும் - யானையென்று கூறுகின்ற. மாகம் - ஆகாயம்,

4900. சிங்க மாமதி யிந்திர னெனக்கதிர் சேரும்
அங்கி ராவெனு மருந்தவக் கிழவனு மறலார்
மங்கு னேர்குழற் பிரமிலோ சைப்பெயர் மாதும்
பொங்கி ராகயாழ் விச்சுவா வசுப்புர வலனும். (கச)

4901. எழினி றைந்தலர் பத்திரப் பெயரா விறையும்
மொழிசெய் கின்றவெவ் வரக்கிற் சரியனு முருக்கின்
தழைசெய் கின்றதா ரியக்கிற் சுரோதனுந் தத்தம்
தொழில்செய் கின்றன ராய்ச்சுட ரோனொடுஞ் சுழல்வார். ()

4902. கன்னி மாமதி விச்சுவா வெனும்பெயர் கதிரோன்
மன்னி யேகுவன் மாதவப் பிருகுவு மலர்வாழ்
அன்ன நேர்நடை யநுமிலோ சைப்பெய ரணங்கும்
நன்னர் யாழ்பயி லுக்கிர சேனநல் லோனும். (கசு)

4903. சங்க பாலனு மூரகர்தந் தலைவனுந் தருக்கார்
வெங்க ணுன்வியாக் கிரனெனு மரக்கர்சொல் வேந்தும்
துங்க மேயவா சாரண னென்றுசொல் சுடர்சேர்
திங்கள் வாண்முகத் தியக்கனுஞ் செய்வர்தந் தொழிலே. (கள)

4904. நல்ல செங்கதிர் நவிறுவட் டாவெனு நாமம்
மல்ல லந்துலா மதியினிற் பெற்றெழும் வானோர்
சொல்லு றுஞ்சம தங்கியென் றுரைதொழு குலனும்
அல்லு றுங்குழற் றிலோத்தமை யாமெனு மணங்கும். (கஅ)

---

4900. சிங்கமாமதி - ஆவணி மாதத்தில். அங்கிரா - ஆங்கிரஸ். அறலார் மங்குல் - நீருண்ட மேகம். மங்குல் - மேகம் பிரமிலோசை - பிரம்லோசை. புரவலன் - அரசன்.

4901 பத்திரன் - ஏலாபத்திரன்; நாகருள் ஒருவன். அரவிறை - பாம்புகளுக்கரசன். மொழிசெய்கின்ற - சொல்லப்பட்ட. சரியன் - சர்யன். முருக்கின் - முள்ளு முருங்கையின். தார் - மாலை. சுரோதன் - ச்ரோதா. சுடரோன் - சூரியன்.

4902. கன்னி மாமதி - புரட்டாசி மாதம். மன்னி - பொருந்தி. அநுமிலோசை: அரம்பை. நன்னர் யாழ் - நன்மை பொருந்திய யாழ். உக்கிரசேனன்: கந்திருவன்.

4903. தருக்கார் - செருக்குப் பொருந்திய. வெங்கணுனாகிய வியாக்கிரன். அரக்கராகச் சொல்லப்படுகின்ற வேந்து. ஆசாரணன்: ஓர் இயக்கன்.

4904. கதிர் - சூரியன். நவில்கின்ற துவட்டாவெனும் நாமம் பெற்றெழும். துலாமதி - ஐப்பசி மாதம். தவன் - முனிவன். அல் - கருமை நிறம்,

4905. இசைவ டித்தயாழ்த் திருதராட் டிரப்பெய ரியைந்த
விசைய முற்றெளிர் விஞ்சையர்க் கிதமுறு வேந்தும்
வசைய கற்றிய கம்பளாச் சுவனென வழங்கும்
திசைப ரப்பொளிச் செம்மணி சேரா வாசும். (கக)

4906. ஏத நீங்கிய வாக்கரி லெறுழ்வலிப் பிரமா
பேத னும்பெயர் பெற்றிடும் புகழ்ப்பெரி யோனும்
தாது லாந்தொடை யியக்கரிற் றனிச்சத சித்தென்
றோது நாமனுந் தந்தொழி லியற்றுவ ருவந்தே. (உ0)

4907. விண்டு வாங்கதிர் விருச்சிக மதியத்தின் மேவும்
பண்டை நான்மறைக் கோசிக முனிவனும் பண்சேர்
தொண்டை வாயின ளரம்பையுந் துலங்குவிஞ் சையரில்
அண்ட மீதுயர் சூரிய வற்சனு மாசும். (உக)

4908. அரவ வேந்தரி லச்சுவ தானுநல் லணிதார்
விரவு தோண்மகா பேதனும் விறலிராக் கதனும்
பாவு சத்திய சித்தெனு மியக்கர்தம் பதியும்
இரவி யோடுதத் தந்தொழி லியற்றியே குவரால். (உஉ)

4909. அருண வெங்கதிர் தனுமதி யஞ்சுவா கும்பேர்
கருணை தங்கிய வருமறை தெளிந்தகா சிபனும்
தருண வெம்முலை யுருப்பசி யெனுந்தளி ரியலும்
இருந ரம்புள ரிசைருத சேனனென் பவனும். (உங)

---

4905. வடித்த - பயிற்றிய. திருதராட்டிரான் - திருதராஷ்டிரான்: ஒரு வித்யாதரான். விசையம் - வெற்றி. அரவரசு - பாம்புகளுக்கு அரசன்.
4906. எறுழ் வலி - மிக்க வன்மையையுடைய. பிரமாபேதன் - பிரஹ்மாபேதன். சதசித்: ஓர் இயக்கன்.

4907. விண்டு - விஷ்ணு; சூரியன் பெயர்களுள் ஒன்று. விருச்சிக மதியம் - கார்த்திகை மாதம். கோசிகன் - கௌசிகன்; விஸ்வாமித்திரர். பண் - இராகம். தொண்டைக் கனிபோன்ற வாயினள். சூரியவற்சன்: கந்திருவன் பெயர்.

4908. அச்சுவதரன் - அச்வதரன். மகாபேதன் - யாகத்தை விலக்குபவன்: அரக்கன் பெயர். இயக்கர்தம் பதி - யக்ஷர்களுடைய அரசன். இரவி - சூரியன்.

4909. அருண வெங்கதிர் - சிவந்த வெவ்விய சூரியன். தனுமதி - மார்கழி மாதம். அஞ்சுவா - அம் சுவா. தருணம் - இளமை. நரம்பு உளர் - வீணையின் நரம்புகளைத் தடவுகின்ற. ருதசேனன்; கந்தருவன் பெயர்.

4910. பணிக டம்மின்மா சங்கனென் பெயர்படைத் தவனும்
தணிவில் வித்தியுச் சத்துரு வெனும்பெயர் தழைந்த
இணையில் வெவ்விய வரக்கனுந் தாக்கிய னெனும்பேர்
அணியி லங்கிய வியக்கனு மாங்கியங் குவரால். (உச)

4911. மகர மென்றுசொல் வயங்கிய மதியின்மார்த் தாண்டன்
பகனெனும் பெயர் பெறுகுவன் பன்னுநான் மறைதேர்ந்
தகம கிழ்ந்தருந் தவஞ்செயு மாயுவு மயிலோ
டியல்ப யந்தகட் பூருவ சித்தியென் பவளும். (உரு)

4912. அரிட்ட நேமியாம் விஞ்சையர்க் கரசனு முடலம்
சுருட்ட ராவர சாயகார்க் கோடனுந் தொலையா
இருட்டி னேர்நிறப் பூற்சனு மிக்கவூ ருணனும்
உருட்டு நேமியொன் றுடையதே ரினனொடு முறுவார். (உசு)

4913. மாற்ற ருஞ்சுடர் வெய்யவன் கும்பமா மதியின்
போற்று கின்றபூ டாவெனும் பெயர்பொருந் துவனுல்
சீற்ற நீங்கிய கோதம னெனுஞ்செழுந் தவனும்
ஏற்ற நல்லெழில் சேர்கிரு தாசியென் பவளும். (உஎ)

4914. விஞ்சை வல்லவிண் ணவர்களிற் சுசேனனும் வேந்தும்
நஞ்சு மிழ்ந்தவாய் நாகரின் விறற்றநஞ் சயனும்
மஞ்செ னப்பொலி யரக்கரில் வாதனும் வனப்பார்
எஞ்ச லில்வலிச் சுருசியா மியக்கனு மியைவார். (உஅ)

---

4910. பணி - பாம்பு. மாசங்கன் - மஹா சங்கன். வித்தியுச்சத்துரு : அரக்கன் பெயர். இணையில் - ஒப்பில்லாத. தார்க்கியன் - தார்க்ஷியன்.

4911. மகர மதி - தை மாதம். மார்த்தாண்டன் - சூரியன். பகன் : சூரியன் பெயர்களுள் ஒன்று. ஆயு : முனிவன் பெயர். அயில் - வேல்; கண்ணுக்கு விசேடம். இகல் - மாறுபாடு.

4912. அரிட்ட நேமி - அரிஷ்ட நேமி. உடலத்தைச் சுருட்டுகின்ற அராவரசு. கார்க்கோடன் : ஒரு பாம்பின் பெயர். பூற்சன் : ஸ்பூர்ச்சன் என்னும் அரக்கன். ஊருணன் : ஓர் இயக்கன். தேரினன் - சூரியன்.

4913. கும்ப மதியில் - மாசி மாதத்தில். பூடா - பூஷா.

4914. விண்ணவர் - கந்தருவர். நாகரில் - பாம்புச் சாதியினரில், விறல் - வீரம். மஞ்சு - மேகம். வனப்பு - அழகு.

(பி - ம்.) 2. வீரநஞ்சயனும். 4. சதசிரசியக்கனும்.

4915. பானு வான்பிர சன்னிய னெனும்பெயர் பரித்து
மீன மாமதி மேவுவன் பாத்துவா சப்பேர்
ஞான மாதவ முனிவனு நவில்விசு வாசி
ஆன பூவையுஞ் சேனசித் தெனுமட லோனும். (உகூ)

4916. ஆடல் சேரயி ராவத னெனுமரா வாசும்
ஏடு லாந்தொடை யியக்கரில் வற்சனென் பவனும்
கேடி லாவலி யாக்கரிற் கிருதுவுங் கெழுமி
நீடு சூரியன் றேரோடு நிலவுவ ரன்றே. (௩0)

4917. இன்ன வாறெழு வகைக்குழு வாமுரு வெடுத்துப்
பன்னு நான்மறை காண்பரு மாயனும் பரமன்
மன்னு சீருல களிக்குவன் கதிரலான் மற்றைத்
துன்னு வோரிரு மூவர்தந் தொழில்களுந் தெரிப்பாம். (௩௧)

4918. மாய னுங்கதிர் வானவன் றிருமுனர் மருவித்
தூய நான்மறை சொல்லிநின் றிருந்தவர் துதிப்பார்
மேய சீரர மங்கையர் வானடம் விளைப்பார்
நேய மாயநல் விஞ்சைய ரின்னிசை நிறைப்பார். (௩௨)

---

4915. வான் - சிறந்த. பானு, பிரசன்னியன் என்னும் பெயரைப் பரித்து; பிரசன்னியன் - பிரஜன்யன்; பர்ஜன்யன் என்றும் கூறுவர். பரித்து - தாங்கி. மீனமாமதி - பங்குனி மாதம். விசுவாசி: அரம்பை. பூவை - ஈண்டுப் பெண். முதனூலில் விசுவன் என்ற வித்தியாதரனும் சேனஜித் என்ற அரம்பையும் கூறப்பட்டிருக்கின்றனர்.

4916. ஆடல் - வெற்றி. அயிராவதன்: பாம்பரசன். ஏடு - இதழ். தொடை - மாலை. கெழுமி - பொருந்தி.

(பி - ம்.) 2. வாசனென்பவனும்.

4917. எழு வகைக் குழு - சூரியன் முதலிய எழுவகைக் கூட்டம். பரமன் - திருமால். அளிக்குவன் - காப்பான். கதிரலால் - சூரியனை அல்லாமல். இரு மூவர் - முனிவர் முதலிய அறுவர். தெரிப்பாம் - விளக்குவாம்.

(பி - ம்.) 4. தொழில்களுஞ் சோறும்.

4918. மாயனும் கதிர் வானவன் - சூரிய தேவன். இருந்தவர் - பெருந்தவத்தையுடைய முனிவர். வான் நடம் - சிறந்த நாட்டியத்தை. நேயம் - அன்பு. விஞ்சையர் - கந்தருவர்.

4919. பகர்ந்த நாகாத் தேரினை முறைமுறை பரிப்பார்
புகழ்ந்தி ராக்கதர் மாதவன் வந்திதம் புகல்வார்
திகழ்ந்த பூணணி வெற்பெனத் திரள்புயத் தியக்கர்
மகிழ்ந்து பற்றுவா ரிரதமுன் வனைமணித் தாம்பு. (௩௩)

4920. தழைத்த பேரொளி நவமணி தமனியத் தழுத்தி
இழைத்த தேர்மிசைப் பானுவுக் கெதிர்முக மாகி
வழுத்து வார்புகழ் வாலகில் லியர்மனத் தன்பு
பழுத்த சீர்பெறு மறுபதி னுயிரர் பணிந்தே. (௩௪)

4921. இந்த வெங்கதிர்க் கடவுளே முதலெழு வரையும்
உந்தி யொன்றுடைத் தோவ னுதயமாங் காலை
அந்தி யென்றுசொல் பொழுதினு நிச்சலு மன்பால்
சிந்தை செய்திடிற் றினஞ்செயும் பழுதினந் தீரும். (௩௫)

---

4919. நாகர் அத்தேரினைப் பரிப்பார்; பரிப்பார் - தாங்குவார். மாதவன் வந்திதம் - திருமால் துதியை. இயக்கர், இரதத்தின் முன் வனைந்த தாம்பைப் பற்றுவார்; தாம்பு - கயிறு.

(பி - ம்.) 3. புயத்தாக்கர்.

4920. தமனியம் - பொன். பானு - சூரியன். வாலகில்லியர் பதினுயிரர் வழுத்துவார்.

4921. கதிர்க் கடவுள் - சூரியன். உந்தியொன்றில் உடைய தேரவன்; சூரிய நாராயணன்; உந்தி - தேருருளை எனலுமாம்; (வி. பா. பதின்மூன்றாம். 12.) காலையிலும் அந்தியிலும், நிச்சலும்-நாள்தோறும். சிந்தை செய்திடின் - மனத்தால் நினைத்தால். பழுது இனம் - குற்றங்களின் கூட்டம்.



# 9. பாயிரம் உரைத்த அத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

4922. தாரணி மாதுஞ் செய்ய தாமரை மாதுஞ் சேரும்
காரணி மேனி நம்மான் கலைகளின் கலைக ளாலே
சீரணி வயிரா சப்பேர் திகழுரு வாதி யான
பேரணி வடிவ மாகிப் பெரிதருள் புரிந்த வாறும். (க)

4923. நாரத முனிதன் றோற்ற நலம்பெற வுரைத்த வாறும்
பாரத ராய வைவர் பார்புரந் தோம்பு மாறும்
மாரதர் களத்தின் மாய மண்டமர் முடித்த மாயன்
நீரதிர் பரவை சூழு நெடுநக ரடைந்த வாறும். (உ)

4924. மாற்றருஞ் சிறப்பு வாய்ந்த மாலவ னுவி காப்ப
வேற்றிறல் விண்டு ராதன் விளங்கிவந் துதித்த வாறும்
பாற்றினஞ் சுழலுங் கூர்வாட் பாண்டவர் வனத்தி னேகிப்
போற்றுறும் பெருமை சாலும் பொன்னுல கடைந்த வாறும். ()

4925. விளம்பெழில் விண்டு ராதன் வியன்கலி செற்ற வாறும்.
வளர்திகழ் வனத்தி னன்னோன் மருவிவெஞ் சாப மேவித்
தெளிந்துறு முனிவர் சூழத் திருநதிக் கங்கை யெய்திக்
களங்கனி வண்ணன் றன்னைக் கருதின னிருந்த வாறும். (ச)

---

4922. தாரணிமாது - பூமிதேவி. தாமரைமாது - திருமகள். கார் அணி - மேகத்தை ஒத்த. நம்மான் - திருமாலுடைய. கலை - அம்சம். வயிராசப் பேர் திகழ் உரு - வயிராஜ உரு ; விராட் புருஷனுடைய வடிவம் ; (1. 1. ஆம் அத்.) படிவம் - வடிவம்.

4923. நாரத முனிவன் தோற்றம். (1. 2-ஆம் அத்.) பாரதராய ஐவர் - பாண்டவரைவர். ஐவர் பார்புரந்தது : (1 : 3-ஆம்; அத்.) மாரதர் - மஹாரதர். மண்டமர் - மிக்கபோர். நகர் - துவரை. துவரையடைந்தது. (1. 4-ஆம் அத்.)

4924. மாலவன் - திருமால். விண்டுராதன் உதித்தது; (1. 5-ஆம். அத்.) பாற்றினம் - பருந்தின் கூட்டம். பாண்டவர் பொன்னுலகு அடைந்தது ; (1. 6-ஆம் அத்.)

4925. விண்டுராதன் கலியைச் செற்றது ; (1. 7-ஆம் அத்.) அன்னோன் - பரிட்சித்து. பரிட்சித்துச் சாபமுற்றது ; (1. 8-ஆம் அத்.) களங்கனி வண்ணன் - திருமால்.

4926. தூயநல் லறிவு வாய்ந்த சுகமுனி யரசு கூற
மாயவ னிலைமை யெல்லா மன்னவன் கேட்ட வாறும்
வேயிசை வடித்தோன் பாதம் விரும்பியன் பியற்று மாறும்
மேயதத் துவங்க ளெல்லா மியன்முறை யுதித்த வாறும். (ரு)

4927. மணிநிற மாய னுந்தி மலரய னுதித்த வாறும்
அணுமுத லாய காலத் தளவையை யறைந்த வாறும்
இணையறு சனக னாதி யிருந்தவர் பிறந்த வாறும்
பணைமருப் புடையாண் கேழல் பாரெடுத் தளித்த வாறும். (சு)

4928. அருத்தியுற் றுறையும் வானோ ராதிய ருதித்த வாறும்
கருத்தமன் மாய னாய கபிலனை யளித்த வாறும்
திருத்திய யோக நன்னூ றெரித்தருள் கபிலன் சீர்சால்
உருத்திக ழன்னை யுள்ள மொளிபெறத் தெருட்டு மாறும். (எ)

4929. மரீசியே முதலி னோர்தம் மரபினை யிசைத்த வாறும்
அராவணி சடிலன் றக்க னருமக மழித்த வாறும்
நராதிபன் றுருவ னென்பா னற்பத மடைந்த வாறும்
தராபதி பிருது மன்னன் சரித்திரந் தெரித்த வாறும். (அ)

---

4926. முனியரசு - முனிகள் தலைவன்; என்றது சுகனை. மன்னவன் - பரிட்சித்து. மாயவன் நிலை கேட்டது; (2. 1-ஆம் அத்.) வடித்தோன் - பயிற்றியவன். அன்பு இயற்றுமாறு; (2. 2-ஆம் அத்.) தத்துவங்கள் உதித்தவாறு; (2. 3. 4; 3. 1-ஆம் அத்.)

4927. மாயனுடைய உந்தியில். அயன் - பிரமன். அயன் உதித்தவாறு; 3. 2-ஆம் அத். காலத்தளவை அறைந்தது; (3. 3-ஆம் அத்.) இணையறு - ஒப்பற்ற. சனகனாதி முனிவர் பிறந்தவாறு; (3. 4-ஆம் அத்.) பணை - பெருமை. ஆண் கேழல் - ஆண் பன்றி. வராகாவதார மெடுத்தது; (3. 5-ஆம். அத்.)

4928. அருத்தி - ஆசை. வானோராதியருதித்தது; (3. 6-ஆம் அத்.) கருத்தமன் கபிலனை அளித்தது; (3. 7-ஆம் அத்.) யோகம் - சாங்கிய யோகம். தெரித்து - விளக்கி. உருதிகழ் - அழகு விளங்குகின்ற. அன்னை - தேவஹூதி. தெருட்டல் - தெளிவித்தல். கபிலன் தெருட்டியது; (3. 8-ஆம் அத்.)

4929. மரீசி முதலினோர் மரபு; (4. 1-ஆம் அத்.) சடிலன் - சிவபெருமான். சடிலன் தக்கன் மகம் அழித்தது; (4. 2-ஆம் அத்.) துருவன் பதமடைந்தது; (4. 3-ஆம் அத்.) பிருதுவின் சரித்திரம்; (4. 4-ஆம் அத்.)

4930. பிரசநாண் மாலை வேணேர் பிராசிகன் பிருகச் சாய
அரசர்தா மூாவிர்த் தானி யறிவுற வறைந்த வாறும்
புரசைமா களிநல் யானைப் புரவல னன்னே னீன்ற
தரைசொல்சீர்ப் பதின்ம ராயோர் தக்கனைத் தந்த வாறும். ()

4931. தோடவி ழலங்கன் மாலைச் சுவாயம்பு மனுமு னீன்ற
ஆடலஞ் சிலைக்கை மைந்த னவனியேழ் காத்த வாறும்
நாடகம் புரந்த செங்கோ னரபதி பரதன் கான்போய்ப்
பாடகத் தொடர்ச்சி போன்ற பழவினை பாற்று மாறும். (க0)

4932. நாவலந் தீவின் வண்மை நலம்பெற நவின்ற வாறும்
காவலர் காத்த தீவேழ் கடலள வுரைத்த வாறும்
தாவருந் தபனன் செல்லுந் தன்மைமற் றிசைத்த வாறும்
பூவுல காதி மேலேழ் பொருந்துல கிசைத்த வாறும். (கக)

4933. கீழுல குரைத்த வாறுங் கிளர்நர கிசைத்த வாறும்
ஆழிகைத் தரித்தோன் பேர்கூ றசாமிள னுயர்ந்த வாறும்
தாழ்பெறு மகில ரூபன் றலைபெறு குரவ னாக
ஏழுயர் களிநல் யானை யிந்திரன டைந்த வாறும். (கஉ)

---

4930. பிரசம் - தேன்; வண்டு எனலுமாம். வேள் நேர் - முருகனை ஒத்த. பிராசிகன் பிருகச் - பிராசீன பரிஹிஸ். பிராசிகன் பிருகச் ஆவிர்த்தானியின் கதையை அறிவுற அறைந்தது; (4. 5-ஆம் அத்.) புரசை - கழுத்திடுகயிறு. புரவலனாகிய அன்னேன் - பிராசீன பரிஹிஸ். ஆவிர்த்தானி. பதின்மர் தக்கனைத் தந்தது; (4. 6-ஆம் அத்.)

4931. சுவாயம்பு மனுவின் மைந்தன் அவனியைக் காத்தது; (5. 1-ஆம் அத்.) மைந்தன்- பிரிய விரதன். நாடகம் - நாட்டிடத்தை. புரந்த - காத்த. கான் - காடு. பாடகம் - ஒருவகைக் காலணி. பாற்றுதல் - அழித்தல். பரதன் பழவினை பாற்றுமாறு; (5. 2-ஆம் அத்.)

4932. நாவலந் தீவின் வண்மை நவின்றவாறு; (5. 3-ஆம் அத்.) காவலர் - அரசர். தீவு ஏழு கடலேழு அளவுரைத்தது; (5. 4-ஆம் அத்.) தபனன் - சூரியன். தன்மை இசைத்தது; (5. 5-ஆம் அத்.) மேலேழ் உலகு இசைத்தவாறு; (5. 6-ஆம் அத்.)

4933. கீழேழ் உலகு உரைத்தவாறு; (5. 7-ஆம் அத்.) அசாமிளன் உயர்ந்தவாறு; (6. 1-ஆம் அத்.) அகிலரூபன் - விசுவரூபன். இந்திரன் அகிலரூபனைக் குரவனாகக் கொண்டது; (6. 3-ஆம் அத்.) இதற்கு முன், தக்கன் படைப்புரைத்த அத்தியாயத்தைப்பற்றிக் கூறவில்லை; விடுபட்டுள்ளது.

4934. கருத்துறீஇக் காக்கு மாயன் கவசநன் கிசைத்த வாறும்
உருத்தனன் வரவே தானு முரைபெறு மகில ரூபன்
விருத்திரா சுரனென் போரை வீட்டின னளித்த வாறும்
அருத்திசெய் மறைவ லோரவ் வல்வினை யகற்று மாறும். (கங)

4935. சித்திர கேது மன்னன் செய்திற னுரைத்த வாறும்
மத்தவெங் களிறு போலும் மருத்துவ ராதி யாய
வித்தகர் பிறந்த வாறும் விழைபுஞ்ச வனமென் றோதும்
உத்தம விரத மன்பா லுஞற்றுத லுரைத்த வாறும். (கச)

4936. திறற்சிசு பாலன் வீடு சேர்ந்தமை தெரித்த வாறும்
மறக்கரி போன்ற வெற்றி மருவுவாட் கனகன் மார்வம்
அறத்துணை மாய னுய வாளரி கீண்ட வாறும்
உறத்தகு வருண நான்கோ ருஞற்றற முரைத்த வாறும். (கரு)

4937. இல்லற மியற்று வோர்பே றென்னெனுந் தருமற் கன்பால்
நல்லன கதியுண் டென்று நாரத னவின்ற வாறும்
மல்லலஞ் சிறப்பு வாய்ந்த மனுக்களை மனுக்கள் காலத்
தொல்லுணர் தன்மை மாய னுதிப்பதை யுரைத்த வாறும். (கசூ)

4938.. களிற்றரா சுரைப்ப வாவி காத்துமா லளித்த வாறும்
துளித்திசை யுத்தி வெற்பாற் சுதையெழக் கடைந்து விண்ணோர்க்

4934. மாயன் கவசம் இசைத்தது; (6. 4-ஆம் அத்.) உருத்தனன் - கோபித்தவனாய். தானும் - இந்திரனும். அகிலரூபனையும் விருத்திராசுரன் முதலியோரையும் வீட்டியது; (6. 5-ஆம் அத்,) வல்வினை - விருத்திஹத்தியாகிய பாபம். இந்திரனது வல்வினை அகற்றியது; (6. 6-ஆம் அத்.)

4935. சித்திரகேது செய்திறனுரைத்தது; (6. 7-ஆம் அத்.) மருத்துவ ராதியர் பிறந்தது; (6. 8-ஆம் அத்.) புஞ்சவன விரதம் உஞற்றுதல்; (6. 9-ஆம் அத்.)

4936. சிசுபாலன் வீடு சேர்ந்தது; (7. 1-ஆம் அத்.) மறக்கரி - வீரத்தையுடைய யானை. கனகன் - இரணியனுடைய. அறத்திற்குத் துணையாய மாயன்: திருமால். ஆளரி - நரசிங்கம். கனகனைக் கீண்டது; (7. 2-ஆம் அத்.) வருணம் நான்கு உரைத்தது; (7. 3-ஆம் அத்.)

4937. பேறு - பயன். என் - என்ன. கதி - மோட்சம். இல்லறத்தோர் கதி நவின்றது; (7. 4-ஆம் அத்.) மனுக்களை உரைத்தவாறு; (8. 1-ஆம் அத்.)

4938. களிற்றரசு - கஜேந்திரன். ஆவி - உயிரை. களிற்றரசை அளித்தது; (8. 2-ஆம் அத்.) அத்தி - கடல். சுதை - அமுதம். அத்தியை வெற்பால் கடைந்தது; (8. 3-ஆம் அத்.) அளிக்கடல் அன்ன மாயன் - கருணை

களிக்கட லன்ன மாய னமுதணு வளித்த வாறும்
ஒளிப்புற வவுணர் போரி லும்பர்வென் றுயர்ந்த வாறும் (கள)

4939. பாகினு மினிய சொல்லாள் பங்கினன் பாவி வேட்ட
மோகினி யுருவ மாகி முகுந்தன்முன் னுற்ற வாறும்
மாகளி றனைய வைவச் சுதன்முதன் மனுக்க ளோடும்
சேகறு மன்ன காலஞ் சேருநர்த் தெரித்த வாறும். (கஅ)

4940. வாமன வுருவ மாகி மாவலி மகஞ்சென் றுற்றுத்
தாமரை யனைய செங்கட் டற்பான் வளர்ந்த வாறும்
நாமகள் கொழுநற் குற்ற நலந்திகழ் மாலைக் காலம்
பூமகள் புணரு மாமால் போற்றுமீ னுய வாறும். (கசு)

4941. இரவிதன் குலத்துமன்ன னிளன்கதை யுரைத்த வாறும்
தரைசொல்சை யாதி செய்யுஞ் சரித்திரஞ் சாற்று மாறும்
புரிதரு மன்பின் மிக்கான் புகலம்ப ரீடன் றன்னை
அரவணை மாய னேவ வாழிகாத் தளித்த வாறும். (உ0)

4942. கருதுசீர் மனுமுன் பெற்ற காவல னிக்கு வாகு
மாபின்மாந் தாதா வென்னு மன்னவன் பிறந்த வாறும்
விரைசெய்தார்ப் புயத்தான் மெய்ம்மை மேவரிச் சந்தி ரப்பேர்
பொருவிலான் புருட மேதம் புகாறப் புரிந்த வாறும். (உக)

---

யாகிய கடலைப் போன்ற திருமால். அமுதாகிய உணவை. அவுணர் போரில் ஒளிப்புற; ஒளிப்புற - தோற்று மறைந்திட. உம்பர் - தேவர். தேவர் அவுணரை வென்றது; (8. 4-ஆம் அத்.)

4939. சொல்லாள் - பார்வதி. பங்கினன் - சிவபெருமான். முகுந்தன் மோகினி உருவமாகியது; (8. 5-ஆம் அத்.) சேகு அறு - குற்றமற்ற. வைவச்சுதன் முதலிய மனுக்களைத் தெரித்தது; (8. 6-ஆம் அத்.)

4940. மகம் - யாகம். தற்பரன் - திருமால். வாமனனுகி வளர்ந்தது; (8. 7-ஆம் அத்.) நாமகள் கொழுநன் - பிரமதேவர். மால் - திருமால். மால் மீனுயது; (8. 8-ஆம் அத்.)

4941. இரவி - சூரியன். இளன் கதை உரைத்தது; (9. 1-ஆம் அத்.) சையாதியின் சரித்திரம் சாற்றுமாறு; (9. 2-ஆம் அத்.) மாயன் - திருமால். ஆழி - சக்கரம். அம்பரீடனைக் காத்தது; (9. 3-ஆம். அத்.)

4942. இக்குவாகு மரபில் மாந்தாதா பிறந்தது; (9. 4-ஆம் அத்.) அரிச்சந்திரன் புருடமேதம் புரிந்தவாறு; (9. 5-ஆம் அத்.) புருடமேதம் - நரமேதயாகம்.

4943. தாதகு மலங்கல் வெள்வேற் சகரனென் றுரைக்கும் வேந்தன்
மேதகு புரவி வேள்வி யிரும்பின னிழைத்த வாறும்
பாதல மிறந்து ளோர்க்காப் பகீரதன் பணிந்து பல்கால்
மாதவ முயன்று கங்கை மாநதி கொணர்ந்த வாறும். (உஉ)

4944. வேந்தர்தம் வேந்த னுய மித்திர சகனென் றேதும்
ஏந்தல்கன் மாட பாத னெனும்பெய ரடைந்த வாறும்
மாந்தளி ரனைய மேனி மலர்மகள் கொழுநன் வந்து
சாந்தணிந் தோங்கு திண்டோட் டயாதற் குதித்த வாறும். ()

4945. செய்யபங் கயநேர் கண்ணன் றேவர்தஞ் செல்ல றீர்ப்பான்
வெய்யவெங் கானி னேகி விழுத்தவர்க் கபய நல்கி
ஐயிரு தலையி னனை யமர்க்களத் தடர்த்த பின்னர்
வையக முழுதுங் காத்து வைகுந்த மேய வாறும். (உச)

4946 விட்டசெங் கதிர்க ளீரைஞ் ஞாறுடை விமலன் போற்ற
மட்டவி ழலங்கன் மாலை மனுமகன் வழியிற் றோன்றி
எட்டெனுந் திசையுங் காத்தாங் கிலங்குநல் லறிவு வாய்ந்த
நெட்டிலை வேற்கை வேந்த னிமிமா புரைத்த வாறும் (உரு)

4947. சந்திரன் றாரை யென்னுந் தையலை மணந்து பெற்ற
புந்திதன் மதலை செங்கோற் புரூரவாப் புகழ்செய் யாறும்
கொந்தவி ழலங்கன் மார்வன் கோசிகன் பிறந்த வாறும்
அந்தமில் பரசு ராம னவதரித் தருளு மாறும். (உசு)

---

4943. புரவி வேள்வி-அசுவமேத யாகம். சகரன் புரவி வேள்வி இழைத்தது; (9. 6-ஆம் அத்,) பகீரதன் கங்கை கொணர்ந்தது; (9. 7-ஆம் அத்.)

4944. மித்திரசகன் கன்மாடபாதன் என்னும் பெயரடைந்தது; (9. 8-ஆம் அத்.) கொழுநன் - திருமால். திருமால் தயாதனுக்கு உதித்தது; (9. 9-ஆம் அத்.)

4945. கண்ணன் - இராமன். செல்லல் - துன்பத்தை. தீர்ப்பான் - நீக்குதற்கு. ஐயிருதலையினனை - இராவணனை. அடர்த்த - கொன்ற. இராமன் வைகுந்தம் மேவியது ; (9. 10-ஆம் அத்.)

4946. ஈரைஞ்ஞாறு செங்கதிரையுடைய விமலன் ; சூரியன் ; 'ஸஹஸ்ரதீதிதி' என்று கூறப் பெறுவான். ஈரைஞ்ஞாறு - ஆயிரம். நிமிமாபுரைத்தவாறு ; (9. 11-ஆம் அத்.)

4947. தாரை - சந்திரன் மனைவி. புந்தி - புதன். புரூரவா ; புதனுடைய பிள்ளை. சந்திரன் மரபு உரைத்தது ; (9. 12-ஆம் அத்.) கோசிகன் - விசுவாமித்திரன், விசுவாமித்திர பரசுராமர் பிறந்தவாறு: (9. 13-ஆம் அத்.)

4948. மன்னவன் யயாதி யிந்த மாநிலம் புரந்த வாறும்
பன்னுமம் மரபின் வண்சீர்ப் பாதன்வந் துதித்த வாறும்
அன்னவன் மரபி லைவ ராதியர் பிறந்த வாறும்
எந்நிலத் தவரும் போற்று மெதுமா புரைத்த வாறும். (உஎ)

4949. மகபதி மலரோன் முக்கண் வானவன் வழுத்த மாயன்
புகழ்வசு தேவ னென்னும் புரவலர்க் காசும் பொற்பால்
திகழ்மதி வதனச் செவ்வாய்த் தேவகி யென்னு மாதும்
அகமகிழ்ந் தன்பு கூர வவதரித் தருளு மாறும். (உஅ)

4950. மாதவர் சாபந் தன்னா் மனமருள் சாம்ப னென்போன்
ஓதிருப் புலக்கை பெற்றுங் குவரிநீ ரிட்ட வாறும்
பூதலத் தரசர் போற்றும் புகழ்வசு தேவன் கேட்ப
நாதனை யறியு மன்பு நாரத னவிற்று மாறும். (உகூ)

4951. தத்துவ முரைத்தி யென்று தாண்மலர் வணங்கி நின்றுங்
குத்தவன் கேட்பக் கண்ண னுளந்தெளி வுறுத்த வாறும்
பைத்தலை யரவி னுடும் பசும்புய றனது தாமம்
மெய்த்தவ வமரர் போற்ற விருப்புட னடைந்த வாறும். (ந௦)

---

4948. யயாதி நிலம் புரந்தது ; (9. 14-ஆம் அத்.) பாதன் உதித்தது; (9. 15-ஆம் அத்.) அன்னவன் - பரதனுடைய. ஐவராதியர் - பாண்டவர். ஐவராதியர் பிறந்தது ; (9. 16-ஆம் அத்.) எது மரபு உரைத்தவாறு ; (9. 18-ஆம் அத்.) இதற்கு முன் அநுமாபுரைத்தவாறும் என்பது கூறப்படவில்லை.

4949. மகபதி - இந்திரன். முக்கண் வானவன் - சிவபெருமான். மாயன் - திருமால். மாயன், வசுதேவனும் தேவகியும் அன்பு கூர அவதரித்தருளுமாறு ; (10. 1-ஆம் அத்.) பத்தாங் கந்தத்தின் கதைப் பகுதிகளை முதல் கந்தத்தில் கண்ணன் சரித்திரமுரைத்த அத்தியாயத்தில், கூறினமையால் இங்கும் கூறவில்லை போலும்.

4950. மாதவர் - முனிவர். ஓதுகின்ற இருப்புலக்கை. உவரிநீர் - கடல். மாதவர் சாபத்தால் இருப்புலக்கையைப் பெற்று உவரி நீரில் இட்டது ; (11. 1ஆம் அத்.) நாதன்- திருமால். நாரதன் வசுதேவன் கேட்ப நவிற்றுமாறு ; (11. 2-ஆம் அத்.)

4951. உத்தவன் தத்துவம் கேட்டல் ; (11. 3-ஆம் அத்.) கண்ணன் உத்தவன் உளத்தைத் தெளிவுறுத்தவாறு முதலியன ; (11. 4. 5. 6. 7. 8. 9. 10. 11. 12. 13. 14. 15. 16. 17-ஆம் அத்.) புயல் - கண்ணபிரான். தாமம் - மேலான இடம் ; தன்னுடைச் சோதி. கண்ணன் தனது தாமத்தை அடைந்தவாறு ; (11. 18-ஆம் அத்.)

4952. நினைவுறு கலியின் கால நிகழ்செய லுரைத்த வாறும்
வினையுறு பிரள யஞ்சேர் விதமெடுத் துரைத்த வாறும்
முனிவுறு விண்டு ராதன் முத்திபெற் றுயர்ந்த வாறும்
அனையவன் மதலை பாந்த ளருமக மாற்று மாறும். (௩௧)

4953. நன்மறை வியாத னென்னு நற்றவக் கிழவ னுய்ந்து
தொன்மறை புராண நன்னூல் சுருக்கினன் சொற்ற வாறும்
முன்மறை மார்க்கண் டேயன் மொழிபிர ளயங்கா ணுறும்
வின்மறை வில்லா வெய்யோன் விபூதியுற் றியங்கு மாறும். ()

4954. உரைத்தன வுணர்ந்த வாறிங் கொளிபெறு தவத்தின் மிக்க
அருத்தியுற் றுறையு மாசி லந்தண ரேயிக் காதை
தெரித்திடு பதினென் றுய திதிதுவா தசியிற் கேட்போர்
மிருத்துவைக் கடந்து மேலாம் வீடுபெற றுவப்பர் மாதோ. ()

---

4952. கலியின் காலமும் செயலும் உரைத்தவாறு; (12. 1. 2-ஆம் அத்.) பிரளயம் உரைத்தது; (12. 3-ஆம் அத்.) விண்டுராதன் முத்தி பெற்றது; (12. 4-ஆம் அத்.) அனையவன் - பரிட்சித்தினுடைய. மதலை - சன: மேசயன். பாந்தளரு மகம் - சர்ப்ப யாகம். பாந்தளரு மகம் ஆற்றுமாறு: (12. 5-ஆம் அத்.)

4953. வியாதன் மறை முதலியவற்றைச் சுருக்கிச் சொற்றவாறு: (12. 6-ஆம் அத்.) காணுறும் - பார்க்கின்ற வழியையும். வில் - ஒளி: விபூதி - விளையாட்டு. வெய்யோன் - சூரியன்; மார்க்கண்டேயன் பிரளயம் காணுமாறு; (12. 7-ஆம் அத்.) விபூதியுற்று இயங்குமாறு; (12. 8-ஆம் அத்.)

4954. அருத்தி - ஆசை. அந்தணரே: விளி. பதினென்றுய திதி - ஏகாதசி. மிருத்து - யமன்.



# 10. புராணவளவை உரைத்த அத்தியாயம்.

கலிநிலைத்துறை.

4955. புகன்ற வொன்பதிற் றிரட்டியாம் புராணநல் லளவை
பகர்ந்தி டிற்பதி னாயிரம் பிரமமாம் பற்பம்
அகன்ற வைம்பத்தை யாயிர மாயறி வுறுத்தும்
திகழ்ந்த சொற்றொடை வைணவத் தளவையைத் தெரிக்கின்.()

4956. சாற்று மூவிரு பத்துமூ வாயிரஞ் சாரும்
ஏற்ற சைவமெண் மூன்றினு யிரமியைந் திருக்கும்
போற்று பாகவ தம்மெனச் சொல்லுமிப் புராணம்
ஆற்றல் சேர்ந்தசொற் றொடைபதி னெட்டி னாயிரமே. (உ)

4957. நார தியமென் றுரைதரு நவையறு நன்னூல்
சீரின் மேம்படு மிருபத்தை யாயிரஞ் சேரும்
எரி னான்மிகு வாக்கினே யப்பெய ரியைநூல்
பாரி னோர்புகழ் பதினையா யிரத்துநா னூறே. (ங)

4958. மருவு சொற்பெறு மார்க்கண்டே யப்பெயர் மதிநூல்
விரவு மொன்பதி னாயிர முற்றிடும் விரிந்த
தரைசொ னல்லறஞ் சாற்றிய பௌடிகத் தனிநூல்
உரைசெ யேழிரண் டாயிரத் தோடுமைஞ் னூறே. (௪)

---

4955. ஒன்பதிற்றிரட்டியாம் புராணம் - பதினெண் புராணங்கள். பிரம புராணம் பதினாயிரமாம். பற்பம் - பத்ம புராணம். வைணவம் - விஷ்ணு புராணம். தெரிக்கின் - விளங்கக் கூறினால். இப்பாடல் குளகம்.

4956. சைவம் - சிவ மஹா புராணம். எண் மூன்றினாயிரம் - இருபத்து நாலாயிரம். பாகவதம் பதினெண்ணாயிரம் கிரந்தமுடையது.

4957. நாரதீயம் - பிருகந்நாரதீய புராணம். ஆக்கினேயப் பெயர் இயை நூல் - அக்கினி புராணம்.

4958. மார்க்கண்டேய புராணம் பதினாயிரம். விரவு - கலந்த. அறம் - தருமம். பௌடிகத் தனி நூல் - பௌஷ்ய புராணம்.

4959. பேசு நல்லறி வுறுத்திய பிரமகை வத்தம்
ஆசி லாப்பதி னெட்டின லாயிரமென வறைவார்
தேசு லாவிய விலிங்கமென் றுவாத்திடுந் திகழ்நூல்
மாசி லாப்பதி னொன்றின யிரமென வருமே. (௫)

4960. நற்ற வத்தினர்க் கிதஞ்செயும் வாரகமா நன்னூல்
சொற்றி டின்னிரு பத்துநா லாயிரத் தொகையாம்
கற்று வல்லவர் நாடொறும் புகழுநற் காந்தம்
உற்ற வொன்பத்தொ ராயிரத் தொடுமொரு நூறே. (௬)

4961. வாம னம்பதி னுயிரத் தொகைபெற வயங்கும்
நாம நன்னெறிக் கூர்மமென் றுரைபெறு நன்னூல்
ஏம மன்னிய வெழிற்பதி னேழினுயி ரமாம்
ஆம ரும்புகழ் மச்சமீ ரேழின யிரமே. (௭)

4962. நீதி துன்றுகா ருடமெனும் பெயர்திகழ் நன்னூல்
ஓது கின்றபத் தொன்பதி னுயிர முறுமால்
வேத நுண்பொருள் வெளிப்படச் சொல்பிர மாண்டம்
கோத றும்புக ழாறிரண் டாயிரங் குலவும். (௮)

4963. உண்ண யங்கொள வுரைத்தநூ லொன்பதிற் றிரண்டும்
எண்ணு றுந்தொகை நான்குநா ருயிர மியையும்
நண்ணு றும்பதி னெட்டி னு ணவின்றவிந் நன்னூல்
தண்ண றுந்துள வணிபரன் சதுமுகற் குரைத்தான். (௯)

---

4959. ஆசு - குற்றம். தேசு - ஒளி.

4960. காந்தம் - கந்தபுராணம்.

4961. தொகை - எண். ஏமம் - காவல். மச்சம் - மச்ச புராணம்.

4962. துன்று - நெருங்கிய. காருடம் - கருடபுராணம். கோது - குற்றம்.

4963. உன் நயம் கொள் - மனம் இன்பம் கொள்ளும்படி. இந்நன்னூல் என்றது பாகவதத்தை. பரன் - திருமால். சதுமுகற்கு - பிரமனுக்கு.

4964. உந்தி நாண்மல ருதித்துறை சதுமுகற் குவப்பால்
இந்த நூலினை யிசைத்ததென் காரண மென்னி
அந்த மாதிமற் றிடையினு ஞானமா மதனல்
சிந்தை சேரும்வெந் துயர்தவிர்த் திடவிது தெரித்தான். (௧0)

4965. இன்ன நற்கதை கேட்குந ரெழுதுந ரிசைப்போர்
பின்னல் வெண்டிரைப் பார்புகழ் பெருந்திரு வினராய்
மன்னு கின்றவ ராகியும் வல்வினை மருவார்
நன்ன லந்தரு மால்பரந் தாமநண் ணுவரால். (௧௧)

4966. புகன்ற விக்கதை கேட்குநர் பூசுர ராயின்
அகந்தெ ளிந்தறி வடைகுவ ரரசர்மற் றுயின்
திகழ்ந்த செங்கதி ராமெனப் பகையறத் திகிரி
மகிழ்ந்து மாநில முழுவது மோச்சுவர் மாதோ. (௧௨)

4967. வணிக ராமெனின் வளந்தரு மளகைமன் னவன்போல்
தணிவி லாநிதி பெறுகுவர் சாற்றுபின் னவரேல்
பணிகொ டோல்விடு பான்மைபோற் பாவவெங் குழுவிட்
டணியி னுன்மிகுந் தவனியின் விளங்குவ ரன்றே. (௧௩)

4968. பழுதி லிப்புரா ணத்தினி லொருபத மேனும்
எழுதி னோர்கதை யிசைக்குநர் கேட்குந ரெவரும்
தொழுத குந்திரு மங்கையின் னருணனி சுரப்ப
முழுந லத்தின ராகிநன் முத்திபெற் றுறைவார். (௧௪)

---

4964. திருமாலின் உந்தியாகிய மலரில். இசைத்தது - கூறியது. அந்தம், ஆதி, இடை என்ற மூன்றிலும் ஞானத்தை யுடையதாதலால்; என்றது பாகவதத்தை. இது - இப்பாகவதத்தை. தெரித்தான் - அறியக் கூறினன்.

4965. பெருந்திரு - மிக்க செல்வத்தை. வல்வினை மருவார் - தீவினையில் பொருந்தாதவராய். பரந்தாமம் - வைகுந்த பதவி.

4966. பூசுரர் - பிராமணர். அரசராயின்; மற்று, அசை. அற - கெட. ஓச்சுவர் - செலுத்தவர்.

4967. வணிகர் - வைசியர். அளகை மன்னவன் - குபேரன். பின்னவர் - வேளாளர். பணிகொள் தோல்விடு பான்மை போல - பாம்பு தான் கொண்ட தோலை விடுகின்ற தன்மையைப் போல. பாவமாகிய குழுவை விட்டு. குழு - கூட்டம். அணி - அழகு. மிகுந்து - மிக்கு.

4968. திருமங்கை - இலக்குமி. நலம் - இன்பம்.

கலிவிருத்தம்.

4969. இனைய நூல் கேட்குநர் யாது வேண்டினும்
மன னுவக் தளிக்குவர் மனுக்கள் வானுளோர்
வினையறு தென்புல மேய மேலவர்
முனிவரர் விஞ்சையர் முதலி னோர்களே. (கரு)

4970. கனைத்துவண் டிமிர்துழாய்க் கண்ணன் மாக்கதை
மனத்துற வழங்குநர் மகிழ்ந்து கேட்குநர்
வினைத்திருக் கற்றுறு மெய்ம்மை யாதியா
நினைத்தன பெற்றிவ ணீடு வாழியே. (கசு)

---

4969. மேலவர் - பிதிருக்கள். முதலினோர்கள் அளிக்குவர்.

4970. கனைத்து - ஒலித்து. கண்ணன் - திருமாலுடைய. வழங்குநர் - கூறுபவர். வினைத்திருக்கு - வினைகளின் மாறுபாடு. ஆதியாக நினைத்தன பெற்று வாழியே.

ஸ்ரீமத் பாகவத புராணம் முற்றிற்று.

திருவிருத்த முழுத்தொகை சகூ௭0.



## பத்து முதல் பன்னிரண்டு ஸ்கந்தங்களின் செய்யுண் முதற்குறிப்பகராதி.

## ஆ

## இ

### பை



### பொ



### போ



### பௌ



### ம

மா

வா

## வி

---

# பாகவதம் முதல்
# அரும்பத முதலியவற்றின் அகராதி.

---

## அ

## ஆ

## பாகவதம் இரண்டாம் பாகத்தின்

## அரும்பத முதலியவற்றின் அகராதி.

## ஆ

வெ



வே



வை

# அபிதான விளக்கம்.

## (அபிதானம் - பெயர்.)

எண் - செய்யுளேண்.

அக்கினி : இவன் அசுவினி தேவர் கையால் அவிகொள்ள அருளியது. 806

இவன் சிவபெருமான் வீரியத்தைச் சரவணத்துய்த்தது. 813

வாக்கின் அதிட்டான தேவதை. 640

அக்குரூரர் : யதுவமிசத்தைச் சேர்ந்தவர்; இவருடைய தாய் காந்தினி ; கம்சனுடைய மந்திரி; இவர் கம்சனுடைய வேண்டுகோளால், நந்தகோபரிடம் சென்று தனுர்யாகச் செய்தி கூறிப் பலராம கிருஷ்ணரை அழைத்துக் கொண்டு யமுனநதியை யடைந்து தாம் தனித்து ஜலத்தில் மூழ்கி ஸ்நானம் செய்து பலராம கிருஷ்ணனுடைய உருவத்தைக் கண்டவர். 3118

அகத்திய முனிவர் : இராமபிரான் முதலிய மூவரும் தண்டகாரணியத்தில் பலகாதம் கடந்து இவர் ஆச்சிரமத்தை யடைந்தபோது அவர் வில்லும் அம்புப் புட்டிலும் தந்து வழிசொல்ல ஜடாயுவைக் கண்டு பின்பு கோதாவரியை அடைந்தனர். 2261-3

இவர் அசாமிளன் கதையைச் சுகருக்கு உரைத்தவர். 1894

அகத்தியர் : கங்கைக் கரையில் பரிட்சித்தைக் காணவந்தனர். 308

அகாசுரன் : கம்சனுடைய ஏவலால் கண்ணனைப் பாம்பின் வடிவமாக வந்து கொல்ல முயற்சித்தவன். 2800

அங்கன் : இவன் உன்முகன் மைந்தன்; ஆதிமனுவிலிருந்து ஐந்தாம் தலைமுறையான் ; இவன் மனைவி சுநீதை. இவன் பல வேள்வி செய்தனன். 912

இவன் வேள்வி செய்யும்போது தேவர் அவி ஏற்க வாராமைக்குக் காரணம் தனக்கு மகப் பேறின்மையே என அறிந்து அதன் பொருட்டு ஓமம் புரிந்தனன். 915

வேள்வியில் தோன்றியவன். அமுது போன்ற பாலன்னத்தைக் கொடுப்ப அதனைத் தன் தேவிபாற் கொடுத்தனன், அவள் வேனனைப் பெற்றெடுத்தனன். 917

இவன் மரபில்வந்த உரோமபத னென்பவன், சாந்தை யென்னும் தன்மகளைத் தயரதன் கொடுக்க அவளை வளர்த்து மழையில்லாமல் வருந்திய தன்னாட்டில் மகளிரால் கொணரப்பட்ட கலைக்கோட்டு முனிவருக்கு அளித்தான். உரோமபதன் மகன் சதுரங்கன். 2585-6

இவன் தன் மகன் வேனனது தீயொழுக்கத்தைப் பொறுக்காமல் காட்டில் புகுந்தான். 920

அங்கதன்: இவன் இராமபிரானேவலால் இராவணனிடம் தூது சென்று மீண்டவுடன் வானரசேனை இலங்கை மதிலைச் சூழ்ந்தது. 2317

அங்காரகன்: இது ஓரிராசியில் ஒன்றரை மாதம் தங்கும்; இதுவும் வியாழனும், சனியும், ராகுவும், கேதுவும் சூரியன் அருகே செல்லின் அத்தமனப்பெயர் பொருந்தும்; அதைநீங்கின் அப்பெயர் நீங்கும். 1312, 1314

அங்கிரா: இவர் சிரத்தையை மணந்தவர் 609

ஆங்கிரஸ் என்னும் முனிவர்; கங்கைக் கரையில் பரிட்சித்தைக் காணவந்த ஒரு முனிவர். 308

பிரம தேவரது மூச்சில் தோன்றியவர். 483

பிரமனால் படைக்கப்பட்ட ஒரு முனிவர். 59

அசாமிளன்: கன்னியா குச்சமெனனும் நகரில் வாழ்ந்த அந்தணன். இவன் நாராயணா என்று ஒருமுறை சொன்னமையால் வீடுபெற்றான். இவன் தந்தை கட்டளைப்படி கடவுளைவணங்க நந்தவனத்தில் கனியும் மலரும் கொண்டுவந்தான். 1874

நந்தவனத்திலிருந்து வரும்போது வேளாண் மரபைச்சேர்ந்த பெண் ஒருத்தி கள்ளையருந்தி நிற்கக் கண்டு காமமுற்றுப் புணர்ந்து ஒன்பது புதல்வரைப் பெற்று எண்பத்தெட்டு ஆண்டு அவளுடன் வாழ்ந்தான். ஒரு மகன் பெயர் நாராயணன் என்பது. 1378

இவன் உயிர் நீங்கும் பொழுது தன் மகன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்ட காரணத்தால் திருமால் கணத்தார் யமபடரினின்றும் இவனை மீட்டுச் சென்றனர்; இதையுணர்ந்த இவன் தன் பாபத்தை நினைந்து திருமாலின் நாம கீர்த்தனமே கதி தருவதெனத் துணிந்து அவரது உருவையே தியானித்துக் கங்காத் துவாரத்தை யடைந்து மனத்தை அடக்கித்

இவர் இந்திரன் ஒளித்த குதிரையைப் பிருதுவின் மகனிடம் மீட்டுவரக் கூறியது. 971

பிரம தேவரது சித்தத்தில் தோன்றியவர். 483

அத்துவிதம் . இது பாவாத்துவிதம், கருமாத்துவிதம், ஞானத்து விதம் என மூவகைப்படும். இரண்டல்ல ஒன்று என்று கூறுவது. 1764-5

அதர்வணர் : இவரது மனைவி சாந்தி. 612

அதிகாயன் : இவன் இராவணன் மகன். அவன் ஏவலால் வந்து போர் செய்து இலக்குவன்விட்ட பிரமாத்திரத்தால் உயிரிழந்தான். 2323-4

அதிதி : இவள் காசியபர் மனைவி. இவன் மகன் சவிதா என்போன், இவள் வியாகிருதியையும் சாவித்திரியையும், சோமம் முதவிய யாகங்களின் தேவதைகளையும் ஈன்றாள். 1552

இவள் காசிபன் மனைவியருள் ஒருத்தி; இவள் விவச்சுவான், அரியமா, பூஷா, துவட்டா, சவிதா, பகன், தாதா, விதாதா, மித்திரன், வருணன், சக்கிரன், விக்கிரமனென்னும் பன்னிருவர் ஆதித்தரை ஈன்றாள். 1419

பயோவிரதத்தைச் செய்த இவளுக்கு முன் திருமால் தோன்றி அவள்பால் ஒருகலையோடு உதிப்பேனெனக் கூறி மறைந்தனர். அங்ஙனமே இவள் வயிற்றில் புரட்டாசி மாதத்தில் சுக்கில பக்ஷத்துத் திருவோணம் கூடிய துவாதசித் திதியில் நடுப்பகலில் தோன்றினர். 1955-9

அந்தகன் : இவன் மக்கள் குகுரன், பயமானன், முதலிய நால்வர். அவர்களுள் குகுரன் பெற்ற மகன் விருஷ்ணி. விருஷ்ணி விலோமனையும், விலோமன் கபோதரோமனையும் பெற்றனர். கபோதரோமன் அந்தகனைப் பெற்றான். அந்தகன் பெற்ற குமரன் துந்துபி. துந்துபி தருமியோதாவைப் பெற்றான். 2616-18

அந்தகூபம் : அபவாதத்தைத் தெரித்துப் பிறர் புத்திக்குத் துன்பம் உண்டாக்குவோர் குருடராகிக் கொசு முதலியன வருத்த அடையும் நரகம். 1350

அந்தணர் : ஓதுதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறும் இவர்க்குரியன. 1719

அந்ததாமிச்சிரம் : இது நாகங்களுள் ஒன்று. மைந்தரும் மனைவியும் துன்பம் அடையச் செய்தவர் நாக்கு வெந்து குடிக்கத் தண்ணீரின்றி வருந்தும் உலகம். 1346

அநசூயை : இவள் அத்திரி முனிவர் மனைவி ; தத்தாத்திரேயனையும் துருவாசரையும் பெற்றாள். 705

அநிருந்தன் : சித்தத்திற்குரிய உபாசனை ஈசர். 634

இவன் பிரத்துமனனுடைய மகன் ; கிருஷ்ணனுடைய பேரன். 3671

அநு : இவன் யயாதியின் மகன். இவன் மரபில் அங்கன், வங்கன், கலிங்கன் முதலிய அரசர் தோன்றினர் அவர்கள் தாம் ஆண்ட நாட்டிற்குத் தம் பெயரை அளித்தனர். 2584

அநுகலாதன் : இவன் இரணியன் மகன், இவனுக்கு மகிஷனும், பாஷ்களனும் புதல்வர்கள். 1561

அபிமன்யு : படைவன்மையால் பரிட்சித்துக்கு உவமை இவன் விராடன் மகளான உத்தரையை மணந்து பரிட்சித்தைப் பெற்றான். இவனை பாரத யுத்தத்தில் அசுவத்தாமாவிட்ட கணையால் இறவாதபடி கண்ணன்பிரான் கருவில் காத்தனர் 2582

அம்பரீஷன் : இவன் நாபாகன் மகன். இவன் ஏகாதசியன்று உணவின்றி மறுநாள் அந்தணர்க்குப் பசு நிரையுதவி உணவு அளித்துப் பின் உண்ணும் இயல்புடையான். ஒரு சமயம் துவாதசி ஒரு நாழிகையுள்ள தினத்தில் பலகலை வல்லோர் தொடரத் துருவாச முனிவர்வர இவன் அவரை உண்ணும்படி வேண்டினன். யமுனையில் நீராடி விரைவில் வரும்படி வேண்ட அவ்வாறே அவர் சென்றார். துருவாசர் மீண்டுவர நேரம் ஆனதும், இவன் நீரின் பாரணை நன்றென்று நீருண்டான். பின்பு துருவாச முனிவர் வர அவர் இதனை யறிந்து கோபங் கொண்டு தம் ஜடையை நிலத்தில் அடிக்க அதிலிருந்து ஒரு பூதம் கைவாளோடு ஆர்த்து எழுந்தது ; அதனை நோக்கி அம்பரீஷனைக் கொல்லும்படி ஏவினர். அரசன் அதுவரவும் ஓடவில்லை. திருமால் இதனை யறிந்து தம் சக்கரத்தை ஏவ அது பூதத்தைக் கொன்றது. துருவாசர் நாற்றிசையிலும் ஓட ஆழியும் பின் தொடர்ந்தது. 2083 - 91

துருவாசர் சக்கரம் தம்மைத் துரத்திவர மேருமலையின் குகை ஒன்றில் புக்கு ஒளித்தார். அங்கும் துரத்த பிரமலோகத்துக்குச் சென்று நடந்ததைக் கூறினர் ; பிரமதேவர் திருமாலாணையை மாற்றவல்லன் இல்லையென்ன ருத்திரன் பதத்தை யடைந்து தம் துன்பத்தைக் கூறினர். அவரும் அதனை தடுத்தல் முடியாதென்றும் திருமாலையே சரணமடை

யும்படி கூற அவர் வைகுண்டம் புக்குத் தம் தீங்கைப் பொறுக்கும்படி வேண்டினர். 2091 - 2094

துருவாசர் திருமாலை யடைந்து புகழ்ந்ததும் அவர் தம் அடியவர் பெருமையை விளக்கி அம்பரீஷனையே சரணமடையும் படி கூறினர். அவர் அம்பரீஷனை வணங்கிக் கூற அவன் தனக்குப் பாவம் வந்ததென்று சக்கரத்தைத் துதிக்க, அது மீண்டும் திருமால் கையிற்புக்கது. ஆழி துரத்தியதால் துருவாசர் ஓராண்டு ஓடி மீண்டு வருமளவும் உணவின்றி யிருந்து பின் அவரோடு உண்டான். முனிவரும் ஆசி கூறிச் சென்றார். 2094-2101

இவன் புதல்வர் ககேது முதலிய மூவர். அவர்களுக்கு முடி சூட்டி அம்பரீஷன் காட்டுக்குச் சென்று தவம் இயற்றி வீடு பெற்றான். 2102

அமைச்சர் : அரசர்களுக்குத் தக்க சமயத்தில் நீதி உரைப்பவர்கள். 2721

அயப்பானம் : பொய் சொல்லி விருப்பத்தோடு கள்ளை யருந்துவோரது வாயில் உருக்கிய இரும்பை ஊற்ற அடையும் நரகம். 1354

அயோமுகி : இலக்குவன் நீர் கொண்டுவரச் சென்றபோது இரவில் தீங்குசெய்த அயோமுகியின் மூக்கைச் சிதைத்துப் பின் கவந்தன் வாழும் வனத்தை இராமனும் இலக்குவனும் அடைந்தனர். 2279

அர்ச்சுனன் : பாண்டவர் ஐவருள் அருச்சுனன் தன் மைத்துனனாகிய கண்ணபிரானோடு தோன்றிய சுபத்திரையை மணந்து அபிமன்யுவைப் பெற்றான். அபிமன்யுவின் மகன் பரிட்சித்து. 2580

கண்ணபிரான் மறைவால் வாடிய முகம் உடையவனாதல். 211

காண்டவ வனம் எரித்தது. 213 - 218

மீண்டு வாராமையால் உற்பாதங்களைக் கண்டு தருமன் கவலையுற்றது. 204 - 6

அர்ச்சுனன் : வில்லிற் சிறந்தவன். 178

அரசர் : இவருக்கு மறையோதல், யாகம் புரிதல், நிலம்புரத்தல், படைகள் பயிலுதல், போரில் வெற்றி பெறுதல், கொடுத்தல் என்பவை அறங்கள் ஆகும், 1720

அரம்பையர் : இவர்கள் பிரமதேவரது அழகிலிருந்து தோன்றியவர். 562

அரமங்கையர்: தேவலோகத்தில் உள்ள மகளிர். 2993

அரவக்கோடியோன்: பாம்பைத் தன்னுடைய கொடியில் அடையாளமாக வுடையவன். திருதராஷ்டிரனுடைய மைந்தனான துரியோதனன். 3315

அரிச்சந்திரன்: இவன் மகவில்லாமலிருந்த போது நாரதர் இவன் பால் வந்து வருணனை வழிபடும்படி கூறினர். வருணன் வந்து நான் கொடுக்கும் மகனைப் பசுவாக்கி யாகம் செய்ய வேண்டுமென்ன அரசன் இசைந்தபின் சென்றான். அரசனும் மகனைப் பெற்றான்; அம்மகன் பெயர் ரோகிதன். அவனை யாகப் பசுவாக்கி யாகம் செய்யும்படி மறுபடியும் வருணன் கேட்கப் பல் முளைக்கவில்லை யென்று கூறி அனுப்பினன். இப்படியே ஒவ்வொரு சமயமும் கேட்ட போது அரிச்சந்திரன் ஏதேனும் காரணம் கூறினன். 2141 - 7

இவன் இயற்றிய புருடமேதத்தில் கௌசிகர் ஹோதா. சாமகன் வசிட்ட முனிவர்; அத்துவரியு பிருகு முனிவர். ஜமதக்நி பிரம்மா. வருணன் பிணியைத் தீர்த்து அருளை வழங்கினன்; இந்திரன் பொற்றேரைக் கொடுத்தான். தன் மகனுக்கு முடிசூட்டிக் கோசிக முனிவர் உபதேசத்தால் தத்துவங்களை மொழிந்து வீடுபெற்றான். 2152 - 4

அரிட்டாசுரன்: கிருஷ்ணவதாரத்தில் கம்சனால் ஏவப்பட்டுக் கண்ணனைக் கொலைபுரிய இடபமாக வந்து கோபாலரை வருத்திக் கண்ணனால் கொம்பிழந்து மாய்ந்த அசுரன். 3104

அரிட்டை: காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி; இவள் வித்தியாதரரைப் பெற்றாள். 1420

அரிதன்: இவன் ரோகிதனுக்கு மகன். இவன் மகன் சம்பன். இவன் மகன் சுவேதன். இவன் மகன் விசயன். இவன் மகன் ருருகன். இவன் மகன் விருகன். இவன் மகன் வாருகன். இவன் பகைவர் துரத்துதலால் காட்டிற் புகுந்தான். இவன் அவுருவனச்சிரமத்தை அடைந்து தேவியோடு சில காலங்கழித்து இறந்தான். இவன் மனைவியும் நெருப்பில் விழ எண்ணினள். 2155 - 8

அரியமா: இவன் துவாதசாதித்தருள் ஒருவன், மானிடரைப் பெற்றவன். 1422

அரிவருடம்: இது மேருவுக்கு இடைவிட்டு நிடதமலைக்குத் தெற்கிலும் ஏமகூடத்தின் வடக்கிலும் ஒன்பது ஆயிரம் யோசனை

யகன்று மற்ற இரு திக்கிலும் கடல் எல்லையாகவும் அமைந்துள்ளது. 1206

இங்கே பிரகலாதன் புகழ்ந்து ஏத்தத் திருமால் திருமகளோடு கூடி நரசிங்கமாக உறைவார். 1246

அருச்சி : இவள் வேனனது இடக்கையில் தோன்றியவள்; வலக்கையில் தோன்றிய பிருதுவை மணந்தவள். 937

அலாயுதன் : கலப்பையை ஆயுதமாகவுடைய பலராமன். கிருஷ்ணனுடைய தமையன். 3224

அவிபுக்த : இவள் புலத்தியன் மனைவி, இவள் மகன் அகத்திய முனிவன் 712

அவீசிமதி : வஞ்சனை செய்வோர் தலைகீழாக மலையினின்றும் உருட்டப்படும் நரகம் 1359

அவுணன் ; ஓர் அரக்கன் ; இவன் பெயர் திருணவர்த்தன்; கண்ணனை விண்ணிற் கொண்டு சென்றபோது அவன் கழுத்தை நெரித்துக் கொன்றான். இவன் கம்சனால் ஏவப்பட்டவன். 2746

அவுருவன்: கங்கைக்கரையில் பரிட்சித்தைக் காணவந்த முனிவர். 307

அளகநந்தை : இப்பெயரோடு பொருந்தும் கங்கை திருமாலின் துளவோடு மேருமலையில் விழுந்து நிடதம், ஏமகூடம், இமயம் என்னும் மலைகளைப் பிளந்து பரத கண்டம் சேர்ந்து தென் கடலிற் கலப்பது 1231

அனுமான் : இவன் முதலாக உள்ள நால்வரும் சீதையைத் தேடிக் காணாமையால் ஜடாயுபோல் இருந்திலமென வருந்தினர். அதைக் கேட்ட சம்பாதி அவ்வரலாற்றைக் கேட்க அதனைக் கூறித் தாம் சீதையைத் தேடி வந்ததையும் கூறினன். 2289 - 90

சம்பாதி வார்த்தையைக் கேட்ட வானர வீரர் கடல் கடப்பவர் யார் என்று ஆலோசிக்க அனுமான் தான் கடப்பதாகக் கூறினன். கடந்து இலங்கையிற் புகுந்து தேடிக் கடைசியாக அசோக வனத்தில் சீதையைக் கண்டான். 2293 - 4

அரக்கிமார் தூங்கியபோது சீதையின்முன் பொருந்தி மோதிரத்தை அவள் கைக்கொடுத்து இராமபிரான் செய்திகளை உணர்த்தினன். பின் மரங்களை ஒடித்துக் கிங்கரரை வென்று பின் இராவணன் தன்னைக் கொல்ல அனுப்பிய அரக்கர் யாவரையும் கொன்றான். 2295 - 6

இந்திரசித்து அனுமானைப் பிரமாத்திரத்தாற் கட்டி இராவணன் முன்னே விட்டான். இராவணன் யாரென்று கேட்ப இவன் தன்னை இராமன் தூதனென்று தெரிவித்தான். கோபங்கொண்ட இராவணன் அனுமானைக் கொல்லும்படி ஏவ விபீஷணன் தூதரைக் கொல்லுதல் நீதி யன்றென விலக்கினன். 2297 - 8

இராவணன் இவன் வாலில் துகிலைச்சுற்றி நெருப்பை மூட்டும்படி ஏவ அரக்கர் அங்ஙனமே செய்ய அனுமான் இலங்கை முழுதும் சுட்டனன். சீதை இருந்த இடம்தவிர மற்ற இடங்களை எரித்துச் சீதையை வணங்கி அவளிடமிருந்து சூடாமணியைப் பெற்று மகேந்திரமலையை மீண்டடைந்தான். 2297-2300

அங்கதன் முதலானோரைக் கண்டு சீதையைக் கண்டதைக் கூறிப் பின் இராமனிருப்பிடம் சென்று சீதையைக் கண்டதைத் தெரிவித்தான். இலங்கையில் நிகழ்ந்தவற்றைக் கூறிச் சீதை யளித்த சூடாமணியை அளித்தான் 2301 - 2

பிரமாத்திரத்தால் யாவரும் மயங்கி வீழ்ந்த காலையில் அனுமான் சஞ்சீவி மலையைக் கொண்டுவர உறக்கத்திலிருந்து எழுபவரைப் போல எழுந்தனர். 2331

அனேனசு : இவன் மகன் பிருது ; இவன் மகன் விச்சுவகந்தன்; இவன் மகன் சபத்தன் ; இவன் மகன் பிரகதாச்சுவன் ; இவன் மகன் குவலயாச்சுவன் ; குவலயாச்சுவன் 21,000 பேர் புதல்வரைப் பெற்று அவர்கள் சுற்றிவரத் துந்து வென்னும் அசுரனோடு போர் செய்ய அவன் மூச்சுக் காற்றால் மைந்தர் இறந்தனர். 2112 - 3

ஆக்கினீத்திரன் : இவன் பிரியவிரதன் மூத்த புதல்வன் ; புதல்வரை வேண்டி இமயமலைச் சாரலில் தவமியற்றினன்; இவன் முன் பிரமதேவன் ஏவலால் பூருவசித்தி யென்பாள் தோன்றி அவனழகைக் கண்டு வியந்தனள். அவனும் இவளழகைக் கண்டு மால்கொண்டு இவளைச் சேர்ந்தனன். 1125 - 30

தன் நாட்டை ஒன்பது பாகமாக்கி ஒன்பது புதல்வர்களுக்கும் கொடுத்தான் ; அவர்களால் அவை ஒன்பதுபேர் பெற்றன. 1133

ஆதிசேடன் : இவன் பாதாளத்தின் கீழ்ப் பலயோசனைகளுக்கு அப்பாலுள்ள உலகத்தில் வாழ்பவன் ; இவன் வாயிலிருந்து வரும் நஞ்சாலும் கண்ணிலிருந்துவரும் நெருப்பாலும் கால

முடிவில் உலகங்களை அழித்து நிற்றலால் சேடன் என்னும் பெயர் பெற்றான். 1341

இவன் உலகங்களை யுகமுடிவில் அழிப்பதால் உருத்திர மூர்த்தியாய் விளங்குவான். தன்பணுடவிப் பரப்பில் உலக முழுவதையும் ஓரணுவெனத் தாங்குவன். 1342

ஆதிமனு : இவர் மக்களான உத்தானபாதன், பிரியவிரதன் அரச ராயினர் 726

ஆதிவராகம் : இதன் வடிவம் யாகத்தின் வடிவம். 504

ஆதிவராகத்திற்கும் இரணியாக்ஷனுக்கும் போர் நடந்தது. 496

பிரம தேவர் மூக்கினின்றும் தோன்றியது. 492

ஆநத்தன் : இவன் மகன் இரேவதன். இவன் இரேவதியைப் பெற்று யாருக்குக் கொடுப்போ மென்று இருந்தான். இவன் தன் மகளோடு பிரமலோகம் அடைய அங்கே கந்தருவர் பாட ஒருகணம் கழிந்தது ; தன்மகளை யார்க்குக் கொடுப்பதென்று பிரம தேவரைக் கேட்க அவர் பலஊழி கழிந்தன வென்றும் உலகில் அரசரில்லை யென்றும் கூறினர். 2074 - 5

ஆய்ச்சியர் : இடைச்சாதி மகளிர் ; முல்லை நிலத்துக்குரிய வர்கள். 2758

ஆலகாலம் : பாற்கடலில் தோன்றிய விஷம் ; இரணியாக்க னுக்கு உவமை. 546

ஆவிர்த்தானன் : இவன் அவிர்த்தானன் மக்கள் அறுவரில் ஒரு வன், இவன் தேவருக்குப் பல வேள்விகள் இயற்றியவன். 1007

இவன் கிழக்கு முகமாகத் தருப்பையைப் பரப்பினமையால் பிராசீன பர்ஹிஸ் என்னும் பெயரைப் பெற்றான். இவன் சமுத்திர ராஜனுடைய மகள் சதத்ருதி யென்பவளை வேட் டுப் பதின்மர் புதல்வரைப் பெற்றான். 1009

ஆனகதுந்துபி : வசுதேவன். 2689

ஆனத்தநாடு : இது துவாரகைக்குச் சமீபத்திலுள்ள ஒருநாடு ; இதில் சரியாதி மகன் ஆனர்த்தன், குசத்தலி யெனும் பட்ட ணம் நிருமித்தான். 3399

ஆஹுதி : இவள் சுவாயம்புவ மனுவின் புதல்வி, இவள் ருசி யென்பவரை மணந்து யக்ஞ புருஷனையும் தக்ஷிணையையும் பெற்றாள். 722

இவள் மணஞ்செய்து கொடுத்த காலத்தில் மகனைப்பெற்றால் தனக்குக் கொடுக்கவேண்டு மெனக் கேட்டுக்கொண்டபடி இவள்பெற்ற மகனை மனு எடுத்துச் சென்றார். 723

இக்துவாகு : இவ்வரசன் மக்கள் நூற்றுவரில் நிமியென்பவன் ஒருவன். அவன் மரபைச் சுகர் பரீட்சித்துக்கு விரித்துக் கூறினர். இவன் யாகம்புரிய வசிட்டமுனிவரை அழைப்ப அவர் அரசனைநோக்கி இந்திரன் யாகம்செய்யத் தொடங்கி ஐந்நூறாண்டுகள் ஆயின; இன்னும் ஐந்நூறாண்டில் முடியும்; பின் நீ வேள்விபுரிக என்றார். 2381 - 2

இடபன் : இவனுக்கு நூறுமைந்தர் தோன்றினர் ; இவர்களுள் ஒன்பதின்மர் துறவுபூண்டனர். எண்பத்துஒருவர் வேதிய ராயினர்; பரதனும் மற்ற ஒன்பதின்மரும் உலகமாண்டனர். 1140

இவன் துறவறத்தை எடுத்துரைத்தும் வங்கம் முதலிய நாடுக ளில் ஊமர்போலிருந்தும் முத்தி பெற்றனன். 1141

இடைமடந்தையர் : யாதவகுலத் துதித்த பெண்கள். 2902

இந்திரசாவர்னி : இவன் 14-ஆம் மனு; இவன் காலத்து இந்தி ரன் சுசி ; தேவர் பவித்திராதிபர் ; அக்கினி முதலியோர் சப்த ரிஷிகள் ; திருமால் பிரஹத்பானுவென்று உதித்து உலகைக் காப்பார். 1935

இந்திரசித்து : இவன் இராவணன் மகன். அவன் இவனை அடைந்து இராமனையும் இலக்குவனையும் அழித்து வரும்படி வேண்டினன். இவன் ஆகாயத்தில் மறைந்து நாகபாசத்தால் இராம லக்குவரைக் கட்டினன். பின் கருடன்வரவே அது நீங்கிற்று. 2325 - 6

இவன் மறுபடியும் வானரர் அஞ்சும்படி போர்க் களத்திற் புகுந்து பிரமாத்திரத்தை விட வீடணன், சாம்பவான், அனுமான் என்பாரைத்தவிர மற்றையோர் பூமியில் விழுந்து வருந்தினர். 2329 - 30

போர்க்களத்திலிருந்து மாயையால் அகன்று போய் நிகும்பலை யென்னுமிடத்தில் ஒரு வேள்வி இயற்றினன். இலக்குவன் அங்கே வானர சேனையோடு சென்று அனுமான் தோளில் ஏறி இந்திர சித்தோடு போர் செய்தான். இலக் குவன் சந்திரன் கணையை ஏவ இந்திரசித்து இறந்தான் 2232 - 4

இவன் தன்னை விழுங்கிய விருத்திராசுரன் வயிற்றைப் படைக்கையால் பிளந்து புறப்பட்டனன். 1502

விருத்திராசுரனைக் கொல்லும்படி முனிவர் இவனை வேண்டினர் ; இவன் முன்னமே தனக்கு விசுவரூபனைக் கொன்ற பழி வருத்தினமையால் அப்படிச்செய்ய இசைந்திலன். முனிவர் திருமாலின்மேல் அன்புகொண்டு பரிவேள்வி இயற்றிடின் நீங்குமென்றனர், 1506 - 8

இவன் முனிவர் கூறியபடியே விருத்திரனைக் கொல்ல அப்பழி சண்டாளபெண்ணின் வடிவமாகி இவனைப் பற்றியது. இவன் அதற்கு அஞ்சி மானதவாவியிலுள்ள தாமரை நாளத்தில் ஒளிந்து ஆயிரம் ஆண்டு மறைந்திருந்தான். 1509 - 10

மானத வாவியில் ஒளிந்த இவனை மறையோர் அழைத்துப் பரிவேள்வி இயற்றுவித்தனர். இவன் அதனல் விருத்தகத்தியினல் உண்டான பாவம் நீங்கப் பெற்றான். 1513

இவன் புலோமசையின் நலந்துய்த்தான், இவனை யடைந்த இந்திராணி சயந்தன் முதலிய மூவரைப் பெற்றாள் 1556

இவன் திதியின் வயிற்றினுள் புகுந்து அவள் கருவை ஏழு கூறுகச் சிதைத்து அவை ஒவ்வொன்றையும் பின்னும் எவ்வேழு கூறுகச் சிதைத்தான் 1575

இவன் திதியின் கருவைச் சிதைத்தபோது அது அழியாமல் எங்களை அழிப்பது என் என்று இந்திரனைக்கேட்ப அவன் வயிற்றைவிட்டு வெளியே வந்தனன் 1576

இவன் நமுசி தன்னேடுசெய்த போரில் வலனும் பாகனும் மடிய வச்சிரத்தால் கொன்று அதனை நமுசிமேல் ஏவினன். அது அவன்கழுத்தை அறுக்காமையால் புலம்பினான். 1897

தன் வச்சிரம் நமுசி கழுத்தை அறுக்காமற்போகவே ஆகாயவாணி நுரையைவிட்டு அவன் உடலை மாய்க்கவேண்டுமென அங்ஙனமே கொன்றான். பின் பிரமதேவரும், நாரதரும் அங்கேவந்து போரை விலக்கினர் 1898 - 9

இமய மலை : இதனைக் கன்றாகக்கொண்டு மலைகள் மணிகளைப் பூமிதேவியிடமிருந்து கறந்தன. 964

இயக்கர் : தாமிச்சிர முதலிய அவிச்சையிற் பிறந்தோர். 557

இரண்மயம் : ஒரு தேசம். 244

இரண்மயம் : இது சுவேதவரைக்கு வடக்கிலும், சிருங்கத்தின் தெற்கிலும், ஒன்பதினாயிரம் யோசனை யகன்று, கீழ் கடல் மேல் கடல்களை அளாவி நீண்டுள்ளது. 1204

இரண்மயன் முதலினோர் புகழ மலைபோன்ற ஆமை வடிவின ராகித் திருமால் இவ்வருடத்தில் உறைவார். 1244

இரம்மிகம்: இதன் தெற்கு நீலமலை ; இதன் வடக்கு சுவேத வரை ; மேல்கடல் கீழ்க்கடல்களை யளாவி நீண்டிருப்பது ; புண்ணியம் புரிந்தோர் வாழ்வது. 1203

இரம்மிகவருடம்: இவ்வருடத்தில் ரம்மிகன் முதலினோர் சேர்ந்து கடையுகக்கடல் நீரிலிருந்து பன்றியாய்ப் பாரை வந்தினை யென்று பரவ மீன்வடிவாய்த் திருமால் விளங்குவர். 1243

இரணியன் : இவன் திதியின் மகன். 541

இவன்மக்கள் பிரகலாதன், அநுகலாதன், சங்கலாதன், கலாதன், சிங்கிகை யென்போர். 1559

இவன் இரணியாக்கனைத் திருமால் பன்றியாகிக் கொன்றதைக் கேட்டு மனம் புழுங்கி, உயிர்களை எல்லாம் சமமாகக் கருதாமல் திருமால் தேவரைச் சேர்ந்தனன் என்று திருமாலின் வடிவமான வேள்விகளை யழித்து அவற்றைப் புரியும் அந்தணரை அழித்துவிடும்படி கட்டளையிட்டான். 1605 - 7

இவன் தன்தம்பி மனைவியையும் தேவர்களை வெருட்டினோரையும் தன் தாயையும் வசமாக்கித் தத்துவம் கூறினன். 1611

இவன் தாய்க்கு உபதேசித்துத் திதியிடம் விடை பெற்று அழியாத வுடல்பெற வேண்டி மந்தர மலையை அடைந்து தவம்புரிய அவன் உச்சியிலிருந்து மண்டிய புகைப் படலம் விண்ணிற்சென்று வருத்தத் தேவர் பிரமதேவரை அடைந்தனர். 1620 - 22

இவன் விரும்பியவற்றை யெல்லாம் கொடுக்கும்படி தேவர் பிரமதேவரை வேண்டினர். பிரமதேவர் இரணியன் தவஞ் செய்தமையால் புற்று மூடிய உடம்பில் தன் கமண்டல நீரைத்தெளித்து அவன் வேண்டியவற்றை யெல்லாம் ஈந்தனர். 1623

இவன் எவ்விதத்தாலும் சாகாத வரம் பெற்றான் ; தன்னைக் குறித்து மறையவர் வேள்விபுரிய விளங்கினன் ; வேதம் ஓதத் தொடங்குமுன் அரிஓம் என்பதை மாற்றித் தன்

பெயரைக் கூறும்படி செய்தான், முனிவரும் இவனைக் குறித்தே தவஞ்செய்யக் கட்டளை யிட்டனன் 1625 - 6

இவனுக்கு வருணன் முத்துக்களை அளித்தனன்; தேவர் பல இடங்களில் நின்று வாழ்த்தவும் இருநிதிகள் விரும்பிய எல்லாவற்றையும் கொடுக்கவும் பதினாலுலகமும் காத்தனன். 1628

இவன் கொடுமையைத் தாங்கமாட்டாத தேவர் திருமாலை அடைந்து துதிக்க அசரீரி சிலநாளில் இரணியன் தன் மகனைக்கோபிக்க திருமால் அவனை அழிப்பார், என்று கூறத் தேவர் தம்மிடம் சென்றனர். 1631 - 2

இவன் புதல்வர் நால்வருள் பிரகலாதன் ஒருவன். இவன் இளம் பருவத்திலேயே திருமால் பக்திமிக்கவன். இவனை 'வெள்ளி மைந்தர்பால் நீ கற்றது என்' என்று கேட்ப இவன் திருமால்நாமம் சொல்லக் கற்றதாகக் கூறினன். 1633-41

இவன் பிரகலாதன் விடையைக்கேட்டுச் சினந்து 'என் தம்பியைக் கொன்றவன் பெயரைக் கற்பித்தமை நன்று' என்று கூற வெள்ளிமைந்தர் தாம் கற்பிக்கவில்லையென்று கூறினர். 1642 - 3

இவன் பிரகலாதனை வேலாற் பிளக்கவும், பாம்புகளைக் கொண்டு கடிப்பிக்கவும், திக்கு யானைகளைக் கொண்டு போரிடவும், மலைகளைக்கொண்டு எறியவும், கடலில் எறியவும் கட்டளையிட்டான். அவன் இறவாமையைக் கண்டு மறுபடியும் அறம் முதலிய முப்பாலைக் கற்கும்படி ஏவினன். பிரகலாதன் தன்னோடு ஒத்த சிறுவர்களுக்குக் குருவின் அற்றம் நோக்கி உபதேசித்தான். 1648 - 55

தன்மகன் பிரகலாதன் திருமாலுண்டென்று கூறலும் உளனோ என்று கேட்க அவன் எங்கும் உண்டென்றான். உடனே இரணியன் தூணிலடிக்க நரசிங்கம் அதிலிருந்து தோன்றியது. இரணியன் அதனோடு போர்செய்து தோற்றுவிட, நரசிங்கம் தன் தொடையில் அவனைக்கிடத்தி மார்பைப் பிளந்து குடலை மாலையாகச் சூடியது. 1685 - 92

இரணியாக்கன்: இவன் ஆதிவராகத்தினிடம் தன் புவியைக் கவரலென்றது. 495

இரமியகம் : ஒரு தேசம். 244

இராக்கதர் : தாமிச்சிரமுதலிய அவிச்சையிற் பிறந்தோர். 557

இராது : இதுவும் கேதுவும் ஒரிராசியில் ஒன்றரையாண்டு பொருந்தும். 1313

இராதுமண்டிலம் : இதற்குக் கீழே முறைமுறையே பதினாயிரம் யோசனைகளுக்குக் கீழே சித்தர், வித்தியாதரர், யக்ஷர், அரக்கர், பூதம், பிரேதம், பேய், மழை, பறவை சேரும் இடங்களுள்ளன. 1287

இராசசூயம் : ஒரு யாகம். இதைச் செய்தவன் வருண பதமும் சந்திர பதமும் அடைவன். 3936

இராமபிரான் : சீதை பூமியில் மறைந்தவுடன் பூமியைக் கொல்லுவேனென்று தொடங்கியவுடன் பிரமதேவர், கோபம்தவிரும்படி கூறிச் சீதை வைகுந்தம் அடைந்தாளென்றும் சொன்னார். அதன்பின் தம் மைந்தரைத் தழுவி உச்சி மோர்ந்து பதின்மூன்றாயிர வருஷம் அரசு புரிந்தான். தன்புதல்வர்க்கும் தம்பிகளின் புதல்வருக்கும் முடிசூட்டி இராமபிரான் சரயு நதியை அடைந்தான். 2370 - 3

இவர் கோசிக முனிவரோடு இலக்குவனும் பின்தொடரப் போய்த் தாடகையை வதைசெய்தார். யாகசாலையில் தாடகை புதல்வரில் ஒருவனைக் கொன்று ஒருவனைக் கடலில் வீழ்த்தினர். அதன்பின் அகலிகை சாபம் அகற்றி மிதிலை அடைந்தார். 2230 - 32

இவர் விதேக நாட்டு அரசனான ஜனகன் எதிர்கொள்ள அந்நாட்டை அடைந்து, சீதையை மணஞ்செய்யும் பொருட்டு வில்லை வளைத்து அவளை மணஞ்செய்தார். இலக்குவன் முதலிய மூவரும் பிறமகளிரை மணஞ்செய்து கொண்டனர். 2234 - 6

சீதையை மணந்தபின் மிதிலையில் சிலநாளிருந்து தம்பிமார் சூழ்ந்துவர அயோத்தியை நோக்கிச் செல்லும்போது பரசுராமரது வில்லை வளைத்து அயோத்தியை அடைந்தார். 2237 - 8

கோசல நாட்டிலுள்ள சராசரம் அனைத்தும் சுவர்க்கத்தை அடைய அருள்புரிந்து தன் தம்பிமாரோடும் வைகுந்தம் அடைந்து முன்போல் வீற்றிருந்தார். 2374 - 5

இவன் மாரீசனைக் கொன்றுவிட்டு திரும்பும்போது இலக்குவன் வருவதைக்கண்டு சீதையைவிட்டு வந்த காரணத்தை வினவ அதைக் கூறியபின் இருவரும் பர்ணசாலையை யடைந்தனர். அங்கே சீதையைக்காணமல் சுற்றிலும் தேடி துன்பக்கடலில் ஆழ்ந்தார். 2275 - 6

சுக்கிரீவன், அனுமான், நீலன் முதலியவரோடு புறப்பட்டுத் தெற்கே கடலின் கரையில் இராமபிரான் தங்கினன். இதைக்

கேள்வியுற்ற இராவணன் தன் மந்திரிமாரொடு ஆலோசித்தான். விபீடணன் சீதையை விடும்படி கூற இராவணன் தன்னைவிட்டு நீங்கும்படி கூறினன். 2303 - 7

தான் கருதியவுடன் வருணன் வந்தவுடன் விழி சிவந்து இராமபிரான் கடல்மேல் அம்பை எய்தனர். அதை யறிந்த வருணன் இராமனை யடைந்து தன்மேல் அணை அமைக்கும் படி வேண்டினன். வானரர்கள் மலைகளைப்பிடுங்கியிட நளன் நூறுயோசனை நீளம் அணையை அமைத்தான். 2310 - 12

இராமபிரான் மாதலி இந்திரன் ஏவலாற் கொணர்ந்த தேரில் ஏறி இராவணனோடு போர் செய்தான். இராம ராவண யுத்தத்திற்கு அதுவே உவமை கூறும்படி அமைந்தது அப் போர். இராமன் பிரமாத்திரத்தை ஏவ இராவணன் மடிந்தான். 2337 - 60

புட்பக விமானத்தில் இலங்கையிலிருந்து கிட்கிந்தையை யடைந்து சுக்கிரீவன் மனைவி முதலியவானர மகளிர் சீதையைச் சூழப் புறப்பட்டு இடையேயுள்ள முனிவர் சாலைகளைச் சீதைக்குக் காட்டிக்கொண்டே சென்றான். பின்பு பாரத்துவாசர் ஆச்சிரமத்தில் தங்கி விருந்துண்டு குகனோடு வரும்போது அனுமானை அனுப்பித் தன் வரவை நந்திக் கிராமத்திலுள்ள பரதனுக்கு அறிவித்தான். 2342 - 3

தன் தமையன் வரவுகேட்ட பரதன் சத்துருக்கனனோடும் இராமபிரானை எதிர்கொள்ளுமாறு வந்து வணங்கி இராமன் விமானத்தினின்று யிறங்கித் தம்பியரைத் தழுவி, பின்பு இலக்குவனோடு தாயாரை வணங்கிக் குலகுருவாகிய வசிட்ட முனிவரைத் தொழுதான். 2344

இராமபிரான் நந்திக்கிராமத்தில் தம்பியரோடும், வானரரோடும் விபீடணன் குகன் முதலியவரோடும், சந்தனம் முதலியவற்றால் தன்னை அலங்கரித்துக்கொண்டு புட்பகத்தைச் சுமந்திரனிடம் செல்லுமாறு அனுப்பினன். 2346

இராமபிரான் சேனை சூழவும், வாத்தியங்கள் முழங்கவும் சுக்கிரீவன், விபீடணன் கவரி வீசவும், அனுமான் குடை பிடிப்பவும், பரதன் தேரைச்செலுத்தவும் அயோத்தியை யடைந்தான். மக்கள் மகிழ்ச்சியடைய ஊரை அடைந்து வசிட்டர் முடிசூட்ட அரசனாகி ஆண்டனன் பல யாகங்களைச் செய்தனன். 2347 - 59

இராமபிரான் பொன்னுல் சீதையின் வடிவம் அமைத்துப் பத்து அசுவமேதம் இயற்றி, யாகசாலையில் தன் சரித்திரத் தைப் பாடிய தன் புதல்வருக்குப் பல பொருள்களை அளித் தான். 2367

குசலவர் பொருள் பெறுதல் முனிவர்க்குப் பொருந்தா தென்று போக இராமபிரான் சீதையை யடைவேனென்று சபையில் சூளுரைத்தான். 2368

இவர் ஏவலால் தூதர்போய் வான்மீகியிடம் சொல்ல அவர் சீதையைக்கொண்டுவந்து அவையில் நிறுவிக் கற்பாற் பழிப் பில்லாதவ ளென்று கூறினர். சீதையும் தான் கற்பிற் சிறந் தவளானுல் இடம் தரும்படி பூமிதேவியை வேண்டப் பூமி வெடித்துத் தனக்குள்ளே அடக்கிக்கொண்டனள். 2370

இராமன் : மாயவன் அமிசாவதாரம். 4

கடலிற்கட்டிய அணையால் கடலைக் கடந்து சுவேத மலையை யடைந்து தங்கியபோது இராவணன் தூதரான சுக சாரணர் வர அவர்களை எல்லாவற்றையும் பார்த்து இராவணனுக்கு அறிவிக்க இராமன் கூறியனுப்பினன். இராவணன் கோபுரத் திலிருந்து வானர சேனையைநோக்க இராமனும் இலங்கையை நோக்கினுன். சுக்கிரீவன் இராவணன் மேல் தாவி அவன் கிரீடத்தை வீழ்த்தினன். 2313 - 6

இராமபிரானும் இராவணனும் செய்த போரில் தேர்ப்படை களை இழந்து இராவணன் நிலத்தை அடைந்தான். அவனிலை கண்டிரங்கிய இராமபிரான் இன்றுபோய் நாளை வாவெனக் கூறினுன். 2318 - 20

மழைக்காலம் நீங்கவும் வராத சுக்கிரீவனை அழைத்து வரும் படி ஏவ, இலக்குவன் கிட்கிந்தையை யடைந்து தெரிவிக்கச் சுக்கிரீவன் இராமன் இருக்குமிடத்தை அடைந்தான். 2286

தென்றிசைக்குச் சென்ற அனுமானிடம் தன் மோதிரத்தை அளித்தனன். அனுமான் முதலிய நால்வரும் தென்றிசையை நாடி சுயம்பிரபை உறையும் பிலத்துட் புகுந்து அவளால் மகேந்திர மலையை அடைந்தார்கள். 2288 - 9

இராவணன் : தன் மகனுன இந்திரசித்து இலக்குவனுல் இறந்த தைக் கேள்வியுற்று வருந்திப் பின்பு மூலபலத்தை அனுப்பி னுன். இராமன் அச்சேனையை ஏழே நாழிகையில் வென் றுன். பின்பு இராவணன் தானே போர்செய்ய வந்தான். 2335 - 6

இராவதி : இவள் உத்தரன் மகள்; பரீட்சித்தின் மனைவி. 228

இருசிகன் : இருசிக முனிவர் காதியை யடைந்து தனக்குச் சத்தியவதியை மணஞ்செய்து தரும்படி வேண்டினர். அரசன் சந்திரனைப்போன்ற வெண்ணிறமும் ஒரு செவி பசுமை நிறமும் உடைய ஆயிரம் குதிரைகளைக் கொடுத்தால் கொடுப்பதாகக் கூறினன். 2449

இவர் தன்மகளைத்தர மனம் பொருந்தாமல்பேசும் குதிரைகளை வருணனிடமிருந்து பெற்றுக்கொண்டுவந்து கொடுத்து சத்தியவதியை மணந்தனர். மகப்பெற விரும்பிய தன் மனைவிக்கும் தன்மாமியார்க்கும் தம் குலத்துக்குரிய புதல்வர் உண்டாகவிரும்பிப் பிராமணருக்குரிய மந்திரத்தாலும் அரசர்க்குரிய மந்திரத்தாலும் உண்டாக்கிய இருவகையான சருவை மாறி அவ்விருவரும் நுகர்ந்தனர். கருவுற்ற தன் மனைவியை நோக்கி இருசிகன், நீ தாய்க்கு உன்கருவை அளித்தாய். தாய்க்குரியதை நீ உண்டாய். ஆதலால் நீ கோபமுடைய மகனைப் பெறுவாய் 'தாய் மனத்துக்கு இதம்செய்யும் மகனைப்பெறுவாய்' என்றனர். 2450 - 3

இரேவதன் : ஆனர்த்தன் குமரன். இவனுடைய பெண் இரேவதி. 3399

இரேவதி : இரேவதனுடைய பெண், பலராமனுடைய மனைவி. 3399

இரைவதன் : இவன் ஐந்தாம் மனு; தாமதனுக்குத் தம்பி; விபு இந்திரன்; பூதரயன் முதலியோர் தேவர்; வேதசிரிடன் முதலியோர் எழு முனிவர். 1815

இலக்கணை : பிருகத்சேனன் மகள். கண்ணனுடைய மனைவி. 3612

இலக்குவன் : இராவணன் அனுப்புதலால் போர் செய்யவந்த அதிகாயனைப் பிரமாத்திரத்தால் கொன்றான். 2323 - 4

இவன் புதல்வர் அங்கதன், சந்திரகேது என்பவர். 2366

சீதை மாரீசன்மொழியை மெய்யென நம்பிய போது இலக்குவன் அஃது அன்று என்று மறுக்கவும் சீதை பல கொடுஞ் சொற்களைக் கூற இலக்குவன் சென்றான். 2272

இலங்கை : சம்புத்தீவைச் சுற்றியுள்ள தீவுகளுள் ஒன்று. சகரர் சம்புத்தீவைத் தோண்டினமையால் உண்டாயிற்று; அரக்கர் வாழ்வது. 1257

இல்லறத்தார் : இவர் எண்ணெய் முதலியவற்றைப் பயன்படுத்தலும், உரிய நாட்களில் தம்மனைவியரைச் சேர்தலும், தேவர், முனிவர், தென்புலத்தவர்க்குரிய கடன்களைச் செய்தலும் பின்பு காட்டிற்குச் செல்லுதலும் கடமையாகும். 1729 - 30

இளன் : இவன் ஒரு நாள் வேட்டையாடச் சென்றபோது மேரு மலையின் பக்கத்திலுள்ள சுகுமார வனத்தில் சென்றவுடன் பெண்ணுயினன் அவனுடன் சென்றோரும் பெண்ணுயினர் ; குதிரைகளும் பெண் குதிரைகள் ஆயின. இதன் காரணத்தைப் பரீட்சித்து வினவச் சுகர் கூறினர். 2044

இவன் புருடனாகிய நாளில் தன் மனைவியின்பால் பல சிறுவரைப் பெற்றனன். இவன் தன் மக்களாகிய உதகலன், கயன், விமலன், என்னும் மூவரைத் தென் திசைக்கு அரசராக்கினன். 2049

இளா விரதம் : ஒரு தேசம். 244

இது நீலம், நிடதம், மாலியவான், கந்தமாதனம் என்னும் நான்கு மலைகட்கு உட்பட்ட வர்ஷம். 1199

இளா விரத வருடம் : இது மேருவின் மேற்கேயுள்ளது ; இதிலுள்ள கடம்ப மரத்தின் புழையைச் சேர்ந்த தேன் ஆறாக ஓடும் ; அதை அருந்தினர் உயிர்ப்பு நூறுயோசனை தூரம் பரிமளிக்கும். 1221

இளா விரதம் : இவ்வருஷத்தில் அரம்பையர் அளப்பில்லாதவர் சூழத் திருமால் அனந்தனென்ற பெயரோடு அங்கே யுறைவார். மால் கலையான அனந்தனை வணங்கி ஈசன் வாழும் அவ்விடம் சேர்வோர் உமையின் சாபத்தால் மகளிராவர். 1239-40

இளை : இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி ; மரங்களையும் கொடிகளையும் ஈன்றவள். 1420

வைவச்சுதனுக்குச் சிரத்தையிடம் தோன்றிய பெண். அரசன் பெண் பிறந்த காரணத்தை வசிட்டரிடம் கேட்க அவர் அதைக் கூறித் திருமாலைப் போற்றி ஆண் ஆக்கினர். 2042

இளன் சிவபெருமான் சாபத்தால் பெண்ணாகிப் பெற்ற பெயர். இவளைச் சந்திரன் மகனான புதன் சேர்ந்து புரூரவாவை ஈன்றான். இவன் பெண்ணுரு அடைந்தமையைக் கேட்ட வசிட்டர் அரனைப் போற்றி ஒரு மாதம் பெண்ணாகவும் ஒரு மாதம் ஆணாகவும் வரம் பெற்றார். 2047-8

உக்கிரசேனன் : வடமதுரைக்கு அரசன். தேவகன் தமையன, கம்சனின் தந்தை. 3230

உசத்தியன் : இவன் சிரத்தைக்கும் அங்கிராவுக்கும் மகன். 712

உசிரதேயம் : இந்நாட்டு அரசன் போர்க்களத்தில் பகைவரால் இறப்ப அவன் மனைவி மக்கள் அங்கே கூடி அழுதனர். யமன் சிறு குழந்தை வடிவமாகி அங்கே வந்து உபதேசித்தான். 1614 - 5

உத்தமன் : உத்தானபாதன் மகன் ; இவன் அரக்கனால் கொல்லப் பட்டான். 878

உத்தமன் : இவன் பிரிய விரதன் பெற்ற மகன் ; மூன்றாம்மனு ; இவன் காலத்தில் சத்தியசித்து வானவர்க் கிறைவன்; சத்தி யர் முதலியோர் அமரர் ; இவர்கள் துணையெனத் தரும னுக்குப் புத்திரனாகிய மால் அரக்கர் முதலிய கொடியவர் களைக் கொன்றார். வசிட்டர் முதலியோர் எழு முனிவர். 1772 - 3

உத்தா குரு : ஒரு தேசம். 244

இது சிருங்கிவரைக்கு வடக்கிலும், கடலுக்குத் தெற்கிலும், வளைந்த பிறை வடிவம் போன்றும், இருட் கடலுற நீண்டு நடுவில் ஒன்பதினாயிரம் யோசனை யகன்றுள்ளது. 1205

பூமிதேவி என்னைத்துகள் போலக் கொம்பி லேந்தினை யென்று புகழ்ந்து வணங்கத் திருமால் வராகமூர்த்தியாய் இங்கே உறைவார். 1245

உத்தரை : இவள் கருவை அபாண்டவாஸ்திரம் துன்புறுத்தியது. 86

உத்தவர் : பிரகஸ்பதியின் சீடர் ; கிருஷ்ணனிடம் தத்துவோப தேசம் கேட்டவர். 4371

முற்பிறப் பில் வசுக்களுள் ஒருவர். 403

முனிவர் போற்ற வெதரிகாச்சிரமத்தில் வீற்றிருந்தது. 409

உத்தவன் : இவர் கிருஷ்ணனால் கோபிகளைச் சமாதானஞ் செய் விக்க அனுப்பப்பட்டவர் கிருஷ்ணனுக்கு மந்திரி, 3285

உத்தான பாதன் : சுவாயம்புவ மனுவின் மகன். 488

உபநந்தன் : இவன் நந்தகோபனுடைய தம்பி. 2788

உபேந்திரன் : கோசத்தின் அதிட்டான தேவன். 640

உருக்குமி : விதர்ப்பனுடைய மகன் ; உருக்குமிணியுடன் கூடப் பிறந்தவன். 4303

உருக்குமிணி: விதர்ப்பனுடைய பெண்; கண்ணனுடைய மனைவி. 3400

உருத்திரசாவன்னி : இவன் பன்னிரண்டாம் மனு; இவன் காலத்து இந்திரன் இருதுதாமன்; ஹரிகன் முதலியோர் தேவர்; தபோமூர்த்தி முதலியோர் சப்த ரிஷிகள்; திருமால் சுதாமனென்று உதித்து உலகை அளிப்பார். 1933

உருத்திரர் : உருத்திர கணத்தைப் படைத்தது. 482

வீரம் அருளல். 328

உருத்திரன் : அழுதலாற் பெற்ற பெயர். 480

அகங்காரத்தின் அதிட்டான தேவதை. 635

உரோணி : நந்தகோபனுடைய மனைவி; பலராமனின் தாய். 2751

உலோகா லோகமலை : இது பொன்னுலகத்தை வளைந்துள்ளது; இதனுட்பட்ட பார் குறுக்கும் நெடுக்குமாக ஐம்பது கோடி யோசனை பரப்புடையது; இதன் அப்பால் சந்திர சூரியர் உலவா உலகம் உள்ளது. 1279

இதனைச் சுற்றிக் கரிய நீரையுடைய கடலுள்ளது; அக்கடலை இருட் சூழாம் வளைக்கும்; அதனை அண்டச் சுவர் சூழும் பதினுலுலகும் பொதிந்த அண்டச்சுவரை அதைக் காட்டிலும் பதின்மடங்காய்த் தெளிந்த நீர் சூழும். 1280

உலோபம் : நிந்தனையை மணந்து கோபத்தையும் கொலையையும் பெற்றது. 817

உற்கலன் : துருவன் மகன்; இவன் திருமாலின்மேல் உள்ள பத்தியால் உலகத்தை வெறுத்தவன். 901

உன்முகன் : இவன் புதல்வர் அறுவர்; இவருள் அங்கன் சக்கரவர்த்தியாயினன். 911

சாக்ஷுஷ மனுவின் மகன்; மனுவுக்குப் பின் அரசனானவன். 910

உன்னதி : இவள் தக்கன் மகள்; தரும தேவதையை மணந்து தருப்பனைப் பெற்றாள். 733

ஊர்வசி : மித்திராவருணரென்பவரிட்ட சாபத்தால் பூமியை அடைந்த இவள் புரூரவா வேண்டியபடி, தான் நெய்யையுண்டு நெடுங்காலமிருப்பதாகவும், தனக்கு உணவு உதவவந்த ஆடிரண்டையும் காக்க வேண்டுமெனவும் அந்த ஆடுகள் காணாமற்போனால் தேடாதிருந்தாலும் அவன் துகிலின்றி வரக் கண்டாலும் நீங்குவதாகவும் கூறினள். 2416-20

இவள் புரூரவாவோடு நெடுங் காலம் இன்பம் அனுபவித்து வருங் காலத்தில் இந்திரன் இவள் இல்லாமையால் தன் சபை பொலிவற்றிருப்பதை உணர்ந்து சில கந்தருவரை ஏவினர்; அவர்கள் நடு இரவில் ஆடுகள் கத்த அவற்றைப் பிடித்த வுடன் ஊர்வசி அதைக் கேட்டு மனம் நொந்தாள். 2423

இவளோடு கூடியிருந்த புரூரவா துகில்நீங்கச் சென்று அந்த ஆடுகளை மீட்டுக் கொண்டு வந்தான். துகில் இல்லாமல் தன்பால் வந்த அரசனைக் கண்டதும் அவள் தன் சூளுரை யின்படி தேவலோகம் சென்றாள். 2424

ஏது : இவன் யயாதிக்குத் தெய்வ யானையிடம் தோன்றியவன்; கண்ணபிரான் தோன்றும் புண்ணியமுடைய மரபு. ஏதுவின் புதல்வர் சகத்திரசித்து, குரோட்டன், நளன், ரிபு, என்னும் நால்வர். இவருள் சகத்திர சித்தின் சேய் சதசித்து 2588-9

ஏது தலம் : கண்ணன் உதித்ததினால் பெருமை பெற்றது. 2644

ஏமகூட வெற்பு : கீழ் கடலுக்கும் மேல் கடலுக்கும் நீண்டுள் ளது, ஒன்பது வருஷங்களுக்கும் வரம்பாகும். 1196

ஏழுமலை : இவை ஒவ்வொரு தீவிலும் இருபுறத்தும் திரைக் கடலை யுறக் குறுக்காகி அவ்வருடம் வரம்பாக ஏழு நதி களுடன் இருக்கும். 1265

ஐராவதம் : இந்திரனுடைய வெள்ளை யானை. இது பாற் கடலில் தோன்றியது. நான்கு கொம்புடையது. ஒருமுறை துர்வாசர் சாபத்தால் காட்டானையாயிற்று அஷ்டதிக்கஜங்களிலொன் றாய்க் கீழ்த்திசையிலிருப்பது. 2991

ககுத்தன் : தேவர் அசுரர் வெருட்டுதலால் தம் ஊரைவிட்டு ஓடித் திருமாலடியிணையை வணங்க அவர் புரஞ்சயனிடம் தம் கலை பொருந்துமென்றும் அவனால் அசுரரை வென்று மீட்டும் தேவலோகத்தை அடையும்படி கூறினர். தேவர் புரஞ்சயனை யடைந்து கூற அவன் இந்திரன் தனக்கு வாகன மாய்வரின் முடியுமென்றான். 2108 - 9

இந்திரன் புரஞ்சயனை விடையாகித் தன் முதுகில் தாங்கப் புரஞ்சயன் அசுரரை வென்று தேவரைக் காத்தான். காளை யின் முரிப்பில் உறைந்ததனால் புரஞ்சயன் ககுத்தனென்று பெயர் பெற்றான். இந்திரன் காளை வடிவமெடுத்துப் புரஞ் சயனை ஏந்தலால் இந்திரவாகன னென்றும் ஒருபெயர் பெற் றான். இவன் அனேனசு என்பவனைப் பெற்றான். 2110-11

க்துபு : இவள் தக்கன் மகளிருள் ஒருத்தி; தருமன் மனைவி; சங்குவேனைப் பெற்றவள் 1409

கங்கை : இது தன்னை மனத்தில் நினைப்பினும், இதன் பெயரை நின்ற இடத்திற் புகழ்ந்தாலும், கண்டாலும், நீரில் முழுகினும் பெரும் பேற்றை யளிப்பது; முத்தியையும் கொடுப்பது. 1232

இதில் தங்குலப்பிதிர்களைக் கருதி தருப்பணத்தை ஒரு முறை செய்தால் அப்பிதிரர் நரகத்திருப்பினும் திருமால் பதஞ் சேர்வர். பாவிகளாய்க் கொடுந்தொழில் செய்பவரும் தம் எலும்பு இதில் ஒரு வகையாற் சேரின் சுவர்க்கத்து உறைவர். 1233

இறந்தவர் எலும்பு கங்கையை யடையின் சுவர்க்கத்தே செல்லுவரென்றால் உயிருள்ளபோது நீராடியவர் பெறும் பேறு சொல்லுதற்கு அரியது. 1235

கசேந்திரன் : இது தன்னைப்பற்றிய முதலையை இழுக்கவும் முதலை இதனை இழுக்கவும் ஆயிரம் ஆண்டு போர் புரிந்தது. யானை தன் பலம் ஓய்ந்து துதிக்கையை நீட்டி ஆதிகாரணன் வந்து தன்னைக் காக்கும்படி அழைத்தது. இது அரன் அயன் முதலியோர் செவியில் விழவும் அவர்கள் அப்பொருள் யாம் அல்லேமென இருந்தனர். 1802-5

இதன் அழைப்பைக் கேட்ட திருமால் இது இருக்கும் குளக்கரையை அடைந்து சக்கரத்தை வீசி முதலையைக் கொன்று யானையை விடுவித்தனர். முதலை தன் சாபம் நீங்கி ஊகூ என்னும் வித்தியாதரன் ஆயிற்று. யானையும் அகத்தியரிட்ட சாபம் நீங்கி திருமாலின் சாரூபம் பெற்றது. 1806-1808

இது முற்பிறப்பில் தமிழ்நாடு காக்கும் பாண்டியனாக இருந்தது. இந்திரத்துய்மன் என்பது பெயர். பொதியின் மலையில் இந்திரத்துய்மன் திருமாலை வழிப்பட்டான். அப்போது அங்கே அகத்தியர் வர எழுந்திலன். அதனால் அம்முனிவர் சபிக்க அவன் யானைவடிவம் பெற்றான். 1809-1812

கஞ்சன் : உக்கிரசேனன் மகனுங் கண்ணன் மாமனுமாயுள்ள ஓரரசன். 2648

கஞ்சன் : இவன் பயத்தினால் கண்ணபிரானை நினைந்து முத்தி பெற்றான். 1602

கட்டுவாங்கன் : ஒரு ராஜ ரிஷி; இவன் தேவருக்காகப் போர் செய்தபோது தனக்கு இன்னும் ஒரு முகூர்த்தமே ஆயுள்

உள்ளதென்று அறிந்து பூமியையடைந்து தருமத்தை அறிந்து திருமால் பதத்தை அடைந்தனன். 318

கண்டு முனிவர் : இவர் தவஞ்செய்யும்போது அரம்பை ஒருத்தி இவரை யடைந்து மாரிடை என்பவளை ஈன்றாள். 1088

கண்ணன் : வசுதேவனின் மைந்தன்; நந்தகோபனால் வளர்க்கப் பட்டவன்; துவாரகையைத் தலைநகராகக்கொண்டு அரசாட்சி செய்தவன். அர்ச்சுனனுக்குத் தேர் ஓட்டியவன். 2751

கருமையான நிறத்தை யுடையவனாக இருந்தபடியால் இப் பெயர் பெற்றான்; கம்ஸனைக் கொன்றவன். 2751

கத்துரு : தக்கன் மகளிருள் ஒருத்தி ; காசிபன் மனைவி ; பாம்பு களைப் பெற்றவள். 1415

கந்திருவர் : இவர்கள் பிரமதேவரது காந்தியி னின்றும் தோன் றியவர். 562

கபிலர் : இவர் அஞ்சுமானைநோக்கிக் கங்கை இங்கே வந்தால் இறந்த அரசர் நல்லுலகு எய்துவரென்று கூறிக் குதிரையை யும்கொடுக்க அஞ்சுமான் தன் ஊர்புக்கான் ; சகரன் குதி ரையை மீட்டும் பெற்றமையால் வேள்வியை முடித்து அஞ்சு மானுக்கு முடிசூட்டித் தவஞ்செய்யச் சென்றான். 2177 - 8

இவர் திருமாலின் அவதாரம்; இவருக்கு இப்பெயரிட்டவர் பிரமதேவர். 605 - 6

கபிலன் : இவரைக் கன்றாகக்கொண்டு சித்தர் அணிமா முதலி யன கறந்தமை. 964

கயன் : இவன் மகன் சித்திராதன் ; இவன் மகன் சம்ராட்டு ; இவன்மகன் மரீசி; மரீசியின்மகன் விந்துமான்; இவன்மகன் மது; மதுவின்மகன் வீரவிரதன்; இவன்மகன் மன்னியு; மன் னியுவின் மகன் புவன் ; இவன்மகன் துவட்டா; துவட்டா வின் மகன் விரபன்; இவன் பல புதல்வரைப் பெற்று பிரிய விரதன் குலத்தை விளக்கினான். 1188-1193

கர்க்கர் : ஒரு முனிவர். நந்தகோனுடைய சிறுவர்களுக்குப் பலராமர், கண்ணன் என்று பெயர்வைத்தவர். வசுதேவனால் அனுப்பப்பட்டவர். 2749

கருத்தமன் : இவர் பிரமதேவரது நிழலில் தோன்றியவர். 613

தன் புதல்வியரை மரீசி முதலியோருக்குப் பிரமதேவர் சொற்படி மணம் செய்வித்தது. 607

இவருக்குத் தேவஹூதியிடம் ஒன்பது மகளிர் தோன்றியமை. 601

இவன் மனுவின் மகளை மணந்தவன். 573

கலாதன் : இவன் இரணியனுக்கு மகன்; இவன் புதல்வர் வாதாபி இல்வலன் என்போர். இவ்விருவரும் அகத்தியரைத் தம் அதிதியாகப் பெற்றனர். 1560

கலி : இது பொல்லா வுரையென்னும் பெண்ணைச்சேர்ந்து மரணத்தையும் பயத்தையும் பெற்றமை. 818

சூது முதலியவற்றை இருப்பிடமாகக் கொண்டது. 270

கலை : இவள் கருத்தமன் மகள் ; மரீசியை மணந்தவள். 608

கலை : மேகலை. பெண்கள் இடுப்பில் அணிந்து கொள்ளும் ஒரு வகை ஆபரணம். 2731

கலைமகள் : பிரமாவின் பத்தினி. 2643

கவந்தன் : இவனை இராமபிரான் அம்பினால் இவன் சாபத்தைப் போக்க இவன் அவ்வடிவு நீங்கி இயக்கனாகி இராமபிரானைப் புகழ்ந்து, சவரியிடம் செல்லும்படி இராமனுக்குக் கூறினன். 2280

கவி : இவன் வைவச்சுதமனுவின் புதல்வன்; இவன் பூமி முதலிய எல்லாம் பிரமமென்று பாவித்துப் பிரமமாயினன். 2055

கவுசலன் : மல்லர்களில் ஒருவன் ; கண்ணனுடன் மல் யுத்தம் செய்து இறந்தவன். 3228

கவுசிகன் : இவன் ஒரு மறையோன்; இவன் உடலைச் சித்திரதனென்னும் வித்தியாதரன் தன் மனைவியரோடு கடந்து செல்லுதலால் கீழ் விழுந்தான் ; வாலகில்லியரது சொல்லால் அவ்வுடலை சரசுவதி நதியில் போட்டனன். 1468

கவுதமன் : கங்கைக் கரையில் பரிட்சித்தைக் காணவந்த ஒரு முனிவர் 307

களிற்றுநன்னகரம் : அத்தினபுரம். 273

கற்பகம் : தேவலோகத்தில் உள்ள மரம் ; இது வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றை யளிக்கக் கூடியது. 2811

கற்பன் : துருவன் மகன். 876

கன்மாடபாதன் : இவன் சிராத்தத்தில் நரனூன் அளித்தது அரக்கன் வஞ்சனையென்று அறிந்த முனிவர் தாம் தெளியாமல் கொடுத்த சாபத்தைப் பன்னிரண்டு ஆண்டு அடைந்து ஒழிக

வென்றான். அரசனும் ஒருசாபம் விரைவில் வரும்படி சொல்லக் கையில் நீரை எடுத்தான். 2199

இவன் மனைவி மதயந்தி ; சூரியகுலத்தில் குருவை வெகுண்டவரில்லையென்று தடுப்ப எவ்விடத்திலும் உயிர்களுள்ளன; எங்கே புனலைச் சொரிவதென்று பின் தன் இருபாதத்தில் அப்புனலைச் சொரிந்தான். அதனால் இவன் கால்கள் கருகின. ஆதலால் மித்திரசகன் கன்மாடபாதனென்று பெயர் பெற்றான். 2200 - 1

இவன் காட்டுக்குச் சென்று உயிர்க்கொலை செய்து வாழும் நாளில் தன் மனைவியோடு இன்பம் துய்க்கும் ஒரு பிராமணனைக் கண்டு தன் பசியைப் போக்க அவனை இரு கையாலும் பிடித்தான். அந்தணன் மனைவி கணவனது உயிர்ப் பிச்சையைக் கேட்டு அவன் சாபம்பெற்ற வரலாற்றையும் கூறிச் சிலநாளிற் பழைய வடிவம்பெறுவானென்றும் கூறினள். 2201 - 4

அந்தணன் மனைவி சூரியகுலத்தில் உதித்த அரசர் பகைவரைக் கடிந்து வேதியரைக் காப்பதல்லாமல் கொல்லமாட்டாரென்று விழிநீர்சோரக் கூறினள். அவள் கூறியதைக் கேளாமல் இவன் மறையோன் உடற்றசையை யுண்டு எலும்பை உமிழ்ந்தான். மனைவி அவ்வெலும்பை யெல்லாம் நெருப்பில் சொரிந்து பின்வருமாறு வார்த்தை சொன்னாள். 2205 - 6

அந்தணன் மனைவி, இவனை நோக்கி "சாபம் தீர்ந்து அயோத்தியடைந்து மதயந்தி முதலிய மகளிரைத் தோய்ந்தால் உயிர் நீக்கும்" என்றும் சாபம் கொடுத்து நெருப்பில் விழுந்து இறந்தாள். 2207

இவன் சாபம் நீங்கிப் பழைய வுருவம் பெற்றுக் காட்டை விட்டு அயோத்தியை அடைந்து மதயந்தியைப் புணாவர அவள் இவன் காட்டில் அடைந்த சாபத்தை நினைவூட்டினாள் ; அரசன் மகளிர் போகத்தை மறந்து தன் குருவையடைந்து தனக்கு ஒரு பிள்ளை பிறக்க அருள்புரிய வேண்டினான். 2208-2210

கன்னன் : இவன் துரியோதனன் நண்பன். குந்தி தேவிக்கு சூரியனின் அனுக்கிரகத்தால் திருமணம் நடப்பதற்கு முன்பு பிறந்தவன். அங்க தேசத்துக்கு அரசன். 3600

கன்னியா தீர்த்தம் : அசாமிளன் என்னும் அந்தணன் வாழ்ந்த நகரம். 1372

**காசிபன் :** கங்கைக் கரையில் பரிட்சித்தைக் காணவந்த ஒரு முனிவர். 308

இவன் தக்கன் மகளிராகிய விநதை, கத்துரு, பதங்கி, யாமினி என்பாரை மணந்தனன்; விநதையின் புதல்வர், அருணனும், கருடனுமாவர். 1414

இவருடைய மனைவி அதிதி, பிரியை, தனு, காட்டை, அரிட்டை, சுரசை, இளை, முனி, குரோதவசை, தாம்பிரை, சுரபி, சரமை. திமி என்னும் பதின்மூவர். 1416

**காஞ்சனன் :** இவன் மகன் ஒத்திரன். இவன் மகன் சன்னு. சன்னு தன் வேள்விச் சாலையில் புகுந்த கங்கையை யுண்டு காதின் வழியாக விடுத்தனன். இதனால் கங்கைக்குச் சாநுவி என்றும் பெயருண்டாயிற்று. 2445 - 6

**காட்டை :** இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி; இரு குளம்பல்லாத விலங்குகளைப் பெற்றாள். 1420

**காம்பிலி :** ஒரு தேசம். இது துருபதனின் இராசதானி. 3817

**கார்த்த வீரியன் :** இவன் தமானகவே அத்திரி முனிவரது புதல்வரை அடைந்து அவரருளால் ஆயிரம் கை படைத்தனன். இவன் சந்திர வமிசத்தவன். இவன் மகளிரோடு நருமதையை அடைந்து நீர்விளையாட்டைப் புரிந்தான். 2459- 61

எட்டுத் திசைகளையும் வென்று சேனைகளோடு வந்த இராவணன் நருமதையை அடைந்தான். கார்த்த வீரியன் ஆயிரம் கைகளாலும் நதியை யடைத்து நீராடலும் அதன் நீர் இராவணனை நனைத்தது. இராவணன் நதிப்புனல் தேங்கல் என்னென்று சேனையோடும் பொருந்திப் போர்விளைத்தான். 2462 - 4

இவன் குரங்கினைப் பிடித்துக் கொண்டு வருதல் போல இராவணனைக்கட்டி மாலையில் தன் நகரம் சென்றான் புலத்தியன் இவனை யடைந்து புகழ்ந்து இராவணனை விடுவித்துக் கொண்டு சென்றான். 2465 - 66

இவன் ஒருநாள் வேட்டையாடும் பொருட்டுக் காட்டை அடைந்தான். இவன் சமதக்கினியின் பர்ணசாலையை யடைந்து உணவுண்டான். இவன் அவரிடம் உள்ள காம தேனுவைக் கவர்ந்து தன் நகர் போனான். இதை அறிந்த பரசுராமன் மிகக் கோபம் கொண்டான். 2467 - 70

இவன் எண்பதினாயிரம் ஆண்டு பூமியை ஆண்டு பரசுராமனால் இறந்தான். இவன் மக்கள் ஆயிரவர். அவருள் ஐவர்

பூமியை ஆண்டனர். மற்றவர் பரசுராமனு லிறந்தனர். ஐவர் வமிசம் வளர்ந்தது. 2895 - 96

கார்த்திகை மாதர் அறுவர் : இவர் முருகனுக்கு பால் அளித்தது. 1814

காலகேயர் : இந்த அசுரர் பாற்கடல் கடைந்த காலத்தில் வசுக்களோடு போர் செய்தனர். 1873

காலநேமி : இவன் ஓரசுரன் ; இவன் உபேந்திரனேடு போர் செய்தான். மகிடாசுரன் அக்கியோடும் விரோசனன் விதாதா வோடும் பொருதனர். 1875

இவன் ஓரசுரன் ; இவன் திருமாலின் ஊர்தியானக் கருடன் மேல் கொடிய வேலே விட்டான். திருமால் அதைப் பிடித்து அவன்மேல் எறிய அவன் இறந்தனன். 1890

காளி : தக்கன் வேள்விச் சாலேக்குச் சென்றது. 781

காளிந்தி : யமுனையாற்றின் மறு பெயர். 2790

காளியன் : ஒரு நாகன். கண்ணனல் யமுனே மடுவிலிருந்து கடலுக்குத் துரத்தப்பட்டு ரமணகத் தீவடைந்து தான் பெற்ற கண்ணனடிச் சுவட்டால் கருட பயம் நீங்கப் பெற்றவன். 2845

கிம்புருடம் : ஒரு கண்டம். 243

கிம்புருட வருடம் : இது ஏம கூடத்தின் தெற்கிலும், இமயமலேயின் வடக்கிலும் மாலேபோலக் கடலுற நீண்டு அரிவருடத்தைப் போல அகல முடையதாகி விளங்கும். 1207

இவ்வருடத்தில் வாழ்பவரோடும் அனுமான் அடிபரவ, சீதா பிராட்டியோடும் இராம னென்னும் பெயரொடு திருமால் வாழ்வார். 1247

கிரவுஞ்சத்தீவு : இது செய்க் கடலேப்போல இரு மடங்கு பரப்புடையது ; முருகக் கடவள் எறிந்த கிரவுஞ்சமலே இருந்தமையால் இஃது இப்பெயர் பெற்றது ; இதனைச் சூழப் பாற்கடல் உள்ளது. 1261 - 2

இதில் வாழ்வோர் வருணனே வணங்குவர். 1268

கிரீயை : தக்கன் மகள் ; தரும தேவதையை மணந்து யோகத்தினைப் பெற்ருள். 734

கிருசாச்சுவன் : இவன் மனைவியர் அர்ச்சிஸ் திடணை யென்பார் ; அர்ச்சிஸ் தூம்பிர கேசனையும், திடணை வேதசிரசன் முதலிய மூவரையும் பெற்றனர். 1413

கிருதவன்மா : ஒரு யாதவன்; பாரத முதனுள் யுத்தத்தில் கேகய னுடன் போர் புரிந்தவன். 3517

கிருது : இவர் மனைவி கிரியை, இவர் மக்கள் அறுபதினுயிர முனி வரும் வாலகில்லியரும். 719

கீகடதேயம் : புத்தர் பிறந்தநாடு. 42

கீடபோசனம் : தம்மிடம் வந்த யாசகர்க்குப் புத்தியோடு பொரு ளுதவாதவர் அடையும் நரகம். 1361

கீழ் ஏழுலகம் : இவை அதலம், விதலம், சுதலம், தலாதலம், மகா தலம், ரசாதலம், பாதாளம் என்பன ; இவை ஒன்றின் கீழ் ஒன்று பதினுயிரம் யோசனையிலும், கீழே அகலம் குறைந்து மிருக்கும். தேவருலகிலும் வளம்மிக்கிருக்கும். அங்கேயுள்ள நாகருடைய மணிகளால் இரவு இல்லை. 1334 - 6

இவ்வுலகங்களில் தானவர், அரக்கர், நாகர் என்னும் மூவகை யாரும் தம் மகளிரோடும் உறைவர். 1337

குசத்தீவு : இது மதுக்கடலைப் போல இரட்டிப்பு அளவுடைய தாய் அதனைச் சூழ்ந்திருக்கும். நெய்க்கடல் அவ்வளவுடைய தாய் இதனைச் சூழ்ந்திருக்கும். 1260

இத்தீவில் வாழ்வோர் அக்கினியை வழிபடுவர். 1268

குசலவர் : இவர்கள் சீதையின் இரட்டைப் பிள்ளைகள். முனி வர்கள் தருப்பையின் கூரிய நுனியால் தடவினமையால் முன்னவனைக் குசனென்றும், அடிபாகத்தால் தடவினமை யால் பின்னவனை லவனென்றும் முனிவர் பெயரிட்டு அழைத் தனர். 2365

இவர்களுக்கு வான்மீகி முனிவர் செனனம் முதலிய சடங்கு களை இயற்றினர். 2365

குசன் : இவன் அதிதியை மகனுகப் பெற்றான். இவன் மரபில் வந்தவன் மருத்து என்பவன் அவன் தவத்தைச் செய்து களபக்கிராமம் என்னும் கிராமத்தில் கலியுகத்தில் இன்னும் உள்ளான். 2376 - 7

குசாம்பன் : இவன் மகன் காதி. இவன் சத்தியவதியைப் பெற் ருன். சத்தியவதியை இருசிகன் என்பவன் மணம் செய் யக் கருதினுன். 2448

குசேலன் : கண்ணனுடைய நண்பன் ; இவனுடைய மனைவி யின் பெயர் சுசீலை. 4110

குண்டலம் : காதில் அணிந்து கொள்ளும் ஒருவகை ஆபரணம். 2734

குந்தி : சூரியன் அளித்த வரத்தால் தீங்கின்றியிருந்த இவளைப் பாண்டு மணஞ் செய்து கொண்டான். மற்ற நால்வருள் சுருதகீர்த்தி யென்பவள் ஐந்து கேகயரைப் பெற்றாள். சுருததேவை தந்தவத்திரனைப் பெற்றாள். 2629

பாண்டுவின் மூத்த மனைவியான இவள் யமதருமனையும் வாயுவையும் இந்திரனையும் கூடித் தருமனையும், பீமசேனனையும் அருச்சுனனையும் பெற்றாள். 2577

கும்பகருணன் : இவன் இராவணன் தம்பி; இராவணன் ஏவலால் போருக்கு வந்து இராமன் அம்பால் உயிர் நீத்தான். 2321 - 2

கும்பாண்டன் : இவன் வாணாசுரனுடைய மந்திரி. 3720

கும்பிபாகம் : நம்பினவர், தந்தை, பிராமணர், பசு வாடும்படி மிக்க துயரம் செய்பவர் யானை போன்று கரிய யமன் தூதர் சூழக் குடி கொள்ளும் நரகம். 1348

குபேரன் : செல்வத்திற் சிறந்தோன். 779

குபேரன் துருவன் முன் தோன்றி உத்தமன் மரணத்தைப் பற்றிக் கூறியது. 893

குருக்கேத்திரம் : சரசுவதி நதிக்கு வடக்கேயுள்ளது. 250

குரோட்டன் : எதுவின் மகன் இவன், இவன் மகன் விரஜினமான், இவன் அவிபுவைப் பெற்றான். இவன் குருசெருவை என்பவனைப் பெற்றான். இவன் மகன் சித்திராதன்; சித்திராதன் சசிவிந்துவை ஈன்றான். சசிவிந்து ஏகசக்ராதிபதியாய் பதினாயிரரை மணந்து பத்து லட்சம் புதல்வரை ஈன்றான். 2597 - 99

குரோதவசை : இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி; பாம்புகளைப் பெற்றாள். 1420

குவலயாச்சுவன் : தன் புதல்வருள் மூவரையன்றி ஏனையோர் இறக்க இவன் வெகுண்டு துந்துவைக் கொன்றான்; அதனால் துந்துமாரனென்னும் பெயர் பெற்றான். உயிர் தப்பிய மூவர் மைந்தருள் திடாச்சுவன் அரிச்சுவனையும் அரிச்சுவன் நிகும்பனையும் பெற்றனர். 2114

குவலயாபீடம் : கம்சன் பட்டத்து யானை. கண்ணனால் தந்தத்தை இழந்தது. 3117

கூப கன்னன் : இவன் வாணாசுரனுடைய மந்திரி. 3720

கேசி : கம்சனுக்கு நண்பனாகிய அசுரன். இவன் கம்சன் ஏவலால் குதிரை யுருக்கொண்டு கோகுலம் வந்து கண்ணனால் இறந்தான். 3119

கேசித் துவசன் : ஞானக் கடலாகிய கேசித்துவசன் மகிழும்படி பானுமான் தோன்றினான். அவன் வழியில் அரசர் பலர். அந்த நிமி மரபிலுதித்தோர் வினையாற் கட்டுப்பட்டவர் போலத் தோன்றினும் ஞானம் முதிர்ந்தவர். 2401

கேதுமாலம் : இது கந்தமாதனத்திற்கு மேற்கும், மேற்கடற்குக் கிழக்கும், நிலவரைக்குத் தெற்கும், நிடதவரைக்கு வடக்கும் உள்ள வருஷம். கீழ் மேலில் 31,000 யோசனையும், தெற்கு வடக்கில் 34,000, யோசனையும் பரப்புடையது. 1200

இவ்வருடத்தில் திருமால் காமதேவனென்ற பெயரோடு திருமகளுடன் வாழ்வார். 1242

கொன்றை : மர வகைகளுள் ஒன்று. இதன் பூ பரமசிவனுக்குரியது. 2810

கோகுலம் : நந்தகோபனுடைய ஊர் ; கண்ணன் வளர்ந்து லீலைகள் செய்த ஊர். 2730

கோசிகன் : கங்கைக் கரையில் பரீட்சித்தைக் காணவந்த ஒரு முனிவர். 308

கோத்திரன் : இவன் புட்கரத் தீவுக்கு அரசன். இவன் புதல்வர் ரமணகன் ; தாதகன் என்னுமிருவர் ; இவர்கள் பெயரால் அத்தீவு இரு பெயருடையது ஆகும். இதன் நடுவில் மானதோத்திர மலை சூழ்ந்திடும். இதனைச் சூழத் தண்ணீர்க் கடலுள்ளது. 1275 - 6

கோபம் : இது கொலைத் தொழிலைச் சேர்ந்து தீமொழியையும் கலியையும் பெற்றது. 817

கோவலர் : பசுக்களைக் காப்பாற்றுகின்ற ஒருவகைச் சாதியார். 2733

கோவர்த்தனகிரி : இம்மலையைக் கண்ணன் குடையாகப் பிடித்துக் கோவலர்களையும் பசுக்களையும் இந்திரனால் பெய்விக்கப்பட்ட மழையிலிருந்து காப்பாற்றினான். 2790

கோவிந்தன் : கிருஷ்ணனுக்கு ஒரு பெயர். 2992

கோபியர் : இவர்கள் காமமுற்றுணர்ந்து திருமால் பதம் அடைந்து முத்தியுற்றனர். 1601

சக்ஷுசன் : இவன் மகன் சாக்ஷுசன். ஆறும் மனு; இவன் காலத்து இந்திரன் மந்திரத்யுமன்; ஆர்ப்பியாதியர் தேவர்; விரசர் முதலியோர் ஏழு முனிவர். திருமால் சம்பூதி வயிற்றில் வயிராசற்கு மகனாக அசிதன் என்னும் பெயரோடு உதித்தான். 1817-18

சக்ஷுசை : இது ஒரு நதி; துருவன் முதலியோர் புகழும்படி மாலியவானில் நிறைந்து பின் கேதுமாலத்தில் பொருந்தி மேல் கடலிற்போய் விழுவது. 1228

சகரன் : இவன் தன் தாய் வயிற்றிலிருந்து விஷத்தோடு பிறந்த காரணத்தால் இப்பெயர் பெற்றான். இவன் தன் பகைவர் இறக்கும்படி போர் செய்தான். அச்செயலை ஒழிகவென்று தன் குரு சொன்னதும் இவன் தன் பகைவரைத் தோல்விக் குறியைப் பெற்று ஓடச் சொல்ல அவர் அங்ஙனமே செய்து ஓடினர். இவன் முனிவரோடும் அசுவமேதம் இயற்றினான். 2161 - 64

இவன் குதிரையை இந்திரன் கொண்டு போய்ப் பாதாளத்தில் கபில முனிவருடைய பக்கத்தில் விட்டுச் சுவர்க்கத்தை அடைந்தான். இவன் குதிரை எங்கே சென்றதோவென்று பல அரசர் தேடினர். இவன் மக்களான அறுபதினாயிரவர் பூமி யெங்கும் தேடிக் காணாமல் நிலத்தைத் தோண்டிப் பாதாளம் சென்று வட கிழக்கே யிருந்த கபில முனிவரைக் கண்டு அவரிடம் குதிரையையும் கண்டனர். அவரைக் கொடுஞ் சொற்களால் நிந்திக்க அவர் கோபத்தால் சாம்பலாயினர். 2164 - 7

தன் மக்கள் அறுபதினாயிரர் சாம்பலானதைத் தூதரால் உணர்ந்து இவன் தன் பேரனான அஞ்சுமானை வேள்விக் குதிரையைக் கொண்டு வரும்படி அனுப்பினான். சகரன் சுகேசினியை மணந்து அசமஞ்சதன் என்பவனைப் பெற்றான். அசமஞ்சதன் மகன் அஞ்சுமான். அசமஞ்சன் முற்பிறப்பிற் செய்த யோகத்தால் காடு செல்லத் துணிந்தான் தந்தை அனுமதியால்தன்னோடு வந்த தம்பியரைச் சரயுவில் தள்ளி மாய்த்தான். 2168 - 72

அசமஞ்சன் செயலை யாவரும் சகரனை அடைந்து சொன்னதும், தன் மகனை வைதுக் காட்டிற்குப் போக்கினன். அசமஞ்சன் காட்டிற் செல்லும் போது சரயுவில் இறந்தவர் உயிர் பெற அருள்செய்து போனான். சகரன் தன் மக்களைக் காட்டுக்கு அனுப்பினேனே என்று வருந்தினான். அந்த அசமஞ்

சன் அளித்த அஞ்சுமான் கபில முனிவரிடம் குதிரை யிருத்தலை யறிந்து அவரை வணங்கித் தவஞ் செய்தான். 2173 - 76

சகாதேவன் : திருமாலே பரம்பொருளென்று உணர்ந்தமை. 186

சங்க சூடன் : இவன் கண்ணனுல் கொல்லப்பட்டவன். 3097

சங்கருடணன் : அனந்தன் என்றும் கூறப்படுவான் ; புத்திக் குரிய உபாசனேசர். 634

சங்கலாதன் : இவன் இரணியன் மகன் ; சதியை மணந்து பஞ்சசனனைப் பெற்றான். 1560

சங்கற்பை : இவள் தக்கன் மகளிருள் ஒருத்தி. தருமன் மனைவி ; சங்கற்பனைப் பெற்றவள். 1409

சண்ட வேகத்தன் : இவன் முந்நூற்றறுபதின்மர் வீரருடன் புரஞ்சனன் மேற் போர் செய்தான். 1046

சண்டன் : தக்கன் வேள்விச் சாலைக்குச் சென்றது. 781
சண்டன் ஒரு பூதகணத்தான் ; இவன் பூஷா என்னும் சூரியனது பல்லை யுகுத்தது. 790

சசிவிந்து : இவன் மக்கள் பத்து லட்சம் பேர்களில் பூமியை ஆண்டவர் ஆறுபேர். இந்த அறுவரில் தவத்தால் வந்தவன் பிருது சிரவசு. இவன் மகன் தருமன். இவன் உசநசுவைப் பெற்றான். உசநசுவின் மகன் ருசகன், ருசகன் பூணூலைத் தாங்கிய சாமகன் முதலிய ஐவரைப் பெற்றான். 2598 - 99

சத்தியபாமை : இவள் சத்திராசித்தின் பெண். கண்ணனது மனைவி இவள் குமாரர் பானு முதலிய பதின்மர். 91

சத்தியவதி : இவள் இருசிகரை நோக்கித் தனக்கு நன்மை செய்யும் மைந்தனை நல்கும்படி சொல்வித், தொழ அவர் பகைவரை அழித்து வெற்றியடையும் மகனைப் பெறுவாயெனக் கூறினர். கவுசிகை ஜமதக்னியாகும் முனிவரைப் பெற்றாள் தன் நாயகன் தவஞ் செய்யச் செல்லக் கவுசிகை நதியாயினள். 2454 - 55

சத்திய விரதன் : இவன் ஒரு பாண்டியன் ; இவன் வைகையாற்றில் அருக்கியம்விட எடுத்த நீரில் திருமால் மீன் வடிவங் கொண்டு தோன்றினர். மீன் கூறியபடி கடலில் விட்டான். இழிந்த மீனுரு எடுத்த காரணம் கேட்ப மீன் விடை கூறிற்று. 2019 - 2028
மீனுரு வெடுத்த தன் காரணத்தைக் கேட்ட இவனுக்குத் திருமால் இன்னும் ஏழு நாள் கழிந்த பின் பிரளய முன்

டாகுமென்றும் ஒரு தோணி யுண்டாகுமென்றும் அதில் பாண்டியனையும் உலகில் நிறைந்த வித்தையும் முனிவர் கூட்டத்தையும் ஏற்றி மறைகளைக் கவர்ந்த ஹயக்கிரீவனைக் கொன்று பிரம'தேவர் துயில் நீங்கிய பின் அவற்றை நாட்டுவதாகக் கூறினர். 2029 - 31

இவனே வைவச்சுத மனுவாகப் பூமியை ஆள்கின்றான். இவன் மரபை விரித்துக் கூறும்படி பரிட்சித்து வேண்டச் சுகர் அங்ஙனமே கூறினர். 2039

சத்தியவுலகம்: தவலோகத்துக்கு மேல் பிரம தேவர் வாழும் இவ்வுலகம் உள்ளது. இவ்வேழுலகங்களையும் திருமால் வடிவமாக எண்ண வேண்டும். 1333

சத்தியை: நக்கின சித்தின் பெண். 3567

சத்திராசித்து: சத்தியபாமையின் தந்தை. துவாரகைக்கு அரசன்; சூரியனிடத்தில் அன்பினால் சியமந்தகமணி பெற்றவன்; தன் பெண்ணான சத்திய பாமையைக் கண்ணனுக்குக் கொடுத்தான். 3512

சத்துருக்கன்: இவன் புதல்வர் சுவாகு, சுருதசேன னென்பவர். 2366

சதசித்து: இவன் பெற்ற புதல்வன் கேகயன். கேகயன் மகன் தருமன். தருமனது மகன் தருமகேத்திரன். இவனது புதல்வன் குந்தன். குந்தனுக்கு மகன் சாவஞ்சியன். இவன் மகன் மயிட்டுமான். 2590 - 91

சததன்னுவா: இவன் சத்தியபாமையைத் தனக்குக் கொடாமையால் சத்திராசித்தைக் கொன்றவன்; கண்ணன் இவனைக் கொன்றான். 3517

சதநுபை: பிரமதேவர் உடம்பின் ஒரு பாகத்திற் பிறந்தவள். 486

இவள் சுவாயம்புவ மனுவின் மனைவி. 581

சதி: இவள் அங்கிராவை மணந்து காரண வேதஸரைப் பெற்ற அதருவணரைப் பெற்றாள். 1412

சதிதக்கன்: வேள்விக்குச் செல்லச் சிவபெருமானை வேண்டியது. 755

சதிதேவி: தக்கன் மகள்; சிவபெருமானுக்கு மனைவி. 740

சிவபெருமான் கூற்றை மாற்றி மகம் இயற்றல் கண்டு சினங் கொண்டது. 766

தன்பால் தோன்றிய தழல் கொண்டு மெய்யை எரித்து இமய மலையில் தோன்றியது. 768

சதுரங்கன் : இவன் மரபில் அங்கநாட்டை அநேகர் ஆண்டபின் அந்நாட்டை, குந்தி கன்னிப் பருவத்தில் சூரியனிடம் பெற்ற கன்னன் ஆண்டான். 2587

சந்தனு : இவன் தேவாபிக்கு இளையோன், இவன் கிழப்பருவம் அடைந்த உடலை அழகுள்ள உடம்பாகச் செய்பவனாதலின் சந்தனு என்ற காரணப் பெயரை அடைந்தான். இவன் சாபத்தால் பூமியில் பிறந்த கங்கையை மணந்து பிரமசரிய விரதம் பூண்ட பீஷ்மரைப் பெற்றான். 2565 - 66

இவன் பின்னும், பராசரரிடம் வியாசரைப் பெற்று மீட்டும் கன்னிகையாகி ஓடம் விடுவோர் வீட்டில் வளர்ந்த சத்திய வதி யென்பவளை மணம் செய்தனன். இவனுக்கு இவளிடம் பிறந்தமக்கள் சித்திராங்கதன், விசித்திரவீரியன் என் பவர். 2567 - 8

சந்தியாதேவி : இவள் பிரமதேவரது தமத்தனுவின் வடிவினள். 560

சந்திரன் : மனதிற்குரிய அதிட்டான தெய்வம். 635

இவன் அத்திரிக்கு மகனாகத் தோன்றியவன் ; இவன் பிரம தேவாம்சம். 705 - 6

இவன் இரண்டேகால் நாளில் ஓரிராசியில் பொருந்தும். 1312

இதன் கலைகள் தேய்ந்து வளரும் பக்கங்கள் பிதிரர்களுக்கு முறையே இரவும் பகலும் ஆகும் ; மாதந்தோறும் பிதிரர் கணத்துக்கும் தேவர்க்கும் அமுதம் அளிக்கும். 1317

இவன் கார்த்திகை முதலான இருபத்தேழு பெண்களை மணந்தும் புதல்வரைப் பெற்றிலன் ; தக்கனால் கயநோய் அடையும்படி சாபம் பெற்றுப் பின் கலைகள் வளரும் தன்மை யையும் பெற்றான். 1410

இவன் பிரமதேவர் அளித்த அத்திரி முனிவரது கண்ணி லிருந்து உண்டாயினன். பிரமதேவர் சந்திரனை விண்மீன் களுக்கு அரசனாக முடிசூட்டினான். சந்திரன் தன் பலத் தால் இராயசூயமியற்றி உவகைக் கடலில் மூழ்கினான். 2403 - 5

சந்திரன் செல்வச் செருக்கால் குருவின் மனைவியான தாரையை மணந்தான், தேவரோடு போர் செய்யச் சந்திரன் வந்தான். தாரையை விடுக என்ற தேவரோடும் அசுரரையும் சுக்கிரனையும் பொருந்திப் போர் செய்தான். 2406 - 7

சந்திரன் போர் செய்யும் பொழுது பிரமதேவர் தோன்றி ; குருவின் மனைவியைக் கலந்தது என்ன அறிவென்று சந்திரன் அவளை விட்டான்; உடனே பிரமதேவர் அவளை நோக்கி இந்தக்கரு ஒழிக என்றதும் அவள் அழகான ஒரு மகனைப் பெற்ருள். அக்குழந்தையைச் சந்திரனும் பிருகஸ்பதியும் எனது எனது என்று ஆசை கொண்டனர். 2408 - 10

சப்தரிஷி மண்டலம் : இது சனியின் மண்டலத்துக்கு மேல் வடதிசையில் பதினெருலக்ஷம் யோசனை கடந்த பின் விளங்கும்; இதன் மேல் பதின்மூன்றுலக்ஷம் யோசனைக்கு அப்பால் துருவ மண்டலம். 1324 - 25

சபரி : கவந்தன்கூறியபடி இராமலக்ஷ்மணர் இவளிருப்பிடத்தை அடைந்தனர். இவள் அன்புமிக்கு இலையையும் கிழங்குகளையும் அளித்து மதங்கர் இருக்கும் மலையை யடைந்து சுக்கிரீவனை அடையும்படி கூறினள். 2281

சம்பரன் : கம்சனுக்கு நண்பன். கிருஷ்ணன் குமாரனுகிய பிரத்துமனனைக் கடலிலெறிந்து அவனுல் கொல்லப்பட்டவன். 3474

இவன் இரணியன் ஏவலாளருள் ஒருவன். இரணியன் கட்டளையை நிறைவேற்ற வேள்விகளை அழித்து உயிர்கள் அழிய வீடுகளுக்கு எரியூட்டி தேவலோகத்திலும் சென்று தேவரைப் புடைத்தனன். 1608

சம்பாதி : இவன் ஜடாயுவின் சகோதரன் ; இவன் இலங்கையில் சென்ருல் சீதையைக் காணலா மென்று வானர வீரர்க்குக் கூறி இராம தூதரைக் கண்டால் தன் சிறகு வளருமென்றபடியே வளரப்பெற்று இராமனைத் துதித்தனன். 2291 - 2

சம்புத்தீவு : இது இலக்கம் யோசனையுடையது; உப்புக்கடல் இதனைச் சுற்றியுள்ளது. இதனைச் சுற்றி ரமணகம் முதலிய பல தீவுகள் உள்ளன. 1257 - 8

சம்புமாநதி : இது யானையளவாகப் பருத்து நுண்ணிய கொட்டையை யுடைய நாவல் மரத்தின்சாறு உள்ளே தெளிந்து மேருவைச்சுற்றி ஓடுவதனுல் இப் பெயர் பெற்றது. இதன் நீரை யுண்டோரும் சாம்பூநத மென்னும் பொன்னுல் அணியைப் புனைபவரும் பிணி மூப்பின்றி யினிதிருப்பர். 1219 - 20

சமதக்நி : இவன் ரேணுகையை மணந்து சில பிள்ளைகளைப் பெற்றுப் பின் திருமாலின் கலையாகிய பரசுராமனைப் பெற்

ருள். பரசுராமன் சக்ரவர்த்தியாகிய கார்த்த வீரியனைக் கொன்றான். 2457 - 8

சமந்த பஞ்சகம் : ஐந்து ரத்தமடுக்கள் உள்ள இடம்; இவை பரசுராமனால் செய்யப்பட்டன. 4130

சயவிசயர் : இவர் இருவரும் வைகுந்தத்தைக் காப்பவர்; சனகர் முதலிய நால்வரை உட்புகாமல் தடுத்தனர். 524

இவர் இருவரும் சனகர் முதலியோரைத் தடுத்தமையால் திருமாலுக்குப் பகையான முப்பிறப்புற்றனர். 525

இவர் திருமகளின் சாபமும் முன்பு பெற்றவர். 537

இவரே திதி வயிற்றில் தோன்றியவர். 538

சனகாதி முனிவருடைய சாபத்தால் இரணியனும், இரணியாக்கனும், இராவணனும், கும்பகருணனுமாகத் தோன்றினர். இவர்களைத் திருமால் அழித்ததை மார்க்கண்டனால் அறிவாயென நாரதர் கூறியது. 1596 - 8

இவர்களிருவரும் மூன்றாம் பிறப்பில் தந்தவத்திரனும், சிசுபாலனுமாகத் தோன்றினர், சிசுபாலன் திருமாலையே நினைந்து அவருடைய பாதத்தை அடைந்தனன். 1600

சயிமினி : இவர் சாமவேதத்தைக் கற்றவர். 39

சரசுவதி நதி : ஒரு நதியின் பெயர். 250

சரபங்கன் : இவர் இராமபிரான் வரவால் முத்தி எய்தினர். 2259

சாமை : காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி; சுவாபதக் குழுவைப் பெற்றவள். 1417

சராசந்தன் : சரையால் சேர்க்கப்பட்டவன் ஆதலால் சராசந்தன் எனப் பெயரிட்டு வளர்க்கப்பட்டவன்; இவன் தன் மருமானாகிய கம்சனைக் கிருஷ்ணன் கொன்றதால் பதினெண்முறை கிருஷ்ணனுடன் சண்டை செய்தான். 3322

சருவகாமன் : இவன் இருதுபன்னன் மகன். இவன் மகன் சுதாசன். இவன் மகன் மித்திரசகன்; இவன் மதயந்தி யென்பவளை மணந்தான்; இவன் குரு சாபத்தால் கன்மாடபாதனென்னும் பெயருற்றுக் காட்டை அடைந்தான். 2192 - 5

சலன் : மல்லர்களில் ஒருவன்; கம்சனால் ஏவப்பட்டு இறந்தான். 3228

சவனர் : இவரது கண்ணைக் குத்திய சுகன்னிகையைத் தனக்கு மணஞ் செய்து தரும்படி சையாதியை வேண்டினர். அப்படியே அரசன் அளித்தான்; எல்லாருக்கும் கண்கள் தெரிந்

தன. அரசன் நகரத்திற்கு மீண்டு வந்தான். சுகன்னிகை சவனரது கிழ வுருவத்தைக் கண்டு அழகுள்ள வடிவம் வேண்டுமென்ன அவர் அசுவினி தேவரைக் கருத அவர் தோன்றினர். 2064 - 6

இவர் தம் முன் தோன்றிய அசுவினி தேவர்க்கு யாகத்தில் அவிப்பாகம் கொடுப்பதாகவும் தமக்கு மூப்பை நீக்க வேண்டு மென்பதாகவும்கூற அவர்கள் தம்மைப் போல அழகுற ஆக்கினர். மூவரும் ஒரே வடிவு கொண்டு நிற்க, சுகன்னிகை தன் கற்பால் சவனரை அறிந்தாள். சவனர் யாகம் செய்து அசுவினி தேவர்க்கும் அதில் அவி வழங்கினர். 2066 - 8

இவர் சுகன்னிகையோடு உறையும் நாளில் லசயாதி தன் மகளைக் காண விரும்பிக் காட்டுக்கு வந்தான். இளமையோடு இருந்த சவனரைக் கண்டு தன் மகள்பால் ஐயுற்று வினவ அவள் நடந்ததைக் கூறக் கேட்டு வியப்புற்று நகரம் சென்றான். 2072 - 3

சவுபரி : இவர் யமுனை நீரில் தவம்புரிந்த பொழுது மீன்கள் தம் சுற்றத்தோடு இருத்தலைக் கண்டு தாமும் அவ்வாறே வாழ விரும்பி மாந்தாதாவை அடைந்து அவர் மகளிருள் ஒருத்தியை மணம் செய்து தரும்படி வேண்ட அவர் மகளிர் விரும்பினால் தருதல் தன் குலத்தொழில் என்றனர். 2120 - 2

இவர் மாந்தாதாவிடம் அவன் மகளிர் விரும்பினால் தரு வாயோ வென்று கேட்க, ஆம் என்றனன். அரசன் உடனே இவரை மகளிர் உறையும் அந்தப் புரத்திற்கு அனுப்பிக் கஞ்சுகியிடம் அவர் கூறியதைத் தெரிவிக்கும்படிக் கூறச் சவுபரி உள்ளே சென்று தன் கிழ வடிவத்தை விட்டு நல்ல அழகான வடிவங் கொண்டனர். 2123 - 5

கஞ்சுகி மாந்தாதாவின் மகளிரிடம் அரசன் கூறியதைச் சொன்னவுடன் சவுபரியைச் சூழ்ந்து கொண்டு நான் முதல் நான் முதல் என்றனர். இதைக் கஞ்சுகி அரசனுக்குக் கூறி னன். அரசன் ஐம்பது பெண்களையும் சவுபரிக்கு மணஞ் செய்து கொடுத்தனன். அவர்களோடு மயன் மனத்தால் நிருமித்த மாடத்திற் குடி புக்கனர். 2128 - 9

இல்வாழ்வுக்கேற்ற பல பொருள்கள் அம்மாடத்தில் வந்து சேர இவர் ஐம்பது வடிவங்கொண்டு அவர்களோடு வாழ்ந்து வந்தனர். தன் பெண்களை அவரோடு காட்டிற்கு அனுப்பி

அவர் சென்ற விதத்தை அறிய விரும்பிக் காட்டிற்குச் சென்றனன். மகளிர் தம் தந்தைக்குச் சவுபரியின் செயலைச் சொல்ல அவன் மகிழ் கூர்ந்தான். 2130 - 2

இவர் புதல்வரோடும் பெண்களோடும் பேரர்களோடும் பல காலம் வாழ்ந்து, இது யமுனையில் மீன்பிரள் போலச் சேர்க்கையால் உற்றதென்று எண்ணி அதனைத் துறந்து காட்டிற்குச் சென்று தவம்புரிந்து முத்தி பெற்றான்; மனைவியரும் பரம வீடு அடைந்தனர். 2133 - 4

சவுனகர் : ஒரு முனிவர். 6

சன்னு : இவர் மகன் பூரு, பூருவின் மகன் வலாகன், இவன் மகன் அசகன், அசகன் மகன் குசன், குசன் மகன் குசாம்பனையும், அதூர்த்தனையும், குசநாபனையும், வசு என்னும் நால்வரையும் பெற்றான், 2446 - 7

சனகர் முதலிய நால்வரும் எப்போதும் ஐந்து வயதுக்கேற்ற உடம்பினர். 523

சனகன் : ஆதிசேடன்பால் பாகவதம் கேட்டவன். 439

சனகன் முதலிய முனிவர் அன்ன வடிவாய் வைகுந்தம் அடைந்தது. 519

சனகாதியர் : பிரமதேவருடைய மானஸ புத்திரர். 476

சனி : இது ஓரிராசியில் இரண்டரையாண்டு பொருந்தும். 1313

இது பழி வளரும்படி செய்யும் மறையவருக்குத் தீமைகளைச் செய்யும். 1318

சாக்ஷுசமனு : இம் மனுவின் காலத்தில் துருவாச முனிவர் இந்திரனுக்கு ஒரு மாலையை யளித்தார். அவன் அதனைத் தலையில் தரிக்கவில்லை; அதனால் கோபங் கொண்ட முனிவர் செல்வம் எல்லாவற்றையும் இழப்பாயெனச் சபித்தனர். அவை பாற்கடலில் மறைந்தன. இதனால் தேவர் அசுரர்க்குத் தோற்றனர்; இச்செய்தியைத் தேவர் பிரமதேவரிடம் தெரிவித்தனர். 1818 - 2

சாகத்தீவு ; இஃது பாற்கடலைச் சூழ அதைப்போ லிருமடங்கு பரப்புடையதாய்ச் சூழும்; சாகமரத்தினால் இப்பெயர் பெற்றது. 1262

இது முப்பத்திரண்டு இலக்கம் யோசனை அகன்றுள்ளது. இத் தீவில் வாழ்வோர் வாயு பகவானை வணங்குவர்; இத்

தீவைத் தயிர்க்கடல் 32 இலக்கம் யோசனைப் பரப்புடைய தாய்ச் சூழும். 1269 - 70

சாணூரன் : கம்சனுக்குத் துணைவனான அசுரன். இவன் கம்சனால் ஏவப்பட்டுக் கிருஷ்ணனுடன் மல் யுத்தம் செய்து பூமியில் மோதப்பட்டு இறந்தவன். 3221

சாத்தகி : கண்ணபிரான் தம்பி; கண்ணனுக்குச் சாமரை யிரட்டியது. 109

சத்தியகன் என்னும் யாதவனுடைய பிள்ளை. இவன் மருத்துவர் அம்சம். கிருதவன்மனைக் கொன்றவன். 3747

சாத்தியை : இவள் தக்கன் மகள் ; தருமனின் மனைவி ; இவள் சாத்தியரை ஈன்றாள். 1408

சாந்தி : இவன் தக்கன் மகன் தரும தேவதையை மணந்து சுகனைப் பெற்றனள். 732

சாந்தீப முனி : இவர் கண்ணன் குசேலன் முதலியவர்களுக்குக் கல்வி கற்பித்தவர். 3256

சாம்பன் : இவன் வாணாசுரனுடைய மகன். 3726

சாம்பவதி குமாரன். துரியோதனன் குமாரியாகிய இலக்குமணையை மணந்தவன். 3836

சாமகன் : இவன் பகைவர் கெட்டு ஓடும்படி அம்பு எய்யும் திறத்தால் காமனுக் கொப்பானவன். இவன் விதர்ப்பனைப் பெற்றான். விதர்ப்பன் குதன் முதலான மூவரைப் பெற்றான்; குதன் புதல்வன் குந்தி. குந்தியின் மகன் கிருவிருத்தி. இவன் மகன் தசாருகன்; தசாருகன் மகன் வியோமன்; இவன் மகன் சிமுதன். 2602 - 5

சாமி : இவள் தக்கன் மகளிருள் ஒருத்தி ; இவள் தருமன் மனைவி. ஸ்வர்க்க னென்பவனைப் பெற்றவள். 1409

சாரகருத்தமம் : தம்மைத் தாமே புகழ்பவர் அடையும் நரகம். 1360

சாரமேயாதனம் : நெடுங் காலப் பகையால் வீட்டில் நெருப்பை வைப்பவர் தம் உடம்பை முற்றும் கடித்துக் கணக்கில்லா நாய்கள் தின்புறுத்தும் நரகம். 1356

சாலுவன் : இவன் சிசுபாலனுடைய தோழன் ; கண்ணனோடு சண்டை செய்து தோற்றவன், 4022

சாவன்னி மனு : இவன் விவச்சுவா என்போனுக்குச் சாயை யென்பாளிடம் தோன்றியவன் ; எட்டாம் மனு. மாவலி இந்திரன் ; தேவர் சுதபாதியர் ; வியாசர், அசுவத்தாமன், கிருபன், பரசுராமன் முதலியோர் சப்த ரிஷிகள் ; திருமால் சாருவ பூமனென்று உதித்து மாவலிக்குத் தேவருலகத்தை அளிப்பார். 1929

சான்மலித் திவு : இது பிலக்ஷத் தீவைப்போல் இரு மடங்கு அளவுடையதாய்க் கருப்பஞ் சாற்றுக் கடலைச் சூழ்ந்திருக்கும். அதே அளவுடையதாய் இத்தீவை மதுக்கடல் வளைந் திருக்கும், 1259-60

இத்தீவில் வாழ்வோர் சந்திரனை வணங்குவர். 1267

சிங்கிகை : இவள் மகன் இராகு ; இவன் திருமால் தேவர்க்கு அமுதளித்தபோது அவரால் வெட்டப்பட்டவன். 1559

சிசுபாலன் : சேதி நாட்டு அரசன். கிருஷ்ணனுக்கு அத்தை மகன் ; உருக்குமிணியின் விவாகத்தில் கிருஷ்ணனால் ஜயிக் கப்பட்டவன். 3404

சித்திரகூடம் : ஒரு மலை ; இராமபிரான் சீதாபிராட்டியோடும் இலக்குவனேடும் வாழ்ந்த மலை. 2252

சித்திரகேது : வசிட்டர், அருந்ததி என்பவர் மக்கள் சித்திர கேது முதல் எழுவர். 720

இவன் மனைவியர் பதினுயிரவர் ; இவனுக்கு மகப்பேறு இல்லை. இவனிடம் ஆங்கிரஸ முனிவர் அடைந்து துன் பத்தை வினவியதும் அதன் காரணம் கூறினன். முனிவர் வேள்வி செய்து அவியீந்ததும் சித்திரகேதுவின் மனைவி மகனைப் பெற்றனள். 1515 - 9

சித்திரரேகை ; இவள் உஷையின் ஆருயிர்த் தோழி. 3694

சித்திராங்கதன் : சந்தனுவுக்குச் சத்தியவதியிடம் தோன்றிய இவன் சித்திராங்கதன் என்னும் கந்தருவனால் கொல்லப்பட் டான். காசியரசன் மகளிரான அம்பிகை, அம்பாலிகையென் பவரைப் பீஷ்மர் சுயம்வரத்தில் எடுத்துக் கொண்டு வர விசித்திர வீரியன் அவர்களை மணந்தான். 2570

சிந்தாமணி : தேவருலகில் உள்ள ஒரு மணி ; வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றைக் கொடுக்கக் கூடியது. 3362

சிம்சுமார சக்கரம் : இது வளைந்த பாம்பு போன்ற வடிவுடையது. இதன் அவயவந்தோறும் நட்சத்திரம், பிரமன், தேவர், எழ் முனிவர் உறைவர். இதனைத் திருமாலுருவாக எண்ணி மாலைப் பொழுதில் எத்துவோர் அறனை மருவுவர். 1329

சியமந்தகமணி : இது நாடோறும் 8 பாரம் பொன் கொடுக்கும். சூரியனால் சத்திராசித்துக்குக் கொடுக்கப்பட்டது. 34 - 91

சிரத்தை : இவள் ஆங்கிரஸ முனிவரது மனைவி ; இவள் உசத்தியன் முதலிய நால்வரைப் பெற்றனள். 711

இவள் தரும தேவதையின் மனைவிகளுள் ஒருத்தி ; இவள் சுருதனென்பவனைப் பெற்றாள். 731

சிருங்கி : பரிட்சித்துக்குச் சாபமிட்ட முனிகுமாரன். 296

சிருங்கியின் தந்தை தன் மகன் சாபத்தைத் தெரிவிக்கப் பரிட்சித்துக்கு ஒரு முனிவரை அனுப்பியது. 301

சிலம்பு : பெண்கள் காலில் அணிந்து கொள்ளும் ஆபரண வகைகளுள் ஒன்று. 2731

சிவபெருமான் : தன்னை இறைஞ்சினோர்க்கு வித்தையை அருளல். 327

இவரைக் கன்றாகக் கொண்டு அரக்கர் ; இயக்கர் பேய் முதலியோர் கபாலத்தில் குருதியும் தசையும் கறந்தமை. 963

தக்கன் வேள்விக்குச் செல்ல வேண்டாமெனக் காரணம் கூறியது. 757 - 8

தக்கனது தலையைத் தடியும்படி வீரபத்திரர்க்குக் கட்டளையிட்டது. 774 - 5

தம் சடை ஒன்றைப் பிடுங்கித் தரையின் மேலடிக்க வீரபத்திரன் அங்கே தோன்றியது. 773

வீரபத்திரரைத் தக்கன் வேள்வியை யழித்துவர எவியது. 774

சீதை : கற்பக மலர்களோடு மேருமலையிற் போய் இறங்கி மால்யவான் மலையைக் கிழித்து பத்திராச்சுவத்தை அடையும் கங்கையின் பேர் ; இது கீழ்கடலிற் கலப்பது. 1230

தனித்திருந்த இவளை இராவணன் எடுத்து விண்ணிலெழுந்தான் அவனை ஜடாயு தடுக்க ஜடாயுவின் சிறகுகளை வெட்டி இலங்கை சென்று சீதையைச் சிறையில் வைத்தான். 2274

சீதை தாரை முதலான வானரமகளிர் தன்னைச்சூழ விமானத்தினின்றிறங்கி மாமியாது பாதம் வணங்கினள். இராம

பிரான் தன் தம்பியரோடும் புட்பகத்தில் ஏறி நந்திக் கிராமத்தைச் சீதையோடும் அடைந்தனன். 2345

சீதை கருவுற்ற போது ஓரறிவில்லாதவன் அரக்கன் எடுத்துச் சென்ற பெண்ணை நீக்காமல் சேர்த்துக் கொண்டானென்று கூறிய பழிச் சொல்லுக்கு நாணி இலக்குவனைக் கொண்டு சீதையைக் காட்டுக்கு அனுப்பினன். அவள் துன்பத்தைக் கண்டு மலைகளும் காடுகளும் வருந்தின. 2360 - 62

சீழதன் : இவன் மகன் விகுதி. விகுதியின் மகன் தீவிராதன் இவன் மகன் நவரதன், நவரதன் தயரதனைப் பெற்றான். தயரதன் மகன் சகுனி. சகுனியின் மகன் காம்பன். இவன் மகன் தேவராதன். தேவராதன் தேவசத்திரனைப் பெற்றான். இவன் மகன் மது. 2606 - 608

சுக்கிரன் : இதுவும் புதனும் சூரியனுக்கு அருகே வக்கிரகதியை அடையும். 1313

இவன் பாற்கடல் கடைந்தபின் குபேரனோடு போர் செய்தான். 1873

சுகமுனிவர் : சுகமுனிவன் பிறந்த பொழுதே துறந்து சென்றது. 3

சுகுமார வனம் : இவ்வனத்தில் சிவபெருமான் உமையாளைச் சேர்ந்த போது முனிவர் அவரை ஏத்தச் செல்லலும் உமை நாண அவர்கள் திரும்பிச் சென்றனர். பின்பு உமாதேவி சிவபெருமானை அணையமறுக்க, அவர் கோபங் கொண்டு அவ்வனத்தை அடையும் ஆண்கள் பெண்களாகும்படி சபித்தனர். 2042 - 6

சுதகீர்த்தி : வசுதேவன் தங்கை. 3577

சுதாயு : இவள் வசுமானைப் பெற்றாள். சத்தியவாயு சுதஞ்சயனைப் பெற்றாள். 2443

சுதை : தக்கன் மகள் ; பிதிரரை மணந்து மேனை, வைதரிணி என்னும் பெண்கள் இருவரைப் பெற்றாள். 739

சுநந்த நந்தர் : திருமாலின் அருள் பெற்றவர் ; துருவன் முன் விமானத்தில் தோன்றினர். 896

சுநீதி : உத்தானபாதன் மனைவியருள் ஒருத்தி. 822

சுபத்திரை : கண்ணனுடைய தங்கை. பலராமன் துரியோதனனுக்கு மணம் செய்து கொடுக்கத் தீர்மானித்திருந்த போது

அருச்சுனன் துறவியாக வந்து கவர்ந்து சென்று மணம் செய்து கொண்டான். 4174

சுபல்கனே : இவன் பிரசனியினுடைய மைந்தன். அக்குரூரர் முதல் பன்னிருவர் குமரர். இவனைச் சுவபர்க்கன் என்றும் கூறுவார்கள். 3540

சுமந்து : ஒரு முனிவர் ; அதர்வண வேத மறிந்தவர். 4838

சுதலலோகம் : இவ்வுலகத்தில் மனு முதலினோரும் அழிந்தாலும் அழிவடையாமல் மாவலி யென்னும் அசுரன் திருமால் வாயில் காப்ப உள்ளான். 1339

சுரசை : இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி ; யாதுதானவரைப் பெற்றாள். 1418

சுரபி : இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி ; பசு முதலான இரு குளம்புடையவற்றைப் பெற்றாள். 1417

சுருதன் : இவன் பகீரதன் மகன் ; இவன் மகன் நாபாவரன் ; இவன் மகன் சிந்துத் தீபன் ; இவன் மகன் அயுதாயு ; இவன் மகன் இருதுபன்னன் இவன் சந்திர குலத்தைச் சேர்ந்த நளனேடு நட்புடையான். 2188 - 90

சுருதி : உத்தானபாதன் மனைவியருள் ஒருத்தி. 822

சுருபை : இவள் தக்கன் மகளிருள் ஒருத்தி; பூதன் மனைவி; இவள் பலகோடி உருத்திரரைப் பெற்றாள். 1411

சுவலோகம் : சூரிய மண்டலத்துக்கு மேல் துருவபதம் வரையில் உள்ளது இப்பெயர் பெறும். 1330

சுவர்கா : இவள் தக்கன் மகள் ; அக்கினியை மணந்து, பாவகன், பவமானன். சுசியென்னும் மூவரைப் பெற்றனள். இம் மூவரும் ஒவ்வொருவர் பதினைவராக நாற்பத்தைவரைப் பெற்றனர். 737

சுவாயம்புவ மனு : பிரம தேவரது மெய்யின் ஒரு பாகத்திற் றோன்றிய மனு. 487

சதரூபையை மணந்து உலகத்தைப் பாதுகாத்தது. 487

இவர் எழுபத்தொரு சதுர் யுகம் பூமியை ஆண்டமை. 588

திருமால் பத்தியால் முத்தி பெற்றது. 357

சுவாரோசிடன் : இவன் அக்கினியின் மகன், இரண்டாம் மனு; இவன் உலகத்தை காத்த பொழுது வேத சிரசு என்னும்

முனிவரை மணந்த துடிதை யென்பாள் பெற்ற துடித ராதியர் தேவர்; திருமால் விபு எனத் தோன்றினர். வேந்தன் உரோசனன். ஊர்ச்சதம்பன் முதலியோர் எழு முனிவர். 1771 - 2

சூகாமுகம் : மறையோர் வாடும்படி தீமையை மிக இயற்றினவர் அடையும் நரகம். 1358

சூசிமுகம் : தம் செல்வத்திரள் அழியுமென்று பிறருக்கு உதவாத உலோபியர் அழுந்தும் நகரம். 1362

சூர்ப்பநகை : இவள் இராவணன் தங்கை; பஞ்சவடியை அடைந்து சீதையை வௌவுதற்கு முயல இலக்குவனால் மூக்கு முதலியன அறுப்புண்டாள். இவள் தூண்டுதலால் கரன் முதலியோர் போர் செய்து உயிரிழந்தனர். 2265 - 8

இவள் இலங்கையிலுள்ள இராவணனை அடைந்து நடந்ததை எல்லாம் கூறினள். இராவணன் மாரீசனை இராமனிடத்தே போக்க அவன் மான் வடிவோடு சென்றான். 2269

சூரன் : இவ்வரசன் தான் பெற்ற ஒரு மகளைத் தோழனான குந்தனுக்கு அளித்தான். அவன் மகளாக வளர்ந்தமையால் குந்தி யென்னும் பெயர் பெற்றாள். குந்தி துருவாசர் தந்த வரத்தால் சூரியனைச் சேர்ந்து கர்ணனைப் பெற்று ஆற்றில் அவனை விட்டனள். 2628

சூரிய மண்டிலம் : இந்தப் பூமியின்மேல் லக்ஷம் யோசனையின் மேலுள்ளது, இதன் கீழ் இராகு மண்டிலம் உள்ளது. ராகு சந்திர சூரியரைப் பழம்பகையைப்பற்றி இரண்டு உவாக்களிலும் மறைத்துத் திருமால் ஆழியை ஏவ அகல்வது. 1286

சூரிய வமிசம் : இந்த வமிசம் ஒன்றும் இல்லாமற் போக அந்த உயர்ந்த மரபைக் கிருத யுகத்தில் மீட்டும் உண்டுபண்ணி மருத்து என்பவன் உலகை ஆள்வான், அம்மரபில் கலி யுகத்தில் சுமித்திரன் ஈறாகச் சில அரசர் தோன்றி உலகைக் காப்பர். இக்குவாகுவின் மரபு பின்பு அழியும். 2378 - 9

சூரியன் : இவன், சமம், ஆரோகம், அவரோகம் என்னும் முக்கதிகளுடையவனாகிக் கிரகங்களோடு நட்சத்திரங்களுக்கு ஒளி வழங்குவான். இவன் கிரணங்களில் சில மேலே செல்லச் சில கீழே நோக்குதலால் பூமியில் மழையும் பனியும் உண்டாகும். 1289

சித்திரை, ஐப்பசி மாதங்களில் ஒத்திருக்கும்; வைகாசி முதலிய மாதங்கள் ஐந்திலும் பகலில் நாழிகை மிக்கிருக்கும்,

கார்த்திகை மாதம் முதலிய ஐந்து மாதங்களில் பகலினும் இரவு குறையும், இரவில் சக்கரத்தடி மெல்லச் சுழல நுனி விரைந்து செல்லும். 1291

சோதிச் சக்கரத்திற் பாதி இடமெனப் பொருந்திப் பாதி வலமெனப் பொருந்துவதால் உத்தராயணம் என்றும் தை மாதம் முதலிய ஆறு மாதங்கள் வருவான். தக்ஷிணாயனத்தில் ஆடி முதல் ஆறு மாதமும் வருவான். 1292

இவன் ஒரு நாளைக்கு மானதோத்திர மலையைச் சுற்றி ஒன்பதுகோடியே ஐம்பத்தொன்பது லக்ஷம் யோசனை தூரம் செல்லுவான். இவன் உதிக்கும் திக்குக்கு நேர் மேற்கே மாலையாகும்; இவன் மறைவது இல்லை. இரவில் இவன் ஒளி தீயிலும், பகலில் இவன்பாலும் பகல் ஒளி அப்புவிலும் இருக்கும். 1297 - 9

இவன் தேருக்குக் குடத்தின் துவாரம் மூன்று; ஆறு நேமி; பன்னிரண்டு ஆரமாகி இயன்ற ஆண்டு வடிவமான ஒற்றைச் சக்கரமுடையது; இதற்கு வேதசந்தசு எழும் எழுபச்சைக் குதிரைகளாகும். செக்குப்போலுள்ள இத்தேரினது அச்சின் ஒருதலையும் மேருவிலும் துருவ சக்கரத்தில் மற்றொரு தலையும் கோக்கப்பட்டது; அதன் நீளம் நூற்றைம்பத்தேழரை லக்ஷம் யோசனை. 1300 - 1

இவன் தேரின் ஒற்றைச் சக்கரம் மானதோத்தரமலையின் மேல் ஆகச் சுழல்வது, இதன் பாகன் அருணன்; இவன் தேருக்கு எதிர்முகமாகச் செல்வான்; இவன் தேரின்மேல் ஏறி அங்குஷ்டம் அளவு உருவும் வாய்ந்த வாலகில்லியர் பதினேழாயிரர் சூரியனைப் புகழ்வர். 1302 - 3

இவன் பிரமதேவர் புதல்வரான புலத்தியர் முதலிய முனிவர் மாதந் தோறும் வேத விதிப்படி, புகழ்ந்து இவன் தேரில் வருவர்; கிராமணியர் என்னும் தேவகணத்துள் ஒரு வகையார் இத்தேரின் வடத்தைப் பிடித்து இழுப்பார். இதனை வாசுகி முதலியோர் மாதந் தோறும் ஒவ்வொருவராகத் தாங்குவர். அரக்கர் தேர்முன் திரிவர்; கந்திருவர் கீதம் பாடுவர். 1304 - 5

இவன் தேர் முன் மேனகை முதலிய அரம்பையர் பாடி ஆடுவர். முனிவர் முதலிய எழுவகையாரும் உலகு சிறப்படை

யும் பொருட்டு மாதந்தோறும் இவனை வலங்கொள்வர். இவனை மும்மூர்த்தி சொரூப மென்று நூல்கள்கூறும். 1306 - 8

இவன் வலமாகச் சுற்றுதல் தேர்ச் சக்கரத்தின் கதி; இடமாக வருதல், குயவன் வனைந்த சக்கரம் வலமாக வர அதிலுள்ள எறும்பு போலும் கோள்கள் ஏழும் இராசிகளில் எதிருற்று உலாவும். இவனும் சுக்கிரனும் புதனும் ஒருமாதத்தில் ஒரு ராசியில் தங்குவர். 1310 - 2

சூலப்ரோதம் : ஒரு குற்றமும் செய்யாதவரைக் கொன்றவர் அடையும் நரகம். 1362

செவ்வாய் : இது முதலிய ஐந்து கோள்களும் துனைவு, சமம், மந்தமென்னும் மூன்று கதிகளும் வக்கிர கதியும் பொருந்தும்.

சையாதி: இவன் வைவச்சுத மனுவின் மகன்; இவன் ஒரு பெண்ணையும் ஆநத்தன் முதலான மூன்று புதல்வரைப்பெற்று ஏழு தீவுகளையும் காத்தான். இவன் தன் பெண்ணோடு சவன முனிவர் உறையும் காட்டை அடைந்த போது அவர் உடம்பு ஒரு புற்று மூடி அதில் அவர் கண்கள் மின்மினி போல் தோன்றுதலைக் கண்டு முள்ளாற் குத்தப் புற்றில் இரத்தம் எழுந்தது. 2060 - 2

இவன் மகள் செய்த குறும்பால் இவனும் காட்டிலுள்ள யாவரும் குருடராயினர். அரசன் இப்பிழை செய்தவர் யாரென்று நாடுதலும் சுகன்னிகை தான் ஆராயாமல் செய்த பிழையைக் கூறினள். அரசன் சவனரை அவள் செய்த பிழையைப் பொறுக்கும்படி வேண்ட அவர் தனக்கு அவளை மணம் செய்து கொடுக்கும்படி வேண்டினர். 2063 - 4

சோணையாறு : இது காண்டவ வனத்தில் மைநாக பர்வதத்திற் றோன்றிக் கங்கையிற் கலக்கும் நதி. இது செந்நிறமுடையதாதலால் இப்பெயர் பெற்றது. 2931

ஜடாயு : இராமனும் இலக்குவனும் சீதையைத் தேடிவரும்போது சிறகிழந்த ஜடாயுவைக் கண்டு நடந்தவற்றை அறிந்து பின்பு அவனுக்கு ஈமச்சடங்கு இயற்றி அங்கு நின்று போயினர். 2278

ஜமதக்நி: இவர் அருளால் மனைவியும் புதல்வரும் உயிர் பெற்றெழ எல்லாரும் உவகை யுற்றனர் பாசுராமர் நீங்கிய சமயம்பார்த்துக் கார்த்தவீரியன் மைந்தர் இரேணுகை விலக்கவும் கேளாமல் ஒரு சாலையை யடைந்து ஜமதக்நியைக் கொன்றனர். 2485 - 6

ஜரை : இவள் காலயவனனை அடைந்து தனனை மணக்கும்படி வேண்ட அவன் உடன் பிறந்தவளாதலால் அதை மறுத்துத் தன் தம்பியராகும் ஜ்வரன் முதலியோரை உபகாரமாக இருக்கக் கூறியது. 1044

ஜனகன் : இவன் சீதை உதிக்கும்படி பூமியை உழுத கலப்பையால் சீரத்துவன் என்ற பெயர் பெற்ருன். இவன் மகன் குசத்துவசன், இவன் மகன் தருமத்துவசன். 2398

தக்கசாவன்னிமனு : இவன் ஒன்பதாம் மனு ; இவன் காலத்து இந்திரன் புதன் ; தேவர் கர்க்கர் முதலியோர் ; துதிமான் முதலிய எழுவர் சப்த ரிஷிகள்; திருமால் அம்புதரை யென்பாள் வயற்றுதித்து இடப னென்னும் பெயருடயனுகிப் பகைவர்களை அழிப்பார். 1930

தக்கன்: இவன் சாக்ஷுஸ மனுவின் காலத்து உயிர்களை யீன்று ஊழ்வினையால் இறந்து பிரசேதசாக்கியர்க்கு மகனுகப் பிறந்தமை. 1098

இவன் பிராசேதசாக்கியர் மனைவியான மாரிடையிடத் துதித்தவன் ; இவன் மக்களைப் பெறவேண்டி விந்தியமலையில் தவம் புரிந்தான் அதன் சாரலில் அகமருடணை யென்னும் வாவியில் முழுகித் தவஞ்செய்த திருமால் நாரதர் முதலிய முனிவர் பரவ ஆகாயத்தில் கருடன் மீது வந்தனர். 1396 - 7

தக்கிணை : இவளே திருமகள் ; இவர் யக்ஞ புருஷனுகிய திருமாலை மணந்து பன்னிருவரைப் பெற்றனள். இவர் தோஷன் முதலியோர்; பன்னிரு சூரியருக்கு ஒப்பானவர், 724

தசரதன் : இவன் அஜன் மகன் ; இவனுக்குத் திருமால் தானும் தன் கலைகளுமாக இராமன், இலக்குவன், பரதன், சத்துருக்கனன் என்று மக்களாக வந்து அவதரித்தனர். 2222

தண்டகவனம் : இங்கே வந்த இராமபிரான் விராதனைக் கொன்று தேவர்க்கு மகிழ்வூட்டினுன். 2258

இவ்வனத்தில் இராமன் முதலிய மூவரும் பத்துவருடம் வசித்து வந்தனர் ; அங்கே வாழ்ந்த முனிவர்க்கு அபயம் நல்கினர். 2260

தத்தாத்திரேயன் : அத்திரி முனிவரின் புத்திரர். 4377

தந்தசூகம் : உயிர்கள் வருந்தும்படி பாம்பு முதலியவற்ருல் துன்புறுத்துபவர் அடையும் நரகம். 1361

தந்தவக்கிரன் : கிருஷ்ணன் அத்தை மைந்தன்; சிசுபாலனுக்கும் சாலுவனுக்கும் தோழன் ; இவன் கண்ணனால் இறந்தான். 4058

தப்தோர்மி : மகளிரும் ஆடவரும் காமச் செருக்கினாற் சேர்வ ரேல் அவர் காந்துகின்ற இரும்புத் தூணைத் தழுவும் நரகம். 1351

தயை : இவள் தக்கன் மகள் ; தரும தேவதையை மணந்து அபயனைப் பெற்றாள். 731

தருமசாவர்ணி : இவன் பதினொன்றாம் மனு ; இவன் காலத்து விதங்கர் முதலியோர் தேவர் ; அருணதியர் சப்த ரிஷிகள் ; இந்திரன் வைதிருதன் ; திருமால் தருமசேது என்னும் பெயரோடு தோன்றுவார். 1932

தருமத்துவசன் : இவன் அசித்துவசனையும் மிதத்துவசனையும் ஈன்றான். அசித்துவசன் கேசித்துவனைப் பெற்றான். அவன் ஞானமுடையவனாகிப் பூமியை ஆண்டான். மிதத்துவசன் காண்டிக்கனைப் பெற்றான். இவன் கர்ம யோகத்தை விரும்பி ஆண்ட நாளில் கேசித்துவசனுக்கஞ்சிக் காட்டிலமர்ந்து கருமத்தை விட்டு ஞானம் பேற்று அவன் உபதேசித்த ஞானம் உணர்ந்தான். 2399 - 40

தருமதேவதை : இவன் தக்கன் மகளிர் பதின்மரை மணந்தான்; அவர்கள் பானு, வசு, மருத்துவதி, சாமி, விச்சுவை, முகூர்த்தை, சாத்தியை, இலம்பை, ககுபு, சங்கற்பை என்ப வர். இவர்களிற் பானு தேவவிடபனையும் அவன் இந்திர சேனையையும் ஈன்றனர். 1406

தருமன் : இவன் பாண்டுவின் மூத்த குமான். இவன் தாய் குந்திதேவி. யமனுடைய அனுக்கிரகத்தால் பிறந்தவன். 3548

தருமியோதா : இவன் மகன் புநர்வசு. புநர்வசு ஆகுகன் என் என்னும் மகனையும் ஆகுகை என்னும் மகளையும் பெற்றான். ஆகுகன் தேவகனோடு உக்கிர சேனனைப் பெற்றான். உக்கிர சேனன் கஞ்சன் முதலிய நான்கு புதல்வரையும் கஞ்சவதி முதலிய மகளிர் நால்வரையும் பெற்று, மகளிர் நால்வரையும் வசுதேவாது தம்பிக்கு மணஞ் செய்து அளித்தான். 2619 - 20

தவச்சுப்பிரன் : இவன் மனைவியான விகுண்டையிடத்து மாய வன் வைகுண்டனெனத் தோன்றி நளினை வேண்டுதலால் வைகுண்டம் என்னும் நகாத்தை அமைத்தான். 1816

தவுமியன் : ஒரு முனிவர் ; பரிட்சித்துக்குச் சாதக வினை செய் தவர். 175

தன்வந்திரி : இவர் பாற்கடலில் அமுதகலசத்தோடு தோன்றினர்; அசுரர் தேவரோடு மாறுபட்டு அவரை வளைத்து அதை அபகரித்தனர். சிலர் எமக்கே யுரியதென்ன வேறு சிலர் கடல் கடைந்த எல்லாருக்கும் பொது என்றனர். 1852 - 4

தனு : இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி; தானவரைப் பெற்றவள் ; அவர்கள் சம்பரன், விடபருவா முதலிய 61 பேர். 1418

தாதா : இவன் குகு முதலிய நான்கு பெண்களை மணந்தான். 1553

தாம்பிரை : இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி ; பறவையின் தொகுதியைப் பெற்றாள். 1417

தாமதன் : இவன் உத்தமனுக்குத் தம்பி ; நான்காம் மனு ; இக்காலத்து இந்திரன் திரிசி பெற்ற திரிசிகன் ; தேவர் சத்தியகணுதியர்; வியோமர் முதலியோர் எழு முனிவர். அரிமேதசனை மணந்த அரிணியிடம் திருமால் அரியென உதித்து நால் வேதங்களைக்கொணர்ந்து அளித்தான். திரிகூடத்திலிருந்த யானைக்கு இடரகற்றினன். 1774 - 5

தாமிச்சிரம் : நரகங்களுள் ஒன்று ; நிதி முதலான பிறர் பொருளை மனம் வைத்து வௌவினர் அடைவது. 1345

தாருகன் : இவன் கண்ணனுடைய தேர்ப்பாகன். 4038

தாரை : தாரையை நோக்கி, முனிவரும் தேவரும் நீ யாரைக் கலந்து இந்த மகனைப் பெற்றாயென்று கேட்க அவள் நாணத்தால் விடை சொல்லாமலிருந்தாள். பிரமதேவர் கேட்க நாணத்தால் பூமியை நோக்கிச் சந்திரனுக்குப் பெற்றதாகக் கூறினள். பிரமதேவர் இதனால் அவனுக்கு மதிமகனெனவும் புத்தியால் புதனெனவும் பெயரிட்டார். 2411 - 3

திதி : இவள் காசிப முனிவர் மனைவி; மாலைப் பொழுதிற் கலவி செய்ய விரும்பியது. 506

இவள் காசிபரை மணந்து இரணியன், இரணியாக்கன் என்னும் இருவரைப் பெற்றாள். 1557

திதிக்ஷை : இவள் தக்கன் மகள் ; தரும தேவதையை மணந்து க்ஷேமனைப் பெற்றாள், 733

திமி : இவள் காசிபன் மனைவியர் பதின்மூவருள் ஒருத்தி ; நீர் வாழ்வனவற்றைப் பெற்றனள். 1418

திரிகூட மலை: இது ஒன்பதினாயிரம் யோசனை உயர்ந்து வெள்ளி பொன் இரும்பு என்பவற்றாலான மூன்று சிகரங்களை யுடையதாகி விளங்குவது; இம்மலையில் பல பெண் யானைகள் தன்னைச் சூழ ஒரு களிறு விளங்கிற்று: ஒரு நாள் குளத்திற் சென்று தாமரை மலரைப் பறித்து விளையாடிய போது முதலை பிடித்துக் கொண்டது. பிடிக்குலம் சேர்ந்து இழுக்கவும் யானை கரையடையவில்லை. 1776 - 1799 - 1801

திரிசங்கு: இவன் சத்திய விரதன் மகன்; இவன் வசிஷ்டர் சாபத்தால் காட்டிற்குப் போய்ச் சண்டாளனாகிப் பின் விசுவாமித்திரனருளால் தேவலோகம் சென்றான்; தேவர் அவனைத் தள்ளிவிட அம்முனிவர் ஆகாயத்தில் நிறுத்தினர். அவரருளால் இன்னமும் ஆகாயத்தில் யாரும் காண ஒளிகளோடு விளங்குகின்றான். இவன் மகன் அரிச்சந்திரன்; இவன் காரணமாக வசிஷ்டருக்கும் விசுவாமித்திரருக்கும் பகைமை யுண்டாயிற்று. 2140 - 41

திருதராஷ்டிரன்: இவன் குருடன். இவன் காந்தாரியை மணந்தான். இவன் மக்கள் துரியோதனன் முதலான நூற்றுவரும் ஒரு பெண்ணுமாவர். 2574

திருதவிரதை: இவள் மலையத்துவசன் மகள்; இவளை அகத்திய முனிவர் மணந்தனர். இவள் மகன் இத்துமவாகன் என்பவன். 1059

திருமகள்: பாற்கடலில் தோன்றிய போது இவளுக்கு இந்திரன் தவிசு ஈந்தான்; நதிகள் புனல் நல்கின; பூமி வாசனைப் பொருள்களை நல்கிற்று; ஐந்து வகைப் பசுக்கள் பால் முதலியன அளித்தன. முனிவர் நீராட்டினர், 1844

இவள் துருவாசன் முதலிய முனிவர்களையும், சனகாதியரையும், மார்க்கண்டாதியரையும், ஈசனையும் சில காரணங்களால் விலக்கித் திருமாலை அடைந்து அவர் மார்பில் மாலையைச் சூட்டி அவர் மார்பில் மின்னலைப் போலக் கலந்தனள். 1347 - 51

திருமால்: இவரே பல மனுக்களின் காலத்து தேவர், முனிவர், இந்திரன் என்று தோற்றுவர். 1770

துந்துபி: வாத்திய வகைகளுள் ஒன்று. 2648

துருவன்: சுநீதியின் மகன். 823

இவன் சிம்சுமாரன் என்னும் பிரமன் மகளான பூமி என்பவளை மணந்தது, 873

வாயுதேவன் மகளான இளை யென்பவளை மணந்து உற்கலன் என்பவனைப் பெற்றது. 877

துருவாசன் : இவர் திருமகளுக்கு இசைபாடுவாள் ஒருத்தியின் மூலம் அவள் அணிந்த துழாய் மாலையைப் பெற்று இந்திரனுக்கு அளிக்க அவன் அதனைத் தலையில் அணியாமையால் கோபங் கொண்டு அவன் செல்வமெல்லாம் இழக்கும்படி சாபமிட்டார். 1820 - 21

துவட்டா : இவன் தன் மகனை இந்திரன் கொன்றதைக் கேள்வியுற்று வேள்வி செய்து அதில் இந்திரசத்துரு எழுந்து இந்திரனைக் கொல்க என அவி வழங்கினன்; அதிலிருந்து விருத்திரன் என்னும் அசுரன் தோன்றினன். 1479 - 80

துவரை : இது முத்தித் தலங்கள் ஏழனுள் ஒன்று; விஷ்ணு உலக பார நிவர்த்திக்காகக் கிருஷ்ணனாக அவதரித்து அரசாண்ட ஊர். கண்ணனுக்குப் பிறகு கடல் கொண்டது. 3392

துவிதன் : இவன் நரகாசுரனுடைய தோழன்; சுக்கிரீவனுடைய மந்திரியாக இருந்தவன். 3805

துஷ்டி : இவள் தக்கன் மகள்; தருமதேவதையை மணந்து சந்தோஷனைப் பெற்றாள். 732

துஷ்யந்தன் : கண்வரது ஆசிரமத்தை யடைந்து அங்கே சகுந்தலையைக்கண்டு விருப்புற்று அவள் அரசர் குலப் பெண்ணென்று துணிந்து அவளை வினவி அவள் கோசிகருக்கு மேனகையிடம் தோன்றினவளென அறிந்து அவள் முகமன் கூற அங்கே தங்கினன். 2535 - 39

சகுந்தலையின் முகமனுரையைக் கேட்ட இவன் கோசிகன் பெற்றமையால் நற்குணம் வாய்ந்தாளென்று புகழ்ந்து அவளைக் காந்தருவ மணத்தால் கலந்தனன். சகுந்தலை பரதனைப் பெற்றாள். பரதன் பெண்சிங்கத்தோடு விளையாடல் கண்டு கண்வர் திருமாலின் அமிசமென்று எண்ணினர். 2539 - 42

தெய்வயானை : சன்மிஷ்டையால் தள்ளப்பட்ட இவள் கிணற்றில் வருந்துவதை வேட்டையாடி வந்த யயாதி கண்டனன். தன் தோள்மேலுள்ள துகிலைக்கொடுத்து அவளை வெளியே எடுத்து விட்டான். அவன் உடம்பு தன்னைத் தீண்டினமையால் அவனையே வரனாக வரித்தாள். 2507 - 8

தன் மனைவியை யடைந்த தெய்வயானை தன் தந்தையான சுக்கிரனிடம் நடந்தவற்றைக் கூற அவர் அசுரர்க்குத் துன்பம் உண்டாக அவ்வூரைக் கடந்து போயினர். 2511

தேவகன் : இவன் தேவவான் முதலான புதல்வர் நால்வரையும், தேவகி, திருததேவை, சாந்திதேவை, உபதேவை, தசக தேவை, ததிதேவை, தேவரக்கிதை என்னும் மகளிரையும் பெற்ருன். தேவகி முதலிய எழுவரையும் வசுதேவர் மணந்தார். 2621

தேவகி : கண்ணனின் தாய் ; இவளுடைய தந்தை தேவகன். 2647

தேவசாவன்னி : இவன் 13-ம் மனு; இவன் காலத்து இந்திரன் திவப்பதி ; சுகன்மர் முதலியோர் தேவர் ; சுதபர் முதலியோர் சப்த ரிஷிகள் ; திருமால் யோகவிபு என்று அவதரித்து உலகைக் காப்பார். 1934

தேவதாசித் : இவன் இடபன் மகன் ; சுமதியின் மகன், இவன் மகன் தேவத்யும்நன் ; இவன் மகன் பரமேட்டி ; இவன் மகன் பிரதிகன் ; இவனுக்கு மகன் பிரதிகத்தா ; இவன் மகன் பூமன் ; அவள் மகன் உத்கீதன் ; அவன் மகன் கயன். 1184 - 1187

தேவர் : இவர் அசுரரோடு சேர்ந்து மந்தா மலையைப் பெயர்த்து எடுத்துச் செல்லும் பொழுது மார்பும் தோளும் நெரிந்து வருந்தத் திருமால் கருடன்மீது தோன்றி அம்மலையை ஒரு விரலில் ஏந்திச் சென்ருர். 1827 - 8

இவர் அசுரரோடு சேர்ந்து பாற்கடலில் மந்தரமலையை நிறுவி வாசுகி யென்னும் பாம்பைக் கயிருகச் சுற்றத் திருமால் தேவரோடு அப்பாம்பின் தலையைப் பற்றி நின்றனர். அசுரர் யாமோ வாலைப் பற்றுவதென்னத் திருமால் அருளால் தேவர் வாலைப் பற்றிக்கொள்ளத் தலைப் படத்தை அசுரர் பற்றினர். 1829 - 31

இவர் திருமாலின் ஆணையால் குரங்கு வடிவாய்ப் பிறந்தனர். 2234

தேவலோகம் : (பொன்னுலகம்) இது தேவர்கள் பயில்வது ; பத்துக் கோடி யோசனைப் பரப்புடையது ; தண்ணீர்க் கடலைச் சூழ்ந்துள்ளது ; இதனைச் சுற்றி மூன்றுலகத்துக்கும் மதில்போல உலோகாலோகமலை உள்ளது. 1278

தேவஹூதி : சுவாயம்புவ மனுவின் புதல்வி ; கருத்தமனுக்கு மனைவி. 489

பாக. 101.

இவள் நாரதரால் கருத்தமன் குணங்களைக்கேட்டு அவனையே மணக்க விருப்பங் கொண்டமை. 530

தேவாபி : சந்திர குலத்தில் பிறந்தவன். சந்தனுவின் சகோதரன். 4750

தேனுகாசுரன் : கழுதையின் வடிவமாக வந்து கண்ணனைக் கொல்ல முயற்சித்தான். 2840

நக்கினசித் : அயோத்தி நாட்டரசன். 3567

நகுடன் : இவன் நூறு பரிவேள்வி இயற்றி இந்திர பதவிக்குச் செல்லும் பொழுது எழு முனிவரிட்ட சாபத்தால் மலைப் பாம்பாயினன். 1511

இவன் புதல்வர் யதி, யயாதி, சையாதி, ரயாதி, வியதி, கிருதி என்னும் அறுவர் ; இவர்களுள் யதி என்பவன் துறவறம் பூண்டான். நகுடன் இந்திரனாகிய ஸப்த ரிஷிகளின் சாபத்தால் மலைப் பாம்பாயினன். யயாதி தன் சகோதரர் நாற்றிசையையும் அளிக்க எழுலகையும் ஆண்டான். 2500 - 51

நந்தகோன் : கண்ணனின் வளர்ப்புத் தந்தை. 2660

நபகன் : இவன் வைவச்சுத மனுவின் புதல்வன் ; இவனுக்கு நாபாகன் மகன். அவன் பெற்ற மகன் அம்பரீஷன்; இவன் பல வகையாலும் திருமாலை வழிபட்டு வசிட்டர் முதலிய முனிவரைத் துணைக் கொண்டு அசுவமேதம் பல செய்து எழு தீவையும் ஒரு குடைக் கீழ் ஆண்டு வாழ்ந்தான். 2079 - 82

நமுசி : இவன் ஓரசுரன், இந்திரன் மாதலி உதவிய தேரில் வந்ததைக் கண்டதும் கதைகளைச் சொரிந்தனர். இந்திரன் இவன் அம்பறாத்தூணியை ஆயுதத்தால் அழித்து இருளை நீக்கிய சூரியன் போனின்றான். 1896

நரகம் : ஒருவன் பூண்ட பெரிய மணியைக் களவு செய்தோர் கல்போன்ற அனற்றிரளை உண்ணுவது. 1358

நரபலி விரும்பிச் செய்தவர் வருந்த அவரது உடம்பைக் கீறி யமதூதர் உதிரத்தை உண்ணும் இடம். 1359

நரக வுலகம் : அறத்தைச் செய்யாதவர் தங்குவது ; உலகின் கீழ்த் தென் திசையில் உள்ளது ; தாமிச்சிரம் முதல் இருபத்தெட்டு வகையுடையது. 1343 - 4

நரகாசுரன் : வராக வுருக்கொண்ட விஷ்ணுவிற்குப் பூமிதேவியிடம் பிறந்தவன். 3616

நரசிங்கம் : தேவர் இவ்வடிவைக் கண்டு அஞ்சி ஆகாயத்தில் மொய்த்தனர். பிரமதேவனும் ருத்திரனும் அஞ்சித் திருமகளைச் செல்லும்படி கூற அவளும் அஞ்சினள். தேவர்க ளெல்லாரும் நரசிங்கத்தைப் புகழவும் கோபந் தணியாமையால் துன்பமுற்றனர். பிரகலாதன் நரசிங்கத்தைப் புகழத் தன் கையால் அவன் முதுகைத் தடவி நீ வேண்டியது யாதெனக் கேட்டது. 1693-98

நரன் : இவன் மூர்த்தியின் மகன்; இவனே அருச்சுனனுக வந்தவன். 736

நளன் : இவன் சந்திரகுலத்தரசன்; இருதுபன்னனுக்கு நண்பன் கலியை நீக்கும் வித்தையை இவன் இருதுபன்னனிட மிருந்து கற்று அவனுக்குக் குதிரையின் உளமறிந்து செலுத்தும் வித்தையைக் கற்றுக் கொடுத்தான். 2191

நாககன்னியர் : இவர் காளியன் மனைவியர். 2851

நாபி : இவன் பிரிய விரதனுக்குப் பூருவசித்தி யென்பாளிடம் தோன்றிய புதல்வர் ஒன்பதின்மருள் மூத்தவன்; ஏனையவர் கிம்புருடன், கேதுமாலன். இளாவிரதன்; பத்திராச்சுவன், இரம்மிகன், இரண்மயன், குரு என்போர். 1132

நாபி : இவன் செய்த யாகத்தில் திருமால் தோன்ற அவரைப் போன்ற மகன் தனக்குப் பிறக்கவேண்டு மென்று வரங் கேட்டது; திருமால் அங்ஙனமே அருளியது. 1136

நாரணன் : நீரைத் தனக்கு இருப்பிடமாகவுடைய விஷ்ணு. 2664

நாரதன் : ஒரு முனிவன். பிரமனின் மைந்தன்; கலகம் செய்வதையே முக்கிய தொழிலாகக் கொண்டவன். திரிலோக சஞ்சாரி. 2776

நாராயண கவசம்: இது விசுவரூபனால் இந்திரனுக்கு உபதேசிக்கப்பட்டது இதைப்பெற்று இந்திரன் அவுணரை வென்றான். 1438
இதனை முன்பு கௌசிகன் என்னும் மறையவன் ஓதி யோகத்தால் வீடு பெற்றான். 1467

நாராயணன் : இவன் மூர்த்தியின் மகன்; இவனே கண்ணனுக அவதரித்தவன். 706

நாவலந்தீவு: கீழ்மேலில் இலக்கம் யோசனையும் தெற்கு வடக்கில் இலக்கம் யோசனையும் உடையது; ஒன்பது கண்டங்களையும், மேருவைத் தாமரைப் பொகுட்டுப்போலப் பெற்றது. 1196

நான்முகன் : படைத்தல் தொழில் செய்கின்றவன் ; திருமாலின் உந்தியில் தோன்றியவன். 2695

நிடதவெற்பு : மேருமலையின் தெற்கிலுள்ளது, மேல் கடலுக்கும் கீழ் கடலுக்கும் நீண்டுள்ளது. 1196

நிடாதன் : இவன் வழியில் தோன்றியவர் வேட்டுவர்; இவர் காட்டிலும் மலையிலும் வாழ்பவர். 932

நிமி : யாக்கை நிலையாமையை யுணர்ந்த நிமி கௌதமரைக் கொண்டு யாகத்தைச் செய்தான். ஆயிரம் ஆண்டு செய்வேன் என்ற யாகத்தை ஐந்நூறாண்டு செய்து நிமி உறைந்த நாளில் இந்திரன் வேள்வியை முடித்து வசிட்டர் நிமியிடம் வந்தார். அவர் வரவை யறியா அரசன் உறங்கவே அவர் சினந்து உடல் ஒழியும்படி சாபம் இட்டார். 2384 - 5

உறங்கிய நிமி விழித்து வசிட்டர் கூறிய சாபத்தைக் கேட்டு, தன்வரவை அறியாததற்காகச் சபித்த வசிட்டரை இறந்து நீங்கும்படி சாபமிட்டான். இருவரும் இறந்தனர். 5385 - 86

இறந்த நிமியை முனிவர்களும் தேவர்களும் சேர்ந்துயெழுப்ப நிமி தான்விட்ட உடம்பை அடையேன் என்றனன். இவன் பெயர் விதேகனென்று யாவரும் சொல்லத் தேவர் வாத்தால் இமைதோறும், கலந்திருந்தனன்; இவன் உடம்பைக் காத்து முனிவர் நெய் சொரிந்து வேள்வியை முடித்தனர். 2388 - 9

உலகிற்கு அரசனை விரும்பி இவன் உடலை முனிவர்கள் கடைய அதிலிருந்து ஓரரசன் தோன்றினன். அதனால் அவன் சனகன் என்ற பெயர் பெற்றான். மிதிலன் என்னும் பெயர் விவேகன் மதலையாகி வைதேக னென்னும் பெயரும் பெற்றுப் புதிய நகரம் ஒன்றை அமைத்து அந்நகருக்கு மிதிலை யென்று பெயருமிட்டான். 2390 - 91

நியதி : இவன் விதாதாவை மணந்து பிராண னென்பவனைப் பெற்றனள். 718

நிருகன்: இவன் இக்ஷ்வாகு வம்சத்து வைவச்சுத மனுவின் இரண்டாம் புத்திரன். இவன் பிராமணர்களால் ஓணானாகச் சபிக்கப்பட்டான். பிறகு அச்சாபம் கிருஷ்ணனால் நீங்கிற்று. 3765

நீலலோகிதர் : பிரம தேவரது புருவ மத்தியில் தோன்றியவர். 478

நைமிசவனம்: பிரமதேவர் நேமி நிற்றலால் இப்பெயர் பெற்றமை. 6

பகாசுரன்: கொக்கின் வடிவாக வந்து கண்ணனைக் கொல்ல முயற்சித்தவன். 2796

பகீரதன் : இவன் பலகாலம் தவம் செய்தமையால் கங்கை சிவ பெருமான் சடை வழியாகப் பூமிக்கு வந்தது. இவன் தேர் முன்னம் செல்லும் போது பாதாளத்தில் பொருந்திக் கபிலர் சாபத்தால் சாம்பரான அரசர் மேல்படிய அவர்கள் சுவர்க்க மெய்தினர். 2183 - 4

இவன் கொணர்ந்தமையால் கங்கைக்குப் பாகீரதி யென்று ஒரு பெயருண்டாயிற்று. ஆதலால் பகீரதன் புகழ் அள விட்டு உரைத்தல் இயலாது. 2187

பஞ்சதாமோதை : தக்கன் மகளிருள் ஒருத்தி, பூதன் மனைவி ; இவள் பஞ்ச பூதங்களைப் பெற்றாள். 1411

பஞ்சவடி : இங்கே இராமபிரான் முதலிய மூவரும் ஒரு பர்ண சாலை யமைத்துச் சில காலம் தங்கிய போது சூர்ப்பனகை இராமனிட மடைந்து சீதையை வெளவ முயல இலக்குவன் மூக்கு முதலியவற்றை அரிந்தான். 2264 - 7

பத்திராச்சுவம் : ஒரு தேசம். 24

இது மேற்கே மாலியவானும்; கிழக்கே கீழ்கடலும், வடக்கே நீல மலையும், தெற்கே நிடதமும் எல்லையாக அமையப் பெற் றது ; இதுவும் கேதுமாலம் போன்ற பரப்புடையது. 1202

இவ் வருஷத்தில் யக்ஷர், தேவர், முதலியோர் வணங்க அருள் புரிந்து திருமால் அயக்கிரீவ னென்ற பெயரோடு வாழ்வர். 1241

பத்திரை : இவள் கிருஷ்ணனின் மனைவி. 3577

இஃது ஒருபத்திரைதி ; இது மேருவில் தோன்றி நீலம், சுவேதம், என்னும் மலைகளைக் கிழித்துக் குரு வருடத்தை அடைந்து வட கடலில் கலக்கும். 1229

பயமானன் : இவன் அந்தகன் என்னும் அரசன் மகன். இவன் புதல்வன் விடூரதன். விடூரதன் சூரனைப் பெற்றான். சூரன் பயமான னென்பவனைப் பெற்றான். இப் பயமானன் மகன் சினி. சினிபோச னென்னும் அரசனைப் பெற்றான். 2623 - 24

பயிலர்: ஒரு முனிவர்; வியாசர் மாணக்கர். இருக்கு வேதத்தை யறிந்தவர். 4830

**பயோ விரதம் :** இது மகப்பெருதவர் மேற் கொள்ளுவது; பிரம தேவரால் காசிபற்குக் கூறப்பட்டது. பங்குனி மாதத்தில் சுக்கில பக்ஷத்தில் அமாவாசை தொடங்கித் திருமாலின் உரு வத்தை அமைத்துப் பன்னிரண்டு திதியிலும் பதினறு உப சாரத்தோடு வழிபட்டால் துன்பம் தீரும் அத்திதிகளில் பாலே அருந்தி குருவுக்குச் செல்வம் கொடுக்க வேண்டும். அந்தணர்க்கு உணவு அளித்தல் வேண்டும். 1951 - 54

**பரசுராமர் :** இவர் விஷ்ணுவின் அம்சாவதாரம்; இவர் க்ஷத்தி ரியர்களே நாசஞ் செய்ய எண்ணிச் சிவமூர்த்தியை நோக்கி தவம் புரிந்தார் சமதக்னி முனிவரின் குமாரர். 4130

தன் தந்தையிட மிருந்த காம தேனுவைக் கார்த்த வீரியன் கவர்ந்து சென்றதை அறிந்து பரசுராமன் கடுங் கோபங் கொண்டு மழு, வில், அம்பு முதலியவற்ருேடு போர் புரிந் தான். 2468 - 2471

கார்த்தவீரியன் அனுப்பிய பதினெட்டு அக்குரோணி சேனே யையும் ஒருவனுகவே வென்ருன்; பரசுராமனல் தன் மைந்தர் இறத்தலேக் கண்டு கார்த்தவீரியன் போர் செய்தான்; பரசு ராமன் தன் மழுவை ஏவ அது கார்த்தவீரியன் தலேயை வெட்டியது மைந்த ரோடினர். 2472 - 5

ஓமத்துக்குரியவற்றைக் கொடுக்கும் காமதேனுவைக் கண்டு ஜமதக்கி பர்ணசாலேயை யடைந்து, நடந்தவற்றைக் கூறி னன். ஜமதக்கி தன் மகன் செய்ததற்கு வருந்தினர். அரச னேக் கொன்ற பாவம் நீங்கத் தீர்த்தயாத்திரை செய்யும்படி ஏவினர். அவனும் அது செய்யச் சென்ருன். 2476 - 9

இவன் ஓராண்டு கங்கை முதலிய நதிகளில் ஆடி மறுபடியும் தன் தந்தை யிருந்த பர்ணசாலேயை யடைந்தான். 2480

தன் கட்டளேயை நிறைவேற்றியதற்கு மகிழ்ந்த ஜமதக்கி பரசுராமன் விரும்பியதைக் கேட்கும்படி சொல்ல, இறந்த வர் பிழைக்கவும் தன்னல் மரணமடைந்தன ரென்று அறியா திருக்கவும் வரம் வேண்டினர். 2484

இவன் தந்தை தலேயை மீட்டுக் கொண்டுவந்து உடலிற் பொருத்தி ஜமதக்கி உடலே எரித்தனன். தன் தாய் தந்தை தலேயை அரசன் மக்கள் வெட்டிய காலத்தில் இருபத்தொரு மார்பில் அடித்துக் கொண்டாள். 2489

தான் கொன்ற அரசருடைய இரத்தத்தைத் தேக்கி அதைச் சமந்த பஞ்சகம், என்று ஐந்து தடாகங்களாக்கித் தன் தந்தைக்குத் தருப்பணம் இயற்றினன். 2490

இவன் பல யாகங்களைச் செய்து காசிபன் முதலிய முனிவர்க்குப் உலகத்தைப் பங்கிட்டுத் தானமாக அளித்து இன்னும் மகேந்திர மலையில் வாழ்ந்து வருகின்றார். 2491

பரத்துவாசன் : பரிட்சித்தைக் காணவந்த ஒரு முனிவர். 307

பரத்துவாசர் : இவர் ஆசிரமத்தில் இராமபிரான் ஒருநாள் தங்கினர். 2251

பாதர் : இவர் வேதம் ஓதாமையால் முனிவர் இவரை வயலைக் காக்கும்படி செய்தனர். அப்படியே வயல்களையும் தினைப் புனங்களையும் காத்துவந்த பொழுது இவரைத் துர்க்கைக்குப் பலியிட வேடன் ஒருவன் பற்றிச் சென்றான் ; துர்க்கை அவ் வேடரது தலையைத் துணித்தாள். 1159 - 61

பரதன் : யாகஞ் செய்தலிற் சிறந்தோன் ; துஷ்யந்தன் மகன். 180

இவனால் பரதகண்டம் என்னும் பெயருண்டாயிற்று ; இவன் மனைவி பஞ்சசனி ; இவன் புதல்வர்களைச் சுமதி முதலிய ஐவர் ; தன் மக்கள் நிலங்காப்பத் தவஞ் செய்யவ்வரை சென்றான். 1143

பரதன் : இவன் சேனையோடு தன்னை அழைக்க வந்தபோது தம் தந்தை காலஞ் சென்றதை இராமபிரான் அறிந்தான் பிறகு தந்தைக்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்தான். 2253 - 4

இவனுக்கு இராமபிரான் தன் பாதுககளை அளித்தனன். அவற்றை பெற்று மீண்டு சென்று நந்திக்கிராமத்தை அடைந்தான். 2255 - 6

பரதன் : தேவர் பகையை அழித்து பூமி முழுதும் ஆண்டு விதிப்படியே பதினாலாயிரம் அசுவமேதம் இயற்றினன். இவனுக்கு ஒப்பான அரசர் முக்காலத்திலும் இல்லை. இவன் விதர்ப்ப நாட்டு அரசன் மகளிர் மூவரை மணந்தான். 2549 - 51

இவன் மனைவியர் தாம் பெற்ற புதல்வர் அரசனைப் போன்றில்லாமையால் பிறந்தனரோ என்று புதல்வரைக் கொன்றமையால் இறவாத பிள்ளையை விரும்பி ஒருயாகம் செய்தான். தேவர்கள் பிரகஸ்பதியின் மகனான பரத்துவாசனை மகனாக அளித்தனர். 2551 - 3

பாதனுக்குத் தேவர் அம்மகனை அளித்த காரணத்தைப் பரிட்சித்துக் கேட்டனன். பிரகஸ்பதி இரவில் எழுந்து சாபத்தால் தன்சகோதரனை உசத்தியன் மனைவியை அணைந்தனர். அவள் முன்னமே கருவுற்றிருந்தமையால் மற்றொரு கருவுக்கு இடமில்லை யென்று முதற் கரு உதைந்து தள்ளினமையால் அவர் வீரியம் பூமியில் வீழ்ந்தது. 2584 - 6

பிரகஸ்பதியின வீரியம் முதற் கருவைக் குருடனுகச் சபித்தது. தள்ளப்பட்ட வீரியம் உருவு பெற்று அழகான குழந்தையாக விளங்கிறறு. பிரகஸ்பதி புதல்வனை விரும்பாமல் பழி வருமென்று போயினர் தாயும் மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளவில்லை, 2557 - 58

தேவர் பிரகஸ்பதியின் மகனைப் பாதனுக்கு அளித்தனர். பாத்துவாச னென்று முன்னமே ஒரு பெயருற்ற அவன் தத்தனுதலால் விதத்த னென்னும் பெயரையும் பெற்றான். அவன் மரபில் அந்தணரும் அரசரும் தோன்றினர். 2559 - 60

பரிட்சித்து : இவன் புதல்வர் நால்வர்; அவர்களுள் சனமேசயன் பரிட்சித்தின் சரித்திரத்தைக் கேட்டுக் கோபமுற்றுச் சர்ப்ப யாகம் செய்தான். 2583

பரிதி : கண்ணின் அதிட்டான தேவர். 640

பாஞ்சசன்னியம் : சம்புத்தீவைச் சுற்றியுள்ள தீவு; சகரர் சம்புத்தீவைத் தோண்டினமையால் உண்டானது. 1257

பாண்டு : இவன் குந்தியையும் மாத்திரையையும் மணந்து வாழும் நாளில், தன்மனைவியைக் கூடினுல் மாணம் நேரும் என்னும் சாபத்தைப் பெற்றான். ஆதலால் அவ்விருவரும் தேவரை யடைந்து மக்களைப் பெற்றனர் 2575 - 6

பாரத வருடம் : இது கிம்புருட வருடத்தின் தெற்கில் உள்ளது; வதற்கில் இமயமலை நடுவே ஒன்பதினுயிரம் யோசனை யகன்றுள்ளது ; மற்ற மூன்று திசையிலும் கடல் சூழ்ந்தது ; வில் வடிவமுடையது; இமயமலை இதற்கு வின்னுண் போன்றமைந்தது ; இது கரும பூமியாகும். 1207 - 8

இங்கே முனிவர்க்கு வீடு பெறும் திறத்தைக் கூறித் தன்னை வழுத்தும் நாரதற்கு அருள்செய்யும் பொருட்டுத் திருமால் நாராரணன் பெயரொடு வாழ்வார். 1248

இது கங்கை, காவிரி, கன்னி, தாமிரபன்னி, காளிந்தி துங்கபத்திரை முதலிய மலைகளும் பொருந்தியது. 1249

இங்குள்ள சத்துவ கருமத்தோர் சுவர்க்கமும் பெறுவர் இராசத கருமத்தோர் மானிடராவர் ; தாமத கருமத்தோர் நரகமடைவர். வினைப்பயன் விரும்பாதவர் வீடு பெறுவர். 1251

சுவர்க்கத்துத் தேவராய்ச் சென்றோரும் திருமாலின் திருவடிகளை அடையும் பொருட்டு இங்கே பிறத்தலை விரும்புவர் ; தேவரும் வீடடைய வேண்டி அற்ப ஆயுள் சேர்ந்து திருமால் நாமம் உச்சரிக்க இங்கே பிறத்தலை விரும்புவர். 1252 - 53

இவ்வருடத்திற் பிறந்தவர்க்கு முத்தி எய்துவிக்கும் ஞானம் வந்தடையப் பொன்னுலகின் நிலையாமையை யுணர்ந்து காமமற்று வினைசெய்திலேமென வருந்துவர். 1254

பாவன் : இவன் பிரமதேவன் முதுகில் தோன்றியது பொய்யாம் பெண்ணை மணந்தது. 816

பாற்கடல் : இதில் தோன்றிய விடத்தைச் சிவபெருமான் அருந்திய போது சிந்தியதைத் தேள் பாம்பு முதலியவை உண்டு விஷம் பெற்றன. மீண்டும் கடைந்தபோது காமதேனு, உச்சைச்சிரவம், ஐராவதம், கற்பகம், சங்கநிதி, பதுமநிதி, அரம்பையர், திருமகள் முதலிய பொருள்கள் தோன்றின. 1840 - 43

பானு : இவள் தக்கன் மகளிருள் ஒருத்தி ; தருமன் மனைவி ; இவள் பெற்ற மகன் தேவவிடபன் ; அவன் மகன் இந்திரசேனன். 1406

பாஹுகன் : இவன் வேனன் உடம்பிலிருந்து தோன்றியவன் ; இவன் தான் செய்ய வேண்டியதைக் கட்டளை யிடும்படி அந்தணரைக் கேட்க அவர் நில் என்றமையால் நிஷாதனுயினன் 931

பிடவம் : ஒருவகைப் புஷ்பம் ; முல்லையின் கருப்பொருள். 2728

பிரகலாதன் : இவன் இரணியன் மகன் ; இவன் விரோசனனைப் பெற்றான். அவன் மகன் மகாபலி ; அவன் மகன் வாணாசுரன். 1562

இவன் தனக்கு அந்தணர் அறம், பொருள் இன்பங்களைக் கற்பிக்கவும் அவற்றைக் கற்றிலன், இரணியன் தன் துடைமீது இவனை இருத்திக் கற்றதை வினவத் திரிகாணங்களாலும் திருமாலை வழிபடுதல் சிறந்த தெனக் கூற இரணியன் சினம் கொண்டான். 1645 - 47

இவன் சிறுவர்க்கு உபதேசிக்க அவர்கள் இவனுக்கு நாரதர் உபதேசித்ததைக் கூறும்படி கேட்க அவனும், தன் தந்தை

யான இரணியன் தவஞ் செய்யச் சென்ற பொழுது தேவர் கள் அசுரரோடு போர் செய்து தன் தாயைச் சிறைப்படுத்தி ஞன் இந்திர னென்றும், அவளை விடுவிக்கும்படி நாரதர் வேண்ட இந்திரன் அவள் வயிற்று மகளைக் கொன்ற பின் விடுவே னென்றும் கூறியதாகச் சொன்ஞன். 1658 - 9

நாரதர் இவன் கொல்லுதற் குரியனல்லன் என்றும், திரு மாலுக்கு அன்ப னென்றும் கூறிச் சிறையினின்றும் விடு வித்து இவன் அன்னைக்குத் தத்துவத்தை உபதேசித்தான் என்றும், அதனைத் தான் தாய் வயிற்றிலிருந்து கேட்ட தாகவும் கூறினர். 1660 - 61

இவன் திருமாலையடைய வேண்டுவதே காரியமெனத் தத்து வோபதேசம் செய்த பின் மற்றச் சிறுவரும் அறிவும் அன்பும் பெற்றனர். மறையவர் அஞ்சி இரணியனுக்கு இதை அறிவுறுத் தினர். இரணியன் கோபங் கொண்டு தன் மகனைக் கொண்டு வரும்படி ஏவ அசுரர் கொணர்ந்தனர். கொல்வே னென்று பயம் உறுத்தினுன். திருமால் மந்திரத்தைக் கூறும் தன் னைக் கொல்ல முடியா தென்றும் கூறினன். 1682 - 84

இவன் நரசிங்கத்தை நோக்கிப் பலவாறு துதிக்க நரசிங்கப் பெருமான் கோபம் நீங்கி, மனுவின் காலத்தே அரசனுகி முத்தி எய்துவை யென்று கூற, இவன் தன் தந்தை புரிந்த பாவமெல்லாம் நீங்கும்படி அருள் செய்ய வேண்டினன். திரு மால் இரணியனுக்கு ஈமஞ்செய்யச் சொல்ல அங்ஙனமே புரிந் தனன். 1699 - 1711

இவன் துதித்தமையால் நரஹரி சினம் தணிந்தது. பிரமன் முதலிய தேவர் நரசிங்கத்தை அணுகிப் புகழ்ந்தனர். பின் இவன் முடி சூடி ஆண்டு திருமால் பதம் அடைந்தான். 1712 - 6

சைய மலையில் கண்ட முனிவன் பெருத்தலைக் கண்டு அதன் காரணம் கேட்ப அவன் உடலுக்கே பெருத்தலும் இளைத்த லும் உண்டென்ருன். அவனை இன்ஞரென்று தெரிவிக்க விரும்பியவுடன் தன் வரலாற்றைக் கூறித் தத்துவோபதேச மும் செய்தான். பிரகலாதன் அவனை வணங்கித் தன் நகரம் சேர்ந்தான். 1745 - 52

இவன் உலக முழுதும் தேடிச் சைய மலையில் அசகரம்போல் பொருந்தும் ஒரு முனிவனைக் கண்டு எக்குலத்தானென்றும் எவ்வாச்சிரமத்தானென்றும் ஐயுற்ருன். 1744

மாவலி குருவின் சாபத்தால் துன்பமுற்றனென்று திரு மாலைப் புகழ்ந்து மாவலி துன்பமடையக் கூடாதென்று வேண்டி வருண பாசத்தைக் கழற்றுவித்தான். மாவலி தன் தலையில் ஓரடி வைத்து அளக்கும்படி வேண்டத் திருமால் சுதல லோகத்தை ஆட்சி புரியவும் நாம் அவன் அரண்மனை வாயிலைக் காப்பதாகவும் அருள் புரிந்தனர். 2008 - 12

மாவலி திருமால் அருளால் தன் சுற்றத்தோடும் சுதல லோகம் சென்றனன். பிரகலாதன் திருமாலை வாழ்த்த அவர் நாடோறும் எம்மை அங்குக் காண்பை என்று வரம் அருள அவனும் சுதலலோகம் சென்றான். திருமால் இந்திரனுக்கு அரசைக் கொடுத்து மற்றத் தேவர்க்கும் அவரவர் ஊரை அருளினர். 2013 - 4

**பிரகஸ்பதி:** இவர் தேவகுரு; இந்திரன் கொலுவிலிருந்தபோது இவர் வரச் செல்வச் செருக்கால் அவன் கவனியாமலிருப்ப இவர் மாயையால் மறைந்து போயினர். அச்சமயம் பார்த்து அசுரர் இந்திரனோடு அமர் செய்தனர் 1426 - 31

சித்தத்தின் அதிட்டான தேவதை. 635

**பிரச்சினி :** இவன் புதல்வன் சுவர்க்கன், சித்திராங்கதன் என்னும் இருவர். சுவர்க்கன் காந்தினி யென்பவளை மணந்து அக்ரூரன் முதலான பன்னிரண்டு பிள்ளைகளையும் ஒரு பெண்ணையும் பெற்றான். அக்ரூரன் தேவவான் முதலான நால்வரைப் பெற்றான். 2614 - 15

**பிரசூதி :** சுவாயம்புவ மனுவின் புதல்வி ; தக்கனுக்கு மனைவி. 489

இவள் பதினறு மக்களைப் பெற்றனள். இவர்களிற் பதின் மூன்று பேரைத் தருமதேவதைக்கு அளித்தாள். ஒருத்தியை அக்னிக்கும், பிதிரர்க்கு ஒருத்தியையும், சிவபெருமானுக்கு ஒருத்தியையும் மணம் செய்து கொடுத்தாள். 730

**பிராணிந்திகன் :** இவன் மகன் கிருதிதரன். இவன் மகன் தேவபீடன். தேவபீடன் மகன் விதுர்த்தன். இவன் மகன் மகாகிருதி. மகாகிருதி கிருராதனைப் பெற்றான். இவன் மகன் மகாரோபன். இவன் மகன் கனகரோமா. இவன் பெற்ற மகன் இரச்சுவரோமன். இவனுக்கு மகன் சீரத்துவசனென்னும் சனகன். இவன் வேள்வியியற்றப் பூமியை உழுதபோது தோன்றிய சீதையை இராமனுக் களித்தான். 2395 - 97

**பிரத்தியும்நன் :** மனத்திற்குரிய உபாசனு ஈசர். 634

பிரத்துமனன் : கிஷ்ணனுடைய குமாரன். இவன் மீன் வயிற்றில் உதித்ததால் மீனக் கொடியைத் தனக்கு அடையாளமாக வுடையவன். 3490

பிரதீபன் : இவன் புதல்வர் மூவர். அவருள் தேவாபி என்பவன் காட்டில் தவஞ் செய்யச் சென்றான். அந்த மன்னவன் சந்திரன் மரபு கலியில் அழியு மென்றும் பின்பு அம்மரபு மறுபடியும் தோன்றப் பெருந்தவம் புரிந்து களபக் கிராமத்தில் இன்னும் உள்ளான். 2563 - 64

பிரபாதம் : ஒரு தீர்த்தம். 398

பிரமசாவர்னி : இவன் பத்தாம் மனு ; இவன் காலத்து இந்திரன், சம்பு ; மரு, விபுத்திரன் முதலியோர் தேவர் ; சயன் மூர்த்தி முதலியோர் சப்த ரிஷிகள்; திருமால் விடபச் சேனனாய்ப் பிறப்பார். 1931

பிரமதேவர் : இவரது திரோதான சக்தியினின்று சாத்தியர் பிதிரர் வித்தியாதரர், சித்தர் தோன்றினர். 566

தன்னை அடைந்த இந்திரனுக்குத் ததீசிமுனிவரது முதுகெலும்பை வச்சிரப் படையாக்கி விருத்திராசுரனைக் கொல்லும்படி கூறினர், 1483 - 4

பிரமசாரியர் : இவர்கள் ஐந்தாண்டு முதல் நான்கு ஆண்டுகளுக்குள் உபநயனம் செய்விக்கப் பெற்றுக் குருகுல வாசம் செய்து ஐயமேற்று ஆசிரியன் உண்ணென உண்டு எண்ணெய் தேன் முதலியவற்றை உபயோகிக்கக் கூடாது. 1726

மான்றோல், மவுஞ்சி அணிந்து காலையிலும் மாலையிலும் சூரியனையும் நெருப்பையும் குருவையும் தினமும் வணங்குதல் கடமையாம். மகளிரெழிலை மனத்தே நினையாமல் அவர் திறத்தைப் பேசாமல் இருப்பது அறம் ஆகும். 1727 - 8

பிரமதேவர் : துருவாசர் சாபத்தால் இந்திரன் செல்வ மெல்லாம் இழந்ததைக் கேட்டு இவர் திருமாலை நினைக்கும்படி கூறினர். அவ்வாறே செய்ய அவர் தோன்றிப் பாற்கடலை மந்தரமலையால் கடையும்படியும் அதற்கு அசுரரோடு நட்புக் கொள்ளும் படியும் கூறினர். அவ்வாறே நட்புக் கொண்டனர். 1823 - 6

ஆயிரம் சதுர்யுகத்தில் மனுக்கள் முறை முறையே தோன்றுவர்; இவ்வாறு பதினான்கு மனுக்களும் தோன்றி மறைந்தால் பிரமதேவருக்கு ஒரு பகல் கழியும் ; அவருக்கு இரவும் வந்த பின் மறுபடியும் அவர் இப்படியே படைப்பார். 1936

இவர் தம் கமண்டலத்தின் நீரால் திருமாலின் பாதங்களைக் கழுவினர். அது கங்கை என்று பெயர் பெற்று மூவுலகத்திலும் ஓடிற்று. 2005 - 6

பிரபை : இவள் புட்பாருணன் மனைவி; காலை; உச்சி, மாலையென்பவர் மூவரைப் பெற்றனள். 907

பிரலம்பன் : ஓர் அசுரன். இவன் கம்சனுக்கு உதவியாயிருந்து கண்ணனை வஞ்சிக்க இடைச்சிறுர் வேடங்கொண்டு பலராம கிருஷ்ணருடன் வந்து விளையாடினன். இவ் விளையாட்டில் பலராமனைச் சுமந்து கொண்டு வெகு தூரம் போயினன். பலராமர் இவனை அசுரன் என்று அறிந்து காலால் உந்திக் குட்டிக் கொலை செய்தார். 2872

பிராசீனபர்ஹிஸ் : இவன் புதல்வர் பதின்மரும் இவன் ஓதிய கீதையைக் கேட்டு வனமடைந்து தவமியற்றச் சென்றனர். 1010

பிராணரோதம் : பக்தியில்லாமல் வஞ்சனையான ஒழுக்கத்தால் ஆட்டைக் கொன்று யாகஞ் செய்வோர் மோட்ச மின்றி வாயையும் மூக்கையும் மூச்சுறும்படி பொத்தி மாய்க்கப்புகும் நரகம். 1353

பிராணன் : இவன் விதாதாவின் மகன். இவனுக்கு மகன் வேதசிரஸ். 718

பிரியவிரதன் : சுவாயம்புவ மனுவின் மகன். 488

இவன் புதல்வர் பதின்மருள் மூவர் தவம் புரிந்தனர். மற்ற எழுவருக்கும் எழு தீவுகளை அளித்தான். இவன் தன் மகளான ஊர்ஜஸ்வதியைச் சுக்கிரனுக்குக் கொடுத்தான்; அவன் தெய்வயானையை ஈன்றுன்; அவளை யயாதி மணந்தான். 1121

மற்றும் ஒரு மனைவியை மணந்து உத்தமன், தாமதன், ரைவதனென்னும் மூன்று மனுக்கள் மக்களைப்பெற்றனன். இவன் எழு கடலுக்கும் எழு தீவுக்கும் வரம்பு கண்டு 110 கோடி ஆண்டு மீண்டும் காட்டை யடைந்து தவம் புரிந்தான். 1123

பிருது : இவர் மனைவி கியாதி; இவள் தாதா, விதாதா, திருமகள் என்னும் மூவரை ஈன்றார். 715

இவர் பாசுபதர் யாவரும் வேள்வி ஒழுக்கம் தவிர்ந்து மறை நீங்குக எனச் சபித்தது. 749

பிருது : இவன் மகன் விசிதாச்சுவன்; இவன் பேரன் பலவேள்விகளை இயற்றினன். 1001

பிலக்கத்தீவு : இது சம்புத்தீவைவிட இருமடங்கு பெரியது ; இது உப்புக் கடலைச் சுற்றியுள்ளது ; இதனைச் சுற்றி அதே அளவுடையதாய்க் கருப்பஞ்சாற்றுக் கடல் சூழும். 1258 - 9

பிலக்கம் முதலிய தீவுகள் : இவற்றில் வாழ்வோர் ஒளியும் புத்தியும் புலனும் ஒத்தவராகி ஆயிரம் ஆண்டு வாழ்வார். 1266

இத்தீவிலுறைவோர் சூரியனை வணங்குவர். 1267

பீமன் : காற்றின் மாமகன். 72

புஞ்சவன விரதம் : இது மார்கழி மாதம் வளர்பிறையில் பிரதமை முதல் புனிதத்தோடு திருமாலை ஏத்தி ஒரு வருடம் முழுதும் திருமாலுவைத் தியானித்து பதினாறு உபசாரமும் இயற்ற வேண்டும். 1582 - 3

ஓராண்டின் முடிவில் பாலொடு கலந்து அட்ட உணவை விஷ்ணு மந்திரத்தை ஜபித்து நெருப்பில் பன்னிரண்டு ஆகுதிசெய்த பின் மறையவர்க்கு உணவளித்துப் பின் அதன் சேடத்தைத் தம் கணவர்தர, உண்டவர் மைந்தரைப் பெறுகுவர். 1585

இதனைக் கன்னியர் இயற்றினால் நல்ல கணவரைப் பெறுவர். இறக்கும் மகவைப் பெறுவோர் இறவா மகவைப் பெறுவர், கைம்பெண்டிர் இயற்றின் மறுமையில் அழகுமிக்க கணவனைப் பெறுவர், 1586 - 87

புட்காரத்தீவு : இது தயிர்க்கடலை முப்பத்திரண்டு இலக்கம் யோசனைப் பரப்புடையதாய் நாற்றிசையிலும் சூழ்ந்து உள்ளது ; பிரமதேவரது தாமரை சார்தலால் இப்பெயர் பெற்றது ; இதற்குத் தெய்வம் பிரமதேவர். 1271 - 2

இத்தீவுக்கு ஆதி மனுவின் மைந்தனான பிரியவிரதனுக்கு மகவாகத் தோன்றிய கோத்திரன் அரசன் ஆவான். 1273

புட்பாருணன் : இவன் வற்சரன் மகன் ; இவன் மனைவியர் பிரபை, தோடை என்பவர். 906

புத்தி : இவள் தக்கன் மகள்; தருமதேவதையை மணந்து அருத்தனைப் பெற்றனள். 733

புதன் : இக்கோள் காற்றை உண்டாக்கும். 1318

இவன் இளை யென்பாளை மணந்து புரூரவா வென்பவனைப் பெற்றான். இவன் குணங்களை அறிந்த நாரதர் தேவலோக மடைந்து அவற்றைப் புகழ்ந்து பாட ஊர்வசி கேட்டு அழலில்

வைத்த மெழுகென மனமுருகினள். மித்திராவருணரென் பவர் இதை அறிந்து உரைத்த சாபத்தால் பூமியில் வந்து புரூரவாவைப் பார்த்தாள். அவனும் அவளைப் பார்த்தான். 2414. 16

புரஞ்சனன் : ஓரரசன் ; இவன் தோழனோடு தேரேறி இமய மலைக்குச் சென்று ஒரு பெண்ணைக் கண்டான். அவளைக் கண்டவுடன் அவளை மணந்தனன், இரவு பகல் அறியாமல் அவளோடு கூடியிருந்தனன். 1028

இவன் ஆயிரத்துநூறு புதல்வரையும், நூற்றுப்பத்து மகளிலரையும் பெற்றனன், அவர்களுக்குச் செய்ய வேண்டிய விழா எல்லாம் செய்து மறிகளைக் கொன்று பல வேள்விகளியற்றினன். 1039

புருதுர்சன் : சாக்ஷுஷ மனுவின் புதல்வர் பன்னிருவருள் மூத்தவன். 910

இவன் மகன் திரசதசியன். இவன் நருமதை யென்னும் பெயருள்ள நாக கன்னிகையை மணந்தான். திரசதசியன் மகன் குச்சன்; இவன் அயோத்தியநாட்டை ஆண்டவன்; இவன் மகன் அநரண்ணியன் ; இராவணனால் இவன் போர்க்களத்தில் இறந்தான் ; இவன் மகன் அரியச்சுவன் ; இவன் மகன் அருணன். இவன் மகன் தரிபந்தனன் ; இவன் மகன் சத்தியவிரதன் ; இவன் மகன் திரிசங்கு. 2137 - 9

புரூரவா : இவன் புதனுக்கு இளையிடம் தோன்றியவன். சாபத்தால் பூமியை அடைந்த ஊர்வசியைக் கண்டு தன்னை மணஞ்செய்து கொள்ளும்படி வேண்ட நெய்யை உண்டு இருப்பதாகவும் தன்னோடு வந்த ஆடிரண்டையும் காக்கும்படியும் வேண்டினள். 2417 - 9

இவன் ஊர்வசியின் பிரிவால் பொன்னைப் பொருந்தி இழந்த தரித்திரரைப் போலத் துன்புற்றான். அவள் உரு வெளித் தோற்றத்தைக் கண்டு பலவாறு புலம்பினன். அவன் அடைந்த துன்பத்தை யாராலும் வருணித்துக் கூறமுடியாது. 2425 - 32

இவனுக்கு ஊர்வசியிடம் தோன்றிய மக்கள் ஆயு, சுதாயு, சத்தியவாயு, விசயன் சயன், ரயனென்னும் அறுவர். 2442

புரூரவா ஆண்டுக்கு ஒருமுறை ஊர்வசியைக் கண்டு கூடி அவள்பால் ஆயு முதலிய மூவர் புதல்வரைப் பெற்றான். தன்னை யடைவதற்குரிய உபாயத்தைக் கர்தருவர்பால் கேட்

பூதன் : இவன் தக்கன் பெற்ற மகளிருள் பஞ்சதாமோதை, சுரூபை யென்பவர்களை மணந்தனன். 1411

பூதனை : ஓர் அரக்கி, கண்ணனைக் கொல்வதற்காகக் கஞ்சனல் ஏவப்பட்டவள். 2722

பூரணவான் : இவன் காசிபனுடைய மகன். 704

பூரு : இவன் யயாதியின் மகன் கிழப்பருவத்தைத் தந்தையிட மிருந்து பெற்றவன். 1042

போகபூமி : பாரத வருஷம் ஒழிந்த எட்டு வருஷங்களும் இப் பெயர் பெறும்; இவற்றில் வாழ்வோர் ஆயுள் பதினுயிரம் வருடம், யானை பலமுடையவர். இப்பூமி எப்பொழுதும் இரண்டாம் ஊழி போல் விளங்கும். இப் பூமிக்குரிய தெய் வம் திருமால். 1236 - 8

போசன் : இவன் மரபில் தோன்றியவரை, உலகம் மாபோச ரென்று புகழும். விருஷ்ணி பெற்ற புதல்வர் அநமித்திரன் முதலிய மூவர். அநமித்திரன் புதல்வர் நிமமனன், பிரச் சினி முதலிய மூவர். நிமமனன் புதல்வர் சூரியனிட மிருந்து சுமந்தக மணியைப் பெற்ற சத்திராசித்தும் பிரசேன னும் ஆவர். 2611 - 13

இவன் மகன் திருதிகன். திருதிகன் மகன் கிருதவன்மா தேவ மீடனையும், தேவமீடன் சூரனையும் பெற்றனர். சூரன் மாரிடை யென்பாளை மணந்து வசுதேவன் முதலிய பதின் மர் புதல்வரையும் குந்தி முதலிய ஐந்து மகளிரையும் பெற்றான். 2625 - 26

மகளிர் : இவர்க்கு அறம் மனைத்தொழிலைக் குற்றமின்றிச் செய் தல், கணவனைத் தெய்வ மென வணங்கல், அவன் பணித்த வற்றைப் புரிதல், அவன் தாய் தந்தையரேவல் செய்தல் என்பன. 1722

மகாரவுரவம் : மிக்க துன்பத்தால் தம்மை வந்து அடைந்தவரை வருத்துவோர் அடையும் நரகம். 1360

மகாலோகம் : இது துருவ பதத்திற்கு மேலுளது. இதற்கு மேலே சனலோகமும் அதற்கு மேலே தரும யோகியர் வாழும் தவலோகமும் உள்ளன. 1331

மங்கையொரு பாகன் : பரமசிவன் பார்வதிக்குத் தன் சரீரத்தில் பாதியை அளித்தவன். 2909

மணிக்கிரீவன் : அளகாபுரிக்கு அதிபனான குபேரனுடைய மைந்தன். நாரதருடைய சாபத்தால் மரமாகிக் கண்ணனால் சாபம் நீங்கப்பட்டவன். 2778

மணிமான் : இவன் பிருகு முனிவரது முகத்து ரோம மெல்லாம் பறித்தது. 791

மத்திரநாடு: சிபியின் குமாரனாகிய மத்திரனால் நிருமிக்கப்பட்ட தேசம். இமயமலைச் சாரலின்கண் உள்ளது. 3585

மது : இவன் மகன் குதசதன். குதசதன் அருவையும் அரு புருகோத்திரனையும் ஈன்றனர். புருகோத்திரன் பெற்ற அங்கிசு சாத்துவதரனையும், அவன் அந்தகன், விருஷ்ணி, போசன் முதலிய எழுவரையும் பெற்றனர். 2609-1(

மதுரை : யமுனையின் கரையிலுள்ள ஒரு நகரம். கண்ணனுக் குரியது. 2646

மந்தாகினி : தேவகங்கை. 2893

மயிட்டு மான் : இவன் மகன் பத்திரசேனன்; இவனுக்கு மக்கள் துன்மிதன், தனிகன் என்போர். இவ்விருவரில் தனிகன் என்பவன் மகன் கிருதவீரியன். இவன் மகன் ஆயிரம் கைகளுடைய கார்த்த வீரியன். 2592-94

மயித்திரி : இவர் தக்கன் மகள் ; தரும தேவதையயை மணந்து பிரசாதனைப் பெற்றாள். 731

மரவம் : கடம்ப மரம் ; இதன் பூ முருகனுக் குரியது. 2810

மரீசி முதலிய ஏழுமுனிவர் : இவர்கள் ஆதி மனுவின் சாபத்துக் குரியோர். 727

மரீதி: இவர் பிரமதேவரது மானத புத்திரர். இவர் மகன் காசிபர் ; இவர் மகன் விவச்சுவான் ; இவன் மகன் வைவச்சுதன், 2040

மரு : இக்ஷ்வாகுவின் வழியிற் பிறந்தவன். அரியசுவன் குமரன். 4750

மருந்து : திதியின் கருவை இந்திரன் சிதைத்தபோது கருத்து அழிந்து அமுதமையால் மருத்து என்னும் பெயர் பெற்றனர். வயிற்றைவிட்டு வெளியே வந்தனன். இவர்கள் இந்திரன் தம்பியராய்ச் சோமபானம் உடைய தேவராயினர். 1578

மருத்துவதி: தக்கன் மகளிருள் ஒருத்தி; தருமன் மனைவி; இவள் பெற்ற புதல்வர் மருத்துவானும், திருமாலின் கலையான சயந்தனும் ஆவர். 1408

மலநரகம்: சவுசம் முதலியவற்றைக் கைவிட்டவர் அடையும் நரகம். 1352

மலயத்துவசன்: இவன் விதேகதேசத்தரசன் மகளை மணந்து எழுவர் புதல்வரையும் ஒரு பெண்ணையும் பெற்றான். 1057

தன்மகனுக்கு அரசையீந்து பொதியில் தன்மனைவியோடு தவம்புரிந்தனன்; இவன் முத்தியடைய இவன் மனைவி நெருப்பில் மூழ்கச்செல்ல ஒருமுனிவர் விலக்க இவள் ஞானம் பெற்று முத்தி யுற்றது. 1064

மனு: சாக்ஷுஸ மனு; இவன் மக்கள் பன்னிருவர்; மூத்தவன் புருகுச்சன். 910

மனுக்கள்: இவர்கள் பிரமதேவரது மனத்தில் தோன்றினர். 570

மனுவேந்தன்: இவன் சர்வதேஜஸ் என்பவனுடைய மகன். 909

மாத்திரை: பாண்டுவின் இரண்டாம் மனைவியான இவள் அசுவினி தேவரைக் கூடி நகுலனையும் சகதேவனையும் பெற்றாள். பாண்டுவின் புதல்வரான ஐவரும் பாஞ்சாலியை மணந்து சிறுவரைப் பெற்றனர். 2578 - 9

மாந்தாதா: இவன் யுவனச்சுவன் மகன்; இவன் சசவிந்துவின் மகள் விந்துமதியை மணந்து புதல்வர் மூவரையும் மகளிர் ஐம்பதின்மரையும் பெற்றான். ஐம்பது மகளிரையும் சவுபரி என்னும் முனிவர் மணஞ்செய்து கொண்டார். 2119 - 20

இவன் மக்கள் அம்பரீஷன், புருகுச்சன், முசுகுந்தன் என்னும் மூவர். இவன் மூத்தவன் பிதாமகனை புவனச்சுவன் என்னும் பெயர்பெற்றுச் சிறந்தான். இவன் மகன் அரிதன்; அரிதன் மகன் ஆரிதன். புருகுச்சன் பாதாளம் சென்று நாகரைத் துன்புறுத்தும் பகைவரை அழித்து அவருக்கு மகிழ்வூட்டினான். உரகர் தம் உடன்பிறந்தாளான நருமதையை அளிப்ப மணந்து தன்பெயரைச் சொன்னவர் கரும்பாம்பினால் அச்சம் வராதபடி வரம் பெற்றான். 2135 - 8

மார்க்கண்டேயன்: இவர் மிருகண்டுவின் மகன். 717

மாரிடை: இவள் மதிகாப்பத் தருக்களுக் கெல்லாம் பெண்ணாகியது. 1090

மாரீசன்: இவன் இராவணன் தூண்டுதலால் பொன்மான் வடிவு கொண்டு சீதை இருக்குமிடம் செல்ல அவள் அதைப்பிடித்துத் தரும்படி கேட்க இராமன் பின்தொடர்ந்து சென்று பின்பு வஞ்சனையென்று அறிந்து அம்பு எய்து கொன்றான். 2269 - 70

இவன் தான் இறக்கும் காலத்தில் சீதையையும் இலக்குவனை யும் விளித்து இறந்தனன். சீதை அதனை இராமபிரான் மொழியென்று நம்பிப் போய் அறியும்படி இலக்குவனை அனுப்பினள். 2271

மாலி : இவனும் மாலியவான் முதலிய மற்ற அசுரரும் தேவ ரோடு பொருதனர். 1876

இவர் காலநேமி இறந்தது அறிந்து மாலியவான், சுமாலி என்பவரோடு கலந்து போர் செய்தனர். திருமால் சக்க ரத்தை ஏவ மாலியவான் சூலத்தோடு ஓடினன்; மற்ற இரு வரும் இறந்தனர். 1891

மாவலி : மோகினி வடிவங்கொண்ட திருமால் நீங்கியவுடன் தேவர் வஞ்சனை செய்தனரென்று மாவலி முதலிய அசுரர் தேவரோடு போர் தொடங்கினர். இவன் பொன்விமானத் தின்மேற் பொருந்தி இந்திரனோடு போர் செய்தான். 1869 - 72

தேவரோடுசெய்த போரில் அசுரர் தோற்றோடுதல் கண்டு மறைந்து பல மாயைகளை இவனியற்றினன். தேவர் திரு மாலை நினைப்ப அவர் அங்கே தோன்றியவுடன் மாயை நீங் கியது. 1886 - 8

இவன் தனக்கு உதவியாகவந்த சம்பன் இந்திரனால் இறத்த லும் கோபம்மிக்கு ஒருகதையால் இந்திரனது ஐராவதத்தை அடிப்ப அது நடுங்கி நிலத்தில் விழுந்தது. உடனே மாவலி தேரைக் கொடுத்தனன். 1895

இவன் சுக்கிர னுதவியால் வேள்விசெய்து தேர் முதலியவற் றைப் பெற்றுப் பிரகலாதன் அடியைச்சூடித் தேவர் ஊரை முற்றுகையிட்டுப் போர் செய்தனர். தேவர் தம் குருவான வியாழனிடம் போய் இதன் காரணத்தைக் கேட்க அவர் அதன் காரணத்தைக் கூறினர். சிலநாள் மறைந்து வாழ்ந் தால் திருமால் தேவரூரை மீட்டும் அவர்களுக்கு அளிப்பா ரென்றனர். தேவர் வேற்றுருக்கொண்டு ஒளித்தனர். 1938 - 44

இவ்வசுரர் தேவர்மறைந்து ஒளித்தபின் நூறு அசுவமேத மியற்றிப் புகழ் மிக்கு விளங்கினன். தன் மக்களான தேவர் துன்பத்தை அறிந்த அதிதி காசிபரை அடைய அவர் அவளை நோக்கி அவள் வருத்தத்தைக்கேட்க அவள் தேவர் தம் ஊரை இழந்ததைக் கூறினள். அவர் திருமாலை வழிபட்டால்

தூயர் தீருமென்று பிரமதேவர் தமக்கு உபதேசித்த பயோ விரதத்தை மேற்கொள்ளும் முறையைக் கூறினர். 1945 - 50

இவன் பிரகலாதனுக்குப் பேரன். விரோசனனுக்கு மகன். 1976-1978

வாமனராகிய திருமால் மூவடி மண்தரும்படி வேண்ட அதன் காரணத்தை மாவலி கேட்டனன். திருமால் ஆசைநோய்க்கு அளவில்லையென்று கூறியதும் மாவலி தருவதாகக் கூறினன். அப்போது அவன் குருவாகிய வெள்ளி திருமாலே மூன்றுலகத்தையும் இந்திரனுக்களிப்பக் காசிபன் மகனாகி வந்தனரென்று கூறினன். 1984 - 5

இவன்குருவான வெள்ளி திருமால் பூமியெல்லாம் ஓரடியாகவும் தேவருலகம் முதலியவற்றை யெல்லாம் ஓரடியாகவும் அளப்பாரென்றும் மூன்றும் அடிக்கு எங்ஙனம் அளிக்க முடியு மென்றும் கூறினர். 1986

இவன் குருவான சுக்கிரன் பலவகையான காரணங்களைக் கூறி மறுக்கும்படி கூறவும் அதற்கு இணங்காமல் கொடுக்க முற்பட்டான். வெள்ளி மாவலியைச் சபித்தார். தன்மனைவி விந்தியாவலி நீர் ஊற்ற வாமனன் காலை அலம்பிக் கையிலும் தாரை வார்த்தனன். 1987 - 2000

இவன் கைந்நீரை ஏற்றவுடன் வாமனனாக வந்த திருமால் நீண்ட வடிவம் எடுத்து விராட்டாக விளங்கினர். அப்போது சாம்பவான் திருமாலைச் சுற்றி வந்தான். 2001 - 4

அசுரரெல்லாரும் திருமால் வஞ்சித்தாரென்று கோபங்கொண்டு எழ இவன் இது தேவ காலமென்று கூறி அவர்களை அடக்குவித்தான். திருமால் மூன்றாமடி தாராவிட்டால் நரகம் அடைவாயென்று இவனை வருண பாசத்தாற் கட்டினர். 2007-8

திருமால் இவனுக்கு எட்டாம் மனுவின்காலத்து இந்திரனாட்சியை மீட்டும் அளிப்பதாகக் கூறினர். 2012

மானதோத்தர மலை : இதன்மேல் சூரியன் பொருந்த நான்கு திசையிலும் நான்கு நகரங்கள் உள்ளன. கீழ்த்திசையில் இந்திரனுக்குரிய தேவதானி; தெற்கில் யமன்நகர் பொருந்தும்; மேற்கில் நிம்முலோசனை என்னும் வருணன் நகரும், வடதிசையில் விபாவரி என்னும் நகரும் பொருந்தும். 1294 - 5

இதன் நாற்றிசை நகரங்களுள் ஒன்றில் சூரியனுதிப்பின் மற்றவற்றில் நிசி, மாலை, உச்சி ஆகும் ; சூரியன் 15-நாழிகை

